ா? இயைபு என்று கடாவுவார்க்கு விடை
மூல. ாரணங் கூறினார்; பிறவிக்குவித்தாகிய
தென்னுஞ் செருக்கைப் பிறகடவுளர் அறுத்தா
த அவரைச் சிறப்புறக் கூறும் அவர் புராணங்களினு
பெறப்படாமையானும், அங்ஙனம் தமது பிறவி வேர
யறியாதார் தம்மைச் சார்ந்தார் தம் பிறவித் துன்
நீக்குவாரென்பது ஒருவாற்றானும் பொருந்தப் பெறு
றும், மாதேவன் அவற்றை யறுத்துளான் என்பதற்கு
ார உருவினதாகிய புலியைக் கொன்று அதன் தோலை
திருத்தலே சான்றென்பார் 'புலித்தோலினன்' என்
லானும் ஒரு காரணங் கூறினாராயிற்று; "வேண்டு
வேண்டாமை" எனுந் திருக்குறள் உரையிலும் பரிமே
இவ்வாறே யுரை கூறினர். பிறதேவ ரெல்லாம்
பா வின்பத்ததாய வீடுபேறெய்தற்கு வாயிலான ஞான
டைய ரென்பதற்கோர் குறியின்மையின் அவரை யொ
து, வீடு பேற்றை விரும்புவார்க்கு ஞானத்தைக் கொடு
ம் என்பதைத் தெளிவுற விளக்கும் பொருட்டு இறைவன்
ா சந்திரனைத் தலைமேற் பொறுத்திருத்தலை 'இளம்
துன்னிக் கிடந்த' எனக் காட்டினாராகலான் இரண்டா
காரணம் கூறினர். பிரமன் மாலென்பார் முறையே
த்தல் காத்தல் எனுந் தொழிற் குரியா ரெனவும் இறை
அழித்தற் றொழிற் குரியா னெனவும் அவ்வவர் புராண
தந்த முதலான், எல்லாம் அழிந்தொழிந்தகா
ான் அழித்தலைச் செய்யும் இறைவனே
ார் மேற் செலுத்து மன்பு அவர் அழி
யுமாகலான் அழியா அன்புக்குக்கலை
றவனே யென்பார் "சுடுபொடியா
ந்தோதினார். சித்தியாரினும் "இற
ந்தவனே ... செய்யப்பட்
ங்வது காரணமுங் கூறினாரென்பதா
ால் 'தோலித்' கா யெ ,
கிடந்த' என்பத சடையென
ட்டது. பிறவு மன்ன. சுடுபொடி
, ஈணடிறந்த காலங் காட்டிற்று. ஆடி யென்
சொல்லாற்றலால் பூசி யெனவும், கூத்தாடி என
பொருள் கூறப்பட்டது. பின்னிக்கிடத்தல், பிரிக்கப்
வண்ணம் ஒன்றோடொன்று ஒற்றித்திருத்தல். முதற்
யுளில் அன்பின் தகைமையும், அவ்வன் செய்தார்
ம் பயனுங் கூறினர் இச்செய்யுளில் அன்பு செலுத்தப்
சிவரென்பதூஉம் அதற்குக் காரணமும் தெளியக் கூறி
(௨)

என்பே விறகா யிறைச்சியறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு
ன்போடுருகியகங்குழைவார்க்கன்றி
பொன்மணியினை யெய்தவொண்ணாதே.

(குறை.) என்புகளையே விறகாகமாட்டி அக்கூட்டத்
எரிதழலின்கண் தமதுடம்பின் தசையை யறுத்
அது பொன்னிறமாந்துணையும் வறுத்துச் செயற்கரிய
செய்வினை வேட்பாராயினும், அன்பினால் உளங்குழைந்து உருகுவார்க்கன்றி ஏனையோரால் என் பொன் மணிபோல்வான் எய்தப்படுதற்கெளியன் அன்று; எ-று.

(கு-ரை.) என்பே விறகாயிறைச்சி யறுத்திட்டுப், பொன்போற் கனலிற் பொரியவறுக்குஞ் செயல் செயற்கரியவேனும், சூரன், சிங்கமுகன், இராவணன் முதலியோர்போல் அறம்பொருளின்பங்களுள் ஒன்றை விரும்பிச் செய்யப்படுவன வாகலான் உண்மை யன்பில்லா அவை பயனுடையவல்ல வென்றார்; பல்வேறு சுவையவாய அடிசிலும் சுறியுஞ்சமைத்து வைக்கினும் உப்பில்வழி யவை கெடுதல்போல வென்க. அஃதேல், சூரன் முதலியோர் மாட்டன்பில்லை யென்ற தென்னை? அவர் பெருந் தவம்புரியும் போதன்புடையராயினரன்றோவெனின் ;—அவர்க்குண்டாய அன்பு ஓரியைபுபற்றியுண்டாயதென்பது பெறுதலானும், அதுதானும் நிலையுதலின்றி மாறி விட்டமையானும், ஈண்டுக் கூறியது ஒன்றன் பாற்பிறந்த விருப்பின் வழித்தல்லதாகலானும், பிரிவுபடாது ஒற்றுமைப் பட்டுக் கிடக்குமென்று "பின்னிக்கிடந்ததென் பேரன்பு தானே" எனப் பின்னர் விளக்கியிருத்தலானும் அவற்றின் வேற்றுமை பெரிதென்பதாம். உருகுதல், கரைதல்; குழைதல், கரைதற்குக் காரணமாம் நெகிழ்ச்சி நிகழ்தல். மண், பெண், பொன் எனும் மூன்றின் மேலுஞ் செல்லுமவா ஒரு புடை யொத்தனவேனும், பொன்மேற் செல்வதே ஏனையிரண்டிற்குங் காரணமாதல் கண்கூடாக அறியக் கிடத்தலின், உலகர் பொன்மேற் செலுத்தும் பேரவாவைப் போல் ஈண்டாசிரியர் மறைமுப் பொன்னும் இறைவனைப் 'பொன்மணி' யென அன்போடழைத்து அப்பொன்னுலையும் வீடென்னும் மனைநலனையும், அதில் துய்க்கும் பேரின்பம் என்னும் பெண்ணையும் உய்த்துணர வைத்தவாறிக; இது 'சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல்' எனும் செய்யுள் வனப்பாம். 'என்பே விறகா இட்டுக் கனலில் இறைச்சி யறுத்திட்டுப் பொன் போற் பொரிய வறுப்பினும்' எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க. பொன்மணி, அழகிய மணி யெனவுமாம். அன்பில்லா வழிப்படும் செய்கை எத்துணை யரியவேனும் அவை பயனிலவென்பதிதனுற் காட்டப்பட்டது. (௩)

ஆர்வமுடையவர் காண்பாரான்றன்னை
ஈரமுடையவர் காண்பரிணையடி
பாரமுடையவர் காண்பர்பவந்தனைக்
கோர நெருக்கொடு சோங்குபுக்காரே.

(பொ-ரை.) அன்புடையவரே சிவபெருமானைக்
பர்; அன்புடையவரே அவனது இணையடியாகிய வீ
த்தைப் பெறுவர்; யானென தென்னுஞ் செருக்கா
றை (பாரம்) உடையவர் பிறப்பைத் தேடிக்கொ
பங்களின் இடைக்கிடந்து விகாரமெய்துவர்;

(கு-ரை.) ஆர்வ மெனினும், ஈர மெனி
னும் ஒக்கும்; ஈண்டார்வம் நெஞ்சு சருகிய
செல்லும் பற்று; இது இப்பொருள் தா

அவலமும் ஆர்வமும் நீக்கி" எனும் மதுரைக் காஞ்சியில், நச்சினார்க்கினியாருரைத்தவுரையானுணர்க. அரனைக் கண்டார்க்கன்றி வீடுபேறெய்தல் கைகூடாமையின், "ஆர்வமுடையவர் காண்பரரன்றன்னை, ஈரமுடையவர் காண்பரிணையடி" என முறைதெரித் தோதினார். மாதேவன் அடிகளே வீடாமாறு "தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேனகாட்டி" எனவும், "சேவடி படருஞ் செம்மலுள்ளமொடு, நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ், செலவுநீ நயந்தனையாயின்" எனவும் அதனை யுண்மையாக வுணர்ந்த திருவாதவூரடிகளும் நக்கீரதேவரும் அருளிச்செய்ததனு னுணர்க. இனி, இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால், "பாரமுடையவர் காண்பர் பவந்தனை" என்பதற்குச் சுமைதாங்கி நிற்போர் அதைத் தொலைக்க வழிதேடுவர் எனவும் உரைத்துக்கொள்க; ஈண்டுப்பவம், தொலைவது; மூலமலத்தைத் தொலைத்தற்குக் கருவியாதலின் பிறப்பும் பவமெனப்பட்டது. கோங்கு, விகாரம்; 'இவனென்ன கோங்கனுயிருக்கிறான்' என வழக்கினுள்ளும் இப்பொருளே பயத்தல் காண்க. கோங்குபுகல் ஒரு தலையாகலான், "கோங்கு புக்காரே" என இறந்தகாலத்தாற் கூறினார். இதனால் அன்புளார்க்கு இறைவன் அண்ணியனென்றும் ஏனையோர்க்குச் சேயனென்றுங் காட்டப்பட்டது. (௪)

என்னன் புருக்கி யிறைவனை யேத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே.

(பொ-ரை.) நான் இறைவனுக்குச் செலுத்தின அன்பைப்போலச் சகத்தீரே! நீவிரும் அன்பு செலுத்துமின்; முதன்மையான அவ்வன்பைச்செலுத்தி முதல்வனது வியத்தகு தன்மைகளைக் கருத்தொருக்கி ஆராய்மின்; அவ்வாறு செய்திரேல், நந்திப் பெருந்தகை எனக் கருள்செய்தவாறுபோல நமக்கும் செய்யும்; எ-று.

(கு-ரை.) தன்னன்பு கரையுடைத்தெழும் வெள்ளமாயளவுபடாதிருத்தலின், வேறுவமை கூறுதலின்றித் தன்னனுபவ உணர்வினையே உவமை கூறுவாராயினார்; அவ்வாறு கூறுதல் வழுவோவெனின்;—"நான்பெற்ற வின்பம் பெறுக இவ் வையகம்" எனப் பின்னும் ஓதினாராதலின் அது அவ்வாறுதல் யாண்டையதென்க. இறைவன் தன்மைகளை உண்மையன்பான் ஆராயப் புகுதிரேல், அவ் வாராய்ச்சியில் அவற்றை இனிது தெளித்துக்காட்டுதற்பொருட்டு நந்தியும் நமக்குத் துணையாம் என்பது பின்னிரண்டடியின் கருத்து. முன்னன்பு, பண்புத்தொகை. அவ்வன்பு செய்தற்கு உபாயமும், அது செய்வார்க் கிடையூறின்மையும் இதனாற்கூறினார்.

தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்கும்
தேனொரு பாற்றிகழ் கொன்றை யணிசிவன்
தீயினொரு வண்ணமென் னன்பினின் றானே.

(பொ-ரை.) தேன்போன்ற இன்ப வுருவினளாய உமாதேவியார் ஒரு கூற்றில் விளங்குகின்ற கொன்றைமலரை முடிக்கட்டணிந்த சிவபெருமான்றான் இன்ன தன்மையனென்றறிய வாராது என்னன்பில் நின்றான்; அதுவேயுமன்றி, ஒருவன்றான் தன்னை என்றாயினும் சயம்பு வெனத் தன் இயற்கைத் தன்மையைச் சொல்லித்தொழினும் அவற்குத் துறக்கத்தின் கண்ணும் ஒருகாலத்து வழித்துணையாயும் நிற்பன்; எ-று.

(கு-ரை.) தன்னையடைந்தார்க்கு இன்பத்தை எளிதினளித்தலின் "தேனொருபாற்றிகழ்" என்றார். இன்பம் பெண்ணுருவழித்தாகப் பெறப்படுதல் உலக வழக்காதலால், ஈண்டும் பேரின்பத்தை உமாதேவியாரென உபசரித்துக்கூறினார். அன்றித் தேனொரு கூற்றில் பொலியுமெனக் கொன்றை மலர்க்கேற்றினுமமையும். கொன்றைமலர் ஓகார வடிவினதாக விருத்தலான் அது பரமேசுரனது பிரணவ ரூபத்தைக் குறிக்கும். கொன்றைமலர் என்பதில் கொன்றை என்பதற்கு ஆங்காரத்தைக் கொன்றாய் எனப் பொருள் சொல்வாருளராலெனின்;—ஆங்காரத்தைக் கொன்றானென்பதற்குப் புலியதள் (தோல்) உடுத்திருக்கின்றமையே சாலுமாகலான், அதன்மேலும் ஒன்றுகோடல்மிகையாதலானும், மதி, கங்கை, பாம்பு, மழு, பறை, மான், உமை, புலியதள், முயலகன் முதலியன பிறவும் ஒவ்வோரடையாளங்களைக் குறிப்பனவாகவும் கொன்றைக்கு மாத்திரம் வேறு பொருள் கோடல் முரணுறுதலானும், பொதுவாகச் சிவபெருமா னணியுந்தாருக்கு (மாலைக்குக்) கொன்றையென்றே யான்றோர் உரைத்தலானும் அவ்வாறு கூறுதல் போலியென்றொழிக. மனத்தினாலும் வாக்கினாலும் உணர்ந்துரைக்கப் படுவனவெல்லாம் அசத்தாயொழியுமென்று சிவஞானபோதத்தில் "அசத்தறியாய் சேணி யறிவறிந்தவெல்லா மசத்தாகும்" எனக் கூறப்பட்டமையானும், அவ்வியல்பினனாய இறைவன்றானே விளக்க விளங்கினல்லது "இப்படியன் இவ்வுருவன் இவ்வண்ணத்தன்" என அவனைச்சுட்டிக் காட்டல் யார்க்குஞ் சாலாமையின் "தீயினொரு வண்ணமென் னன்பினின் றானே." என்றார் ஆசிரியர் திருமூலர். ஒரு காலவன் றன்மையை யறிந்து வாறுரைப்பார்க்கே யவன் அருந்துணையா மாயின், பலகாலும் அன்பால் இடையறாது நினைவார்க்கு அவன் அருள் செய்யுமுறைமை எத்தகையது! எனுங் கருத்தடக்கித் "தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும், வானொருகாலம் வழித்துணையாய் நிற்கும்" என்றோதினார். இதனால் அன்பின் சிறப்புக் கூறினார். (௫)

முன்படைத் தின்பம்படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெருமானை யறிகிலார்
வன்படைத் திந்தவகலிடம்வாழ் வினில்
அன்படைத் தான்றனகலிடந் தானே.

(பொ-ரை.) தொன்மையே மலத்துளழுந்தி யறிவுமாழ்கிக்கிடந்த எம்மைப்போ லருட்டிறத்தால் அதை யொழித்துத் தனதுபேரின்பத்தைத் துய்ப்பிக்கக் கருவிகரணங்களைப் படைத்து அன்றே வீட்டின்பத்தையும் தன்னில் வெளிப்

ப்டுத்தி யருளிய முதல்வன்பால் அன்புசெலுத்தி (அடை
த்து) அவன் செய்யுமுதவியை யறிகிலராகி உலகவாழ்க்
கையினும் அன்பேயமைத்து வைத்த அப்பெருமானதகன்
றவுலகத்தினிடத்து நிலையாவாழ்க்கையிலேயே உறுதிகொ
ண்டு ஆ! கெட்டார்; எ-று.

(கு-ரை.) தனக்கோர் பயன் கருதாது உயிர்களின்பொ
ருட்டே ஐந்தொழிலியற்றும் இறைவன்பால் அன்பு செலுத்
தாமை பெரிதும் இழுக்குடைத்தென்பார் "முன்படைத்தின்
பம் படைத்த முதலிடை" எனக் கூறினர். மலத்தைக் கழு
வுதன்மட்டினமையாது பேரின்பம் பயக்கும் வீட்டையும்
உடன்படைத்த இறைவன்கருணைக் களவின்மை கூறுவார்
'இன்பம் படைத்த' வென உடம்பொடு புணர்த்தார். களிம்பு
மூடிய செம்பைத் தூய்மை செய்தற்கு நாடொறும் புளியிட்டு
விளக்குதல்போல, மலப்பட்ட உயிரையும் கருவிகரணங்கள்
கொடுத்துத் தூய்மைசெய்தினல்லது அவை போகாமையின்
படைப்பு முதலிய ஐந்தொழிலும் அதற்கொரு தலையான்
வேண்டற்பாலதாயின. படைப்பு முதலிய தொழிற்படுங்
கால் உயிர்க்கு அறிவு விளக்குதலின், அவ்வறிவால் தமக்கு
இடையீடின்றி வரும்பிறவித் துன்பத்தை விரைவில் ஒழித்
தற்கு அன்புசெய்க வென்பார் 'அன்படைத்து' என்றார்.
ஒரு பொருளின் சிறப்பறிந்தன்றி யப்பொருளின் கண்
வேட்கை (ஆசை) செல்லாமையின், வீட்டின்பச் சிறப்பறி
யாச் சிற்றுயிர்க்கு அவ்வின்பத்தி னுயர்ச்சியை அறிவுறுத்தற்
பொருட்டு இறைவன் உலகஇன்பம் நிலையுடைத்தன்றி யழி
தன்மாலைத் (அழியுந் தன்மைத்) தேனும் ஒருபுடை வீட்டின்
பத்தோடொத்தல் கருதியச் சிற்றுயிர்க்குப் புலனாக அதை
வைத்தான என்பார் "அன்படைத்தான் றனகலிடந்தானே"
எனக் கூறினர். உயிர் சிற்றின்பத்தைத் துய்க்குங்கால் அவ்
வின்பத்தின் வயமாய் அதை [illegible] பிரித்துணராது
ஏனையவற்றையும் அறியாது நிற்குமாறுபோல, வீட்டினும் நிற்
குமாமென்பது. 'வீட்டிற்குக் கருவியாயமைந்த உலகவின்
பத்திலேயே மக்கள் உறுதிகொண்டார்; இஃதென்!' என
ஆசிரியர் இரங்கிக் கூறினர். பெருமானை என்பது ஈண்டுச்
சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது; "பொருளொடு புண
ராச் சுட்டுப்பெயராயினும், பொருள் வேறுபடா தொன்று
கும்மே." என்ற தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்
தில் நச்சினார்க் கினியார் உரைத்த உரையான் இவ்வாறு
வருதல் அறிந்துகொள்க. வன்பு, வன்மை; ஈண்டு உறுதிப்
பொருண்மேற்று. இந்த அகலிடம் வாழ்வினில் வன்படைத்
தெம்பெருமானை யறிகிலார் எனவும், தன் அகலிட வாழ்வி
னில் அன்படைத்தான் எம்பெருமான் எனவும் பொருட்கே
ற்ப மாற்றியுரைக்க; இவ்வாறு கொள்ளுங்கால், வாழ்வினில்
என்பது தாப்பிசைப் பொருள்கோளாய் இடைநின்று முன்
னும் பின்னும் இயைந்து பொருள்தரும். உதவிசெய்தோன்
பால் அன்பு செலுத்தல் மரபென்ப திதனாற் கூறினர். (எ)

கருத்துறு செம்பொன்செய் காயத்திற் சோதி
யிருத்தியும் வைத்து மிறைபனென் றேத்தியும்
அருத்தியு ளீசனை யாரருள் வேண்டில்
விருத்திக் கொடுத்திடும் விண்ணவர் கோனே.

(பொ-ரை.) பொன்செய் கொல்லன் கருவில் செறிந்து
விளங்கும் செவ்விய பொன்னைப்போல, இறைவனால் படைக்
கப்பட்ட இவ் உடலினகத்தே ஒளிப்பிழம்பாயுள்ள பொருளை
நிலைபெயராது வைத்துத் தலைவனே! எமக்கருள்செய்க;
என்றன்பி னுள்ளிருக்குமிறைவனை அவ்வன்பால் வழிபட்டு
அவனருளை வேண்டினால் தேவர்க்கரசாம் மாதேவன் நமக்
குப் பெருஞ்செல்வத்தைக் கொடுத்தருளுவன்; எ-று.

(கு-ரை.) கருவிலுள்ள பொன்போல்,காயத்திலுள்ள சோ
தியென உவமை கொள்க. கொல்லன் கருவினலெய்தும்
பயன் பொன்னுருக்குதலேபோல், இம்மக்கள் யாக்கைபெற்ற
தனாற் பயன் அவனை அதனுள்ளிருத்திவழிபடுதலே யாமென்
பார் உவமை முகத்தால் விளக்கினர். அவ்வாறிருத்தி வழி
படா வழியதனாற் பயனில்லை யென்பதாம். ஞானமெய்து
வார் கடவுளுக்கு வடிவங் கற்பித்துக்கொண்டு வணங்குதல்
கூடாமையானும், வடிவுடைப்பொருள் அழிவெய்து மாத
லானும், இவரும் (ஞானமெய்துவோரும்) வடிவுகொண்டு
தொழின் இவர் வழிபாடு மழிவெய்து மாதலானும் ஈண்டா
சிரியர் வடிவுகூறாது 'சோதி' எனப் பிண்டமாத்திரையே
கூறியொழிந்தார்; இதுபற்றியன்றே ஆன்றோர் ஆலயங்க
ளில் சிவலிங்கங்கள் தாபித்ததூஉம், இந்திரன் முதலாயி
னர் சிவலிங்க வழிபாடு செய்ததூஉமென்க. "வேண்டி
யார் வேண்டிற்றே யீவான் கண்டாய்" என வாகீசப் பெரு
ந்தகையும், "வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட"
என நக்கீரதேவரும் அருளியவாறுபோல ஈண்டும் "வேண்
டில் விருத்திகொடுத்திடும்." எனக் கூறினர். கருத்து உறு
எனப் பிரிப்பார்க்கு உவமைகோடல் அமையாமையின் அது
பொருந்தாது. கரு, குகை; துறு, செறிந்த; துறு செம்
பொன் வினைத்தொகை. இருத்தல், நிலைபெயராது வைத்
தல். அருத்தி, அன்பு. ஆரருள், நிறைந்த கருணை. அன்
பின் முதிர்ச்சியே அருளாமாகலான் 'அருத்தியுளீசனை ஆர
ருள் வேண்டில்' என்றார்; இதனால், அன்புடையார்க்கு
அருட்பேறு ஒரு தலையென விளக்கப்பட்டது. விருத்தி,
செல்வம்; ஈண்டு வீட்டின்பமாகிய ஒரு பெருஞ்செல்வம்.
தன்வயமல்லாது பிறர்வயப்பட்டான், தன்னையடைந்தார்
க்கு அவர் விரும்பிய பெருஞ்செல்வத்தைக் கொடுத்தல்கூடா
மையின், ஈண்டுக் கூறப்பட்ட இறைவன் அன்னன் அலன்
என்பதற்கு அவற்குக் காரண இடுகுறியாயமைந்த 'மகா
தேவன்' எனும் பெயரே சான்றென்பார் அதன் பரியாய
நாமத்தால் 'விண்ணவர்கோன்' என்றார். ஆக, முழுமுதற்
செல்வத்தைக் கொடுப்பா னிவனென்றே ஆசிரியர் தெளியக்
கூறினராயிற்று. அன்பான் வழிபடுவார்க்கெய்தும் பெருஞ்
செல்வத்தை இதனுட் கூறினர். (அ)

நீத்தலும் துஞ்சம் பிறப்பையுஞ் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயு மனிதர்கள்
இச்சையு ளேவைப்ப ரெந்தை பிரானென்று
நச்சியே யண்ணலை நாடுகி லாரே.

(பொ-ரை.) ஏனைய சங்காரமேயன்றி நாடொறும் இப்
பிறவியிலேயே சங்காரத்தொழிலை அவன் நிகழ்த்துமுறை

மையை யறிந்தும் மக்கள் எம்மப்பன், எம்பிரான் எனத் தம் அன்பான வழிபடுவர்; என்று விரும்பியாதல் எம் அண்ணலை யாராய்கின்றிலர் பலர் அந்தோ! எ-று.

(கு-ஙா.) ஐவகைச் சங்காரத்துள் தினசங்கார மொழிந்தொழிந்தவெல்லாம் புறச்சமயத்தார்க் குடன்பாடன்மையின், ஈண்டாசிரியர் தினசங்கார முகத்தானே மாதேவனுக்கு இறைமை (தலைமை) கதித்தலை விளக்குகின்றார். உயிர் தன்வயத்ததாயின் நெடுநாள் துயிலொழிந்திருக்கவுங் கூடும்; அங்ஙனங் காணப்பெறாமையின் பிறர்வயத்ததேயாம். அவ்வாறு பிறர்வயத்ததாம் உயிர் துயில்கூடும்பொழுது தன்னை மறந்து அதற்குட்படுதலானும், அத்துயில்தானும், (செய்வோரின்றிச் செய்வினை யின்மையின், குயவனின்றேல் குடமின்றாமாறு போல) தன்வினை நிகழ்ச்சியை யுண்டுபண்ணுமொருவனை யுடைத்தாமாதலானும் சங்காரகர்த்தாவெனப்படுமிறைவனே தினசங்காரத்தைச்செய்வோன் என்பது பெற்றாம். பெறவே, பகல்முழுதும் தொழில்செய் திளைப்புற்ற உயிர்க்குப் பெருங்கருணையினால் இறைவனே அவ் விளைப்பாறுதற்பொருட்டுத் துயில்கூட்டுகின்றானென்பதாம். எனவே, சங்காரமென்பது இளைப்பாறுதலைக் கூட்டிவைக்குங் கருவியாமென்பதிதனால் இனிது விளங்கும். சித்தியாரினும் "அழிப்பிளைப்பாற்றல்" எனப்போந்தவாறுணர்க. இவ்வாறு நாடோறும் நம்முயிர்க்குறுதியாவனவற்றையே நாடிச்செய்யும் எம்பெருமான்பால் அன்புவைத்தல் எத்துணைச் சிறந்ததென இதனால் எதுக்காட்டியவாறும். (கூ)

அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினு ளாகி யமரு மரும்பொ[illegible]
அன்பினு ளார்க்கே யணைதுணை யாமே.

(பொ-ரை.) முன்னைப் பழம்பொருட்கு முன்னாயும், பின்வரும் பொருட்குப் பின்னாயுமுள்ளான்; தேவரேயன்றிப் பெருந் தவத்தினர்க்குந் தலைவனாயுள்ளான்; இத்தகையான், அன்பினுள்ளு மிருப்பான், புறத்துமிருப்பான், அன்பே உடலமாகவும் கொண்டான்; இதுவேயுமன்றி, அன்பென்னுங் கருவூலத் (பொக்கசம்) துட்பொதிந்த பெறற்கரும்பொருளாகலான், அவன் அன்புடையார்க்குத் தாங்குந் துணையுமாகும்; எ-று.

(கு-ஙா.) ஒரு பொருளே அன்பினுள்ளும், புறம்பும், அன்பாயும் ஆதல் எவ்வாறெனின்;—உருவப்பொருளா (தூலவஸ்து) யினன்றே அவ்வாறு வியாபித்தல் கூடாது; நுண்ணியதினும் நுண்ணியனாகிய இறைவன் அவ்வாறியாண்டும் வியாபித்தல் சால்புடைத்தேயாம்; ஞாயிற்றினொளி (சூரியப்பிரகாசம்) கண்ணினுள்ளும், புறம்பும் நிறைந்திருத்தல்போலவென்க. ஒரு பொருட்கு, உள்ளும், வெளியும், அப்பொருட்டன்மையுமென மூன்றின்மேற் பிறிதின்மையின் அம்மூன்றையும் ஆசிரியர் எடுத்துஓதினார். இவற்றுளொன்றே கூறின் இறைவனது வரம்பி லாற்றலுடைமைக் கஃது இழுக்காமாறுணர்க. முன்னுள்ளான் என்று கூறின் பின்னிலான் எனவும், பின்னுளானெனின் முன்னிலான் எனவும்பட்டுக் குற்றமாமாகலான் 'முன்பினுளான்' என உடன்கூறினார்; திருவாதவூரடிகளும், "மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன்" எனத் திருக்கோவையாரிற்கூறி யருளினமை காண்க. அன்பினுள்ளார்க்கு அவன் உற்றுழி உதவும் துணையாமென்பதற்கு எதுக்கூறுவார், பொக்கசம் பெற்றார்க்கு அதனுட்பொருள் கிடைத்தல் ஒருதலையாமாறுபோல, அன்பாகிய பொக்கசம் பெற்றார்க்கு அதனுள்ளிருக்கும் எம்மிறைவனும் அரும்பெரும்பொருள் எளிதிற் பெறல் கைகூடும் எனக் கூறினாராகலான் "அன்பினுளாகி யமரு மரும்பொருள்" என்பது கூறியது கூறலன்மையுணர்க. 'அரும்பொருள்' என்பதனால் அன்பைப் பொக்கசமாக உய்த்துணர வைத்தாராகலான் இஃது ஏகதேச வுருவகமாமென்க. அணைதுணை, உற்றுழியுதவுந்துணை. முடிந்தது முடித்தல் என்னு முத்தியால், முதற் செய்யுளில் கூறிய கருத்துப்பொருளே இதனுள்ளும் போதருமாறு முடிவுகூறி, 'அன்புசெய்வாரை யறிவன் சிவன்' எனுங் கீழதிகாரத்திற்கு "அன்பினுள்ளார்க்கே யணைதுணையாமே" எனத் தோற்றுவாய் செய்தார். இதனால் அன்புசெய்வார்க்கு இறைவன் பேரின்பம் எளிதில் கிடைக்குமென்று கூறியருளினார் ஆசிரியர் திருமூலனார் என்பது.

அன்புடைமை முற்றும்.

R. S. வேதாசலம்பிள்ளை.

---

## அருணந்தி சிவாசாரியார் அருளிச்செய்த
## 'சிவஞான சித்தியார்.'

### முகவுரை.

இது, சைவ சித்தாந்த சாஸ்திரம் பதினான்கனுள் இரண்டாவது; இதனாசிரியர் மெய்கண்ட தேவ சிவாசாரி[illegible] மாணாக்கரும் அவரது தத்துவவுண்மைகளை விரித்து விளக்குபருவமான அருணந்தி சிவாசாரியர். சிவஞான போதம் "முதனூல்" என்றும், இது அதன் "வழிநூல்" என்றும் சொல்லப்படும். மெய்க்கண்ட தேவ சிவாசாரியர் அருளிய சிறியவும் சுருங்கியவுமான சூத்திரங்கட்கு இந்நூல் விரிவாகப்பொருள் எழுதிவிளக்கும். மேலும், இதனாசிரியர் சந்தான குரவர்கட்குள் இரண்டாவதாகவுள்ளவர். இவர் காலம் சற்றேறக்குறைய கி. பி. ௧௨00 என்றுறுதிப்படுத்தலாம். இவர் "இருபாவிருபஃது" என்றவோர் சிறிய நூலும் அருளிச் செய்திருக்கின்றார்; இதில், இந்திய தத்துவ சாஸ்திரங்களில் மிகமயக்குவனவாய்க் கிடக்கும் அருங்கொள்கைகளைத் தன்னாசிரியரை வினாவுதல் முகமாக விளக்கியருளினார். அருணந்தி சிவாசாரியரென்னும் பெயர் இவருக்குத் தமதாசிரியரான மெய்கண்ட தேவரைச் சந்தித்து அவரால் கடாட்சிக்கப்பட்டுச் சூட்டப்பட்ட பெயர்; இவரது மற்றொரு பெயர் சகலாகம பண்டிதர்; இதுவும் சைவக் கல்வியில் அளவிறந்த புலமையும், ஆராய்ச்சியும் இருத்தல்பற்றி யிவர்க்குச் சூட்டப்பட்ட பெயராகத்தோன்றுகிறது. தாமியற்றியருளிய நூலில் தமது விரிந்த கல்வித் திறத்தையும் அறிவின்வன்மையையும் இனிது காட்டியிருக்கிறார் என்பதில் யார்க்கும் ஐயம்

நிகழாது. பரந்ததமிழ் மொழிக்கடலில் திரண்டெழுந்த நித்தில சாத்திரங்களில் "சித்தியார்" ஒன்றே மிகப்பெரிதும் கல்வித்திறம் விளங்கப் பெற்றதுமாகவுள்ளது; இவ்விஷயத்தில் மட்டும் வடமொழியில் மிகப் பெருங் கிரந்தமாயுள்ளவற்றோடு மிஃது உவமிக்கப்படுந் தகையதன்று. அதல்லாமலும், உமாபதி சிவாசாரியார் தமிழ் மொழியில் நிறைந்த புலமை பெறுதற்குப் பயிலும் அரும்பெரு நூல்கள் ஆறென வகுத்து அவற்றுட் 'சித்தியா'ரையும் ஒன்றாக வைத்தருளினர்; அவை, திருக்குறள், பரிமேலழகர் உரையுடன், தேவாரந், திருவாசகம், தொல்காப்பியம், சேக்கிழார் பெரிய புராணம், சிவஞானசித்தியா ரென்பனவாம். இந்நூலையும், இதன் ஆசிரியரையும் பற்றிச் செய்யுள் முகமாகக் கூறப்பட்ட துதிகள் கணக்கிறந்தனவேனும்,

"ஆறாறு தத்துவமுமாணவமும்வல்வினையு
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப்—பேறாகப்
பாங்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச்சித்தியிலே
யோர்விருத்தப் பாதிபோதும்"

எனும் சிவபோகசாகரச் செய்யுளாலும்,

"பாதி விருத்தத்தாலிப்பார்விருத்தமாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத்தாள பணிவதெந்நாளோ"

எனுந் தாயுமானர் பாடலாலும் அதன் புகழ்மை ஈண்டு எளிதில் விளங்கற்பாலவென்பது. அரிய சித்தாந்தசாத்திரம் பதினான்கனுள்ளும் சித்தியார்க்குரை யியற்றிய ஆசிரியர் பலருளர்; அவர்களுள் அறுவர் இயற்றிய உரைகள் சென்னை சிந்தாத்திரிப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ, கொ. சண்முகசுந்தர முதலியாரவர்களால் மிகநன்குமதிக்கத்தக்கதாகத் தமது "சிவஞானபோத யந்திரசாலை"யிற் பிரசுரிக்கப்பட்டன. நிற்க.

இனி யிந்நூல் இரண்டு பிரிவுடையதாய் முதற் பிரிவு 'பரபக்க'மென்றும், இரண்டாம் பிரிவு 'சுபக்க'மென்றும், பெயர் பெறும். வடமொழியிலுள்ள 'சாயனாசாரியர் சர்வதரிசன சங்கிரகமே' போல், பரபக்கம் உலகாயிதம் முதலாகப் பாஞ்சராத்திர மிறுதியாக ௧௪ மதக் கொள்கைகளை எடுத்து விதந்து அவற்றை மறுத்துரைக்கும்; சுபக்கம் மெய்கண்டதேவ சிவாசாரியாரருளிய சிவஞான போதச் சூத்திரங்கட்கும், வெண்பாக்கட்கும், விருத்தப்பாவால் விரிவுறப்பொருள் விளக்கி யிடையிடையே புறமதத்தார் கூறும் ஆசங்கைகளைப் பரிகரித்துத் தன் மதத்தை நிறுவும். இதில் (சுபக்கத்தில்) அளவையியல் என ஒன்று பிரத்தியேகமா யிருப்பதாலும், இந்திய தத்துவ சாத்திரங்களை யறிந்து சேடற்கிது மிகவுஞ் சிறந்த கருவியாயிருத்தலாலும், இதை யீண்டெடுத்து விளக்கிப் பின்னர்ப் பரபக்கத்தைக் கூறியதன் பின்னர்ச் சுபக்கத்திற் செல்வோமாக.

விநாயகஸ்துதி.

ஒருகோட்டனிருசெ வியன் மும்மதத் தன்
நால்வாயைங் கரத்தனாறு
தரு கோட்டம் பிறையிதழித் தாழ்சடை யான்
றரு மொருவாரணத்தின்றாள்கள்
உரு கோட்டன்பொடும் வணங்கியோவாதே
யிரவு பகலுணர்வோர் சிந்தைத்
திரு கோட்டமயன்றிருமால் செல்வமு
மொன்றோவென்னச்செய்யுந் தேவே.

(பொ-ரை.) கங்கையையும் வளைந்தபிறையையும் கொன்றைத்தார் தங்கிய சடையையுமுடைய மகாதேவனால் பிள்ளையாகத் தரப்பட்டு, ஒரு கொம்பு, இரண்டு செவி, மூன்று மதம், தொங்குகின்றவாய், ஐந்து கை முதலியவற்றை யுடையனாய் யானைமுகத்தொடு விளங்கும் விநாயகப் பெருமானி னிரண்டு பதங்களும், தம்மைக்கரைந்து அன்புடையராய் இரவும் பகலும் இடையறாது தியானிப்போருடைய அறிவின் கண்ணதான மலத்துன்பத்தை நீக்கும்; அதுவல்லாமலும் அயன் அரிமுதலியோர் வாழ்வும் ஒரு பொருளுடையதாமா? என்று சொல்லும்படிச் சிவமாந்தன்மையையும் உண்டுபண்ணு மென்பதாம்.

(விசேடவுரைக் குறிப்புகள்). தனக்குமேற் பிறிதொரு கடவுளின்மையின் கணபதியை விநாயகரெனப் பட்டது. யானை முகமும், ஒரு கோடும், தும்பிக்கையும் அவருடைய பிரணவ வுருவத்தைக் குறிப்பனவாம். மும்மத மென்றது அவருடைய ஆற்றல்களான இச்சா ஞானக்கிரியைகளையாம். அவரது ஐந்து கரங்களும், படைப்பு, நிலை, இறுதி, மறைப்பு, அருள் என்னும் ஐந்தொழிலைக் குறிப்பன. பாசநாசமும், பதிஞான விளக்கமும் எய்துவிக்கும் அவரது கருணைத்திற மிரண்டையும் "சிந்தைத் திருகோட்டும்" என்றும், "செய்யுந் தேவே" என்றும் இப்பாட்டில் கூறிப்போந்தவா றுணர்க.

மகாதேவர் கங்கையைச் சூடிக்கொண்டிருத்தல் அவர் அகங்காரத்தை வென்றிகொண் டிருந்தமையைக் குறிக்கின்றது; பிறைமுடித்தல், உண்மையடியாரை உயர் நிலைக்குய்ப்பதை விளக்குகின்றது; கொன்றைமலர் அணிதல், மந்திரவரசான பிரணவவுருவத்தைக் காட்டுகின்றது. இங்ஙனங் குறிக்கப்பட்ட அடையாளங்கள் யோகிகட்கு வேறு பொருளுடையவாய் விளங்குமென்க.

அளவை.

அளவை காண்டல் கருதலுரையபாவம்
பொருளொப்பாறென்ப
ரளவை மேலுமொழிபுண்மையைதிகத்
தோடியல்பென நான்
களவை காண்பரவையிற்றின்மேலு
மறைவரவை யெல்லாம்
அளவை காண்டல் கருதலுரையென்
றிம்மூன்றினடங்கிடுமே. (௧)

(பொ-ரை.) பிரமாணங்கள் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம், அபாவம், அருத்தாபத்தி, உவமானம் என அறுவகைத்தென்ப ஒரு சாரார், மற்றொரு சாரார் பாரிசேடம், சம்பவம், ஐதிகம், சுவாபிகம் என நான்கையும் அவற்றொடு

கூட்டிப்பத்தென்பர்; பிறிதொருசாரார் இக்கூறியவற்றின் மேலும் பலவுண்டென்பர்; இங்ஙனம் பலவகைத்தாய பிரமாணங்கள் உண்டெனக் கூறுவாருளராயினும் அவற்றினியல்பையுய்த் துணரவல்லார்க்குப் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்னும் மூன்றனுள்ளும் ஏனைய அடங்குமாறு இனிது புலப்படுமென்பதாம்.

(கு-ரை.) ஆசிரியர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் தாமெடுத்துக்கொண்ட பொருளை யுறுதப்படுத்தற்குப் பொதுவாக எல்லாராலும் ஒப்பப்படும் அளவைப் பாகுபாடும் அவற்றினிலக்கணமும் ஒருவாறு சுருங்க உரைக்கின்றார். அளவை, அளப்பது; தொழிலடியாகப் பிறந்தபெயர் அள (பகுதி) ஐ (வினைமுதற் பொருண்மை விகுதி) வ் (உடம்படுமெய்). அது, எண்ணல், எடுத்தல், நீட்டல், முகத்தல் என நான்கு வகைத்து. உலகத்துப் பொருள்களெல்லாம் இந்நான் களவைகளானு மளந்தறியப்படுமாறுபோல, ஈண்டாசிரியர் தாமெடுத்துக்கொண்ட பொருளையும் அளந்து காட்டுவான் புகுந்தாராதலின் அளவையெனப் பிரமாணத்துக்குப் பெயர் கூறினர். அற்றேல், ஈண்டுக்கூறிய பிரமாணங்கள் எண்ணல், எடுத்தல், நீட்டல், முகத்தல் எனும் நான்கனுள் எதன் வாய்படுவனவெனின்;—இந்நூலுள் ஆசிரியர் அளந்து காட்டுவான் எடுத்துக்கொண்ட பொருள் இறைவனும், உயிரும், வினையுமாதலான் இவை ஐம்பொறியானுங் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறிதற்கமையாதன. எடுத்தல், நீட்டல், முகத்தல் என்பன உருவுடைப் பொருளை யளந்தறிதற்குப் பயன்படுவவல்லது அருவப்பொருளை யறிதற்குப் பயன்படா. ஆகவே மனத்தாற் குறித்துணரப்படுவனவாய அவற்றையளத்தற்குக் கருவியாவது எண்ணல் அளவையே யாமென்பது. வேறு பிறவும் அளவையெனப்படினும் ஈண்டுச் சிறப்புக்கருவியாகப் பயனுறுவது எண்ணலாதலினன்றே "எண்ணென்ப வேனையெழுத் தென்பவிவ்விரண்டுங், கண்ணென்பவாழு முயர்க்கு" எனவும் "எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்" என்னும் பெரியோர் அருளிச்செய்வாராயினர். எண் என்பதற்குப் பரிமேலழகர் கணிதம் என்று பொருள் கூறினராலெனின் அவ்வாறு கூறுதலுமாம். கணிதம் என்பது பொருள்களையளந்தறிதற் கருவியன்றே. சிறிது வேற்றுமையுடைய வேனும் கணிதமும் தர்க்கமும் உய்த்துணருங்கால் ஒன்றேயாம். ஆதலின் அம்முப்பொருள்களையும் குறித்துக்கொள்ளும் அளவைகணித மென்றலில் ஈண்டைக்காவதோர் இழுக்கில்லை. இங்ஙனமாயினும் எடுத்துக் காட்டிய குறட்பாவில் எண் என்பதற்கு உலகப்பொருளை யளக்குங் கணிதமென்றே கோடல் பொருந்தாது என்னை? 'ஆற்றினளவறிந்துகற்க' என்ற குறட்பா வுரையில், பரிமேலழகர் ஆற்றின் என்றதற்குச் சொல்லிலக்கண வழியது தர்க்கமாதலின் எனப் பொருள் வரைந்தமையானும், எழுத்து (இலக்கணம்) அறிவார்க்குத் தணக்காற் பெரும்பயன் விளையாது, தர்க்கத்தால் விளைதலானும் அவ்வாறு கூறுதல் பொருத்தமின்றென் றொழிக. காண்டல், கருதல், உரை இம்மூன்றையும் ஆசிரியரே விரித்து விளக்குதலின், ஈண்டொழிந்தவற்றை விளக்குவாம். இல் பொருளென வொன்றுண்டாயி னன்றே யதனை யளந்தறியும் பிரமாணமும் இன்மையளவை (அபாவப்பிரமாணம்) யெனப் பெயர்பெறுமெனின்;—அற்றாயினும், உண்மையென்பது இன்மையென வொன்றிருந்தால்மட்டும் அறியப்படுதலானும் உதாரணமாகப் பொய்யென்பதே யறியாத ஒருவனுக்கு மெய்யென்பது இன்னதெனப் புலப்படாதாதலானும் இன்மையும் உண்மையைச் சாதிக்கவே எழுந்ததாமென மாயாவாதி பிரமம் ஒன்றேயுள்ளது ஏனை உலகுயிரெல்லாம் இல்லன வென்று வேதம் கூறுகின்றதென்பன். மற்றைப் பொருளிலவாமிடத்தும் பிரமத்தைப் பற்றிய ஆராய்ச்சி கூடாமையின், அவன் மறுத்துரைக்குமதே யவற்றினுண்மையைப் புலப்படுக்குமாயிற்று. ஈண்டு அபாவம் என்றதற்குப் பாழ் அல்லது சூன்யம் எனப்பொருள்கொண்டு இடர்ப்படுவர் ஒருபாலார்; அபாவம் (பாவம்=உள்ளது. அ-எதிர்மறைப் பொருளுணர்த்தும் இடைச்சொல்) உள்ளதல்லவெனப்பொருள் படுதலின் அவ்வாறு கோடல்பெரிதும் குற்றமாமென்க. பொறிக்கு இலக்காகா உள்பொருளின் நிலைமையே ஈண்டபாவ மென்றதாம். ஆதலினன்றே இதைத் தருக்க நூலார் நான்கு வகையவாய்ப் பகுத்தாராயினர். அவை, முன்னின்மை அல்லது பிராகபாவம், பின்னின்மை அல்லது பிரதித்துவம்சாபாவம், முழுது மின்மை அல்லது அத்தியந் தாபாவம், ஒன்றினொன்றின்மை அல்லது அன்னியோன்னியா பாவம் என்பன. சங்காரமுடிந்த காலத்து இலதாய உலகம் படைப்புக் காலத்து உளதாதல் முன்னின்மை; படைப்பு முடிந்த காலத்துளதாய உலகம் சங்காரகாலத்திலதாதல் பின்னின்மை; முயற்கோடு, முழுதுமின்மை, கோடென வொருபொருள் ஆடு, மாடு, மான் முதலியவற்றின் காணப்படினும் முயலினிடத்து இறப்பு, நிகழ்வு, எதிர்வு என முக்காலத்தும் நிகழக்காணாமையின் முழுதுமின்மையாம்; இறைவனை வினைதொடுதலில்லை, வினையையிறைவன் றொடுதலிலன், ஒன்றினொன்றின்மை. அபாவம், பாழென்பார்க்குப் பிராகபாவம் முதலியவற்றிற் பிழைக்காண்டலின் (முன்பாழாயிருந்த பொருள்பின் தோன்றுதல் கூடாமையும், பின்னிருந்த பொருள் பாழாதல் யாண்டு மின்மையும் நன்கறியக் கிடத்தலின்) அது பொருந்தாமை யறிக. உள் பொருளின் பரமாணுரூபமும், தொழில் நிகழ்ச்சியின்மையுமே அபாவமென்க. முற்குறித்தவற்றால் பொறிக்குப் புலப்படா உள்பொருளே அபாவம் என்பது பெறுவது மாகலின் இது காட்சியிலடங்கும். இரண்டாவது, அருத்தாபத்திப்பிரமாணத்தைத்தமிழ் நூலார் பொருள் அளவையென்ப. சொல்லாற்றல், பொருளாற்றல் என்னுமிரண்டனுள் இது பொருளாற்றலினால் அறியப்படுதலின் இப்பெயர் தந்தனர். இதைத் தொல்காப்பியம் சொல்லதிகாரம் "எடுத்த மொழி யினஞ்செப்பலு முரித்தே" எனுஞ்சூத்திரத்தில் சேனாவரையர் உரைத்த வுரையானுணர்க. நச்சினார்க்கினியார், அருத்தாபத்தி யிலக்கணத்தை நன்கு விரித்து விளக்கினர்; அது: "அருத்தாபத்தி, இனப்பொருள் இரண்டுள் வழிச்செப்பும் பலவுள் வழிச்செப்பாது" என்பது. இரவை விளக்குஞ் சந்திரனுக்கு இனப்பொருள் பகலை விளக்கும் சூரியனன்றேயாம். ஆதலின், ஒருவன் பகலை விளக்குவது சூரியனென்று

மட்டும் ஒரு பயன் குறித்துச்சொல்லி ஒழிந்தில், அதை யறிபவன் இரவை விளக்குவது சந்திரன் என்றறிவான்; தோழியுந் தலைவியுங் கூடி விளையாடுமிடத்துந் தோழி தலைவியைநோக்கி நெறிச்செல்லும் ஆடவரை ஒவ்வொருவராய்ச் சுட்டி "இவர் நின் தலைவரா? இவர் நின் தலைவரா?" என்று வினவ, அவள் "அவரல்ல; அவரல்ல" என விடைகூறித் தன் கொழுநன் வந்தவிடத்தும் அவ்வாறே யவள் வினவ மொழிகொடாது வாளாவிருந் தறிவுறுத்தலும் இதுபோல வென்பது. இனம் பலவுள் வழியருத்தாபத்தி பயன்படாது; ஆவீழ்கவென்றால் ஏனையவெல்லாம் இறந்துபடுகவென்று அருத்தாபத்திப் பிரமாணம் இதை யளக்காது, ஆவுக்கு மறுதலையான பொருள் ஒன்றாகாது பலவிருத்தலா னென்க. இதுவும் உய்த்துணரப்படுதலின் அனுமானத்துளடங்கும்.

### மூன்றவது—உவமானம் அல்லது ஒப்பு.

இருபொருளின் றன்மையுணர்ந்தான் ஒருபுலவன், அவற்றி லொன்றேயறிந்தாற்கு மற்றதையும் அவனறிந்த பொருட்டன்மை யொடு சார்த்திக் காட்டலாம். ஆ (பசு) இன்னதென அறிந்தானொரிளைஞன், சிலர் மரையென்னும் விலங்கின்பெயர் சொல்லக்கேட்டவிடத்து அது இன்ன வடிவினதென்பதறிய விரும்பி யறிந்தாரொருவரை வினவுழி யவர் 'ஆவின் வடிவறிதியன்றே, ஒருபுடை அதுபோலிருக்கும்மரை' யெனக் கேட்டறியும். இதுபோலவென்பது. ஆயின், அலங்காரநூலுட் கூறப்படும் உவமானத்திற்கும் இதற்கும் வேற்றுமை யென்னையெனின் ;—அலங்கார உவமை, அறிந்தபொருளிரண்டனுள் ஒன்றை ஒன்றோ டொப்பிட்டுச் சிறப்பிப்பதாம் ; உதாரணமாக, மதிபோல்முகம் என்னுமிதில் உவமான உவமேயப்பொருள் இரண்டு மறியப்பட்டன; புலவன், முகத்தின் வடிவழகையும் ஒளித் துலக்கத்தையும் சிறப்பித்தற்கு மதியோடொப்பிட்டான். தருக்கநூலுவமை மேற்காட்டியவாறு அறிந்த பொருளால் அறியாப்பொருளை அதனோடு ஒப்பிட்டு விளக்குவதாம். இதுவே இவற்றின் வேற்றுமையென்றறிக. ஆயினும் ஒப்பிடுமுறைமை யிரண்டற்கும் பொதுவாம். இவை பண்புந் தொழிலும் பயனும்என்னும் வேறுபாட்டால் மூன்று வகைப்படும், "பண்புந் தொழிலும் பயனுமென்றிவற்றின், ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த், தொப்புமை தோன்றச் செப்புவதுவமை" என்றாராகலின். பண்புவமை, 'பவளம்போலும் இதழ் ;' தொழிலுவமை, 'புலிபோல்வன் சாத்தன் ;' பயனுவமை, 'மழைபோற் கை.' உவமை தொல்லாசிரியரால் பல்வகைத்தாகப் பகுக்கப்பட்டுப் பரந்துகிடத்தலின், ஈண்டவற்றையெல்லாம் எழுதப்புகின் மிக விரிந்தோடும் ; ஆதலால், தொல்காப்பியம், இலக்கணவிளக்க முதலியவற்றுட் கண்டுகொள்க. இவ் வுவமையும் அறியாதானும் உய்த்துணர்ந் தறியப்படுதலின் உரையனுமானத்துள் அடங்குதல் காண்க.

### நான்காவது—பாரிசேடம் அல்லது ஒழிபு.

அது, ஒருபொருட்டன்மையைப் பல பொருளினு மாராய்ந்து அவற்றி லஃதிலதாக அவற்றினின்றுங் கழித்து அஃதுடைப்பொருளின்கண் அதை ஏற்றுவதாம். உதாரணமாக, ஐந்து பூதங்களினும் ஓசைக்குப் பற்றுக்கோடாவதெதுவென்றாய்வுழி, நாற்றத்திற்கு மண்ணும், சுவைக்கு நீரும், ஒளிக்குத் தீயும், ஊற்றிற்கு (பரிசத்திற்கு) வளியும் (வாயுவும்) பற்றுக்கோடாதல் இனிதறியப்படுதலின், இவையொழிந்த விசும்பே (ஆகாயமே) ஓசைக்குப் பற்றுக்கோடென் றறிதல். அங்ஙனமாயின், முன் அருத்தாபத்திக்குக் காட்டியதில் தலைவி தன் கொழுநனொழிந்த ஏனையோரை மறுத்துக் கழித்து, இறுதியாக ஓர் ஆடவனை வாளாவிருந்து குறித்தமையின், இதற்கும் அருத்தாபத்திக்கும் வேற்றுமை கண்டிலமாலெனின் ;—அறியாது கூறினாய், ஆண்டு ஏனையோரிற்பிரித்து வாளாவிருந்த தனமாத்திரையானே அவனைக் குறிப்பானுணர்த்தினாள், ஈண்டவ்வாறன்றி மற்றவற்றினின்றுங் கழித்ததன் மாத்திரையி னொழியாது கழிக்கப்பட்டதை ஒன்றனோடு சார்த்திக் கிளந்தோதுதலின் அவற்றின் வேற்றுமை பெரிதென்பதாம். இதுவும் ஒருபுடை அனுமானத்துள் அடங்குமாறறிக.

### ஐந்தாவது—உண்மை அல்லது சம்பவம்.

அது, ஒன்றை (முழுப்பொருளைச்) சொன்னவிடத்து அதனுள் மற்றொன்றும் (அதனுறுப்பும்) அடங்கிக்கிடத்தல். உதாரணமாக, நூறென்று சொல்வுழி யதனுள் ஐம்பதும் அடங்கிக்கிடத்தலும், அப்பங்கட்டிய கோலை எலி தின்றதெனின், அப்பத்தையும் தின்றதென்ப ததனுள் அடங்குதலும்போல்வன. இதுவும் அனுமானத்துள் அடங்கும்.

### ஆறாவது—ஐதீகம்.

அது, பொறியா னறியவராதாயினும் பெரியார் வாய்ச்சொல்லானும், அவரெழுதிய நூலானும் அறியப்படுவது. (உ-ம்.) இம்மரத்திற் பேயுண்டு. இது, உரையா லனுமானத்துள் அடங்கும்.

### ஏழாவது—சுவாபிகம் அல்லது இயல்பு.

அது உலகவழக்கானும் செய்யுள் வழக்கானும் அவ்வவ்வமயத்திற்கு இயைந்தவாறு பலபொருட் பொதுச்சொல் ஒரு பொருளையே சிறப்புறத் தருவது. (உ-ம்.) குதிரைமீதொரு தோன்றலேறி நின்று ஒரு கோல் தாவென்றால், தடிக்கம்பைக் கொணர்ந்து கொடுக்காது குதிரைச்சம்மட்டி கொடுத்தலும், ஒரு கிழவன் சோறுங்கறியுமயின்று எழுகையில் ஒரு கோல் தாவெனின் குதிரைச்சம்மட்டி கொடாது தடிக்கம்பைக் கொடுத்தலும் போல்வன. இது காட்சியனுமானத்துளடங்கும்.

ஆங்கிலேய தருக்கநூலுக்கும் இந்திய தருக்கநூலுக்குமுள்ள வேற்றுமை பெரிதும் ஞாபகத்தில் வைத்தற்பாலது. முன்னையது பெயர்களினும், வாக்கிய பட்சங்களினும், அனுமான வாய்பாடுகளினும் பொருளைத் தருக்கித்து உண்மை தெளித்துரைக்கும்; பின்னையது பொருளினும், பொருட்பட்ச அனுமான ஏதுக்களினும் உண்மையையுள்ளதுப விளக்கும். ஈண்டுக் கிளந்தோதிய பத்துவகைப் பிரமாணங்

களிலும் இலவற்றையே சில பல சமயத்தார் ஒப்புக்கொள்வர். உதாரணமாக, உலகாயிதன் காட்சியளவை யொன்றையுமேகொள்வன்: பௌத்தனும் வைசேடிகனும் காட்சி அநுமான மிரண்டையுந் தழுவுவர்; சாங்கியர் இவற்றோடாகமத்தையும் ஏற்றுக்கொள்வர். நையாயிகர் இவற்றோடு உவமானத்தைக் கூட்டிக்கொள்வர்; சமணரும் பிரபாகரரும் முன்னையவற்றோடு அருத்தாபத்தியையுந் தழுவுவர்; வேதாந்திகள் அவற்றோடும் அபாவத்தையும், பௌராணிகர் சம்பவத்தையும், ஐதிகத்தையும் ஏனையவற்றோடும் ஒருங்குசேர்த்துக்கொள்வர். இச்சமயிகள் ஒவ்வொருவரும் உண்மையையளந்துகாட்டுங் கருவியாகவே தர்க்கநூலைக் கொண்டிருக்கிறார்கள்; சிவஞான சித்தியாரிலும் இவ்விஷயம், கடவுளையும், உயிரையும், வினையையும் அளந்தவற்றி னியல்பறிதற் குதவியாம்படியே கூட்டப்பட்டது; முன்காட்டிப்போந்த கொள்கையினருள் வைசேடிகநையாயிகர் தருக்கநூல்வழியே உண்மை காணப்போய், அதனாலேயே உயிர்க்கு வருந் துன்பமும் வேதனையும் ஒழியும் வழியை எய்தலாமென் றுரைப்பர்.

“என்று ஒருவன் ஆகாயத்தைத் தோல்போற் சுற்றுவான்
அன்று,சிவத்தையறியாமல் துன்பத்தினின்றும் நீங்குவான்.”
--(சுவேதாச் சுவதரம் அ-௨௰)

என்பதுபோல,

இனி, முன்னர்ப்பொருள்களை அளந்தறியும் வழக்கினிடத்து இடையிடையே வந்துறும் சிலபெயர்களையும் ஈண்டுவிளக்குவாம். அவை, பிரமாணம், பிரமேயம், பிரமாதா, பிரமிதியென்பன. இவற்றுள், பிரமாணம் என்பது அளவை, இதன் திறமெல்லாம் மேலே குறித்துப்போந்தாம் ஆண்டுக்காண்க; பிரமேயம் அளக்கப்படுபொருள், அவை, திரவியம், குணம், கன்மம், சாமானியம், விசேடம், சமவாயம், சுபாவம் என எழுவகைத்து; இவற்றிற்குத் தமிழ்ப் பெயர் முறையே, பொருள், பண்பு, தொழில், பொது, சிறப்பு, ஒற்றுமை, இன்மை என்பனவாம். இவற்றி னியல்பெல்லாம் முன்னர் “அன்னியசாதியுந் தன்சாதியும்” என்னுஞ்சூத்திரத்தில் விரித்தெழுதுதும். பிரமாதாவெனினும் அறிகிறவன் எனினுமொக்கும். பிரமிதி அறிகிறவற்குக் கருவியாகச் சவிகற்ப நிர்விகற்பம் செய்துநிற்பது. (௧)

மாசறு காட்சியை யந்திரிபின்றி
விகற்ப முன்னா
ஆசற வறிவதாகு மனுமானம்
அவினா பாவம்
பேசுறு மேதுக்கொண்டு மறை பொருள்
பெறுவதாகுங்
காசறு முரையிம்மானத் தடங்கிடாப்
பொருளைக் காட்டும்.

(௧-ரை.) மேற் செய்யுளில் பிரமாணம் இத்துணைத்தெனக் காட்டி அவற்றைக் காண்டல், கருதல், உரை என்னும் மூன்றனுள் அடக்கிக்காட்டினார்; ஈண்டவற்றின் இலக்கணங் கூறுவானெடுத்துக் கொண்டார்.



(பொ-ரை.) பிரத்தியட்சப்பிரமாணம் எனப்படுவது, சந்தேக விபரீதங்களின்றி விகற்பத் தறிதலையே முதலாகக் கொண்டு துகளற (குற்றமற) ஓர்பொருளை அறிவதாம்; அநுமானம் எனப்படுவது, தன்னைவிட்டு நீங்காத காரணத்தையுடைய கரந்த (மறைந்த) பொருளை அக்காரணத்தாற் பெறுவதாம்; ஆகமம், காட்சி யநுமானம் இரண்டானும் பெற அரிதாய பொருளைத் தெரிந்துக்காட்டும். எ-று.

(கு-ரை.) காட்சியென்பதற்குச் சிறப்புப் பொருள் கண்ணாற் காண்பதாமேனும், பொதுவாகக் கண்ணிற் கண்டது போல் தெளிவுறப் புலப்படுதலின் அதை வாயிற்காட்சி, மனக்காட்சி, வேதனைக் காட்சி, யோகக்காட்சி யெனக் கீழ்ப்பலவற்றொடு கூட்டிப் பகுப்பாராயினர்; நாவால் துய்க்குஞ் சுவையே இனிமையாமேனும் பொதுமை நோக்கிக்கட்கினிமை செவிக்கினிமை எனப்பலவற்றொடுங்கூட்டி ஆன்றோர்வழக்கினாற்போலவென்பது;

“மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே”

எனச்சிலப்பதிகாரத்தும் போந்தவாறுணர்க. இதுவோ அதுவோவென ஐயுற்றுத்தெளிந்தும்,ஒன்றையொன்றாகக் கருதித்தெளிந்தும் அறிதலின் ‘விகற்பமுன்னா’ வென்றார் இதனை (விகற்பம்) நிர்விகற்பத்தின் குறையெனக்கொண்டு பொருள் உரைத்தல் பொருந்தாது; வாயிற்காட்சி யொன்றுமே நிர்விகற்பத்தோடறிதற்பாலது என “உயிரினோடுணர்வு வாயில்” எனுஞ் சூத்திரத்து விதித்தலின், ஈண்டுப் பொதுவாக எல்லாக்காட்சிக்கும் இலக்கணங்கூறுவார் விகற்பமின்றி யறிவதாகுமெனக் கூறுதற்கோர் இயைபின்மையானும், ஐயந்திரிபின் நீங்கித் தெளிந்தறிதலும விகற்பத்தறிதலே யாதலானுமென்க. முன்னாக என்பது கடைக் குறைந்து முன்னாவென நின்றது; முன் (இடைச்சொல் ஈண்டு வினைப்பகுதியாய் நின்றது) பகுதி ஆக குறைந்த ஆவினை யெச்ச விகுதி. இதைச் செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு முன்னி (சுட்டி) யெனப் பொருளுரைப்பாருமுளர். அவினாபாவம் பாவம், உள்ளது விநா, விட்டு நீங்குதல். அ, எதிர்மறை இடைச்சொல். ஆக, உள்ளதை விட்டு நீங்காமை. காரணத்தால் அக்காரணத்தையுடைய பொருளை அது வெளிப்பட்டிலதேனுமறிதலே அநுமானம். துறக்கம் (சுவாக்கம்) உளதென்றும், நிரயம் (நரகம்) உளதென்றும், மேலேழ், கீழேழ் உலகமுளவென்றும் இவைபோல்வன பிறவும காட்சியானும், அநுமானத்தானும் அறிதற் கியலாமையின் ஆகமம் அல்லது உரைப்பிரமாணமே அவற்றினுண்மையை யறிவுறுப்பதாயிற்று. மானமி எனினும் அளவையெனினு மொக்கும். (௨)

கண்டபொருளை யிரட்டுறவே
கருதலையந்திரியவே
கொண்டவிரிவாம் பெயர்சாதி குணமேகன்மம்
பொருளெனவைந்
துண்டவ்விகற்ப வுணர்வினுக்குப்பொருளி
னுண்மை மாத்திரத்தின்
விண்டலில்லா வறிவாகும் விகற்ப
மில்லாக்காட்சியே.

(க-ரை.) மேற் செய்யுளில் காட்சிக்குத் தடையாவன விவையெனப்பட்டது. இச்செய்யுளில் அவற்றி (தடையாவனவற்றின்) இலக்கணங்கூறி விகற்பத்தை யிரண்டுவகையாகப் பகுத்தல் நுதலிற்று.

(பொ-ரை) ஐயம் அல்லது சந்தேகம் என்பது, காணப்பட்ட பொருளை இதுவோ அதுவோ என இரண்டு தன்மைப்படக்கருதல்; காணப்பட்டவொரு பொருளினிடத்து வேறொரு பொருளினின் தன்மையை ஏற்றியதுவே யெனக்கோடல திரி அல்லது, விபரீதம் எனப்படும்; ஒரு பொருளை விகற்பித்தறியுமிடத்து அதன் பெயர், சாதி, குணம், தொழில், பொருள், என ஐந்துவகையானும் வேறுபடுத் துணரப்படும், இதுவே, சவிகற்பக் காட்சி யெனப்படும்; நிர் விகற்பக்காட்சி யென்பது, இவ்வாறு வேறுபடுத்தறிதலின்றிப் பொருளை மாத்திரம் அறிதலாம். எ-று.

(கு-ரை.) வழிப்போவான் ஒருவன் சேய்மையில் (தூரத்தில்) ஒன்றைப் பொதுமையாகக் கண்டு அஃது இன்னதெனத் துணியாது "குற்றியோமகனோ" என்று ஐயுறும்; இது ஐயம். மாலைக்காலத்துக் குறைந்த பார்வையுடையானோர் ஆண்மகன் நகரிமறுகில் (பட்டனத்தெரு) அந்திப்போது செல்கையில், ஒரு மடவரல் (பெண்) தன்கொழுநனோடு (கணவனோடு) ஊடி யறுத்தெறிந்த பூமாலை யொன்றை வழியில் கண்டு "பாம்போ மாலையோ" என்றையுறாது அதைப் பாம்பென்றே கருத்துட் கோடல் கண்டாயன்றே; அது திரிவாமென்க. காட்சி எழுவாய்க் காட்சியும் (நிர்விகற்பம்) வேற்றுமைக் காட்சியும் (சவிகற்பம்) என இருவகைத்து, என்னை? பாலைநிலத்துச் செல்வான் மிகச்சேய்மையான ஓரிடத்தில் பலவாறு கவிந்து (பிளவு) பட்டு அடர்த்தியாகத் தோன்றும் ஒரு பொருளைக் கண்டான்; அப் பொருளின் பெயராதல், அப்பொருட்சாதியில் அது இன்னதென்றுதல், அதன் வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலிய பண்புகளையாதல், அதன் நடத்தல், இருத்தல், கிடத்தல், எழும்பல், வளைதல் முதலிய றொழிலையாதல், உலகத்துப் பலவகைப் பொருள்களுள் அஃது இன்னதென்றுதல் அறிந்திலன்; இஃது எழுவாய்க் காட்சி அல்லது நிர்விகற்பக் காட்சியென்றறிக. அவன் பின்னர் அப்பொருளைப்பற்றியவெல்லாம் அறிதற்கு அதன் அண்மைக்கட் (சமீபத்தில்) சென்றான்; சென்று உலகத்துப் பல்வகைப் பொருள்களுள் இது மரம் என்றப்பொருளுணர்ந்தான்; பின்னர் அதை யுற்றுநோக்கி மாமரம் என்று அதன்சாதியும், மரச்சாதியுள் இஃதின்னதெனத் துணிதற்கு அதன் பழத்தைப்பறித்துச்சுவைத்து அது கழியவும் (மிகுதியும்) இனிமை பயக்கக்கண்டு தேமாவென அதன் பண்புமுணர்ந்தான்; உலகத்தில் அறிபொருள் பலவுந்தத் தமக்குரிய தொழில் சில பல உடையவன்றே? ஓரறிவுடைய இத்தேமா எத்தொழில் செய்வதென்றாய்கையில், அது நீரை வேரின்வழியே யிழுத்துப்பாலாகமாற்றிக் கொம்புகளின் வழிச்செலுத்தித் தளிர் ஈன்று பின்னும் அத்தளிரை இடையறாது பாலூட்டி இலையாக வளர்த்து, அதன் பின்முகை முகிழ்த்து (அரும்புதள்ளி) அதை வாய்விரிமலராக்கி, அம்மலர் நடுவில் பிஞ்சு, இளங்காயாசவும், அது செங்காயாய் நறும்பழம் ஆகவும், உயிர்கள் வெளிவிடும் நச்சுக்காற்றைப் பகலில்தான் வாங்கியுட்கொண்டு நன்மைதரும் இனியகாற்றை வெளிவிட்டும் பெரும்பயன் விளையும் தொழில்செய்தலை யுணர்ந்தான். இவ்வாறொரு பொருளைப் பலவாறு வேறுபடுத் தறிதலே வேற்றுமைக்காட்சி யல்லது சவிகற்பக் காட்சியென்றறிக. மரத்தின் றொழில் அசைதல் நிற்றலென உதாரணங் காட்டுவாருளராலெனின், அசைதல் தன்றொழிலாகாது காற்றின்றொழிலாற் றோன்றுதலானும், நிற்றல் இறைவன் படைத்தற்றொழிலால் நிகழ்தலானும் அவ்வாருரை போலியென்றொழிக. இரண்டு, "மென்றொடர் மொழியுட் சில வேற்றுமையின் றம்மின வன்றொடராகாமன்னே" என்பதனால் இரட்டு என வலித்தது. சாதி குணம் கன்மம் எனும் வடமொழிக்கு இனம், பண்பு, தொழிலென்பன நேரியசொல். விகற்பவுணர்வெனினும் பகுத்துணர்வெனினு மொக்கும். நிர்விகற்பக்காட்சியை எழுவாய்க் காட்சியென்றதென்னையெனின்; பொருளினுண்மை யறிவெழுந்த விடத்தில் மாத்திரையை தோன்றலின் அவ்வாறு கூறினும்; தன்னிலையில வேற்றுமைப்படாது நிற்குஞ் சொல்லுக்கு இலக்கணநூலார் எழுவாயெனப்பெயர் தந்தவாறு போலவென்க. விண்டல், பிளத்தல், ஈண்டும், பலவாறாகப் பகுத்தல், காட்சிதொழிற் பெயர், காண் (பகுதி) சி (விகுதி) ணகரம் டகரமாதல் வலித்தல் இஃதறியாதார் காட்சியைக் காக்ஷியென வடவெழுத்தானெழுதுப. (௫)

காண்டல்வாயின்மனந் தன்வேதனையோடி-
யோகக்காட்சியென
ஈண்டுநான்காமனுமானந்தனக்குப் பிறர்க்கு
மென்றிரண்டா
மாண்டவுரைதந்திரமந்திரத் தோடுபதேசச்
சொலெனமூன்றும்
பூண்டவளவைக்கெதிர் புலன்றன்னியல்பு
பொதுவென்றிரண்டாமே.

(க-ரை.) மேற்செய்யுளில் லெல்லாம் காண்டல் முதலியவற்றி னிலக்கணங் கூறினர். ஈண்டு, அவற்றின் பாகுபாடும் இப்பிரமாணத்தால் அளக்கப்படும் பிரமேயத்தின் பாகுபாடு முணர்த்துகின்றார்.

(பொ-ரை.) சாட்சியளவை, இந்திரியக்காட்சி யெனவும், உள்ளக்காட்சி யெனவும், நுகர்ச்சிக் காட்சியெனவும், தவக்காட்சி எனவும நான்குவகைப்படும்: கருதலளவை, தன்பொருட்டுக் கருதலும், பிறர்பொருட்டுக் கருதலும் என இருவகைத்து: ஆகமப்பிரமாணம் இறைவனருளிய வேதாகமும் மந்திரமும், உபதேசமும் என மூன்றாம்; இப் பிரமாணங்க,ளால் அறியப்படும் பொருள்களெல்லாம் சிறப்பும் பொதுவுமென இரண்டு தன்மையுடையனவாம்; எ-று.

(கு-ரை.) வாயிற்காட்சி, பொறிக் காட்சி, இந்திரியக் காட்சி யென்பன ஒரு பொருட்கிளவி. வேதனை யென்பது ஈண்டு இன்பத் துன்பங்களை நுகர்தலே யாமாகலான், அக்

காட்சிக்கு [illegible] காட்சியென்றும். யோகம் எனும் வடமொழிக்கு நேரிய தமிழ்ச் சொல் தவமேயாகலான் அக் காட்சியைத் தவக்காட்சி யென்றும். அறிய. தார்தபசு என்னும் வடமொழியே தமிழில் தவம் எனத்திரிந்ததென்றுரைப்பர். தவம் எனுஞ்சொல் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினென் கீழ்க்கணக்கு முதலிய ஆன்றோர் தனித்தமிழ்ச் செய்யுட்கள் மிக்கு வழங்குதலானும், கூறியநூல்கள் இஞ்ஞான்றை (இக்காலத்து) த்தமிழ் நூல்களில் வடசொற்கள் மிக்குவிரவி வழங்கப்படுதல்போலாது செழுவிய தமிழ்ச் சொற்களினாலேயே புணர்க்கப்பட்டிருத்தலானும், அன்னசெய்யுட்களில் வடமொழிச் சொற்கள் வந்து வழங்கப் பெறுதல் வழுவாமென வீரசோழியம் தெற்றிவழக்கொடு தேர்ந்துணர்வார்க் கின்பீஞ் செய்யலின்றிப்பற்றி வடநூலெழுத்திக்களோடு என்றீ எடுத்தோதி விலக்குதலானும், பெருந்தேவனாரும் அதற்கிவ்வாறே உரைவரைதலானும் அதுதவு என்னும் வினையடியாகப் பிறந்து உலகவின்பங்களைக் கெடுப்பது எனப்பொருள் படுதலானும் அது தமிழ்ச் சொல்லேயாமென்க. "அவாவென்ப தெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாப்பிறப்பீனும்வித்து" எனுந்திருக்குறளில், தவா எனும் எதிர்மறைப் பெயரெச்சத்திற்கு முதனிலை தவு என்பதறிக. மாண்ட என்பதில் முதனிலைமாண் ஆகலான் (மாட்சிமைமுதலியவற்றிற்போல) பெருமையுள்ள எனப் பொருள் கொள்க; அது இறந்த எனும் பொருள் படுமிடத்து முதனிலை **மாள்** என்பது பெரிதும் நினைவுகூரத்தக்கது. புலன், அறிவு ஈண்டறியப்பட்ட பொருண்மே னின்றது. தன்னியல்பு, சிறப்பு. தருக்கசங்கிரகதீபிகையார் பதார்த்தங்களை ஏழென்று பகுத்து அவற்றுட் சாமானியம், விசேடம் எனும் இரண்டையும் கூறியிருக்க ஈண்டுப்பதார்த்தங்கள் அவையிரண்டுமென்று கூறுதல் மலைவாம்பிற வெனின்;—அறியாதுகூறினாய்; ஆண்டுப் பதார்த்தங்களாவன இவை யென்பதூஉம், அவை இத்துணைத் தென்பதூஉங் கூறப்பட்டன. ஈண்டு, அப்பதார்த்தங்களின் றன்மையைச் சிறப்பென்றும் பொதுவென்றும் பகுத்து இவ்வியல்பிரண்டனுள்ளும் அவற்றை அடக்கப்பட்டது; ஆகலான் அதனோடிதுமலைவுறுமா றில்லை யென்றொழிக. (௪)

அன்னிய சாதி யுந்தன் சாதியு
மகன்று நிற்றல்
தன்னியல் பன்னியத்தைத் தவிர்ந்து தன்
சாதிக் கொத்தல்
துன்னிய பொது வியற்கை சொன்னவிவ்
விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்க ளியாவு மடங்கிடு
மான முற்றால்.

(க-ரை.) மேற்றன்னியல்பு பொதுவியல்பு என்று பகுத்தவற்றி னிலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை.) தன்னியல்பு அல்லது சிறப்பியல்பு எனப்படுவது, தன்னின் வேறினமாயுள்ள பொருளையும், தன்னினமாயுள்ள பொருளையும் அகன்று நிற்றலாம்; பொதுவியல்பு, வேறினப்பொருளின் நீங்கித் தன்னினத்தைத் தழுவுதலாம்; இவ்விரண்டு பொருட்டன்மையிலும் உலகியற் பொருள்களியாவும் அளந்து பார்க்கின் அடங்கும்; எ-று.

(கு-ரை.) தேமாவென்பது. வேறினமான இருப்பைமரத்தையும், தன்னினமான மாமரத்தையும் தழுவாது விலகி நிற்றலாற் சிறப்பியல் புடையது. மாவென்பது வேறினமான இருப்பையை மாத்திரம் ஒருத்து நிற்றலாற் பொதுவியல்புடையது. மாமென்பதே அன்னிய சாதியான விலங்கை யொழித்து நிற்றலால் பொதுவியல்பென்றும், மாமரம் சிறப்பியல்பென்றுங் கோடும் பிறவெனின்;—அவ்வாறு கூறின் தேமாவை இன்னவியல்பென்றுரைத்தற் கமையாமையின், உயர்வுடைய தேமாவினின்றுமே இயல்புவகுத்தற்பாலது. அல்லதூஉம், ஒருவர்க்கு மைந்தனாயினான் பிறிதொருவற்குத் தந்தையாயினாற்போல, விலங்கு முதலியவற்றோடு நோக்குங்கால் மாமரம் சிறப்பாகவும், தேமா முதலியவற்றோடு நோக்குங்கால் தான் பொதுவாகவு மாமென்று கோடுமாகலான் அதுபற்றி யீண்டைக்காவதோர் இழுக்கில்லையென்க. காட்சியளவையின் பாகுபாடும், கருதலளவையின் பாகுபாடும். அளக்கப்படு பொருட்டன்மையின் பாகுபாடும் முறையேகிளந்தோதிய ஆசிரியர் முன்னிரண்டின் இலக்கணங் கூறாது, இறுதியிலுள்ள தன் இலக்கணமாத்திரம் ஈண்டுக்கூறியது இயைபின்றால் எனின்;—காட்சி கருதல்களின் பாகுபாட்டிலக்கணம் முன்னர் விரித்துணரக்கப்படுதலானும், அவற்றையெல்லாம் விரித்துரைத்தபின் இச்சிறிய இலக்கணத்தையோதின் மாணுக்கன் இயைபறியாது மயங்குமாதலானும்* சூசிகடாக நயம்பற்றிப்† பருந்தின் வீழ்கடாக ஈண்டுக்கூறியருளினார் ஆசிரியர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளென்பது. சாதி, "ஒரு நிகரனவாய பலபொருட்குப் பொதுவாவதோர் தன்மை" எனச் சிவஞானசுவாமிகள் கூறியதனான் அஃதுணர்க. மானம் அளவு. (௫)

உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு
வாதி பற்றிச்
செயிரொடு விகற்ப மின்றித் தெரிவதிந்
திரியக் காட்சி
யயர்விலிந் திரிய ஞான மைம்புலன்
சார்ந்துயிர்க் கண்
மயர்வற வந்த ஞான மானதக்
காண்ட லாமே.

---

* சூசிகடாக வழக்கென்பது ஒரு கருமான் (இரும்பு செய் கொல்லன்) ஊசியையும் ஒரு பெருங் கொப்பரையும் செய்ய வேண்டியிருந்தால் சிறியவேலையான ஊசியைச் செய்து முடித்துக்கொண்டே பின்னர்க்கொப்பரையைச்செய்யத்தொடங்குவதுபோல, நூல்களுள் அரும்பெரும் பொருள்களுள் எளியவற்றை முறைபிறழ்ந்தேயும் முன்னர்க் கூறி அரியவற்றைப் பின் கூறுவது.

† பருந்தின் வீழ்க்கா டென்பது. "ஆற்றொழுக்கரிமா நோக்குத்தவளைப் பாய்த்துப் பருந்தின்வீழ் வன்ன சூத்திர நிலை" எனும் சூத்திரநிலை நான்கனுள் ஒன்று, அது ஒரு பயன்குறித்துப் பருந்தின் வீழ்ச்சிபோல் செல்லென இடையில் முறைபிறழக் கூறிப்போதல்.

(க-ரை.) இச்செய்யுளாலும் நிழ்ச்செய்யுளாலும் மேல் பகுத்த நால்வகைக்காட்சிக்கும் இலக்கணங் கூறுவானெடுத்துக் கொண்டார்; அவற்றுள், இது இந்திரியக்காட்சி மானதக்காட்சியி னிலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை.) உயிரோடொற்றுமைப்பட்ட அறிவு ஐம்பொறிவழியே சென்று ஐவகைப் பூதங்களில் ஐம்புலனையும் ஐயந்திரிபுக் குற்றங்களின்றி வேறுபடுத்துணராதறிதலே இந்திரியக்காட்சியாம்; இவ்வாறு கவர்ந்த ஐயறிவையும் குற்றமின்றி வேறுபடுத்தாராய்ந்தறிதலே மானதக்காட்சி அல்லது உள்ளக்காட்சியாம்; எ-று.

(கு-ரை.) 'மனமாதியாலுணர்தல் மன்னுபுலன்கள்' என்று சிவஞானபோதத்திற் கூறியிருத்தலாற் பொறிவழிச்சென்றுணர்வது மனனுணர்வென்றே பெறற்கும். பெறவே பொறியினும் நிகழ்வது மனனுணர்வேயாக அதையும் மானதக்காட்சியென்றே கூறற்பாற்று, அவ்வாறு கூறுது இந்திரியக்காட்சியென்றது என்னையெனின்;—நன்று கடாயினாய்; மனனுணர்வு சிறப்பும் பொதுவுமென இருவகைத்து. அவற்றுள் சிறப்புணர்வெனப்படுவது பொதுமையின் அறிந்தபொருளைப்பகுத்துணர்தலாம்; பொதுவுணர்வு, ஐம்பொறிவழியறியும் புலனுணர்வாம். யாண்டும் பொருட்கிலக்கணங் கூறுங்கால் சிறப்பாகவே கூறற்பாலது. அது பற்றியே சவிகற்பம் பண்ணும் உணர்வைமானதக் காட்சியென ஈண்டாசிரியர் மிக ஆழ்ந்து கூறுவாராயிற்று. மற்றைப்பொறியுணர்வில் மனம் பொதுமையினிற்றலானும், பொறிகளின்றேல் அவ்வுணர்வு நிகழாமையின் ஆண்டுச் சிறப்புறுவது ஐம்பொறிகளேயாமாதலானும் அச்சிறப்புப்பற்றி ஆசிரியர் வாயிற்காட்சி யென்றோதினார். இது தலைமைபற்றிய வழக்காம்; என்னை? ஆசிரியர் தொல்காப்பியனார் ஒரு பெயர்ப்பொதுச்சொல்லை பொருளொழியத், தெரிபுவேறுகிளத்தல் தலைமையும் பன்மையும், உயர்திணைமருங்கினும் அஃறிணை மருங்கினும்'' என்று கூறினாராகலின், ஆசிரியர் நச்சினார்க்கினியாரும் தொல்காப்பியம் மரபியலில் மனனுணர்வோடு மக்கட்காறறிவுளதென்று தொல்காப்பியருரைத்ததைத் தழுவியும் அற்றேல் மனனுணர்வான் அறியப்படும் ஐம்புலனுணர்ச்சியும் அம்மனனுணர்வில்லா விலங்குமுதலியனவற்றிற்கும், புன் மரமுதலியவற்றிற்கும் நிகழ்தல் கண் கூடாயறியப்படுதலின் அவற்றிற் கெல்லாம் மனனுணர் வில்லையென்றதென்னை' யெனக்கடாவுவார்க்குத் தான் விடையிறுக்காது அவ்வவரே அறிந்து கொள்ள விடுத்தார்; இவ்வழக்கில் மாறுபாடுஞ்சமயிகள் பலருளராகலானும், எடுத்த நூல் தொல்காப்பியம் பொதுவாதலானும், அதில் தம் கொள்கை யிருந்தபடியை விளக்கின் பலர் முரணிக் கூறுவ ரென்னும் அச்சம் மீதூர்தலானும் வாளாவொழிந்தார். யா மேற்கூறியதே யவர்க்குங் கருத்தாதல் அவர் உரையில் உய்த்துணர்ந்தறிந்து கொள்க. சிலர் செயிர் என்பதற்கு ஐய மென்றும், விகற்பமென்பதற்குத் திரிவென்றும், தெரிவதென்பதற்குச் சவிகற்பத்தோடறிதல் என்றும் பொருள கூறுபவாலெனின்;—செயிர் என்பது குற்றமெனப் பொருள்படுதலின் காட்சிக்குக் குற்றமாவது ஐயமுந்திரிவு மாகலான் செயிர் என்ற மாத்திரையானே அவையிரண்டு மடங்குமாம்; வேறுபிரித்துரைத்தல் பொருந்தாதாம்; விகற்பமின்றி யென்பதற்குச் செவ்வனே பொருள் கொள்ளாது நலிந்து பொருள் கொண்டதனோடாதல் அமையாது தெரிவதென்பதற்குச் சவிகற்பத்தோடறிதல் எனப் பொருள் கூறல்போலியாம். என்னை? ஐம்பொறியும் ஐம்புலனை அறிதற்குக் கருவியாவதல்லது பகுத்துணர்தற் கருவியன்றென்பதூஉம், பகுத்துணர்தற் கருவி மனமென்பதூஉம் முற்காட்டினமாதலான், பகுத்துணர்தலான சவிகற்பம் மனத்திற்கன்றி இந்திரியத்திற் கின்றென்றும், அதனால், மானதக் காட்சிக்கே சவிகற்பமுண்டென்றுங் கொள்க; இக் கூறியவாற்றான் அவர் உரைபோலியென வொழிக. காட்சியெனுஞ் சொல் சிறப்பாகக் கண்ணாற் காண்டலுக்கே பெயராயமைதலின் ஈண்டு சுவை, ஒளி, யெனத்தொடங்கிக் கூறுது ஒளியெனக்கண்ணறிவினையே முற்கூறிய நுண்மையையும், ஆசிரியர் சகலாகம பண்டிதரின் ஆழியகருத்தமைதியையுங் கண்டு கொள்க. வாயில், மெய் வாய் கண் மூக்குச் செவி சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன ஐயறிவு புலன் அல்லது இவ்வறிவைப் பயக்கும் பொருள் அவை, மண்புனல் அனல் கால் விசும்பு (பிருதிவி யப்பு தேயு வாயு ஆகாயம்) மயர்வு, மயக்கம்; இது ஐம்பொறியாற் கவரும் உணர்விலுள்ள ஐயந்திரிவுகளாம். இக்குற்றந் தீரவந்த ஞானமே உள்ளக்காட்சியாமென்க. (௫)

அருந்தின்பத்துன்பமுன்னத்
தறிவினுக்கராகமாதி
தருந்தனவேதனையாங் காட்சி
சமாதியான்மலங்கள் வாட்டிப்
பொருந்தியதேசகால வியல்பகல்
பொருள்களெல்லா
மிருந்துணர் கின்றஞானம் யோக
நற்காண்டலாமே.

(க-ரை.) இது நுகர்ச்சிக்காட்சி, தவக்காட்சி யிரண்டன் இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை.) உயிரறிவில் அராகதத்துவம் பொருத்தத்துய்க்கும் இன்பத்துன்பமே தன்வேதனைக் காட்சி; மலத்தினெழுச்சியை மனவொருமையாற் றொலைத்துப் பல்வகை நாட்டினும் முக்காலத்தும் நிகழும் இயல்பையும் பொருள்களையும் தாமிருந்த விடத்தேயிருந்து அறிதல் இயோகக் காட்சியெனப் பெயர்பெறும்; எ-று.

(கு-ரை.) "விச்சையினராகந் தோன்றி வினைவழி போகத்தின்கண், இச்சையைப் பண்ணிநிற்கும்" என வினையைச் செலுத்தித் துய்ப்பிப்பது அராகதத்துவமென்று இரண்டாவது சூத்திரத்துக் கூறுதலின் அதற்கேற்ப ஈண்டும் அராகமாதிதரும் என்றார். தவக்காட்சி யுளதென்பதற்குச் சான்றென்னை யெனின்;—தூரசேய்மை நாட்டிலுள்ள நம் நண்பர்க்காதல், தாய் தந்தை மனைவி மக்கட்காதல், சுற்றத்தார்க்காதல் இன்பதுன்பங்கள் நிகழின் நாமவற்றையறியாதிருக்கையிலும் நம் முள்ளத்துள் அவற்றிற் கேற்ற குறிகள்த

மே தோன்றல் இன்றி காண்மேன்றே. நமதறிவிற்கத்தகை யயறிதக்கமை யிருத்தலாற்றான் அவை அங்ஙனந் தோன்றுவவாயின அங்ஙனந் தோன்றினும் அவற்றை உறுதிபபடுத் தற் குரியவன்மை நிகழாவாறு மலம் நம்மை மறைத்தலான், அவற்றை நழுவவிடுகின்றாம். விலங்குமுதலியவற்றிற்கும், மக்களில் ஒருசாரார்க்கும் அத்தகைக் குறிகள் தோன்றாமைக்குக் காரணம், அவற்றினறிவு முழுதும் மறைக்கப்பட்டிருத்தலும, மக்களிலொருசாராரும் (மிக மூடராய் விலங்கின்றன்மைப்பட்டிருப்போர்) கழிந்தபிறப்புக்களில் விலங்கு முதலியவாய்ப் பிறந்துழன்று தினையளவாசமல் நீங்குதலின் அப்போதுதான் மக்கட் பிறவியல் வந்திருத்தலால் அவர்க்கு மலநீக்கம் மிக வின்மையுமேயாம். இத்தகைக் குறிகளும் பலமக்கட் பிறப்புக்களால் அறிவுமிகப் பெருகி மலவன்மை குறைந்தவர்கள் பாட்டே காணப்படுதலின், மலநீக்கமே அவ்வறிவு நிகழ்ச்சிக்குக் காரணமா மென்க. “காணிக்கொத்தது கோடிக்கு” என்னும் வழக்கால் (நியாயத்தால்) சிறிது மல நீக்கத்திற்கே யத்துணையறிவு நிகழ்ச்சிகள் தோன்றுமானால், முழுதும் மல நீங்குமேல் பொருந்திய தேசகாலவியல் பகல் பொருள்களெல்லாம் இருந்தறியப்படும் தவக்காட்சி நிகழ் தற்கோர் தடையுமில்லை என்பதாம். எனவே, தவக்காட்சி மெய்ம்மையதென்பது எண்பித்துக் காட்டினும். இன்னுமிதைக் கடாவிடைகளால் விரித்துக் கருதி யுண்மையறிந்து கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும். உள்ளம், உயிர் அராகமாதிதரும் என்பதை அராகமாதிதர எனத்திரிக்க. உள்ளத் தறிவினுக் கராகமாதிதர அருந்து இன்பத் துன்பம் எனமாற்றிப் பொருள்கொள்க. அறிவினுக்கு குவ்வுருவு ஏழாம் வேற்றுமை மயக்கம் பொருட்கேற்ப ஏழாம்வேற்றுமைகொள்க; “யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள் சென்மருங்கில் வேற்றுமைசாரும்” என்றார் தொல்காப்பியனாராகலின் சமாதி, மனவொருமை நற்காண்டல் என விசேடித்தார்; அது மல நீக்கத்தா லெய்துவதாகலி னென்க. (எ)

R. S. வேதாசலம்பிள்ளை.

---

ஓர் துரை.—அய்யா, வாருங்கள், தங்களுக்கு மிகவும் கஷ்டம் கொடுத்தேன்.

வித்வான்.—அப்படிச்சொல்லவேண்டாம். அன்பர்கள் ஒருவரை ஒருவர் கசக்கினல் தானே, இனிமை வெளிப்படும்.

புலவர்.—ஆம் அவரை எவ்விதமாய் கசக்கினலும், அவருக்கு கசக்காது.

***

ஒருநாள்,—வேதநாயகன் என்பவர் தன் ஆசிரியனாகிய சுப்பிரமணியன் என்பவரை புகழ்ந்தார். சூரியமூர்த்தி என்பவர் கூட இருந்தார்.

புலவர்.—சுப்பிரமணியனை வேதநாயகன் தவிர மற்றார் புகழ வல்லார். இது பொய்யல்ல. சூரிய மூர்த்தியே சாட்சி.



## தாயுமானசுவாமிகளருளிச் செய்த பாடல் உரை.

---

### பரிபூரணானந்தம்.

சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
தன்மைநினை யன்றி யில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவ மிதுவே
இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
வியற்கைதிரு வுளம றியுமே
இந்நிலையி லேசற் றிருக்கவென் றான்மடமை
யிதசத்ரு வாக வந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவ ழக்காய்ச்
சென்மம்வரு மோவெனவும் யோசிக்கு தேமனது
சிரத்தையெனும் வாளு முதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய் குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே.

(பொ-ரை.) எங்குப் பார்க்கினும் அங்கெல்லாம் பிரிவற நிறைந்துள்ள இன்பப் பொருளாயுள்ளவனே, என்றும்! எனது செயலெனப்படுவன வெல்லாம் நினதேயாம்; நான் எனச் சொல்லு மியல்பு உன்னின் வேறாக இல்லாமையால் நான் உனக்கு வேறு மல்லேன். இதுவே, வேதமுடிவும் ஆகமமும் ஒன்றுபடும் நிலைமையாம்; இவ்வரிய நிலைமையை ஐயந்திரிவின்றித் தெளிதற்கு அடியேன் மனமுடைந் துருகி வாடிய தன்மையும் தலைவ நினது திருவுளம் அறியுமன்றோ? இத்தகைய அரிய நிலையில் மனதொருக்கிச் சிறிதிருக்கலாமெனினும் அறியாமை என்னுட் புகுந்து குடிகொள்ளுகிறதே! அதனால், எங்கே மாயாமலங் கன்மமலங்கள் மீண்டும் என்னை வந்து பற்றுகிறதோ வென்றும், அதன் காரியமாக எங்கே பிறப்புக்கள் தொடர்ச்சியாய் வந்துவிடுகிறதோ என்றும் எனமனமானது மிகவும் சிந்தித்து வருந்துகின்றது: ஆகலான், சிரத்தை யென்னும் வாளையென் கையிற்கொடுத்து, மெய்ஞ்ஞான மெனுந் தைரியத்தையு முதவிப் பிறவி வேர் அறுக்குமாறருள் செய்து நாயேனைக் காப்பாற்ற வேண்டும் ஐயனே! எ-று.

(கு-ரை.) அன்றே ஆணவமல மென்னும் இருளினுளழுந்தி ஒன்றையு மறியாது மாழ்கிக்கிடந்த உயிருக்குப் பெருங் கருணையினாற் கருவிகரணங்களைத் தந்து அறிவுநிகழப் பண்ணும் இறைவன் செயலன்றித் தனக்கொரு செய்கையின்மையானும், “ஆட்டுவித்தாலாரொருவர் ஆடாதார்” எனப் பெரியாரும் உரைத்தமையானும் எனது செயல் நினது செயல் என்றார். யானென்னுமறிவே இறைவன் றொழில் பெறக் கிடைத்த தாதலானும் அங்ஙனம் அறியுமறிவும் அதற்கிலக்கான பொருளும் இறைவனைப் பிரிந்து ஒன்று செய்யுமாற்றலுடையவல்லவாதலானும் நின்னின் வேறலேன் எனக்கூறப்

பட்டது. வேதாந்தம், வேதமுடி வெனக் கூறிய ஆசிரியர்
சித்தாந்தம், ஆகம முடிவெனக் கூருததென்னை யெனின்;
—வேதம் கிழெல்லாம் பலபெருஞ்சமயங்களைக் கிளந்தோதி
யவற்றிற்கு அதிகாரிகளைச்சுட்டி அவற்றைச் சிறப்பித்துவே
தமுடிவான உபநிடதங்களில் அவற்றை யெல்லாம் மறுத்
துரைத்து உண்மைப் பொருளை நிலைபெறுத்தியதுபோலாது,
ஆகமங்களின் முதல் இடைகடை யென்னுமெவ் விடங்களி
லும் சிவபரஞ்சுடரின் பெருமையே கூறி முழக்கப்பட்டதா
தலான் ஆகமமுடிவு என்று கூருராயினுர். எனவே, வே
தாந்தமும் ஆகமமும் பொருந்தியொன்றும் நிலைமை இது
வேயென்பது பெற்ரும். மலங்கழன்றீ சாக்கிரத்தில் அதீத
த்தைப்புரியுந் தமக்கு மலமாயை கன்மம் வாராமை யறிந்தாரா
யினும், 'நான்மலங்கழன்றேன், ஆதலால், அவை யெம்மை
வருத்தா' என்று கருதுதலே மறித்தும் பிறவிக்கு வித்தாமா
தலானும், "இங்குளிவாங்குங் கலம்போல ஞானிபால், முன்
செய்வினைமாயை மூண்டிடினும்" என மெய்கண்ட தேவ
சிவம் அருளியவாறுபோல எங்கே அவை மறித்தும் வந்து
வருத்துமோ எனும் அச்சம்மீதூர்தலானும் அவ்வச்சந்தீர்க்
கும் அரிய 'மருந்தைநோக்கி மனம்யோசிக்கிதே' என மிக
இரங்கிக் கூறினுர். பிறப்பென்பது கன்மநுகர்ச்சியின் பொ
ருட்டெய்துவதாகலின் மலமாயை கன்மந்திரும்புமோ தொ
டுவழக்காய்' என்பதன்பின் சென்மம் வருமோ வெனக்கூறி
னுர். ஊக்கமில்லார் கைவாள் "பேடிகைவாள்" போல்பய
னின்ருதலின் திரமும் உடன்கூறினுர். 'பார்க்குமிட மெங்கு
மொரு நீக்கமற நிறைகின்ற' என்பதனுல் இறைவனதுவியா
பக இலக்கணங் கூறினுர். சிரத்தை, நூற்பொருள் கேட்டற்
கண்மனவெழுச்சி இடையறுது நூற்பொருள்கேட்பார்க்குக்
கழிந்தொழிந்த மலமாயை கன்மங்கள் வருதல் கூடாமை
யின் இங்ஙனங் கூறினுர். ஒளவையாரும் "கேள்விமுயல்"
என்றதூஉம் இப்பெற்றி நோக்கியே யாமென்க. (ரு)

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுல னடங்கு மிடமே
பொருளென்பர் சிலர் காணமுடிவென்பர் சிலர் குணம்
போனவிட மென்பர் சிலபேர்
நாதவடி வென்பர் சிலர் விந்துமய மென்பர் சிலர்
நட்டநடு வேயி ருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர் கருதி
னுடலரு வென்பர் சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர் சிலர்
பேசினரு ளென்பர் சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவ ரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிட்டை பெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந் தமே.

(பொ-ரை.) பூதங்கள் ஐந்தும் ஒடுங்குதற்கு முதற்காரண
மான மாயையே முதற்பொருளென்பர் ஒரு சாரார்; ஐம்பொ
றியானுங் கவரப்படும் விடயாதிகளைந்தும் ஒடுங்குமிடமேமுத
றபொருளென்ப பிறிதொருச்சாரார்; அந்தக்கரண முடிவென்
பர் சிலர்; முக்குணமும் அடங்கிய தென்பர் சிலர்; சிலர்நாத
வடிவென்றும் விந்துவடிவென்றும், **வேறு சிலர் நானே பிர
மம் என்றும்**, சிலர் உருவப் பொருளென்றும், அருவப்பொ
ருளென்றும், சிலர் வேற்றுமையறச் சீவபோதம் நசித்தவிட
மும் ஜீவகிருபையு மென்றும், பின்னுஞ் சிலர் முன்னும்பின்
னுமில்லாப் பாழென்றும் பிறவாறும் உரைப்பர்; இவ்வாறு
பல்வகைச் சமயிகளும் பலவாறுகூறுங் கொள்கைகளைத் தழு
வுவதால் மனம் ஒரு வழிப்படாது பாதரசம்போற் சலன
முறுமேயன்றி, மேலான இன்பத்தைப் பயக்கும் நிட்டை
கூடுதற் கண் அதற்கு ஊக்கஞ் செல்லாது; எ-று.

(கு-ரை.) ஈண்டுக்கூறிய சமயிகளின் பெயரும் அவரு
ரைக்கும் வேறு பிறகொள்கைகளும் அவற்றை மறுத்துரைக்
குஞ் சித்தாந்தமும் ஈண்டுக் கூறப்புகின் வரம்பின்றிப் பெரு
குமாதலாற் சமயநேர்ந்துழிவிரிப்பாம்; அல்லதூஉம், இப்பத்
திரிகையிற் சிவஞான சித்தியார் பரபக்கம் எழுதுங்கால் இனிப்
புபற்றியாங்காங்கு விரித்துவிளக்குதும் ஆண்டுக்காண்க. இவ்
வாறு பல்வகைச் சமயத்தையும் உடன்படாது மறுக்கும் ஆசி
ரியர்மதம் என்னையோவெனின்;—உலகத்துள்ள வெச்சமயங்
கட்கும் பொதுவாயும் அவற்றிற்கெல்லாம் பிறப்பிடமாயுமுள்
ளசைவசித்தாந்தமே இவர்சமயமாயா மென்பது "சைவசமய
மே சமயம்" "இராசாங்கத்திலமர்ந்தது வைதிக சைவமழகித
ந்தோ" "அந்தோ வீததிசயமிச்சமயம் போலின் றறிஞரெலா
நடுவுரைக்க" என்று இவ்வாசிரியரே பல்வகையிடத்துங்
கிடந்தோதலானும், இவர் ஒவ்வொரு செய்யுளிலும் கூறியிரு
க்குங் கொள்கைகளனைத்தும் சைவசித்தாந்தத்தாற் கூறப்படு
வனவாதலானும் நன்கு துணியப்படு மென்க. மேலும், இச்
செய்யுள்களில் வரும் மகுடவாக்கே, சிவஞானபோதம் இர
ண்டாம் சூத்திரம், "நீக்கமின்றி நிற்குமன்றே" என்னும் பரி
பூரண லட்சணத்தை எடுத்து ஆளுதலானுமென்க. பொறிபுல
னடங்குமென்பதற்குச் சிலர் பொறியும் புலனுமெனப்பொருள்
விரித்து அவை முடியுமிட மென்பர்; புலனென்பது பொறிக்கு
அறிவை யெழுப்புதலானும், பொறி மேற்கூறிய பூதத்துள்
அடங்குதலானும், புலனொடுக்கத்தில் பொறிக்கு அறிவு நிக
ழாமையானும், புலனொடுக்கங் கூறியமாத்திரையானே யது
வும் பெறப்படுமாதலானும் அது போலியுரை யென்க. பாத
ரசம், சூதம். (சு)

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென்
னறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்று
யழுந்தவுந் தலைமீதிலே
சாந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிட்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத்தவ ரார்கொலோ
தந்தைதாய் முதலான வகிலப் பிரபஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்காலமதை நோவனோ

பந்தமானது தந்த வினையையே நோவனோ
பரமார்த்தமேதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே.

(பொ-ரை.) அறியாமையாகிய ஓர் இருளையே ஒரு வீடாகச் சமைத்து அதில் எனதறிவைப் பொதிந்து அதன் அறிதற்றொழிலைக் குறைத்தவரார்? ஒருவருமில்லை; அவ்வறிவு தானுஞ் சிறிது விளங்கிய வழிச்சார்ந்ததன் வண்ணமாமாறும் என் தலையிலெழுதினவர் யாவர்? ஒருவருமில்லை; இவ்வாறிருக்கவும் மெஞ்ஞானமாகிய இன்பநிட்டை கூடி முத்தியெய்தாமல் சோற்றையடைத்துவைத்த துருத்தி போலும் இவ்வுடலை நிலையுடைய தென்றெண்ணி மேலுமேலுந்தின்று அதைத்தாங்கவைத்தவர் நாமாரோ? ஒருவருமில்லையே. தாய் தந்தை முதலான எல்லாச் சேதனப் பிரபஞ்சத்தையும் தருதற்குக் காரணமாயுள்ளது என்னாசையன்றோ? ஆதலால், என்னைத்தானே நொந்துகொள்வேனோ, அன்றிப் பிறரை நொந்து கொள்வேனோ, நிகழ்காலத்தை நொந்துகொள்வேனோ, பிறப்பிறப்பாகிய சிறையிற் றளைந்து வைத்த இருவினைகளை நோவேனோ, என்றிவ்வாறு பிதற்றுவதல்லால் சிறந்தபொருள் இது வென்றறிகிலேன்; எ-று.

(கு-ரை.) மக்களைப் படைத்து அவர்க்கு அறியாமையையும் இறைவன் உடன்கூட்டினானென்னுஞ் சமயிகளை நோக்கியுவ்வாறுகூறின் இறைவனுக்கு நடுவு நிலைமையின்மையும், கருணையின்மையுமாதி குணங்கள் ஏற்பட்டு அவன் அக்குணங்களுடைய மக்களொடு சேர்க்கப்படுதலின் அவ்வாறு கூறுவார் கூற்றுப்போலியென்பார் எதிர்மறுத்தல் வினாவாக 'அந்தகாரத்தையோராசமாக்கி மின்போலென்னறிவைச் சுருக்கினவரார்' என்றார். எனவே அவ்வறியாமையுயிர்க்கநாதியே செம்பிற் களிம்புபோல் உளதாயிற் றென்பது பெற்றாம். இவ்வாறே ஆன்மாவின் அறிவும் சார்ந்ததன்பாலாம் இயல்புடைத்து அவ்வாறாம்படியதைச் செயற்கைப்படுத்தினர் ஒருவருமில்லையென்றுங் கூறினர். ஆன்மாவுக்குச் சுதந்தர அறிவு சிறிது நிகழினும் அது நிலையின்றி நினைப்புமறப்பொடு கூடி மாறுந்தகைய தென்பார், கடிதிற்றோன்றிமறையும் மின்னலையுவமை கூறினர். அவ்வாறாயினும் பேரின்பநிலையெய்தற்குக் கருவியான நிட்டைகூடாது, இவ்வுடலினின் பொருட்டே யுழைத்து வாணாளழித்தல் பெரிதும் இழுக்குடைத் தென்றுங்கூறினர். பிறப்பார்க்கன்றித் தந்தைதாயின்மையின், தந்தைதாயென்ற மாத்திரையானே பிறப்பெனக் குறிப்பானுணர்த்தி அப்பிறப்பைக் கூட்டியது ஆசை என்றார். 'அவாவென்பதெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாப்பிறப்பீனும் வித்து' என பிறரும் பிறப்புக்குக் காரணம் அவாவெனக் கூறினர். பிரவாகாநாதியாய் இவை வந்துகொண்டிருத்தலின், தான் பிறர் காலம், வினைமுதலிய ஒன்றையும் நோதற்கு ஏதுவில்லையென்றதாம். (எ)

வாராதெலா மொழிய வருவனவெலா
மெய்த மனது சாட்சியதாகவே
மருவநிலைதந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபு சமரசமாகவே
பூராயமாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போத நெறிதந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராளமாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதருளின்னு மின்னும்
நின்னையே துணையென்ற வென்னையே காக்க
வொரு நினைவு சற்றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடை விடாப்
பற்றாக நிற்க வருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந் தமே.

(பொ-ரை.) வாராதனவெல்லாம் அவ்வாறே யொழிக; வருவனவந்தெய்துக; என இவ்விரண்டினும் சமநிலையுண்டாகவும்; இச்சமநிலையே வேதாகமத்துணிவாகலின் அவற்றினிடத்தெனக்கு அபேதவுணர்வு தோன்றவும், யாக்கை நிலையாமை நெறியையெனக் கறிவுறுத்ததும், நிலையுமின்பநுகர்ச்சியே முத்தியெனவும், அதைப்பெறுதற்கு அன்பாய்க் கரைந்துருகுதலே வழியாமென அவ்வன்புகொடுத்து விளங்கக்காட்டியதும் நின்னருளல்லவோ? ஏ பெருமான்! இன்னும் நின்னையே அருந்துணையாகக் கொண்டிருக்கும் புழுத்தநாயினுங் கடையேன் நின்னைவழுத்துதற்கு நினைவுகொள்ளு மிடத்து, அதனால், உலகாதிகள் என்னறிவிற் றோன்றாவண்ணம் மறைத்து மோனநிட்டை கலையாது அதில் நான் ஒழியாதுபொருந்தி நிற்கத்திருவருள் புரிந்து என்னைக் காப்பாற்றுவாயாக; எ-று.

(கு-ரை.) "நன்றாங்கால் நல்லவாக்காண்பவன் அன்றாங்கால், அல்லற்படுவதெவன்" எனப்பெரியருரைத்தாராகலின் நல்லனவருங் கால்களித்தலும், வராக்கால் துன்புறலும் தீயனவருங்கால் துன்புற்றும் ஒழியுங்கால் இன்பமுறுவதும் நடுவுநிலைமையுடையார் செய்கையாகாமையானும் தீயன நல்லனவாகிய எவற்றினும் சம அறிவுகோடலே சத்திநிபாத மெய்துதற்குக் கருவியாதலானும் "வாராதெலா மொழியவருவன வெலாமெய்த" என்றார். இத்தகைய உணர்ச்சிகளெல்லாம் நாமே கொண்டா மென்பார்க்கு அகப்பற்றும் அதனாலெய்தும் பிறப்புமாறாமையின், தன்னறிவாற்ற லழியத் திருவருளைத் துணைகொண்டு அது விளக்கியாங் கறிதலே பேரின்பம் பயக்குமென்பார் 'தந்ததும் நின்னதருள்' என்றார் உலகம். இல்பொருளென்பார் மதத்தை மறுத்து மோனநிட்டைகூடுங்கால் அவையறிவிற் றோன்றா வெனத் தோற்ற மின்மையே கூறியொழிந்தார். பாசி கல்விழும்போது சிறிது விலகிப்பின்னுங் கூடுமாறுபோல நிட்டை கொள்ளுழி மறைந்து அதுகலைந்தழிப்பின்னும் உலகப்பற்று தன்னைப்பற்றும் என்னு மச்சத்தால் "மோனமே யிடைவிடாப் பற்றாக நிற்கவருள்வாய்" என்றிறைவனை வேண்டிக்கொள்வாராயினர். நீராளம்-நீரின் தன்மை. (அ)

ஆழாழிகரையின்றி நிற்க விலையோ
கொடிய ஆலமமுதாக விலையோ
அக்கடலின் மீதுவடவனனிற்க வில்லையோ
வந்தரத்தகிலகோடி

தாழாமனிலைநிற்க வில்லையோ
மேருவுந்தனுவாக வளைய விலையோ
சப்தமேகங்களும் வச்ரதரனணையிற்
சஞ்சரித்திடவில்லையோ
வாழாது வாழவே யிராமனடியாற் சிலையு
மடமங்கையாக விலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித்திக
ளுலகமார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழானவென்மனங் குவியவொருதந்திரம்
பண்ணுவ தனக்கருமையோ
பார்க்குமிட மெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே.

(பொ-ரை.) ஆழியகடல் கரைவரம்பின்றியும் பெருகிவர்
திலகை யழிக்காது தன்னிலையிலே நிற்குமாறும், கொடியவி
டமும் அரியமருந்து (அமிர்தம்)ஆக உன்னால் உண்ணப்பட்
டவாறும், அக்கடல் மேகத்தால் பொழியப்பட்ட நீரையுண்டு
பொங்கிவழியாமல் அதன் நடுவில் வடவைத்தீ (வடவாமுகா
க்கினி) அதை யுறிஞ்சும்படி நின்னால் அமைக்கப்பட்டவாறும்
அந்தரத்தில் எத்தனையோ கோடி அண்டங்கள் மதலை (தூண்)
யின்றியும் கீழ்விழாது நின்சங்கற்ப மாத்திரையானே நிலை
பெற்றிருக்குமாறும், திரிபுரசங்கார காலத்து மேருமலைவில்
லாக நின்றால் வளைக்கப்பட்டவாறும், ஏ பெருமான்! நின்
இறைமைத் தன்மைக்கும் அளவிலாற்றலுடைமைக்கும் எளிய
வேனும், கேவலம் இந்திரனாலும் செலுத்தப்பட்டு எழுமே
கங்களும் காலத்திற் பெய்வதையும், ஸ்ரீஇராமன் காலடியால்
அகலிகைக்கல் மறித்தும் பெண்ணுருவெழுந்ததையும், மணி
மந்திராதிகளால் விரும்பியாங்குப்பலசித்திகள் எளிதிற்பெறப்
படுவதையும் நோக்குங்கால் செயற்கரியசெய்யும் நினக்கு என்
மனம் ஒரு வழிப்படுமாறு செய்தல் அருமையல்லவே; எ-று.

(கு-ரை.) "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர், செய
ற்கரிய செய்கலாதார்" என்றாசிரியர் பெருநாவலர் உரைத்த
வாறு, எம்பெருமானது செயற்கரிய செய்கையில் ஐந்தினை
முதலிலும் பிறர் தம் தேவரெனக் கூறும் ஆன்மாக்களின் செ
ய்கை மூன்றனையும் பின்னும் வைத்து, பேதையாயினோர் அரிய
வெனக் கூறும் எளிய செய்கைகளை அவ்வான்மாக்களும்செ
ய்தார்கள்; உண்மையில் அரியவான செய்கைகளை நீயும்
எம்பொருட்டுச் செய்தனை. இவ்வாறு தற்பயன் குறியாது
அரியசெய்கை புரியும் நீயே என்மனத்தை ஒருவழிப் படுத்த
வல்லை யென்பது கருத்தாகக் கூறினார். கல்லைப் பெண்ணாக்
கினமை செயற்கரிய செய்கையன்றோ வெனக் கூறுவார்க்கு,
இராமன் தனக்கெழுந்த இரக்கத்தால் முற்குறித்துப் பெண்
ணாக்கினான் என அவன் கதையிலேயே கூறப்படாமையா
னும், கௌதமர் சாபவிடையில் "இராமன் பதம் பட்டதும்
எழுக" எனக் கூறினமை அதிற் கூறப்படுதலானும் அவ்வாறு
கூறுதல் அறியாமையாம் எனவிடுக்க. ஒருசாரிடமும் நல்ல
கருவிகளின்றி முற்றுப்பெருமையின், கௌதமரும் அச்சா
பவிடைக்கேற்ற சிறப்புக்கருவியே கூறினாரென இவ் ஏதுக்
கொள்ளின், அரவக்கொடியோன் (துரியோதனன்) புழுச்
சோற்றை மாற்றிய ஆயிரங்கதிர்ப்பரிதி மகன் (கர்ணன்) மா
ட்டும் அவவேதுக்காணப்படுதலின் அவனும் அரிய கடவுளா
மெனப்பட்டு அனேகேஸ்வரவாதமா மாதலின் அதுபொருந்
தமா றியாண்டைய தென்க. வச்ரதரன், வச்சிராயுதத்தைச்
சுமப்பவன்: வாழாது வாழ்தல், ஊனுடம் பொழியப் புகழு
டம்பு நிற்றல்; "ஒன்றாவுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்
றாது நிற்பதொன்றில்" மையின் இவ்வாறு கூறினர். (௬)

ஆசைக்கொரளவில்லை யகிலமெல்லாங்
கட்டியாளினுங் கடன்மீதிலே
ஆணைசெலவேநினைவர் அளகேசனிகராக
வம்பொன்மிகவைத்தபேரும்
நேசித்துரசவாதவித்தைக் கலைந்திடுவர்
நெடுநாளிருந்தபேரும்
நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி
நெஞ்சு புண்ணாவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீரவுண்பதும்
உறங்குவதுமாக முடியும்
உள்ளதேபோதுநானானெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக்கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்தநிலையை யருள்வாய
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந் தமே.

(பொ-ரை.) அவாவெனுங் கடலுக்குக்கரை யின்றென்பது
எல்லாவுலகங்களையுங் கட்டியரசு செலுத்தும் பெரும் வே
தர் கடலின் மீதும் தமதாணை செல்ல விரும்புதலும், குபே
னுக்குச் சமானராய்ப் பொனனைக் குவியலாய்க் கொட்டிவை
ப்பார், மேலும் பொன்பெறுதற்கு எளிய நெறியான இரசவா
தவித்தைக் கலைதலும், நெடுநாள் இம்மை யின்பத்தைத் துய்
த்த கிழவர்கள் பின்னும் இவ் உடலை ஓம்பிநிலையாக இருத்
தற்குக் காயகல்பந் தேடிவருந்துதலும் போல்வனவற்றில் வை
த்துக் கண்டுகொள்ளப்படும்; இவற்றை யெல்லாம் ஆராய்ந்து
பார்க்குங்கால் பசிநோய் தீரவுண்பதும், பிறகு உறங்குவது
மென்னு மிரண்டினுள்ளும் அவை அடங்கும்; ஆதலால் உள்
ளனபோது மென்று மனநிறைதலே அறிவுடைமைக்குப் பய
னாம். ஆதலால், முழுமுதற்பெருங் கடவுளான எம்மிறை
வா! நான் நான் என்று கூறிச்சருக்கி மறித்தும் பாசமாகிய
கடலில் வீழ்ந்து அடியேன் அமிழ்ந்திப் போகாமல், மனதீ
மான தூயமோன நிலையாகிய நாவாயை (கப்பலை) எனக்கருள்
புரிந்து முத்திக் கரையில் நாயேனைச் சேர்க்கவேண்டும்; எ-று

(கு-ரை. நிலம், பொருள், போகமெனும் மூன்றின்
ழியாகப் பெருகும் அவாவின் நிலையை முறையே முதல்நால
கடியானுங் கூறினார். கட்டியாளல், அரசுபுரிதல்; இது உ
கவழக்கு. அளகேசன், அளகை நகர்த்தலைவன், குபேரன்
இரசவாதம் எனும் வித்தை மெய்ம்மையுடையதேனும் பெ
ருள் விருப்புடையார்க்கு அதுகைவரப் பெருமையின் அ
ந்திடுவர் என்றார். பொருள் விருப்புடைமைக்கும், இரசவ
தக் கலையெய்தாமைக்கும் இயைபென்னையோ வெனின்;
அவ்வித்தை, துறவியாவார் இயற்கையில் தாம் பொருள் வி
ருப்புடையரல்லரேனும், ஒவ்வோர்கால் தம் துறவொழுக்
நிறைவேறுதற்பொருட்டு வேண்டப்படும் பொருட்குறைக
முடித்தற்குக் கையாடுபவாதலான், அவர் அவ்வியல்பில்ல
பேராசைப் பேய்கட்கு அவ்வித்தையைக் கற்பிக்கா ரெ
தேயதன் கருத்தாகக் கொள்க. காயகற்பம், உடலை மூப
றப்புக்களினின்றும் நீக்குவதோர் அரியமருந்து, இவ
இரசவாத விருப்பினர்போல் அது பெறாது வருந்துதலி
'நெஞ்சு புண்ணாவர்' என்றார். இவ்வணம் பலவாறு வருந்த
தெல்லாம் உண்பதற்கும் உறங்குதற்குமே யாகலான் அ
பயனிலவென்றதாம். ஆகையால் உள்ளது போதும் எ
உள்ளத்தில் அமைதலே முத்திநெறிக்கு வழியென் றாசிரி
ஓதினார். 'கூகைகுழறல்' எனும்பட்டினப் பாலையிற் பே
குழறல் எனற்பாலது குளறல் எனவழக்கநடை பெற்ற
ஆசிரியர் இங்ஙனஞ் சொற்களைக் கெடுத்து வழங்குதல் ப
விடத்துக் காணப்படும். அதுபற்றிய வரையிகழற்க, எவ்வா
வழங்கினும் அது பெரியோர்க்கா மென்பவின் மனமொழி
ளால் அறிந்துரைக்கப்படுவன வெல்லாம் அசத்தென்று 'அ
வறிந்தவெல்லாமசத்தாகும்" 'பாவகமேற்றான சத்தாம்' எ
பவற்றால் மெய்கண்டசிவம் விலக்கியருளுதலின் இவ்வாசிரி
யரும் ஈண்டு "மனதற்றபரிசுத்தநிலை" யென்றார். (௭௦

பரிபூரணானந்தம் முற்றும்.

ஶ்ரீ. வேதாசலம் பிள்ளை.

# உண்மை விளக்கம்

அல்லது

# சித்தாந்த தீபிகை.

1897ஆு ஜூன்மீ 21உ திங்கட்கிழமை.


## பூவும் மணமும்.

இவ்வுலக மாதினிடத்துச் சிறந்து விளங்கும் பொருள்களுள் பூவினைப்போலப் பொலிவுடையதும், நம்முள்ளத்தின் (இருதய கமலத்தின்) தூய்மை, அன்பு, இன்பமாதியவற்றை இனிது விளக்குவதும் எதுவுண்டு? இதைப்போல நமது தனிப்பெருங் கடவுளுடைய அளப்பரிய சிறப்பையும் பேரருளையும் செம்மையையும் விளக்கிக் காட்டுவது எது? அப்பூவின் புதுமையும், இயைபும், அழகிய அரிபரந்த இதழின் மென்மையும் எவ்வளவோ நம் மனத்தைக் கவர்ந்து உள்ளக் கிளர்ச்சியை யெழுப்புகின்றது. ஆதலின், நம்மவர்களும் அதன்மேல் மிகவும் விருப்புடையவர்களாய் அதனைத் தாங்கள் அணிந்தும் கடவுட்குச் சாத்தியும் தத்துவ உண்மைகளில் காட்டாக எடுத்து வழங்கியும் வருகிறார்கள். அன்றியும் நம்மவர்கட்குத் திருவிழாக்களிலும் நித்திய நைமித்தியாதிகளிலும் இன்றியமையாதனவாயுள்ளன பூக்களேயாம். அவர்கள் இறைவனுக் கிவற்றைமிக உவப்போடும் அணிகிறார்கள்.

"சித்தந்தெளிவீர்காள்
அத்தனாரூரனைப்
பத்திமலர்தூவ
முத்தியாகுமே."

என்று ஸ்ரீஞானசம்பந்தப் பெருமானும் பத்தியாகிய மலரைக் கொண்டு நமதப்பனை அருச்சிக்கவிளித்தவாறுங் காண்க. அஃதல்லாமலும் பூவின் முக்கூறாகிய பூ, பூவின் நிறம், பூவின் மணம், சத்துச் சித்தானந்தமாகிய பரம்பொருளினது அருள்வெளி நிலைக்கு உவமிக்கப்பட்டிருக்கின்றது.

"பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போதவின்ப
மாவண்ண மெய்கொண்டவன்."

என்றார், பேரணியும் இனிய நடையும் அமைந்துள்ள திருவிளையாடற்புராணம் செய்த பரஞ்சோதி மாமுனிவர். இத்திருவருவை நமதப்பரும்,

"ஆவாகி ஆவினிலைந்துமாகி அறிவாகி
அழலாகிய வியுமாகி
நாவாகி நாவுக்கோருரையுமாகி நாதனாய்
நால்வேதத் துள்ளோனாகிப்
பூவாகிப் பூவுக்கோர்நாற்றமாகிப் புக்குளால்
வாசமாய் நின்றானாகித்
தேவாகித்தேவர் முதலுமாகிச் செழுஞ்சுடராய்ச்
சென்றடிக ணின்றவாறே."

என்று சிறப்பித்து அதன் கலப்பு நிலைமை கூறியவாறுங் காண்க. தத்துவவுண்மை தெளிந்து நமதிறைவன்பால் பேரன்பு தழைத்தொழுகிய ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமானுக்கு பூவுக்கும் அதன் மணத்திற்குமுள்ள மிக நுண்ணிய இயைபு வேறோர் விதமாக விளங்கி

"பூவினாற்றம் போன்றுயர்ந்தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவியபெருமை."

என்றெடுத்துப் பாடி யருளினார்கள். மற்றோரிடத்தும் இவ்வொற்றுமை நயத்தையே உடலுயிர்க்கு ஒப்பிட்டு, அவ்வாறெடுப்பிட்ட உவமான உவமேயங்களாகிய இரண்டையுமே பரம்பொருளினதியை பிற்கொப்பிட்டு அவற்றின் வேற்றுமையை (பூமணம், உடலுயிரின் பேதத்தை) விளக்கியருளினார்கள். அது,

"உற்ற வாக்கையி னுறுபொரு ணறுமல
ரெழுதரு நாற்றம்போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருளப்
பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர்சொற் றெளியாமே
யத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே."—என்பதாம்.

உலகுயிரோடிறைவன் பெற்றிருக்கும் அத்துவித சம்பந்தம் உடலுமுயிரும் ஒற்றுமையுற இயைந்திருக்கும் சம்பந்தத்திற்கு உவமிக்கப்படினும், உடலெங்கணும் நிறைவுற்றிருக்கும் உயிர் உடல் வரம்புக்குட் படுதலானும், அவ்வொற்றுமையால் உயிர் பெறுவது நிலையாவின்பமே யாதலானும், தன்னியல்பறிய வல்ல அன்பர்கட்குத் தனது பேரருளையும் நிலையுள்ள பேரின்பத்தையும் விரைந்தளிக்க முந்தும் பரம்பொருள் எவற்றினும் நிறைந்து அவற்றையும் கடந்து, கருணையும் பேரின்பமுமே யுருவாய் நிற்குந் தனது பெருந்தன்மையை உண்மையாகவும் நிலையாகவும் அவற்றினின்றும் பிரித்துப் பொருள் விளக்காமையானும் அதினின்றும் வேறுபடுத்திக் கூறுவர்; ஆக இறைவன்பால் அயரா அன்பு இன்றுண்டேல் அன்றே

"சிவனுக்குள்ளே சிவமணம் பூத்தது."—என்று திருமூலருங் கூறுவாராயினர்.

மேலும், மகாயோகிகளாகிய திருமூலதேவர் அனேக விடங்களில் இப்பூமண உவமானங்களைத் தெளித்துரைத்திருப்பதில், இறைவனது பரிபூரணத் தன்மையை விளக்கி இப்பூக்களை ஒன்றின்மேலொன்றாக அடுக்கித் தொடுத்துக் காட்டியிருக்கும் ஒன்றை வரைவாம்.

"காலி னூறுங் கரும்பினிற் கட்டியும்
பாலி னுண்ணெயும் பழத்து ளிரதமும்
பூவி னாற்றமும் போன்றுள னெம்மிறை
காவல னெங்குங் கலந்து நின்றானே."

தாயுமான சுவாமிகள் (இவர்கள் அடைமொழித் தொடையினிமையும், இனியமொழிப் புணர்ப்பையும் வேறோர்கால் எடுத்துப்பேசுவாம்) அன்பு நிலையாயுள்ள அசலப்பொருளை விளித்துக் கூறுமிடத்தே இவ்வுவமானத்தை மிகவும் அழகாக உரைக்கின்றார்.

" ஆகார புவனமின் பாகாரமாக அங்ஙனே
    யொரு மொழியா லகண்டாகார
யோகானு பூதிபெற்ற அன்பராவிக் குறுதுணையே
    யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசை கிண்கிணிவாயென்ன மலர்ந்த
    மலரிடைவாச மருவு மாபோற்
றேகாதி யுலகமெங்குங் கலந்ததானே திகழனந்தா
    னந்தமயத் தெய்வக் குன்றே."

தேருந் தொறுமினிமை தரும் அருந்தமிழ் மொழியாகிய செல்வக்குழவியைச் சங்கப்பலகையாம் தொட்டிலிற் கிடத்தி வளர்த்த தாயாகிய சங்கப் புலவருட்டிலகம் போன்றவரும், சேக்கிழார் பெருந்தகையாலும் சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் புகழ்ந்து துதிக்கப்பட்ட பொய்யடிமையில்லாப் புலவர்களுட்டலைமையுடையவரும், மாதேரவனருளியபொருட்கு உரைகண்டவருமாகிய நக்கீரதேவர் கைலைபாதி காளத்திபாதியந்தாதியில்

" உரையும் பொருளும் உடலு முயிரும்
விரையு மலரும் போன் விம்மிப்—புரையின்றிச்
சென்றவா றேங்குந் திருக்கயிலை யெம்பெருமா
னின்றவா றெங்கு நிறைந்து."

என்று ஏனைய உவமானங்களோடு பூமண உவமானத்தையும் தந்தருளினார்கள்.

தருமபுர ஆதீன ஆதிமூர்த்தியின் "சிவபோகசார" பூங்காவினின்றும் அத்துவித இலக்கணத்தை அருமையாக விளக்கும் ஓர் பூவை யெடுத்து நம்மாலையில் தொடுப்பாம்.

" இந்தனத் திலங்கி யெரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளி கண்—சந்ததமும்
அத்துவித மாவதுபோ லான்மாவு மீசனுமாய்
முத்தியிலே நிற்கு முறை."—நிற்க.

பெருங்கருணைத் தடங்கடலாகிய எம்பெருமானது திருவருளின்றியும், அவனது திருவடி நீழலை யெய்திப்பேரின்பக் கடலிற்றிளைத்து விளையாடும் பேரன்பர்களது கடைக்கண் நோக்கமின்றியும் ஒரு காரியமும் முற்றுப்பெறுதென்பது உறுதியாதலின், அவ்வன்பர்கள் நாவாகிய இளமரக்காவில் மலர்ந்து கமழும் நறுமலர்களை எடுத்து ஒரு மாலிகையாகத் தொடுத்து, தன்னையணைந்தோர் வேண்டுவனவற்றை விரும்பியளித்து ஆதரிக்கும் எப்பொருட்கும் இறைவனும் பரமேசுரனது செந்தாமரை மலர்போன்ற திருவடியில் அதையணிந்து அவனை முழுவன்போடு நாத்தழு தழுக்க வழுத்தி நாம் எடுத்த காரியம் இனிது நிறைவேறுமாறு பிரார்த்திப்போமாக.

## இப்பத்திரிகையின் கருத்து.

இப் பத்திரிகையை நாம் நடாத்தப் புகுமளவில், நம்மாற்றலுக்கு ஏலாதவிஷயத்தில் தலைப்படுவதாகச் சிலர் கருதுதல் கூடும். அது வுண்மையேனும், உலகத்தில் சேதனங்களுக்கு அறிவையும், அசேதனங்களுக்குத் தொழிலையும் அளித்துக் கிருபாநோக்கம் பாலிக்கும் சகதீசனது திருவருளைத் துணையாகக்கொண்டமையின், நமது நன்முயற்சி ஒருவாறு வெற்றி பெறுமென்பதற் கையமில்லை. நெடுந்தூரத்திலுள்ள ஐரோப்பிய வித்துவசிரோன்மணிகள் "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண், மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னும் மேலோர் கருத்துக்கிணங்க உண்மைப்பொருளைக் கண்டறியப் புகுந்தபோது, இப் பரதகண்டமாகிய இந்தியா தேசத்தின் வேதாகம புராண இதிகாசங்கள், அளவிறந்த மத பேதங்கள், கல்வித்துறைகள் ஆகிய இவற்றின் உண்மைகளை வியப்புடன் சிரமேற்கொண்டு பயனடைவதை நம்மனோர் கண்கூடாகக் காணுமிடத்து "இஃதென்னை? ; நமக் கனுதியாய்க்கிடைத்த உண்மைப்பொருள்களை அன்னியர் உணர்ந்து பயனடைய, யாம் வாளாவிருந்து வீணாட்படுத்திக் 'கமலத்திலுள்ள தேனின் சுவையறியா மண்டூகங்களைப்போல்' இருப்பதுதகுதியன்" றெனநினைந்து அபிமானமேலீட்டினால் சுயமதஆராய்ச்சி செய்வதற் கிடமிருக்குமன்றோ? பலவகைச் சாத்திரங்கள் மூலமாக ஞானத்தைத் தெள்ளிதில் உணர்வதற்கு இடையூறுகளோ பலவுள. நம்மனோர், சர்வகலாசாலைகளில் பொதுவான லௌகிக கல்வி பயின்றபின்னர்த் தமக்கு அதிக விருப்பத்தைத் தரத்தக்க ஏதேனுமொரு கலாசாலையில் அபிவிர்த்தியடைவதற்கு முயல்வதில்லை. எந்த சாகையிலும் தீர்க்க ஆராய்ச்சியும் ஆழ்ந்த கல்வியு மிராமையால், நம் தேசத்து அளவிறந்த கலைகளை வாசித்து அவற்றின் உண்மைப்பொருளையறிதற்குக் கூடாமையாயிருக்கின்றது. அப்படிப்பட்டவர்களுக்குச் சுலபசாதனமா யிருக்குமாறு இப்பத்திரிகையைத் தொடங்கலாயிற்று.

இது, இடையூறின்றி நடைபெறுவதற்கு, விஷயங்களை ஐயந்திரிபறத் தெளிவாய் எழுதுவோரும், மொழிபெயர்ப்போரும், அதுபோன்ற தருணசகாயம் புரிவோரும் கருவிகளா யிருக்கின்றனர். இத்தகையோர், தற்காலத்தில் எளிதிற் கிடைப்பது துர்லபம். அன்றியும், தக்க புத்தகசாலைகள் முதலிய துணைக்கருவிகளும் மிகச் சிறுபான்மையாயிருக்கின்றன. இவ்வளவு சாதகக் குறைவுகளோடும் இங்கிலாந்து, ஜர்மானி முதலிய பிரதேசங்களிலுள்ள பண்டித சிரோன்மணிகள் நம் தேசத்து பற்பல கலாசாலைகளில் தேர்ச்சியடைந்து வேத வேதாந்தங்களி னுண்மைகளை யுணர்த்த நம்மிற் சிலர் அவற்றையறிய இருப்பது நமக்குச் சிறுமையும் அவர்களுக்குப் பெருமையுமாகவன்றோ இருக்கின்றது. சுயநலங் கருதாது, நம்தேசத்துக் கலாஞானத்தேனைத்தாமருந்துவதுமன்றி நமக்குப் புகட்டவும் முயலும் அத்தகைய ஐரோப்பிய விற்பன்னர் நீடூழிவாழ்க.

மேலே, யாம் காட்டிய குறைவுகளைப் பரிகரித்து நம்மனோர் நம் தேசத்து கலாஞானத் தேறலை நேராக வாய்மடுத்

துண்டு இன்பமடைய விரும்பி யாம் இப்பத்திரிகையை நடத்தத் தொடங்கினோம். இதில், அரிய வடமொழிக் கிரந்தங்களின் மொழிபெயர்ப்பும், தமிழ்க் காவியங்களின் அகலவுரைகளும், விசேடக் குறிப்புகளும் பிரசுரிக்கப்பட்டுவரும். அன்றியும், மானதபதார்த்த சொரூபலக்ஷண சாஸ்திரங்களும் உண்மையான மத சித்தாந்தக் கருத்துகளும் அப்போதப்போது வெளியாகும். பெரும்பாலும், பூர்வ திராவிடர்களுடைய தத்துவசாஸ்திரங்களின் உண்மைகளையும், மதக் கோட்பாடுகளையும் வெளிப்படுத்துவதுமன்றி, அவைகளில் தற்காலத்துக் காணப்படுங் குறைவுகளை நீக்கும்பொருட்டு ஐரோப்பிய சாஸ்திரங்களை மொழிபெயர்த்து ஆங்கிலேய பாஷையிற் பயிலாதவர்க்குதவிபுரியவேண்டுமென்பதும் இப்பத்திரிகையின் நோக்கம். இவ்வாறு செய்வதனால், பூர்வீக கிரந்தங்களின உண்மைகளை நம்மனோர் எளிதில் தெரிந்துகொள்வதேயன்றி, உலகத்தில் யாவரும்வியக்கத் தற்காலத்து மேம்பாட்டடைந்துள்ள ஆங்கிலேய சாஸ்திரிகளின் அரிய கருத்துக்களையும் புலப்படுத்துவதற் கிடமுண்டாகும்.

இராஜாங்க விஷயங்களைப்பற்றி இதில் யாதொன்றும் வியவகரிக்கப்படமாட்டாது. "வேந்தனுமோங்குக" என்று பரமாசாரியசுவாமிகள் வாழ்த்திய வாழ்த்தைச் சிரமேற்கொண்டு நமது மகாராணியாரவர்கள்பால் நன்றியறிதலும், ராஜ விசுவாசமும் முற்றும் பாராட்டிவருவதே இப்பத்திரிகையின் முக்கியமான அங்கமாகும். சுருதியுக்தி அநுபவாயிலாக யாம் கண்டறிந்த சாஸ்திர உண்மைகளை "நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையால்" அஞ்சாத் துணிவுடன் வெளியிடப் பின்னிடோம். ஏனெனில்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி."

"கெடுவல்யான் என்பதறிக தன்னெஞ்சம்
நடுவொரீஇயல்ல செயின்."—என்னும் அமுத வசனங்களைக் கடைப்பிடித்து, யாம் பிரவர்த்திக்கும்போது தமது கோட்பாடுகளுக்கு விரோதமானவற்றைக் காண நேரிடும் நண்பர்கள் சினங்கொள்ளாது "பிறர்வாய் நுண்பொருள் காண்பதறிவு" என்பதை மறவாது உண்மையறிந்து பயனடையத் திருவருள் துணைபுரிக. சுபம்.

---

## குறிஞ்சிப்பாட்டு.

இஃது, அருந்தமிழ்ச் சங்கப்புலவர்களாற் கோக்கப்பட்ட பத்துப் பாட்டினுள் ஒன்று. இப்பத்துப்பாட்டு முதலியன ஏறக்குறைய ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் மிக இனியவாகப் புணர்க்கப்பட்டிருத்தலை நோக்குமிடத்து, வடமொழியில் மிகச் சிறந்தனவாக மதிக்கப்படுங் காளிதாசர் முதலிய புலவர் இயற்றிய அரும்பெருங் காவியங்களெல்லாம் புதியனவென்பது தெள்ளிதிற் புலப்படும். ஆங்கிலே பாடையில் மிகச் சிறந்தனவான காவியக் கதை முதலியவற்றிற் கிடந்துள்ள அருமை பெருமைகள் இந்நூலைப் படிக்குந்தோறும் சுவைப் பூட்டப்பட்டு மன வெழுச்சியை மிகுதியும் பயந்து இன்பத்தை விளைக்கின்றது. இனிய செய்யுள் நடையும், கருவூலம்போற் சமயத்திற் கேற்ற சொற்களும், உயர்ந்த கருத்துக்களும், பிறபாடைச் சொற்கள் கலவாத் தூய்மையும், சொற்சுவை பொருட் சுவையும் பொதிந்து கிடக்கும் இந்நூலைக் காண்டொறும் கேட்டொறும் இவை போல்வன பலவற்றைச் சங்கப் புலவர் இயற்றித் தராமைக்காக நாம் மிகவும் இரங்கவேண்டியதன்றோ? அது கிடக்க, பிற்காலத்துப் புலவர்களாவது இத்தகைய நூலின் நடையைத் தழுவிச் சில பல நூல்களாவது இயற்றி வெளியிட்டனரா? அதுவுமில்லை. சமயவைராக்கியம் மிக்கு எத்தனையோ பிள்ளைத் தமிழ்! எத்தனையோ கலம்பகம்! எத்தனையோ அந்தாதி முதலியவற்றையே இயற்றிவைத்துப் போனார்கள். இங்ஙனமியற்றிய நூல்கள் தாம் எளியனவா? அன்று. தமிழ் மொழியின் வனப்பையும் பெருஞ் சிறப்பையும் அறிய விரும்புவார்க்கு அவற்றைத் தெளிவாய் எடுத்துக்காட்டி விளக்கி அதைப் பயில்தற்கு மனவூக்கத்தை எழுப்புந்தகையன. தொன்மையாய் உலக வழக்கம் பெற்று அதுபோலவே இன்னும் நடைபெற்றுத் தன்றன்மை ஒரு சிறிதுங் குன்றாப் பழம்பாடை தமிழைத் தவிரவேறிலதென்று எத்தனையோ பெரும் பண்டிதர்கள் உரைக்கக் கேட்டிருக்கின்றோம். சமஸ்கிருதம், கிரீக், இலாட்டின் முதலிய எத்தனையோ அரிய பெரிய பழம்பாடைகள் இப்போது உலகவழக்கின்றி உயிர் நீத்துக் கிடப்பது கண்கூடாயறியப்படுவதொன்றாம். இவ்வாறு தன்றன்மை குன்றாத் தகையதாய் நிலவுறுவதூஉம் அல்லாமல் தன்னை வழங்கும் மக்களால் பழமையே வரைக்கப்பட்டு இளமை கழியாதிருப்பதுந் தமிழேயாம். எத்தனையோ ஆயிரம் வருடங்களுக்குமுன் தாம் வழங்குந் தமிழைப் போற்றி வளர்த்துச் சிறப்பெய்திய மக்கள் உலகில் தமிழரைப்போலொருவரிலர். இவ்வாறு பெருஞ்சிறப் பெய்தியிருந்த தமிழும் தமிழரும் தற்காலம் அடைந்திருக்கும் நிலைமிகத் துன்புறத் தக்கதாமென்க. நிற்க.

இனி, இக்குறிஞ்சிப் பாட்டுத் தமிழறியாத ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அதன் இனிமை சிறப்புக்களை அறிவுறுத்தற்கு ஆசிரியர் கபிலரால் இயற்றப்பட்டதென்று இதற்குரையெழுதிய ஆசிரியர் நச்சினார்க்கினியார்* உரைத்திருக்குமதனால் இச்செய்யுளியற்றிய நல்லிசைப் புலவர் கபிலரேயாமென்பது நன்கு துணியப்படும். இச்செய்யுள் ஆசிரியப்பா இது, மிகப்பழைய தென்பதூஉம், ஆங்கிலேயபடைப் பிளாங்கு வெர்சுக்கு ஒப்பான தென்பதூஉம் இவ்விரண்டையும் ஒப்பிட்டு நோக்குவார்க்கு இனிது விளங்கும். இது, நாடகவழக்குற எழுதப்படும் நூல்கட்குப் பொருத்த முடையதென்பது இதனாலும் வேறு பிறவற்றினாலும் எளிதிற்கண்டு கொளத்தக்கதேயாம். இச்செய்யுள் 261 அடிகள் உள்ளது. ஒவ்வோரடியும் நான்கு சீரானும், ஒவ்வொருசீரும் இவ்விரண்டசையானும் (மூன்றசைகளினுமிழுக்காது.) அமைக்கப்பட்

---

* இவ்வாசிரியர் உரை விரிக்குந் திறமும், அதன் நுட்பமும், பழந் தமிழ் நூல்கட் குரையெழுதியவற்றில் நிகழும் மயக்கவுணர்ச்சி யறுத்த செய்யாமற் செய்த வுதவியும் எம்மால் மதிப்பிடுந்தரத்த தன்று. வல்ல

டுள்ளது. அசை, நேரசையென்றும் நிரையசையென்றும் இருவகைப்படும். அவற்றுள், நேரசையென்பது, ஒருகுறிலாதல், ஒரு நெடிலாதல், இவை ஒற்றடுத்தாதல் வருவது; உ-ம்;-ஆ, ழி, வெள், வேல் என்பன முறையே கண்டுகொள்க. நிரையசை யென்பது, இருகுறில் ஒருங்கியைந்தாதல், ஒரு குறிலும் அதன்பின் ஒரு நெடிலுங் கூடியாதல், இவை ஒற்றடுத்தாதல் வருவது; உ-ம், வெறி, சுறா, நிறம், விளாம் என்பன முறையே காண்க. இவ்வசைகளாலியைந்த அகவற்சீர், நேர் நேர் - தேமா, நிரைநேர் - புளிமா, நிரை நிரை கருவிளம், நேர் நிரை கூவிளம் என்பன. பிறவும் அகவலுள் வந்து மயங்கப் பெறுமேனும், அகவற் சீரெனப் படுவன இவையேயாமென்க. இச்சீர்கள் ஒன்றோடொன்று பொருந்துவதே தளையெனப்படும். ஆசிரியப்பாவில் இத்தளை ஒன்றுவதும், ஒன்றாததும் என இருவகைத்து. ஒன்றிய ஆசிரியத்தளை நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்தளை என இருபிரிவுறும். மாமுன்நேர் வருதல் நேரொன்றாசிரியத்தளை; விளம் முன் நிரைவருதல் நிரையொன்றாசிரியத்தளை; நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும்வருதல் ஒன்றாத ஆசிரியத்தளையாம்; உ-ம்; "போதுசாந்தம்", "விறலிழை நெகிழ்த்த", "சால்பும் வியப்பும்", "ஆசறு காட்சி" என்பன முறையே கண்டுகொள்க. "வெள்ளைக்கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்கு" என்றதனால் ஆசிரியப்பாவுக்கு இழிபு மூன்றடியும், உயர்வுசெய்யுட் புலவன் கருத்துப்படியும் வருமென்றுணர்க. உயர்வு, ஆயிரம் அடிவரையில் வருதல் சிறப்பென்ப ஒருசாரார். ஆதலின், ஈண்டாசிரியர் 261 அடியாகப் பாடிமுடித்தார். இப்படியே மதுரைக் காஞ்சி முதலியவற்றில் அடிமிகுந்து வருமாறோர்ந்துணர்க. இனி, இதில் அமைந்துள்ள பொருளியல்பு வருமாறு;—பொருள் என்பது மக்களுயிர்க் குறுதிபயக்கும் அறம்பொருளின்பம் வீடு என்பன. இவை, அகப்பொருள், புறப்பொருள் என இரண்டினும் விரித்துரைக்கப்படும். அகப்பொருளில் பெரும்பான்மை இன்பமுஞ் சிறுபான்மை ஏனையவுங் கூறப்படும்; புறப்பொருளில் பெரும்பான்மை பொருளும் அறமும் சிறுபான்மை இன்பமும் வீடுங்கூறப்படும். அகப்பொருள் களவு கற்பென இரண்டு பகுதியுடையது. ஒப்புயர்வில்லாது தமக்குத் தாமே பொரு (ஒப்பு) வுரைக்கப்படும் தலைமகனுந் தலைமகளுங் கொடுப்பாரும் அடுப்பாருமின்றிப் பால் (ஊழ்) வழியோடி இன்பந்துய்ப்பது களவென்பது, அங்ஙனங் களவொழியாற் கூடியார் தமரும் பிறருங் காணவதுவை அயர்ந்து இல்லறம் நடாத்தல். அவற்றுள் இப்பாட்டுக் களவுபற்றி வந்தது. இதில் உரைக்கப்படுங் களவு, உலகத்தார் கூறுங் களவுபோலாது பேரின்ப நெறிக்கட் செலுத்துதலின் இஃதன்னதன்றென்பது தெற்றெனத் துணியப்படும். களவுங் கற்பும், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் இவற்றின் நிமித்தங்களாகப் பாகுபட்டு, இவ்வொழுக்கம் நிகழ்ந்தவிடமே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்து திணையெனப்படுதலின், தலைமகன் றலைமகட்கிடைப்பட்ட புணர்ச்சி முறைமையைத் தோழி கூறுகின்றாளாக ஆசிரியர் செய்யுட் செய்தமையின் இப்பாட்டிற்குக் குறிஞ்சிப் பாட்டென்பெயர் போந்தமை சாலப் பொருத்தமுடைத்தென்றறிக. நிற்க. இனி, இப்பாட்டில் வரும் கதைத்தொடக்கம் வருமாறு:—குறிஞ்சி நிலத்துவேடர்களின் அரசன் ஒருவனுக்கு அவனும் அவன் மனைவியும் இழைத்த பெருந் தவத்தால் பாற்கடலில் செழுந்தாமரை முளைத்தாற்போல ஒரு பெண்மகவு பிறந்து ஐவகைத் தாயரும்* ஆயத்தாரும் போற்றி வளர்க்க வளர்ந்து பதினொராண்டும் பத்துத்திங்களும் நிரம்பி அழகுருவெடுத்தாற்போற் கண்டவர் மால்கொளத்தன் றோழியர் புடைசூழச் சென்று விளையாடி வருவாள். இவ்வாறிருக்கையில், அவள் ஒருநாள் பொழில் விளையாட்டு விரும்பித் தன்றோழியர் புடைசூழ நாண்மீன் நடுவில் நாண்மதிபோலப் பிடியானை தோற்றுப் பின்னிடைய மெல்லமெல்லவசைந்து நறுமணங் கமழும் நளிமலர்க்காவொன்றில் புகுந்து அருவியாடுது மென்றும், அழகிய சுனைமுழுகுது மென்றும், எழில்வளர் மலர்கள் எடுத்துக்கொள்வோ மென்றும், வாசமலர்க் கொடியில் ஊசலாடுவோ மென்றும், மயிலோடு மாறாடுது மென்றும், குயிலொடுமாறுகூவுது மென்றும், அன்னப் புள்ளோடணிநடை பழகுதுமென்றும் இங்ஙனம் பலரும் பலவாறு கூறி ஒருவர் ஒருவரின் முந்தியிழைந்து பிரிந்தனர். இவ்வாறு பிரியவே தலைமகளும் தனியே பிரிந்துபோய் நறுமலர்க் கொடியில் நளிமலர் கொய்துகொண்டு நின்றாள். இஃது இப்படி இருக்க, ஒரு நாட்டரசன் மகன் தனக்குத் தானே எவ்வாற்றானும் ஒப்புடையான்: அன்னை, வேட்டமாடும் விருப்பினனாய்ப் பல்வேலிளைஞர் தற்சூழப் பம்பை முதலாப் பல்லியந்துவைப் (பலவாச்சியம் ஒலிப்ப) வேட்டை நாய்கள் வெகுண்டு தொடரா கரியகாடொன்றிற் புகுந்து பல்விலங்கையுங் கொன்று குவித்து விறல் மிகுந்து வேட்டமாடிக் கொண்டிருக்கின்றான். அப்போது, ஓர் அழகிய மான் அவ்வரசிளைஞன் கையிலகப்பட்டுத் தப்பியோடியது. அது அவ்வாறோடுவதைக் கண்டு மனம் பொறானாய் இளவேந்தன் கையில் முருகவேள்போல் வில்லையும் அம்பையும் விளங்க ஏந்தி அதன் பிறகே ஓடுகையில், அது பலவாறு வளைந்து வளைந்து இறுதியில் தன்னை விரும்பித் துரத்தி வரும் அரசு புதல்வனுக்கு அவன் பெருமைக் கேற்றமான் "நாம் அல்ல" வென்று கருதி, அவன் றகுதிக் கியைந்த ஓர் அழகியமானை யவனுக்குக் காட்டித் தான் தன் ஆண்மானைத் தேடிச்சென்றது. அது மறைந்ததும், அதன் பின்வந்த அரசிளைஞன் தான்தொடர்ந் தோடிவந்த மானினும் கட்கினிய பெண்மான் ஒன்று பூக்கொய்து நிற்கக் கண்டு (இவள் நாம் முன்சொன்ன தலைமகள்) அவளது அழகின் பொலிவையும் தோற்றத்தின் தகைமையையும் வியந்து அருகணைந்து நல்லுரை கூறினான். தலைமகளும் சுடர்வேல் முருகனேபோல் பேரெழில்கொண்டு தன்னருகணைந்து இன்னுரை பகரும் அரசிளைஞனைக் கண்டு தன் வயத்தளன்றிப் பான்மை வழியால் அவன் வயத்தளேயாய் மால் எய்தி நிற்கத் தலைவன் குறிப் பறிந்து மார்புற இறுகத்தழுவி ஒருவர் ஒருவனூரப் பிரியாப் பெருநட்புக்கொண்டனர். பின் இவ்வன்புடையார் ஆற்றாமையோ டொருவரை விட்டொருவர் பிரிந்து தத்தம் பதிநோக்கிச் சென்றனர். சென்று மறுநாட்காலையிலுந் தோழியருந்

* செவிலித்தாய், கைத்தாய், முலைத்தாய், ஊட்டுந் தாய், பாராட்டுந்தாய்.

தலைவியும் முன்போலவே பொழிலிடைப்புகுந்து விளையாடுகையில், தலைமகளும் அவளுயிர்ப் பாங்கியும் ஒழித்தொழிந்தோ ரெல்லாம் பிரிந்து விளையாடச் சென்றனர். முன்னாட்போலவே, தலைமகன் அவர் இருவரும் நின்ற இடம் போந்து, தோழியையும் உடன் கண்டுவப்பெய்தித் தோழிக்குத் தான் தலைமகன் மாட்டுவைத்த மிகை அன்பின் மிகுதியைக் குறிப்பாலும் வெளிப்படையாலும் உணர்த்தி அவளையுந் தன் களவொழுக்கத்திற் குடன்படுத்திக் கொண்டான். பின் அரசன் குறிஞ்சிநிலத்தில் விளையுந் தினைப்புனத்தில் பறவைகளும் விலங்குகளும் வந்து விழுந்து அழித்துப்போவதை நீக்கும்பொருட்டு அவ்வரசன் மனைவியாராம் கொடிச்சி தன் மகள் தலைவியையும் அவளுயிர்ப் பாங்கியையும் உடன் கூட்டியதற்குக் காவலாக அனுப்பவள். அங்ஙனமே அவர்கள் போந்து தினைப்புனங்காத்துத் தலைமகன் வரவு நோக்குழிஅவனும் அங்குவந்து தலைமகட்கு இன்பந்தந்து போவான். இவ்வாறு களவொழுக்கத்தால் நிகழும் இன்பத்தை விலக்கி யவ் இருவரையும் வதுவையிற் புணர்த்த விரும்பித் தோழி, "தலைவனே! நீ நின் தமரையனுப்பி எம் சுற்றத்தாரை உடன்படுவித்து, நின் மனைவியை மணமுடித்து இன்ப நுகர்ந்து வாழ்க; நாளை எந்தமர் இத்தினைப்புனங் கொய்யக்கருதினர்." என்று வற்புறுத்தவுங் கேளானாய்த் தலைமகன், தான் களவொழுக்கத்தாற் பெறுமின்பத்தையே நன்குமதித்து பின்னுஞ் சிலநாள் அவ்வாறே நடத்திக்கொண்டிருந்தான். இதற்குள் தினைப்புனங் கொய்யப்பட்டுத் தலைவியுந் தோழியும் வெளிச் செல்லாது வீட்டிலிருக்குமாறு தாயரால் விதிக்கப்பட்டனர். தலைவனும் தினைப்புனத்தைவந்து வந்து நோக்கி ஆண்டுத்தன் உயிர்க்காதலியைக் காணாது வருந்திச் சென்று தன்சுற்றத்தையனுப்பி அவளை மன்றலிற்கொள்ள முடிவுசெய்தான். இதற்குள், தலைமகள் தன் காதலனைப்பார்க்க முடியாவாறு தனக்கு நேர்ந்த இடையூற்றையும், "அவன் தன்றமரை யடிபோவந்து நாமில்லாமைகண்டு வருந்தித் திரும்புவனோ" என்பதை நினைந்தும், அவனையன்றியும் வேறோர் ஆடவனுக்கு நம்மை மணம்பொருத்த நேர்வரோ தாய்தந்தையர்" என்பதை எண்ணியும் நெஞ்சுபுண்ணாகிக் கண்ணீர்வார மெய்ம்மயிப் பொடிப்ப, வளை கழல, வனை துகில்நெகிழ; கூந்தல் அலைய, கருமேனிவாட, நெட்டுயிர்ப்பெறிந்து நெடுந்துயர்க்கடலுள் அழுந்தி வருந்தா நின்றாள். இங்ஙனம் நாளும் நாளும் தன் செல்வப்புதல்வியின் மேனி சோர்ந்து துளங்கொளி மழுங்குது கண்ட செவிலி: "என்மகளுக்கிஃது எற்றினால் (எதனால்) ஆயிற்று" என்று குறிசொல்வாரைக் கேட்டுழி யதற்கவர் "இது முருகணங்கான் (சுப்பிரமணியக்கடவுளால்) வந்தது" என்றுரைக்க, அது தீர அவனுக்குச்சாந்தி விழாச்செய்து வெறியாடி வெண்மறி (வெள்ளாடு) யறுத்தும், அதனாலும் பிறவாலும் தன்மகட்குறு நோய் தீராமை கண்டு மனமுடைந்துருகி நைகின்றாள். இங்ஙனம் துயருறும் செவிலித்தாயையும், ஆற்றாமையால் வருந்தும் தலைவியையுங் கண்டு தான் அவர் படும் துன்பத்திற் கிரங்கிக் களவு நடந்த உண்மையைச் செவிலிக்கறிவுறுத்தி அத்தலைமகனுக்கே தலைமகளை மன்றல் முடித்தற்காம் ஏதுவுங்காட்டி, அவ்வாறவ்விருவர்க்கும் இடையில் நிகழ்ந்த களவொழுக்கத்தில் தனக்காதல், தலைவிக்காதல், தலைவனுக்காதல் குற்றம் நிரம்பாமையுந் தெளிவாயெடுத்து விளக்குவான் புகுந்து 'அறத்தொடுநிற்றல்' எனும் பொருளிலக்கண விதிப்படிச் செவிலித்தாயை நோக்கிக்கூறுகின்றாள்.

(இன்னும் வரும்.)

R.S. வேதாசலம்பிள்ளை.

---

(அங்கிலேய பலமல் மாதாந்தப் பத்திரிகையினின்றும்
மொழி பெயர்ப்பு.)

எண்சீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.

---

வளியது நாப்பணுருக் கரந்ததுவோவானுறுநீல
விதானத்தின் கீழாக்
களியது கெழுமியிருந்ததோமாந்தர் காமுறுநெஞ்
சோகரிய தொல்கடலின்
றெளிதிரை மடியோ மண்ணடி நடுவோ செறிதரு
தீத்தனை வளர்க்கவோவாது
நளிதரவியங்கு மண்ணினுண்முழைஞ்சோ
நகை கிடந்துறங்குவ திசைவுற நவில்வீர். (க)

கதிர்நிறமெனவும் யாழிசையெனவுங் கட்புலன்
கதுவிடா தெம்முளே கலந்து
முதிர் சுவை யின்ப மறிவு மெய்யுருவாய் முழுமுதல்
நின்ற மூவிலா வியல்பி
னதிர்விலா தொன்று யிருளினுளன்றேயழுந்
தினங் கிடந்தே மங்கண்மா ஞாலம்
பொதிர்வுற வொளிரும் பரிதியின் முன்பும்
பொங்கொளிக் கோள்களுழிதரு முன்பும். (உ)

உலகெலா மெமதே யாங்ஙனமெனினஃதிறை
வன தவனிலுகுதலில்லாது
நிலவுறு கூறுயமை குவமவனை விதப்புறநெஞ்
சோடாடவன் வழுத்தும்
பலமதக் கொள்கை கிழிக்கினுஞ் சூறைபரந்திதைத்
தூக்கினு மவைவெளித் தோற்றங்
கலக்கவக் கொள்கை யனைத்தையுங் கடந்துகரு
தருமெய்ம்மையனுயவனுறையும். (ங)

மெய்ப்பொருளறிவைப் பயந்தழிவில்லாமே தகு
நிலையைத் தெளிவுற விளக்கிக்
கைப்புடைக் சாக்காடெனும் வழிபிழைத்துக்
கனவென நிலையாவுலகியல் பறுத்துப்
பொய்ப்பொருண்மறைக்கும் பனியென நலியப்
புகலரும் வரம்பிலறி விஞலிறைவற்
கய்க்குமா கூடவுமன்பெனு மென்றாழ்துலங்கு
தல்காணடும் வருதிரோ துணைவீர். (ச)

R. S. V.

## குறிப்புகள்.

நமது பத்திரிகையில் டாக்டர் போப் அவர்களால் வெளியிடப்பட்டிருக்கும் விளம்பரத்தை நண்பர்கள் கூர்ந்துபடிக்குமாறு வேண்டிக்கொள்ளுகிறோம். சிலர் அத்தகைய ஆங்கிலேய மொழிபெயர்ப்பு ஒன்று வேண்டற்பாலதோ வென்றும் அது படிக்கத்தக்கதோ வென்றும் கேட்பாராயினர். ஆனால், நம்தமிழ் மொழியின் அரும்பொருளை உலகமெல்லாமுணர்ந்து கொள்ளவும் அதனால் அதன் பெருமை நன்கு சுடர்விரிந்து விளங்கவும் அது ஏதுவாயிருப்பதால், அதை நாம் நன்கு மதிக்கத் தடையில்லையே. இதுவன்றியும், வடமொழியிலுள்ள அரும் பெரும் நூல்கள் மொழி பெயர்ப்புருவமாக உலாவியதனாலன்றோ, இப்போது வடமொழிப் பயிற்சி மறுபடியும் தலையெடுக்கத் தொடங்கியது? இன்னும் "திருவாசகத்" தில் ஒருபாகம் 'இண்டியன்மாகஸின்' ரிவியூ என்ற பத்திரிகையில் மொழிபெயர்த்துப் பிரசுரிக்கப்பட்டதைப் படித்து, அதின் நடைமிக மெல்லிதாகவும், இத்தகைய மொழிபெயர்ப்பு நூல்களினும் எத்தனையோ முறை சிறந்ததாகவும், பயிலத்தக்கதாகவும், அதன் விசேடவுரைக் குறிப்புகள் மிகச்சிறந்தவாகவும் இருக்கக் கண்டோம். அதனை இம்மாதப்பத்திரிகை அங்கிலேய பதிப்பில் அச்சிட்டிருக்கிறோம். "திருவாசகம்" தத்துவ வுண்மையும், ஞானததர்மங்களையும் விளக்குவதில் தனக்குத்தான் ஒப்புடையதாயிருத்தலின், டாக்டர் போப் அவர்கள் இயன்ற விரைவில் அதை முற்றிலும் மொழிபெயர்த்து வெளியிடுவார்களென்று நம்புகிறோம். தமிழில் புலமையுடைய இன்னொரு துரையவர்கள் "திருவாசகத்தை" மனதுருக்கி அல்லது மனதை இளகப்புருக்கிப் புஸ்தகம் என்று சொன்னதாகக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

***

மிஸ்டர். ஆர். என். கஸ்ட் என்னும் ஆங்கிலேய [illegible] வான், சென்ற ஐம்பது வருஷங்களாக சமயம், சா[illegible]ம், சரித்திரம் முதலியவற்றில் நிகழும் ஆராய்ச்சியைக் குறித்துக் கல்கட்டா ரிவியூ என்னும்பத்திரிகையின் 8-வது [illegible] தில் மிகச் சிறந்த விஷயம் ஒன்றெழுதியிருக்கிறார். சமய ஆராய்ச்சி விஷயத்தில் இந்த காலவரம்புக்குள் [illegible] அபிவிர்த்தி திறமும் மிகவும் வியக்கத்தக்கதாம். கி[illegible] யத்தைத் தவிர நற்சமயம் வேறொன்றிலது எனும் [illegible] சகுரு (ஆர்ச்பிஷப்) வின் அபிப்பிராயம் கடந்து க[illegible] நாட்டில் உள்ள ஒருபாலார்க்கு ஒருவிதமும் வேறொ[illegible] டார்க்கு வேறுவிதமுமாக நடுவுநிலைகோணி நட[illegible] மையல்லவென்னும் விஷயத்தெளிவும், எச்சம[illegible] முத்தி கைகூடற் பாலதேயாம் எனும் உண்மையு[illegible] தனிபானது என்ன விசேஷம். எனவே, ஈண்டு[illegible] ருல் எந்த உண்மையும் ஆங்கிலேய பாஷைக்கும் [illegible] ர்க்குமே உரியவாகா வென்பது அங்கிலேய [illegible] ஞாபகத்தில் வைக்கவேண்டியது.

***

அதே பத்திரிகையில், சார்லஸ் ஜான்ஸ்டன் [illegible] வேதாந்தத்தைப்பற்றியும், ஐரோப்பிய நாடு[illegible] நாட்டிலும் நிகழ்ந்த அவதார முறைமையைப் [illegible] சிறந்த விஷயம் எழுதப்பட்டிருக்கிறது. [illegible] மைகள் ஆரியர்கட்குமட்டும் உரியபொருள[illegible] அவரதபிப்பிராயம் விவிலியநூலில் (பைபிள்) [illegible] சமயக்கொள்கைகள் பல இருக்கின்றன வெ[illegible] பல வசனங்கள் எடுத்தெழுதிக் கடைசியில், [illegible] கடளெல்லாம் பயனற்றன வென்பது கிறிஸ்[illegible] யம் என்று கூறுகிறார். புத்தனுடைய அபி[illegible] மூக்ஷம் ஒன்றையே கருதியிருந்ததுபோலக் [illegible] ப்பிராயம் அன்பு (பக்தி), நல்லொழு[illegible] கருதியிருக்கிறது. மக்களின் மூலகாரண[illegible] வழுவிவிட்டதனால், இவ்விருவரு சமய[illegible]

[illegible] குறைந்தது. அதனையறிந்தே இவர்களுக்குப் பின்னிட்டார். இவ்வஸ்திப்பிராத்தை ஏடுப்பாராயினர்.

***

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள் கெல்லூரி (College) இல் தன் கடமையைக் கழித்தகாலம்போக எஞ்சியவற்றில் ஒவ்வொரு நிமிஷத்தையும் பனையோலைச் சுவடிக் குவியலில் முன் இறந்துபோன பழந்தமிழ் நூல்களை ஆராய்ந்து கொண்டிருத்தலிலேயே கழித்துவருகிறார்கள். அத்தகைய பனையோலைப் பழஞ் சுவடிகளிற்றானும் வரிசைக் குறைந்தும், வார்த்தைகள் பிறழ்ந்தும், செல்துளைத்த புள்ளியன்றி மெய்ப்புள்ளி யில்லாச் சொற்களும், இவைகளினூம் ஏடெழுதுவோராலும் நிகழ்ந்த சொற்குற்றம் பொருட்குற்றங்களும் தின்னசத்தி லெழுகும் பாணவாய்ப்பட்ட சுவடிகளைத் திருத்துவதிலும் அவற்றின் குற்றங்களைக் கண்டுபிடித்துச் செம்மை செய்வதிலும் ஐயரவர்கள் படுங்கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. இத் [illegible] அருஞ்செய்கைகளை முடிப்பித்தற் குரிய சிறந்த கருவி[illegible] திருக்கின்றனவா? அந்தோ! அவையும் இல்லை. [illegible] காவிரிக் கரையில் உள்ள ஒரு சிறிய வீட்டின்மெத்தைமேல் தரையிலுட்கார்ந்துகொண்டு, சுடுகாற்றுத் தன்மேல்வெரிந்து வீச சிறியமேசை யொன்றின்மேல் கடிதங்களை வைத்துக்கொண் டெழுதவார்கள். அவர்கள் திவ்வியதேகத்தின்மேல் எரிந்துவந்து வீசும் காற்றின் வன்மையைக் [illegible] குளிர்ந்த பந்தல் அவர்கள் வீட்டு முகப்பிலில்லை. [illegible] கொடிகளில்லை; க்ரோடன்ஸ் இல்லை, வெட்டிவேர்த் தட்டிகளில்லை, குளிர்காற்று வீசும் பங்கா இல்லை. இவ்வாறாகவும், இத்தகைய துன்பங்களின் நடுவிலிருந்துகொண்டே பண்டிதரவர்கள் தமிழ்ச் சுவையறிந்து அச்சுவையை எல்லோர்க்கும் [illegible] வேண்டுமென்னும் பொது நன்மையைநாடி அரிய பெரிய நூல்களை யாராய்ந்து அச்சிட்டு வெளியிட்டு வருகிறார்கள். இவர்கள் ஐரோப்பியராய்ப்பிறந்திருந்தால் அந்நாடுகளிலுள்ளோர் இவருக்குச் செய்யும் மரியாதையும், நன்குமதிப்பும் இவ்வளவென் றெடுத்துரைக்க முடியாது; கவர்ன்மெண்டாரும் எத்தனையோ உயர்ந்த பட்டங்களும், உத்தியோகங்களும் கொடுத்துவிடுவார்கள். [illegible] கவர்ன்மெண்டார் தமது கல்லூரியில் பண்டிதர் [illegible] நிலையையுயர்த்தி, இத்தகைய அரியவேலைக[illegible] அவர்களைச் சிறிது இளைப்பாறச் செய்து பிரஜைகளுக்கும் மாணவகர்களுக்கும் அவர்கள் நீடிய ஆயுள்பெற்று [illegible] விளைக்குமாறு உதவிசெய்வார்களென்று நம்புகிறோம்.

***

[illegible] பிரிட்டிஷ் ஆளுகையில் இரண்டு விசேஷ காலங்கள் [illegible] நன்கு மதிக்கப்படுகின்றன. இவ்வருஷம் ஜூன்மீ 20[illegible] கிழ்ச்சி விளைக்கும் விசேஷநாள் ஒன்று பிரிட்டிஷ் [illegible] கையின் பெருமையைச் சுடர்விடச்செய்து நமது வா[illegible] கணக்கிடும் புதிய சகாப்தம் ஒன்றையும் பிறப்பித்து [illegible] ண்டாடப்படும். அந்நாளின் நல்வருகையைக் குறித்[illegible] நாடொறும்கடவுளை வேண்டிக்கொள்ளுகிறோம். அரசிய[illegible] ர்கள்பால் நாம் உண்மையன்புடையேம் என்பதற்கே[illegible] குறியாகவும், நாமெடுத்தகாரியம் இனிது நடைபெறுமாறு இப்பத்திரிகையை அந்நன்னாளிலேயே ஆரம்பிக்கின்றோம்.

***

திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையின் ஏழாவ[illegible] வருஷ பூர்த்தி மகோற்சவமும், மஹாராணியின் வைரஜூபிலி மஹோற்சவமும் மேற்படி சபையாரால் நேற்றும், இன்[illegible] கொண்டாடப்பட்டது. திருமுறைப்படனம், ஸ்ரீபெரும[illegible] அபிஷேகம், தீபாராதனை சபையின் பாடசாலை பிள்ளைகளுக்கும் சிறுமியர்களுக்கும் பரிசளித்தல், அன்னமளித்தல், வருஷ அறிக்கை வாசித்தல் முதலிய வைபவங்கள் நடத்தப்பட்டது. பின்பத்திரிகையில் அதிகம் பேசுவோம்.

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஆம் மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897ஆம் ஜுலைமீ 21உ புதன்கிழமை. { இலக்கம்-உ


## கைவல்யோபநிஷத திராவிட இரத்னப் பிரகாசிகை.

கைவல்லியம் என்னும் மொழி முத்தி எனப் பொருள்படும். படவே, கைவல்லி யோபநிஷதமானது—தான் விதித்தவாறு பிரமா விஷ்ணு ருத்திரர் என்னும் காரியமூர்த்திகளுக்குக் காரணராகிய துரிய உமாசமேதராகிய சிவபிரானை அன்பினோடு இதய கமலத்தின்கண்ணே உபாசிக்கின்ற (வைதிகபாசுபத) யோகிகளுடைய பாச இருளையோட்டிச் சிவத்துவத்தை விளக்குவது உறுதியேயாமென்க. இதுபற்றியே சிவதத்துவ விவேகம்—

மலைமக டுணைவன் முக்கண னீல
மணிமிடற் றவனென வானோர்
திலகனே யுன்னைத் தகரமாங் குகையுட்
டியானஞ் செய்திடுமுறை செப்பி
யலரவன் முகுந்த னீசனோ டெவையு
மையரின் விபூதியென் றுரைக்கு
மலவிரு டமித்துச் சிவச்சுடர் விளக்க
வுந்தகை வல்லிய மறையே.—என்று கூறிற்று.

யசுர்வேதத்தைச் சார்ந்த கைவல்லியம், சுவேதாசுவதரம், காலாக்கினிருத்திரம், அதர்வணவேதத்தைச் சார்ந்த அதர்வசிரசு, அதர்வசிகை என்னும் ஐந்து உபநிஷதங்களையும் பஞ்சருத்திரமென்று பெரியோர் கூறுவர். ஆதலால், இந்தக் கைவல்லியோபநிஷதம் ருத்திரோபநிஷதமெனப் பெயர்படைக்கும். (வைதிகபாசுபத) உபநிஷதங்களிலே புகழப்பட்ட பல திருநாமங்கொண்டு சிவபெருமான் கைவல்லியோபநிஷதத்திலே போற்றப்படுதலால், இது சதருத்திரீயமென மற்றோர் பெயருமுடையதாயிற்று என்றுங் கூறுப.

இந்த உபநிஷத உபதேசங் கேட்டற்குரியார் வைதிக பாசுபதவிரதம் எனப்படும் மந்திர சம்ஸ்கார தீக்ஷையை அங்கமாக வுடையார் என்பது இக்கைவல்லியோபநிஷதத்தினாலே அறியப்படுதலால், இவ்வுபநிஷதம் வைதிகபாசுபதோபநிஷதம் எனவும் படும்.

இந்தக் கைவல்லியோபநிஷதத்திலடங்கிய உண்மைகள்:—

I. (க—ரு) ஆசுவலாயனமுனிவர் பிரமாவை அடுத்துத் தமக்கு அதிரகசியமாயும் மேலானதாயுமுள்ள பிரமவித்தையை உபதேசிக்குமாறு வேண்டினமை.

II. (சு—ரு) பிரமா ஆசுவலாயனர்க்கு அந்தப் பிரமவித்தை அறிதற்கு அருகராகிய துறவிகள் இயல்பைக்கூறினமை.

III. (சு) துறவிகள் உள்ளக்குகையின்கண்ணேயுள்ள சிவபிரானை உபாசித்தடையு மியல்பைக் கூறினமை.

IV. (எ—அ) சிவோபாசனை செய்யுந் துறவிகள் யாவையும் சிவார்ப்பணஞ் செய்து முடித்துப் பின் விசுத்ததேகராய் (மகா சிவலோகமடைந்து) பராமிர்த சிவரூபராய் முத்தியடைதலைக் கூறினமை.

V. (கூ—ககூ) மகாசிவலோகத்தை அடைதற்கு உபாயங் கூறுமாறு புகுந்து உபாசகர் முதற்கண்ணே எங்கிருந்து எவ்வாறு எவ்வங்கமுடையராய், பிண்டமாகிய சரீரத்து இதய கமலத்திலே தகரோபாசனை செய்யவேண்டும் என்பதனையும், உபாசனை செய்யப்பெறும் சிவபெருமானுடைய இலக்கணங்களையும், அவரைத் தியானித்தலால் அடையும் பேற்றையும் பிரமா ஆசுவலாயனர்க்கு உபதேசித்தமை.

VI. (கசு—ககூ) காரியமூர்த்திகளாகிய பிரம விஷ்ணு ருத்திராதியோரை எடுத்துக் கூறுதல் வாயிலாகப் பிண்டமாகிய சரீரத்து இதயகமலத்தின்கண்ணே தியானிக்கப்பட்டவர் காரணமூர்த்தியாகிய துரிய உமாசகாய சதாசிவனாம் என்னும் உண்மையுணர்தல் வேண்டுமென அறிவுறுத்தினமை.

VII. (உ0—உக) உமாசமேதராகிய சிவபிரானே பசுபாசங்களாகிய சேதனசேதனப் பிரபஞ்சங்களை யெல்லாம் அகத்தும் புறத்துமாகித் தாங்கி நிற்கு முண்மையை அறிந்து, அதனாற் பாச நீக்குதற்குரிய மற்றோர் உபாயம் உபதேசித்தமை.

VIII. (உஉ—உரு) இவ்வாறு அண்டத்தினும் பிண்டத்தினும் உமாசமேதராகிய சிவபெருமான் நின்ற முறைமையைச் சார, பிரணவ (பஞ்சாக்ஷர)த்தில் வைத்து அவ்வுண்மை உணர்த்தி, அதுவாயிலாகப் பாசத்தைச் சேதிக்கும் மற்றோர் உபாயம் கூறினமை.

IX. (உச—ருசு) மாண்டூக்கிய நிருசிம்மோத்தரதாபநி உபநிஷதமுறையானே அம்பிகா சமேதராகிய சிவபெருமானோடு ஆன்மா ஐக்கியமா முறையும், அதனால் அடையும் பாசநீக்க பலமும் கூறினமை.

X. (ருஎ—சுக) பிரமா ஆசுவலாயனர்க்கு விபூதியோகம் உபதேசித்தமை.

இக்கைவல்லியோபநிஷதத்தை வைதிக பாசுபத தீக்ஷா நிஷ்டான முடையோன் செபித்துத் தூயனாய், அதனாற் சிவ ஞானமுடையனாய்க் கைவல்லிய பதவியை அடைகின்றான் என்பது இறுதியாகப் பலம் கூறினமை.

---

I.

(ஆசுவலாயனமுனிவர் பிரம்வித்தை உபதேசிக்குமாறு பிரமாவை வேண்டினமை)

அதாச்வ லாயநோ பகவந்தம்
பரமேஷ்டி நமுபசமேத் யோவாச | (க)
அதீகிபகவந் ப்ரம்மவித்யாம் வரிஷ்டாம்
சதாசத்பிச் சேவ்யமாநாம் நிகூடாம் | (உ)
யயாசிராத் சர்வபாபம் வ்யபோக்ய
பராத்பரம் புருஷம் யாதிவித்வாந் | (௩)

(இதன்பொருள்) (க. உ. ௩.) பின்னர் ஆசுவலாயனமுனிவர் பகவானாகிய பிரமாவை அடைந்து எந்தப் பிரமவித்தைவாயிலாக அறிஞனவான் விரைவிலே தன் பாபமெலா மொழிந்து நாராயணர்க்கு மேலோராயுள்ள சிவபிரானை அடைகின்றானோ, அப்படிப்பட்ட இரகசியமாயதும், சத்துக்களாலே எக்காலமும் ஆதரிக்கற்பாலதும், மேலானதுமாகிய அந்தப்பிரமவித்தையைப் பகவானே அருளுகஎன்றார்.

(திராவிட இரத்னப் பிரகாசிகை.)

1. பின்னர்—எந்த உத்தமனிடத்திலே குருபக்தி சிவபக்தி உறுதியாயுளவோ அவனுக்கே வேதார்த்தம் பிரகாசிக்கும் என்பது பொருள்படச் சுவேதாசுவதரோபநிஷதத்து ஆறும் அத்தியாயத்து இருபத்துமூன்றும் மந்திரம்

யச்யதேவே பராபக்திர் யதாதேவே ததகுரௌ |
தஸ்யைதே கதிதாக்யர்த்தாඃ ப்ரகாசந்தே மகாத்மநඃ ||

என்று உரைத்தவாறு, யசுர்வேதிய வைதிக சைவ கைவல்லியோபநிடதப் பொருளைக் கேட்டற்கு ஆசைமீதூர்ந்து தமது ஆசாரியராகிய பிரமாவை வந்தன பூர்வமாக அடைந்த ஆசுவலாயனமுனிவர், முன்னரே அந்தக் குருபக்தி சிவபக்திகளிற் சிறந்த தீவிரபக்குவராய் விளங்கினராதலில், அந்தப் பக்குவதசையை அடைந்த "பின்னர்" அந்தச் சிவஞானத்தைக் கேட்டற்கு அருகராயினர் என்பதைக் குறிப்பித்தற்கே ("பின்னர்" எனப் பொருள்கொள்ளும்) "அத" என்னும் ஆரிய மங்கலமொழி இம்மந்திரங்களின் முதற்கண்ணே தலைமையாய் நின்றதாமென்க.

2. பகவான்—ஐசுவரியம், வீரியம், புகழ் (யசஸ்), திரு (ஸ்ரீ) ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களையுடைய சிவபெருமானுக்கே "பகவான்" என்னும் நாமம் செல்லுமேனும், வைதிகபாசுபத தீக்ஷ வாயிலாக வாய்த்த சிவஞானக்கினியனாலே ஆன்மாவைப் பற்றிய பாசத்தைப் போக்கிச் சிவத்துவம் விளங்கப்பெற்ற "மெய்யுணர்வோர்க்கும்" பகவான் என்னும் பெயர் செல்லுமென்று சுருதிசூக்திமாலை கூறுகின்றமையாலும், ஸ்காந்த புராணத்தைச் சார்ந்த காளிகா கண்டம்

பசுபாச விமோக்ஷாய சீர்ணந்துமுநிபிඃ புரா |
விஷ்ணுநா ப்ரம்மணாதேவைர் மார்க்கண்டேய ததீசிநா ||

பசுவாகிய ஆன்மாவினின்று பாசத்தை நீக்கும்பொருட்டு வைதிகபாசுபத தீக்ஷயானது விஷ்ணு பிரமா மார்க்கண்டேயர் ததீசி முதலாயினோரால் அநுஷ்டிக்கப் பட்டதென்று கூறுதலாலும், உமாசமேத சிவத்தோடு வேறறக்கலந்து சிவத்துவம் எனப்படும் அமிர்தத்துவத்தை அடைந்தவர் பிரமாவாதலினாலும், அந்தப் பிரமா "பகவான்" என்று கூறப்பட்டாரென்க. சிவபிரானுக்குரிய சர்வஞ்ஞதாதி குணங்கள் விளங்கப்பெற்றுச் "சிவத்துவம்" எய்தினவர் பிரமா என்று கூறுதலும் இழுக்காதென்க.

3. புருஷர்—சுவேதாசுவதரோபநிஷதம்

பதிம்பதீநாம் பரமம் பரஸ்தாத் |

பதிகளுக்கெல்லாம் பதியாயும், "பரம்" எனப்படும் நாராயணருக்கும் பரராயும் (மேலானவராயும்) உள்ளார் என்றும் தைத்திரீயோபநிஷதம்

புருஷோ வைருத்ரः |

"புருஷராவார் ருத்திரரே" என்றும் கூறுமாற்ருல், ஈண்டுக் கைவல்லியோபநிஷதம் கூறிய "பராத்பரம் புருஷம்" என்றது பசுபதியாகிய துரிய சிவருத்திர மூர்த்தியின் மேலாயிற்றென்க.

4. சிவத்தை அடைதல்— சிவாகமம்.

சிவார்க்க சக்திதித்யா சமர்த்தி க்ருதசித்திருசா |
சிவம் சக்தியாதிபிஸ்ஸார்த்தம் பச்யத்யாத்மா கதாவ்ருதிः||

சிவ சூரியனுடைய அருட்சத்தியொளியினல் அறிவுறுத்தி விளக்கப்பட்ட ஆன்மாவானவன் ஞானக்கண்கொண்டு சிவசத்தி (ஒளி) யோடு கூடச் சிவத்தைக் கண்டு தன்பாச (இருள்) நீங்கப்பெற்றவனுகின்ருன் என்று கூறிற்று. இந்தப் பொருள்படவே அதர்வவேதிய பிரசிநோபநிஷதம்

யः புநரேதந் த்ரிமாத்ரேணைவோ மித்யேதே நைவாக்ஷரேண பரம்புருஷ மபித்யாயீத ஸ் தேசசி சூர்யே சம்பந்நோ யதா பாதோதரஸ்த்வசா விநிர்முச்யத ஏவம் ஹவை ஸ பாப்மநா விநிர்முக்தः||

எவன் மூன்று மாத்திரையையுடைய பிரணவ வாயிலாகப் பரமபுருஷராகிய சிவபிரானுரைத் தியானஞ்செய்கின்ருனே அவன் (ஆன்மா) ஒளியோடுகூடிய (பராசத்தியோடு கூடிய) சூரியனை (சிவபிரானை) அடைந்தவனுய் (பார்த்தவனுய்) சர்ப்பமானது தன் சட்டையினின்று விடுபடுகின்றவாறுபோல, பாபத்தினின்று நீங்கினேனுவன் என்று கூறிற்று.

சிவபிரானுகிய சூரியன் அருள் ஒளிக்குணங்களால் எவ்வாறு சம்பன்னராயினரோ, அவ்வாறே, (எல்லாக் குணங்களும் ஆன்மாவுக்கு உளவாம் என்ற கருத்தினல்

சர்வேதர்மா ஆத்மநஸ்ஸந்தி |

என்று சர்வஞானேத்தரங் கூறியவாறு), சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய ஆன்மாவானவன் சிவபிரானுககுரிய சர்வஞ்ஞதாதி குணங்களை அடைந்தவனுகின்ருன் என்பதை உணர்த்தும் பொருட்டே, பிரசிநோபநிஷதம் "ஒளியையுடைய சூரியனை அடைந்தவனுகின்ருன்" என்று கூறியதுமாமென்க.

விஷ்ணோः பரமம் பதம் |
நாராயண பரம் ப்ரமம் |

விஷ்ணுவின் மேலாம் சிவபதம் எனவும், நாராயணரின் மேலாகிய பிரமம் (சிவம்) எனவும் பொருள்படுத்தப்படுநெறியானே,

பராத்பரம் புருஷம் |

என்றதும் பரராகிய நாராயணரின் மேலோராய புருஷர் (சிவனுர்) என்றும் பொருள்படுத்தப்பட்டது.

5. பிரமவித்தை—நிராலம்பம் சர்வசாரமுதலிய மாயாவாதோபநிஷதங்களிலே பிரதிபாதிக்கப்படும் நிர்க்குணப் பிரமவித்தையினும் மேலாய கைவல்லியம், சாந்தோக்கியம், தைத்திரீயம், பிருகதாரணியம், சுவேதாசுவதரமுதலிய வைதிக பாசுபதோபநிஷதங்களிலே புகழப்படும் அதிரகசியமாயதும் மேலானதுமாகிய பாசுபதயோக பிரமவித்தையே லிங்கபுராணம், சைவபுராணம், கூர்மபுராணமுதலியவைகளிலே பிரதிபாதிக்கப்பட்ட சுவேதர் முதலிய இருபத்தெட்டு ஆசாரியர்களாலும், இவர்கள் சீஷர்கள் நூற்றுப்பன்னிருவராலும், இவர்கள் சீஷர்கள் எண்ணில்லோராலும் அநுஷ்டிக்கப்பட்டதாமென்க. இதுபற்றியே சுவேதாசுவதரோபநிஷதம் இந்த அத்தியாசிரம (வைதிகபாசுபத) பிரமவித்தையையுற்றுப் பிரதிபாதிக்குமிடத்து

வேதாந்தே பரமம் குஹ்யம் புராகல்ப்பே ப்ரசோதிதம் |

முந்திய கற்பத்திலே சொல்லப்பட்ட வேதாந்தத்தின் பரமதாம் பரமரகசியம் என்றும் கூறினமையால் மற்றைத் தாழ்ந்தபடிக் கண்ணதாம் நிர்க்குணப் பிரமவித்தை சர்வபாசங்களையும் போக்கும் வன்மையுடைய பரமரகசியமாகிய வித்தையன்ருமென்க. மேலும் சகுணம் (பௌதிகம்), நிர்க்குணம் (சாங்கியம்), அத்தியாசிரம பிராம்மிபாவனை என்னும் மூன்றனுள்ளே மேலானதாய்த் திவ்ய கைவல்லிய பதத்தைக் கொடுப்பது சகுணவிஷயிணியாகிய அத்தியாசிரம பிராம்மிபாவனை என்று கூர்மபுராணம் போதிக்கின்றதென இரத்நத்திரய பரீக்ஷை வாயிலாக ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதயோகியார்

ஸ்ரீமத் கூர்மேண யாத்யாச்ரம ரதவிஷயா பாவநோக்தா த்ருதீயா திவ்யஸ்தாந ப்ரதாத்ரீ ஸகுண விஷயிணீ சங்சராலம்பநாஸா | யேத்வங்யே பாவநே தே சரசி சநயநே நாதிசக்த்யா சயுக்தே ப்ராபிண்யௌ தேது தஸ்யாः க்ரமிக பலியுதே பௌதிகம் சாங்கியமாப்தே ||

என்று கூறியிருக்கின்ருராதலில், அப்பாவனைகள் மூன்றனுள்ளே இறுதிக்கண்ணின்ற முடிவாகிய உத்தமோத்தம பாவனு ஞானத்தையே (சுவேதாசுவதரோபநிஷதாதிகளுக்கு வேறுபடாது உரைக்கும்) கைவல்லியோபநிஷதமானது பெரியோராற் சேவிக்கப்படும் சிரேஷ்டமாகிய இரகசிய "பிரமவித்தை" என்று கூறியதாமென்க.

---

II.

(பிரமா பிரமவித்தைக்கு அருகராவார் இவரெனக் கூறியது)

தஸ்மை ஸகோவாச பிதாமகச்ச
ச்ரத்தபக்தி த்யாநயோ காதவேகி | (சு)
நகர்மணு நப்ரஜ யாதநேந |
த்யாகேனைகே அம்ருதத்வ மாநசு: | (ரு)

(இதன்பொருள்) (சு) (இவ்வாறு பிரார்த்தித்தசிஷராகிய ஆசுவலாயனமுனிவர் என்னும்) அவர்க்குஅந்தப்பிரமாவானவர் (பின்வருமாறு) அருளுவா நயினுர் சிரத்தா பக்தி தியானயோகம் காரணமாகவே (அந்தப் பிரமவித்தை) வாய்ப்பதாகும் என்று அறிகுதிர்.

(ரு) சிரௌதஸ்மார்த்த) கிரியையினுலாவது, புதல்வனை யுடைமையாலாவது, பொருளுடைமையினு.

லாவது அந்தப் பிரமவித்தை கிட்டாது. பின் (இம் மூன்றையும்) பரித்தியாகஞ் செய்வதனாலே சிவத்துவம் பெற்றார் பெரியோர்.

(திராவிட இரத்னப் பிரகாசிகை)

6. சிரத்தாபக்தி—சிரத்தை என்பதும் பக்தி என்பதும் அன்பெனப் பொதுவுறப் பொருள்படுமேனும், சிரத்தையின் முதிர்வே பக்தி எனவும், பக்திக்கு முன் அங்குரிப்பது (நிகழ்வதுவே) சிரத்தை யாமெனவும் ஈண்டுக் கொள்ளற்பாற்றும். சுவேதாசுவதரோபநிஷதம்

நதஸ்யகார்யம் கரணஞ்சவித்யதே |
நதத்சமச்சாப் யதிகச் சதிருச்யதே ||

சிவபிரானுக்கு மேலாக மற்றோர் காரியகாரணம் இலையாம் என்றும், அவருக்கு மேலானவரும் ஒப்பானவரும் இல்லையென்று கூற, சிவபிரானிடத்து உறுதியாகிய அன்பே ஈண்டுப்பக்தி எனப் பட்டதாமென்க.

7. தியானயோகம்—தியானமும் யோகமும் ஒன்றேனும், தியானத்தின் உறைப்பே யோகமாம் எனவும், யோகத்துக்கு முன் அங்குரித்து நிகழ்வதுவே தியானமாம் எனவும் ஈண்டுக் கொள்ளற்பாற்றும். சுவேதாசுவதரோபநிஷதம்

தத்காரணம் சாங்கிய யோகாதி கம்யம்
ஞாத்வா தேவம் முச்யதே சர்வபாசைঃ ||

(முன்னர் 5-ம் இலக்கணத்தின் கீழே உதகரிக்கப்பட்ட உபப்பிரும்மணமாகிய கூர்மபுராணப் பிரமாணங்கொண்டு இரத்நத்திரயபரீக்ஷை கூறியவாறு "சாங்கிய யோகம்" எனப்படும் "நிர்க்குணபாவனை" வாயிலாக அடையப்பெறும் அத்தியாசிரம பாவனைக்கண் எய்தும் "அந்தக்காரணராகிய சிவனை அறிந்து ஒருவன் சர்வபாசங்களினின்றும் விடுபடுகின்றான்." என்று கூறுதலால், இந்த அத்தியாசிரம பாசுபத யோக சிவபாவனையே ஈண்டு "யோகம்" என்னும் பதத்திற்குப் பொருளாகக் கொள்ளற்பாற்றும். பிரம விஷ்ணு ருத்திரேந்திரர்க்கெல்லாங் காரணராய், அதர்வசிகையினாலே முடித்துப் பேசப்பட்ட பரமாகாச மத்திய சிவபிரானையே ஈண்டுச் சுவேதாசுவதரோபநிஷதமும் ஈண்டுக் "காரணம்" என்னும் பதத்தினால் விளக்கியதா மென்க.

8. அவாவறுத்தல்—

(a) வேதோதிம் ஸ்வகம்கர்ம நித்யங்குர்யாத தந்திரிதঃ |
தத்திருர்வந் யதாசக்திঃ ப்ராப்நோதி பரமாங்கதிம் ||

(b) புத்ரேண லோகாந் ஜயதி |

(c) அலப்தஞ்சைவ லிப்சேதலப்தம் ரக்ஷேத் ப்ரயத்நதঃ |
ரக்ஷித மவர்த்தயேச் சைவவ்ருத்தம் பாத்ரேசு நிக்ஷிபேத் ||

(a) எவனும் வருணாசிரமங்களுக்குத் தக்கதாகச் சுருதியினும் தருமசாஸ்திரத்தினும் சொல்லப்பட்டிருக்கின்ற நித்தியகருமங்களை நாடோறும் சோம்பலில்லாமற் செய்கிறவன் மேலான சுவர்க்க லோகாதிபதங்களை அடைகின்றான் என்றும்,

(b) ஒருவனுக்குப் புத்திரன் பிறந்தால் அவன் சுவர்க்காதி புண்ணியலோகங்களை அடைகின்றான் என்றும்,

(c) அடையப்படாத பொருளைச் சம்பாதித்தும், சம்பாதித்த பொருளை முயற்சியோடு காத்தும், காப்பாற்றிய பொருளை விருத்திசெய்தும், விருத்தி செய்த பொருளைச (சுவர்க்கலோகாதி புண்ணியலோகம் வேண்டி) சற்பாத்திரத்திற் செலவு செய்க என்றும் ஸ்மிருதி கூறிய பிரகாரம் அடையப்பெறும் சுவர்க்கலோகாதி இன்பமோ அநித்திய மாதலாலும், மீளச் ஜனனத்தைக் கொடுக்கும் இயல்பின தாதலாலும், வாயு சங்கிதை

அநேகஜந்மசித்தாநாம் ச்ரௌதஸ்மார்த்தாநுவர்த்திநாம |
விரக்தாநாம் ப்ரபுத்தாநாம் ப்ரசீததி மஹேச்வரঃ ||

அநேக ஜன்மங்களிலே முற்றிய வைதிக ஸ்மார்த்த கருமங்களையுடையராய், அதனாற் பற்றற்றவராய், அறிவுடையோராய் எய்தினோர்க்கே சிவபிரான் அருள் பாலிக்கின்றார் என்று கூறுகின்றமையாலும், ஸ்ரீ அப்பயதீக்ஷிதர்

"உலகர்சே ருறுதிப் பயனெவற் றினுக்கு
முறைவிட மாய்த்தியா முழுதும்
விலகுறத் தமிக்குங் கணிச்சியா முன்றாள்
விரைமலர்க் கியற்றுமெய்ப் பத்தி
யலகிலாப் பிறவி தொறும்புரி தவத்தா
லல்லதெவ் வாற்றினு மரிதே
நலமதொன் றடைதற் குறுமிடை யூறு
நாதனே பலவுள வன்றே."-என்பது பொருள்பட,

தவச்ரீ பாதாப்ஜே கதமபிச பக்திர்ந சுலபா |
நிகந்த்ரீ துঃகாநாம் நிகில புருஷார்த்தைக வசதி: |
விநாபுண்யைர் ஜந்மாந்தர சதசகச்ரே சுவிகிதை: |
நர:ச்ரேயோ மாத்ரம் கலுபகுளவிசநே நலபதே ||

என்று கூறினாராதலினாலும், பாவனையைச் சகுணபாவனை நிர்க்குணபாவனை, பிராம்மிபாவனை என மூன்றாக வகுத்து, ஏகான்மவாதிகளுடைய நிர்க்குணபாவனை வாயிலாக அடையப்படும் மேலாகிய சகுணவிஷயிணியாம் அத்தியாசிரம பாவனையை விதந்தெடுத்துக் கூறவிடத்துக் கூர்மபுராணம் இந்த அந்தியாசிரம கைவல்லியோபநிடத மந்திரப்பொருளுக்கிசைந்தே

த்யக்த்வா புத்ராதிசுஸ்நேகம் நிர்த்வந்தோ நிஷ்பரிக்ருக: |
சந்யஸ்ய சர்வகர்மாணி பரம் வைராக்ய மாச்ரித: ||

புத்திராதிகளிலேயுள்ள சிநேகத்தை முழுமையும் விடுத்து, அங்ஙனஞ் சர்வகருமங்களையும் ஒழித்து, பரமவைராக்கியம் பூண்டவனுக்கே அந்தச் சர்வவேதசாரமாகிய பிராம்மி பாவனை உபதேசிக்கற்பாற்று என்று கூறுகின்றமையாலும், மீளப் பிறவிகொடாத மகா கைலாச பிரமலோகம் எனப்படும் சிவலோகப் பிராப்தியை நேரே கொடுக்க வன்மையில்லாது அநித்திய சுவர்க்காதி லோக போகங்களைக் கொடுக்கும் வைதிக ஸ்மார்த்தக் கிரியை முதலியவற்றைப் பரித்தியாகஞ் செய்தலாகிய அவாவறுத்தல் பிரமவித்தைக்குச் சாதனமாகச் செய்யவேண்டுமெனப் பிரமாவானவர் ஆசுவலாயனர்க்குக் கூறினார்.

(இன்னும் வரும்).

---

செந்திநாதையர்.

## திருமூலநாயனுர் அருளிச் செய்த திருமந்திரம்.

### இரந்தார்க்கீதல்.

இரந்தார்க்கீதல், தன்னைவந்திரந்தார்க்கு அவர் வேண்டிய தொன்றையளித்தல்.

தாமறிவாரண்ண லருள்பணிவாரவர்
தாமறிவாரந் தாங்கிகின்றூரவர்
தாமறிவார்சில தத்துவராவர்க
டாமறிவார்க்குத் தமர்பரனுமே.

(பொழிப்புரை) உயிர்கண்மாட்டுத் தாமறிந்து வைத்தற் பாலதாம் உரிமைக்குப் பற்றுக்கோடாய் நிற்பாரே தம்மியல் பறிந்தாரெனவும் இறைவன் கழல்பணியும் பான்மையுடையா ரெனவும் அவரே சிறுபான்மை மெய்யுணர்ந்தாரெனவும் அவர்க்கே இறைவன் செழுங்கிளையெனவும் உணர்ந்துகொள் ளற்பாற்று ;—எ-று.

(குறிப்புரை) அண்ணல், பெருமையிற் சிறந்தோன். வாரம், கிழமை, உரிமை, அன்பு என்பன ஒருபொருட் கிளவிக ளாம். உயிர்கண்மாட்டு வைத்தற்பாலதாம் உரிமை, அவை துன்புறுங்கால் அதை நீக்குதற்காம் உதவிபுரிதலும், அவை இன்புறுங்கால் அதுகண்டு சாலக்களித்தலுமாம். தம்மியல் பறிதல், 'நாம் இயல்பில் வாலாமையுடையே' மென்றும், 'அவ்வாலாமையைக் கழுவி வீட்டு நெறியெய்தற்கே பல பிறப்பெடுத் துழல்வேமாயினேம்' என்றும் தம்மியல்பை யுண்மையா னாராய்தல். இவ்வியல் பறிவாரெனப்படுபவர் 'நம்மைப்போலவே பிறந்துழலும் உயிர்கட் குதவிபுரிதலே நங்குற்றத்தைப் போக்குதற்குரிய வழியாம்' என்று கருது மவர் என்பார் "தாமறிவாரண்ணல் தாள்பணிவாரவர், தாமறி வாரந் தாங்கிகின்றூரவர்" எனக் கூறினர். என்றூல், உயிர் கண்மாட் டன்புறுதலே தன் றன்மைகளை யறிதற்குக் காரண மாமென்றபடியாம். உயிர்கண்மாட் டன்புசெலுத்தித் தன் றன்மை மாத்திரையேயறிந்து தானே பதியென்பார் மெய்ப் பொருளை முழுவதூஉங் கண்டறிந்தாரெனப்படாமையான் 'தாமறிவார்சில தத்துவராவர்கள்' என்றூரோதினர். அவ்வா றுயினும் இழிப்பிறப்புக்க ளிலாதல்தாம் மேற்செய்தபடியால் அந்நிலையிற் பிரிந்து பதியைச் சார்பவென்றும், மேற்பிறப்புக் களிற்செய்த அறத்தாறு வீண்போமா றில்லையென்றும் தெரி விப்பார் 'தாமறிவார்க்குத் தமர்பரனுமே' என்றூர்; "தவஞ் செய்தாரென்றுந் தவலோகஞ்சார்ந்து, பவஞ்செய்து பற் றறுப்பாராகத்—தவஞ்செய்த, நற்சார்பில் வந்துதித்து ஞானத் தை நண்ணுதலைக், கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு" என்று சிவஞானபோதத்தும் எய்து முறைகூறிப் போந்தபடியறிக. 'தாமறிவாரந் தாங்கிநின்றூரவர் தாமறிவார், அண்ணல் தாள் பணிவார்' எனப் பொருட்கேற்ப மாற்றியுரைக்க. 'தாங்கி' எனுஞ்சொல்லைத் 'தாங்கி' (வழி) யெனக்கொண்டு பொரு ளுரைப்பார்க்கு அச்சொல் அப்பொருளில் 'தாங்கு' என நிற் றலன்றித் 'தீரங்கி' என நிற்காமையுணர்க. இவ்வாறன்றிப் பிறவாருரைப்பார்க்கு அது அதிகாரத்தொடு பொருந்தாமை யறிந்துகொள்க. அறிவாரம், வினைத்தொகை - ஈண்டிறந்த காலம். உயிர்கண்மாட் டன்புவைத் துதவிபுரிவார்க்கே தம் மியல்புணர்ச்சியும் வீடு பேறு மெய்த் மென்ப திதனுற்கூறி னூர். (க)

யாவர்க்குமாமிறைவற் கொருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை
யாவர்க்குமாமுண்ணும் போதொருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரைதானே

(பொ-ரை) இறைவன் மேலொருவில்ல இதழ்தூவுதலும், ஆவிற்கொருவா யவ்வளவுணவு கொடுத்தலும் தாமுண்ணு முணவில் ஒரு கைப்பிடி சோறு பிறர்க்களித்தலும் எதிலார் பால் இன்சொற் கொல்லுதலும் மிக எளியராயினூர்க்கும் செ ய்தற் கெளியவாம்; எ-று.

(கு-ரை) பதிபுண்ணியம் பசுபுண்ணிய மென்னு மிரண்ட னுள், முன்னையதற் கொன்றும் பின்னையதற்கு மூன்றும் இச் செய்யுளில் எடுத்துரைத்தார். இவ்விரண்டினுள் ஒன் றே சாலாதோ? வெனின் ;—அன்புடையார்க்கு இவ்விரண் டையும் வேறுபடுத் துணர வேண்டாமையானும், தம்மனநெ கிழ்ச்சி அத்துணை எளிதில் நிகழ்வதாகலின், தம்மை ஒன் றை விரும்பி வந்தவற்றிற் கெல்லாம் தலையளித்தல் தமக்கின் றியமையா திருத்தலானும் அது சாலுதல் யாங்ஙனமென்பது. பதிபுண்ணியத்துள், இறைவற்குச் செய்யுந் திருத்தொண்டி ன்மேற் சிறந்தது பிறிதின்மையின் 'யாவர்க்குமா மிறைவற் கொருபச் சிலை' யென்றூர். பசு புண்ணியம் முப்பத்திரண்ட னுள் ஆவிற்கு வாயுறை யளித்தலே மிகச் சிறந்தது; என்னை? இறைவற்குத் தன் பயனளித்தலானும், எல்லாத்தேவர்களும் தன் உறுப்பினுள் அடங்கக் கோடலானு மென்பது. உறை, விலங்குணவு. 'இன்னுச் சொனுன்கு மிழுக்காவியன்றதறம்' எனவும் 'இனியவுளவாக இன்னுத கூறல், கனி யொழியக் காய் கவர்ந்தற்று' எனவும் போந்தவற்றூல் இன்னுரை பக ரல் சிறந்த அறனுமென்பதறிக. மெய்யானும் மொழியா னுஞ் செயப்படும் அறன் எளிவந்தனவாயிருத்தலின் அவற் றை யீண்டுக் கூறினர்; மனத்தாற் செயப்படுவன கீழ்க் கூறு வார். மேற்செய்யுளிற் பொதுவகையாற் கூறிய அறனை ஈண் டுப் பாகுபடுத்திச் சிறப்புவகையாற் கூறினர். (உ)

அழறுநின்றூருண்ணு மூணேயறனென்னுங்
கற்றனுபோதங் கமழ்பவர் மானிட
ருற்றுநிற்றூங் கொருகூவற் குளத்தினிற்
பற்றிவந்துண்ணும் பயனறியாரே.

(பொ-ரை) இருவகைப் பற்றுமற்றுத் தவத்தின் மனந்தூ யராயுள்ளாரை உண்பித்தலே அறத்தா றென்று நீதிநூல் துணிந் துரைக்கும்; கல்வியான் அறிவுவிரிந்த ஆன்றோரும் மக்கள் தூவு (கிணறு) தடங்களிலுள்ள நீரை முகந்து வை த்து அதனுல் எதிலாரை உண்பித்துத் தாமெய்தும் பயனை யறிந்திலரே என்ப; எ-று.

(கு-ரை) அற்று நின்றார் உண்ணும் உணவாஞ் இடுவார்க்கும் ஏற்பார்க்கும் நன்னெறி கைவிரப் பெறுதல் ஒருதலையாகலான் 'ஊணேயறனென்னும்' எனப்பிரிநிலைத்தேற் றேகாரங்கொடுத் துரைத்தார்; 'உதவிவரைத் தன்றுதவி யுதவி, செயப்பட்டார் சால்பின்வரைத்து' என்றார் ஆசிரியர் பெருநாவலரும். 'சுற்றனபோதங் கமழ்பவர்' என்றமை யானே பல நூற்கொள்கையும் ஒன்றே யென்பது பெறுதும். அற்றார்க்கிடும்ணவு சிறிதாயினும் பெரும்பயன் பயத்தலின் அதை மக்கள் செயற்பாலர்; அதுவுங் கைகூடாதாயின் காவல் குளங்களிலுள்ள நீரைமுகந்து உண்பித்தலும் பெரிதன்றென்பார் 'கூவல் குளத்தினிற் பற்றி வந்துண்ணும் பயனறியாரே' என்றார். இருவகைப்பற்று, அகப்பற்று புறப்பற்று; இவற்றின் விரிவைத் தாயுமானவர் உரையிற் கூறினும் ஆண்டுக் கண்டு கொள்க. உண்ணும் என்னுந் தன்வினையை ஈரிடத்தும் பிறவினையாத் திரிக்க. 'அதங்கோட்டாசாற்கரிறபத்தெரிந்து' என்பதிற் போல. 'அற்றுநின்றா ருண்ணுமூணே யறனென்னும்' என்பதில் என்னும் எனும் பயனிலைக்கு நீதிநூல் எனுந்தோன்றா எழுவாய் வருவித்து முடிக்க. 'கமழ்பவர்' எனும் எழுவாய்க்கு என்ப எனும் தோன்றாப் பயனிலைவருவித்து முடிக்க. முதலடியால் நூற்றுணிவும், ஏனையடியால் அந்நூலைக் கற்றார் துணிவுங் கூறினார். இச்செய்யுளிற் 'றறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு'ஞ்செய்யும் அறத்தின் சிறப்புரைத்தார். (௩)

அழுக்கினையோட்டி யறிவைநிறையிர்
தழுக்கியநாளிற் றருமமுஞ் செய்யீர்
விழித்திருந்தென் செய்வீர் வெம்மை பரந்து
இழிக்கவன்றென் செய்வீரேழை நெஞ்சீரே.

(பொ-ரை) மக்காள்! நீயிர் உயிரோடிருக்கு நாட்களில் அறம்புரிந்து நும்மை இயல்பாய்ப்பற்றியுள்ள மும்மலங்களையுங்கெடுத்து நும் அறிவை நன்கு விளக்குகிர்; அவ்வாறு செய்யீரேல் எத்துணை எச்சரிக்கையுடன் இருந்தாலும் நீயிர் வேள்குறுமாறு சாக்காடுநும்மை விரைந்து பற்றுங்கால் என்செயவல்லீர்? மடம்பட்ட அறிவுடையீர் இதை ஆராய்மின்; எ-று.

(கு-ரை) காரண காரிய இயைபுற இரண்டாமடியைமுன்னும் முதலடியைப் பின்னும் வைத்துப் பொருள்கொள்க. அவ்வாறுங்கால் 'செய்யீர்' என்னும் வினைமுற்றை வினையெச்சமாகத் திரிக்க. தழுக்கிய, தழுவிக்கொண்ட, ஈண்டு வாழும். நாளைச்செய்வம் என்னுத உடன் செய்கவென்பார் 'தழுக்கிய நாளிற்றருமமுஞ் செய்யீர்' என்றார். உயிர் உடலினின்றும் இறந்துபடு ஞான்று உடலிலோடுங் குருதியை (இரத்தம்) ச்சுவறிக் கொள்ளச் சாக் காய்ச்சல் எனவொன்றும் அது தணிந்ததும் கொடிய குளிர்ச்சியும் உடற்கண் நிகழ்வதை யறிந்தார் வாய்க்கேட்டுணர்க. 'வெம்மை பரந்து இழிக்க' எனச் சாதற்கண் நிகழுங் குறிகளைச் சாக்காடாக ஈண்டுபசரித்துக் கூறினார். 'உறங்குவதுபோலுஞ் சாக்காடுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு' என்பவாகலின், இச்செய்யுளில் உள்ளபோதே யறஞ்செய்ய வேண்டுமென்றார். (௪)

தனனை யறியாது தானல்லா ரென்னுதிந்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றும் வருமுன்னந்
தன்மையு நல்ல தவஞ்செயு நீரே.

(பொ-ரை) இவன் பெருமையுடையான், அவன்றான் நல்லன், இவன் வறியன், உவன் இளைஞன் என்று ஒருவன்றனியல்புகளை ஆராயாது விறல் மிகுந்து நும்முயிரைக்கொள்ளைகொண்டுண்ணக் கூற்றுவன் (யமன்) வருமுன் யாவிர்க்கும் நன்மையும் உயிர்க்குதவியுஞ் செய்ம்மின்; எ-று.

(கு-ரை) 'தானல்லாரென்னுது' என்று கூறியதென்னை? நற்குணமுடையார் மாட்டும் அவன் போதுவான் என்பது பொருந்தாதாம் பிறவெனின்;—சமணர், புத்தர்போல நல்லொழுக்கங்களையே பழகினும் அவற்றிற்கேற்ற பயனளிக்கும் இறைவனை வணங்காமையான் அவர் நல்லொழுக்கங்களுந் தீயவாயின. ஆதலின், இன்ன நல்லொழுக்கமுடையாரையே ஈண்டுரைத்ததென்றறிக; இதுபற்றியன்றே இவ்வறத்தைச் செய்வார்க்கு இறைவன் அருள் வேண்டுமென்பார் இவ்வதிகார முதற்செய்யுளில் 'அண்ணல்தாள்பணிவார்' எனவும் 'தமர்பரனுமே' எனவும் ஆசிரியர் கிளந்தோதுவாராயிற்று. ஈண்டுத்தவம் என்றது மானுடயாகமென்றறிக; அது இரந்தார்க்கிதல், கைக்கடனாற்றல், கசிவகத்துண்மை முதலாயின. பிறவாறுரைப்பார்க்கு அதிகாரத்தொடு பொருந்தாமையறிந்துகொள்க. 'காலமுலக முயிரேயுடம்பே' எனுஞ்சூத்திரத்தில் "பால்பிரிந்திசையாவுர்திணைமேன" என்றார் தொல்காப்பியனாராதலின் அதற்கேற்பக் கூற்று என்பது அஃறிணைப்பயனிலை கொண்டது. செயும், உம் ஈற்றுவியங்கோள், இது ஆசிரியர் நச்சினார்க்கினியார் உரையானுணர்க. "முற்றியிருந்தகனியொழியத் தீவளியால், நற்காயுதிர்தலு முண்டு" "பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன், கள்ளங் கடைப்பிடித்தல் நன்று" எனப் பிறசான்றோருமுரைத்தவாறு, மேற்செய்யுளானு மிச்செய்யுளானும் யாக்கைநிலையாமை, இளமை நிலையாமையை வற்புறுத்தார். (௫)

துறந்தான் வழிமுதற் சுற்றமு மில்லை
யிறந்தான் வழிமுத லின்பமு மில்லை
மறந்தான் வழிமுதல் வந்தில னீசன்
அறந்தா னறியு மளவறி வாரே.

(பொ-ரை) உலகவாழ்க்கையினது நிலையாமை கண்டு அதனை ஒருவிய துறவிக்கு அவன் கால் (வமிசம்) வழிக்கிடந்த உரிமைச் சுற்றமின்றாமாறுபோலவும், இறக்கும் பகுதியுடைய இம்மக்களுயிர்க்கு வரும் இன்பம் ஒன்றின்றாமாறு போலவும், அறஞ்செயமறந்தார்க்கு இறைவனருள் கைகூடுதலுமில்லையாம்; ஆதலால் அறத்தின் பெருமையைத்தான் அறியுமளவான் அறிந்து அறம் புரியக்கடவிர்; எ-று.

(கு-ரை) துறவிக்கும் அவன் கிளைக்கும் இடைக்கிடந்ததோர் இயைபின்றாமாறுபோல அறந்துறந்தார்க்கும் இறைவற்கும் இடைப்பட்டதோ ரியைபின்றெனவும், சாக்காடுடைய இப்பிறவியினியல்புணர்வார்க்கு இதில் துன்பமே முழு

வதுங் கூணப்படுமாறுபோல அறஞ்செய்யானுக்கு நிரயத்துன்பமேயன்றி வேறு பிறவில்லை யென்றும் உவமைகொள்க. "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" எனத் திருவாதவூரடிகளும், "சாதலினின்னாததில்லை" என ஆசிரியர் பெருநாவலரும் அருளிச்செய்தவாறு ஈண்டும் ஆசிரியர் திருமூலனார் 'இறந்தான் வழிமுத லின்பமுமில்லை' யென்றருளிச் செய்வாராயினர். முதல் 'வழிமுதலு'க்குக் கால் (வமிசம்) எனப் பொருளுரைத்துக்கொள்க; ஏனைய வெல்லாம் செம்பொருள். இச்செய்யுளில் அறஞ்செயார்க்கு இறைவனருள் கைகூடுமாறில்லை யென்பது காட்டப்பட்டது.

தான்றவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்றெய்வ மாக மதிக்கு மனிதர்கள்
ஊன்றெய்வ மாக வுயிர்க்கின்ற பல்லுயிர்
நான்றெய்வ மென்று நமன் வருவானே.

(பொ-ரை) ஒருவன்றான் மானிடயாகத்தைச் செய்க, ஏனெனில், அவ்வாறு செய்பவன் உருவத்தைக் கடவுளுருவமாகவே கருதி உலகர் வழிபடுவது வழக்காகலான்; இங்ஙனமன்றித் தமதுடலையே தெய்வம்போல் ஓம்பி வளர்க்கின்ற பல்லுயிர்க்கும் 'நானேதெய்வ' மென்று நமன் வருவான் என்றறிக; எ-று.

(கு-ரை) 'தான்றவஞ்செய்வது' என்பதில் துவ்வீறு வியங்கோட் பொருட்டு; "மறப்பதறிவிலென் கூற்றுக்களே" எனுந் திருக்கோவையாரினும் பேராசிரியர் இவ்வாறே யுரை கூறினார். மான், உருவம். பிறவுயிர்கண் மாட்டன்பின்றித் தம்முடலையே பாதுகாப்பார்க்குக் கதுமென அழிவெய்துமாறு பின்னிரண்டடியினுங் கூறினார். அறம்புரிவார்க்கு மறுமைப் பயனேயன்றி இம்மையினும் பலராற்புகழப்பட்டுப் பொன்றுவுடம்பெய்தும் பேற்றருமை கைவரப்பெறுதலையும் இச்செய்யுளிற் கூறினார். (எ)

திளைக்கும் வினைக்கட லீர்வுறு தோணி
யிளைப்பின்றி நீக்கு மிருவழி யுண்டு
கிளைக்குந் தனக்கு மக்கேடில் புகழோன்
விளைக்குந் தவமற மேற்றுணை யாமே.

(பொ-ரை) நுகரும் இருவினைக்கடலைப் போழ்ந்து செல்லும்பட கொன்றைத் தளர்வின்றிச் செலுத்துதற்கு இரண்டு வழிகள் உள; அவை தன் கிளைஞரைக்குறித்துச் செய்யும் அறமும் தன்னைக் குறித்துச்செய்யும் தவமுமாம்; எ-று.

(கு-ரை) வட்டமாக முதலுமீறுமின்றி நுகர்ந்து வரும் இருவினைகளை நீக்குதற்குக் கருவியாவது தவம், அறம் என்றவாறும். தோணி தன்னுடலாகவும், இருவினை கடலாகவும், அதில் அதைக்கடாவுதற்கு இரண்டுவலி தண்டு தவம், அறமாகவும் பாகுபடுத்திக்கொள்க. "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங், கைம்புலத்தா றோம்பறலை" எனுமைந்தனுள், ஒக்கலைப்போற்றலுந் தன்னைப்போற்றலுமாகிய இரண்டறங் கூறினார். எதிர் நிரனிறைப்பொருள் கோளால் கிளைக்கு அறமும், தனக்குத்தவமுங் கூறிக்கொள்க. 'கேடில் புகழ்' என்றடைகொடுத்தார் "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன்றில்" என்றாராகலின். வினைக்கட்டு, இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஈர்தல், பிளத்தல். இச்செய்யுளில் இருவினையொழித்தற் குபாயங் கூறினார். (அ)

பற்றதுவாய் நின்ற பற்றினைப் பார்மிசை
யற்ற முறையா னறநெறிக் கல்லது
யுற்றுங் களரலொன்று வீந்தது வேதனை
மற்றண்ணல் வைத்த வழிக்கொள்ளு மாறே.

(பொ-ரை) ஒரு பயன் நோக்கிச் செய்யும் அன்பை அறநெறிக் குரியதென்று இறைவன் மறந்து முரையான்; அதுவன்றி நீயிர் ஒருவர்க்கீந்த வொன்று நமக் கொருபெருந் துணையாக வேண்டில் இறைவன் வைத்த கடப்பாட்டினை யுறிதலே யதற்கு வழியாம்; எ-று.

(கு-ரை) ஒரு பயன் நோக்கிச் செய்தல், உலகத்தார் தம்மைப் புகழ்தல், நன்குமதித்தல் முதலாயினவற்றை விரும்பிச் செய்தலும், புதல்வன் வேண்டும், மனைவேண்டும், பொருள் வேண்டும், மறுபிறப்பில் அரசனாதல் வேண்டும், துறக்கவின்பம் பெறல் வேண்டுமென்று கருதிச் செய்தலும் போல்வன. இவை யெல்லாம் அழியும் பெற்றியவாதலானும், இவற்றை விரும்புவார்க்குப் பிறப்பிடை யறுமையானும் இவற்றை விலக்கியபடியாம். பின்னை என்னையோ செய்யுமாறென்பார்க்கு, எவ்வறம்புரியினும் அவற்றின் பயனைத்தினை யளவுந் தான் விரும்பாது அவற்றை யெல்லாம் இறைவற்கே ஒப்பித்துவிடுதலாம். இதனு லெய்தும் பயன் அழியா இன்பத்ததாய வீடுபேறேயாம். இதுபற்றியன்றே ஊன்றின்றலும், கட்குடித்தலும், உயிர்க்கொலை புரிதலும், பரத்தையர்ப் புணர்தலும் களவாடலும் போல்வன இறைவனைச் சார்ந்தார்க்கா மென்றவாறு. இப்பெற்றியறியாதார் அவ்வாறவர் செய்தலும் இழுக்கா மெனக் கூறித் தருக்குறுவர். அவர்க்கஃதிழுக்காதென்பதன் கருத்தென்னையெனின்;—அவர் தமக்கென வொருபொருளின்றெனவும், தாமும் பிறவும் இறைவனடிமையும் உடைமையுமாக வுள்ளோ மெனவும் கருதியாண்டுத்தங் கருத் திறினும் ஆண்டவை யெல்லாம் இறைவனே யாகக்காண்டலானும், பொருட்கண் வேற்றுமைசெய்து வெறுப்புவிருப்புறுதலின்மையானும் எவையும் அவர்க்காம். இவ்வாறன்றி ஒரு பொருளை வெறுத்தலும் ஒன்றை விரும்புதலும் அவர்க்கிழுக்காம். இவ்வியல் பெல்லாங் கண்ணப்பர், சிறுத்தொண்டர், மூர்க்கர், கருவூரார் முதலிய திருத்தொண்டர் மாட்டுக்கண்டு கொள்க. கண்ணனுங் கீதையில் அருச்சுனனுக்குக் காமிய புண்ணியத்தைப் புரியாது, நிட்காமிய புண்ணியத்தை விளைக்குமா றறிவுறுத்தார். இறைவன் மறந்துங் கூறானென்ற தென்னை யெனின்;—பொச்சாப்பில்லா இறைவன் அங்ஙனம் ஒருகாலும் வேதசிவாகமங்களிற் கூறானென்பதே யதன் கருத்தாம். அற்றம், மறைவு; ஈண்டு மறதியின் மேற்று, அறிவை மறைத்தலில் அங்ஙனங் கூறப்பட்டது. கொள்ளும் என்பதற்குக் கொள்க என வியங்கோளாகப் பொருளுரைக்க; உம் வியங்கோள் விகுதி இது முன்னிலையிற்

பெரியார் மாட்டுரைக்குஞ் சொற்கண்ணது; சேக்கிழார் பெருமான் அடியார் புராணத்துள் இவ் வழக்கு மிக்குவிரவிவருதல் கண்டுகொள்க. இதற்கிலக்கணம் இவ்வதிகாரம் ஐந்தாம் செய்யுளிற் கூறினும்; ஈண்டுக் காண்க. இச்செய்யுளில் நிட்காமிய புண்ணியஞ் செய்யுமாறு விதித்தார் ஆசிரியர் திருமூலனாரென்க. (சு)

ரு. S. வேதாசலம்பிள்ளை.

அருணந்திசிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## சிவஞானசித்தியார் உரை.

(முன் தொடர்ச்சி).

பக்கமூன்றின்மூன் றேதுவுடைய
பொருளைப் பார்த்துணரத்
தக்கஞானந்தன் பொருட்டாம்பிறர்
தம்பொருட்டா மனுமானந்
தொக்கவி வற்றுப்பிறர்தெளியச்
சொல்லலாகுமச் சொல்லு
மிக்க வன்னுவயத்தினொடுவெதி
ரேகச் சொலெனவிரண்டாம்.

(கருத்துரை) 'காண்டல்வாயில்' எனுஞ் செய்யுளிற் பகுக்கப்பட்டுக் கிடந்த முறையே சாட்சி நான்கனிலக்கணங்களையும் மேற்செய்யுட்களிலுரைத்து, 'அனுமானந் தனக்கும் பிறர்க்கும் என்றிரண்டாம்' என்று பாகுபட்ட கருதலளவையினிலக்கணங் கூறிப் பிறர்பொருட் டனுமானத்தைப் பகுத்தல் நுதலிற்று.

(பொழிப்புரை) மூன்றேதுக்களினொன்றுடைய பொருளைப்பக்கமூன்றினும் வைத்த ஒருவன் தான் உணரும் உணர்ச்சியே தன் பொருட்டனுமானமாம்; இங்ஙனந்தான் தெரிந்ததொன்றைப் பிறர் தெளியுமாறு உரைக்குமதுவே பிறர் பொருட்டனுமானமாம்; இப்பிறர் பொருட்டனுமானமும் உடம்பாட்டானும் எதிர்மறையானும் இரண்டு பிரிவுறும்; எ-று.

(குறிப்புரை) பக்கம், அனுமிக்கப்படும் பொருட்கு நிலைக்களம்; அது மேற்செய்யுளிற் கூறுப. ஏது, இயைபு, ஈண்டுக் காரணம்; காரியத்தோடியை புடைத்தா யிருத்தலின் அங்ஙனங் கூறப்பட்டது. இஃதறியார் அது ஹேது என்னும் வடமொழித் திரிபென்றுரைப்பர். ஏதின்மை=இயைபின்மை=பகைமை; ஏதிலார்=இயைபில்லார் அயலார்; எனுந் தமிழ் மொழிகளோடு அப்பொருண் மேற்றாய் வருதலின் அது வடமொழித் திரிபன்றென மறுக்க. காட்சியின் வழிக் கருதல் பெறப்படுமெனும் உண்மையுறிவித்தற்குக் காட்சியளவைக்குப் பின் அதை வைத்ததன்றியும், ஈண்டும் 'பார்த்துணர' எனக்கிளந் தோதினார். ஏதுக்களானன்றி யுரைக்குமனுமானம் போலியா யொழிதலின் 'தொக்கவிவற்றால்' எனவலியுறுத்தார். (அ)

மூன்றுபக்கம் பக்கநிகர் பக்க
நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந்துணி பொருளுக்
கிடமா முவமை நிகர்பக்க
மான்ற பொருள் சென்றடையாத
விடமாநிகரில் பக்கமுத
லென்றவிரண்டும் பொருளுண்மைக்
கிடமாமொன்று பொருளின்றாம்.

(க-ரை) மேற்செய்யுளிற் போந்த பக்கங்களின் பெயரும் அவற்றினிலக்கணமுங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை) பக்கம், நிகர்பக்கம், நிகரில் பக்கமெனப் பக்கம் மூன்றுவகைத்து; அவற்றுள், பக்கமென்பது துணியலுறும் பொருட்குப் பற்றுக்கோடாவதாம்; நிகர்பக்கம், அத்துணியலுறவு வெளிப்படுத்தற் கெடுத்துக் காட்டும் உவமைப்பொருட் கிடனாவதாம்; நிகரில்பக்கம் எடுத்துக்காட்டும் உவமைப் பொருள் இல்லதாம். இவற்றுள் முன்னைய விரண்டும் பொருளுண்மையைச் சாதித்தற்கும் பின்னையது அஃதில்லை யென்றற்கும் இடமாம்; எ-று.

(கு-ரை) 'இம்மலைதீயுடைத்து, இடையறாதியங்கும் புகையுடைமையால்'; இதுபக்கம் 'இம்மலைதீயுடைத்து, இடையறாதியங்கும் புகையுடைமையால், அடுக்களை (சமயலிடம்) போல' இது நிகர்பக்கம்; எடுத்துக்காட்டும் அடுக்களையில் புகையை மேற்கண்டிழியுள் புக்குத் தீயையுங் காண்டலின்; 'இம்மலை புகையுடைத்தன்று தீயின்மையால், மடுப்போல' இது நிகரில் பக்கம்; மடுவினிடத்துத் தீ காணப் பெறாமையால் ஆண்டுப் புகையில்லை யென்பது பெறுதுமாகலின்; இதற்கு நீரில்லாமடுவில் தாமரை முதலியபூக்களில்லாமைபோல எனக் கூறியுதாரணங் காட்டுவாருமுளர். நிகர்பக்கத்தில் தீயுண்மையைச் சாதிக்க எழுந்தகாட்டுப்போல, நிகரில் பக்கத்தில் தீயின்மையைச் சாதிக்கவெழுந்த காட்டே வேண்டற்பாலதா மன்றிப் பிறவுதாரணங்கள் பயன்படுவவல்ல. இதுவே ஆசிரியர் சிவஞான சுவாமிகட்குங் கருத்தாதல் அவர்கள் 'புகையாலனலுண் டடுக்களைபோல்' எனுஞ் செய்யுட்குரைத்த வுரையானும், தருக்க சங்கிரகதீபிகையினுங் கண்டுகொள்க. அல்லதூஉம் 'ஒன்று பொருளின்றாம்' என்றிவ்வாசிரியருரைத்ததனானு முணர்க. பக்கம் எனினும் நிலைக்களமெனினு மொக்கும். உவமை நிலைக்களம், உவமையில் நிலைக்களம் என்பவற்றை வடநூலார் முறையே சபக்ஷம் விபக்ஷம் என்ப. (கூ)

ஏதுமூன்றாமியல்புகாரியத்
தோடனுபலத்தியிவை
யோதினியல்பு மாமரத்தைக்
காட்ட லுறுகாரியம் புகைதன்

ஞதியான வனல்காட்டலாகு
மனுபலத்தியது
சிதமின்மை பனியின்மை காட்டல்
போலுஞ் செப்பிடினே.

(க-ரை) 'பக்கமூன்றின்' எனுஞ் செய்யுளிற் கூறியமுறையே பக்கங்களின் இலங்கணங் கூறி, எதுவின்பாகுபாடும் அவற்றின் இலக்கணமுங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை) இயல்பு, காரியம், அனுபலத்தி என்னும் வகையான் ஏது மூன்றும்; அவற்றுள் இயல்பேது, மா என்று சொல்லிய மாத்திரையானே அச்சொல் மரத்தைக் குறித்தலாம்; காரியவேது, காரியமான புகையால் அதன் காரணமான தீயினுண்மை யறிதலாம்; அனுபலத்தி யேது, குளிர்ச்சியில்லாமை கொண்டு பனிக்கால மன்மையறிதலாம்; எ-று.

(க-ரை) மா வென்பதற்குப் பிறபொருளு முளவேனும், அச்சொல் உரைத்த மாத்திரையானே பொதுமை நீக்கும் பிறசொற்களை வேவாது மரத்தைக் குறிக்கும், இதுவே இயல்பேது வென்றறிக. இங்ஙன மின்றி, 'மாபூத்தது' 'மா வீழ்மலர்' எனவுதாரணங் காட்டுவாரு முளராலெனின்;— ஆண்டுப் பொதுமை நீக்குஞ் சொற்களால் அப்பொருள் சுட்டிவந்தனவே யன்றித் தம்முடைய ஆற்றலால் அவற்றைக் குறிக்காமையானும், அது தானும் யாம் முன்னர்க் காட்டிய இயல்பளவையுள் அடங்குவதன்றி ஏதுவெனப் படாமையானும், ஆசிரியர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் 'மாமரத்தைக் காட்டல்' என்றதன்றி ஏனையவற்றைப் போலுரையாமையானும் அது பொருந்துமாறி யாண்டையதென்க. இதுவே ஆசிரியர் சிவஞானசுவாமிகட்குங் கருத்தாதல் அவருரையானுணர்க. சீதமின்மையுங்காரிய வேதுவாய் அடங்கும் பிறவெனின்;—அங்ஙனமாயினும், மேற்கூறிய காரியவேது உண்மைப்பொருள் வழிப்பெறப் படுதலானும், ஈண்டின்மைப்பொருள்பற்றி வரலானும், ஈண்டுச் சிறப்புறுவது அபாவத்தன்மையே யன்றி வேறு பிறிதில்லையாகலானும், பனியின்மையாகிய காரணவேதுவும் இதனுள் அடங்குதலானும் தலைமைபற்றியும் சுருக்கம் பற்றியும் அனுபலத்தி யேதுவென வேறு பெயர் கூறினர். சீதமின்மை பனியின்மை காட்டுமாறென்ற தென்னை? வெம்மையினபாவமே சீதமாகலின், சீதமின்மை வெம்மை யுண்மையைக் காட்டுமென்று கூறற்பாற்றும் பிறவெனின்;—அறியாது கடாயினாய், ஒளியுடைப் பொருளாவன வெல்லாம் வெம்மையுடையனவன்றே. பசும்பொன் சுடர்விரிந்து ஒளிதரினும் வெம்மை யுணரப் படாதவாறென்னெனின்? நெய்யைக் காய்ச்சின் அதற்கு அழிவு காண்கினும் நீரொடு கூடிக் காய்ச்சப்படின் அழிவெய்தாமையின், அவ் வழிவின் நீக்குவது நீரேபோலத் தூயபசும்பொன்னைப் பலநாள் உருக்கிக் காய்ச்சினும் சிறிதும் அழிவுறாமையானும், உருக்கிக் காய்ச்சுந் தீக்குமறுதலைப் பொருளாயின் அது அழிவெய்துமாதலானும், ஒளிதருவது தீயேயாதலானும் அது தீயின் கூறென்பது பெற்றாம்; மண்ணின் கூறு சிறிது தீயின் வெம்மையை மறைத்தலான் பொன்னின்கண் வெம்மை தோன்றாதாயிற்று. இதுபோலவே, வெந்நீர்க்கண் தண்மை காணப்படாமை வெம்மை தோன்றியதை யடக்கி மறைத்து நிற்றலான். வெம்மை தோன்றவும் தண்மையழிந்தறும் என்பார்க்கு, நீரின்குணம் தண்மையே யாகலான் அக்குணம் அழிந்தழிக்குணியாகிய நீர் அழியக் காணுமையானும், "குணமழிந்துழிக் குணியுமழியும்" எனும் மரபு இதில் முரணுறுதலானும், வெம்மை மறைந்தழித்தண்மை மறித்தும் புலப்பட்டுத் தோன்றலானும், அங்ஙனம் அழிந்தபொருளாயின் மறித்தும் அதன்கண்ணே தோன்றுதலிசலானும் அது பொருந்தாமையறிக. தண்மை வெம்மையின பாவமென்றலும் பொருந்தாது. என்னை? அபாவப்பொருட்கு வினை நிகழ்ச்சியின்மை கண்கூடாகப் பெறப்படுமாறு போலாது தண்மைக்கு அவ்வினை நிகழ்ச்சி இனிது உணரக்கிடத்தலின். ஆதலால், சீதமின்மையாகிய குணபாவம் பனியின்மையாகிய குணியபாவத்தையே காட்டுமன்றி வெம்மையைக் காட்டுமென்றல் மாறுபடக் கூறலாமென மறுக்க. அனுபலத்தி, இன்மை. (௧௦)

புகையா லனலுண் டடுக்களை போலென்னப்
புகற லன்னுவயம்
வகையா மனலின் றுமிடத்துப் புகையின்
றுகு மலரினெடு
முகையார் நீரிற்போ லென்று மொழிதல்
வெதிரேகச் சொலிவை
தொகையா றுறுப்பைந் தொடுங்கூடச்
சொல்லுவாரு முளர்துணிந்தே.

(க-ரை) "பக்கமூன்றின்" என்ற செய்யுளிற்கூறிய முறையே பிறர்பொருட்டனுமானப் பிரிவுகளான அன்னுவயம், வெதிரேகம் எனபவற்றின் இலக்கணங்களைக் காட்டுமுகத்தான் விளக்குதல் நுதலிற்று.

(பொ-ரை) யாண்டுப்புகை ஆண்டுத்தீ, அடுக்களையிற்போல என உடம்பாட்டாற் றெளித்துணர்த்தல் அன்னுவயானுமானமாம்; யாண்டுத்தீயில்லை ஆண்டுப்புகையில்லை, பூவும் மொட்டும் செறிந்துகமழும் நீரோடையிற்போல என எதிர்மறையானுணர்த்தல் வெதிரேகானுமானமாம்; இவ்விரண்டனுமானத்தையும் மேற்கோள், எது, எடுத்துக்காட்டு, எற்றல், முடிவுஎனும் ஐந்துறுப்புக்களானும் பாகுபடுத்தி யுரைப்பாருமுளர்; எ-று.

(ரு-ரை) "யாண்டுப்புகைஆண்டுத்தீ,அடுக்களையிற்போல" என்னும் அனுமானத்தின் கண், ஞாயிற்றின் வெம்மையால் நீராவியெழுவதைக்கண்டு அனுமானித்தலும் வீந்து போலியாமாலெனின்;—அற்றன்று, நீராவியெனத் தெரிந்தபின் தீயனுமானிக்குமாறியாண்டையது; அன்றி நீராவியோ புகையோ என்னும் ஐயத்தின்கண்ணெனின்;—நீராவி என்றுதல் புகையென்றுதல் தெளியாமல் அனுமானித்தல் வழுவாம். தெளிந்தழியே அங்ஙனங் கருதற்பாற்றென்றறிக. தீமுறுகி வளர்ந்து கனிந்தழிப்புகைகாண லுறுவதின்மையின், ஆண்டுப் புகையின்மைபற்றித் தீயுமின்றென மறுத்தல் பொருந்தாமையின், சண்டாசிரியர் அருணந்தி சிவாசாரியசுவாமிகள் புகையின்றுமிடத்து அனலின்றுகுமெனக் கூறுது "அனலின்றுமிடத்தப் புகையின்றுதும்" எனக் கூறினர்; மடுவின்கண் அனலின்மையின் ஆண்டுப் புகையுமில்லையாமதுபோலவென்பது. இம்மடுவுவமைக்கு இவ்வாறன்றிப் பிறவாறுரைப்பார்க்கு வியாத்தி யுணர்வுபெறப்படாமை யுணர்க. வியாத்தியுணர்ச்சியென்பது தென்னையெனின்? கூறுதும். ஒருமகன் அட்டிலின் உட்சென்று ஆண்டுத்தீயுண்மை யுணர்ந்தான்; உணர்ந்துபுறம்போந்து அவ்வட்டில் மேல் நோக்குழிப்புகை பரந்து போதலைக்கண்டு "யாண்டுத்தீ ஆண்டுப்புகை" எனும் உணர்வுகொண்டான். கொண்ட இதுவே வியாத்தியுணர்ச்சியென்றறிக. அடுக்களை உடம்பாட்டு வியாத்தியுணர்ச்சி நிகழ்த்தற் பயத்ததாமாறுபோல, மடு எதிர்மறை வியாத்தியுணர்ச்சி நிகழ்தற் பயத்ததாகல் வேண்டுமென்க.

இனிக்கேவலான்னுவ யானுமானம் மேலோதிய ஐந்துறுப்பொடுங் கூடிவருமாறு.

மேற்கோள் அல்லது பிரதிஞ்ஞை
இம்மலை தீ யுடைத்து
ஏது.
புகை யுடைமையால்
எடுத்துக்காட்டு அல்லது உதாரணம்
அடுக்களையிற்புகையும் அனலும் ஒருங்கிருத்தல் போல
ஏற்றல் அல்லது உபநயம்
இம்மலையும் புகை யுடைத்து
முடிவு அல்லது நிகமனம்.
ஆதலால், இம்மலை தீயுமுடைத்து.

---

கேவல வெதிரேகியனுமானம்.
மேற்கோள்
இம்மலை புகையுடைத்தன்று
ஏது
தீயின்மையால்
எடுத்துக்காட்டு
தீயில்லாமடுவிற் புகை யின்றுமாறுபோல
ஏற்றல்
இம்மலையுந் தீயுடைத்தன்று
முடிவு
ஆதலால், இம்மலை புகையுமுடைத்தன்று.

இக்கூறிய இரண்டனுமானத்துள்ளும் கருதப்படும் பொருள்களெல்லாம் அளந்து தெரிந்துகொள்ளப்படுவனவா மென்பதறிக. நீரில்லாமடுவில் ஒருகாரணம் பற்றித் தீயிருத்தல் சாலுமாகலான், அதை விலக்குதற்கு 'மலரினொடு முகையாநீரிற்போல்' என்று அடைகொடுத்தனர். 'சொல்லுவாருமுளர் துணிந்தே' என்றமையான், அங்ஙனஞ் சொல்லாதாரே பலரென்பதும் பெறுதும். இவ்வைந்தையும் ஒருங்குகொள்வோர் சைவரும், நையாயிகருமாம். ஏற்றல் அல்லது உபநயம், முடிவு அல்லது நிகமனம் என்னுமிவ்விரண்டும் கூறிற்றே கூறலான் அவற்றுற் பயனென்னெனின்;—உதாரணத்தைக் கூறியம்மட்டிலொழியின், உதாரணத்திற்கூறிய தன்மைகளில் எவைமேற்கோளிலுள்ளவற்றோடியையும் எவையியையா என மாணுக்கன் ஐயுறும்; அவ்வையுறவு தீர்த்தற்கும் மாட்டிமுடித்தல் என்னும் வழக்குக்குப் பொருந்தவும் அவையிரண்டும் வேண்டுமா மென்பது. இவ்வாறே பிறமாண்டை நூலாருங் கோடல் அவர் வாய்க்கேட்டுணர்க. இவ்வாறே தருக்கசங்கிரகதீபிகை நூலாருங் கோடல் காண்க. ஐந்தொடு, ஐந்தான்; 'ஊசியொடுதயின்ற நூசும்பட்டும்' என்பதிற்போல,

போதுநாற்றத்தாலறிதல்
பூர்வக்காட்சி யனுமானம்
ஓதுமுரையானறிவினள
வுணர்தல் கருதலனுமானம்
நீதியான்முற்கன்மபல
நிகழ்வதிப் போதிச் செய்தி
யர்தியாகவரும் பயனென்
றறிதலுரையா லனுமானம்.

(க-ரை) 'அளவைகாண்டல், கருதல், உரை, என்றிம்மூன்றினடங்கிடுமே' என்று முதற்செய்யுளில் உரைத்த முறைப்படி யவற்றின் இலக்கணங் கூறுவான்புகுந்த ஆசிரியர் மேற்செய்யுள்காறும் காண்டல், கருதல்களின் இலக்கணங்களை விரித்துரைத்து உரையளவையும் பகுத்து அதன் இலக்கணங்கூறிற்றிலராயினும், கருதலளவை அதிகாரப்படுகின்றமையின் காண்டல் கருதல் உரை என்னும் மூன்றின் வழிப்பெறப்படும் அனுமான இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(பொ-ரை) முன்னர்த்தான் ஒரு பூவினையும் அதன் மணத்தையும் அறிந்து பின்னொருகால் அப்பூவைக்காணுது அதன்மணம் மாத்திரங் கமழ்தல் அறிந்து அப்பூ அங்கு எங்காயினுமிருக்குமென்று அனுமானித்தல் காட்சவழிக் கருதலாம்; ஒருவன் உரையாடுந் திறமறிந்து அவன் அறிவின் நுண்மையறிதல் கருதல் வழிக்கருதலாம்; திருவள்ளுவப் பயனுதியுன ஊழ் என்பது ஒன்று சொல்லக்கேட்டு, தன்மாட்டு நிகழும் இன்பத் துன்பங்களும் இவற்றைத் தருவதும் அவ்

னூழும் அதனாற் பெறும் பயனும் ஒப்புடையவா யிருத்தல் உணர்ந்து இன்பத் துன்பங்களைப் பயக்கும் முற்செய்வினையே யூழென்றதா மென்றறிதல் உரைவழிக் கருதல்; எ-று.

(கு-ரை) குயவன் மட் குடம் வனைதல் கண்டு புறம் போந்தான் பிறிதோரிடத்தில் மட் குடந் தவிரக் குயவனைக் காணா தொழியினும் அதை வனைந்தான் குயவனே யென்றறிதலும் இதுபோல் வனவும் காட்சிவழிக் கருதல் அல்லது பூர்வக் காட்சியனுமானமாம். இதைக் கருதலுறுப்பொடு பாகுபடுத்திக் காட்டுவாம்.

I. காட்சிவழிக் கருதல்

மேற்கோள்

இவ்வுலகம் செய் வோனையுடைத்து

ஏது

செயப்படுபொருட்குச் செய்வோன்வேண்டுதலின்

எடுத்துக்காட்டு

குடம் குயவனை யுடைத்தாமாறு போல

ஏற்றல்

உலகமுங் குடம்போலச் செயப்படுபொருள்

முடிவு

ஆதலால், இவ்வுலகம் செய்வோனையுடைத்து.

என்னும் இவ்வனுமானத்தில், குடத்தைச் செய்யுங் குயவனை முன்னறிந்தவாறு உலகத்தை யாக்குங் கடவுளை முன்னறிந்து பிறிதோர்கால் அவனைக்காணா தொழியினும் உலகத்தை யாக்குவா னவனென்று கோடலமையும்; அவ்வாறுலகத்தைக் கடவுள்படைக்கு ஞான்று கண்டாரிலராகலின் இதற்குக் குடத்தையுங் குயவனையும் உவமை கூறுதல் வழுவாமென்று கூறுவாருமுளர். செயப்படுபொருள் செய்வோனையுடைத்தென்பது குடத்தின் கட்கண்டாமாகலின் அதுவே சாலும்; வேறு பிறசெயப்படு பொருட் கண்ணும் செய்வோனையறிந்திருக்க வேண்டு மெனு நியதியில்லை, செயப்படுபொருளிலக்கண முடைய ஒரு பொருளைப்பிறிதொன்றனொடு சார்த்தியளந் தறிந்து கோடலின். இதுபோலவே உலகமும்செய்ப்படு பொருளிலக்கண முடைமையின் அதனொடொத்த குடத்தொடு சார்த்தியளந்து கோடுமாகலின், அதன் முதல்வனை முன்னறிந்துகோடல் வேண்டுமெனு நியதியில்லையெனக. அற்றேல், அதைப் பூர்வக்காட்சி யனுமான மென்றல் பொருந்தாதாம் பிறவெனின்;—அறியாது கூறினாய், உவமையாகிய குடத்தின் கட்காண்டலின் பொருட் கண்ணுங்கண்டாதாமென்பது; இது பற்றியன்றே ஆசிரியருங் கீழ் 'காரணகாரியங்கண் முதறனை நிமித்தங் கண்டா' மென்று குடவுவமை கூறுவாராயிற்று.

II. கருத்துவழிக்கருதல்

மேற்கோள்

இவன் கூர்த்த கல்வியறிவுடையன்

ஏது

கல்விப்பயத் துரையாடுதலின்

எடுத்துக்காட்டு

கற்றோர் உரையாடல்போல்

ஏற்றல்

இவன் உரையாடலும் கல்விநுணக்கமுடையது

முடிவு

ஆதலால், இவன் கூர்த்தகல்வியறிவுடையன்.

காட்சியான் அறியப்படாத அருவப்பொருளான அறிவின தன்மை, ஒருவன் தன் கருத்து வெளிப்படுக்கு மாற்றால் அறியப்படுதலின், இது கருத்து வழிக்கருதல் அல்லது அனுமானனுமான மெனப்பட்டது.

III. உரைவழிக் கருதல்

மேற்கோள்

இருவகை உலகையும் இயக்குவதெது அது கடவுள்

ஏது

மறை, அவ்வாறியக்கும்பொருளே கடவுளென்றுகூறலின்

உதாரணம்

திகிரியுருட்டுவோன் அரசன் என்பதுபோல

ஏற்றல்

திகிரிபோல்வதுலகம்

முடிவு

ஆதலால், இவ்விருவகையுலகையு மியக்குவது கடவுளென்க.

என்னுமிது மறைவழிப் பொருளையளந்து நிறுவுதலின் ஆகமலிங்கானுமானம் அல்லது உரைவழிக்கருத லெனப்பட்டது. இது கிடக்க. மேனாட்டுத் தருக்கநூலார் கூறும் இருவகையனுமானங்களும், காட்சிவழிக் கருதலும், உரைவழிக் கருதலுமெனும் ஈண்டுக் கூறப்பட்டனவே யன்றிப் பிறவல்ல. யாங்ஙனமெனின்?

மேற்கோள்

மக்களெல்லாரும் இறப்பர்

ஏது

சாத்தனிறக்கும், கொற்றனிறக்கும், கிள்ளி யிறக்கும், மால் இறக்கும்; இவரெல்லாம் மக்களாதலின்

உதாரணம்.

பலவிடத்திருக்குந் தீயெல்லாம் ஒளிதரலின், தீயென்பது ஒளிதரும்பொருள் என்பதுபோல

ஏற்றல்

மக்களுந்தீபோல்வர்.

முடிவு

ஆதலின், மக்களெல்லாரும் இறப்பர் என்பதாம்.

இது காட்சிவழிக்கருதல் என்னும் இண்டக்டிவ்மெதட்.

மேற்கோள்
சாத்தன் இறக்கும்

ஏது

இறக்குந்தன்மையுடைய மக்களினத்திற் சேர்ந்தவனாதலின்

உதாரணம்.

கொம்புள்ளவிலங்குகளெல்லாம் கவட்டுக் குளம்புடையவாதலின் மானுங்குளம் புடைத்தாமாறுபோல

ஏற்றல்

சாத்தனும் மான்போல்வன்

முடிவு

ஆதலின், சாத்தனிறக்கும்.

என்னும் இவ்வுரைவழிக் கருதல் டிடக்டிவ்மெதட், காட்சிவழிக்கருதலுக்கும் இதற்கும் வேற்றுமை என்னெனின்;— ஓரினமான பலபொருட் கண்ணும் நிகழும் நிகழ்ச்சிபற்றி அவ்வினமுழுவதற்கும் எய்தும் இலக்கணம் காட்சிவழிக்கருதலாம்; சாத்தன், கொற்றன் முதலாகிய மக்கள் வகுப்பினுட்பட்டார் இறத்தல் கண்கூடாகக் காண்டலின் மக்கள் எல்லாரும் இறக்குந் தன்மையர் என்று முற் காட்டியவாபோல. அங்ஙனம் அறிந்த வகுப்பினிலக்கணம்பற்றி அவ்வகுப்பினுட் கிடந்த ஒரு பொருட்கு அவ்விலக்கணத்தை ஏற்றி முடித்தல் உரைவழிக் கருதலாம்; சாத்தனிறக்கும், இறக்கும் பான்மையரான மக்களினத்தனாகலின் என்று முற்காட்டியவாறுபோல. மேனாட்டுத் தருக்கநூலார் மேற்கூறிய இரண்டனுமானங்கட்கும் உதாரணங் காட்டாது போவர். நம்மனோர், உதாரணங் காட்டியேபோவர். இதுவே அவர்க்கும் நமக்கும் உள்ளவேற்றுமையாமென்றறிக. உதாரணங் காட்டிப்போதலே முன்னையதினும் வலியுடைத்தென்பது உண்மையான் நோக்குவார்க் கினிது விளங்கும்.

(இன்னும் வரும்).

R. S. வேதாசலம் பிள்ளை.

## தாயுமான சுவாமிகளருளிச் செய்த பாடல் உரை.

---

### பொருள்வணக்கம்.

பொருள் வணக்கம் என்றது பொருட்குவணங்கும் வணக்கம் எனவிரியும்; ஆசிரியர் தொல்காப்பியனார் "எப்பொருளாயினுங் கொள்ளுமதுவே" என்றாராகலின், ஈண்டு நான்காம் வேற்றுமை யுருபு ஏற்றுக்கோடற்பொருளில் வந்தது. பொருள்கடாம் பலவேனும், வணக்கத்தை யேற்றுக்கோடற் பொருளென்றமையான் ஈண்டு அது முதற்பொருளென்பது பெறுதும். பிறவெல்லாம் அழிதன்மாலையவாதலாலும், அவற்றாற்பெறும் பயன் ஒன்றின்மையானுமென்பது.

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய்
நிராமயமாய் நிறைவாய்நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த்
துரியநிறை சுடராயெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்தமயமாகி
மனவாக்கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் [வாம்.
சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தைசெய்

(பொ-ரை.) என்றுமுண்மை, குற்றமின்மை, உருவமின்மை, நோயின்மை, நிறைவுடைமை, தற்கிழமையாயுள்ள தூய்மை, அன்பிலார்க்குச்சேய்மையினும் அன்புடையார்க்கு அண்மையினும் நிற்றல், துரியத்தில் சுடர்ப்பிழம்பாய் நிற்றல், எவற்றிற்கும் நிலைக்களமாதல், இன்ப வுருவுடைத்தாதல், மனமொழிகளால் அறிந்துரைக்கப்படா அறிவுருவுமுதலிய இலக்கணங்களை யுடையதாயும் பேரி இன்பம் (வெள்ளம்) பிறத்தற்குக் காரணமானதாய்ப் பெரு வெளியாயும் இருக்கும் முதற்பொருளை யாம் மனத்தாற் பரவுவாம்; எ-று.

(கு-ரை.) ஈண்டுக்கூறிய இலக்கணங்கள் எச்சமயத்தாரானும் ஏற்றுக்கொள்ளப்படுவனவாதலான், இவற்றை யவர் உண்மையான் ஆராயப் புகுவரேல் ஏனை நெறிகளெல்லாம் புரையுடையனவென்றறிந்து சைவநெறியைச் சார்ந்து வீடுபேறெய்துவரென்னுங் கருத்தானிங்ஙனங்கூறினார்; பொதுவினின்றுமே சிறப்பிலக்கணங்கூறன் மரபென்றறிக. மனத்தாற்குறித் துணரப்படுவனவும், மொழியான் உரைக்கப்படுவனவும் ஏனைப்பொறிக்கும் புலனாய், அங்ஙனம் புலனாவன அழிவெய்துமாதலின் "மனவாக்கெட்டா" என்றார். (க)

யாதுமனநினையுமந்தநினைவுக்கு
நினைவாகியாதின்பாலும்
பேதமறநின்றுயிருக்குயிராகி
யன்பருக்கேபேரானந்தக்
கோதிலமுதூற்றரும்பிக் குணங்குறியொன்
றறத்தன்னைக் கொடுத்துக்காட்டுந்
தீதில்பராபரமான சித்தாந்தப்பேரொளியைச்
சிந்தைசெய்வாம்.

(பொ-ரை) மனம் எந்நினைவு கூருகின்றதோ அந்நினைவுக்கு எழுச்சிதரும் நினைவாகி எவற்றினிடத்துந் தான் பிறிதென்னும் வேற்றுமை யுணர்வுக்கிடனாதலின்றி ஒன்றுபடக்கலந்துற்று உயிர்க்குயிராகி நிற்கினும் தன்னை யன்பான் நினைவார்க்கே பேரின்பமாகிய அமிழ்துசுரக்கும் ஊற்றை முறுவலித்து (புன்சிரிப்புற்று) ஈதவிக் குணத்தானுங் குறியானும் தலையறியுமாறின்றி அவர்க்கு (அவ்வன்பர்க்கு)த் தன்னைக்கொடுத்து விளக்கும் ஒளிப்பிழம்பை யாம் மனத்துட்கொள்வாம்; எ-றி.

(கு-ரை.) மனம் எப்பொருளை நினைக்குமோ அந்நினைவுக்கெனப் பொருள்கூறினுமாம். இறைவன் எல்லா நினைவினும் உயிரினுங் கலந்து நிற்கினும் ஆண்டுத் தன் பேரின்பத்தை வெளிப்படுத்தலின்றித் தன்னை யன்பான் நினையவல்லார்க்கே அதைவெளிப்படுத்தலின் "யாது மனநினையு........அரும்பி"

என்ருர்; ஞாயிற்றின் வெம்மையாண்டும் நிறைந்து படினும் சூரியகாந்தத்தினிடத்தே அது வெளிப்பட்டுத் தோன்றுமாறுபோலவென்க. செயலின்றிக் கிடந்த உயிர்க்குயிராகிய இறைவன் அவை தன்னை நினையப் பேரின்பத்தை யளிப்பனென்றதென்னை! எனின்;—நன்றுகூறினுய்; மலத்துட் கிடந்த உயிர்க்குத் தன்பேரருட்டிறத்தால் கருவிகளைக் கொடுத்து அவற்றிற்குரிய அறிவை விளக்குதலின் அவ்வுரிமையறிவால் அவனை நினையும்பயன் றுகராததென்னையோவென்பது. அல்லதூஉம், உலகத்துத்தமதொழுக்கம் நிகழ்த்தவது உரிமையறிவாலன்றிப் பிறிதில்லை யென்பதும் அறிந்தடங்குக. நஞ்சொடு பிறக்காமையானும், அழியாவின்பம் பயத்தலானுங் 'கோதிலமுது' என்ருர். அமுது - அம்ருதம்எனும் வடமொழித் திரிவென்ப வொருசாரார். அது கலித்தொகை முதலிய சங்கச்செய்யுட்களில் மிக்குவிர விவரலானும், "அமிழ்திசைப் பீலியூதும்" என்பனபோன்ற செந்தமிழ்ச் சொற்களொடு புணர்ந்துவரலானும், நச்சினுர்க்கினியார் அது வடமொழித் திரிபென் றுரையில் எழுதாமையானும் அவர் கூற்றுப்போலியெனமறுக்க. அது, கழியவுஞ்சுவை பயத்தலான் "அறவு மிழுது" எனுஞ்சொற்களின் மரூஉவாய் அமிழ்தெனவும்அமுதெனவும் வரும். அமுதம் என்பதே யங்ஙனம் வந்த திரிபாமென்க. அமுதூற்று, பண்புத்தொகை. அரும்பு (முகை)எனும் பெயரடியாகப் பிறந்த வினையாதலின் அரும்பி என்பதற்கு முறுவலித்துதவி யெனவுரைகூறினும்; இறைவன் முறுவலித்தன் மாத்திரையானே பேரின்பஞ்சுரத்தலின் "பேரானந்தக்கோதிலமுதூற்றரும்பி" என்ருர். குணத்தானுங் குறியானும் அறிவார்க்கு வரம்புப்படாப்பொருள் வரம்புப்படலான் "குணங்குறியொன்றற" என்ருர். அல்லதூஉம், வீடுபேற்றின்கண் உயிர்க்கும் வியாபகம் நிகழ்தலின், ஆண்டிறைவன் வியாபகவின்பத்தை அது யாண்டுந்திளைக்குமாம். அதனானுங் குணங்குறி வேண்டாமை யுணர்க. தன்னறிவான் முனைத்துக்காண்பார்க்கு மறித்தும் பிறவிக்கேதுவாம் செருக்கருமையான், அது சாலாதென்பார் "அவனருளாலே யவன்றுள்வணங்கி" என்றுதிருவாதவூரடிகள் உரைத்தருளியவாறு "தன்னைக் கொடுத்துக்காட்டும்" என்ருர். தீதில் சித்தாந்தப் பராபரமான பேரொளியை, எனமாற்றிப் பொருள்கொள்க. வினைச்சமயங்களெல்லாம் தம்மைச் சார்வாரைப் புரைநெறிக்கட்கடாவி அறிவுதிரித்தலின், சித்தாந்தசைவத்தைத் 'தீதில்' எனச்சிறப்பித்தார். சித்தாந்த சைவத்துள் எளிவந்தருள்செய்தலின் "சித்தாந்தப்பராபரமான பேரொளி" என்ருர். (உ)

பெருவெளியாயைம்பூதம் பிறப்பிடமாய்ப்
பேசாதபெரியமோனம்
வருமிடமாய் மனமாதிக்கெட்டாத
பேரின்பமயமாய்ஞானக்
குருவருளாற்காட்டிடவு மன்பரைக்கோத்
தறவிழுங்கிக்கொண்டப்பாலுந்
தெரிவரிதாய்க்கலந்ததெந்தப்பொருளந்தப்
பொருளினையாஞ்சிந்தைசெய்வாம்.

(பொ-ரை.) பரமாகாயமாய் ஐம்பெரும்பூதங்கட்கு நிமித்தகாரணப் பிறப்பிடமாய் மோனத்தின்கண் வெளிப்படுவதாய் மனவாக்குகளானும் குறித்துரைக்கப்படாப் பேரின்பத்ததாய் ஞானமாகிய குரவனுல் அறிவுறுக்கப்பட்ட அன்பரை அவர் தம் செருக்கறுத்துச் சிவமாக்கிப் பின்னும் தன்னிலையறியாவாறு கலந்தபொருளெதுவோ அதை யாம்வழுத்துவாம்; எ-று.

(கு-ரை.) ஐம்பெரும்பூதங்களையுந் தன்னுட் செறித்துக் கொண்டவற்றிற்கும் புறம்பாயிருத்தலின் பெருவெளியாயென்ருர். ஐம்பெரும்பூதங்களும் பிறத்தற்கு நிலைக்களமாகவுள்ள பொருள் மாயையேயாக ஈண்டிறைவனைக் கூறியது என்னை? யெனின்;—கிழங்கில் முளைத்த தாமரையை அக்காரணத்தாற் கூருது, பங்கயம் எனச் சேற்றில் முளைப்பவற்றிற் கிடற்பாலதாம் பெயராற் கூறியவாறுபோலவென்க. இறைவனே ஐம்பெரும்பூதமாகவும் பிறவாகவுந் திரிந்தானென்றற் கண்எய்தும் இழுக்கென்னையெனின்;—நன்று; இறைவன் அங்ஙனந்திரியவேண்டுவ தென்னையென்று கடாவுவார்க்கு நம்இறைபோலியா யொழிதலான் அதுகூடாது. அதுகிடக்க. தூயவுடம்பினனுய், இயற்கையாகவே பாசங்களின் நீங்கினவனும் இறைவன்பால், மாசுற்றனவாய், இயற்கையிலேவாலாமை (அசுத்தம்) யுடையனவாயுள்ள உலகுயிராதியதோன்றுமாறியாங்ஙனம்? 'காரியப்பொருள் காரணப் பொருளின் றன்மையுடையவாம்' என்னும் வழக்குரையையும் ஆராய்ந்திலைகொலோ! எனக்கூறி மறுக்க. ஞானக்குருவருளாற்காட்டிடவும், என்பதற்கு ஞானுசிரியன் அருள்வழிநின்றுண்மைப் பொருளைக்காட்டவும் எனப் பொருள்கூறலுமாம். (௩)

இகபரமு மூயிர்க்குயிரை யானெனதற்
றவருறவை யெந்நாளுஞ்
சுகபரி பூரணமான நிராலம்பகோசரத்
தைத்துரிய வாழ்வை
அகமகிழவருந் தேனைமுக்கனியைக்
கற்கண்டை யமிழ்தை நாடி
மொருமொகென் விருவிழிநீர்முத்திறைப்பக்
கரமலர்கண் முகிழ்த்து நிற்பாம்.

(பொ-ரை) இம்மை மறுமை யிரண்டினும் உயிர்க்குறுதுணையாகவும் அகம் புறம்எனும்பற்றுவிட்ட துறவோர்தம் தோன்ருச்சுற்றமாயும்இன்பச்செறிவாய்த்தனக்கோர் கொழுகொம்பின்றித் தானே வெளிப்படுவதாயும் துரிய வாழ்வாயும் அகச்சுவை யளிக்குந்தேன் முக்கனி, கற்கண்டு, அமிழ்து முதலியவாயும் உள்ள பரம்பொருளை விரும்பி நின்று அன்பாற் கண்ணீர்வீழ்த்துக் கைகோட்டி நிற்பாம்; எ-று.

(கு-ரை.) நான் செய்தேன், நான் படித்தேன், நான்பெரியன் என்பனவாக வரும் அகப்பற்றும் என்மனை, என் புதல்வர், என் பொருள் என்பனவாகவரும் புறப்பற்றும் அற்

ரூர்க்கன்றி வீடு பேறு கைவரப் பெருமையை ஆசிரியர்பெரு நாவலர் "யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்" என்றுரைத்தறிவுறித் தருளியவாறு போல ஈண்டும் "யானெனதற்றவருறவை" என்றார். நறுந்தேனும், வருக்கைச் சுளையும், மாம்பழமும், வாழைக்கனியும், கற்கண்டும், அமிழ்தம் பல்வேறு சுவையவேனும், இனிமையான் அவையனைத்தும் ஒருபுடை யொத்தலான் அவற்றைக்கூறினர். மொகு மொகு, நிகழ்ச்சிக்குறிப்பு; மிகுந்தபுனல், முறைவழிச் சமபூமியில் மெல்லென ஓடுங்கால் இக்குறிப் பறிந்து கொள்க. (௪)

சாதிகுலம்பிறப்பிறப்புப் பந்த முத்தி
யருவுருவத் தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும்
பிரிவற நின்றியக்கஞ் செய்யும்
சோதியைமாத்தூவெளியை மனதவிழ
நிறைவானதுரிய வாழ்வைத்
தீதில் பரமாம் பொருளைத்திருவருளே
நினைவாகச் சிந்தைசெய்வாம்.

(பொ-ரை.) சாதிமுதல்நாம மீறாய்க்கிடந்தன வொன்றாலும் வேறுபடாது எவ்விடத்துமுள்ள எப்பொருளையும் அத்துவிதமாய்க்கலந்து நின்றியக்கும் சோதியைத் தூவெளியை மனமுகை நெக்குடைய அதில் நிரம்பிவாழும் துரியத் தேனைப் பரம்பொருளை அவனருளே நினைவாகக் கொண்டு தொழுவாம்; எ-று.

(கு-ரை) சாதி, மக்களுட்பிரிவு; குலம், சாதியுட்பிரிவு.

" பந்தமும் வீடுமாய பதபதார்த் தங்களல்லான்
அந்தமு மாதியில்லா னளப்பில னுதலாலே
எந்ைததா னின்னனென்று மின்னதா மின்னதாகி
வந்திடானென் றஞ்சொல்ல விழக்கொடு மாற்றமின்றே"

என்று சித்தியாரினும்,

" அப்படியு மவ்வுருவு மவ்வண்ணமும்
மவனருளே கண்ணகக் காணினல்லா
லிப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்
தனிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே"

என்று வாகீசப்பெருந்தகையின் திருத்தாண்டகத்தினும்பிறவற்றினுங் கூறப்பட்டிருத்தலால், பிறரும் ஈண்டுரைத்தவற்றைக் கொள்ளினும் அவர் சமயத்திற் கவையேலாவாய்ச் சித்தாந்தசைவத்திற்கே பொருந்துமாறோர்ந் துணர்க. உலகத்துள் உயிருள்ளனவும், இல்லனவுமென்னும் இருபாற் பொருளினும், உயிருள்ளனவற்றிற்கு அறிவுந் தொழிலும், உயிரில்லனவற்றிற்குத் தொழிலு மாத்திரை உளவாதற்குரிய ஆற்றலுள. இதைப் புல்முதல் மக்களீறாய்க் கிடந்தவற்றிற்கு அறிவுந் தொழிலும் உளவாதற்காம் ஆற்றலும், காந்தமுதற் காற்றீறாவனவற்றிற்குத் தொழிலுளவாதற்காம் ஆற்றலும் இருத்தற் கண்வைத்துக் கண்டுகொள்க. ஆகவே, உயிரில்பொருளைத் தொழிலாலும் உயிருள்பொருளை அறிவாலும் யாண்டும்நிறைந்துநின்று இயக்குதலின் "எப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ் செய்யும் சோதியை" என ஆசிரியர் ஈண்டிறைவன் றன்மைகளை இனிதின் விளக்கினர். (௫)

இந்திரசாலங் கனவுகானலினீரென
வுலகமெமக்குத்தோன்றச்
சந்ததமுஞ்சிற்பரத்தாலழியாத
தற்பரத்தைச்சார்ந்துவாழ
புந்திமகிழுறநாளுந்தடையற
வானந்தவெள்ளம்பொலிகவென்றே
வந்தருளுங்குருமௌனிமலர்த்தாளை
யனுதினமும்வழுத்தல்செய்வாம்.

(பொ-ரை.) நிலையுடைத்தென்று கருதிய இவ்வுலகம் இந்திரசாலம், கனவு, கானல்நீர்போலத் தோன்றி யழிதன் மாலைத்தென்று யாம்தெளியுமாறும், என்றும் ஞானத்தால் தற்பரமான பொருட்கட் சார்ந்துவாழுமாறும், மனக்களிப்புற்று நாளும் பேர் இன்பவெள்ளத்தட் குடைந்து பொலிவெய்துமாறும் என்றேபோந்து எமக்குண்மைப்பொருளை யறிவுறுத்த மோனகுருவை நாளும் வணங்குவாம்; எ-று.

(கு-ரை.) இந்திரசாலங் கனவு கானல்நீர் என்பன ஈண்டுலகம் நிலையுதலின்றி யழிதன் மாலைத்தென்பதைக் காட்டவெடுத்த உவமைகளாம்; யாங்ஙனமெனின்? இந்திரசாலம், உண்மைப்பொருள்போற் சிறிதுபொழுதுதோன்றி மறைதல்போலவும், கனவு முற்றும் நிகழ்ச்சியின்றி இடையில் மாறுதல்போலவும், கானல்நீர் ஒருவரை வஞ்சித்துக்கொண்டு சேறல்போலவும் உலக வியல்புமாமென்றறிக. "நீரி லெழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும், ஓரிலவை யின்றாமாறுப்பு" எனுஞ் சிவஞானபோத வெண்பாவுக்கும் இவ்வாறேஆசிரியர் சிவஞானசுவாமிகள் உரைகூறியருளினர். இப்பரிசறியாதார், இவை, உலகம் முக்காலத்தும் இல்பொருளாம் (மித்தை) என்பதை அறிவிக்க எடுத்துரைத்த உவமைகளாமெனமயங்குவர்; அவரறியார், முக்காலத்தும் இல்பொருட்கு முயற்கோடுபோலத் தோற்றமின்மையானும், ஈண்டுலகம் பொறிக்குப் புலனுதலானும், அன்றி யவ்வாறு கோடுமெனின் உலகத்துள்ளயாமும் பொய்யெனப்பட்டு உண்மைப்பொருளை யறிந்துய்தல் பயனின்றாய் அதுகூறிய நூல்களும் பொய்யெனவேண்டுமாகலானும் அவர் கூற்றுப்போலியென்றொழிக. அன்றன்று, விசும்பிற்கு நிறனின்றாகவும் நீலநிறம் கண்ணின்குற்றத்தாற் றோன்றுமாறுபோலப் பிரமத்தினிடத்துலகம் பொய்படத் தோன்றுமெனின்;—அற்றேல், உலகம் பொய்யெனக்காணும் பொருளெதுவென்று வினவுவார்க்கு நீவிர் இறுக்குமாற்றலிழத்தலின், அஃதடாதென்பதாம். அல்லதூஉம், வானிற்றோன்றும் நீலநிறம் பொய்ப்பொருளன்று; ஞாயிற்றின்கதிரால் சடல், எரி, குளம், கூவல்போல்பவற்றின் நீர்

துகள் (அணு) களாகப்பிரிவுற்று மேனோக்கிச்சென்று ஒருங்குகுழீஇ நீரின்வண்ணம் கருமையாதலின் அவை நீலவுருவொடு தோன்றுவவாயின ; இந்நீல வுருவிற்றோன்றும் ஊர்கோள், வானவில் முதலாயின அந்நீர்த்துகளாற் பிரிக்கப்படும் ஞாயிற்றினொளி, திங்களினொளியாம். எவ்வாறெனின ? பல்வேறுவண்ணங்களை ஒருங்குறக்கலந்து ஒருபால் முக்கோண ஆடியருகேவைப்புழி அவ்வாடியின் மறுபுறத்தில் அவ்வண்ணங்கள் வேறுவேறு பிரிபட்டுக் கதிர்விடுவது கண்கூடாயறியப்பட்ட தொன்றும். ஒருங்கு விராயவண்ணங்களைப் பிரிக்குந்தன்மை யிவ்வாடியி லிருத்தல்போலவே நீர்த்துகள் போல்பவற்றினுங் கண்டுகொள்ளப்படும். ஞாயிறு முதலியவற்றி னொளிவிழிப்பார்வைக்கு வெளிறியபோற் றோன்றினும் அவற்வை யுண்மையானுராய் வார்க்கிவ்வியல் பினிதுவிளங்கும். ஆகவே, ஞாயிற்றினொளி திங்களொளி மேற்கூறிய நீர்த்துகளிற் பட அவை அவற்றைப் பிரித்துப் பன்னிறமுடையவானவில்,ஊர்கோளாக உருவியற்றுகின்றனவென்பது. அஃதாயின், எஞ்ஞான்றும அவ்வுருவங்கள் காணப்படாமைக்கேதுவென்னெனின் ? அந்நீர்த்துகள் வேனிற்காலத்து ஆவியாகவிருத்தலாற் றோன்றுவாயின ; குளிர்வளிதை வரப்பெறின் நீராகமாறி யுருவியற்றும் ; அஃதன்றே! கார்காலத்து வானவில், ஊர்கோள்தோன்றுதலும், ஏனைக்காலத் தில்லாமையுமாமென்க. போந்த விப்பகுதியால் விசும்பின்கட்டோன்றும் நீலநிறம் மெய்ப்பொருளேயென்பதறிக. ஈண்டாசிரியர் இவ்வுவமைகளை நிலையாமை மாத்திரைக்கே கூறினரென்ப தெற்றாற்பெறுதுபெனின் ;—நன்றுசொன்னாய்,மெய்யான தற்பரத்தை என்னாது "அழியாத தற்பரத்தை," எனக்கூறி விதந்தாராகலான், இதன்பின்னர்க்கூறிய உலகம் அழிதன்மாலைத் தென்பதூஉம் இதற்கேற்க வெடுத்த வுவமைகளும் நிலையாமைமாத்திரைக்கே ஒப்பித்தவென்பதூஉம் பொருளாற்றலாற் பெறுதுமென்க. உலக நிலையாமையுணர்தலே முதற்பொருளைச் சார்தற் கேதுவாதலாலும், அங்ஙன மெய்தும் சார்ச்சியே வீட்டின்பத்தைப் பயப்பதாதலாலும் முதன்மூன்றடியானும் அம்முறை தெரித்தோதினர். தற்பரத்தைச்சார்தல், என்பதற்கு ஏழனுருபுவிரித்துப் பொருள்கூறினும் "கருமமல்லாச்சார்பென் கிளவிக், குரிமையுமுடைத்தேகண்ணென்வேற்றுமை" என்றார் தொல்காப்பியனாராதலின். மகிழுறதடையறவெனுஞ் செயவெனெச்சங்களைச் செய்தெனெச்சமாகத்திரிக்க. (சு)

பொருளாகக்கண்டபொருளெவைக்குமுதற்
பொருளாகிப்போதமாகித்
தெருளாகிக்கருதுமன்பர்மிடிதீரப்
பருகவந்தசெழுந்தேனாகி
அருளானோர்க்ககம்புறமென்றுன்னாத
பூரணவானந்தமாகி
இருமூவிளங்குபொருளியாதந்தப்
பொருளினையாமிறைஞ்சிநிற்பாம்.

(பொ-ளிர.) பொருட்டன்மை யுடையனவாகக் காணப்படுவனவற்றுக்கெல்லாம் இன்றி யமையாப்பொருளாகி அவற்றை யியக்குதற்கு அறிவையுமுடையனாகி, பாச வறிவானன்றி யருள்வழிநின்று வழுத்தும் அன்பர்க்கு அவர்தம் மலக்கோணைத்தரந்து அவர்மாந்துதற்கு (குமத்தற்கு) இனியதேறலாகி, முத்தர்க்கு அவர் யாண்டுந் துய்க்கும் இன்பநிறைவாகிப் பாசவிருள் இரியத்திகழும் இறைவன திருபாதப்போதையும் வணங்குவாம்; எ-று.

(கு-ரை.) இறைவனின்றேல் உலகுயிரும் பாழாயொழியும் ; அதன்றி, அவற்றைப் பொருட்டன்மை யுடையவாகக் கூறினமையின் இறைவன தன்மைத்தன்மையின்றி யமையாதென்பார் 'முதற்பொருளாகி' எனவும், அவ்வாறுதலைமை தழுவியபொருட்கு, அஃதில் பொருளையியக்கி வழிப்படுத்தற்குரிய அறிவு வேண்டுதலின் 'போதமாகி' எனவும், அங்ஙனமியக்கி வீட்டுநெறிக்கட் செலுத்தும் உயிர்க் கின்பமளித்தல் வேண்டுதலின் 'ஆனந்தமாகி' எனவுங் கூறினார். இறைவனுக்குரிய பொதுச் சிறப்பிலக்கணங்களுள், சிறப்பியல்பென்னுஞ் சொரூபவிலக்கணங் கூறினார் ; அது சச்சிதானந்தம். இரண்டாமடி முத்திநெறி நிற்பார்க் குறுக்கும் பயனும், மூன்றாமடி முத்தியெய்தியார்க்குப் பயக்கும் இன்பமும் கூறினமையின் அதுகூறியது கூறலன்மையறிக. விளங்குபொருள் பரிதி. ஈண்டிறைவனைப் பரிதியென்றார், முதற்கூறிய மூன்றடிக்கேற்ப அதுவும் இருளைப்போக்கலும், ஒளிதாலும், ஒழுக்கம் நிகழ்வித்தலுமென்னும் முத்தொழிலுடைமையின. (எ)

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்
மாமுனிவர் சித்தராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்
கற்பனை கடந்த செல்வமாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளி லெண்ணெயுட
னுயிர் போற் கலந் தெந்நாளுந்
துரிய நடுவூடிருந்த பெரிய பொரு
ளியா ததனைத் தொழுதல் செய்வாம்.

(பொ-ளிர) வேதமுடிவில் விளங்குவதாயும் யாவராலும் அறிதற்கரிய நிறைவுடையதாயும் ஒன்றானும் வேறுபடா ஆனந்தமாகியும் மூன்றுவிதக் கலப்புடையதாயும் நின்ற துரிய பதப் பொருளைத் தொழுவாம்;எ-று.

(க-ரை) இறைவனது வியாபகத்தை நோக்க ஏனையவெல்லாம் அதனுள்அடங்குதலான் அவை தம்மின் மேற்பட்டிருக்கும் இறைவன்றன்மைகளை உணர்தல் செல்லாவென்பார் 'தெரிவரியபூரணமாய்' என்றார். ஒரு காரணத்தானும் ஆக்கலானும்பெருகும் உலகச் செல்வம் போலாது அவற்றைக் கடந்திருத்தலில் இறைவனை விதப்புக்கிளவி கொடுத்து மறுமைக் கட்பெறுஞ்செல்வமெனக் கூறினார். உலகத்துச் சமயிகளாவார் கூறுந் தங் கடவுளுக்கும் உலகுயிர்க்கு முள்ள இயைபெல்லாம் வேற்றுமை,ஒற்றுமை,வேற்றுமையொருமை(பேதம், அ

பேசம்,பேதாபேதம்)என்னும் மூன்றனுள் அடங்குவனவாம்.
சிலர் வேற்றுமை யியைபும்,வேறுசிலர் ஒற்றுமை யியைபும்,
மற்றுஞ் சிலர் வேற்றுமை ஒருமை யியைபுங்கூறித் தருக்குவ
ரேயன்றி யிம்மூன்றியைபையும் சித்தாந்த சைவர்களைப்போ
லொருங்குகூறி மகிழ்ந்தாரிலர். அங்ஙனம் கூறும் ஒவ்வோ
ரியைபும் அவர் உரைக்குங் காட்டுக்களால் இழுக்குறலான்,
அவற்றையெல்லா மறுத்து நிலைபேறுடைய மூன்று காட்டுக்
களான் அவ்வியைபை ஈண்டாசிரியர் நிறுவி இனிது விளக்கி
னர். பொன்னும் பணியும்போல் இறைவனும் உலகுயிரும்
ஒற்றுமை யியைபு (அபேதசம்பந்தம்) உடையன என்பார்க்
குப் பொன்னைப் பணியாகச் சமைத்தவழியும் பொன்றன்மை
எட்டுணையும் வேறுபடாது உருவு திரிதன் மாத்திரையே
போலத் தூயனாகிய இறைவன் உலகுயிராகத்திரிந் தவழியவற்
றின்கட்பேய்மை காணப் பெறுமையும், வரம்புப்படா இறைவ
ன்றன்மை உலகுயிரினிடத்து வரம்புப்பட்டுக் கேடுறலும்,
வேறுபாடின்மை வேறுபடுதலும் போல்வன கூறவேண்டுத
லின் அது சாலாமை யறிக; அஃதன்றியும், பொன்னைப்பணி
யாக ஒருவன் ஆக்குதல்போல, இறைவனையும் அங்ஙனம்
ஆக்கினர் யார்கொல்? எனக்கேட்கவும் படுதலின் அவர் ஒற்
றுமை யியைபுக்குக் கூறுங் காட்டுப் போலியாமென் றறிந்
தீண்டாசிரியர் 'உடலுயிர்' உவமை கூறுவாராயினர். உயிர்
பிரிந்தவழி உடற்கொருவினை நிகழ்ச்சி காணப்பெறுமையான்
அவ்வினைநிகழ்ச்சியை உடலகத்தினின்று செய்யும்பொருளே
உயிரெனப்படுவது. அவ்வுயிர் உடலகத்தியங்குங்கால தான்
வேறு உடல்வேறு என்னும் வேற்றுமை யுணர்வுகோடலின்றி
மாளிகை யகத்துள்ள மகனொருவனைப் புறத்தான் ஒருவன்
வந்துநின்று "மாளிகையே! மாளிகையே" எனக்கூவ அப்
பெயர்க் குரியனல்லாத அகத்தான் "யாரையோ?" என
விடைகொடுக்கு மாபோல உடற்குறு பெயரால் 'சாத்தா!
சாத்தா' என விளித்தவழி அப்பெயர்க் குரியதல்லா உயிர்
'யாரை?' எனப்போந்து தன் ஒற்றுமை யியைபை விளக்கு
தல்போல, இறைவன் உலகுயிரிற் கலந்துநிற்கு முண்மை
யியல்பும் விளங்கற்பாலதென்பது; இங்ஙனம் ஒற்றுமையா
கக் காணப்பட்ட உடலுயிர் பொருளான் ஒன்றாகாது இரண்
டேயாதல்போல இறைவனும் உலகுயிரும் பொருளா னிரண்
டேயாம். இங்ஙனமா நிற்கு மிறைவன் வேற்றுமையா நிற்
குமாற்றிற்கு 'இருள்ஒளி' உவமைகூறுவார் மதம் அடாதெ
ன்பது, "எம் இறைவன் அரு, உரு, அருவுரு என்னும் மூன்
றியல்பினுள் உருவமாத்திரையே யுடையனாதலின் வேறுகூறு
லதமையாது; இருள் பரவியவிடத்து ஒளிஇல்லாமைபோல
வும்ஒளி துலங்குமிடத் திருள்மயங்காமைபோல்வும் உலகுயி
ர்க்கண் இறைவனும் இறைவன்கண் உலகுயிருமில்லை" யென்
றவர் கூறுமாற்றான் அறிந்துகொள்ளப்படும். அரு, உரு, அரு
வுரு என்னும் மூன்றியல்பினுள் இறைவனொன்றே யுடையா
னெனின், அவனது, வரம்பிலாற்றலுடைமைக்கு அஃதிழு
க்காமாதலானும், உலகுயிர்க்கண் இறைவனும் இறைவன்கண்
உலகுயிரும் இல்லையெனின், அறிவுந்தொழிலுமில்லா அவை
யியக்க இயங்கினல்லது தாமே யியங்கு மாற்றலுடைய வன்
மையின் அவற்றை யியக்குவான் ஒருவன் வேண்டுதலானும்,
அவ்வாறியச்குதற்கு அவற்றின்கண் யாண்டும் அவன் நிரந்தி
ருத்தல் வேண்டுதலானும், வியாபக இலக்கணமுடைய இறை
வனுக்கு அது பொருந்தாமையானும் அங்ஙனங் கூறுவார்
மதம்போலியென்றொழிக. பின், எள்ளின் எண்ணெய் உவ
மையே அவ்வேற்றுமை யியைபை விளக்குவதா மென்பது,
அவை யிரண்டும் வெவ்வேறு பொருள்களாயினும் எள்ளின
னுக்கடோறும் எண்ணெயும் வியாபித்தல்போல உலகுயிர்
கண்யாண்டும் இறைவன் பரந்துநிற்கும் இயல்பின் சண்ண
த்துக் கண்டுகொள்க. அற்றேல், உடலுயிர் உவமைக்கும் இத
ற்கும் வேறுபாடென்னையெனின்;—உடலின்பெயரால் அழை
த்தவிடத்து உயிர் விடைகொடுத்துத் தன்ஒற்றுமையியைபை
வெளிப்படுத்தியது; எள்ளின் எண்ணெய் உவமையில் வெவ
வேறான இருபொருள் கலந்து நிற்றன்மாத்திரையேகூறியது
இதுவே வேற்றுமை யென்றறிக. இனி, இறைவனுக்கும் உல
குயிர்க்குமுள்ள வேற்றுமை ஒருமை யியைபிற்குச் சொ
பொருளுவமை கூறுவார் மதமும், சொல் என்பது பொருளை
யறிதற்கிட்ட குறி யாதலான் சொல் லுரைத்தமாத்திரை
யானே அதுவேறொன்றையும் விளக்குதலின்றிப் பொருண்
மாத்திரையே விளக்குதல்போல உலகுயிரும் இறைவனையறி
தற்கிட்ட குறி யீடாமெனப்பட்டு அவை கருவியாமாதலின்
அவற்றுள் ஒன்றான உயிர் முத்தியெய்துதலும் கடவுளை வழி
படுதலும் பிறவும் வாளாசொன்மாத்திரையேயன்றிப் பொரு
ளின்மையானும, பொற்பணி கூறுவார் மதத்தொடு பட்டு
எல்லாம் இறைவனேயாய்ப் பிறிதொருபொரு ளின்மையாய்
முடியுமாதலானும் அது போலியெனமறுக்க. மலர்மண உவ
மையே அவ்வேற்றுமை ஒருமை யியைபைச் செவ்விதின்
விளக்குவதாமென்ச. மலரின்கட்டோன்று மணம் அம்மலரு
மாகாது அதனின் வேறுமாகாது அதனுள் யாண்டும் இயை
ந்தும், அதன்மேல் விரிந்து பரந்தும் கமழ்தல்போல இறை
வன் உலகுயிருமாகாது, அதனின் வேறுமாகாது அவற்றொ
டுகலந்து அவற்றின் மேலும் விரிந்து பரத்தல் இனிது
விளங்கும். இவ்வுவமை இறைவன் பந்தத்தின் கண் உலகு
யிரொடு கலந்து நிற்குமுறைமையையும், முத்தியின் கண்
நிற்குமுறைமையையும் இனிது விளக்குதலும் கருதற்பாலது.
முகையின் கண் அதன்மணம் தொக்குக் கமழ்தல்போல
இறைவன் பந்தத்தின் கண் தன்றன்மை வெளிப்படாது
கரந்து கலந்து நிற்றலும் மலர்ந்தவழி உள்ளும்புறம்பும் பர
ந்து கமழ்தல்போல முத்தியின் கண் தன்றன்மை வெளிப்
பட்டுத் தோன்ற நிற்றலும் அவற்றிடை நிகழும் இயைபுக
ளா மென்றறிக. (அ)

தொடரும்.

R. S. வேதாசலம்பிள்ளை.

நகைச்சுவை.

ஒரு குரங்கும் அழுக்குத் தலை மாணுக்கனும் சந்தித்தல்.

குரங்கு.—பிள்ளாய்! எங்கு போகிறாய்.

மாணுக்கன்.—பள்ளிக்கூடத்திற்குப் போகிறேன்.

குரங்கு.—அங்குபோய் என் செய்வாய்?

மாணுக்கன்.—புத்தகம் எடுப்பேன் படிப்பேன்.

குரங்கு.—ஆனால், நானும் உன்தலையில் ஒருபடிப்பேன் எடுப்பேன்.

R. S. V.

# உண்மை விளக்கம்

## எனும்

## சித்தாந்த தீபிகை.

1897௵ ஜூலை௴ 21௳ புதன்கிழமை.

### அன்பு.

அன்பென்பது ஒரு பொருள் காரணமாகப் பிறிதொன்றற்கு உளதாம் உள்ள நிகழ்ச்சி. இஃது, உலகத்துள்ள நிலையியற்பொருளும் இயங்கியற் பொருளுமென்னும் இருபாலனவற்றுள் பின்னதன் பால் நிகழ்வதாம். நிலையியற்பொருளென்பன பெயர்ந்து செல்லும் ஆற்றலுடையவன்றித் தாந்தோன்றிய நிலைக்களத்தவாம்; அவை, புல், பூடு, மரம், மலை முதலாயின. இயங்கியற் பொருளென்பன எறும்புமுதல் யானையீறாகக் கிடந்த விலங்கினத்தவும், கொசுகு, ஈ, சிட்டு முதல் பருந்தீறாகக் கிடந்த புள்ளினத்தவும், கோற்புழுமுதல் பாம்பீறாகக் கிடந்த ஊர்ந்து செல்லினத்தவும், கயல்முதற் சுறவீறாகக் கிடந்த நீர்வாழினத்தவும் குரங்குமுதல் மக்களீறாகக் கிடந்த பகுத்தறியினத்தவுமென ஐந்து பகுதியவாம். மறித்தும் இவ்வன்பு இம்மைக்கே யுரியதூஉம், மறுமைக்கே யுரியதூஉம், இம்மை மறுமை யிரண்டற்கு முரியதூஉ மெனும் வகையான் முத்திறத்ததாம். மக்களொழித் தொழிந்த இயங்கியற் பொருளாவன வெல்லாம் இம்மை யன்புசெய்தற்குரியன, மக்களுள்ளுங் குரங்குப் பிறப்பினீங்கிப் புதிதாய் வந்த ஒரு சாரார் இம்மை யன்பே செலுத்துவர்; இவர் மக்கட் பிறப்பினருட் கடையாயா ரெனப்படுவர்; தலையாயா ரென்பார் மலங்கழன்று அறிவுச் சுடர்கொளுவி இறைவன் பாற்செலுத்தும் மறுமை யன்பொன்றே யுடையார்; இடையாயா ரெனப்படும் எம்போல்வாரே இம்மை மறுமை யென்னும் இரண்டினும் அன்புடையா ரெனப்படுவர். மக்களொழித் தொழிந்த இயங்கியற் பொருளாவன வெல்லாம் தாய், தந்தை, மனைவி, கொழுநன், மக்கள் கிளையென்னும் பிறப்புரிமையால் இயல்பில் அன்புடையவாய் ஒன்றற்கொன்று வேண்டுவன விரும்பித் தேடியளித்துப் போதுவவன்றி, "இறைவனுள" னென்றும் "அவனை யாம் வழுத்தற்பால" மென்றும் உணர்ச்சியுடையவாய் மறுமை யன்புசெலுத்துந் தகைமையவல்ல. மக்களுட் டலையாவார் இவ்வுலகம் ழிந்துபோந் தன்மைத் தென்றும், அவ்வாறழியும் அதன்பால் அன்புவைத்தல் பயனுடைத்தன்றென்றும் அதனைவெறுத்து, நிலைபேறுடைய இறைவன்பால் மறுமையன்பொன்றே செலுத்தும் பெருந்தகையாளர். இடையாவாரே "ஆற்றிலொருகால் சேற்றிலொருகால்" என்று பெரியாருரைத்த உரைக்கிணங்க இம்மை, மறுமை இரண்டினும் அன்புவைத் தடையார். இம்மை, மறுமை யன்பிரண்டும் மற்றும் ஒரு வகையாற் பொதுவுஞ் சிறப்புமென இரண்டு பெற்றியவாம். இம்மைப் பொதுவன்பென்பது உறவினர் மாட்டும் உற்றார் மாட்டும் பிறர்மாட்டும் ஒரு தன்மைத்தாய் நிகழ்வது. இம்மைச் சிறப்பன்பென்பது யாவர் மாட்டும் ஒரு தன்மைப்படப் பரந்து சேறலின்றி இம்மைப் பொருளாவனவற்றுள் யாதானு மொன்றன்பால் சிறந்து நிகழ்வது; அது தன்னுயிர்மேற்றானும், உடல் மேற்றானும், மக்கள் மேற்றானும், மனைவி மேற்றானும் ஒன்றன்பால் உறுமாற்றில் வைத்துக் கண்டுகொள்க. மறுமைப் பொதுவன்பென்பது எச்சமயிகளாலும் ஏற்றுக்கொள்ளப்படும் கடவுட் பொதுத் தன்மைகளான "தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், வரம்பிலின்பமுடைமை, வரம்பிலாற்றலுடைமை, பேரருளுடைமை" முதலாயினவற்றை யுடைய பொருளெதுவோ அது கடவுளென்னு மாத்திரையே யுணர்ந்து மற்றொன்றானும் அப்பொருளைத் தாம் வேறுபடுத்தாது அதன்பாலன்புறுத்தல். மறுமைச் சிறப்பன்பென்பது, பொதுவன்பாற் பயனின்றென்றுணர்ந்து முற்கூறிய பொதுவிலக்கணங்களையுடைய பழம்பொருட்கு வடிவு, குணம், பெயர் முதலாயின கூட்டி யதன்பாலன்புறைத்தல். நடுவுநிலைமையோடு உண்மைநெறியான் நோக்குவார்க்குப் பல்வேறு வகைத்தாய்ப் பிரிவுறும் அன்பு ஒரு பொருட்கட் சிறப்பாகவே யுறைக்குமன்றிப் பொதுவகையான் நிகழ்தலிலதென்பதூஉம் அவ்வாறு நிகழினும் அது அன்பெனும் பெயர்க்குரித்தாகா தென்பதூஉம் இனிது விளங்கும். இது பற்றியன்றே, பல்வகைச் சமயிகளும் பொதுவிலக்கணங்களை யேற்றுக்கொள்ளினும் அந்நெறியே நில்லாது தத்தமக்கு அன்பு இனிது செல்லும் வழியாற் சிறப்பிலக்கணங்களுங் கூறிக்கொண்டு அப்பொருளை வழிபடுவாராயினர். இப்பரிசறியாதார் பல்வகைச் சமயங்களையும் இகழ்ந்து சமயங்கடந்த நிலையில் தாம் இருப்பதாக எண்ணித் தருக்கிக் களிப்பர். அவ்வாறு கூறுவார் தாமும் நுண்ணிதாக அளந்தறிவரேல் தம்மன்பு பொது வகையால் நிகழா தென்பதும் சிறப்புவகையால் நிகழுமென்பதும் இனிதின் அறிந்துகொள்வரென்க. எனவே, ஒரு சமயத்தையும் தழுவாது கடவுளை வழிபடுதற்கு ஒருவரானும் இசையாதென்பதும், அவ்வாறு கூறுவார் கூற்று "யாம் ஒருநெறியானு மின்றித் தில்லையம்பலம் போதும்" என்பார் அரியவுரையோ டினப்பட்டுப் போலிப்படுமென்பதும் தெளிய விளங்கும். ஈண்டுரைத்துப் போந்தவற்றால் அன்பினிலக்கணம் இனிது விளங்குதலாலும், உலகத்துப் பரந்து பட்டுக்கிடக்கும் பல்வகைச் சமயங்களுள் எதன் வழித்தாகச் சிறப்பன்பு செலுத்தற் பாலதென்பதும் எச்சமயத்தான் வீடுபேறுதை வரப்பெறு மென்பதும் அறிந்துகோடல் எடுத்தபொருளோ டியைபுடைத்தா யிருத்தலாலும் அவ்வச் சமயக் கடவுளரிலக்கணங்களை யாராயவே அவை யினிது விளங்குமென்பது.

### அன்பு செலுத்தப்படுவோர்.

பன்முகச் சமயநெறியாளராலும் தத்தங்கடவுட்குக் கூறப்படும் பொதுவும் சிறப்புமாம் இலக்கணங்களுள் எச்சமயத்தார் தந்தலைவற்குக் கூறும் இலக்கணம் அளவையோடியைபுடைத்தாமென்பதை நோக்குவார்க்குச் சைவசமயமே அங்ஙனமாமென்பது இனிதுவிளங்கும். இதை யுணர்ந்தே பெரியோரும் "சைவநெறியேயுய்யுநெறி" "சைவசமயமே சமயம்" "சைவத்தின்மேற் சமயம்வேறில்லை" என்றற்றொடக்கத்த உரைகளால் உண்மை வெளிப்படுத்தியருளினர்கள். இதைப் பல்வகைச்சமயங்களையும் எடுத்துக்காட்டிவிளக்கின் மிகவிரிந்தேரடுமாதலால் சித்தியார் பரபக்கத்தில் அவ்வாறு விரியக் காட்டுதும். ஈண்டுப் பொதுச் சிறப்பிலக்கணங்களிற் சிலவற்றை யாராய்வாம். பொது விலக்கணங்களுள் இரண்டொன்று காட்டவே ஏனையவுமடங்கும். அவற்றுள், தூயவுடம்பினனாதல், முற்றும் உணர்தல் என்னும் இரண்டு பொது விலக்கணங்களாலும் முதற்பொருளை யளந்தறிதும். கடவுளெனும் பொருள் இவ்விரண்டிலக்கணங்களுக்கும் இலக்காயிருத்தல் வேண்டுமென்பது யாவரும் ஒப்புக்கொண்டதன்றே! தூயவுடம்புடைத்தாதலென்பது, எழுவகைப்பிறப்புள் ஒன்றிற் பிறவாமையும் பின்னர் இறவாமையுமாம். முற்று முணர்தல் என்பது, ஒருபொருளாயும், அப்பொருளினுள்ளாயும், அதற்குப் புறம்பாயும் நிறைந்து நின்று அவற்றிற்கு வேண்டுவனவற்றை யறிந்தாங்கறிதல். இவ்விரண்டிலக்கணங்களும் இல்லாத பொருள் யாது அதுவே உலகியற் பொருளாம். பாஞ்சராத்திரம் முதலாகக்கிடந்த புறச்சமயிகள் அனைவரும் தத்தங் கடவுளர் பிறந்தாரிறந்தா ரென்றுதாமே கூறுதலானும், சைவசமயிகள் மட்டும் தம்மிறைவன் பிறந்தானிறந்தா னென்று கூறாமையானும் சைவமொழித் தொழிந்த சமயிகள் வழிபடுங் கடவுளரெல்லாம் பிறந்திறக்குந் தன்மையரான மக்களே யென்பது பெறுதும். அற்றன்று, அக்கடவுளரெல்லாம் தம்மடியாரைக் காப்பாற்றும் பொருட்டுப் பிறந்தா ரென்று அவர் கதைகளிற் கூறப்படுதலால் நீயிர் கூறியது பொருந்தாதாம் பிறவெனின்;—நன்று கூறினாய், அவர் "வரம்பிலாற்றலுடைய" கடவுளராயின் தாம் விரும்பியாங்கு இடருறாது பல்வேறு வடிவுகோடல் சாலுமாகவும், அல்லல்வாய்ப்பட்டுப் பிறந்திறத்த லென்னையோவென்பது. முக்கட்பெருமான் சிறுத்தொண்டர் முதலிய அடியார் பொருட்டுத் தாம் வேண்டும் வடிவுடையராய் வந்தமை காண்க. அல்லல் வாய்ப்பட்டுப் பிறத்தல் குற்றமுடைத் தெனின் யாண்டும் நிறைந்திருக்கும் இறைவன் ஆண்டில்லை யெனப்பட்டு வழுவாமெனின்;—அற்றேல், அவ்வடியார் துயர்தீர்த்தற் கருவிப்பொருளினும் அவன் இருத்தல் பெறப்படுதலின் ஆண்டிருந்தே அவற்றை யியக்கிப் பயன் விளைத்தல் சாலுமாகவும் பிறந்திறக்க வேண்டிய தென்னையோ வென்பது. அதன்றியும், கடவுட்டன்மையை நிறுவும் இலக்கணங்களை ஒட்டியறியாது, அடியார்க்காக எம்மிறைவன் பிறந்தானென் றொரு சமயிகூற அதுபோலவே பிறிதொரு சமயியும் கூற அவற்றை ஏற்கின் உலகிற்கு ஒரு முதற் கடவுள் என்பது போய்ப் பலர் கூறும் பலரையுங் கடவுளெனக் கொள்ளும் அனேகேஸ்வரவாதப் போலியாய் முடியுமெனக்கூறி மறுக்க. ஆதலினன்றே, பிறப்பிறப்பெய்தாமையைச் சிறந்த இலக்கணமாகக் கொண்டு முக்கண்ணனுக்கே கடவுட்டன்மை கதித்தலை "எல்லார் பிறப்பு மிறப்பு மியற்பாவலர் தம், சொல்லாற் றெளிந்தே நஞ்சோணேசர்— இல்லிற், பிறந்த கதையுங்கேளேம் பேருலகில் வாழ்ந்தண்டிறந்த கதையுங் கேட்டிலேம்" என்று ஆன்றோர் விளக்கி உண்மை தெளித்தார்கள். பிறப்பெய்தியாற்குத் தன்வயத்தனாதலின்மையிற்றுன் பிறர் வயத்தனாய் ஐந்தவத்தையானும் உணர்வுதிரிதலிற் செயற்கை யுணர்வினனாய், வரம்புப்பட்ட மெய்யுடனியைதலின் முற்றுணர் விலனாய், பலவகைப் பற்றுடையனாதலின் பாசங்களையு முடையனாய், இடை யிடையே பலதுன்பமெய்தலின் வரம்பில் துன்பமுடையனாய், வெகுளியாதி முக்குற்ற மெய்தலின் அருளிலனாய், தன்னினும் வலியுடையானிருத்தலின் ஆற்றலிலனாய் மக்கட்டன்மை யெய்துதலின் அவரெல்லாங் கடவுளராகாரென்க. இதன்றியும், வைகையிடைக்க மண் சுமந்த ஞான்றுவழுதி தன்கைக்கோலால் புடைத்தஅடி "தார்மேனின்றிலங்குபுயவழுதி மேலுந் தன் மனைமங்கையர் மேலுமமைச்சர் மேலு, மார்மேலுஞ் சென்று பொருஞ்சேனை மேலுமயன்மேலுமான்மேலு மறவோர் மேலுந், தேர்மேல் வெம்பகன் மேலுமதியின்மேலுஞ் சிறந்துள விந்திரன் மேலுந் தேவர் மேலும், பார்மேலுங் கடன்மேலு மிரங்கண்மேலும் பட்டதரன்மெய்யிலடிபட்டபோதே" என்றவாறுபோலவும் அருச்சுனன் வில்லா லடித்த அடி "வேதமடியுண்டன விரிந்த பலவாகம விதங்களடியுண்டன வொரைம், பூதமடியுண்டன விநாழிகை முதற்புகல் செய்பொழுதொடு சலிப்பில் பொருளின், பேதமடி யுண்டன பிறப்பிலியிறப்பிலி பிறங்கலரசன்றன்மகளார், நாதனமலன் சமரவேட வடிவங்கொடு நரன் கையடியுண்டபொழுதே" என்றவாறு போலவும் இருமுறையாண்டும்பட்டு முக்கட்பெருமான் நிறைவை விளக்கியபோலப் பிறகடவுளர் கதைகளில் அங்ஙனங் கூறப்படாமையால் அவரெல்லாம் கடவுளராதலியாண்டையது தென்க. கறைமிடற்றண்ணலே கடவுளென்பதைப் பொது விலக்கணந் தானளந்து காட்டி நிறுவினும், இனிச் சிறப்பிலக்கணத்துட் சிலவற்றுனும் அங்ஙனே அளந்துரைப்பாம்.

† முக்கண் ணுடைமையுஞ் செக்கர்ச் சடையும்
மதிபொதி முடியு நதிவளர் சென்னியும்
விடைகடா அய்ச்செல்லும் மிடலுங் கடல்படு
நஞ்சு நிறுத்திய களமும் எஞ்சிய
இடையுடை மடவரல் கெழுமிய புடையும்
அன்னவள் விழிக்குடை மானுந் துஞ்சிய
மழுவுங் கொழுந்துடை எழுநா மேனியும்
தமருகக் கையுந் தழல்கலி கையும்
அஞ்சலென் கையும் எஞ்சா வரந்தரு
பஞ்சின் மெல்லிய பல்விரற் கையும்

† இவ்வாசிரியப்பாஇவ்விடயம் ஸ்ரீநூர் இயற்றியது.

ஊன்றிய கழலுந் தூக்கிய வடியும்
தேன்றுளி கொன்றையும் ஊன்றெடு தலையும்
எற்புச் சட்டகம் முத்தலைச் சூலம்
உட்குறு தலைப்பிணை பெட்புறத் தாங்கலும்
கரியுரி போர்த்த விரிவறு பெருமையும்
அரவரைக் கசைத்த ஆண்மையும் அகல்விசும்
பணைதரு முடிக்குலங் கடுப்பச் செறிவுறு
புள்ளிப் புலித்தோல் போற்றிய மருங்கும்
கள்ளப் பாசங் கழித்தலி னின்பத்
தெள்ளமிழ் தருத்தலில் அரன்சிவ னெனும்பேர்
கொள்ளலும் பிறவுங் கோனிவ னெனவே
விரித்துரை சிறப்புக் குறிகளா மெனத்
தெரித்துரை செய்குவர் தெள்ளறி வோரே.

என்றிக்கூறியவடையாளங்களனைத்தையும் ஒருங்கே கூறப்புகின் வரம்பின்றிவிரியுமாதலின் ஈண்டுச் சிலவற்றைத் தந்து காட்டியேனையவற்றைச் சமயநேர்ந்துழி விரித்துரைப்பாம். உலகத்தார்க்கொழுக்கம் நிகழ்விக்கும் ஒளிதரும் பொருள்கள், ஞாயிறு, திங்கள், தீயென்னும் மூன்றுமேயாம். இம்மூன்றையும் சைவசமயிகளைப்போலவே தத்தங் கடவுளருக்குங் கண்களாகச் சொல்வார் வேறு பிறருளராயினும், அவ்வாறு தாஞ்சொல்வதற்கு இதுகாறும் அவர் மெய்ச்சான்று ஒன்றேனும் அக்கதைகளின் றெடுத்துக் கூறக்கண்டிலம்; அன்றி முக்கணன் எனப் பெயர் கூறியாதல் தங்கடவுளையழைக்கக் கேட்டிலம். இதனால், அவர் கடவுளருக்கு அவர் வாய்மொழிபோலவே இறைமை தலைப்பட்டிலது. முக்கட் பெருமானுக்கு அபபெயர் வாய்த்தவாய்மை யன்றியும் அவன்து மூன்று கண்களுமே ஞாயிறு திங்கள் தீ என்பதற்கு உமை கண்புதைத்த ஞான்று நிகழ்ந்த நிகழ்ச்சியே கரியாயதுணர்க. இத்தகைய கதை ஒன்று பிறர் புராணங்களில் காணப்பட்டிலது. அவ்வாறிருந்தால் நாம் அதைச் சென்னிமேற்கொண்டு வழுத்துவாம். நஞ்சு நிறுத்திய களம் அடியார் பொருட்டு அவர்க்கு வருந்துன்பங்களைத் தான் தன்னகத் தடக்கிஅவர்க்குப் பேரின்பமளித்தலை விளக்கும். பாசத்தை யரித்தலில் அரன் எனுந்திருப்பெயரும், அவ்வாறரித்த மாத்திரையினமையாது பேரின்பத்தையும் உடன் ஈந்துதுய்ப்பித்தலின் சிவனெனுந் திருப்பெயரும் உடையவாபோலப் பிறருக் கித்தகைய பெயர்களில; அவ்வாறவர் புரிபவராயின் இடுகுறியாய் இப் பெயர்களெய்துதற்கோர் இடையீடின்மையறிக.

மேற்கூறிப் போந்த பகுதிகளால் அன்பு இன்னதன்மைத்தென்றும் அவ்வன்பு செலுத்தப் படுந்தன்மைக் கடவுள் சைவ சமயத்திற் கூறப்படும் சிவபெருமானே யென்றுங் காட்டப்பட்டது.

R. S. வேதாசலம்பிள்ளை.

---

## விநாயகபுராணக் காப்புச்செய்யுள்

காப்புச் செய்யுள்.

அகரமெனவறிவாகி யுலகமெங்குமமர்ந்
தகரவுகாரமகரங் கடம்மாற்
பகருமொரு முதலாகி வேறுமாகிப்
பலவேறு திருமேனி தரித்துக்கொண்டு
புகரில் பொருணன்கினையு மிடர்தீர்ந்தெய்தப்
போற்றுநருக்கறக் கருணைபுரிந் தல்லார்க்கு
நிகரின் மறக் கருணைபுரிந் தாண்டுகொள்ளு
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்.

இது விநாயகக் கடவுளை வாழ்த்திய தென்றறிக. "தெய்வவணக்கமுஞ் செயப்படு பொருளு, மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும்" என்றா ரிலக்கணநூலாராசலி னிஃதமையுமென்க. தெய்வம் தனக்கென வொருதலைவனை வேண்டாதது. எனவே, தானே யுலகுக்குத் தலைமையாயுள்ளது என்பது பெறப்படும். இவ்வமைதிகள் விநாயகர் என்னுந் திருநாமமுடையாரிடத்திற்றானே சேர்க்கப்படுகின்றது. எங்ஙனமெனின், விநாயகர் என்பது தமக்கொரு தலைவரை வேண்டாதவர் என்னுஞ் செம்பொருள்பட வமைந்திடல் காண்க. ஆகையால், இவரே தெய்வ வணக்கத்துக்கு விஷயமாகிய பரமகாரண வஸ்துவாயினர். இத்தெய்வ வணக்கத்துள், தெய்வமாகிய விநாயகரை "அகரமென வறிவாகி யுலகமெங்கு மமர்ந்து" எனக் கூறினமையா லதனுண்மையை யினிவிரிப்பாம். ஈண்டு அறிவாகி யென்றதே விநாயகரிடஞ் சேர்ந்தது. இவ்வறிவாந் தன்மைக்கு அகரம் உபமானமாயிற்று. உபமான ஸ்தானத்தினின்ற அகரம் எழுத்துகளுக்கு முதலாகி அவைகளை யியக்குதல்போல அறிவாகிய விநாயகர் உலகத்துக்கு முதலாகி, அதனை யியக்குமாறறிக. அகரம் எழுத்துக்களை யியக்குமுண்மையை "அகரமுதல வெழுத்தெல்லாம்" என்று குறளாசிரியருங்கூறியருளினர். அவரே "ஆதிபகவன் முதற்றேயுலகு" என உபமேயஸ்தானத்தினின்ற அறிவு அல்லது விநாயகர் என்னும் ஆதிபகவன் உலகத்தை யியக்குதலையும் விதந்தருளினர். இக்காப்புச் செய்யுளில் "உலகமெங்குமமர்ந்து" என் விரித்தமையே அறிவாகிய விநாயகர் சகலத்தையு மியக்குதற்கு ஆதாரவாகியது. இன்னுமிவ்வுண்மையை "அகரவுயிர்போ லறிவாகியெங்கு, நிகரிலிறை நிற்குநிறைந்து" என்னுந் திருவருட் பயனானுந் தெளியலாமென்க. இத்திருவருட்பயன் குறளாசிரியராகிய வள்ளுவனார் கூறிய அறம்-பொருள்-இன்பம் என்னு முப்பாலுக்

கப்பாலதாகிய வீட்டையே விளக்கவந்ததென்க. இதனையாக்கியோர் சந்தானகுரவரு ளொருவராகிய உமாபதி சிவமென்றறிக. இவரது திருவாக்கிற்போந்த "அறிவாகி" என்றதனையே யிவ்வணக்கச் செய்யுளில் "அறிவாகி" என்றருளிச்செய்தவாறறிக.

இனி அகரம் எழுத்துக்களை யியக்குமாறும், அறிவாகிய முதற்கடவுள் உலகத்தை யியக்குமாறு மினிதுபோதர வீண்டு விரிப்பாம். எழுத்துக்கள் உயிரும், மெய்யுமென விருவகையாம். இவற்றுள், உயிர்கள் தாமே யொலிப்பனவும், மெய்கள் உயிர்களொலிப்பித்தா லொலிப்பனவுமாம். உயிர்க ளகரத்தின் பேதமாகையா லவை யத்தனையும் அகரமேயாம். எழுத்துக்களை யியக்குவது அகரமொன்றேயென வெல்லா நூல்களுங் கூறுதலா லேனையுயிர்களை யவ்வகரத்தின் பேதமென யாம்கூறியது ஸாமஞ்சஸமாயினவாறறிக. அதனால், அகரம் எழுத்துக்களை யியக்குகின்றதெனல் மெய்யெழுத்துக்களையே யென்றறிய வேண்டியது. மெய்யெழுத்துக்க ளரைமாத்திரையுடையன. ஒலிக்கு மாற்றலாகிய வரைமாத்திரையோடு கூடியிருப்பினும் அவையொலிப்பிக்கு மாற்றலினதாகிய வொரு மாத்திரையோடுகூடிய அகர முபகரிப்பினல்லது தாமே யொலியாவென்க ஒலிக்குமாற்றலினவாகிய மெய்யெழுத்துக்கள் அரைமாத்திரையும், ஒலிப்பிக்கு மாற்றலினதாகிய அகரம் ஒருமாத்திரையு முடைமையா லிரண்டுங்கூடியவழி யொன்றரைமாத்திரையாக வுச்சரிப்புண்டாயிடுதலில்லை. ஒரு மாத்திரையாக உச்சரிப்பெழலேயமையும். ஒரேமாத்திரையாக வுச்சரிக்கப்படுவதால் ஒலிக்குமெழுத்தினையும், ஒலிப்பிக்குமெழுத்தினையு மோரினமென்றல்கூடாது. இரண்டும் விஜாதிகளே. ஒலிக்குஞ் சாதியொன்றும், ஒலிப்பிக்குஞ் சாதி மற்றொன்றுமாம். இந்த விசாரத்தால், "அகர முதல வெழுத்தெல்லாம் - அகர வுயிர்போல் - அகரமென" என்னும் பிரயோகங்கள் பயன்பட்டவாறறிக. அன்றி, எடுத்துக்கொண்ட வுபமானம் இனிது விளக்கப்பட்டவாறுமறிக. அதுநிற்க.

அறிவாகிய முதற்கடவுள் உலகத்தை யியக்கும்விதத்தையுங் கொஞ்சம்யோசிப்பாம். உலகம் என்பது சேதனம்-அசேதனம் என விருவகைத்து. சேதனம் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலாகலர் என்னு மூவித வுயிர்வர்க்கங்கள். அசேதனம் மலமாயா கர்மங்களும், அவற்றின் காரியங்களுமாம். சேதனா சேதனங்களாகப் போந்த பிரபஞ்சம் தானே யியங்காது. சேதனப் பிரபஞ்சத்திற்கு ஞானமும், அசேதனப் பிரபஞ்சத்திற்குக் கிரியையுங் குணமாயுள்ளன. சேதனமாகியவுயிர் ஞானத்தோடு கூடியிருப்பினுந் தானேயறியாது. அசேதனமாகிய மலமாயாதிகள் கிரியையோடு கூடியிருப்பினுந் தாமேயசையா. அரைமாத்திரை யொலியோடுகூடியு மெய்யெழுத்துக்கள் தாமே யொலிக்காதவாறு சேதனா சேதனங்களாகிய பிரபஞ்சபேதம் தானே யியங்காவென்க. அறிவோடு கூடிய சேதனப் பிரபஞ்சம் அறிவித்தா லறியும். அசைவோடுகூடிய அசேதனப் பிரபஞ்சம் அசைவித்தாலசையும். ஞானமென்பதேஅறிவும், கிரியையென்பதே அசைவுமாம். அறிவிருந்துந் தாமேயறியாத வுயிர்ப்பேதங்களையும், அசைவிருந்தும் தாமேயசையாத தேகாதிப்பிரபஞ்சங்களையும் அறிவித்தும், அசைவித்தும் நடை பெறுவிக்கும் ஆற்றலுடைய பரசிவமே விநாயகப் பெயரா லீண்டு வெளிவந்த ஞானம் வெளியாயதென்க.

அகரம் ஆகாரமாதி வடிவங்களெடுத்துக் ககரமுதலிய மெய்களை யியக்கும்விதத்தை மேலேகூறினும். அவ்வாறேயன்றோ அறிவாகிய சிவம் எண்ணிறந்த வருள்வடிவங்க ளெடுத்துச் சீவர்களை யியக்குகின்றது. அவ்வருள் வடிவங்கள் சிவம் - சத்தி - நாதம் - விந்து - சதாசிவன் - மஹேசுவரன் - உருத்திரன் - விஷ்ணு-பிரமன் என்னும் நவவடிவங்களாம். அன்றி, விநாயகர்-சுப்பிரமணியர்-வீரபத்திரர்- பைரவர் முதலிய சிவகுமாரர்களுமாம். அன்றி, ஞானஸம்பந்தர்-வாகீசர்-சுந்தரேசர்-மணிவாசகர்முதலிய குருமூர்த்தங்களுமாம். இவ்வாறெடுத் தோதப்படு மூர்த்தங்கள்யாவும் ஏகமாகிய சிவ பரஞ்சுடரேயாம். இவற்றுள், பிரமன்-விஷ்ணு-உருத்திரன் என்னும் வடிவங்கள் சிவபெருமான் தம்மிலதிட்டித்தலைப்பெற்றுடையன. சிவம் அதிட்டிக்குஞ் சுத்த வடிவங்களை அச்சிவமேயென்று வேதம் உபசரித்தவாறறிக. இச்சிவமூர்த்தங்கள் யாவும் உயிர்களை யியக்கு மியல்பினவாதலை வேத சிவாகமங்கள் விதந்திடும். இவற்றை யியக்குதற்கு இவற்றின்மேலொருகர்த்தாவின்றெனவறிக. இம்மூர்த்தங்கள் பிதா-மனைவி-புத்திரர் என்னும் பேதங்களாகப் படிக்கப்படினும் முடிவிலொரு பொருளேயாம்.

"குலமிலான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமிலான் றனக்கென்ன வோர்பற்றிலான் பொருந்து
மிலமிலான் மைந்தர் மனைவியில்லானென வவன்சஞ்
சலமிலான் முத்தி தரும்பர சிவனெனத்தகுமே."

என்றருளிய தாயுமானவருரையே யிதற்குச் சான்
றெனவறிக. இவ்வுண்மையால், விநாயகமூர்த்தியே
அதீதவஸ்துவென வாதிக்கும் ஏதுபட்சம் வேரு
ன்றிப் பொலிவெய்தியது.

இனி உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்களையே
யியக்கல்போல் சிவமூர்த்தங்கள் சீவ பேதங்களையே
யியக்குமெனல் சித்தம். மெய்யெழுத்து அரை மாத்
திரையும், உயிரெழுத்து ஒருமாத்திரையுங்கொண்டு
முறையே யொலித்தும், ஒலிப்பித்தும் நடைபெறுங்
காலிரண்டுங் கூடியதுகொண்டு ஒன்றரை மாத்திரை
யாகாமலொரு மாத்திரையே யாகுந் தன்மையை
மேலே கூறினுமன்றோ? இதனை யுய்த்துணருங்கால்
சிவசீவர்கள் கூடியிருக்கு முறைமையு மிவ்வாறே
கொள்ளத்தக்கது. ஒற்றொலிபோன்ற சீவன் அறியு
ந்தன்மையுடையதும், உயிரொலிபோன்ற சிவம் அத
ற்கறிவிப்பதுமாம். இவ்விரண்டும் "நாழியப்பு நாழி
யுப்பு நாழியானவாறுபோல்" நிற்குநிலைமையுங் கண்
டுணர்க. இதனை நச்சினார்க்கினியாருரையானும்விள
க்குதும். தொல்காப்பியம், எழுத்ததிகாரம். நூற்
பா "மெய்யின்வழிய துயிர்தோன்றுநிலையே" என்
னுஞ் சூத்திரத்துரையில் "முன்னின்ற சூத்திரத்
தான் மெய்முன்னர்நிற்ப வுயிர் பின்வந்தேறுமென்
றார். அம்முறையே யோசையும் பிறக்குமென்றார்.
இதனான் மாத்திரைகொள்ளுங்கா லுப்புநீரும்போல
வொன்றேயாய் நிற்றலும், வேறுபடுத்துக் காணுங்
கால் விரலும் விரலுஞ் சேரநின்றாற்போல வேறாய்
நிற்றலும் பெற்றாம்" என வுரையாசிரியர் விதந்திரு
க்கின்றனர். இவருயிர்மெய்களின் புணர்ச்சிக்கட்கூ
றிய வுபமானத்தை யாம் சிவசீவர்களது புணர்ச்சிக்
கண் ணினிதுகூறினும். எடுத்துக்கொண்ட இக்காப்பு
ச்செய்யுள் அகரம் மெய்யெழுத்துக்களைப் புணர்ந்தி
யதலையே விநாயகர் உயிர்களைப்புணர்ந்து உபகரித்த
லுக் குபமானமாகக் கூறினமையால், அப்பு முப்புங்
கூடிய வுபமான மிரண்டற்கும் பொருந்தியவாறறிக.
இவ்வதிசயக் கலப்பைக்கண்டே சிவசீவர்களை இர
ண்டென்னாது வேதம் ஏகமென்றுகூறியது. இவை
களைத் தனித்தனிப் பிரித்தறியக் கூடாமை பற்றியே
மீண்டும் அத்துவிதமென்று கூறியது. இவை அறியு
ஞ்சித்தும், அறிவிக்குஞ் சித்துமாயிருக்குந் தன்மை
வேறுபாடுநோக்கியே துவிதமென்று பின்னுங் கூறி
யது. இவ்வமைதிகளை நோககுவார் சிவ சீவர்களை
அபேதபதார்த்தங்களாக வங்கீகரியாரென்க. விஜா
தியாயுள்ள விரண்டு பதார்த்தங்களின் (பிரிக்கக்கூ
டாத) ஸம்பந்தத்தாலாகிய உபசாரவபேதமே அங்
கீகரியாநிற்பர்.

இனிச் சிவம் சீவர்களை யியக்குவது தன்பொருட்
டன்று. தன் பொருட்டாயின், "வேண்டுதல் வேண்
டாமையிலான்" என்னுந் திருவாக்கழியும். அன்றித்
தான் முன்பெற்றிராத வின்பத்தைப் பின்னர் விழை
ந்தமையும், அதனாற் றுன்பமுடைமையே முன்னர்
நுகர்ந்திருந்தமையும் பெறப்பட்டுப் பதிலட்சணமு
முதுங்குன்றும். தன்பொருட்டாகிய ஸ்வப்பிரயோ
ஜனங் கேட்கப்படாமையால், பரப் பிரயோஜனமே
சித்தித்தது. அந்தப்பரப்பிரயோஜனம் சீவர்களுக்கு
உபகரித்தலேயாம். இதனால் சீவர்கள் சிவமுள்ளவ
ன்றே அச்சிவத்தி னுபகரிப்பை யெய்தற்பாலாரா
யுள்ளவர்களென்பது பெறப்படுகின்றது. இச்சீவர்க
ளுக்குப் பயன்படத்தக்க அருளாகிய குணத்தையும்
அன்றே அச்சிவம் இயற்கையாகப் பெற்றுடைய
தெனலும் ஏற்படுகின்றது. அவ்வருட்பே றெய்துத
லால் நசிக்கத்தக்க ஆணவாதிதோஷங்கள் சீவர்களு
க்கு அன்றேயிருந்தமையும் வெளியாகின்றது. இக்க
ருத்துகளையே

"அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென்றும் மெனக்கே யாண வாதி
பெருகுவினைக் கட்டென்றும் மென்னாற் கட்டிப்
பேசியதன் றேயருணூல் பேசிற் றன்றே"

எனத் தாயுமான சுவாமிகளும் வெளியிட் டிருக்கின்
றனர். இதில் "அருணூல்பேசிற்றன்றே" எனக்கூறி
யது வேதசிவாகமங்களை. வேதசிவாகமங்களைக் கட்
டளையிட்டருளியதும் பரப்பிரயோஜனமேயாகையா
லும், "இமைப்பொழுது முபகாரமல்லா லொன்றை
யியக்கா நிர்க்குணக்கடலே" என்று சிவஞானதுண்மை
கேட்கப் படுகின்றமையாலும் பதியிலக்கண மினைத்
தெனல் வியக்தமாயிற்று.

இங்கே யெடுத்துக்கொண்ட பதிப்பொருளை "அறி
வாகி" என்றே கூறியிருக்கின்றது. அறிவாகி யென்
றதனால், அது சேதனத்தை யறிவித்தலென்றே
பெறப்படும். அசேதனத்தை யறிவித்தல் பொரு
ந்தாது. இங்ஙனமாக, "அறிவாகி யுலகமெங்கு மமர்
ந்து" என்றதற்குச் சேதனாசேதனமாகிய விருவிதப்
பிரபஞ்சத்தையும் பிரஸ்தாபித்தது கூடாதெனின்,
நன்று கடாயினாய். அறிவு வியாபகமும், கிரியை
வியாப்பியமுமாகையால், அறிவாகி என்றமாத்திரத்
தானே அதிலடங்கிய கிரியையும் பெறப்பட்டவாற

றிக. ஞானம் சிவத்தின்வடிவமும், கிரியை சத்தியின் வடிவமுமாம். சிவம் என்ற மாத்திரத்தானே சத்தி அதிலடங்கியிருத்தல்போல "அறிவாதி" என்றமாத்திரத்தானே கிரியை அதிலடங்கி யிருக்குமாறறிக. இவ்வுண்மைபோதரவே கர்மம்-ஞானம் என்னு மிரண்டினையும் வேதம் பிரதிபாதிக்கின்றது. கர்மமென்பதே கிரியை அல்லது சத்தி. ஞான மென்பதே அறிவு அல்லது சிவம். சத்தி-சிவம் என்பன இரண்டுபொருள்களல்ல. தாதாந்மிய ஸம்பந்தமுடைய ஒரே பொருள். ஆகையால், கர்மமே பிரமமென்று வாதிப்பதும், ஞானமே பிரமமென்று வாதிப்பதுங் குற்றமாகாது. ஞானத்தை யங்கீகரியாது கர்மத்தைச்சாதிப்பதும், கர்மத்தை யங்கீகரியாது ஞானத்தை சசாதிப்பதுமே குற்றமாம். கிரியையாகிய சத்தியே தெய்வம்-சிவமன்று எனவும், ஞானமாகிய சிவமே தெய்வம்-சத்தியன்று எனவும் பூசலிட்ட விரண்டு முனிவர்கள் கழுகுகளாய்ப் பிறந்தெய்த்த சரிதம் திருக்கழுக்குன்ற மாகாத்மியத்தாற் பெறப்பட்டவாறறிக. இவ்வுண்மை தேர்ந்திடாமல் ஞானத்தைத் தூஷித்துக் கர்மத்தைப் பூஷிக்கும் பூர்வமீமாஞ்சையர் மதமும், கர்மத்தைத் தூஷித்து ஞானத்தைப் பூஷிக்கும் மாயாவாதியர் மதமும் வேதபாகியமென்றொதுக்குக. இவ்வுண்மையால் சிவமெனப்போந்த விநாயகர் தமதுஞானத்தால் உயிர்களுக்கறிவித்தும், தமது கிரியையால் உடன்மூதலியவைகளை யசைப்பித்தும் உபகரிக்கும் போருட்டிற மீதெனவறிந்து ஞானிகள் மகிழ்வரென்க. ஞானக்கிரியாஸ்வரூபன் பரமாத்மாவென்று சைவசித்தாந்திகளே கூறுகின்றனர். ஏனையசித்தாந்திகள் கண்டஞானிகளாகையால் அவர்க்கிது கைகூடாதென்க. பரமாத்மா ஞானக்கிரியா ஸ்வரூபனாகாதபோது அப்பரமாத்மாவால் சிற்சடப்பிரபஞ்சங்களை யியக்கமுடியாதென்க. ஞானக்கிரியைகளைக் குணமாகக்கொண்டிராதது பரமாத்மாவுமாகாது. சிவமே பரமாத்மாவாகத்தெளிந்து, அதற்கு ஞானக்கிரியைகளைக் குணமாகவுணர்ந்த தாயுமானவர் "எல்லாமுன்னடிமையே யெல்லாமுன்னுடைமையே யெல்லாமுன்னுடைய செயலே" என்று கூறியிருக்கின்றனர். அடிமை யென்றது சேதனப்பிரபஞ்சத்தையும், உடைமை யென்றது அசேதனப்பிரபஞ்சத்தையுமாம். செயலென்றது சேதனத்துக்கு அறிவித்தும், அசேதனத்தை யசைவித்துஞ் சேட்டிப்பித்தலே யென்றறிக. பரமாத்மாவாகியசிவம் ஞானக்கிரியைகளைக் குணமாகவுடையது என வீண்டுக்கூறியதற்கு மாறுக இவ்விரண்டு குணங்களில் ஞானமாகிய வொன்றினைச் சிவமெனவும், கிரியையாகிய மற்றொன்றினைச் சத்தியெனவுங் கூறியதென்னையெனின், அதனைவிளக்குதும். ஞானம் - கிரியையெனப்பிரிந்த சத்தியும், இச்சத்தியைத் தாதாந்மியமாகவுடைய சிவனும் (சூரியன் தனக்கு வேறாகிய விடயங்களை விளக்கும்போது கதிர் எனவும், தன்னை விளக்கும்போது கதிரோன் எனவும் விளங்குதல்போல) நின்றவாறறிக. கதிர் என்றது கிரணமாகிய சத்தியை. கதிரோன் அச்சத்தியையுடைய சூரியன். சத்தியாகிய கதிரையே சூரியனாகக் கொண்டவாறு ஞானக்கிரியைகளையே மீண்டுச் சிவ சத்திகளாகக் கொண்டவாறறிக. ஞானம் கிரியை என்பனவாதிபெயர்களை அச்சிவம் பெற்றியங்குதல் உலகத்தை நடைபெறுவிக்குமாறென் றறியத்தக்கது.

இவ்வாறியக்குதல் அச்சிவபெருமானது பரிபூரண விலாசமென்பதுமாம். அகரமீ எழுத்துக்களிலேறி அவ்வெழுத்துகளை யியக்குவது அதனது வியாபகமாதல்போல் சிவம் சிற்சடங்களினிறைந்து அவைகளை யியக்குவது அச்சிவத்தினது வியாபகமாம். இவ்வுண்மைபோதரவே

> "விற்பிரம்பா லுற்றவடு மேவவுல கெங்குநிறை
> சிற்பரனே தெய்வம் சிவசிவா—சொற்சிறந்த
> அகர முதல வெழுத்தெல்லா மாதி
> பகவன் முதற்றே யுலகு."

என மேலோர் பிரகாசம்பண்ணியிருக்கின்றனர். சிவபெருமான் கிராத வேடங்கொண்டு அர்ச்சுனனால் வில்லடிபட்டும், ஒட்டவேடங்கொண்டு அரிமர்த்தனனாற் பிரம்படிபட்டும் அவ்வடித் தழும்புகள் சராசரங்களாகிய யாவும் பட்டு வருந்துமாறு திருவுள்ளமிசைந்து, சிற்சடப் பிரபஞ்சம்யாவுந் தமதுதிருமேனியென்பதை இனிது விளக்கினர்.

அன்றியும்,

> "எல்லா வுயிர்க்கு முயிருணேச ரிவாசையி
> னல்லா தணுவு மசையாததென்ப தறிந்தனமே
> வில்லாடன்மார னிருக்கவும் யோகம்விளைத்த வந்நாள்
> புல்லா திருந்தனவெல்லா வுயிருந்தம் போகத்தையே"

என்னுந்திருவாக்கால் எல்லா வுயிர்களுக்கும் யோகபோகங்களைக் கொடுத்து இயக்குகின்றவர் சிவனேயென்று பெறப்படுகின்றது. சிவபெருமான் யோகமிருந்தகாலத்தில் மன்மதன் இரதியுட னிருந்துஞ் செயலற்றுக் கிடந்தான். சசியோடுகூடிய புரந்தரனும், வாணியோடுகூடிய பிரமனும், இலக்குமியோ

டுகூடிய திருமாலுங் காமமற்றுக் கலவி யொழிந்து காலங்கடத்தினர்கள். இதுசித்தமாகையால், சிவனே யாவரையு மியக்குகின்றவரென்பது ஸ்திரமாயிற்று. சிவனாரது திருக்கண்களை யொருகாலத்துப் பிராட்டியார் லீலாமாத்திரமாய்த் தமது திருக் கரங்களான் மூடினர். அப்போது சோமசூரியாக்னிக ளாகிய செல்லாச்சுடர்களு மொளிமழுங்கி யிருண்மூடி யுலகங் தடுமாறிப் போய்விட்டது. அப்போது தமது நெற்றிக் கண்ணைத் திறந்து உலகம் நிலைபெறச் செய்தருளினர். இத் திவ்ய சரிதமுஞ் சிவனே யுலகத்தை யியக்குகின்றவ ரென்னு முண்மையைப் பிரகாசிப்பிக்கின்றது. இம்மட்டோ, "அவனன்றியோ ரணுவுமசையாது" என்னுந்திருவாக்குஞ் சிவனாரது கர்த்ருத்வத்தை நிலைபெறச் செய்கின்றது. எங்ஙனமெனின், இந்திரன் முதலிய தேவர்கள் சிவபெருமான் தமக்குத் தலைவரென்பதை மறந்து அகங்கரித்தார்கள்.

சூ. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்.
(இன்னும் வரும்).

---

## மூன்று கனவு.

"நானுமறந்தேனவர்மறக்கல்லாவென்
மாணுமடநெஞ்சிற்பட்டு"

"அன்பிலா ரெல்லாந்தமக்குரியர் அன்புடையார்
என்புமுரியர் பிறர்க்கு"—திருக்குறள்.

"இருதலைப்புள்ளின்" ஒருயி ருடைய தலைமகன் தலைமகளிருவரில் தலைமகன் இறக்க அதனாலுண்டாகிய துன்பத்தைப்பொறுக்கு மாற்றலின்றியும், தணந்திருக்குந் தனிமையால் தானுயிரோ டிருக்குமாறெது வென் றறியாமலும் தலைமகள் மிகவுந் துன்புற்று அவ்விளைப்பால் சிறிது கண்வளர்ந்தாள். அங்ஙனம் உறங்குகையில் அவள் ஒரு கனவு கண்டாள். கண்டுழி, அவளுக்கெதிரில் அமைதியுடையனாய்க் குளிர்ந்த நோக்குடைய ஒரு விச்சாதரன் தோன்றி அவள் இவ்வாறு புலம்புதற் கென்னை காரணமென்று வினவினன்.

"கேண்மையுற்றேன்—கையிழந்தேன்" என்றாள்.

"இழிந்த உயிர்க்கும் அன்பின் மிகுதி வியக்கத்தக்கதாம்; அது கலப்பின்றித் தூய்மையாயிருக்கும்; அத்தகைய அன்பினால் எய்தாத தொன்றுமில்லை." என்று அவ்வழகிய விச்சாதரன் மெல்லிய குரலோடு சொன்னன்.

அவள் முறுவலித்து மகிழ்ச்சியொடு கைகொட்டினள்.

"எனது வேண்டுகோளை ஏற்கவேண்டும், நான் என்னுயிர் போலும் என்கொழுநன்பால் அன்புவைத்திருப்பதால், அவனை மறுபடியும் எனக்குத் தருக" என்று கூறினள்.

உடனே அவ்விச்சாதரன் முகத்தோற்றமாறி "அன்று; உண்மை யன்புள்ளார் தற்பயன் குறியார். துறக்கத்தின் கட்பேரின்பந் துய்க்கும் குழாத்தினின்கி யிவ்வுலகத் துன்பங்களில் மீண்டும் உழலுமாறு நின்கொழுநனை அழைக்கின்றனையோ? உயர்ந்த நிலைமையிலிருப்பாரைத் தாழ்த்தமுந் ததல் உண்மையன்பாகாது" என்று அவன் சொலவ், இதற்குள் அவள் விழித்துக்கொண்டாள்;

* * * *

இவ்வாறு ஓர் யாண்டு செல்லத்தன் கொழுநன் தலைத்திவச நாள் வந்தது. தன்தலைவன் இறந்ததற்குப் பின்னுள்ள மாதங்களில் கவலைகளும் இடர்களும் மிகுந்து வந்தன. இதனால், அவள் தன் கணவன் இத்தகைய துன்பங்களிற் கிடந்துழலாது, உயர்பதவிக்குச் சென்றதை நினைந்து நினைந்து ஒருவாறு தன் மனதிற்கு ஆறுதல் செய்துகொண்டிருப்பாள். அவள் படுத்துறங்குகையில் மறித்தும் மேற்கூறிய விச்சாதரன் கனவிற்றோன்ற, அவள் அவனைப் பார்த்துச் சிலசொல்லத்தொடங்கினள் "இப்போது நான் நன்கு அறிந்துகொண்டேன்; இடர் மிகுந்த இவ்வுலகத்திற்கு என்னுயிர்க் காதலனைக்கொண்டு வரவேண்டியதில்லை; என்னை அவனிடத்திற்கழைத்துச் செல்க" என்றாள்.

அவ்விச்சாதரன் அவளைத்தண்ணென நோக்கி,

"நீ புலம்புதற்குக் காரணமான நின்தலைவன் துறவொழுக்கமுடையானேபோல் உலகில் மனத்தூய்மையுடன், தன்னாசிரியன் அடிப்பட்டொழுகும் பான்மையனாயிருந்தான். மேலுலகில் இவனைப்போல்வாரே இறைவனுக்கருகேயிருப்பாராயினர். ஆதலால், இன்னும் உனதுள்ளம் உன் அன்பன் இருக்கும் இடம் நாடிச்செல்லுதற்காம் பக்குவம் அடைந்திலது; ஆனால், இவ்வுலகத் துன்பங்களினிடைக் கிடந்துழன்றபின் நின்மனம் அப்பருவத்தை யெய்தி நீ அவனைச்சாரும் ஒரு நாள் உண்டாம். அதுகாறும் சிறிது தாழ்த்திருந்துபொறுத்துக் கொள்க" என இனிதாகக் கூறினன்.

அவனுரைத்தவற்றைப் பெரிது செய்யாது, "துறக்கத்தில் மிக இழிந்த இடமும் நன்குமதிக்கப்படுக, என் அன்பனும் நானும் ஒன்றுசேரவேண்டும், அவன் பொன்னுலகத் திருப்பது மெய்யானல்" என்று பொருமி அரற்றினள்.

விச்சாதரன் அவளைப்பார்த்து விசனித்து "இறைவனருகிலிருந்தின்புறுகரும் நின்கொழுநனை ஆண்டு நின்றும் நின் விருப்பத்தின பொருட்டுப் பிரித்தல்தான் அன்புபோலும்? அத்தகையது அன்பன்று" என்று அவள் வெள்குறவுரைத்தான்; இதற்குள் அவள் துயிலுணர்ந்தாள்.

* * * *

மறித்தும் ஒரு திவசம்வர, புலம்புறுதலைவி பிணிகொண்டு இடர்க்கடலுள் மூழ்கிக் கரைகாணாதவளாய் ஓர் அமளியின் மீது படுத்திருந்தாள். இதற்கு முன்சென்ற மாதங்களிலெல்லாம் பலவித துன்பங்களும் முன்னினும் பெருகி வந்தன. இடருழக்குந் தலைவியும் வரவர அறிவு மிகுந்தாள். மறித்துந்தன் கனவில் அவ்விச்சாதரனைக் கண்டுழி மென்மையாகவும் மிக அமைதியாகவும் சிலசொல்லலுற்றாள்.

"நானிப்போ தொன்றுங் கேட்கவில்லை; எனதெனப்படுவன வற்றை யெல்லாம் எமதிறைவன் (கடவுள்) கையிற் கொடுத்துவிட விரும்புகிறேன். அவ்விறைவன் தனக்கியல்பாய் நிகழும் பெருங்கருணைத் திறத்தால் என்னுயிர்க் கொழுநனுக்குத் தன்னுயர்ந்த பதவியிலமைத்திடங் கொடுத்தார்; இதையறிந்து நான் அமைதியுற்றேன். என்றலைவனை 'நான் மறுபடியும் பெறல் வேண்டுமென்றுவது, அன்றி அவன் அருகில் இருக்கவேண்டு மென்றுவது கேட்கிலேன்; அவன் இறைவன் அருள்பெற்றானென்பதை யறியப் பெறுதலும், அவன் இறைவன் திருமுன்பிருந்து மகிழ்தலைத் துறக்கத்தில் மிக இழிந்ததாயுள்ள இடத்தினின்று பார்த்தற்கும் கிடைத்தலுமே எனக்குச்சாலும்" என்றாள்,

அவளது உளங்கிழித் தெழுந்த இம்மொழிகளைக் கேட்கவே, அவ்விச்சாதரன் முகத்தில் வெண்ணகை துலங்கிற்று.

"இப்போது உன் அன்புதூய்மையுடையதாயும் தற்பயன் குறியாததாயு மிருத்தலால், நீ புலம்புதற்குக் காரணமான நின் தலைவனை இறைவனொடு கண்டு என்றுந் தொழுமாறு பொன்னுலகிற்கு என்னுடன் போதுக" என்று சொன்னான்.

* * * *

காலையில் அவள் உயிர்நீத்துக்கிடப்பதைக் கண்டோர் "அவள் தன் இடர்மிகுதியாலிறந்தாள்" என்றார்கள்; ஆனால் அவள் மிகவும் மகிழ்ச்சியொடு சென்றதை அவர் அறிந்திலர்.

R. S. வேதாசலம்பிள்ளை.

## நகைச் சுவை.

### * நகைவேழம்பர் இருவர் பேசிக்கொள்ளுதல்.

ஒருவன் பெயர்-சிட்டுக்குருவி; மற்றொருவன் பெயர் ஆந்தை.

சிட்டுக் குருவி. ஏடா ஆந்தை! உன்னை நேற்று நான் காணவில்லையே.

ஆந்தை.—நேற்றுப் பகல்முழுதும் † கண்தெரியாதபடி எண்ணிக்கொண்டிருந்தேன்.

சிட்டு.—என்னப்பா எண்ணிக்கொண்டிருந்தாய்?

ஆந்தை.—இந்த ஆகாயக் கடலிலுள்ள முத்துக்களைக் குளித்தெடுத்துக்கொண்டால் நாம்பெரிய செல்வர்களாகலாமே யென்றெண்ணிக் கொண்டிருந்தேன்.

சிட்டு.—அதற்கு இந்தப் பிறைத்தோணியில் ஏறிக்கொண்டு போனால் அவ்வாறு செய்யலாம்.

ஆந்தை.—ஆனால், இந்தப்பிறைத் தோணியில் ஏறுவதற்கு நான் ஓர் ஏணிதேடிக்கொண்டு வருகிறேன்.

* * * *

R. S. V.

* நகைவேழம்பர் - சிரிப்புண்டாக்குவோர், சிலப்பதிகாரத்தினும் "நகை வேழம்பர் வகைதெரியிருக்கையும்" என்றார்.

† ஆந்தைக்குப் பகலில் கண்தெரியா தென்பவாகலின் இது அதற்கேற்பவும் எண்ணுதற்கேற்பவும் இரண்டு பொருள்படும்.

R. S. V.

## குறிப்புகள்.

அருடங்கிய மகாராணியவர்கள் வைரஜூபிலி மகோற்சவதினத்தில் கீழ்க்கண்ட நிருபத்தை மேன்மை தங்கிய சென்னைக் கவர்னரவர்களுக்கு அனுப்பினார்.

"நான் எனது அன்புக்குரிய பிரஜைகளுக்கு என்மனதார வந்தன மளிக்கின்றேன். கடவுள் அவர்களை ஆசீர்வதிப்பாராக."

இதற்குப் பதிலாக மேன்மை தங்கிய கவர்னரவர்கள் மகாராணியவர்களுக்குப் பின்வருமாறு பதிலளித்தார்:—

"ஜனங்களுக்காக தமியேன், சன்னிதானத்திய கருணைவாய்ந்த நிருபத்துக்காக தங்கள் சன்னிதானத்துக்குப்பணிவோடும் நன்றியறிதற் சிந்தையோடும் வந்தனம் அளிக்கின்றேன்."

***

Asiatic Quarterly Review வின் ஏப்ரல் சஞ்சிகையில் நிர்வாணத்தைப்பற்றி Dr. Dhalmann எழுதிய புத்தகத்தை ஆராய்வோ ரொருவர் 'மகாபாரதத்தை நன்குணர்ந்தவரும் கல்விச்செல்வம் நிறையப் பெற்றவருமாகிய இவ்வித்வானின் கோட்பாட்டின்படி நிர்வாணமென்னும் கொள்கை பௌத்தமத முண்டாவதற்கு முந்தியே இருந்ததென்றும் அது வேதாந்தத்திலிருந்தாவது சாங்கியத்திலிருந்தாவது எடுக்கப்படவில்லையென்றும் அதிக புராதீனமான கொள்கையினின்றும் எடுக்கப்பட்டதென்றும், அதன்படி நிர்வாணமென்பது அகண்ட பிரமத்தோடு ஐக்கியமாதலென்றும், இக்கொள்கையை மகாபாரதத்திலும் கீதையிலும் காணலாமென்றுங் கூறுகிறார். சித்தாந்திக்கு இது ஒரு புதுமை யன்று; ஏனெனில் அவர் ஆனந்தமாய்ப் பின் வருமாறு பாடுகின்றார்:—

"ஊன்கெட்டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ."

"நாமொழிந்துசிவ மானவாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ."

Dr. Dhalmann என்பவரது கொள்கை மகாபாரதம் ஒரே காலத்திலெழுதப்பட்ட தென்றும் அதன் பாகங்கள் வெவ்வேறு காலங்களில் எழுதப்படவில்லையென்பதுமே.

இவ் விஷயத்தை நன்றாய் உணர வேண்டும். ஏனெனில் தற்காலத்தில் சிலர் கீதையை பாரதசம்பந்தமில்லாத தென்றும் அது எவராலோ எப்படியோ பாரதத்தில் ஏற்றப்பட்டதென்றும் நினைக்கிறார்கள்.

***

சுதேச பாஷையில் நடத்தப்படும் பத்திரிகைகள் இராஜதுரோகமான விஷயங்களையாவது மற்றைய இராஜாங்க விஷயங்களையாவது எடுத்தாளுவனவல்ல. மதத்தையும் ஞானத்தையும் பற்றிய விவகாரங்களே அவற்றின் முக்கிய தொழிலாம். இவற்றின் விஷயமாய்ப் பெருந்தர்க்கங்கள் அடிக்கடி விளைகின்றன. ஆயின் இப்பத்திரிகைகள் எவ்வளவோ தாழ்ந்த விலைக்குப் பிரசுரிக்கப்பட்டும் ஆதரிப்பார் தொகைச் சுருக்கத்தினால் கை நஷ்டத்தை விளைக்கின்றன. ஆதலால் சுயபாஷை அபிவிர்த்தியைக் கருதி யொவ்வொருவருந் தங்களாலியன்றமட்டும் இப்பத்திரிகைகளை அபிவிர்த்திக்குக் கொண்டுவரமுயல வேண்டும்.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுருப்யோநமஃ.

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம் தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஹு மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897ஹு ஆகஸ்டுமீ 21உ சனிக்கிழமை. { இலக்கம்-ங

## கைவல்யோபநிஷத திராவிட இரத்னப் பிரகாசிகை.

(முன்தொடர்ச்சி.)

III.

(துறவிகள் உள்ளக்குகையின் கண்ணேயுள்ள சிவ பிரானை உபாசித்தடையுமாறு கூறினமை)

பரேண நாகம் நிகிதம் குகாயாம்
விப்ராஜதே யத்யதயோ விசந்தி | (ங)

(இதன்பொருள்) பெரிதிற் பெரியராய் (பின்னர் அணுவின் அணுவினராய்) இதயஉள்ளக் குகையின் கண்ணே எந்தச்சிவனார் பிரகாசிக்கின்றாரோ (அந்தச்சிவனாரைத்) துறவிகள் அடைகின்றார்கள்.

(திராவிட இரத்னப் பிரகாசிகை.)

9. உள்ளக்குகை—உள்ளக் குகையின் கண்ணே விளங்குகின்ற சிவனார் அருள்கொண்டே அவரை அறிதல்வேண்டும் என்பது போதரக் கடவல்லி யுபநிடதமும், மகோபநிடதமும், சுவேதாசுவதரோபநிடதமும் கூறிய

அணோரணீயாந் மகதோமஹீயா நாத்மாகுகாயாம் நிஹிதோஸ்ய ஜந்தோ: | தம:க்ரதும் பச்யதி வீதசோகோ தாது: ப்ரசாதாந் மகிமாநமீசம் ||

என்னும் மந்திரத்திக்கு உபப்பிரும்மணமாக, சிவபுராணம்

அணோரணீயாந் மகதோமஹீயா நயமவ்யயஃ |
குகாயாம் நிஹிதச்சாபி ஜந்தோச்சாஸ்ய மகேச்வரஃ |
தமக்ரதும் க்ரதுப்ராயம் மஹிமாதி சயாந்விதம் |
தாதுஃ ப்ரஸாதா தீசாநாம் வீதசோகஃ ப்ரபச்யதி ||

அணுவில் அணுவினரும், பெரிதிற் பெரியரும், நிர்விகாரியுமாம் சிவபிரான் இந்தச் செந்துவாம் ஆன்மாவுடைய உள்ளக்குகையின்கண்ணே கலந்தமர்ந்தாராதலின், வேண்டுதல் வேண்டாமையிலாதவரும், அருளாதிக்கியரும், மகிமாதிகுணத்தோடிசைந்தவருமாகிய சிவபிரானுரை ஆன்மாவானவன் அச்சிவப்பிரசாதத்தினாலே கவி தொலையப் பார்க்கின்றான் என்று பொருள் படுத்திற்று.

10. பெரிதிற் பெரியர்—"பரேண நாகம்" என மேலே போந்த கைவல்லியோபநிஷத மந்திரபாகத்துக்கு வியாக்கியான கர்த்தாக்கள் "சுவர்க்கத்துக்குமேல்" என்று பொருள் படுத்துதலாலும், "அணுவுக்கணுவினர்" என்பதற்கிசைய உள்ளக்குகையினரென்று அவ்வுபநிஷதம் கூறுதலாலும், கடவல்லிமுதலிய உபநிஷதங்களும், அவற்றுக்கு உபப்பிருமணமாய சிவபுராண முதலியவைகளும் "பெரிதிற் பெரியர்" என்பது பொருள்பட "மகதோ மஹீயாந்" என்று கூறுதலாலும், அந்தப் "பரேண நாகம்" என்னும் அம்மந்திரபாகத்துக்குப் "பெரிதிற் பெரியர்" என்று ஈண்டுப் பொருள் கூறுகலே பொருத்தமாமென்க.

---

IV.

(துறவிகள் மகாசிவலோகமடைந்து பராமிர்தசிவ ரூபராய் முத்தியடைடதல் கூறினமை).

வேதாந்த விஞ்ஞாந சுநிச்சி தார்த்தா
சந்யாஸ யோகாத்யதசுத்த சத்வா: | (எ)
தேப்ரம்ம லோகேஷுபராந்த காலே
பராம்ருதா: பரிமுஞ் சந்தி ஸர்வே | (அ)

(இதன்பொருள்) (எ) அந்தத் துறவிகள் இவ்வாறு வேதாந்தத்தின் பாலதாம் சிவஞானத்திலே நல்ல நிச்சயார்த்த முடையராய், (சர்வ கர்மபலங்களையும் சிவார்ப்பணஞ்செய்து அவரைச் சேர்தலாம்) சந்நியாசயோக வாயிலாக (அப்பிராகிருத) திவ்ய தேக முடையராய்;

(அ) பின்னர் அவரெல்லாம் (விஷ்ணு உபாசகர்களால்) நாராயணருடைய (பரருடைய) அந்தத்திலே (பிரளய கற்பத்திலே கால விளம்பத்திலே) எய்தப்பெறும் சிவலோகத்திலே (ஷடத்துவாவின் கரைக் கண்ணதாம் பதத்திலே) (காலவிளம்பமின்றி) எய்திப் பரமாமிர்த சிவ்ரூபராய் வீடுறுகின்றார் (பாசத்தினின்று நீங்குகின்றார்.) என்று சிவாத்துவிதத்துக்கிசையப் பொருள் கோடலாகும்.

(அ) அவரெல்லாம் (சதாசிவோபாசகராந் துறவிகளெல்லாம்) மகா சிவலோகத்தி லிருந்து மகாப்பிரளய சங்காரகாலத்திலே பரமாமிர்தராய் அங்கிருந்தவாறே) பரமுத்தியில் தலைப்படுகின்றார் என்று சைவ சித்தாந்தத்துக் கிசையப் பொருள் கோடலுமாகும்.

(திராவிட இரத்னப் பிரகாசிகை)

11. சந்நியாச யோகம்—வேதாந்தார்த்த அருண்ஞானத்தில் நிச்சயமுடையோர்க்கே எல்லாஞ் சிவன்செயல் என்று கொண்டு எத்தொழிலையும் இறைபணியாக்கிச் சிவார்ப்பணஞ்செய்ய வன்மையுளதாகும். இதுபற்றியே பகவத்கீதை

யத்கரோஷிய தச்நாஸி யஜ்ஜுஹோ சித்தாஸியத்| யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் | சுபாசுபபலைரேவம் மோக்ஷ்ய ஸேகர்மபந்தனை: | ஸந்யாஸியோகயுக்தாத்மா விமுக்தோமா முபைஷ்யஸி | காம்யானாம் கர்மணும் ந்யாஸம்ஸந்யாஸம் கவயோ விது:||

கிருஷ்ணர் அர்ச்சுனரை நோக்கி, "குந்திபுதல்வா, எதைச் செய்கின்றாயோ, எதைப் புசிக்கின்றாயோ, எதை ஓமிக்கின்றாயோ, எதைக் கொடுக்கின்றாயோ, எத் தபசைச் செய்கின்றாயோ அதை எனக்கு அர்ப்பணமாகச் செய். அக்கருமங்களை என்னிடத்திலே அர்ப்பணஞ் செய்தலாகிய சந்நியாசயோகத்தோடு கூடினவனாய், நீ நன்மை தீமைக் கேதுவாகிய கன்மபந்தங்களிலிருந்து வீடுறுவாய்; அவ்வாறு விடுபட்டுநீ என்னை அடைவாய். காமிய கருமங்களைப் பரித்தியாகஞ் செய்தலையே சந்நியாசம் என்று அறிஞர் கொள்கின்றார்" என்றும் கூறினாராகச் சொல்லு மாற்றால், எக்கருமங்களையும் சிவார்ப்பணஞ் செய்தலையே "சந்நியாசயோகம்" எனக் கைவல்லியோபநிஷதங் கூறியதுமாமென் றுணர்க. பாத்மபுராணத்தைச் சார்ந்த சிவகீதையும் "கோடி சென்மங்களிலே ஈட்டிய புண்ணியங்களினாலே சிவனிடத்திலே பக்தி உண்டாகின்றது. அந்தப் புண்ணியப் பிரபாவத்தினால் பலன்களையெல்லாம் விதிப்பிரகாரம் சிவார்ப்பணஞ் செய்துகொண்டு அக்கினி கோத்திராதிகளையும் வாவிதடாக ஆராமங்களையும் முறையே செய்து அமைக்கின்றான்" என்றுகொண்ட கருத்தினால்

கோடிஜந்மார்ச்சிதை: புண்யை: சிவேபக்தி: ப்ரஜாயதே | இஷ்டாபூர் தாதிகர்மாணி தேநாசரதி மாநவ: | சிவார்ப்பணதியாகாமாந் பரித்யஜ்ய யதாவிதி ||

என்று கூறிற்று. பிரமசரிய முதலிய ஆச்சிரமமுடையார் எல்லோர்க்கும் பிரமவித்தை இன்றியமையா துளதாம் என்னும், பலத்தைத் தியாகஞ் செய்தலையே சந்நியாசம் என்றும் கூறினார் நீலகண்ட சிவாசாரியருமா மென்க. பகவற்கீதையிலே கிருஷ்ணர் அர்ச்சுனருக்கு உபதேசிக்கு மிடத்துத் தம் பொருட்டே எல்லாவற்றையும் அர்ப்பணஞ் செய்தலாகிய சந்நியாச யோகஞ் செய்க என்றும், சிவகீதையிலே சூதர் இருஷிகளுக்கு உபதேசிக்கு மிடத்துக் "கருமபலன்களை யெல்லாம் சிவார்ப்பணஞ் செய்க" என்றும், பிரமா ஆசுவலாயனர்க்கு (மேலே சொல்லியவாறு) உபதேசிக்கு மிடத்து "சந்நியாச யோகஞ் செய்க" என்றும் கூறுதலால், இவையெல்லாம் ஒருநெறிப்பட எவருக்கு அர்ப்பணமாய்ச் செல்லு மெனிற் சொல்வேம். "பகவான்" என்னும் சப்தம் சிவபெருமானுக்குச் செல்லுமேனும், அவர் மெய்யுணர்ந்தார்க்கும் செல்லுமென்று அரதத்தாசாரியர் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்திலே கூறியிருக்கின்றா ராதலினாலும், அதற்கிசையவே கிருஷ்ணர் பகவற்கீதை பத்தாம் அத்தியாயத்துப் பதினாலாவது பதினேழாவது சுலோகங்களினாலே "பகவான்" என்றும், பிரமா கைவல்லியோபநிடதத்து முதலாவது இரண்டாவது மந்திர பாகங்களிலே "பகவான்" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றார்க ளாதலினாலும், சிவோகம் பாவனையில் முற்றினமை பற்றிச் சிவாவிர்ப்பாவமுற்ற சிவபக்தர்களாகிய கிருஷ்ணரையும் பிரமாவையும் சிவமாகக்கொண்டு எவற்றையும் சிவார்ப்பணஞ் செய்தலாகிய சந்நியாச யோகஞ் செய்தலினாற் பரமாமிர்த சிவரூபராகின்றார் என்று பொருள் படுத்தப்படுதலினாலே போதரும் இழுக்கொன்று மின்றாமென்க. இதுபற்றியே சிவனடியார்க்குச் செய்வது சிவபிரானுக்குச் செய்தலாய் முடியுமென்று சிவாகமாதிகள் முழங்குவனவுமாமென்க.

12. வேதாந்த விஞ்ஞானம்—இருக்கு வேதத்தைச் சார்ந்த ஐதரேய ஆரணியகத்து ஆறும் அத்தியா யத்து இரண்டாம் மந்திரத்திலே "பிரஞ்ஞான" த்தின் பரியாய நாமங்கள் பலவற்றுள்ளே ஒன்றாக "விஞ்ஞானம்" என்னும் பதம் காண

ப்படலாலும், அம்மந்திரத்திலே காணப்படும் "திருதி" முதலிய பதங்கள் சிவ சத்திக்குப் பெயராக வாயுசங்கிதை உத்தரபாகத்து எட்டாம் அத்தியாயத்து ஐந்தாம் ஆறும் சுலோகங்கள் கூறுதலாலும், அவ்வாறே "பிரஞ்ஞானம்" என்பது சிவசத்திக்குப் பெயராகக் கைலாய சங்கிதை உத்தரபாகத்தில், பத்தாம் அத்தியாயத்து நூற்றிருபத்திநான்காம், நூற்றிருபத்தைந்தாம், நூற்றிருபத்தாறும் சுலோகங்கள் உணர்த்துதலாலும், "விஞ்ஞானம்" என்பது சிவனருண் ஞானத்துக்குப் பெயராய்ப் போந்ததென்பது பெறப்பட்டது. இந்த அருட்பரை ஞானத்தின் பாலதாம் வேதாந்த விஞ்ஞானமே உபநிஷதங்களு ளெல்லாந் தலைமை யாகிய வைதிக சைவ சுவேதாசுவதரோபநிஷதத்திலும், ஈண்டுக் கைவல்லியோபநிஷதத்திலும் பேசப்பட்டு, தீவிரதரபக்குவ அன்பர்களுக்கு உபதேசிக்கற் பாலதாமெனக் கூறப்பட்டதுமா மென்க. 'விஞ்ஞானியானவன் எக்காலமும் அருண் ஞானத்தோடு கூடினவனாயாகின்றான்" என்ற கருத்தினால், சிவகீதை

விஞ்ஞாநீயஸ்துபவதி யுக்தேந மநசாசதா |

என்று கூறிற்று. ஈண்டு "மனம்" என்றது மேலே சொல்லிய ஐதரேய ஆரணியகத்து ஆறும் அத்தியாயத்து இரண்டாம் மந்திரத்திலே சொல்லப்பட்டவாறு "ஞானசத்தி" க்குப்பெயராய்ச் செல்லுமன்றி, அந்தக் கரணங்கள் நான்கனுள் ஒன்றாகிய மனத்தின் பெயராகச் செல்லாதா மென்க. இவ்வாறே கைவல்லியோபநிஷதத்திலும் (மேலே சொல்லியவாறு) "விஞ்ஞானம்" என்னும் பதம் சிவனருட்சத்தி ஞானத்தின் மேலாமன்றி, கண்ணுவசாகையுடையாரது ஐந்தாம் அத்தியாயத்து ஏழாம் பிராம்மணத்து இருபத்திரண்டாம் மந்திரத்திலே கண்டவாறு (சீவ) ஆன்மாவின் பெயராகச் செல்லாதா மென்க.

13. சுத்தசத்துவர்
14 பிரமலோகம்
15. பராந்தகாலம்

} "பாசுபதயோகபரியந்தமே வேதசிரசிலே பேசப்பட்டன. சரியை கிரியை யோக ஞானங்களுள்ளே மூன்றாவதாகிய பாசுபத யோகந்தான் சிவத்தைப் பிரத்தியக்ஷமாக்கும்" என்ற கருத்தினால் சைவபுராணம்

பரமோ யோகபர்யந்தோ தர்மஃச்ருதி சிரோகதஃ |
தேசுபாசுபதோயோகஃ சிவம் ப்ரத்யக்ஷ யேத்த்ருடம் ||

என்று கூறிற்று. வைதிக பாசுபதயோகிகள் தோழற்குரிய உரிமை போலச் சுத்த சிவதத்துவபதிகளோடு ஒத்த வடிவமும், ஒத்த போகநுகர்ச்சி முதலியவும் பெறுவர் என்றும், இந்த யோகிகள் மகாப்பிரளயமாகிய மகாசங்கார காலத்திலே அங்கிருந்தவாறே சிவஞானிகளால் அடையப்படும் பரமுத்தியை அடைகின்றார் என்றும் சிவபுராணங்களும் சிவாகமங்களும் செப்புகின்றன. சிவகீதை சிவராகவசம்வாதத்திலே

ப்ரம்மலோகேதிவ்யதேகே புக்த்வாபோகாந்யதேப்சிதாந் |
தத்ரோஷித்வா சிரங்காலம் ப்ரம்மணா சஹமுச்யதே ||

சிவலோகத்திலே திவ்யதேகமுற்றிருந்து இஷ்டபோகந் துய்த்து நெடுங்காலம் பிரமத்தோடிருந்து முத்தராகின்றார் என்றுகூறுகின்றமையாலும், வாயுசங்கிதை

அநுக்ரகமயஞ் சக்ரம் சாந்த்யதீத கலாமயம | சதாசிவாதிஷ்டிதஞ்ச பரமம்பத முச்யதே | ஏததேவபதம் ப்ராப்ய யதீநாம் பாவிதாத்மநாம் | சதாசிவோ பாசகாநாம் ப்ரணவாசக்த சேதஸாம் | ஏததேவபதம் ப்ராப்ய தேநஸாகம் முநீச்வராஃ | புக்த்வாஸவிபுலாந் போகாந்தேவேந ப்ரம்மரூபிணா | மகாப்ரளய சம்ப்ராப்தெள சிவஸாம்யம் பஜந்திஹி | தேப்ரம்ம லோக இதிச்ருதி ராஹஸநாதநீ ||

அநுக்கிரக மயமாயுள்ள சக்கரம் (சதாசிவசக்கரம்) சாந்தியாதீத கலாமயமாம் என்றும்; இது சதாசிவர் அதிஷ்டிக்கும் பரமபதமாம் என்றும், பிரணவத்திலிருத்திய சதாசிவோபாசர்களாகிய யதிகளுக்கு எய்துந் தானம் இதுவாமென்றும், இப்பதத்திலே யிருந்து பெரும் போகமெல்லா நுகர்ந்து மகாப்பிரளய காலத்திலே (மகாசங்காரகாலத்திலே) அந்தப் பிரமத்தோடு கூடப் பரமுத்தியை அடைகின்றார் என்றும் இதுபற்றியே (முண்டக கைவல்லிய) சுருதி 'தேப்ரம்மலோகே' என்று உரைத்ததுமா மென்க என்று கூறிற்று. பின்னருஞ் சிவபுராணம்

திநக்ருத்கோடிசங்காசம் ஸ்தாநமாத்யமுமாபதேஃ | சர்வகாம சமாயுக்தம் விசுத்தம் நித்யமக்ஷயம் | ஸம்ப்ராப்ய தத்பதந் திவ்யம் சமஸ்த க்லேசவர்ஜிதாஃ | சர்வஜ்ஞாஃ சர்வகாஃ சுத்தாஃ பரிபூர்ணா பவந்திச | விசுத்தகார்ய காரணாஃ பரமைச்வர்ய ஸம்யுதாஃ | ஸதேஹாச்ச விதேஹாச்ச பவந்த்யாத் மேச்சயா புநஃ யேஸம் ப்ராப்தாஃபரம் ஸ்தாநஞ்ஞாநயோக ரதாநராஃ— நதேஷாம் புநராவ்ருத்திர் கோரேஸம்ஸார மண்டலே ||

உமாபதியாகிய சிவனுடைய பதம் கோடிசூரியப் பிரகாசமுடைய தென்றும், சர்வாபீஷ்ட திவ்யபோகங்களோடி சைந்ததாயும், அதிசுத்தமாயும், நித்தியமாயும், அழியாததாயும், கிலேசமெல்லாம் ஒழிந்ததாயுமுள்ள அந்தத் திவ்ய சிவலோகத்தை எந்த ஞானயோகிகள் அடைந்து சர்வஞ்ஞர்களாயும், சர்வவியாபகர்களாயும், தூயராயும், பரிசுத்தமுடையவர்களாயும், (மகாமாயையி லுண்டாகிய) திவ்யதேகமுடையராயும், சுவாதீனப் பிரவிருத்தியுடையராயும், சதேகர்களாயேனும், விதேகர்களாயேனும் இருந்தார்களோ, அந்த ஞானயோகிகளுக்குச் சம்சாரமண்டலத்திலே மீளத் திரும்புதலில்லை (புநராவிர்த்தியில்லை) என்று கூறியதைச் சைவபாஷ்யகாரர் உதகரித்தார். மேலேசொல்லிய உபப்பிரும்மணங்களுக்கு மூலசூத்திரங்களாய் நின்ற முண்டகோபநிடதமுங் கடவல்லியுபநிடதமும்,

தே ப்ரம்மலோகேஷு பராந்தகாலே பராம்ருதாஃ பரிமுஞ்சந்திஸர்வே |

அவர்கள் (ஞானயோகிகள்) எல்லோரும் சிவலோக (புவன)ங்களிலே (திவ்யபோக மெல்லாம் புசித்திருந்து மகாசங்காரகாலம் எனப்படும் மகாப் பிரளயகாலத்திலே பரசிவமுத்தியைத் தலைப்படுகின்றார் என்று கூறின. தைத்திரீயோபநிடதம்

யோவேத நிகிதம் குஹாயாம் பாமேவ்யோமந் |
ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹப்ரஹ்மணா ||

பரமாகாயத்தினதாம் குகையின்கண்ணே சிவத்தை (பிரமத்தை) எவன் அறிகின்றானோ, அவன், பிரமத்தோடுகூடச்

(சிவலோகத்திலே) சர்வபோகங்களையும் நுகர்கின்றான் என்று கூறிற்று. ஐதரேயோபநிஷதம்

ஸ ஏதேந ப்ராஞ்ஞேநாத்மநாஸ்மால் லோகாதுத்க்ரம்யாமுஷ்மிந்ஸ்வர்கேலோகே சர்வாந் காமாநாப்த்வா ம்ருதஸ்ஸமபவத்||

அவர் (வாமதேவர் என்னும் யோகியார்) சிவனருண் ஞானத்தினாலே இவ்வுலகத்தை ஒருவிப்போய்ச் சிவலோகத்திலே இன்பமெலாந் துய்த்துக்கொண்டு சிவசாரூப்பியமுற்றவராயினார் என்றுகூறிற்று. தலவகாரோபநிடதம்

யோவா ஏதாமேவம் வேதாபஹத்யபாப்மாந மநந்தே ஸ்வர்க்கே லோகேஜ்யே யே ப்ரதிதிஷ்டதி |

எவர் இந்தப் (பிராம்மி) யோகத்தை அறிந்து பாபங்களை யெல்லாம் போக்கினாரோ, அவர் முடிவில்லாததும், அடைதற்கரியதுமாகிய சிவலோகத்திலே நிலையுறுகின்றார் என்று கூறிற்று. உபநிஷதம் என்னும் பதத்திற்கு யோகம் என்னும் பொருளுண்மையால் ஈண்டுத் தலவகாரோபநிஷதத்திலே போந்த "பிராம்மி உபநிடதம்" என்பது பிராம்மியோகம் எனப்பொருள் கொள்ளப்பட்டது. இது கூர்மபுராணமுதலிய உபப்பிரும்மணங்களுக்கு உடன்பாடாகும். சாந்தோக்கியோபநிஷதம்

யஏஷஸம்ப்ரசாதோஸ்மாச்சரீராத் சமுத்தாயபரம் ச்யோதிருபசம்பத்யஸ்வேநரூபேணாபிநிஷபத்யதே |

எவர் அருளையுடையராய் இந்தச் சரீரத்திலிருந்து எழுந்து (பராசத்தியாம்) பரஞ்சோதியை அடைந்து, அந்தச் சிவசாரூப்பியம் அடைந்தவனாகின்றான் என்று இந்தச் சாந்தோக்கியோபநிஷதமே

ஸகல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம் ப்ரம்மலோகமபிசமபத்யதே நசபுநராவர்த்ததே நசபுநராவர்த்ததே |

இந்தப் பிரகாரம் தன்சீவ காலம் வரையும் ஒழுகுகின்றவன் சிவலோகத்தை அடைந்து மீளப்பிறக்கின்றான் இல்லை, மீளப்பிறக்கின்றான் இல்லை என்று கூறிற்று. இந்தச் சாந்தோக்கியோபநிஷதத்தின் பொருளைக்கொண்டே வேதவியாசரும் தமது வேதாந்த சூத்திரத்து இறுதி அத்தியாயத்து இறுதிப் பாதத்து இறுதிச் சூத்திரத்திலே

அநாவிருத்தி: சப்தாதநாவிருத்தி: சப்தாத் |

"மீளப்பிறப்பதில்லை" என்பது. இருமுறை அடுக்கிச் சாந்தோக்கியோபநிஷத்திலே சொல்லப்பட்டிருப்பதால் என்னும் பொருளுறக் கூறினார். தைத்திரீயசங்கிதையிலே காணப்படும் "தேதாமாநி" என்றற்றொடக்கத்து மந்திரத்திலே காணப்படும் "விஷ்ணோ: பரமம் பதம்" என்னும் மந்திரத்துக்குப் பொருள் கூறியவிடத்து, அப்பயதீக்ஷிதர் விஷ்ணுபதத்தின் மேலாயது சிவலோகம் என்று உபப்பிரும்மணங்களுக் கிசையப் பொருள் கூறினார். சிவதிருமோத்தரம்

ஞேயம் விஷ்ணுபதாதூர்த்வம் திவ்யம் சிவபதம் ஜகத் |

விஷ்ணு பதத்தின் மேலாய் அறியப்படுவது மகத்தாகிய திவ்யசிவபதமாம் என்று கூறுதலாலும், திராவிட சிவதருமோத்தரம்

அதற்குமேலுமையாள் புரமற்புத
மதற்குமேற்சிவலோக மென்றுபகவே
யதற்குறும்வலம் வாசகினடங்கிடா
வதற்குப்புக்கவர் மீள்பவரலரே.

(மேலே கூறிய உபநிஷதபுராண பிரமாணங்களுக்கிசைய) மகா சதாசிவநாயனார் எழுந்தருளியிருக்கும் மகாசிவலோகத்தை அடைந்தவர்கள் அளவிடப்படாத திவ்ய வளங்களையுடைய அச்சிவலோகத்தினின்று மீளார்கள் (எனவே, பிறவியிற் செல்லார்கள்) என்று கூறிற்று. ஸ்ரீ நீலகண்டசிவாசாரியரும் தமது சைவபாஷ்யத்துச் "சாம்பாதி" அதிகாணத்திலே

விஷ்ணுபதாதூர்த்வமப்ராக்ருதசிவபதம்பரமாநந்தமயமநுவிசந்தி | நிதாகிச்ரூயதே | சோத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம் |

விஷ்ணுபதத்தின் மேலானதாய், அப்பிராகிருதமாய், பரமானந்தமயமாயுள்ள சிவபதத்தை யோகிகள் அடைகின்றார்கள், இதுபற்றியே (கடவல்லி) சுருதியும் அவன் (யோகி மந்திர பதவர்ண புவன தத்துவகலை என்னும் ஆறு) அத்துவாக்களின் கரைக்கண்ணதாய், அவ் விஷ்ணுலோகத்துக்கு மேலானதாயுள்ள (சிவ) பதத்தை அடைகின்றான என்று கூறியதாமென உரைத்தார். ஸ்ரீஞானசம்பந்தர்

பொன்னார் மாடநீடுஞ் செல்வப்புறவம்பதியாக
மின்னாரிடையா ளுமையாளோடு மிருந்த விமலனைத்
தன்னார்வஞ் செய்தமிழின் விரகனுரைத்த தமிழ்மாலை
பன்னாள் பாடியாடப் பிரியார்பர லோகந்தானே.

கோலமாகரி யுரித்தவ ரரவொடு
மேனக்கொம் பிளவாமை
சூலம் பூண்டுதண் மதியது சூடிய
சங்கரனார் தம்மைப்
போலத்தம் மடியார்க்கு மின்பமளிப்பவர்
பொருகடல் விடமுண்ட
நீலத்தார்மிடற் றண்ணலார் சிரபுரந்
தொழவினை நில்லாவே.

என்றற்றொடக்கத்த வேதசார திராவிட சூக்தங்களினால், சிவபிரானை அன்பினோடு உருகி வழிபடும் அன்பர்கள் பரலோகமாகிய சிவலோகத்தினின்று மீளார் என்றும், அங்கே அளவில்லாத சிவபோகங்களைப் புசிப்பாரென்றும் மேலே செல்லிய தைத்திரீய பிரமாணந்தவல்லி, ஐதரேயம், சாந்தோக்கியம், கடவல்லி முதலிய சுருதிகளுக்கும், சிவாகமங்களுக்கும் உடன்பட அருளினாராக, ஏகான்மவாதிகள் "சுவர்க்கலோகம்" "பிரமலோகம்" முதலியவைகளுக்குப் பிறிது பொருள் கூறிச் சுருதியைக் கொல்வது யாது பயன் கருதியோ; ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அந்தவைதிக பாசுபதோபநிஷதங்களுக்கும் சிவாகமங்களுக்கும் பொருந்தவே 'வானவூர் கொள்வோநா மாயப்படை வாராமே', 'அண்டர் நாடாள்வோ நா மல்லற்படைவாராமே' என்றற்றொடக்கத்து சுருதிகள் வாயிலாகக் கூறிய "வானவூர்" "அண்டர்நாடு" என்பன சுவர்க்க லோகத்தின் மேலாகாது, சிவலோகத்தின்

மேலாமென்க. தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும் மேலே சொல்லிய சுருதி புராணங்களுக்கிசையவே,

மலர் மிசையேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசைநீ டுவாழ்வார்.

இருதய புண்டரீகத்தின் கண்ணே உமாசமேதராகிய சிவபெருமானை இடையீடின்றித் தியானிப்பவர் எல்லாவுலகங்களினும் மேலாகிய மகாசிவலோகம் என்னும் வீட்டுலகின்கண்ணே அழிவின்றி எக்காலமும் வாழ்வார் என்று பொருள் படக் கூறியருளினார். இவ்வாறே மற்ற உண்மை நாயன்மார்களும் கூறினார்கள். அக்கினி புராணத்திலே

தீபகம் ரோசகஞ்சைவ மோசகந் தீர்க்கமிச |

(அத்துவாதீத பிரமலோகத்தைச் சார்ந்த) சிவதத்துவத்திலே தீபிகை, ரோசிகை, ஊர்த்துவகை முதலிய பல திவ்யபுவனங்கள் இருப்பனவாகக் கூறப்படுதலால் மகாநாராயணம், முண்டகம், பிருகதாரணியம், கைவல்லிய முதலிய உபநிஷதங்களிலே "பிரமலோகங்கள்" என்று பன்மையுறவும் கூறியவாமென்க. சிவோபாசனை செய்யப்பெறும் தானங்களும், பிரமலோகம், சிவலோகம், கைலாசம், சிதம்பரம் எனப்பெயர் படைப்பனவாம் என்பது சிவதத்துவ விவேகம், சிதம்பரபுராண முதலியவைகளாலும், அவற்றுக்கு மூலமாய் நின்ற சுருதிகளாலும் அறியப்படுவனவாம் என்பதையும் யாவரும் யூகித்தறிக. மேலே சொல்லிய ஐதரேய தலவகாரோபநிஷதங்களிலும், தேவார திருவாசக முதலியவைகளினுஞ் சொல்லப்படும் "சுவர்க்கலோகம்" "அண்டர் நாடு" முதலியன சிவலோகமெனப் பொருள்படுத்தப் படுவனவன்றி இந்திரனுடைய சுவர்க்கலோக முதலியவாகப் பொருள்படுத்தப்படுவனவன்றாம். சிவோபாசனை செய்யும் வைதிக சைவ யோகிகள் இந்திராதியருடைய சுவர்க்கங்களைப் பொருட்படுத்தார்கள் என்ற கருத்தினாலன்றோ ஸ்ரீஞானசம்பந்தர் திருச்சாய்க் காட்டுத் திராவிட அருட் சுருதியிலே, "மலர்க்கொன்றைத் தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே" என்று கூறியவாற்றால் அறியப்படும்.

தேப்ரம்மலோகேஷுபராந்தகாலே |

என்றதற்கு, "உமாசமேத சிவபெருமானுடைய காரிய மூர்த்தியாய்க் கொண்டு, எவர் விஷ்ணுவை உபாசிக்கின்றாரோ அவர்கள் வைகுண்ட லோகத்தை அடைந்து அங்குள்ளபோகமெல்லாந் துய்த்து இறுதியாகிய தேகாவசான காலத்திலே பின்னர்ச் சிவலோகத்தை அடைந்து முத்தராகின்றார்" என்று பொருள் கூறுவாரு முளர்.

தேப்ரம்மலோகேதுபராந்த காலே பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே |

என்னும் மந்திரத்துக்குப் பொருளாக

ப்ரம்மலோகே பரஸ்ய ப்ரம்மகல்ப்பஸ்யாவஸாநகாலே ஸர்வோத்க்ருஷ்டாம்ருதசப்தவாச்யம் மகேச்வரம் ப்ராப்ய முச்யந்தி |

பிரமலோகத்தின் கண்ணேயிருந்து பரமாகிய பிரமகற்பத்தின் முடிவுகாலத்திலே சர்வோத்கிருஷ்டராய் அமிர்த சப்தப்பொருளாயுள்ள சிவத்தை அடைந்து வீடுறுகின்றார் என்றும் கூறுவாருமுளர். அப்பயதீக்ஷிதரால் இயற்றப்பட்ட சிவதத்துவ விவேகமும் இரத்நத்திரய பரீக்ஷையும் (நீலகண்ட சிவாசாரியர் உரைத்தவாறு) பாசுபத ஞானயோகிகளுக்குப் புநராவர்த்தியில்லை (மீளப் பிறவியில்லை) என்று கூறி, கன்மயோகிகளுக்கு (நிர்க்குணோபாசகர்களுக்கு) மீளப்பிறவியுளது என்று உரைக்கின்றன. மேலே சொல்லியவாற்றால் "விசுத்த சத்துவர்" என்றது "விசுத்ததேகத்தினர்" மேலும், "பிரமலோகம்" என்றது ஆகியப் பிரம்ம சிவலோகத்தின் மேலும், "பிராந்தகாலம்" என்றது மகாசங்காரகாலத்தின் மேலும் பொருள் செல்லும். பிரதிபந்தத்தினாலே சரீரத்திலே தன்னை அறிதலாம் பிரமஸாக்ஷாத்காரம் எய்தாதவர்கள் (மாயாவாத நிர்க்குண) பிரமத்தின் காரியமூர்த்திகளாகிய பிரம விஷ்ணு ருத்திரராயினோருடைய சத்தியலோகம் வைகுண்டலோகம் கைலாசலோகம் என்பவைகளிலேயிருந்து அந்தக் காரியப் பிரமா முதலாயினோருடைய முடிவுகாலத்திலே பிரமஸாக்ஷாத்கார மடைதலாலாகிய முத்தியை அடைகின்றார் என்று மாயாவாதோபநிஷதக் கருத்தைத் தழுவி மீளப்பிறவி கொடுக்கும் தாழ்ந்த இந்த நிர்க்குணப் பிரமநிலைக்குப் பொருள் படுத்துதல் சாஸ்திரநுட்ப விசாரமில்லாமையினாலா மென்க. கைலாசம் பலவகைப் படுதலினால், ஈண்டுக் கூறிய காரியராகிய உருத்திரருடைய கைலாசத்துக்கும் துரியமூர்த்தியாகிய மகா சதாசிவருடைய (மகா) கைலாசத்துக்கும் பேதம் பெரிதாமென்க.

வைதிக பாசுபதோபநிஷதங்கள் வைதிக பாசுபதயோகம் வரையிலே பேசுமென வாயுசங்கிதை சொல்வதாலும், அந்த வைதிக பாசுபதயோகம் சிவாத்துவித நிலையாதலினாலும், சிவாத்துவிதச்செல்வராகிய நீலகண்டசிவாசாரியர் (லய போகாதிகாரமூன்றனுள்ளே இலயாவஸ்தையினதாய்)க் குடிலையினின்று வேறுபடாத சிவதத்துவத்திலிருந்தே சிருஷ்டி தொடங்கிக் கூறி, அதனையே முத்திஸ்தானமாக முடித்துப் பேசுதலினாலும், இவர்க்கிசையவே உமாபதி சிவாசாரியர் "நிலவுலகாயுதாதி நிகழ் சிவாத்துவிதாந்தம்" எனச் சமயங்களையெல்லாம் முதலு மீறுமாகத் தொகுத்துக் கூறினாராக, சைவ சித்தாந்தச் செல்வர் லோகாயுதமுதலிய புறப்புறச் சமயம் புறச்சமயம் அகப்புறச் சமயம் என்னும் மூவகைச் சமயங்களின் மேலாய பாஷாணவாதமுதல் சிவாத்துவித மீறாகிய அகச்சமயங்கள் ஆறையும்பற்றிப் பேசியவிடத்து இந்த அகச்சமயத்தின் முத்திநிலை அதிகாரயோகலயம் என்னும்மூன்று அவஸ்தைபீற்றிய சகள (மகேசன்), நிஷ்கள சகள (சதாசிவன்), நிஷ்கள (சிவன்) என்பது பொருள்படக் கூறினாராதலினாலும், வாதுளாகமம்

சிவதத்வம் மகாசேந நிஷ்களந்விதி கீர்த்திதம் |

சிவதத்துவத்தை நிஷ்கள மென்று கூறுகின்றமையாலும், துரிய உமாசகாயராகிய நிஷ்கள சிவனை இதயாகாசத்தின் கண்ணே வழிபடும் சிவாத்துவித வைதிகபாசுபதயோகிகளுக்கு முத்திஸ்தானம் (பிரமலோகமாகிய) சிவலோகத்துச் சிவசாரூப்பியமே யாதலினாலும், இந்த யோகபாதத்தினுந் தலையானது ஞானபாதமா மாதலினாலும், அது பற்றியே சிவாகமம்

வேதாந்தார்த்தமிதம் ஞாநம் | வேதஸாரமிதந் தந்த்ரம் | சித்தாந்தம் வேதஸாரத்வாத் ||

"வேதத்தின் பொருளே இந்த ஞானம் என்றும், வேதசாரமாயுள்ளது இந்தச் சித்தாந்தம் என்றும், சித்தாந்தம் வேதசாரமாயிருத்தலினு லென்றும்," கூறுகின்றமையாலும், இந்த ஞானபாதத்துச் சிவபிரான் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டை என்னும் ஞானத்திற்சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில்யோகம், ஞானத்து ஞானம் என்னும் அறிவுத்தொழின் மாத்திரையால் வழிபடப்படுவர் என்றும், இந்தக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் மூன்றின் நின்றோர் சுத்த தத்துவ புவனங்களிலே அபரமுத்தராக வைகியவாறே பரமுத்தியைத் தலைப்படுகின்றார் என்றும், அவ்வாறே உண்மை ஞானத்திற் சரியை கிரியை யோகம் என்னும் சிவபுண்ணியங்களுக் கெல்லாம் பயன் அவ்வவற்றிற் கேற்பச் சுத்த வித்தை முதலிய அதிகார தத்துவ போகதத்துவ லயதத்துவங்களில் வைகும்மந்திரர் மந்திரேசுரர் முதலாயினோர் புவனத்துச் சாலோக்கிய முதலிய அபரமுத்திப் பேறும் என்றும், வைதிக சைவசித்தாந்த சாஸ்திரமுடையார் சொல்கின்றாராதலினும் வைதிக பாசுபத ஞானயோக சிவாத்துவிதிகளுடைய முத்திநிலையும், வைதிக சிவாகம நெறிப்படி ஞானயோகபாதத்து நின்றாருடைய முத்திநிலையும் ஒன்றாய், சர்வசங்காரகாலத்திலே பரமுத்தியைக் கொடுக்கும் மகாகைலாச பரப்பிரம மகாசிவலோகத்திலே முற்றுமாமென உணர்க. ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் "ஈக்ஷதிகர்மாதி காணத்து" "பிரமலோகம்" என்றது பரப்பிரமமாகிய சிவபிரானுடைய லோகம் (சிவலோகம்) என்று பொருள் படுத்தியிருக்கின்றார். பிரமலோகம் என்ற உடனே "பிரமதிருச்யம்" என்றேனும், "பிரமமாகிய லோகம்" என்றேனும் "காரியப் பிரமம்" என்றேனும் சுருதி உபபிருமண சாஸ்திர விருத்தமாகப் பொருள் படுத்தி அநுஷ்டிக்குங்கால் அது காலவிளம்பத்தினலன்றி நேரே உண்மை முத்திக்கு வழிகாட்டா தெனவும் சாஸ்திரயுக்தமாகப் பொருள்படுத்தி அதன்படி ஒழுகுகின்றோனுக்கு உண்மையாகிய பயன் சித்திக்குமா மெனவும், ஏகான்மவாதிகள் தாம் கீழ்நிலைமுத்தியிலிருந்துகொண்டு மதங்கள் அனைத்தினும் மேலாகிய முத்தியை அடைந்தாராக நினைத்து எழுதுவதும் பேசுவதுஞ் செய்தல் நிலத்திலே கிடப்பான் ஒருவன் தான் இமாசலத்தைக் கடந்து மேன்மண்டலத்தில் ஏறியிருப்பதாக நினைத்துக்கொள்வதுபோலாம் எனவும் யாவரும் உணரக்கடவர், வேதசிரசுகளும் தேவார திருவாசகங்களும் வேதாந்த சூத்திரமும், உத்தரவேதமும், திருமந்திரமும் ஒரு கருத்தற மேலே சொல்லியவாறு நின்றனவாம் என்னுங் கருத்தினலன்றே, அவ்வைப் பெருமாட்டியார்

> தேவர்குற ளுந்திருநான் மறைமுடிவு
> மூவர்தமிழு முனிமொழியுங்—கோவை
> திருவாசகமுந் திருமூலர் சொல்லு
> மொருவாசக மென்றுணர்.

எனறருளிச் செய்தார். அருளியவாறே, அநுபவத்திலும் மேலே உரைத்தவாறு பொருளினுல் ஒத்து நிற்பவும் காண்கின்றேம். இதனுல் ஏகான்மவாதிகள் கூறும் விபரீதப்பொருள் பொருத்த மூடையனுவன் றென்பது அறியப்படும். மேலும்,

பராத்பரதரோப்ரம்ம தத்பராத்பரதோஹரி: தத்பராத் பீரதோரீச: |

பரத்துக்குப் பரமாயுள்ளார் பிரமா என்றும், அவருக்கு மேலாயுள்ளார் நாராயணர் என்றும், நாராயணருக்கு மேலாயுள்ளார் சிவனுர் என்றும் சிவஸங்கல்போப நிஷதம் கூறுமாற்றால், "பராந்தகாலம்" என்றதற்குப்பொருள் சொல்லுமிடத்து ஒவ்வோர் மதத்தாரும் தத்தமக்குக் கீழ்ப்பட்ட கடவுளுக்கே பொருந்தப் பொருள் செய்வர். பராந்தகாலம் என்றதற்கு விஷ்ணு உபாசகர் நாராயணர் பதத்துக்குத் தாழ்ந்த பதத்தினராகிய பிரமப்பிரளயக் கற்பத்துக்கும், சிவாத்துவிதிகள் சிவபதத்துக்குத் தாழ்ந்த பதத்தினராகிய விஷ்ணு பிரளய கற்பத்துக்கும், சைவசித்தாந்திகள் மகாப்பிரளய சங்காரகாலத்துக்கும் பொருள்படக் கூறுவாராயினர் என்பது புராணேபப் பிருமமணங்களால் அறியப்படுகின்றது. சிவாத்துவிதிகளுடைய கார்க்கி ஆகாசம் பிரமலோகமாகிய சிவலோகத்திலே முடிவதாகப் பிருகதாரணியத்திலும் புராணங்களினும் சொல்லப்படுதலால், வைதிகபாசுபதயோக சிவாத்துவிதிகளும் வைதிக சைவசித்தாந்திகளும "பராந்தகாலம்" என்றதற்குச் சொல்லும் பொருள் விரோதமுமுறு பொருத்தமுடையதேயாம்.

(16) அமிர்தம்—ஜாபாலத்திலே "இவைகள் அமிர்தத்தின் (சிவத்தின்) நாமங்களாம்" என்பது பொருள்பட

ஏதாநிஹவாம்ருதஸ்ய நாமதேயாநி |

என்று கூறினமையால், "அமிர்தம்" என்னும் பதம் சிவத்துக்குப் பெயராகக் கொண்டேம். இவ்வுண்மை சைவபாஷ்யத்து "அந்திராதிகரண" முதலியவைகளால் அறியப்படும்.

---

V.

(மகா சிவலோகத்தை அடைதற்கு உபாயம் உபதேசித்தமை).

> விவிக்ததேசேச சுகாஸநஸ்த:
> சுசி: ஸமக்ரீவசிர: சரீர: | (கூ)
>
> அத்யாச்ரமஸ்த: சகலேந்த்ரியாணி
> நிருத்ய பக்த்யாஸ்வகுரும் ப்ரணம்ய | (க0)
>
> ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விசுத்தம்
> விசிந்த்யமத்யேவிசதம்விசோகம் | (கக)
>
> அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம்
> சிவம்ப்ரசாந்தமம்ருதம் ப்ரம்மயோநிம் | (கஉ)
>
> தமாதிமத்யாந்த விஹீநமேகம்
> விபும் சிதாநந்தமரூபமத்புதம் | (கரு)

(இன்னும் வரும்.)

செந்திநாதையர்.

## திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரம்.

(முன் தொடர்ச்சி.)

### அறஞ்செய்யான்றிறம்.

அறஞ்செயான்றிறம், என்றது அறத்தைச் செய்யாதவன் கூறுபாடு; ஈண்டறம்புரியான் கூறுபீடு நுதலிவரும் பலசெய்யுட்டொகுதிக் காயினமையி னிது அன்மொழித் தொகை. அறமாவது தன்னை வந்திரந்தார்க்கும் இரவாதவர்க்கும் அவர் கேளாமுன் குறிப்பறிந்து மனமொழி மெய்களாலும் உதவி செய்தலாம். வினைக்கட்டறுத்தலின் அறமெனப் பட்டது; முதனிலை அறு. தன்னை வந்திரந்தாக் கவர் வேண்டியவற்றை மறுது கொடுக்க அறம் உண்டாதலின் இது முன்னதிகாரத் தோடியை புடைத்தாயிற்று.

எட்டிபழுத்த விருங்கனி வீழ்ந்தன்ன
வொட்டிய நல்லறஞ் செய்யாதவர் செல்வம்
வட்டிகொண்டாட் டியேமண்ணின் முகந்திடும்
பட்டப்பதகர் பயனறியாரே.

(பொழிப்புரை.) தம்முயிர்க்குறு துணையாகப் பொருந்திய அறம் புரியாதவரது பொருள் எட்டிமரம் பழுத்தபெரும் பழங் கீழ் விழ்ந்ததுபோலாம்; அப்பொருளையும் வட்டியால் மிகப்பெருக்கி நிலத்துட் புதைத்து வைக்குங் கீழ்மக்கள் அப்பொருளா லெய்தும் பயனையறிந்திலரந்தோ! எ-று.

(குறிப்புரை.) மா பழுத்த பழம் கீழ்வீழாது மேலிருந்தழியெய்தற் கருமையாம் போலாது எட்டிப் பழங்கனிந்து கீழ்விழினும் அதனாற் பயனின்றுமாறுபோல இவறித்திரட்டுவார்க்குச் செல்வம் அத்துணையெளிதிற் கிடைக்கப் பெறினும் அதனாற் பயனின்றென் றுவமைகொள்க. இன்ன வியல்புடையார் பொருள் நிலையுதலின்றிக் கேடுறுதலின் அந்நிலையாமையை விளக்கச் செல்வம் எனப்பொருட்குப் பெயர் கூறினார். வட்டி, பொருட்பயனுறுவார் அஃதுடையார்க்குக்கொடுக்கும் மேற்பொருள். முழுச் செல்வச் செலவான் எய்தும் பயனை யொழிக்கினும், அப்பொருட்கு வரும் வட்டியானுதல் அறம் புரியாதும், அறமொழியினும் தாமுந் துய்க்காதும் வாளா மண்ணுக் கிரையாக்குதல் பெரிதும் இழுக்குடைத்தென்பார் வட்டிகொண்டாட்டியே மண்ணின் முகந்திடும் பட்டப்பதகர்பயனறியாரே என்றார். கொண்டு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு; இதுவே பிரயோக விவேக நூலார்க்குங் கருத்தாதல் "கூறியவை யிரண்டானொடு" என்றதுறைக்கு அவருரைத்த வுரையானுணர்க; சேனாவரையரும் இதுபோல்பவற்றைச் சொல்லுரு பென்பர்; ஆட்டல், ஈண்டுப் பெருக்கல், முகந்திடும் ஒரு சொன்னீர்மைய. இச்சொல் அப்பொருட்டாதல் "வேலாண் முகத்தகளிறு" எனுந்திருக்குறளில் பரிமேலழகர் உரைத்தபொருட் கருத்தானுமுணர்க. பட்ட என்பது மிகுதியை யுணர்த்தும் ஒருரிச்சொல்; சட்டவென்பதுபோல; "பட்டப் பகல்" என வரும் வழக்குகளானு முணர்க. இவறன்மை யுடையார்க்குச் செல்வப் பேறும் அஃதிலார்க்கு வறுமைப் பேறுங் கைகூடிய தென்னையெனின்;—கழிந்த பிறப்புக்களில் செல்வம பெறுதற்காம் வினை நிகழ்த்தியதும், அறிவுபெறுதற்காம்வினை நிகழ்த்தியதும் இப்பிறப்பில் முறையே வந்தவர்களைப் பற்றினமையானென்றுணர்க; "இருவேறுலகத்தியற்கை" என்றார் ஆசிரியர் பெருநாவலரும். அற்றேல், ஊழிருந்தபடி யுவரிம்மையில் ஒழுகுதலின் அவரை யறம்புரியா ரென்றெள்ளல் சாலாதாம் பிறவெனின்;—அற்றன்று. உம்மையில் தம்முரிமை யறிவால் நிகழ்த்திய வினைப் பயனே யீண்டைக்குநுகர்ச்சியா மாதலின், இம்மை யறிவாற் செய்தலே மேற்பிறப்புக்கு நுகர்ச்சியாம்; ஆதலால், ஊழின்வழித் தம்முரிமை யறிவால் ஈண்டும் பிறண்டும் வினைநிகழ்த்தல் யார்க்கண்ணும் இனிது காண்டலின் அது சாலுமென்றுணர்க. தாமுநுகராது பிறர்க்குமுதவாது வைக்குஞ் செல்வம் பயனின்றென்றவாறும். (க)

ஒழிந்தனகாலங்களூழியும் போயின
கழிந்தனகற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்ததுபோலத் தம்பேரிடரியாக்கை
யழிந்ததுகண்டுமற மறியாரே.

(பொ-ரை.) காலமுலந்தன; ஊழியும் எத்தனையோ சென்றன; மனத்தாற் செய்யப்படுங் கற்பனைகளு மறைந்தன; ஒருகாலைக் கொருகால் உடல் நுணுகித் துன்பத்திற்கு நிலைக்களமான தம் யாக்கைகள் அழிந்தன; இவ்வியல்பெல்லாம் அறிந்து வைத்தும் மக்கள் அறம் புரிந்ததனு லெய்தும் பெரும் பயனை யறிந்திலர்; எ-று.

(கு-ரை.) காலம் இறைவனலன்றிப் பிறரால் வரம்பறுக்கமுடியாதது. ஊழிகாலத்தின் சினை கற்பனையாவது யாம் மாளிகைகட்டுது மென்றும், அரசாளுது மென்றும், பெரும் பொருளீட்டுது மென்றும், பேராசையும் பணிகொள்ளுதுமென்றும் வறியனுவான் கருதுதல். உயிர்க்கு நிலைக்களமான உடல்பல. பல்பிறப்புக்களினு மழிந்தபடினும் உயிர் நித்தமாதலின் தம்பேரிடர்யாக்கை யழிந்த என்றார். இப்பிறப்பில் நம்முடல் பல வழிந்தனவென்றறிய இல்லேமெனின்;—பலர் இறந்து படுதலைக் கண்கூடாயறிதலானும், இது போலவே கருதலளவை வாயிலாகப் பலவுடல் பல்பிறப்புக்களினும் அழிந்தமையறிதலானும் அது தெற்றெனத் துணியப்படுமென்க. அழிந்த, பலவின்பால் தெரிநிலை வினைமுற்று, அகரவீறு தொக்கது. அது சுட்டு; முதனூன்கடியினும் போந்தவற்றைக்குறித்தலின். அற்றேல் பலவுறி சுட்டாற் கூறாது ஒன்றறி சுட்டாற் கூறியதென்னை யெனின்;—காலம், ஊழி, கற்பனை, யாக்கை முதலியனவெல்லாம் அழிதற்றொழிலான் ஒத்தலின் அவற்றை யெல்லாம் ஒன்றுபடுத்து ஒன்றறிசுட்டாற் கூறினு ரென்க. செல்வத்தைப் புதைத்து வைத்துப் பிறிதோர்கால் எடுத்துக்கோடு மெனினும் எல்லாம் அழிதன்மாலையவாயிருத்தலின் அது சாலாதென்பார் மேற்செய்யுளில் கூறியதற்கு இச் செய்யுளில் ஏதுக்கூறினார். (உ)

அறமறியாரண்ணல் பாதநினையுந்
திறமறியார் சிவலோகநகர்க்குப்
புறமறியார்பலர் பொய்ம்மொழிகேட்டு
மறமறிவார்பகை மன்னிநின்றாரே.

(பொ-ரை). சிலர் அறத்தினால் வினையும் பயனறியாமையின் இறைவன் திருவடி பரவும் பேற்றையுமறியார்; அஃதறியாமையின் இறைவன் திருநகர்ப் புறத்தனுமாம் புண்ணியமிலராகிப் பழிபாவங்களைச் செய்வார். பலருடைய பொய்யுரைகளைக்கேட்டு மறத்தை யன்றிப் பிறிதொன்றையு மறியார்; அவர் இறைவனுக்குப் பகைவராய் நிலைத்துநின்றார்; இதென்கொலோ! எ-று.

(கு-ரை). அறத்தினால் வினையும் பயன், இம்மையிற் புகழுடம்பு நிறுத்தலும், துறக்கத்தின்கட் பல்வகைப் போகங்களையும் உளங்கொளத்துய்த்து அதில் உவர்ப்புற்று மெய்யுணர்ந்து இறைவன் கழல்சேறலுமாம். இறைவன்கழல் அடைவார்க் கிஃதொரு தலையான் வேண்டுதலின் "அறமறியார்" என்றதன்பின் 'அண்ணல் பாதநினையுந் திறமறியார்' என்றார். 'சிவலோகநகர்க்குப் புறமறியார்' என்றமையின் நிரயத்தகவயிற் கிடப்பா ரென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம். 'பலர் பொய்ம்மொழி' என்றது உலகாயிதர் கூறுவன. அவர் இருவினையும், கடவுளும், உயிரும் இல்லையென்றும், நஞ்செவ்வறிவாலும் புரையறிவாலுஞ் செய்வனவே இருவினையென்றும், மடவாரே கடவுளென்றும், அவர்மாட்டுத் துய்க்குமின்பமே பேரின்பமென்றும், நாற்பூதங்களும் மயங்குமயக்கத்தின்கட் டோன்றுவதே உயிரென்றும், நாளும் நமக்காவனவற்றையே தேடிக் கோடலன்றி யறம்புரிதல் பயனற்றதென்றும் பிறவாறும் உரைப்ப. மறம், பாவம். இறைவன் விதித்தவற்றை ஒரீஇ நடந்து தமக்குறுதி யல்லாதனவற்றைத் தேடுவார் இறைவனுக்குப் பகைவராவரென்று கூறினார். (௬)

இருமலுஞ் சோகையுமீளையும் வெப்புந்
தருமஞ் செய்யாதவர் தம்பாலதாகு
முருமிடி நாகமுரோணிகழலைத்
தருமஞ் செய்வார்பக்கற் றாழுகிலாவே.

(பொ-ரை.) அறம்புரியார் பல்வகைநோயாற் பிணிக்கப்பட்டுத் துன்புறுவர்; அறம்புரிவார்மாட்டு அவை தங்கா; எ-று.

(கு-ரை.) இருமல், காசம்; சோகை, குருதியை யுறிஞ்சி யுடல் வெளிறப் பரவுவதொரு நோய்; ஈளை, உயிர்ப்புக் காசம்; வெப்பு, சுரநோய்; உரும், உரு மேற்றான் வருந்துன்பம். இடி, இடிவிழுதல். நாகம், பாம்புகடித்தல். உரோணி, ஒருநோய், கழலை, குருதிக்கட்டி. தருமஞ் செய்யாதவர் பாவமாவன செய்தலின் இந்நோய்கள் வருதல் அவர்க்கொரு தலையென்றுணர்க; "அறத்தினூஉங் காக்கமு மில்லையதனை, மறத்தலினூஉங்கில்லைகேடு" என்றார் ஆசிரியர் பெருநாவலரும். தாழுதல், தங்குதல்; "தாழ்துணைத் துறந்தோர் தனித்துய ரெய்த" என்புழியும் இவ்வாறே பொருள் கூறினார் அடியார்க்கு நல்லார். இதில் அறமறப்பார்க்கு வருந்தீங்கு கூறினார். (௭)

பரவப்படுவார் பரமனையேத்தா
திரவலர்க்கீதலை யாயினுமீயார்
காகத்தேநீராட்டிக்காவை வளர்க்கார்
நரகத்தினிற்றிரோ நன்னெஞ்சினீரே.

(பொ-ரை.) தீயநெஞ்சினையுடையீர்! தேவராலும் யாவராலும் பரவப்படும் எம்பெருமானை வழுத்தாதும், நும்மை வந்திரப்பார்க்கு அவர் வேண்டிய தொன்றை யீயாதும், குண்டிகை யவ்வளவு நீர் முகந்துகுத்து இளமரக் காவை வளர்க்காதும் நரகத்திற்பட்டுத் துன்புறவா போகின்றீர்; எ-று.

(கு-ரை.) இறுதியொழிந்த வினைமுற்றுக்களை வினையெச்சமாகத் திரிக்க. 'நன்னெஞ்சினீரே' இழிப்புக் குறிப்பு; "தேவரனையர் கயவரவருந்தா, மேவன செய்தொழுகலான்" என்பதிற்போல. "இரவலர்க்கீதலையாயினுமீயார்" என்றார், இரவலர் எனுஞ் சொல்லே இரவை வல்லாரெனத் தெரித்தலானும், அத்துணையரிய தொழிலை மேற்கொண்டு தம்மை வந்தடைந்தார்க்கு அவர் வேண்டியவற்றை யீயாமை பெரிதும் வன்கண்மையுடைத் தாகலானும்; "இரந்து முயிர் வாழ்தல் வேண்டிற் பரந்து, கெடுகவுலகியற்றியான்" என்றிரவின் வன்பாட்டை ஆசிரியர் பெருநாவலருங் கூறினார். என்றால், தாமே ஒருவரைத் தேடியளிக்கும் அறத்தைச் செய்யாவிடினும் இரவலரை மறுத்துரைக்கு மதன்மேற்பட்ட பாவமொன்றின்றென்றபடியாம். அத்துணைவன்கண்மை யுடையார் உயிர்கண்மாட்டன்புறுதலும், இறைவனடிதொழுதலும் மறந்துஞ் செய்யாரென்பதாம். இளமரக்காவழிப்போவார்க்கு நீருநிழலும் பயந்து இன்பஞ் செய்தலானும், இறைவன் பூசனைக்காம் நறுமலரும் குழையுமுதவலானும் அதை வைத்தல் பெரும்பயன் பயக்கு மென்க. (௮)

வழிநடப்பாரின்றிவானோருலகங்
கழிநடப்பார் நடந்தார்கரும்பாரு
மழிநடக்கும் வினைமாசறவோட்டிட்
டொழிநடப்பார்வினை யோங்கிநின்றாரே.

(பொ-ரை.) வானோருலகத்திற்குப் போகும் வழியிற்சேறலின்றி அது கழிய இருளுலகத்திற்கு நடப்பார் வினைக்குட்பட்டார்; தம்மியல்பழியவரும் வினைமாசுதீர்த்து அஃதொழிய நடப்பார் வினைக்கு மேலோங்கி யறஞ்செய்வோர்; எ-று.

(கு-ரை.) அருத்தாபத்தியான் வினைக்குட்பட்டா ரென்பது வருவித்துரைத்தாம். கரும்பார், ஒருவகை நிரயம்; அதில் இருள் செறிந்திருத்தலின் அப்பெயர் போந்தது; "ஆரிருளுய்த்துவிடும்" என்புழியும், பரிமேலழகர் இவ்வாறே யுரை கூறினார். அறஞ்செய்வாரே வினைமாசுதீர்ப்பா ரெனப்படுவார், ஏனையோரன்னரல்ல ரென்பதாம். வினைமாசு பண்புத்தொகை. கழி, அழி, ஒழி எனும் வினையெச்சங்களின் ஈறுமெய்யொடுந் தொக்கன. வினையோங்கி, குவ்வுருபும் மேலும் விரிக்க, குவ்வுருபு எல்லைப்பொருளதாய் விரிந்து நின்ற மேல் என்னும் இடப்பெயர் கொள்ளும்; என்னை? 'இரண்டு நான்கைந்தொடு மெழுமே நீக்கம்" என்றார் இலக்கணக்கொத் துரையாசிரியராதலின். (௯)

கனிந்தவரீசன் கழலடிகாண்பர்
துணிந்தவரீசன்று றக்கமதாள்வர்
மலிந்தவர்மாளுந் துணையுமொன்றின்றி
மெலிந்தசினத்தினுள் வீழ்ந்தொழிந்தாரே.

(பொ-ரை.) அறத்தான் அன்புகனிந்தவரே இறைவன் வீட்டின்பத்தை யெய்துவர்; அறந்துணிந்தவரே இறைவன் துறக்கத்திற்கு அரசராவர்; இங்ஙனமின்றிச் செல்வத்தைப் பெருக்கித் தாமே யுண்டு களித்துப் பொலிவெய்தினோர் இறுதிக் காலத்துத் தம்மைத் தாங்குந் துணையைக் காணாது தாம் மெலிதற்குக் காரணமான கூற்றுவன் சினத்தீயினுட் கிடந்தழிவர்; எ-று.

(கு-ரை.) இம்மையிற் புகழ்பொருள்பற்றி யறம்புரியாது அன்பின் வழித்தாக ஓவாது அறஞ்செயப்படுதலான், அன்புதழும் பேறி ஏனையுலகவின்பங்களிற் கருத்துருது பேரின்பம் பயக்கும் இறைவன் கழலடியை யெய்துவ ரென்பது பற்றிக் 'கனிந்தவ ரீசன் கழலடி காண்பர்' என்றார். இதன்மேன் மூன்றுசெய்யுளானும் அறம்புரிவார்க்கு வருமின்பமும் அது செய்யாதார்க் குறுந்துன்பமுங் கூறினார். (எ)

இன்ப மிடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்ப மதுகண்டு மீகிலாப் பேதைக
ளன்பிலார் சிந்தை யறமறி யாரே.

(பொ-ரை.) இம்மையில் நுகரும் இன்பத்துன்பங்கட்குக் காரணமாவது உம்மையிற்செய்த நல்வினை தீவினையே யென்பதியாவர்க்கு மொப்ப முடிந்தது; இம்மை அறம்புரிதலான் வரும் நல்வினையும் கீழ்ப்பிறப்புக்களில் இன்பத்தையே பயக்குமென்பதைக் கண்டு வைத்தும், இரவலர்க்கும் ஏனையோர்க்கும் ஈயாப் பேதைகள் தாமே தம்மீது அன்பிலர்; அதுவேயன்றியும், சிந்தையினும் அறத்தினியல்பறியார்; எ-று.

(கு-ரை.) உலகாயிதர் முதலாயினார்க்கு ஊழுண்மை உடம்பாடின்மையின் யாவர்க்கு மொப்பமுடிந்த தென்றல் அவ்வியாத்தியென்னுங் குற்றமுடைத்தா மெனின்;—அறியாது கூறினாய். எச்சமயத்தாரேனும் தாந் துன்புறுங்கால் தங்கொள்கை மறந்து "இது எம்மூழ்வினைப் பயன்" என்றுரைத்தல் காண்டுமன்றே? உலகாயிதர் வாய்மதங்கொண்டூழின் றெனக்குழறித் திரியினும், அவர்க்கும் அம்மன நிகழ்ச்சி நிகழ்தல் நுண்ணிதின் ஆராய்வார்க் கினிது விளங்கும். ஊழுண்மை காட்சியானுங் கருதலானும் அறியவேண்டாது மக்கட் கியல்பில் புலப்பட்டுக் கிடக்கு முண்மை உலகவழக்கினுள் யாவர்மாட்டும் அறிந்து கோடலெளிதேயா மென்க. மக்கட்கியல்பில் நிகழும் இத்தகைய உண்மைகள் பிறசமயத்தாற் கூறப்படுவனவன்றிச் சைவசித்தாந்தத்தாற் கூறப்படுவன வென்பதூஉம் நடுவுநிலைமையோ டறியலுறுவார்க் கினிது விளங்கும். பின்னைச் செய்த நல்வினையால் இம்மையில் இன்பமும், தீவினையால் துன்பமும் போதரலின், இம்மையில் அறம்புரிதலாகிய நல்வினை செய்தார்க்கு ஏனைப் பிறப்பில் இன்பமே நிகழுமென்பது உம்மைப் பிறப்பில் நிகழ்ந்தநிகழ்ச்சிபற்றி யறிந்து கோடலின் 'இன்பமது கண்டும்' என்றார். அறிவுடைமைக்குப் பயன் தமக்கு இன்பம் பயப்பவற்றை விரும்பிச் செய்தலுந் துன்பம் பயப்பவற்றை நீத்தலுமாம். கீழ்ப் பிறப்புக்களில் தமக்குத் துன்பம் பயக்கும் அறஞ்செய்யாமையை யிவர் விரும்பிச் செய்தலின் 'ஈகிலாப்பேதைகள்' என்றார். அறம்புரியாமையாற் பிறர்மாட் டன்பிலராகிய இவர் தம்மாட்டும் அன்பிலரென்றபடியாம்; "தன்னைத்தான் காதலனாயினெனைத்தொன்றுந், துன்னற்க தீவினைப்பால்" என்றார் ஆசிரியர் பெருநாவலரும். இன்பமென்று இடரென்று எனக்கூட்டுக; என்னை? "என்று மெனவுமொடுவு மொரோவழி, நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்" என்றாராகலின் "பெயர்ச்செல் வெண்ணே யென்றாவெனா வெண், ணான்குந்தொகைபெறும்" என்பவாகலின், இரண்டெனத் தொகை கொடுத்தார். இச் செய்யுளில் பிறர்க்கறஞ்செய்யார் தமக்குத் தீங்குசெய்தார் என்று கூறினார். (அ)

கெடுவது மாவதுங் கேடில் புகழோ
னடுவல்ல செய்தின்ப நாட்டவு மொட்டா
னிடுவது மீவது மெண்ணுமி னின்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே.

(பொ-ரை.) நடுவாற்பொன்றாப் புகழுடையான் தன்னடுவுநிலைமையின் வழீஇத் தனக்கின்பந்தருமேனும் சிலர்க்குத் தீமையும் சிலர்க்கு நன்மையுஞ் செய்து தனக்கின்பத்தை நிறுத்தான், அது பின் துன்பம் பயத்தலின்; அதுபோல, இடுதலும் ஈதலுஞ் செய்யக் கருதுமின், அது இன்பமே பயத்தலான்; அதுவன்றி யின்பங்கெடுவது செய்யின் அது நடுவுநிலைமையில்லா உயிர்களின் செய்கையாம்; எ-று.

(கு-ரை.) நடுவுடையான் "பகுதியாற்பாற்பட் டொழுகு" தல், யாவர் மாட்டும் ஒருபடித்தான அன்புடைத்தாதல். அதுபோல யாவர் மாட்டும் இன்பந்தருவனவற்றையே நிகழ்த்துக எனவுவமைகொண் டாசிரியர் ஆணைதந்தா ரென்றுணர்க. பதியினியல் பியாவர்க்கும் இன்பமாவனவற்றையே புரிதலும், பசுவின்றன்மை யாவர்க்குந் துன்பமாவனவற்றையே புரிதலுமாம். மலத்தினீங்கிச் சிவத்துவமெய்த வேண்டுவார் பசுவின்றன்மைகளை விட்டுப் பதியின்றன்மையான அறம் புரியக்கடவர் என்றவாறும். நாட்டவு மொட்டான் என்னுமிருசொல்லும் "என்னைவாட்டந் திருத்துவதே" என்ற திருக்கோவையாரிற்போல ஒரு சொன்னீர்மைய. இடுதல் சிறப்புவினை. சாத்தற்குச் சோறிட்டான், முக்கண்மூர்த்திக்குப் பூவிட்டான் என்பவற்றிற்போல. ஈதல் பொதுவினை. இடுதல் வினை யார்மாட்டும் வரும். ஈதல் இழிந்தோன்கண் வரும். படு, கெடு; "எற்படவருதியர்" எனுங் குறிஞ்சிப் பாட்டிற்போல. பசு, பாசத்தாற் பிணிக்கப்பட்டது. இதனான் முத்தியெய்துதற்கு வாயில் அறமே யெனவற்புறுத்தார். (கூ)

செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராதே
யில்லங் கருதி யிறைவனை யேத்துமின்
வில்லிற வெய்த விற்குறி யாமே.

(பொ-ரை.) இவர் செல்வரெனக்கருதி யிவறன்மையுடைய புல்லறிவாளரை வணங்கி மக்கட் பிறவிப் பயனிழக்காது வீடுபேற்றின் பொருட்டு முக்கட்பெருமான் திருவடி பரவுமின்புலவீர்காள்! அவ்வாறு செய்திரேல், வில்லொடிய எய்த

குறிதப்பாமைபோல் நமக்கு வீடுபேறு ஒருதலையான் எய்தும்; எ-று.

(கு-ரை.) இவறன்மையுடையார்க்குக் கழிந்த பிறப்பிற் செய்ததவத்தாற் கிடைத்த பொருண்மிகுதிபற்றி யவர் அறிவுடையராயு மிருப்பரெனக் கருதிச் சேறற்க, அவர் நல்லறிவுவேண்டித் தவஞ்செய்யாமையின் என்பார் 'புல்லறிவாளரைப் போற்றிப் புலராதே' என்றார். பல்வகைப் பிறவியுள்ளும் சிறப்புணர்ச்சியுடைய மனனுணர்வுடைய பிறவி மக்கட் பிறவியேயாதலான் அதுகொண்டு வீட்டுநெறியெய்தற்கு முயல்க வென்பார் 'இல்லங் கருதியிறைவனை யேத்துமின்' என்றார். பிறவும் மனனுணர்வுடைய வெனப்படுமாயினும் அவற்றிற் கம்மனனுணர்வு சிறப்புற நிகழாமை முதற் பத்திரிகையில் "உயிரிலேனுணர்வுவாயில்" எனுஞ் சித்தியார் செய்யுளுரையிற் கூறிப்போந்தாம், ஆண்டுக்கண்டுகொள்க. பிறவும் இல் எனப்படுமேனும் அழியாது என்றும் உள்ளது வீடேயாகலான் ஈண்டது வீட்டை யுணர்த்திற்று. புலராதே வினையெச்சம்; அறம்புரியாரை யடுத்துவாழும் இரவலர்க்கு ஈண்டாசிரியர் உபதேசமொழி யறிவுறுப்பா ராயினர். இவறன்மையுடையார் கொடார்; கொடுக்கினும் அவர் தரும்பொருளினும் அழியாப் பெரும்பொருள் தரும் இறைவனையேத்துமினென்றபடியாம். இதனான், இரவலர்க்கு நன்மை கூறினர் ஆசிரியர் திருமூலனாரென்க. (ம)

*R. S. வேதாசலம்பிள்ளை.*

அருணந்திசிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## சித்தியார் அளவையுரை.

(முன் தொடர்ச்சி.)

அனாதியே யமலனாய
வறிவனா லாகமந்தான்
பினாதிமா றின்றிப்பேண
றந்திர மந்திரந்தான்
மனாதிகளடக்கித் தெய்வம்
வழிபடும் வாய்மையாகுந்
தனாதியீறிலாதான் றன்மை
யுணர்த்துத லுபதேசந்தான்.

(கருத்துரை) 'காண்டல்வாயில்' எனுஞ் செய்யுளிற் பகுத்துரைத்த முறையே காண்டல் கருதல்களி னிலக்கணங் கூறியீண்டுரையளவைப் பாகுபாடான தந்திரம் மந்திரம் உபதேசம் என்பவற்றின் இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(பொழிப்புரை.) இயல்பாகவே பாசங்களி னீங்கினவனாகிய இறைவன் உரைத்தருளிய ஆகமந்தான் கன்மகாண்டம், உபாசனாகாண்டம், ஞானகாண்டம் என முத்திறத்ததாம்; அவற்றுள் கன்மகாண்டம்பற்றி முன்பின் மாறுகோளின்றி மயக்கறத் துணர்தல் தந்திர வுரை எனப்படும்; உபாசனாகாண்டம்பற்றி மனம் பொறிவழிச் செல்லாதடக்கி முதல்வனை வழிபடுதல் மந்திர வுரை யெனப்படும்; முதலுமிறுதியுமில்லா இறைவன், உயிர், மலம் இவற்றின் றன்மைகளை மாணாக்க னுளங்கொள வுணர்த்தல் ஞானகாண்டம் பற்றிய உபதேச வுரை யெனப்படும்; எ-று.

(குறிப்புரை) இறைவன் நூலுரைத்தா னென்றல் பொருந்தாதாம் பிறவெனின்;—அறியாது கூறினாய், மலத்தின் வாய்பட்டு அறிவின்றிக் கிடந்த உயிர்க்குக் கருவிகளைக் கொடுத்துச் சிறிதறிவை விளக்கு மிறைவன், அது கருவிபெற்றுழியே எல்லா முணரப் பெருமையான் அது தன்னியல்புந் தலைவ னியல்பும் அறியத் தெருட்டுதற் பொருட்டு நூலுரைத்தா னென்று கோடுமாகலின் அது பொருந்தாமை யாண்டைய தென்க. அது கிடக்க, வேதம் சுயம்புவா யுள்ளது, முதல்வனுரைத்தா னென்றல் வேண்டா என்று கூறும் ஒரு சாரார் மதம்பற்றி யவ்வாறு கோடற்கண்வரும் இழுக்கென்னையெனின்;—வேதம் என்பது உண்மைப் பொருளை யறிவுறுக்கும் எழுத்தானாய சொற்கூட்டமே யன்றிப் பிறிதன்றே! சொல்லென்பது பொருளை யறிதற்கிட்ட குறியீடன்றிப் பிறிது மன்றே! ஆகவே, பொருளைக் கண்டா னொருவன் அதற்கொரு குறியிட்டாளுமாறுபோல, இறைவனும் பொருளை யறிவுறுத்தற்கிட்ட குறியீடே வேதமெனப் பட்டது. அங்ஙனங் குறிதந்துரைப்புழி ஆதியும், அவ்வுரை கழிந்துழியந்தமு முடைத்தாகலான் அது சுயம்புவாதலும் நித்தியமாதலும் யாங்ஙன மென்பது. அற்றேல் அதை நித்தியமென்றுரைத்த கருத் தென்னை யெனின்;—நித்தியமும் சுயம்புமல்லாவதை உரைக்கும் பொருள் நித்தியமுஞ் சுயம்புமாகவுள்ளதாகலானும், அப்பொருட்குத் தொடர்ப்பாடுடைய உணர்வு தோன்றுதலின் இடையிடை யழிந்துறுமஃது (வேதம்) மறித்து மறித்து முரைக்கப்பட்டு வருதலானும் அவ்வாறு சொல்லப்பட்ட தென்றறிக. "சொல்லென்பதுபொருளுந் தானும் பேதமின்றி யபேதமாதற் குரியது" என்பாருமுளரா லெனின்;—பொருள் என்பது அழியாது என்றுமுள்ளதுவாம், சொல்லென்பது இடையிடையே யழிந்துறுவது. அத்தகைய பொருளுஞ் சொல்லும் ஓரிலக்கணத்தவன்மையின் அவை அபேதமாதல் யாங்ஙனம். சொல்லுரைத்துழிப் பொருளுணர்வு தோன்றுதலானும், பொருளைக் கண்டுழிச் சொல்லுணர்வு பெறுதலானும் இரண்டும் அபேதமாமெனின்;—ஆண்டுச் சொல்லுரைத்துழிப் பொருளே தோன்றுது பொருளி னுணர்வு தோன்றுதலானும், அச்சொல்லுரையாதவழி யவ்வுணர்வு தோன்றாமையானும் இதுபோலவே சொல்லுணர்வும் பெறுதலானும் அவ்வுணர் வெழுப்புதற் கருவி சொல்லாமன்றிச் சொல்லே பொருளாகாமையானும் அஃதடாதென்பதாம். சொல் பேதமாமென்பதும் பொருந்தா தென்றுணர்க. சொல்லும் பொருளும் பேதாபேதமாமென்பதூஉம் அவ்வாறாயினும் அவற்றிடை நிகழுமுணர்ச்சி சொல் கருவியாநிற்றலாற் பெறப்படுவ தென்பதூஉம் ஈண்டுக் கூறியவாற்றா னினிது விளங்கும். சேனாவரையர் சொன்னிகழ்ச்சிக்கும் பொருளிடமே யாமென்று கூறினாரா லெனின்;—சொல்லின் பொருட்டுப் பொருள் நிற்காது, பொருளின் பொருட்டே சொல் நிற்றல் கண்கூடாயறியப் படுதலின் அவ்வுரை போலி யென்றொழிக. பொருளுணர்தற்குச்

சொல் கருவியா மென்றறிக. ஆசிரியர் நச்சினார்க்கினியர்க்கும் இதுவே கருத்தாதல் அவர் "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே, யஃறிணையென்மனாரவரலபிறவே, ஆயிரு திணையினிசைக்கு மனசொல்லே" எனுந்தொல்காப்பியச் சூத்திரத்திற் குரைத்தவுரையா னுணர்க. இந் நுணக்கங்களையறியாத பிரயோக விவேகாசிரியர் நச்சினார்க்கினியா ரறியா துரைத்தா ரென்பர். இன்னும் "'பொருண்மை தெரிதலுஞ் "சொன்மை தெரிதலுஞ் சொல்லினாகும்' எனக் காரணமாக "வும், 'கொடையெதிர் கிளவி' எனச் சம்பிரதானமாகவும், "'முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலு—மிருமொழி "மேலு மொருங்குட னிலையலும்' என அதிகரணமாகவும், "'அதிர்வும் விதிர்ப்பு நடுக்கஞ் செய்யும்' 'ஆடூஉ வறிசொன் "மகடூஉவறி சொல்' 'முதலறிகிளவி சினையறிகிளவி' 'அம் "மகேட்பிக்கும்' எனக் கருத்தாவாகவும் சொல்லைக் கூறுவர், "அவை யெல்லாம் உபசார மென்க. 'கமநிறைந்தியலும்' "'உருவுட்காகும்' 'செல்லலின்னலின்னாமையே' 'எல்லே "விளக்கம்' 'கொல்லேயையம்' எனச் சொல்லும்பொருளும் "பேதமின்றி அபேதமாகக் கூறுதலின், தொல்காப்பியர்க்கும் "அதுவே கருத்தென்க" என்றுங் கூறினார். சொல்லைக் காரணமாகவும், கொள்வோனாகவும், இடமாகவும், கருத்தாவாகவும் கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார் ஒற்றுமையாகவுங் கூறியிருக்க இவற்றுள் ஒற்றுமையாகக் கோடலே யவர் கருத்தென்பதிவரியாங்ஙன மறிந்தார்? கரியுரைத்தலின்றி யிதுவே யவர் கருத்தென்று தன் மதம் நிறுவவுரைத்தல் வழக்குநெறியன்றென மறுக்க. பெயரியலுட் சொல்லிலக்கணங் கூறியவெடுத்த 'பொருண்மை தெரிதலுஞ் சொன்மை தெரிதலுஞ் சொல்லினாகு மென்மனார் புலவர்' எனுஞ் சூத்திர யாப்பின்கண்ணே யாசிரியர் தொல்காப்பியனார், காரணமுதலியவற்றுட் சொல் இன்னதா மென்றுங் கூறுவாரன்றிப் பிறண்டுக் கூறுவரல்லர். சொல்லிலக்கணங் கூறுமிச் சூத்திரம் சொல்லைக் காரணமாகவே கொண்ட தென்பது அவர்க்கும் உடன்பாடாதலால் இதுவே ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தென்றுகோடும். இஃதொழியப் பிறண்டுக் கூறியவை உபசாரமா மென்றறிக. ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தறிந்து ஆசிரியர் நச்சினார்க்கினியா ருரைத்தனராக நடுவுநிலைமையோடந்நுணக்கத்தையாராய்தலின்றி வடமொழி மதத்தைத் தமிழ் நூலுட்கொண்டுவந்து புகுத்தப் பிரயோக விவேகாசிரிய ரிங்ஙன முரைத்தாராதலின் அவர் உரைபோலி யென்றொழிக. இதனால் தொல்லாசிரியர்க்குச் சொல்பொருளையுணர்தற் கருவியேயாமென்பது துணிவென்றறிக. முதல்வனருளிய நூல்கள், அகத்தியம், தொல்காப்பியம், இறையனாரகப் பொருள், திருவாசகம், திருக்கோவையார், தேவாரம், சிவஞானபோதம், திருக்குறள் முதலியவும் பிறவுமான தமிழ் நூல்களும் வேதசிவாகமங்களும் பிறவுமாகிய வடமொழி நூல்களுமாம். அகத்தியமுந் தொல்காப்பியமுமிறைவனூலென்ற தென்னை! அவற்றையாக்கியோர் குறுமுனியுந் தொல் காப்பியருமன்றோ வெனின்;—அறியாது கூறினாய், அகத்தியனார், வடமொழிச் சங்கத்தார் செருக்குற்றமையின் அவரொடுகலாய்த்து முருகவேளை "வடமொழியினு மினிய மொழி யொன்றெனக்குத் தருக. யான் செருக்குற்றவிச்சங்கத்தாரை வேறற்கு" என்றிரக்க இயலிசை நாடக மெனப் பாகுபட்டுக் கிடந்த தமிழ்மொழியை யவர்க்கறிவுறுத்து இம்மொழி தென்னாட்டில் மிக்கு நடை பெறுகின்றது ஆண்டுச் சென்றிதைப் பெருக்குக. எனக் கூறினராக அதைப்பெற்று வடமொழிச் சங்கத்தாரைப் புறக்கொடை கண்டு தென்னாடு போந்து மலயமிசை யிருந்து முருகவேள் தனக் கறிவுறுத்த இயலிசை நாடகப் பகுதிகளை வரிவடிவாக்கித் தொல்காப்பியர் முதலாயினோர்க்குக் கற்பித்தா ரென்பவாகலின், அகத்தியம் இறைவனருளிய நூலேயாமென்க. அவற்றைப் பாகுபடுத்தித் தன்பெயர் நிறுவினார் அகத்தியரென்க. அவ்வகத்தியத்துட்கூறிய முப் பகுதிகளும் பலபடவிராய்க் கிடந்தமையாற் சிற்றறிவுஞ் சின்னாளுமுடைய மக்கட்கவை முழுதுமுணரக் கூடாப் பெருநூலா யிருந்தது. இருந்தது கண்டு தொல்காப்பியர் அவ்வகத்தியத்துட் கிடந்த இயற்றமிழை வேறு பிரித்து நெறிப்படுத்துத் தொகுத்தாராகலின் அது தொல்காப்பிய மென அவர் பெயர்பெற்ற நிலவிற்றென்றலின் அதுவு மிறைவனருளிய நூலேயாமென்க. இதுபற்றியன்றே தொல்காப்பியரோ டொருங்கு கற்ற மாணாக்கரும், தொல்காப்பிய மரங்கேற்றவைக் களத்திருந்தது கேட்ட வருமான ஆசிரியர் பனம்பாரனார் புலமியற்றி யென்னாது "முந்துநூல்கண்டு முறைப்பட வெண்ணிப், புலந்தொகுத் தோனே" என்றுபாயிரத் துரைத் தருளினார். அல்லதூஉம், தொல்காப்பியக் களவியலுட் கண்ட சூத்திரங்களிற் பல இறைத்திணையுருவமாறுபாட்டோடு இறையனார் களவியலுள்ளுங் காணப்படுகின்றவற்றின் உண்மை நோக்குவார்க்கு 'அன்பினைந்திணை' முதலிய அறுபது சூத்திரங்கட்கு மிறைவனாகிய மாதேவனே தொல்காப்பியத்தையும் ஆக்கியோனென்பதினிது விளங்கும். திருவாசகந் திருக்கோவையாரையாக்கியோர் திருவாதவூரடிகளென்றலின் அவற்றிற்கும் மாதேவனே கருத்தாவென்றல் பொருந்தாதெனின்;—திருவாதவூரடிகள் முற்றறிவுடையாராதலினாலும், "உயிர்தானுஞ் சுவானுபவமொன்றினுக்குமுரித்தே" என்றுண்மை நூல் கூறிய இலக்கணத்துளிவர்படுதலின்றி வரம்பிலாற்றலுடைய முதல்வனாற் செயத்தகும் பல அற்புதங்கள் நிகழ்த்ததலானும், "கல்லாமனத்துட் கடைப்பட்ட நாயேனை" "என்னப்பனென்னொப்பி லென்னையுமாட்கொண்டருளி" "ஏழைத்தொழும்பனேன்" "அறவையேன்மனமேகோயிலாக்கொண்டு" என்றற்றொடக்கத்தனவாகவரும் இவர் திருவாக்குகளெல்லாம் உலகத்தாரை நோக்கிக் கூற வெழுந்தனவாகலானும், இலக்கணக்கொத்தாசிரியர் "ஸ்ரீமாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம்" என்றுரைத்தலாலும் இவர் சிவமே யென்பதூஉ மிவர் திருவாய்மலர்ந்தருளியன சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியனவே யென்பதூஉம் பெறுதுமாகலின் அது பொருந்தாமை யாண்டையதென்க. அன்றேலஃதாக, இலக்கணக் கொத்தாசிரியர் "ஸ்ரீமாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம்" என்றதன்றி, மாணிக்கவாசகர் சிவனே யென்பது திண்ணம் என்றிலாரெனின் ;—அங்ஙனங் கூறின் அவர் சிவனென்பதெற்றாற் பெறுதுமென்று வினவுவார்க்கிறுக்க வேண்டுத

லின். "அறிவால்" என ஏதுக்கூறினர்; மேற்கோள், ஸ்ரீமாணிக்கவாசகர் சிவனே யென்பது திண்ணம், ஏது, முற்றறிவுடைமையால், உதாரணம், ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானேபோல, எற்றல், இவரும் அன்னர், முடிவு, ஆதலின் இவர் சிவனேயென்னுமிக்கேவலான்னுவயி அனுமானத்துள்ளும்வைத்துக்கண்டு கொள்க. தேவாரம் அருளிய ஆளுடையபிள்ளையார் ஆளுடைய வடிகள் ஆளுடைய நம்பிகள் முதலாயினரும் இறைவன் கொண்ட திருக்கோலங்களேயாமாதலான் அவருரைத்தனவும் இறைவனருளியவேயாம். ஆளுடையபிள்ளையார் முருகக்கடவுளவதாரமென்பதை மறுப்பாருமுளராலெனின் ;—சேக்கிழார் பெருமானே பிள்ளையாரைப்பல்வகையிடத்துஞ் சிவபெருமானுக்குத் தனிப்புதல்வரென்றுரைத்தலானும், இறைவன் திருவிளையாடல்களைக் கூறவந்த ஆலவாய்ப்புராணத்துள் ஆளுடையபிள்ளையார் சமணிருள்புரவிய மதுரையில் அஃதிரியச்சைவநெறி பெருக்குவித்த பெருமை கூறப்படலானும், பசுக்கட்குஞானங் கைவந்தழிச்சிவதரிசனப்பேறெய்துவனவாக ஆளுடைய பிள்ளையார்க் கங்ஙனமின்றிச் சிவதரிசனத்தின் பின்னர் ஞான நிகழ்ந்ததாகக்கூறப்படலானும், அருணகிரிநாதர்முதலிய திருத்தொண்டரும் அவரை முருகக்கடவுளவதாரமென்றே யோதலானும் அங்ஙனங் கூறுவார்கூற்றுச் செற்றம்பற்றியெழுந்ததாமாகலான் அதுபோலியென்றொழிக. சிவஞானபோதம், மக்களுயிர்க்குறுதி பயக்கும் ஞானத்தைப் பன்னிரண்டு சூத்திரங்களாக முதல்வனால் அருளிச்செய்யப்பட்ட தமிழ் நூல். இதை இரௌரவாகமத் திறுதியிலுள்ள பன்னிரண்டு வடமொழிச் சுலோகங்களினின்றும் மொழிபெயர்த்தார் ஆசிரியர் மெய்கண்டதேவநாயனாரென்றுமுரைப்பர் ஒருசாரார் ;—திருவாதவூரடிகட்குத் திருப்பெருந்துறையில் முதல்வன் உபதேசித்தருளிய நூல் சிவஞானபோதமென்று பெறுதலானும், திருவாதவூரடிகள் தமிழ்ப் புலமையுடையராதலின் அவர்க்கிறைவன் தமிழிலன்றி வடமொழியிலதை யறிவுறுத்தல் சாலாமையானும், அவ்வாறுமொழிபெயர்த்த நூலாயின் ஏனையாசிரியரைப்போல் இன்னதினின்றும் மொழி பெயர்த்துரைத்தா மென்றாசிரியர் மெய்கண்ட தேவநாயனார் கூறுவர், அங்ஙனமியாண்டுங் கூறாமையானும், மொழிபெயர்த்த நூலாயின் வழிநூலெனப் படுவதல்லது முதல்நூல் எனப்படாதாகவும் இதற்கு முதனூலெனும் பெயர் பண்டைக் காலந்தொட்டு வழங்கப்பட்டு வரலானும், வடமொழியிற் சிவாகமங்களிற் பரக்க ஞானவியல்புரைத்த முதல்வன் இங்ஙனஞ் சுருக்கியுரைத்தல் வேண்டாமையானும், அவ் வடமொழிப் பயிற்சியில்லா ஏனையோர்க்கே அங்ஙனம் பரக்கக் கூறாது சுருக்கி யுரைக்க வேண்டுதலானும், ரௌரவாகமத்தின் முதலிடைகளிற் சிதர்ந்து கிடப்பவையைபுபற்றி யுரையாது இறுதிக் கண்ணே யொருங்கு தொகுத்துக்கூறல் வேண்டாமையானும், அங்ஙனந் தொகுத்துரைத்தார் தமிழ்ச் சிவஞானபோதத்தைக் கண்டு மொழிபெயர்த்த பிற்காலத்தரேயாமாகலானும் சிவஞானபோதம் முதல்வனருளிய தனித்தமிழ் நூலேயாமென்பதூஉம், அற்றேல் மெய்கண்டதேவநாயனார் அருளிய தென்பதென்னையெனின் அவர் வாயிலாகப் பிற்காலத்து வெளிப்போந்த தென்பதுபற்றியே யென்பதூஉமறிது மென்க. திருக்குறள் தமிழ்வேதமேயென்பதற்கு அதற்கு வழங்கும் பெயர்களே சான்றுமாகலானும் திருவள்ளுவமாலையுங் கரிபோக்குமாதலானு மென்பது. திருக்குறளாசிரியரால் கடைச் சங்கமழிந்தது என்றுரைப்பாருமுளர் ;—அது வேத வழக்கொடு மாறுபடுவோர் சொல்லினும் அடிப்பட்ட சான்றோருரையார். என்னை? கடைச் சங்கமேறியிருந்து தமிழாராய்ந்த நக்கிரர் முதலாயினர் இறைவனருள் பெற்றுச் செருக்கறுத்துத் தவத்தான் மனந்தூயராய பெரியோராதலான் திருக்குறட்குக் குறையுரையாராதலானும் அன்றியவ்வாறுரைத்தாரென்பதற்கோர் மெய்ச் சான்றின்மையானும், பொய்யடிமை யில்லாப் புலவோரென ஆளுடைய நம்பிகள் முதலாயினர் பலரும் இவரை வழுத்தலானும், இறையனர் களவியற் பொருள் கண்ட கணக்காயனர்மகனர் நக்கீரனர் தமதுரையிற் பலவிடத்துந் திருக்குறளை எடுத்துக் காட்டுதலானும், சங்கமழிந்ததேல் அவ்வாறெடுத்துக் காட்டல் சாலாமையானு மென்பது. அல்லதூஉஞ் சங்கமருவிய நூல் பலவுளவாக அவற்று ளொன்றான திருக்குறளானஃதழிவெய்தத லியாங்ஙனம்? பல்வகைப் பாடையுடையாருந் தத்தம் வேதங்களை முதல்வனே யருளினன் என்பவாசவும், முதல்வ னருளியநூல் தென்மொழி வடமொழியெனு மிரண்டன் கண்ணே யுளவென் றுரைத்தல் குன்றக்கூறலாம் பிறவெனின் ;—அறியாது கூறினய், இது இறைவனருளிய நூலென்பதூஉம் இது உயிர்களியற்றிய நூலென்பதூஉம் அவற்றுட் பொதிந்த பொருள்களான் அறியப்படுவனவாம். இறைவனருளிய நூல் முன்னொடு பின்மலை வின்றியாண்டும் ஒருபெற்றித் தாய்த் தடை கட்கிடனுவதின்றி யுண்மைப் பொருளை யுள்ளவாறு தெளித்துரைப்பதாம். உயிர்களருளிய நூல் முன்னொடுபின் முரணுறுவனவாய்ப் பலபெற்றியவாய்த் தடைகட்கிடனுடையவாய் உண்மைப் பொருளை யுள்ளவா கூறாது மயங்கவுங் கூறுவனவாம். இவவிலக்கணத் தானாராய்வார்க்குத் தென்மொழி வடமொழியில் மேற்காட்டிய நூல்கள் தவிர ஏனைப்பாடை நூல்கள் பசுவாக்கிலக்கணமுடையன வென்பது தெளிய விளங்கும். இக் கூறியவாற்றாற் றந்திரவுரை யெனப்படுங் கன்மகாண்டம் இனைத்தென்பது விளங்கும்.

மந்திரம் என்பது மனம் உலகவின்பங்களிற் செல்லாது இறைவன் திருவடியை வழுத்தும் பேரின்பத்தி லழுந்துமாறு செய்வதெனவே அதற்கவ்வாற்ற லுளதென்பது பெறுதும்.

R. S. வேதாசலம் பிள்ளை.

உ

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோயில் வழிபாடு.

அருவ மொரு நான்காகி யவ்வளவே யுருவாகி
யவற்றி னீங்கா
வுருவுரு வொன் றுயல்ல வாகிமணி மன்றதனு
ளம்மை சாண,
திரு நடஞ்செய் வானெவனச் சிவன்றருமா மணியாகிச்
சிறக்கு மெங்கள்
குருமணி யாகிய ஞானசம்பந்த னடிமலரைக்
கூடி வாழ்வாம்.

அகண்ட ஸச்சிதாநந்த ஸ்வரூபமாயுள்ள பிரவஸ்து வொன்றுள தெனக் கைக்கொண் டொழுகும் ஆஸ்திகர் பலருள் அந்தப் பரம்பொருளைச் சிலர் நிர்க்குணமாகவும், சிலர் ஸகுண மாகவும், சிலர் ஸகுண நிர்க்குணமாகவும், சிலர் இவை மூன்றுடன் இவற்றைக் கடந்ததாகவும் அறிந்து விவகரித்து வருகின்றார்கள். இவற்றுள், நாலாவது சொன்ன ஸித்தாந்தமே எமது சைவஸித்தாந்தம். இந்த ஸித்தாந்தங்கள் நான்கனுள் நிர்க்குணவாத மொன்றே ரூபத்தை அங்கிகரியாதது. ஏனை மூன்று ஸித்தாந்தங்களும் முறையே ரூபமாகவும், ரூபம்-அரூபமாகவும், ரூபம்-அரூபம்-ரூபாரூபம் இம் மூன்றுடன் இவற்றைக் கடந்ததாகவும் அங்கிகரியாநிற்கும். ரூபத்தை அங்கிகரிப்பவர்கள் சிவாத்துவிதசைவர்-வைஷ்ணவர்கள் என்பவர்களாம். ரூபாரூபத்தை அங்கிகரிப்பவர்கள் ஏகான்மவாதிகள். ரூபம்-அரூபம்-ரூபாரூபம்-அதீதம் இவைகளை அங்கிகரிப்பவர்கள் சைவஸித்தாந்திகள். கேவலம் அரூபத்தை அங்கிகரிப்பவர்கள் வேதஸம்பந்திகளில் ஒருவருமின்று. இதனால் கேவலம் அரூபவாதிகள் வேதபாஹ்ய ரென்பது ஸித்தித்தது. மேற்கூறிய வைஷ்ணவர்கள் முறையே மத்வராமாநுஜ ஸித்தாந்திகளாவர். வேதாந்திகள் சங்கரபாஷ்யாநுஸாரிகளாவர். சைவஸித்தாந்திகள் முறையேநீலகண்டபண்டித பாஷ்யாவலம்பகர்களும், மெய்கண்டசந்ததியாருமாவர். சங்கரபாஷ்யாநுஸாரிகள் விவகார பரமார்த்தமென்னு மிரண்டில் விவகாரத்தில் சிவனையே துரியமூர்த்தியாக வொப்புக் கொண்டமையால், அவருஞ் சைவரேயாவர். அவரது பரமார்த்தத்தை நோக்கியே அவரை வேறு சமயிகளாக யாம் காட்டியதன்றி வேறில்லை. இந்த வியவஸ்தையால் வைஷ்ணவம் இரண்டு விதமாகவும், சைவம் நான்கு விதமாகவும் பாஷ்யரீதிகளை நோக்கி யாவரும் விவேகிக்க வேண்டியது. இந்த ஆறு மதங்களைக் காட்டிலும் பாஷ்ய ஸித்தமான வேறு மதமொன்றுங் கிடையாது. மேல் யாம் கூறியவுண்மைப்படி இந்த ஆறு மதஸ்தர்களும் ரூபத்தை அங்கிகரித்த அடையாளமாக அவரவர்களுக்கும் ஆத்மார்த்த பரார்த்தபூசைகள் சிறந்திருக்கின்றன. இந்தப் பூசைகள் ஏதாவ தொன்றிற் பாவனையாகச் செய்யப்படுமென்றி அந்யதாகூடாது. இப்படியே யாவருஞ் செய்து வருகின்றனர். இதனால், வேத வித்துக்களாவார் பகவதுபாஸனையை பாவனுமார்க்கத்திற் செய்யவேண்டு மென்பது இனிது சித்தித்தது.

இவ்வுண்மைகளை யறியாத சிலர் மேல் ஸித்தாந்தங்கள் ஒன்றினுஞ் சேராதகிறிஸ்துசமய ஏற்பாட்டில் சில பாகங்களைத் தழுவி யாம் வைதிகர்கள் என்று பிரஸ்தாபித்துப் பிரவர்த்தித்து வருகின்றார்கள். இவர்கள் வேதத்தைக் கரைகண்டவர்களாகத் தங்களை மதித்துக்கொண்டு வேதத்தில் பிரம்ஹத்துக்கு ரூபஞ்சொல்லவில்லை யெனவும், ரூபமில்லாத பிரம்ஹத்தை ரூபமாக விக்கிரகங்களில் வணங்குவது கூடாதெனவும், அர்ச்சைகளை வணங்குவதற்கு வேதத்தில் ஆதரவில்லை யெனவும் பிரசங்கித்து ஸாமானியர்களை மயக்கி வருகின்றார்கள். சில பத்திரிகைகளையும் வெளியிட்டு ஸந்தோஷிக்கின்றார்கள். ஆகையால், அவர்களுடைய அபிமதத்தைக் கொஞ்சம் ஈண்டெடுத்துக் காட்டி, அதிலுள்ள தோஷங்களை விளங்கத்தீட்டி, எமது வைதிக ஸித்தாந்தத்தி னுண்மையை இனிது நாட்டி, ஸாதுக்கள் ஸந்தோஷிக்கும்படி ஸுபோதாம்ருதத்தையூட்டி உபகரிப்பாம்.

அன்னோர் பயனிலவான பல வீண் விஷயங்களெல்லாந் தலையிட்டுக்கொண்டு விவகரித்து வருகின்றார்களேனும், அவை முழுதும் யாம் கவனிப்பது அவசியமல்ல. வேதங்களைப் பிரமாணமாகத் தேடி விவகரிக்கும் விஷயத்தை மாத்திரமே யாம் கவனிப்பது அவசியம். அவர்கள் சில சுருதி வசனங்களைக் கையாண்டு வருகின்றார்கள். அவைகளையும், அவைகளுக்கு அவர்களெழுதிய வுரைகளையும் ஈண்டு முன்னர்க் காட்டி, அநந்தரம் அவைக ளொத்தவையாயோக்ய முடையன வென்னு முண்மையையும் பிரகாசப்படுத்துவாம்.

க - வது,— “తతో యదుత్తరతరం తదరూపమనామయం” என்னுஞ் சுவேதாசுவதர வாக்கியத்தை உதகரித்து, இதில் “அரூபம் - அநாமயம்” என்று பிரஹ்மங்கேட்கப்படுகையால் பிரஹ்மத்துக்கு ரூபமில்லை யென்று சாதிக்கின்றார்கள்.

உ - வது,—"అశబ్దమస్పర్శ మరూప మవ్యయం" என்னுங் கடோபநிஷத் வாக்கியத்தை உதகரித்து, இதில் "அரூபம்-அவ்யயம்" என்று பிரஹ்மங் கேட்கப்படுகையால் பிரஹமத்துக்கு ரூபமில்லையென்று சாதிக்கின்றார்கள்.

ந-வது,— "నతత్రచక్షుర్గచ్ఛతి నవాగ్గచ్ఛతి నోమనోవిద్మో నవిజానీమోయథైతదనుశిష్యాత్, అన్యదేవతద్విదితాదథో అవిదితాదధి, ఇతిశుశ్రుమపూర్వేషాం యేనస్తద్వ్యాచచక్షిరే"

"యద్వాచానభ్యుదితం యేనవాగభ్యుద్యతే,
తదేవబ్రహ్మత్వం విద్ధినేదంయదిదముపాసతే"

"యన్మనసానమనుతే యేనాహుర్మనోమతం,
తదేవబ్రహ్మత్వం విద్ధినేదంయదిదముపాసతే"

"యచ్చక్షుషానపశ్యతి యేనచక్షూంషిపశ్యతి।
తదేవబ్రహ్మత్వం విద్ధినేదంయదిదముపాసతే"॥

"యచ్ఛ్రోత్రేణనశృణోతి యేనశ్రోత్రమిదగ్ంశ్రుతం,
తదేవబ్రహ్మత్వం విద్ధినేదంయదిదముపాసతే"

"యఃప్రాణేనప్రాణితి యేన ప్రాణఃప్రణీయతే,
తదేవబ్రహ్మత్వం విద్ధినేదంయదిదముపాసతే"

என்னுங் கேனோபநிஷத் வாக்கியங்களை உதகரித்து, இவைகளில் கண்-வாக்கு-மனசுகளுக்குப் பிரஹ்மம் எட்டாது, கண்முதலியவைகளால் பிரஹ்மம் விளங்காது, பிரஹ்மத்தால் கண்முதலியவை விளங்குகின்றன. எதை இது என்று உபாசிக்கிறார்களோ அது பிரஹ்மமல்ல என்று சொல்லப்படுவதால், அர்ச்சாபிம்பங்கள் ஸ்பஷ்டமாய் விலக்கப்பட்டனவென்று சாதிக்கின்றார்கள்.

ச-வது;—"యతా హ్యేవైష ఏతస్మిన్నదృశ్యేఽనాత్మ్యే" என்னுந் தைத்திரிய வசனத்தை உதகரித்து, இதில் 'அத்ருஸ்ய - அசரீர' சப்தங்களிருப்பதால் பிரஹ்மம் திரிசியமாகாதது, ரூபமற்றது என்று சாதிக்கின்றார்கள்.

ரு-வது;—"సపర్యగాచ్ఛుక్రమకాయ మవ్రణం" என்னும் வாஜஸநேய வாக்கியத்தை உதகரித்து, இதில் 'அகாயம்' என்று பிரஹ்மம் கேட்கப்படுகையால், அந்தப் பிரஹ்மத்துக்கு எவ்விதசரீரமுங் கிடையாது என்று சாதிக்கின்றார்கள்.

சு-வது;—అంధంతమః ప్రవిశంతి యే సంభూతి ముపాసతే, తతో భూయఇవ తే తమో యఉ సంభూత్యాగ్ం రతాః" என்னும் வாஜஸநேயவாக்கியத்தை உதகரித்து, இதில், படைப்பை விக்கிரகங்களைத் தொழுவோர்கள் கொடிய அந்தகாரத்தை அடைவார்களென்று கேட்கப்படுகையால் விக்கிரகாராதனங் கூடாதென்று சாதிக்கின்றார்கள்.

இவ்வாறு அவர்கள் எடுத்துக்காட்டுவதனால், அவர்களுடைய கொள்கை பிரஹ்மம் என்பதொருபொருளுண்டெனவும்; அது ரூபமில்லாதது எனவும், அதை விக்கிரகமாக வணங்குவது கூடாதெனவும் ஏற்படுகின்றது. இனி, அவைகளை முறையே யாம் பரியாலோசிப்பாம்.

முதல் வசனத்துக்குப் பூர்வபட்சிகள் 'அவனைச் சிறந்ததிலெல்லாஞ் சிறந்தவனென்றும், ரூபமும், துன்பமு மற்றவனென்றும் அறியவேண்டியது' என்று பொருள் கூறுகின்றனர். அந்த வசனத்தில் (தத்) என்று நபும்ஸகலிங்கமே கேட்கப்படுகின்றது. நம்மவர் அதைப் புல்லிங்கமாகக் கொண்டனர். சுவேதாசுவதரம் பஞ்சருத்ரீங்களி லொன்றுகையால், பூர்வோத்தர ஸம்பந்தங்களை நோக்கி நம்மவர் அவ்வாறு கூறியிருக்கலாம் அப்போது சுவேதாசுவதரம் ருத்ரனுகிய புருஷனைப் பிரதிபாதிப்பது என்று அவர்களே கொண்டிருக்கவேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால், புருஷரூபமுடைய ருத்ரனை ரூபமற்றவனென்று சாதிக்கமுயன்றது தவறு. ருத்ரபதமும், பிரஹ்மபதமும் ஒரே பொருளைச் சுட்டிய பரியாயபதங்களென்பதை "ఏకయేవరుద్రో నద్వితీయాయతస్థే" எனவும், "ఏకమేవాద్వితీయంబ్రహ్మ" எனவும் போந்த சுருதிகளாலறிக. அன்றியும், "సర్వో హ్యేషరుద్రః" எனவும், "సర్వంఖల్విదంబ్రహ్మ" எனவும் அநந்தமுள. இதனால், அந்தப் பரமாத்மாவை அது என்றாலும், அவன் என்றாலுந் தோஷமில்லை. அது அது என்றும், அவன் அவன் என்றும் எண்ணிறந்த சுருதிகள் கோஷிக்கின்றன. நம்மவர் அவன் என்று கூறியபொருள் எமக்கு விரோதமில்லை. அவன் என்பது ருத்ரனுகிய புருஷன் என்று கூறுவதற்கு "పురుషోవైరుద్రః" எனவும், "పురుషం కృష్ణపింగళం" எனவும், "తత్పురుషాయ విద్మహే" எனவும், "పురాతనోహంపురుషోహమీశః" எனவும், "తమీశానం పురుషం" எனவும், "సహస్రశీర్షా పురుషః" எனவும் பல சுருதிகள் சான்றுரைக்கின்றன. இத்யாதி சுருதிபாஹுள்யங்களைத் தரிசித்தபிறகும் யாவரோ பிரஹ்மத்துக்கு ரூபமில்லை யென்று வாய் திறப்பார்கள்? ஆயின், அந்த வசனத்தில் 'ததரூபம்' என்று அருபத்தைக்கூறிய தென்னையெனின், பிரஹ்மமானது உருவம்-அருவம்-உருவருவம்-அதீதம் என்னுந் தன்மையினது என்று மேலே யாம் கூறினோமாகையால், அது அருவமாவதிலுந் தோஷமில்லை.

"அருவமோ ரூபாரூப மானதோ வன்றிநின்ற [லன்றி
வுருவமோ வுணர்க்குங் கர்த்தா வடிவெனக்குணர்த்திங் கெ
லருவமும் ரூபாரூப மானது மன்றிநின்ற
வுருவமு மூன்றுஞ்சொன்ன வொருவனுக் குள்ளதாமே"

எனவும், 'சிவனுருவருவுமல்லன் எனவும், 'உருவன் றருவன்று' எனவும், 'இன்ன தன்மையனென் றறியாச் சிவன்' எனவுஞ் சைவநூல்கள் கூறுமுறைமை கண்டுணர்க. சைவநூல்களில் உருவம்-அருவம் - உருவருவம் - அதீதம் என்னும் இவைகளில் எதுவரினும் சைவராயுள்ள பெரியோர்களுக்கு விரோதமுண்டாகாது. அப்படியே வேதவேதாந்தங்களிலும் உண்டாகாது. அவற்றினுண்மை தெரிந்தால் யாவருக்குமே உண்டாகாது. அந்த வுண்மையை இடம்வந்துழிவிரிப்பாம். இதனால், "தத ரூபம்" என்று காட்டிய வசனத்தால் பிரஹ்மம் அரூபமேயென்று சாதிக்கப்படமாட்டாது.

உ-வது காட்டிய வசனத்தில் அந்தப் பிரஹ்மம் சப்தஸ்பர்ஸ ரூபரஸகந்தாதிகளை அடையாதது என்றுகூறுவதும் பூர்வபட்சிகளுக்கு உபகாரஞ்செய்திலது. இந்த விவிதங்கள் மாயையிலுண்டான தத்வபேதங்களாகையால், இவற்றைக் கொண்டிலது பிரஹ்மம் என்ற எமது ஸித்தாந்தத்துக்கே உபகாரஞ்செய்தது. ஆகையால், 'ரூபமற்றும்' என்ற பிரயோகமானது ரூபதன்மாத்திரையையே மறுத்தது. இதனை நம்மவர் 'ரூபவிஷயம்' என்று கிரஹித்துப் பிரஹ்மத்துக்கு உருவமில்லையென்று சாதிக்கின்றார்கள். இனியாவது கூர்ந்து யோசிக்கட்டும்.

ங-வது காட்டிய வசனங்களில் கண் - வாக்கு - மனம் இவைகளுக்குப் பிரஹ்மம் எட்டாது என்று கூறுவது திரிகரணங்களுக்கும் எட்டாது என்றபடியாம். மனம் - வாக்கு - காயம் என்பவே அவை. ஈண்டுக் காயத்தையே கண்ணென்றுரைத்தது. இப்படிக் கன்றி ஸ்தூலப்பார்வையிற்கொண்டு கூறினுங் குறைவில்லை. நேத்ரேந்திரியம்-வாகிந்திரியம்-மனம் என்னும் அந்தக்கரணம் இவைகள் ஜடங்களாகையால் இவைகள் பிரஹ்மத்தை அறியமாட்டா. ஆகையால், ஷை வசனங்களில் எது வாக்கினாலும், மனதினாலும், கண்ணினாலும், காதினாலும், மூக்கினாலும் விளங்குகிறதில்லையோ; எது வாக்கையும், மனதையும், கண்ணையும், காதையும், மூக்கையும் விளங்கச் செய்கின்றதோ அதுவே பிரஹ்மம் என்று விளக்கினமையும் எமது பட்சத்தையே சாதித்தது. ஜடத்துக்கு இயங்குந் தன்மையின்மையும், சித்துக்கு இயங்குந் தன்மை, வேறொன்றை இயக்குந்தன்மைகளுண்மையும் ஸித்தமாகையால், வாக்கு முதலியவைகளால் பிரஹ்மம் விளங்குகிறதில்லை யெனவும், பிரஹ்மத்தால் வாக்கு முதலியவைகள் விளங்குகின்றனவெனவும் உபநிஷதர்த்தங்கள் வியக்தமாயின. இந்த அர்த்தத்தையே "உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும்படா அன் - கண்முதற்புலனாற் காட்சியுமில்லோன்' எனவும், 'சித்தமுஞ்செல்லாச் சேட்சியன் காண்க' எனவும், 'மறையினாலயனால் மாலால் மனத்தினால் வாக்கால்மற்றுங் குறைவிலாவளவினாலுங் கூறொணாதாகிநின்ற-விறைவனார் கமலபாதம்" எனவுஞ் சைவாசாரியர்கள் கூறியிருக்கின்றனர். ஷை வசனங்களைப் பூர்வபட்சிகள் எடுத்து ஆளுகின்றாரே தவிர அவைகள் தமது சித்தாந்தத்துக்கு உபயோகமா, அநுபயோகமா என்றதை யோசிக்கிறதில்லை. எங்ஙனமெனின், வாக்குமுதலியவைகளையும், பிரஹ்மத்தையுமே அவர் காட்டிய வசனங்கள் தெரிவித்தமையால், பிரஹ்மமே வாக்குமுதலியவைகளோடு ஸம்பந்தித்து அந்த வாக்குமுதலியவைகளை விளங்கச்செய்கின்றது என்று ஏற்படுகின்றது. அதனால், வாக்குமுதலிய வியஷ்டிகளாலமைந்த ஸமஷ்டி சரீரத்தில் சரீரியாயிருந்து நடித்தும், நடிப்பித்தும் இயங்குஞ் சீவனையே பிரஹ்மம் என்றுகொண்ட மதமாக அவர் மதம் வெளிப்படும். சீவனையே பிரஹ்மம் என்று கொள்ளுவது அவர் கோளல்லாமையால் அவர்காட்டும் வசனங்கள் அவரை மயக்கியே வெளியாகின்றன. பிரஹ்மமானது சரீரமாகிய ஜடத்தையும், ஜீவனாகிய கிஞ்சிஜ்ஞனையும் இயக்குந் தன்மையின தொன்றாகையால், ஷை வசனங்கள் ஜடங்களை இயக்குந்தன்மையைமாத்திரமவிளக்கவந்தன. ஆண்டுஸத்தும் அஸத்துங் கூறப்பட்டமையால், பாரிசேடநியாயத்தால் ஸதஸத்தென்பது கூறாமையமையும். ஸதஸத்தே ஜீவனென்றறிக. இந்த வியவஸ்தையால்ஸதஸத்தாகிய ஜீவனுக்கு அஸத்தாகிய கருவிகரணங்களைக்கூட்டி ஸத்தாகிய பிரஹ்மம் உபகரிக்கின்றமையே வியக்தமாயிற்று. ஸதஸத்தும், அஸத்துங் கூடியபோதே ஸதஸத்துக்கு ஞானக்கிரியைகளும், அஸத்துக்குக் கேவலங்கிரியையும் வெளிப்படலாலும், ஸதஸத்தினது ஞானம் தடைபட்டிருப்பதனாலும், அஸத்தாகிய கருவிகள் அறிவற்றிருப்பனவாகலானும், சுத்த வறிவாகிய சிவம் இவற்றைக்கூட்டி யுபகரித்தல் சாலும். சிவம் "உலகெலாமாகிவேறா யுடனுமாய்" என்னு நிலைமையினதாய் உலகுயிர்களை நடத்து முறைமை காண்க.

ஆ. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்.

உ

திருச்சிற்றம்பலம்

# குறிஞ்சிப்பாட்டு.

(முன் தொடர்ச்சி.)

தாயே! வாழ்வாயாக! யான் கூறுகின்றவற்றை விரும்பிக் கேட்டல் வேண்டும். அழகினால் திருவையும் புறங்காணும் எனதுயிர்த்தோழி தன்மனத்து மறைத்துவைத்துள்ள நினை விருந்தபடி இன்னதென் றுனக்கு வெளிப்படுத்தக்கூடாத அருமையுடையதா யிருத்தலின் அதை யான் இதுகாறும் உனக்குக் கூறுகின்றிலன். அந்நினைவு முதிர்ச்சிநோயால் அவள் மேனியிளைத்து வளைகழன்று அழகுங்கெட்டு நாளுநாளும் துன்பம் உறுதலைக்கண்டு நீயும் பெருமையாய்க் குறிசொல்வாரை வினவ, அவர் இது தெய்வத்தான் வந்ததென் றுரைத்தலின் வேண்டுஞ் சிறப்புக்களுடன் தெய்வத்தைப் பரவியும் அந்நோய் தீராமைகண்டு மிகவும் வருந்துகின்றாய். நின் றன்மை யிவ்வாறாக என்றோழியோ "மதிப்பில்லாப்பல்வகை "மணிகளால் இழைத்த விலையுயர்ந்த நகைகளை யிழக்கினும், "வேறொருகால் அவற்றை முயன்று பெறுதல்கூடும்; குல "வொழுக்கம், பெருமை, சால்புடைமை முதலிய உயர் "குணங்கள் அழியவரின் துறந்தார்க்கும் அவற்றை முன் "போலப் புரையறுத்துக்கோடல் இசையாதாம். நமது தந் "தையார் நம்மைக்குறித்து வைத்த அரிய காவலையுங்கடந்து "வந்த எனதுயிர்க் கொழுநனும் யானும் தாய்தந்தையர் "விருப்பத்திற்கு மாறாகச் செய்துகொண்ட மணத்தினியல் "பிருந்தவா றிஃதென்றன்னைக்கு அறிவுறுத்தினால் அதனால் "நமக்குவரும் பழியென்னை? அவ்வாறு நாம் உரைத்தும் அவர் "நந் தலைவற்கே என்னைக்கொடுக்க நேர்ந்திலராயின், நம் உயிர் "போங்காறும் இவ்வருத்தத்தைப் பொறுத்திருந்தால் மறு "பிறப்பிலாதல் நமக்கு நந் தலைவன் கூட்டரவு எய்தும்"* என் றிங்ஙனங்கூறித் தன் மான்விழிகலுழ்ந்து மெலிகின் றாள். யானோ, வெகுண்டு போர்செய்யும் இரண்டுபேரரசர்க் கிடைநின்று அவரை நட்புக்கூட்டும் சான்றோர்படுந் துயர் போல,† நினதும் இவளதும் வருத்தத்திற்கஞ்சி வருந்துகின் றேன்.‡ கொடுத்தால் நன்மையுண்டாம் என்றும் இரண்டு குடியும் மரபுரிமையான் ஒத்தனவென்றும் குணநலம் கொண் டாடத் தக்கவாமென் றும் கிளைஞர் உதவியுண்டென் றும் ஒத்து நோக்கிப் பலரையும் தெளிய வினவிச் செயற்பாலதாகவும் யாங்களே துணிந்து செய்துகொண்ட இவ்வியாழுடையார் மணம் நிகழ்ந்தபடியை நீயறியுமாறு தெருட்டுகிறேன்; அது கேட்டு நீ வெகுளாதிருப்பாயாக! ஓர்யானை மூங்கிலின் றலையில் விளைந்த நெல்லைத் தின்னுதற்குத் தன் புழைக்கையை நீட்டியும் அது கைக்ககப்படாமையான் வருந்தித் தன் மருப்பின்மீது அக்கையைத் தொங்கவிட்டாற்போலத்* தாள்மீது வளைந்துகிடக்குங் கதிர்களையுடைய தினைப்புனத்தில் விழுங் கிளிகளையோட்டி ஞாயிறுமறையும் அந்திப்பொழுதில் திரும் பிவருகவென அன்னாய்! அன்று ஒருநாள் இருவேமையும் விடுத்தாயன்றே. அங்ஙனம் விடுக்கப்பட்டேம் இரவுக்காலத் து மரத்தச்சியிலிருத்தற்காகப் பண்ணிய பரணிடத்து ஏறித் தினைக்கிளி கடிதற் கருவிகளான† தழல், தட்டை, குளிர் முதலியன கொண்டு தினைக்கொல்ல வந்து விழும் மழலைக் கிளிகளை ஓட்டிக்கொண்டிருந்தேம், அவ்வாறிருக்கையில் நீண்பகற்கூலமெய்தவும் முகிற்குழாம் (மேகக்கூட்டம்) கடல் நீரைக் குடித்துச் சூன்முதிர்ந்து,‡ முருகவேள் அவுணரைக் கொல்லும் போர்க்களத்து அவன்முரசதிர்ந்ததுபோல் வாய் விட்டிடித்து, அவனது வடிவேல் ஒளிருமாறுபோல மின்னி மலைமேற் பொழிந்தன. பொழிந்த நீர்மலைச் சிகரத்தினின் றும் வெண்டுகில் விரித்ததுபோல் பரந்து இழிதலைக்கண்டு நீங்காத ஆசையுடையேமாய் அவ் வருவிநீரிற் குளித்தும் வேட்கைமீதூர்தலின்,§ பளிங்கைக் கரைத்துச் சொரிந்தது போற் றெளிநீருள்ள சுனையில் எம்மனத்திற்கு விருப்பமான வற்றைப் பாடிக் குடைந்தேம் (முழுகினேம்). குடைந்து கரையேறிப், பொற்றகட்டில் ஒழுங்குபெற அழுத்திய நீல மணிபோல்$ எம்முதுகில் கிடந்தபின்னற் குழலைப்பிழிந்து ஈரத்தைத்¶ துவர்த்தி உட்சிவந்த விழியினமாய்ச்|| செங்காந் தள் முதலிய பல்வகை விரைமலரைக்கொய்து ஒருங்குதிரட் டி மழைநீராற் கழுவுண்டு தூயதாய்க்கிடந்த அகன்ற கற்

* தலைவிக்கும் தலைவனுக்கும் இடைநிகழ்ந்த ஒழுக்கத்தை யீண்டு வெளிப்படுத்திய நுண்மையைக் காண்க.

† இவ்வுவமானத்தால் அச்சமிகுதிப் பாட்டினியல் பினிது விளங்கும்.

‡ இதுகாறும், அன்னைதன்மையும், தலைவிதன்மையும், தன் றன்மையும் கூறினாள்.

* இவ்வுவமான நுண்மையும் அருமையும நன்கு மதிக்கத் தக்கவாம். பிறமரங்கள் உளவாகவும் மூங்கிலையே யீண்டுக் கூறவேண்டுவ தென்னையெனின்;—பிறமரங்களில் யானைப் புழைக்கையை வருத்துதற்குரிய உறுப்பின்மையின் அது, அவற்றைத்தன் திண்டிறலாற் கீழ்வீழ்த்தித் தன்கருத்தை முற்றுவித்துக்கொள்ளும். மூங்கில் தன்னகத்து நீண்டவுங் கூரியவுமான முட்கள் உடையவாயிருத்தலின் யானை அவற்றைத் தொட்டுவீழ்த்தாவென்றுணர்ந்து ஆசிரியர் கபிலர் தடைகூறுதற் கோரிடமின்றிப் பின்வருதற்கேற்ப நுண்ணிதாக இதனையே கூறுவாராயினர். யானைபிடிப்பாரும் ஏனைமரங்களினேறாது மூங்கின்மீதிருத்தல் அறிந்தார்வாய்க் கேட்டுணர்க. இத்தகைய நுணுக்கங்கள் பல பழந் தமிழ்நூல்களிற் செறிந்திருத்தல் கண்கூடா யறிதற்பாலன.

† கையாற் சுற்றப்படுவது-தழல்; மூங்கிலைக் கண்ணுக் கண்ணுளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றில் தட்டுவது தட்டை; குளிர் - இவைபோல்வதொன்று.

‡ இவ்வொழுக்க நிகழும் இடங் குறிஞ்சியாகலின் அக் குறிஞ்சிக் கருப்பொருளான முருகவேண் முரசையும் வேலையும் ஈண்டுவமை கூறினார், வேறு பிறரைக்கூறுதல் ஈண்டமையாமையின்; "சேயோன் மேயமைவரையுலகம்" என்றார் தொல்காப்பியனாரும்.

§ இவ்வுவமைச் சிறப்பை நன்காராய்ந் தறிக.

$ இவ்வுவமைக்கும் பொருளுக்குமுள்ள இயைபறிந் தின்புறுக.

¶ இச் சொல்வழக்கில் வருதலை யறிந்துகொள்க; முதனிலை துவர்.

|| செங்காந்தள் முதல் மலையெருக்கம் பூவீறாகத் தொண்ணூற்றொன்பது பூக்கள் கூறப்பட்டிருக்கின்றன.

பாறையிற் குவித்துப் புள்ளோச்சையருத மலைப்புனத்திற்கிளி களையும் கடிந்துகொண்டு தழைகளைக்கொய்து மருங்கிலுடுத் துப் பன்னிறமர்லைகளைக் கரிய குழலின்மிலைச்சி நெருப்பு நிறத் தளிர் ஈன்ற ஓரசோகின் குளிர் நிழற்கீழ் இருந்தேம். இருந்தவளவில், ஒரு தோன்றல், எவ்வாற்றானும் பெருமை யுடையான், தனக்குத் தாழ்ந்தாரன்றி மிக்காரும் ஒப்பாரு மில்லாதான் நறிய மயிர்ச்சாந்தைக் குஞ்சியிற்பூசி யவ்வீரம் புலர அதையவிழ்த்துலர்த்திக்கொண்டு,*பன்னிறமலர்களையும் வெண்டோட்டுத் தாழைமடல்தொடுத்த கண்ணியையும் சூடி, சந்தனக்குழம்பு பூசிய மார்பினனாய் அணிகலன் முதலாயின தயங்கவில்லும் அம்பும்ஏந்திப் பல்வேலிளைஞர் தன்னைப்புடை சூழப் போந்தான். போந்தான் புடை வளைந்துவந்து மூங் கின் முளைபோற்† பல்லுடைய நாய்கள் இமையாக் கண்களு டன் எம்மை வளைந்து நெருங்கின. அதுகண்டு அச்சமெய்திக் கால் தளர்தலின் விரைந்துசெல்லும் ஆற்றலிலமாய் மயங்கி வேறிடத்திற்குப் போகாநின்றேம். இவ்வா றச்சமெய்திச் செல்லும் எம்மைநோக்கித் தான் மிக அஞ்சி, தன் பகையை வென்றவிடை (எருது) வேறோரிடத்து ஓர் ஆவை (பசுவை)க் கண்டு வேட்கையிற் றணயுமாபோல‡ எம் மருங்கெய்தி எம தெழினலனையெல்லாம் இனிய மென்சொல்லாற் புகழ்ந்து "கணைபட்ட யானை, கலை, பன்றி§ முதலாயின ஈண்டுவரக் கண்டீரோ", என்று வினவினன். வினவினனது மேதகு குணங்களை வியந்து மகிழ்ந்து அவன் சொல்லிற்கு விடை சொடா மாயினேம். அதனால், அவன் நெஞ்சழிந்து அவற் றைக் காட்டித்தாரீராயினும் ஏம்முடன் ஒருசொற்கூறுதலும் நமக்குப் பழியாமோ? வெனச்சொல்லி, நட்டராகம் முற்றி யபாலை யாழ்போலி$ சைக்கும் சுரும்பினம் மொய்த்தமலர்க் கொம்பை முறித்துப்பாகடு மதக்களிறுபோல¶ தான் தன் னைச் சூழ்வந்த வேட்டைநாய்களின் குரலையடக்கி யாம் பேசு வதோர் காலத்தைப் பேணிநின்றான்‖. தினைப்புனங்காவல் காப்பார் சிலர்களுண்டு களித்துத் தம் காவற்றொழிலை மறந்துவிட வுங்களிறொன்று அப்புனத்துட் புகுந்து அழித் துவிடுதலை மயக்கந்தெளிந்து கண்டு சேழ்க்கையடித்து* வெ ருட்டிக் கணைவிடுதலின் அக்களிறு மரங்களை முறித்து இடி போல் பிளிறிப் புழைக்கையைத் தரையிலடித்துச் சினங்கொ ண்டு யமன்போல் எம்மீது வந்தது. வர, அப்போது பிழைக் கும் இடம் வேறொன்றும் அறியேமாகி நடுங்கு மனத்துடன் தெய்வம் ஏறிய மயில்போல்† எந்தலைவனை யணுகி நடுங்கிநின் றேம்‡. உடனே எந்தலைவன், விரைந்துவரும் யானைமுகத் தில் அம்பை வில்லில் விசைத்து வாங்கிவிடுதலின், அதுதைத் து வெறியாடுகளத்துக் குருதிபோல் குமிழியிட்டுப் புண்ணி னின்றும் பாய நிற்றலாற்றாது புறங்கொடுத்துப்போயிற்று§

(இன்னும் வரும்).

¶ வித்வான்-வெ-நாராயணசாமிப்பிள்ளை

* களிப்பாய் உலாவிவருவா ரியல்பிதனு லினிதுவிளங்கும். உலகவழக்கினுள்ளும் ஆடவர் மயிர் ஆற்றிக்கொண் டுலாவுதல் கண்டுகொள்க.

† நாய்ப்பல்லிற்கு அரியவுவமை இதனால் விளங்கிற்று.

‡ ஆசைமிகுதியி னியல்புதெரிக்க இவ்வுவமை கூறினார்.

§ வேழம்வினாதல், கலைவினாதல், வன்றிவினாதல் முதலிய வற்றைத் தனித்துறைகளாய்க் கூறப்படுவதை இறையனாரகப் பொருட் காட்டுச் செய்யுளுள்ளும், தொல்காப்பிய வுரையி லும், திருச்சிற்றம்பலக் கோவையாரினுங் கண்டுகொள்க.

$ கருப்பொருளி லொன்றான யாழ்கூற வேண்டுதலான் ஈண்டுவமை முகத்தாற் கூறியொழிந்தார். நைவளம், காந் தாரம், படுமலை, மருள், அயிர்ப்பு, பஞ்சுரம், அராறு, செந்தி றம் என்னும் குறிஞ்சித்திறமெட்டனுள் ஈண்டு நைவளம்கூறி னார், குறிஞ்சிக் குரியன விவையே யாமாதலின்; சுரும்பி னொலிக்கு அஃது வமையாதலை நோக்குமிடத்து, அதனொலி சுரும்பொலிபோ லிருக்குமென்றறிக.

¶ மலர்க்கொம்பை முறித்தோச்சல் தலைவனுக்கும் யானைக் குமேற்றுக.

‖ இத்துணையும் தலைவன் தலைவிமீதுற்ற வேட்கை மிகுதி யையும், அவன் ஆற்றிய உதவியினியல்பும், இதனால் அவனை எழுமையினும் மறத்தல் செல்லாதென்பதும் யாய்க்கு விளக் கிக்காட்டினாள்.

# உண்மை விளக்கம்

## எனும்

## சித்தாந்த தீபிகை.

1897ளு ஆகஸ்டுமீ 21வ சனிக்கிழமை.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநம:

## அருள்.

அருளென்பது இயைபின்றி யொருவர்காரணமாகப் பிறி தொருவர்க்குளதாம் உள்ள நிகழ்ச்சி. மகண்மை முதலாகிய இயைபுபற்றி நிகழு நிகழ்ச்சி அன்டெனப்படுதலின், ஈண்டு இயைபின்றியென விசேடிக்கப்பட்டது. இது, மக்களுள் ளுந் துறந்தார்மாட்டும் இறைவன்மாட்டு நிகழ்வதாம். துறந்

* இக்காலத் திச்சொல் சீட்டியடித்தென்று வழங்குகிறது.

† ஈண்டுத் தெய்வமேறிய மயில் என்றது, இளையபிள்ளை யார் ஏறிய பிணிமுகமென்னும் மயில். அதுபோழ்ந்த சூரு டலின் ஒருகூறு.

‡ உயிரழியவருங் காலத்து நாண்கெட வியல்பென்பது உம், அவ்வமயத்து உய்யு நெறியே கருதுவர் எத்துணைப்பெரி யோரு மென்பதூஉம் இதனால் யாய்க்குக்காட்டித் தன்மீதுந் தலைவிமீதும் தலைவன்மீதும் அதனால் வழுவெய்தாமையுங் காட்டினாள்.

§ இதனால் முற்கூறிய எதிட்டினுஞ் சிறந்ததொன்று கூறி னாள்.

¶ இவர் இப்பத்திராதி பருக்குத்தமிழாசிரியர்.

தார் என்பார் இருவகைப்பற்றுமற்று இறைவனடிபேணும் பெ
ரியார். ஆசறுகாட்சியுடைய அப்பெரியார் செயலாவன
வெல்லாம் இறைவன் செயலேயாமாதலான்; இறைவனுக்கே
சிறப்புரிமையாம் அருள் அவர்க்கும் உரியதென்பதன்றி,
அவர்க்குச் சுட்டறிவின்மையின் அவர்க்குச் சிறப்புக்கிழமை
யுற அருள் நிகழ்தலில்லையென்பது தெற்றென விளங்கும்.
ஆகலான் இறைவன் அருட்டன்மை கூறவே துறந்தார்தம்
அருட்டன்மையுமடங்குமாம். தருக்கநூலார் பகுத்தோதிய
பதார்த்தங்கள் ஏழனுள் அருள் ஒருபொருட் பண்பாதலின்
அது பண்பின்பால் அடங்கும். பண்பெனினும் ஆற்றலெனி
னுமொக்கும். இப்பண்பும் குணப்பண்புந் தொழிற்பண்பு
மென இருபிரிவினது. குணப்பண்பு, வண்ணம், வடிவு,
அளவு, சுவை என்பன. தொழிற்பண்பு, நடக்கை, இருக்
கை, கிடக்கை, எழும்புகை, வளைகை, விழுகை, நிற்கை
எனத்தன் வினையாவனவும், நடப்பிக்கை, இருப்பிக்கை, கிட
ப்பிக்கை, எழும்புவிக்கை, வளைவிக்கை, விழுவிக்கை, நிற்பிக்
கை எனப் பிறவினையாவனவுமாம். உருவப்பொருளாவன
வற்றிற்குக் குணப்பண்புந் தொழிற்பண்பும் புலப்பட்டுக்கிடக்
கும். அருவப்பொருளாவனவற்றிற்குத் தொழிற்பண்பு மாத்
திரையே புலப்பட்டுக் கிடக்கும். குணப்பண்பு கரந்துகிடக்
கும். அருவப் பொருட்குக் குணப்பண்பிலதெனபார்க்கு,
நீர், இருவேறு வாயுக்களாகப்பிரிக்கப்பட்டுழி யருவத்தன்மை
யெய்தித் தன் குணப்பண்புதோன்றாது நிற்றலும் மறித்தும்
அவற்றைக்கூட்ட உருவத்தன்மை யெய்துங்கால் அது தோ
ன்றி நின்றலுங் கண்கூடா யறியக்கிடத்தலின் அது பொ
ருந்தாதென்று கூறி மறுக்க. எனவே, பொருளாவனவெல்
லாம் குணப்பண்புந் தொழிற்பண்பும் உடையனவென்ப
தினிதுவிளங்கும். ஆதலால், இறைவனும் குணப்பண்புந்
தொழிற்பண்புமாகிய இரண்டும் உடையனென்பதூஉம், அவ்
விரு பண்பிற்குணப்பண்பு இறைவன்பால் மறைந்தும் புலப்
பட்டுங் கிடக்குமென்பதூஉந் தெற்றெனவுணர்க. இறைவன்
அருவத்தன்மையனுங்கால் அக்குணப்பண்பு மறைந்தும்,
உருவத்தன்மையனுங்கால் அது புலப்பட்டும் நிற்கும்; இது
பற்றியன்றே "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்
பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை, மூவர்கோ னாய்
நின்ற முதல்வன் மூர்த்தி மூதாதை மாதாளும் பாகத் தெ
ந்தை" எனத் திருவாதவூரடிகளும் இறைவனை யிருதன்மைப்
பட வுரைப்பாராயினர். இங்ஙனங் கூறாது, சிலர் இறை
வன் உருவமேயுடையனென்றும், சிலர் அருவமேயுடைய
னென்றும், வேறு சிலர் அருவுருவமே யுடையனென்றும்
உரைத்து, அங்ஙனங்கூறின் வரம்பிலாற்றுடையனாகிய இறை
வன் உலகத்துருவத்தன்மையேயுடையனவாய பொருளிலா
தல், அருவத்தன்மையேயுடைய பொருளிலாதல், அன்றியரு
வுருவத்தன்மையேயுடைய பொருளிலாதல் ஒன்றிற்பட்டு
இறப்பவும் இழிக்கப்படுதலை அறிந்திலர். ஆதலான், இறை
வன் அரு, உரு, அருவுரு எனும் மூன்றுதன்மையு முடைய
னெனக்கொண்டு வழுத்தும் சைவநெறியே உண்மைநெறி
யென்றுணர்க. அருவத்தும் உருவத்தும் மறைந்தும் வெளி
ப்பட்டும் நிற்றலாகிய அருட்பண்புடைய இறைவன் அரு
ளுடைமைக்குக் காரணம் உயிர்களேயாம். தன்போல் ஆற்
றலிலார்படுந் துயர்கண்டுழி யிமைபின்றி யவர் துயராறுத்து
இன்புறுத்தற்பொருட்டுப் பிறவல்லார் மாட்டு நிகழ்வதே
அருள் என்பவாகலின், அருள் என்ற துணையானே உயிர்கள்
உளவென்பதூஉம், அவை துன்புறினன்றி யிறைவனுக்கு அ
ருள் நிகழ்ச்சியின்மையின் அவை துன்புறுவவென்பதூஉம்,
அவற்றிற்குத் துன்பத்தைத் தருவனவாய ஒருபொருளுண்
டென்பதூஉம் பெறுதும். அத்துன்பப்பொருளையே பாச
மென்ப பெரியோர். அப்பாசம் ஒருகாலத்துயிரைவந்து
பிணித்து அல்லற்படுக்குமெனின் அதுகாறும் அது யாண்டி
ருந்ததென்றும், அன்றி யங்ஙனம் வந்து அதைப்பிணி
க்கவேண்டுவதென்னென்றும், உயிரைப்பற்றிய பாசம் இறை
வனையும் அங்ஙனம் பற்றாமை என்னென்றும் வினவுவார்க்
கிறுக்கலாகாமையின் அது ஒருகாலத்து வந்ததைப் பிணி
த்ததென்பதூஉம், அன்றியுயிரே யதைததேடிக்கொண்ட
தெனின் இறைவனிருக்கப்பாசத்தைப் பிடித்தலாகாமையின்
உயிரதைப்பிடித்ததென்பதூஉம், இறைவனே யவ்விரண்டை
யும் உடன்கூட்டினனெனின் பேரருளுடையனாகிய இறை
வன் உயிர்க்குத் துன்பந்தருவனவற்றை விடுவின்றிக்கூட்டா
னாகலான் அவன் கூட்டினனென்பதூஉம் பொருந்தாமை
யின் உயிர்களுளவன்றே பாசமும் உடனிருந்ததென்றுணர்க.
அதுதான் உயிர்க்குக் குணமோவெனின், பாச நீக்கத்தில்
உயிரும் அழியும், குணமழிந்தழிக்குணியு மழிதல் மரபாக
லின்; அங்ஙனம்பாச நீங்குழியும் உயிரழியக்காணாமையின்
அது உயிரின் குணமன்றென்பதூஉம் அங்ஙனமாகவே பாரி
சேடத்தால் களிம்புஞ் செம்பும்போல் கலப்புமாத்திரையால்
அவை ஒன்று பட்டிருக்குமென்பதூஉம் தெளியவிளங்கும்.
இங்ஙனங் கலப்புமாத்திரையால் உயிரைவருத்தும் இயல்பை
யறிந்தாங்கறியு மிறைவன் ஒழிக்கும்பொருட்டுச் செய்யும்
வினைகள் படைப்பு, நிலை, இறுதி, மறைப்பு, அருள் என
ஐவகை அருட்டொழில்களாம். இமைபின்றி யொன்றன்
றுயர்கண்டு இரங்குதலேயன்றி யதையொழிக்கமுந்துதலும்
அருளேயாமாகலான் இவ்வைந்தொழிலும் அருட்டொழிலெ
னப்பட்டன. இவ்வைந்தொழிலையும் இறைவன் ஒன்றன்
வழித்தாகச் செய்தலுந்தானே செய்தலுமென இரண்டுவகை
யாற்செய்யும். என்னை? ஓரரசன் எளிதின்முடியும் வழக்
குகளைத் தன் கீழதிகாரிகண்மாட்டும் சிறிது அரிதின் உணர்
தற்பாலனவாய வழக்குகளை மேலதிகாரிகண்மாட்டும் வைத்
து நடத்தி மிகவும் அரியதாய வழக்குகளைத்தானே சூழ்ந்து
முடிவுசெய்யுமாறுபோல இறைவனும் எளியவான படைப்பு,
நிலை, இறுதியெனு முத்தொழில்களையும் முறையே பிரமன்,
மால், உருத்திரனெனு மூவர்மாட்டும் வைத்துநடத்தியேனை
யிரண்டனையுந்தானே நடத்துவனென் றுணர்க. படைப்பி
னும் நிலையுயர்ந்ததாகலான் அவற்றின் அதிகாரிகளான பிரம
னிலும் மாலுயர்ந்தார்; நிலையினும் இறுதி யுயர்ந்ததாகலின்
மாலினும் உருத்திரன் உயர்ந்தாரென்க. ஏனையிரண்டும்
இவற்றின் உயர்ந்தவாகலான் பிரமன் மால் உருத்திரன்
எனும் மூவரினும் இறைவன் (மாதேவன்) உயர்ந்தோனென்
பதும் இவரையும் இயக்குவோனென்பதும் அறிக. இப்

படைப்புமுதல் மூன்றும் எளியனவென்பதும் ஏனையிரண்டும் அரியனவென்பதும் தெரித்தற்கன்றே இறைவன் (நடராசன்) தமருகமும், அமைத்தலையும், ஆரழலும் அம்முத்தொழிலையுஞ் செய்வனவாகவும், கழலூன்றலும் அடிதூக்கலுமாகிய தன்வினையிரண்டும் ஏனையிரண்டினையுஞ் செய்வனவாகவும் பெரியோ ருரைப்பாராயினர். குமரகுருபர சுவாமிகள் அருளிய,

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமலி வரைப்பின் நானிலவ ளாகமும்
ஏனைய புவனமும் எண்ணீங் குயிருந்
தானே வகுத்ததுன் றமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
யனைத்தையுங் காப்பதுன்னமைத்த கைத்தலமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப்பய னவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
அடுத்தவின் னுயிர்கட் களவில் பேரின்பங்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே-என்பது மது.

இனி, படைப்பென்பது உயிர்க்குக்கருவி கரணங்களைக் கொடுத்தறிவ்விளக்குதல். நிலை, அங்ஙனம் படைக்கப்பட்ட கருவிகரணங்களொடு கூடி உயிர்வினை நுகர்தற்கு விதித்த காலம் வரையில் அதற்கு இடையூறுறாது காத்தல். இறுதி, வினைநுகர்ந்துவருங்கால் அயர்வுற்ற வுயிர்க்கு அவ்வயர்வு நீக்கி அது இன்புறுமாறுசெய்தல், மறைவு, உயிர்வினை நுகருங்கால் அது முற்செய்த வினையினியல்பும் அதன்பயனும் அறியாவாறுமறைத்தல். அருள், வீட்டின்பத்தை அளித்தல். இவற்றுள் இறுதியாகிய சங்காரத்தினியல் பறியார் அத்தொழிலையும் அஃதியற்றும் இறைவனையும் வாளாபுறம் பழித்துரைப்பர். இனி, நாளும் இம்முத்தொழில் நிகழ்வதை யாராய்வார் அங்ஙனமுரையார். என்னை உறங்கிவிழித்தலே படைப்பும், பகல்முழுவதூஉம் உலாய்த்திரிதலே நிலையும், இரவில் உறங்குதலே இறுதியுமாம். நாள் முழுதும்வேலைசெய்திளைப்புற்ற மக்களும் பிறவும் உறங்காவிடின் எய்துங்கேடு இத்துணைத்தென்று வரம்புப்படா. ஆகவே, அவ்விறுதித்தொழில் எத்துணைப்பயனுடையதாயிருக்குமென்றறிந்துகொளக. பிறர் இறுதித்தொழிற்குடையாரென்று பெறப்படாமையான் அதுசெய்வான் இறைவனே யென்பது தெரியவிளங்கும். நாளும் இளைப்பாறுதல் போலவே, சிலபல ஆண்டுகட்குள் எய்தும் இறப்பும் இளைப்பாறுதற் பொருட்டேயா மென்றறிக. "அழிப்பிளைப்பாற்றல்" எனும் சிவஞானசித்திச் செய்யுளானும் இவ்வுண்மையறிக. ஆகவே, இறைவன் உயிர்களின்றிறத்துச்செய்யும் வினைகள்யாவும் அருளினன்றிப் பிறிதில்லையென்க. "வேண்டுதல் வேண்டாமையிலா" னாகிய இறைவன் உயிர்க்கு இவைகளையெல்லாஞ் செய்யவிரும்புதல் இழுக்காம்பிறவெனின்;—அறியாத கடாயினாய், ஒரு குறையுடையானன்றே அக்குறையை நிரப்புதற்கு வேண்டலும், வேண்டாமையுஞ் செய்வன். எல்லாம் அவனுடைமையும் அடிமையுமாக வுள்ளனவாயின் அவன் குறையுடையானென்பது பெறப்படாமையின், நீ கூறியவாறு ஈண்டுரைத்தன அன்னவிருப்புவெறுப்புக்களாகாது அவற்றை (உயிர்களை) நன்னெறியிற் சேர்க்கவேண்டுமென்று உவட்டெடுக்குங் கருணையால் உண்டாயினவாதலான் அவை இறைவனுக்கு இழுக்கமாறி யாண்டையதென்க. இவ்வுண்மை யெல்லாம் விரிக்கிற் பெருகும், இப்பத்திரிகையில் இவைபுபற்றி யாண்டாண்டு விளக்குதும் ஆண்டுக் கண்டுகொள்க. அல்லதூஉம்,

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற்றோன்றுங்
கருமமு மருளரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்கமெல்லாந் தானரு ளனக்கொன்றின்றி
யருளுரு வுயிருக்கென்றே யாக்குவ னசிந்தனன்றே.

எனுஞ் சிவஞானசித்திச் செய்யுளானும் பிறவானும்உணர்ந்துகொள்க.

திருஞானசம்பந்தர் திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

R. S. வேதாசலம்பிள்ளை.

---

## சிவஞானபோதக் காப்பு.

கல்லானிழன்மலை, வில்லாரருளிய
பொல்லாரிணைமலர், நல்லார்புனைவரே.

இ ள்.

கல் ஆல்நிழல்=கல்லாலமரநிழலின் கண்ணே யெழுந்தருளிய, மலைவில்லார்=மலையினை வில்லாகக் கொண்டருளிய சிவபெருமான், அருளிய=திருக்குமாரராகத்தந் தருளிய, பொல்லார்=பொல்லாப்பிள்ளையார் என்னுந் திருநாமம் புனைந்த விநாயகக் கடவுளது, இணைமலர்=மலர்போன்ற இரண்டுதிருவடிகளையும், நல்லார்=நல்லவர்கள், புனைவர்=தமது சிரசிலே தரிப்பார்கள். எ-று.

ஏ=ஈற்றசை.

சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களா லாகியது என்பதை இந்தக்காப்பிலடங்கிய பன்னிரண்டுசொற்கள் தெரிவிக்கின்றன. அவை வருமாறு: 1, கல். 2, ஆல். 3, நிழல். 4, மலை. 5, வில்லார். 6, அருளிய. 7, பொல்லார். 8, இணை. 9, மலர். 10, நல்லார். 11, புனைவர். 12, ஏ. இவ்வாறு பிரித்துக் காண்பவர்களுக்கு ஒரு வியப்புண்டாகாமற் போகாது. இவ்வாறு அமைக்க வேண்டுமென்று மெய்கண்ட சிவம் கருதினும் கருதாவிடினும் தெய்வத் தன்மை அதிற்காணப்பட்டவாறறிக. இனி யெடுத்துக்கொண்ட காப்பில், சில நயங்களெடுத்திசைப்பாம்.

ஆலானது நல்லால்—கல்லால் எனப் பேதப்பட்டிருப்பதால் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகிய சிவபரஞ்சுடரெழுந்தருளியது கல்லாலின் கீழ் என்று தெரிவித்ததாயிற்று. எம்பெருந்தகை நல்லாலின் கீழமராது கல்லாலின் கீழமர்ந்த தெற்றுக்கெனின், அவர் கன்மலையை வில்லாகக் கொண்டவராகலினென்க. கல்லென்றது ஈண்டுப்பொற் கல்லென்றறிக. பரமாசிரிய கோலங் கொண்டெழுந் தருளிய பெருந்தகைமாட்டுக்கன்மரம் கற்சிலைகளெடுத் தோதப் பெற்றவா றென்னையெனின், அவ்வருட்பெருந்தகை கல்லையுங் கனியச் செய்பவரென்பது போதரவென்க. கல்லால் துளிர்த்தலும், கன்மலைவளைதலுங்கூடா. அவைகளை முறையேதுளிர்க்கவும், வில்லாகவளையவுஞ் செய்தபேராற்றலுடையா ரெத்தகைய கரடுபற்றிய வுயிரையுங் கனியச்செய்து தம் வயப்படுத்தி யாள்வரென்னுங் கருணையை வியீந்தமையே அதுவாம். ஆணவபாசத்தாற் பீடிக்கப்பட்ட வுயிர்களை யவ்வாணவத்தைப் போக்கித் தமது திருவடியின்பத்தைத் தந்தருளும் அருளாற்றலுடையா ரென்று கற்பதே யதன் முடிவென்றறிக. கல்லால் துளிர்க்கச் செய்தவர்பாச வுயிர்துளிர்க்கச் செய்தலும், கன்மலைவளையச் செய்தவர் பாசவுயிர்வளையச் செய்தலு மெளிதிற் கூடுமென்றுணர்க. கைலையாகிய கன்மலையைத் தாமெழுந்தருளிய விருக்கையாகக் கொண்டதும் முன்னவற்றோடு சேர்ந்து பொலிவெய்து மென்க. ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாவார் ஸநகாதியோகிகளுக்கு வேதாகமங்களின் றுண்பொருளையுபதேசித்து வீடுபேற்றை நல்கினராகையால் ஆசிரியராகிய வவருயிர்களைப் பக்குவப்படுத்தி யுபகரிக்குந் தன்மை போதரவே கல்லால் கன்மலையுவமைகள் பயன்பட்டவாறறிக. விரிக்கிற் பெருகும். நிற்க.

ஸ்ரீதக்ஷிணாமூர்த்தம் சிவனாரது இருபத்தைந்து மூர்த்தங்களி லொன்று. தென்முகமா யெழுந்தருளிய கோலமென்பது அதன் பொருள். இந்த மூர்த்தத்தை "ருத்ரயத்தேதக்ஷிணம் முகம்தேநமாம்பாஹிநித்யம்" என்று துதித்து, 'தேவரீருடைய தக்ஷிணமுகமானது என்னை ரக்ஷிக்கக் கடவது என்னும் பொருடோன்றச் சுருதிவிதந் தோதியதறிக. இந்தக் கோலம் யோககோலம். அம்மையோடுகூடிய கோலம்போககோலம். இவ்விரண்டினுள் யோககோலத்தை விளக்குங் கல்லானிழனீமட்டில் விடுத்தால் இவர் அருளிய, பொல்லார் என்னும் விநாயகரது பிரசங்கத்துக் கவகாசமில்லாமற்போம். அம்மையைப் பிரிந்து கல்லானிழலிலிருந்தவர் பிள்ளையைத் தருதல் கூடாமையால், பொன்மலை வில்லைத் தாங்கி முப்புரம் பொடியாகைத்துச் சொர்க்கமத்யபாதல மென்னு மூன்றுலகம் அல்லது முப்புரங்களைக்காத்து, உயிர்களுக்குப் போகத்தை நிறுத்திய கோலத்தையுடன் புணர்த்திக் கூறினரென்க. போகத்துக்குப் பொன் முதற்பொருளாகையால் அதனைக்கொடுத்துப் போகந்துய்க்கச் செய்யவல்லவரென்பதையு மவரது பொன்மலை வில்லுணர்த்தியவாறறிக. பொன்மலை வில்லேந்திய காலத்து, அதற்குநாரி-பாணமுதலியவைகளும், தேர்-குதிரை முதலியவைகளும், ஏனையசாரதி முதலிய அங்கங்களுங் கேட்கப்பட்டமையா லிவைகளையுடையார் பெரியவொருஸம்ஸாரியாயினது சித்தம். இவருக்கு மனைவிமக்களுண்டாயிடுதலாசங்கை பெருமையால, இவரருளிய பொல்லார் என்று விநாயகரைத் திதித்தல் மரபாயினவாறறிக. அன்றியும், கல்லானிழலி லெழுந்தருளியிருந்தவர் யாவரென்னுமாசங்கையை விடுவித்தற்கு மலைவில்லாரென்று கூறினரெனலுமொன்று. ஈண்டுப்போந்த பிரசங்கத்தால் சிவபரஞ்சுடரினது யோககோலம் போககோலம் என்னுமிருவித கோலங்களுந் துதியேற்பவாயின. யோககோலம் உயிர்களுக்குயோகத்தைப் பிரஸாதித்திற்கும், போககோலம் அவர்களுக்குப் போகத்தைப் பிரஸாதித்தற்குமாம். இதனாலிவை பரப்பிரயோஜனார்த்த மெடுத்துக்கொண்டவையா மென்றறியத் தக்கது. "வில்லாடன்மாரனிருக்கவும் யோகம் விளைத்தவந்நாள் புல்லாதிருந்தன வெல்லாவுயிருந்தம் போகத்தையே" என்னும் வாக்கியம் உமாதேவியாரை எம்பிரான் நீங்கியிருந்தபோது உயிர்கள் தத்தம் பேடுகளை நீங்கியிருந்தன வென்று தெரிவித்தமையால், அவ் வெம்பெருமான் பிராட்டியாரை மீண்டுந் திருமணத்தாற் கூடியது அவ்வுயிர்கள் தத்தம்பேடுகளை யணைந்தின்புறுதற்கேயாம். அன்றியும், "இமைப்பொழுது முபகாரமல்லா லொன்றை யியக்காநிர்க்குணக் கடலே" என்றவமுதவுரை எம்பெருந்தகை சுயப்பிரயோஜனங் குறிக்காது பரப்பிரயோஜனார்த்தமே யாவுஞ் செய்பவரென்னு முறுதியை விளக்கியவாறறிக. "வேண்டுதல் வேண்டாமையிலானடிசேர்ந்தார்க் கியாண்டு மிடும்பையில." என்னுந்திருக்குறளாசிரியரது தெய்வவாக்கு மிதனை நிறுத்தியவா றுணர்க.

இனி யவ்விறைவனருளிய விநாயகக் கடவுளைப் பொல்லார் என்றதென்னை யெனின், பொள்ளல்=துவாரம். பொள்ளா என்பது துவாரஞ்செய்யாத என்று பொருள்படும். இதனால், பொள்ளாப்பிள்ளையார் என்பது துவாரஞ்செய்யாத பிள்ளையார் அல்லது ஆயுதத்தினாற் றளைபடாத பிள்ளையார் என்று அறிஞர் பொருள்கூறுவர். இன்னுமிதனைவிரிக்கின் ஒருவராக்காமல் தானேயுண்டான சுவயம்புமூர்த்தி யென்பது முடிவென்றறிக. திருக்கைலையினின்று மெழுந்தருளிய பரஞ்சோதியார் தமக்குபதேசித்த சிவஞான போதத்தை இந்தப் பொல்லாப் பிள்ளையாரிடத்திலேயே மெய்கண்ட சிவங் கேட்டுத் தெளிந்து அநுபூதிப்பெருஞ் செல்வராயினரென்க. பின்னரே சிவஞானபோதத்தை விரித்தருளினர் சிறிய பெருந்தகையா ரென்க. இவரது அவதாரபூமியாகிய சுவேதவனத்திலந்தப் பிள்ளையார் திருக்கோவில்கொண் டெழுந்தருளியிருப்பதால் அவரையே பொல்லாப்பிள்ளையா ரென்று துதித்தபடியாம். திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரது பிரஸ்தாபம் ஸ்ரீநம்பியாண்டார் நம்பிகளது சரித்திரத்திற் கேட்கப்படுகின்றது. அந்தப்பிள்ளையாரும், சுவேதவனப்பிள்ளையாரும் வேறு வேறு இடங்களிலெழுந் தருளிய அவசரகோலங்களாம். பொள்ளாப் பிள்ளையா ரென்பதே பொல்லாப் பிள்ளையார் என மருவியவாறறிக. திருநாரையூர் சுவேதவனம் இவைகளின் மாத்திரமன்றி வேறு பல இடங்களிலும் சுவயம்பு விநாயக மூர்த்திகளெழுந் தருளியிருப்பதால், அவ்வெல்லா மூர்த்திகளையும் பொல்லாப் பிள்ளையார் என்று வந்திப்பதே மரபாயதென்க.—(இன்னும் வரும்.)

## திருவானைக்காவுலா.

இவ்வரிய நூலானது, சம்புகேச்சுரமென்னும் வடமொழிப்பெயரை யுடைய திருவானைக்காவென்னுந் தலத்தில் விளங்கும், ஸ்ரீஅகிலாண்டேசுவரி வரப்பிரசாதம் பெற்று விளங்கிய ஸ்ரீ காளமேகப் புலவராலியற்றப்பட்டது. இப்புலவர் பெருமான், திருவரங்கத்தில், வடமப்பிராமண குலத்திலவதரித்தவர். கும்பகோணத்தை, இவரது ஜன்மதேசமென்பாருஞ் சிலருண்டு. இவர் தம்பாடல்களில் பிரஸ்தாபிக்கும், திருமலைராயன் என்னுமரசன், 15-வது நூற்றாண்டிலிருந்தாகச் சொல்லப்படுவதால், இவருடைய காலம் சுமார் 400 வருடங்களுக்கு முந்தியது. பலவகை ரசங்களும் பொருந்த எவ்வகைக் கவிகள் பாடுவதிலும் ஈடின்றிச் சிறந்தவரிவர். இவர் செய்தவைகளில், பெரும்பாலாயுள்ளவை தனிப்பாடல்களே. இவர் சென்ற பலவிடங்களிலும், நடந்த சம்பவ விசேடங்கள் பலவாறாக வழங்கி வருகின்றன. அவற்றைப் பெரும்பாலும், விநோதரசமஞ்சரி முதலியவற்றிற் காணலாம். திருமலைராயன் பட்டினத்துக்கு முதன்முறையிவரெழுந்தருளி, கடைவீதியில், ஓர் கடையிலுட்கார்ந்திருக்கையில், மிக்க ஆடம்பரத்துடன் அவ்வீதி வழியே சென்ற அச்சமஸ்தான வித்வான்களைக் கண்டு, வழக்கப்படி அங்குள்ளார் யாவருமெழுந்து, கைகுவித்து மரியாதை செய்தனர். அதனைக்கண்ட புலவர் பெருமான் புன்முறுவல்கொண்டெழா திருமாந்திருந்தனர். அதனைக் குறிப்பாகக்கண்ணுணர்ந்த அதிமதுரகவி யென்பவர், இவரை யோர் செருக்குற்ற புலவராக எண்ணி, இவர் திறமையை அளந்தறியுமாறு ஒருவனிடத்திற் சிறிது பொருள் கொடுத்து, இவருட்கார்ந்திருந்த கடைக்காரனிடத்தில், மேகமும், பசுவும், ரத்நமும் அப்பொருளுக்கு வாங்கிவரும்படியேவி யனுப்பினர். அவ்வேவலாளன், அக்கடைக்காரனிடத்து வந்து அப்பொருளைக் கொடுத்து மேற்சொல்லிய மூன்றையுங்கேட்க, கடைக்காரன் மனமருண்டு சமஸ்தான வித்வான் விரும்பியதை மறுக்கமாட்டாமையாலும், பசுவும், ரத்நமும் கிடைப்பினும் மேகங் கிடைக்க மாட்டாமையாலும் வருந்தி நிற்கையில், அக்கடையிலிருந்த காளமேகப்புலவர், அக்கடைக்காரனை நோக்கி, ஓய் வணிகரே! வருந்தாதிர்! இவன் கொடுத்த பொருளுக்குத் தக்கபடி, உம்மிடத்துள்ள 'காராமணிப் பயறு கொடுத்தனுப்பும்' என்றார். அவ்வியாபாரி அதற்குடன்படாமல் மிகவுமஞ்ச, அவனைத்தேற்றி, கார்=மேகம்; ஆ=பசு; மணி=ரத்நம்; இம் மூன்றுங் கூடியது 'காராமணி' என்று அக்கடைக்காரனுக்கு விளக்கிக்காட்டி, அக்காராமணியே கொடுத்தனுப்பச் செய்தார். அதிமதுரகவிராயர் கருதியது மிதுவேயாதலால், அந்தப்புலவர் பெருமானுடைய அபாரசக்தியை அறிந்து, பொறாமை கொண்டு அநேக ஊறுபாடுகளைச் செய்ய, எல்லாவற்றையும் அவரொழித்து, அரசனால் மிகவும் உபசரிக்கப் பெற்றனர். இப்புலவர்பெருமான் சாபானுக்கிரக ஸாமர்த்தியமுடையவராதலால் 'வசைபாடக் காளமேகம்'என்று முன்னோர் இவரைத்துதித்திருக்கின்றனர். 'மற்றெல்லாப் புலவர்க்கும் வெண்பாபுலி' என்றபடி பாக்களிலே கடினமாகிய வெண்பாக்களை மிகவும் அநாயாசமாகப் பாடுவதில் ஒப்புயர் வில்லாத சாமர்த்தியமுடையவரிவர். இவரியற்றியவைகளுள், மேற்குறித்த திருவானைக்காவுலாவும் பரப்பிரம விளக்கமுமாகிய இரண்டுமே, பிரபந்த ரூபமாயுள்ளன. இவற்றுள் பரப்பிரம விளக்கம் சிவபாரம்யத்தைக்கரதலாமலகம்போல் நன்கு விளக்குவது. இனி இங்கே எடுத்துக்கொண்ட உலாவைப் பற்றிச் சொல்வாம்.



உலாவென்பது, தொண்ணூற்றறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இதனிலக்கணத்தைத் 'திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை, மறந்தயரவந்தான் மறுகென், றறைந்த கலி வெண்பாவுலாவாம்' என்பதனால், பேதை முதற்பேரிளம் பெண்ணீறாகிய ஏழுபருவத்துப் பெண்களும் காதல்கூரப்பாட்டுடைத் தலைவன் வீதியிடைப் போந்தானெனக் கலிவெண்பாவாற் கூறுவதெனக. ஏழ்பருவமாவன:—ஐந்தாமாண்டு முதலேழாமாண்டளவும் **பேதை**; 8 முதல் 11 வரையும் **பெதும்பை**; 12 முதல் 13 வரையும் **மங்கை**; 14 முதல் 19 வரையும் **மடந்தை**; 20 முதல் 25 வரையும் **அரிவை**; 26 முதல் 31 வரையும் **தெரிவை**; 32 முதல் 40 வரையும் **பேரிளம் பெண்**. இவற்றுள் பெதும்பைப் பருவ வருணனை கஷ்டமானது; 'பேசுமுலாவிற் பெதும்பைபுலி' என்பவாகலான்.

இத்தகைய பிரபந்தத்தை நமது காளமேகப் புலவர் திருவானைக்காவுடைய செல்வனைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடினமையால் இதற்குத் 'திருவானைக்காவுலா' எனப் பெயராயிற்று.

இந்நூல் சில நாளைக்கு முன்னர் அச்சிடப்பட்டு வெளிவந்தது. அதனைப்பார்க்க, 'இதையச்சிட்டதினும் இறந்துபடவிட்டிருப்பதே நன்று' என்று தோன்றிற்று. ஒருங்கே நாலுவரிக்குப் பொருள் கொள்ளவியலாது பல்வகைப் பிழையும் பொதிந்து கிடந்தமையால். ஆகவே பழைய ஏட்டுப்பிரதிகளை யச்சிடுவோர் தக்கவாறு ஆராய்வது கடமையாகும். சிலமாய்ப் போன பழைய ஏடுகளைப் படித்துப் பாடநிச்சயம் பண்ணுவதினுங் கஷ்டமானது வேறொன்றில்லை. ஒரு பிரதியானது அந்தியதசையடைகிறபோதே அதனைப் பெயர்த்தெழுதுவது நம்மவர் வழக்கம். மூலப்பிரதியைப் பெயர்த்தெழுதுவோர் பாஷா ஞானமின்றி வெறும் எழுத்துக் கூலிகளாகவே பெரும்பாலு நேர்தலால், அவர்கள் ஒரெழுத்தை மற்றொன்றாக எண்ணியெழுதி முடிக்க, அதனால் படிப்பிரதி (நகல்) சீர் கெட்டுப்போம். அதனிலிருந்து மற்றொன்று பெயர்த்தெழுதுங்கால், அதன் சீர்சொல்லவும் வேண்டுமோ? சிந்தாமணி, சிலப்பதிகாரம், புறநானூறு, பத்துப்பாட்டு, இலக்கண விளக்கம் முதலியவற்றை யச்சிட்ட மகான்களுக்கே யிவ்விபரிதங்கள் நன்குபுலப்படுமென்க. இவற்றைச் சீர்ப்படுத்தியுபகரித்த அப்பெருந் தகையாளர்கள் சிரமத்துக்குத் தமிழுலகஞ் செயற்பாலதாகிய கைம்மாறு மொன்றுண்டோ! இது நிற்க, நமது திருவானைக்காவுலாவை அச்சுருபத்திற் கண்டு துக்கமே யதிகரிக்கப் பெற்று நிற்கையில், அச் சம்புகேச்

சுரர் திருவருளால் அவ்வுலா எட்டுப் பிரதியொன்று கிடைத்தது. அதுவுமேற் கூறியபடி எழுதுவோரால் நேர்ந்த பல வழுக்கள் நிறைந்ததே. ஆயினும் அதைக்கொண்டே ஒரு பிரதி செம்மை செய்து இப்போது வெளியிடலாயிற்று. இதில், சிலவிடங்களிற் சில சொற்றொடர்களுக்குப் பொருளமைதி நன்கு புலப்படவில்லை. அவ்விடங்களை ஏட்டிலுள்ளவாறே பதிப்பித்திருக்கிறது. அதிக சீர்க்கேடாயிருந்த சில விடங்கள் எதுகைத் தொடை யொற்றுமையால் சுலபமாக அறியலாயின. இன்னவிடங்களை யுற்று நோக்குழி படிப்பிரதியெழுதினவர் சொன்னிலை நோக்காது எழுத்து நிலையே கொண்டெழுதினவ ரென்பது நன்கு புலப்படும். மோனை, எதுகை யில்லாத பழைய நூற்களையச்சிட்டோரும், அச்சிடுவோரும், பட்டவும், படுவனவுமாகிய பிரயாசைக்கு ஓரவதியுமுண்டோ!

யேஸ். சரவணப்பிள்ளை.

---

## திருவானைக்காவுலா.

---

### காப்பு.

ஏரானைக் காவிலுறை யென்னானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினல்—வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரசம் பத்துவருஞ்
சத்திவருஞ் சித்திவருந் தான்.

---

### அவையடக்கம்.

தேனுலா வுந்தார்த் திருவானைக் காவாற்கி
யானுலாப் பாடவிசை கின்றேன்—பானு
வழியென் றளவாத வானைமாக் காலாற்
பொழியென றளப்பாரைப் போல்.

துலங்கு கயிலாயத் தொல்லோர் பொறுமின்
இலங்குகயி லாயத் திருந்துஞ்—சிலந்தி
உமிழ்நூலின் பந்த ருகந்தார்க்கென் புன்சொற்
றமிழ்நூலின் பந்தருமே தான்.

### நூல்.

சீர்பெற்றதற்பரமாய்ச் சிற்பரமாய்ச் சிற்பரத்தின்
வேர்பெற்ற நாதமாய் விந்துவாய்ப்—பேர்பெற்ற

சோதியாய் மும்மைச் சொருபமாை யம்பூதத்
தாதியாயெவ்வு மிருமாயினேன்—வேதத்து

மட்டுப்படாது வளர்ந்தண்ட வான்கனிதந்
தெட்டுப் பணிகொண்டெழுந்த தருக்—கிட்டுபொரு

ளீவானுமீ கென்றிரப்பானு மீவனவே
யாவானுந் தானுகு மாடலான்—ஓவாது

தானே சகமாகித் தானேபடைத் தளித்துத்
தானே யழித்தருளுந் தன்மையான்—ஞான

விசிதவடிவாய் விளங்குஞ்சிகா
ரசிதகிரியிலிருந் தோன்—வசனநெறிச்

சம்புதலத் தென்பார் றடங்கண்டுசங்கரவென்
றம்புயன் மாதிவஞ்செய் தர்ச்சிக்க—நம்பும்

பெருஞானபூமி யெனும் பேர்தலத்துக்கெய்த
வருஞான தீட்சையளித்தோன்—இருடி

ஒருவனடி சேர்வான்பொன் னேங்கல் சூழ்சம்பூந்
தருவினடியிற் றவமே—புரியக்

கரத்திற் றவணிக் கனியொன்று வீழ
மரத்திற் கனிகருது மத்தன்—கிரிக்கோத்த

மேனியுளதிந்த வெண்கனிதெய் வீகத்தா
லானதாற் கமுதமாமென்னுந்—தானெழுந்து

கைக்கொண்டடங்குங் கனியைக் கயிலையிற்போய்
நக்கன்றனக் களிப்ப நன்றென்று—மீக்கணனர்

வாங்கியருந்திவிரை மாமுனிக்கு நல்கமுனி
தாங்கியருந்த த்தரிக்குமோ—பூங்கொன்றைத்

தாரான் பவளவிதட்டங்கிய தனிரேருவுடலில்
வேராய்முடியில் வெளிதிறந்து—தேராளி

மேகபதங் கரப்பவெண்ணாவ லாயெழுந்து
சாகையொடு தழைப்பத் தானேந்தி—ஓகையுடன்

நின்றுபாவ நிருத்தன் கருத்துடனீ
யின்றுமுதற் சம்புமுனியிப்படிப் போய்—மன்றல்

நளினமுனி பூசித்தஞானபூ மிக்கட்
டெளிபிரமபுட் கரணிதீரத்—தொளிர

இருப்பாயுன் னிழலிலே யாமுறைவோ மென்ன
விருப்பாலவனவந்து விட்டான்—உருத்திரனர்

கற்பித்தவங்னேறியே கஞ்சமுனி தடப்பாற்
பொற்புப் பெறவுறையப் புக்கதன்பின்—வெற்பிடத்தில்

நவ்வி யகிலாண்ட நாயகி ஞானக்கேள்வி
எவ்வழி நானெய்துமியல் பென்னச்—செவ்வியோய்

நீயும்போய் ஞானநிலத்து நமையர்ச்சியென்த்
தாயும் போயந்தத்தலத் தெய்தித்—தூய

அயன்றனை நோக்கினானர்ச்சிக்கவே தா
னியன்றசிவ லிங்கமே தென்னப்—பயின்றரனர்.

---

## தமிழ்.

சிதம்பரம், ஸ்ரீஇராமலிங்கசுவாமிகளவர்களால் எழுதப்பட்டது.

தமிழ் என்பது, த்+அ+ம்+இ+ழ் என்னும் 5-அலகு நிலையுடைத்து. த், ம், ழ், ஜட.சித்கலை. அ, இ, சித்கலை. அ=அகண்டாகார சித்தைவிளக்கும், ஓங்கார பஞ்சாக்கரத்துள் பதிநிலையக்கரமாம். இ=பதியைவிட்டு நீங்காத சித்தை விளக்கும், வியவகாரத்தால் அனந்தாகார வியஷ்டிபேதங் காட்டும் ஜீவசித்கலையக்கரமாம்.

பதி சிதாத்ம கலைகளுக்காதாரமாகி, உயிரினுக் குடலையொத்துக் குறிக்கப்படும்.

த், ம், ழ், எழுத்துகளுக்குரை.

த்=எழாவது மெய்; ம்=பத்தாவதாகும்; ழ்=15-வது இயற்கையுண்மைச் சிறப்பியலக்கரமாம்;—ஐந்தலகுநிலையும், உபயகலைநிலையும், மூன்று மெய்நிலையும் அமைந்துள்ளதும்; சம்புபக்ஷத்தாரால், அனுதியாய் சுத்தசித்தாந்த ஆரிஷரீதிப்படி கடவுள் அருளாணையால் கற்பிக்கப்பட்டதும்; எப்பாஷைகளுக்கும் பிதுர்பாஷையென்று ஆன்றோர்களால் கொண்டாடப்பட்டதும்; இனிமையென்று நிருத்தம் சித்திக்கப்பெற்றுள்ளதுமான தமிழ் என்னும் இயற்கையுண்மைச் சிறப்பியல் மொழிக்குச் சுத்தசித்தாந்த பதஉரை.—

த்+அ தத்வரூபாதி சிவபோகாந்தமான தசகாரிய இயற்கையுண்மைக்கட்டளை நிலையில் முன் அலகுநிலைப்பொருள் கூறியவிடத்துக்குறித்த எழாவது நிலையாகிய த் என்பது சிவரூப இயற்கையுண்மைக் கட்டளையாம்.—

அ=அகண்டாகார சித்கலாரூப ஓங்காரத்துட்பொருட் பிரதம விலக்கிய வியக்தியக்கரம்;—பன்னீருயிர்நிலையிற்றலையாய முதலக்கரமாதலில், அதுவே பிரமாதி பரசிவாந்தவநிலைக்கும் அனுதியாதிகாரணமாயுள்ள வியற்கையுண்மைப் பரிபூரணப்பொருளிலக்காம்;—

என்னவே; சிவரூபமாகும். தகராகாசத்தில் சுத்தசிவமாகும் அருட்சோதியிணைந்துள்ள பூரணானந்த ஸ்வரூப பரபதி வியக்தமாயிற்று:—

ம்+இ சங்காரப்ரணவமாகிய மகாரம்—முத்தான்மாக்களுக்கு ஒளிவண்ணச் சதானந்தமாயும், பெத்தான்மாக்களுக்கு இருள்வண்ண மலரூபமாயும் இருந்து, கற்பாந்தப்பிரளயமுடிவின் சிருட்டி திதியாதிகளில், சிதான்மசத்தியாகிய ஜீவனுக்கு, அதிகரணமாகவும், முற்குறித்த பத்தாவது நிலயமாகிய ஆன்மாதாரமாகியுமுள்ளதெனப்பொருளாம்;—

இ=பன்னீருயிர்நிலைகளில் மூன்றும்நிலையுயிராகிய இகாரம், திரிமலா ஆன்ம[illegible]ருக்கத்தில், அபரமாகிய சகலாகலரையும், பரமாகிய பிர[illegible]ாகலரையும் கீழ்ப்படுத்தி, அவ் விருகூட்டத்தாருக்கும் [illegible]ட்டுகின்ற சுத்தவிஞ்ஞானகலராகிய சிதாத்மாக்களை [illegible]ன்றதாம்.

[illegible]ர ஆதேயக்கூட்டரவால் என்றுந் தோன்றி[illegible]மவருக்கங்கள், பரபதிலக்ஷியமாகிய பூர[illegible] அநுபவிகளாக வுரியவர்களெனக் குறிக்[illegible]டும்.

ழ்=இந்தச் சிறப்பியலக்கரம், பதினெண் மெய்களில் பக்ஷமுடியின் எண் குறிப்பில் நின்று, சிவயோக பூமியாகிய பரத கண்டத்தில் பௌராணிக தத்துவத்தாற்குறிக்கப்பட்ட ஐம்பத்தாறு தேசங்களுள் சுதேசந்தவிர மற்ற ஐம்பத்தைந்து தேசபாஷைகளிலு மில்லாததாயும், பதினெண்ணிலமாகக் குறிக்கப்பட்ட செந்தமிழ்,கொடுந்தமிழ்என்னும்இருமைக்கும் ஒற்றுமையுரிமையாயும், முத்துறைத் தமிழுக்குள் முதன்மைத்துறையானதும், இருக்கு யஜுர் சாமமென்னும் சமஸ்கிருத வேதத்திரயப்பொருள் அனுபவத்தை யெளிதில் கற்றுணர்ந்து தெளிந்து அநுபவிக்கிறதற்குப் பரமேசுரனது திருவருளைப் பஞ்சாக்ஷர முத்தொழிற்காரியமான பஞ்சதசாக்கரியால் பிரத்தியக்ஷாநுபவம் சித்திக்கச்செய்யும் நிலயமானதும்,—

ஸ்ரீமணிவாசகர், சம்பந்தர், நாவரையர், சுந்தரர், திருமூலர் முதலிய மகாபுருஷர்களால் சாத்திர தோத்திரங்களாக அருளிச்செய்யப்பட்டிருக்கும் திருவாசகம், தேவாரம், திருமந்திரம் என்னும் பரமார்த்த ரகசியங்களையுடையதும், —பலநாள் நைஷ்டிக அதிகரணம் பூண்டுபோதகாசாரியர் சந்நிதியில் தாழ்ந்து சகபாடிகளோடு சூழ்ந்து சுர ஒலி பேதங்களைத் தேர்ந்து, உழைப்பெடுத்து ஓதினும் பாடமாவதற்கு அருமையாயும், பாடமானுலும் பாஷியம், வியாக்கியானம், டீக்கா, டீக்கா, டிப்பணி முதலிய உரைகோள் கருவிகளைப் பொருள்கொள்ளத் தேடவேண்டியதாயும், அவ்வவைகளையும் தேடிக்கைவரினும், அக்கருவிகளால் போதகம் பெறவேண்டியதற்கு பாஷியக்காரர்கள், வியாக்கியானகர்த்தர்கள், டீக்காவல்லபர்கள், டீக்கா சூசகர்கள் முதலிய போதக உபபோதகாசரியர்கள் கிட்டுவது அருமையில் அருமையாயும் இருக்கிற ஆரியம், மகாராட்டிரம், ஆந்திரம், என்ற பற்பல பாஷைகளைப்போலாசாமல் பெரும்பாலும் கற்பதற்கு எண்ணளவு சுருக்கமாயும், ஒலியிலேசாயும், கூட்டென்னுஞ் சந்தி அதிசுலபமாயும், எழுதவும், கவிசெய்யவும் மிக நேர்மையாயும், அக்ஷர ஆரவாரம், சொல்லாடம்பரம் முதலிய பெண்மையலங்காரமின்றி எப்பாஷையின் சந்தசுகளையும் தன் பாஷையுள்ளடக்கி ஆளுகையால், ஆண்டன்மையைப் பொருந்தியதான தற்பாஷைக்கே அமைவுற்ற ழ், ற், ன் என்னும் முடி நடு அடி சிறப்பியலக்கரங்களில் முடிநிலை இன்பாநுவ சுத்த மோனாதீதத்தைச் சுட்டறச்சுட்டும் இயற்கையுண்மைத் தனித்தகைமைப் பெருமைச் சிறப்பியலொலியாம்.

உரைகூறிப்போந்த சுத்த சித்தாந்த ஆரிடரீதி முப்பதவுரைப் பொழிப்புமருளியற்கைமல இருளைப்பரிபாகசத்தியால் அருளொளியாக்கி, அதற்குள்ளீடான சிதாத்ம சிற்கலாசத்தியென்னும் சுத்த ஆன்மாவை, தகர ககன நடன அருட்பெருஞ்சோதியென்னுஞ் சுத்த சிவானந்த பூரணத்தைச் சுத்த மோனாதீன வியலால் அநுபவிக்கும் இயற்கையுண்மையே தமிழ் யென்னும் சொற்பொருள் சுட்டினவாறு காண்க.

இதன் கருத்து யாதெனில், தமிழ்ப்பாஷையே அதிசுலபமாக சுத்தசிவாநுபூதியைக் கொடுக்கும் என்பதாம்.

## குறிப்புகள்.

பதினேழாவது காங்கிரசு சங்கம் வரும் செப்டம்பர்மாதம 5-வது தேதியிலிருந்து 12-வது தேதிவரையில் பாரிசுநகரி யில் கூடும். ஏஷியாடிக் குவார்ட்டர்லி ரிவியூ என்றபத்திரி கை ஜூலைமாதம் வெளிப்போந்த கடிதமொன்றில் டாக்டர்-ஆர்-என்-கஸ்டு என்பவர், ஐரோப்பா கண்டத்திற் பலவிடங் களிற் கூடிய சென்றபத்துக்காங்கிரசு சங்கத்தால் விளைந்த பயன்களைப்பற்றியும், சுதேசபாஷைகளை யபிவிர்த்தி செய்வ தற்கும் இச்சங்கம் மிகவும் பயனுடைத்தா யிருக்குமென்ப தைப்பற்றியும் ஒரு தலைமை விஷயம் எழுதியிருப்பது மல்லா மல், காங்கிரசுசபையார் எடுத்துக்கொண்ட கவலையும், அவர் கள் சேகரித்த விஷயவாராய்ச்சியும், புதிய விஷயங்களும், பெரும்புலவர்களாகிய அவர்கட்குள் நீடிய நட்பும் மிக நன்கு மதிக்கத்தக்கவாமெனபதைப்பற்றியும் எழுதியிருக்கி றார்கள். அதே பத்திரிகையில் டாக்டர் ஜி-யூ-போப் அவர்க ளால் தமிழ் நாட்டுப்புலவர்களைப்பற்றி யொருவிஷயம் எழு தப்பட்டிருக்கிறது. அவ்விஷயத்தை நாம் அடுத்தபத்திரிகை களில் வெளியிடுவோம்.

***

மணிமேகலை,—இந்நூல் தமிழிற் சிறந்த ஐந்துகாப்பியங் களில் ஒன்று. இதை யாக்கியோர் கடைச்சங்கத்து வீற்றி ருந்த தெய்வப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரில் ஒருவ ரான சீத்தலைச்சாத்தனார். இது சொற்சுவை பொருட்சுவை களில் மிகச் சிறந்ததும் எளிதிற் பொருள் விளங்குவதுமாயுள் ளது. இத்தகைய நூல் ஒன்று படிப்பாரும் எழுதுவாரு மின்றிச் செல்லுக்கிரையாகாது கும்பகோணம் காலேஜ்-தமி ழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்-வே-சாமிநாதையரவர்களால் பல பிரதி களைக்கொண்டு நன்கு ஆராய்ந்து அவர்களால் ஒரு சிறந்த குறிப்புரையும் எழுதி யச்சிடப்பட்டு முடிவுபெற்றிருப்பது கேட்டுக்களிபெருங் களிப்பெய்துகின்றோம். புத்தகங்கட்டப் பட்டு வருகிறதாம். நமதடுத்தபத்திரிகையில் அது வெளி வந்த விஷயம் எழுதப்படுமென்று நம்புகிறோம்.

***

இலக்கண சந்திரிகை—இது, யாழ்ப்பாணத்துச் சுன்னாகம், ம-ா-ா-ஸ்ரீ அ குமாரசுவாமிப் பிள்ளையவர்களால் இயற்றப் பட்டது. பழந்தமிழ் நூல்களில் உருவமாறுபட்டு வழங்கப் படும் வடசொற்கள் விதியும் வடசொற்போல் தமிழில் வழங் கும் பெயர், வினை, இடை உரிச்சொற்கள் விதியும் விரிவாய் எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூல் தமிழ் கற்போர்க்கு மிகவும் பயன்படும். இதை அன்புடன் எமக்கனுப்பிய ஆக் கியோர்க்கு எமதன்பார்ந்த வந்தனம் பலசெய்யப்படுகின்றன. இந்நூலாசிரியர் வழியைப்பின்பற்றி யேனைத்தமிழ்ப்புலவர்க ளும் இத்தகையபுதுநூல்கள் இயற்றிவருவார்களானல் நமது செந்தமிழ் மொழி மிக்குப் பெருகிவிடும். இலக்கண சந்திரி கை வேண்டுவோர் மேற்குறித்த ஆக்கியோர்க்கெழுதிப்பெற் றுக்கொள்ளலாம். விலை 25 சதம். ரூ. (0—4—0).

மிஸ்ஸர்ஸ்-வாட்ஸ் - ஹியூக்ஸ் என்னும்மாது அருவமான இசைப்பகுதிகளை யுருவமாக்கிக்காணுமாறு ஆராய்ச்சிசெய்து வருகிறாராம். இசையொலி ஒருகுழல்வழியாக இயங்கும் ஊசி யொடுசென்று விண்மீன் தாமரைமுதலிய பூக்களினுருவத் தை இயற்றுகின்றது. மேமீ ஊஸிபர் என்னும் பத்திரிகை யில் அன்னிபெஸாண்டென்னும் மாது நியூயார்க்பட்டினத்தி லுள்ள ஒருவைத்தியர் ஒருதட்டில் நுண்ணிய பொடிகளைக் கொட்டி யிசையெர்லியியக்கத்தின் முன்வைக்கவே அவ்வி யக்கத்தினால் தட்டினின்றும் அவைகிளம்பி பூக்கள் விலங்கு கண் முதலிய உருவத்தை யியற்றுகின்ற விடயத்தை எழுதி யிருக்கிறார். இத்தகைய ஆராய்ச்சியொன்று நன்கு முடிவு பெறுமானல் மந்திரங்களினுடையவும் அவற்றின் சக்கரங் களினுடையவும் அம்மந்திரங்கட்குரிய தெய்வங்களுடைய வும் உருவம் வெளிப்படுமாறு செய்யும்போலும் !

***

சுதேசபாஷாபிவிர்த்தி:—இவ்வரியவிஷயத்தை கனம் டா க்டர் டங்கன் அவர்கள் முடிவுசெய்வதற்குள் இவ்விஷயத் திற்கோ ரூன்றுகோலாயிருந்த ராய்பகதூர் பெ. சுந்தரம் பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்க்கையைத் துறந்துசென்றார் கள். இவ்விஷய வேற்பாடு முற்றுப்பெறுமாறு பலப்பல கனவான்கள் இடையூறுசெய்து வருகிறார்கள். சுதேசபாஷா பிவிர்த்தியினாலன்றிக் குடிகளுக்கு நாகரிகமும் நல்லறிவும் தலைப்படா. சுதேசபாஷையில் லௌகிகசாஸ்திரங்கள் இல் லாமைபற்றியவற்றின்பயற்சிபயனுடைத்தன்று என்று சொல் லப்படாது. வேண்டுமானல் அத்தகைய சாஸ்திரங்களை யிப் பொழுதே சுதேசபாஷையிற் செய்யவல்லுநர் இருக்கின்றா ர்கள். பொருளுதவி மாத்திரங்கிடைக்குமேல் இன்னோரன் னவை மிகஎளிதில் முடிதற்பாலனவாம். ஆதலால் சுதேசப்ர தேச தனவான்களியாவரும் இவ்விஷயத்தை யூனிவர்ஸிட்டி மூலமாகவே ஏற்பாடாமாறு கனம் டாக்டர் டங்கன் அவர் கள் அபிப்பிராயத்தோடுடன்பட்டு முயற்சித்துச் சுகிப்பார் களென்று நம்புகிறோம். கனம் டாக்டர் டங்கன் அவர்களும் விரைவிலிந்தியாவிற்குத் திரும்பிவருவதாசக்கேள்வி.

***

பொருட்டிறம்:—இந்நூல் ஆங்கிலேயபாஷையில் பிஸிக்ஸ் (Physics) என்று சொல்லப்படும். இது, உலகத்தியில்பில மைந்து கிடக்கும் விடயங்களையெல்லாம் ஆராய்ச்சிவாயிலா கத்தெள்ளத் தெளியவிளக்கும். இந்நூலைப்பயில்வதால் அ றிவுவிரிவதுடன் உலகவியற்கையும் இனிது விளங்கும். பலம றை பொருள்களெல்லாம் வெளிப்படும். இத்தகைநூலொ ன்றை மொழிபெயர்ப்பாக வியற்றுது, அச்சாஸ்திரத்தில் பழகிய பயற்சியறிவால் தனித்தமிழில் சூத்திரமும் உரையு மாக வியற்றிவருகின்றோம். இப்பத்திரிகைக்குக் கையொப் பநேயராகும் நமது நண்பர்கள் தாமும் தம்மைநட்டோரு மாகமுன்கையொப்பஞ் செய்வார்களென்று கேட்டுக்கொள் ளுகிறோம்.

(ப - ர்.)

***

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுருப்யோநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஹு மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897 ஹு செப்டம்பர்மீ 21உ { இலக்கம் ச.

## கைவல்யோபநிஷத திராவிட இரத்னப் பிரகாசிகை.

(முன்தொடர்ச்சி.)

உமாசகாயம் பரமேச்வரம்ப்ரபும்
த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம் | (கச)
த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம்
ஸமஸ்தசாக்ஷிம் தமச: பரஸ்தாத் | (கரு)

(இதன் பொருள்) (கூ) தனியிடத்திலே, சுகாசனத்திருந்து, சுத்தனுகி, நேரிய கழுத்துத் தலை சரீரமுடையனுய்,

(க0) வைதிகபாசுபத விரதமுடையனுய், இந்திரியங்கள் அனைத்தையும் அடக்கி, அன்பினேடு தன் குருவை வணங்கி

(கக) இதய கமலத்தைத் துகளற்றதாய்ச் சுத்தமாகக் கருதி, அதனடுவே தெளிவுடையராய் சோகமி[illegible],

[illegible] நினைத்தற் கரியராய் வெளிப்படாதவராய், [illegible]நபராய், சிவனுய், பிரசாந்தராய், அமிர்த காரணராய்

(கங) முதனடுவீறிலராய், வியாபியாய், சிதானந்தரூபியாய், நிஷ்களராய், அற்புதராய்

(கச) உமாசகாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண்ணராய், நீலகண்டராய், பிரசன்னராய்

(கரு) பூதகாரணராய், சமஸ்த்சாக்ஷியா யிருப்பவரைத் தியானித்து, அதனுல் துறவியானவன் பிரகிருதிக்கு மேலே செல்வான்

(திராவிட இரத்நப்பிரகாசிகை.)

(17) விவிக்ததேசம்—என்பது தனியாகிய ஸ்தானம் எனப்பொருள்படும். படவே, சனங்களில்லாத ஏகாந்தஸ்தானம் என்பது பொருளாம். எந்த இடத்திலிருந்து எவர் வைதிகபாசுபத நெறிப்படி சிவோபாசனை செய்கின்றனரோ, அச்சிவம் விளங்கப் பெறும் அந்த ஸ்தானம் சிதம்பரம் எனப்படும். இதுபற்றியே, அப்பயதீக்ஷிதர் இதயகமலம் இரவிவிம்பமுதலிய எவ்வெவ்விடங்களிற் சிவபிரானைத் தியானிக்கினும், அவ்வவ் விடங்கள் அனைத்தினும் சோதிமயமாகிய கைலாசத்தை விபாவித்து அதன் மத்தியிலிருப்பவராகச் சிவனைத்தியானிக்க என்றதும் அக்கருத்துப் பற்றியேயா மென்க. ஸ்காந்தசம்பவ சிதம்பரமான்மியம்

யத்ரந்ருத்யதிதேவேச: பரமாநந்த விக்ரக: |
தஸ்யதேசஸ்யநாமாநி ச்ருதாந்யேதாநிபூதலே |

அமலம் சத் பரம் நித்யம்மகாங்கோசோகிரண்மய: |
அந்த: புரம் விவிக்தஞ்ச புண்டரீகம் குகாவரம் ||

பரமானந்த சொருபராகிய சிவ்பிரானுர் எவ்விடத்திலே நிருத்தஞ் செய்கின்ருரோ அந்த ஸ்தானம் அமலம் எனவும், சத் எனவும், பரம் எனவும், மகத் எனவும், இரண்மய கோசம் எனவும், அந்தப்புரம் எனவும், விவிக்தம் (தனி) எனவும், புண்டரீகம் எனவும், குகை எனவும் பெயர் பெறுமென்று கூறியவற்றுள்ளே இந்தக் கைவல்லியோப நிஷதத்திலே சிவோபாசனே பேசப் புகுந்த விடத்திலே பிரயோகிக்கப்பட்ட "விவிக்தம்" என்னும் பதமும் ஈண்டுச் சிதம்பரத்துக்குப் பெயராகக் காணப்படுகின்றமையும் மற்ருேர் சான்ரும். அத்தியாசிரம யோகியானவன் இதய சமலத்தின் கண்ணே சிவபெருமானே உபாசிக்குங்கால் அவனிருக்குந் தானம் சமமாயும், சுத்தமாயும், துறுகல், தீ, தூளி என்பன இல்லாததாயும் சப்தம், சலம், குஞ்சம் என்பவைகளால் இனிமை வாய்ந்ததாயும், கண்ணுக்கு இனிமை செய்வதாயும் குகாசிரயங்கள் அமைந்தனவுமாகிய தனித்தானத்திலே யோகாப்பியாசஞ் செய்க என்ற கருத்தினுல், சுவேதாசுவத ரோபநிஷதம்

சமேசுசௌசர்க்கராவஹ்நிவாலுகா விவர்ச்சிதே சப்தஜலாச்ரயாதிபி: | மநோநுகூலே நதுசட்சுபீடநே குகாநிவாதாச்ரயணே ப்ரயோசயேத் ||

என்று கூறிற்று. உமாபதிசிவாசாரியர் திராவிட சிதம்பரமான்மியம் வாயிலாச,

ஆரணவுருவார் தில்லையம்பலங் காணப் பெற்ருே, ரோருணர்வாவரென்று மொன்றல ரொன்ரு ரல்லர், காரணராகாரொத்த கருத்தினர் நிருத்தவின்ப, பூரணரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே.

நிருத்தானந்தத்தினுல் நிறைந்த (வைதிகபாசுபத) ஞான யோகிகள் எழுந்தருளியிருக்கும் தானமும் (புவனமும்) சிதம்பரம் எனப்படும் என்று அருளிச்செய்த உண்மையும் ஈண்டுக் கவனிக்கற்பாற்ரும்.

(18) சுகாசனம்—கால்கள் இரண்டும் மடித்து அட்டணைக் காலேறிட்டிருத்தல் சுகாசனம் எனப்படும் என்ருர் தத்துவப் பிரகாச நூலுடையார்.

(19) சுசி—பாசுபத யோகியார் முதற்கண்ணே மலசுத்தி கபசுத்தி முதலிய செய்து ஸ்நாநமுதலியவை யுடையராயிருத்தல் வேண்டும் என்பது பற்றிச் சுசியுடைமை வேண்டப்பட்டது. அவ்வாறு சுத்திசெய்யா திருந்தால், கபமுதலியன யோகஞ் செய்யுங்கால் இடையே நிகழப்பெற்று, அந்த யோகத்தை நிரந்தரமாய் நிகழவொட்டாது தடுத்து விடுமாதலில் அச்சுசியுடைமை ஆவசியகம் வேண்டப் படுமென்க.

(20) நேரியகழுத்து தலை சரீரமுடைமை—கழுத்துத் தலை சரீரம் என்பவற்றை நேரே சரிப்படுத்தாது, நேர்ந்தபடி குனிந்தும், சாய்ந்துமிருந்தும் இந்த யோகஞ்செய்ய முயன்ருல், இடையே நித்திரை புகுந்து குடிகொள்ளுதற் கிடனுய் ஞானயோகத்தைத் தடுத்து விடுமாதலில் நேரிய கழுத்துத் தலை சரீரம் என்பவற்றை யுடையனு யிருத்தல் வேண்டு மென்றது.

(21) அத்தியாசிரமம்—சூதசங்கிதை ஞானயோக கண்டத்துப் பதினுன்காம் அத்தியாயத்திலே,

சர்வாங்கோத் தூளநம் யத்தத் வ்ரதம் ப்ரோக்தம் மநீஷிபி: |
ஏதத்வேத சிரோநிஷ்டா: ப்ராகு: பாசுபதம் முநே |
கேசிற்சிரோ வ்ரதம் ப்ராகு: கேசிதத் யாச்ரமம் விது: |
கேசித்வ்ரத மித்யூசு: கேசிச்சாம் பவமைச் வரம் |
அஸ்ய வ்ரதஸ்ய மாகாத்ம்யமாக மாந்தேசு சம்ஸ்திதம் ||

பாதாதி கேசாந்தம் விதிப்படி தரிக்கப்படும் விபூதி விரதத்தைப் பாசுபதவிரதம் என்றும், சிரோவிரதம் என்றும், அத்தியாசிரமும் என்றும், விரதம் என்றும், சாம்பவம் என்றும், ஐசுவரம் என்றும் (அந்தந்த உபநிஷதசாகை யுடையார்) கூறுவர். இந்த விரதத்தின்பெருமை ஆகமாந்தங்களிலே அமைந்ததாம் என்றும், யஞ்ஞவைபவ கண்டத்து முப்பதாம் அத்தியாயத்திலே

உத்தூளநஞ் த்ரிபுண்ட்ரஞ்ச ஞாநாங்கத்வேந சாதநம் |
ஆமநந்தி முநிசிரேஷ்டா: ச்வேதாச்வதர சாகிந: |
அயமத் யாச்ரமோ தர்மோயை: சமாசரிதோமுதா |
தேஷாமேவ சிவஞாநம் ஸம்ஸார சேதகாரணம் |
உத்தூளநந்த்ரி புண்ட்ரஞ்ச பசுபாச நிவ்ருத்தயே
ஆமந்தி முநிச்ரேஷ்டா அதர்வ சிரசிஸ்திதா:||

உத்தூளநதிரி புண்டரத்தைச் சுவேதாசுவதர சாகையுடையார் ஞானுங்கமாம் எனவும், இந்த அத்தியாசிரமவிரதம் எவர்களால் அநுஷ்டிக்கப்பட்டதோ அவர்களுக்கே சம்சாரத்தை அறுக்கும் சிவஞானஞ் சித்திக்கும் எனவும் கொள்ளுகின்ருர் என்றும், இந்த விரதத்தையே பசுவினின்று பாசத்தை நீக்கும்பொருட்டு அதர்வசிரசு சாகையுடையார் கொள்ளுகின்ருர் என்றும் கூறப்பட்டன ; கூர்மபுராணம் பூர்வபாகத்துப் பதினுன்காம் அத்தியாயத்திலே,

ததௌதைச்வரம் ஞாநம் ஸ்வசாகாவிசித வ்ரதம் |
அசேஷம் வேதசாரந் தத்பசுபாச விமோசநம் |
அத்யாச்ரம மிதிக்யாதம் ப்ரம்மாதி பிரநுஷ்டிதம் ||

சுவேதாசுவதரமுனிவர் தமது சுவசாகையாயுள்ள சுவேதாசுவதரோபநிஷதத்திலே சொல்லப்பட்டதும், சமஸ்த வேதசாரமாயுள்ளதும், பசுவைப் பந்தத்தினின்று நீக்குவதாயுள்ளதும், பிரமாதி தேவர்களால் அநுஷ்டிக்கப்பட்டதாயும், அத்தியாசிரமம் என்று சொல்லப்படுவதாயுமுள்ள பாசுபதஞானத்தைச் சுசீலராசாவுக்கு உபதேசித்தார் என்று கூறப்பட்டது ; பிரமோத்தரகாண்டத்திலே

அயமத் யாச்ரமோ தர்மோயைஸ் ஸமாசரிதஸ்ததா |
தேஷாமேவபரம் ஞாநம் சம்சாரச் சேதகாரணம் ||

இந்த அத்தியாசிரமம் எவர்களால் அநுஷ்டிக்கப்பட்டதோ அவர்களுக்கே சம்சாரமாகிய பாசத்தைச் சேதிக்கும் பரமமாகிய ஞானம் எய்தும் என்று சொல்லப்பட்டது. சிவபுராணத்திலே,

வ்ரதம் பாசுபதம் ச்ரௌதமதர்வ சிரசி ச்ருதம் |
வ்ரதமேதத் ப்ரகுர்வீத ஸதவை நைஷ்டிக: ஸ்ம்ருத: |
சோத்யாச்ரமீச விஞ்ஞேயோ மகாபாசுபத ஸ்ததா ||

வைதிக பாசுபத விரதம் அதர்வசிரசிலே சொல்லப்பட்டது எனவும், இவ்விரதத்தை அநுஷ்டிப்பவன் நைஷ்டிகன் என

வும், இவன் பின்னரும் அத்தியாசிரமி என்றும் மகா பாசுபதன் என்றும் சொல்லப்படுவன் எனவும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்காந்தபுராண காளிகாகண்டம் பாசுபத விரதம் உரைத்த முப்பத்திரண்டாம் அத்தியாயத்திலே, இந்த வைதிக விரஜாதீக்ஷையாகிய பாசுபதவிரதம் பாபத்தை நாசஞ்செய்யும் மந்திர சம்ஸ்காரதீக்ஷை என்று சிவாகமங்களிலே சொல்லப்படும் என்ற கருத்தினுல்,

வைதிகீ விரஜா தீக்ஷா யாதேயம் பாபநாசிநீ |
மந்த்ரஸம்ஸ்கார தீக்ஷேதிகதிதேயந்ததாகமே ||

என்று கூறிற்று. இந்தப் பாசுபததீக்ஷை உபமன்னியுமுனிவரால் கிருஷ்ணருக்குச் செய்யப்பட்டதாக மகாபாரதம், லிங்கபுராணம், கூர்மபுராணம், சிதம்பரபுராணம், உபதேசகாண்ட முதலியன கூறுகின்றன. இதுபற்றியே சிதம்பர மகாத்மியம்,

இதோகிதேவகீ ஸூநுமுபமந்யுர தீக்ஷயத் |
இதச்சிவாக மார்த்தாச்ச ஸக்ருஷ்ணே போதிதோமுகாத் ||

உபமன்னியுமுனிவர் தேவகிகந்தராகிய கிருஷ்ணருக்கு வைதிக பாசுபததீக்ஷை செய்தார் எனவும், அவ்வுபமன்னியு மகாமுனிவரிடத்திருந்து கிருஷ்ணர் சிவாகமார்த்தங்களைப் போதிக்கப்பெற்ருர் எனவுங் கூறிற்று. சங்கர சங்கிதையிலே,

இதாநீம் மமபக்தாக்ரயா துபமந்யோர் மகாத்மந: |
சிவதீக்ஷாஸ்ய நிவிருத்தா சிவாகம விசாரதாத் ||

சிவபிரான் "தமது பக்தசிரேஷ்டரும், மகாத்மாவும், சிவாகமஞ்ஞருமாகிய உபமன்னியுமுனிவரிடமிருந்து கிருஷ்ணருக்குச் சிவதீக்ஷை செய்யப்பட்டது" என்று கூறினர் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனுல் பாசுபத தீக்ஷையுடையோர்க்கே பாசுபதயோகம் உபதேசிக்கற்பாற்றும்என் ருேர்க. சுவேதாசுவதரோபநிஷதம்,

தப: ப்ரபாவாத் தேவப்ரசாதாச்சப்ரம்மகச் வேதாச்வதரோதவித்வாந் | அத்யாச்ரமிப்ய: பரமம் பவித்ரம் ப்ரோவாச சம்யக்ருஷி சங்கசுஷ்டம் | வேதாந்தே பரமம் குக்யம் புராகல்ப்ப: ப்ரசோதிதம் | நாப்ரசாந்தாய தாதவ்யம் நாபுத்ராய சிஷ்யாய வைபுந: ||

இருஷி சமூகங்களால் வழிபடற்பாலதாம் பரம பவித்திரமாகிய சிவஞானத்தை (பிரமத்தை) தவப்பிரபாவத்தையும் சிவப்பிரசாதத்தையுங் கொண்டு சுவேதாசுவதரமுனிவர் பாசுபததீக்ஷை யுடையாருக்கு உபதேசித்தாரென்றும், இது முந்திய கற்பத்திற் சொல்லப்பட்ட வேதாந்தத்தின் மிகு ரகசியப்பாற்பட்டதொன்ரும் என்றும், (பாசுபத தீக்ஷையுடைய பக்குவர்க்கன்றி மற்றையோர்க்கு) மறைக்கற்பாலதாய், அடக்கமிலாப் புத்திரர்க்கேனும், சீடனுக்கேனும் உபதேசிக்கற்பாலதொன்ரும் என்று கூறிற்று. மேலே சொல்லிய சிதம்பர மான்மியப் பொருளைத் தழுவித் திராவிட சிதம்பர மான்மியத்தினும்,

"ஆண்டிடு சாபங்கொள்ளு மவரையுந் தவரை யும்போய்க்
காண்டுமென் ருண்டணைந்தக் கரியவன் முடிமேற்பாத
நீண்டவன் புடனேவைத்து நீலகண் டரையுநல்கி
யீண்டுவேந் தகன்ருனின்று மெய்துவ னின்றுநாளை."

விஷ்ணுவின் அவதாரமாயுள்ள கிருஷ்ணரைத் துவராபுரியிலேபோய்க் காண்பேம் என்று போய், மிகுந்த கருணையினுலே அந்தக்கிருஷ்ணருடைய சிரசின்மேலே தமது திருவடி சூட்டி திருவடி தீக்ஷை செய்து, சிவலிங்கப்பெருமானை எழுந்தருளப் பண்ணிக்கொடுத்து, ஈண்டுச் சிதம்பரத்துக்கு வந்து, பின்னரும் (எனதுபுதல்வனுகிய உபமன்னியு)துவாரகைக்குப் போயினன், இன்னும் இன்று நாளைக்குள்ளே வந்துவிடுவான் என்று வியாக்கிரபாத முனிவர் இரணிய வன்மச் சக்கிரவர்த்திக்குக் கூறியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஈண்டுக் கூறிய திருவடி தீக்ஷை விஞ்ஞான தீக்ஷையாம் என உணரற்பாற்று. ஈண்டுக் கூறிய அடியும் முடியும் முறையே அருட்சத்தியையும் ஆன்மாவையும் குறித்தனவாம் என்பது ஸ்ரீமூல நாயனுருளிய,

காலுந்தலையு மறியார்கலதிகள்
காலந்தச்சந்தி யருளென்பர்காரணம்
பாலொன் றுஞானமே பண்பார்தலையுயிர்
காலந்தஞானத்தைக் காட்டவீடாகுமே.

என்னுந் திருமந்திரத்தினுல் உணரப்படும். ஆகவே, காளிகா கண்டத்திலே சொல்லப்பட்ட வைதிக பாசுபத தீக்ஷையும், சிவாகமத்திலே சொல்லப்பட்ட மந்திர சம்ஸ்கார தீக்ஷையாகிய விஞ்ஞான தீக்ஷையும் ஒரு பொருட்பட்டு முடிவனவாய், வைதிக பாசுபதோபநிஷதங்களும், உபநிஷத சூத்திரங்களும், வைதிக பாசுபத சிவாகமங்களும் (பாஷ்யங்களும்) உபப்பிருமணங்களும் ஒரே பொருண் முடிவினையுடையனவாய் நின்றவாறு பெரியோரறிவாரென்க. இந்த அத்தியாசிரம பாசுபத தீக்ஷை தேகம் வீழுங்கால பரியந்தமேனும், பன்னிரண்டுவருஷ காலமேனும், ஆறுவருஷகாலமேனும், மூன்றுவருஷகாலமேனும், பன்னிரண்டு மாசமேனும், ஆறுமாசமேனும், மூன்றுமாசமேனும், ஒருமாசமேனும், பன்னிரண்டு தினமேனும், ஆறுதினமேனும், மூன்றுதினமேனும், ஒரு தினமேனும் விதிப்படி சங்கற்பித்து, விரசாகோமஞ் செய்து, பஸ்மகோயியாயிருந்து அநுஷ்டிக்கப்படல்வேண்டும் என்ற கருத்தினுல், சிவபுராணம்,

யாவச்சரீரபாதம் வாத்வாதசாப்த மதாபிவா |
ததர்தம் வாததர்தம் வாமாச த்வாதசகந்துவா |
ததர்த்தம் வாததர்த்தம் வாமாசமேக மதாபிவா |
திநத்வாதச கம்வாத திநஷட்கமதாபிவா |
ததர்த்தம் திநமேகம் வாவ்ரதஞ் சங்கல்ப்ப நாவ்தி |
அக்நிமாதாய விதிவத் விரஜாகோம காரணத் |
பஸ்ம சாயீத்ருணசாயீ ரோக்ஷ சயோதவ: ||

என்றற் ருெடக்கத்தனவாக விரித்துக் கூறியிருக்கின்றது. அவற்றையெல்லாம் ஈண்டு விரிக்கிற் பெருகுமாதலில், அவ்வநுஷ்டானத்தை ஆண்டுக் காண்க. இவ்விரதம் புராணங்களிலே சுருக்கியும் விரித்தும் பேசப்பட்டிருக்கின்றது. கூர்மபுராண பூர்வபாகத்து ஐம்பத்துமூன்ரும் அத்தியாயத்திலும், லிங்கபுராண பூர்வபாகத்து எழாம் அத்தியாயத்திலும், வாயு சங்கிதை உத்தரபாகத்துப் பத்தாம் அத்தியாயத்திலும் சொல்லப்பட்டவாறு, சிவாவிர்பாவராகிய சுவேதர் முதலிய இருபத்தெட்டு ஆசாரியர்களும், இவர்கள் சிஷர் நூற்றுப் பன்னிருவரும் வைதிக பாசுபத தீக்ஷாநுஷ்டானமுடைய

வைதிக பாசுபத யோகிகளேயாம். இவருள்ளே தலைவராகிய சுவேதாசாரியரை வழிபட்டே வைதிக பாசுபதயோக சிவாத்துவிதியாகிய நீலகண்ட சிவாசாரியர் வைதிக பாசுபத யோக சிவாத்துவித பாஷ்யத்தை வியாசரருளிய வேதாந்த சூத்திரத்துக்குப் பொருளாக அருளினர் என்ற கருத்தினாலன்றோ சைவ பாஷ்யகாரர் தமது பாஷ்யத்து முதலினும் இறுதியினும்,

> நம:ச்வேதா பிதாநாய நாநாகம விதாயிநே |
> கைவல்ல கல்ப்பதரவே கல்யாண குரவேநம: |
> ச்வேதாசார்ய பதத்வந்த்வ சுச்ருஷாத் யோதாத்வந: |
> க்ருதமே தந்மயா பாஷ்யம் கேவலம் பக்திமாத்ரத: ||

பல ஆகமங்களை அறிந்தவராயும், கைவல்ய கற்பவிருக்ஷமாயும், மங்கல குணங்களை யுடையவருமாகிய சுவேதாசாரியருக்கு நமஸ்காரம்; சுவேதாசாரியருடைய பாதயுகளங்களுக்குத் திருத்தொண்டு செய்தலால் விளங்கிய அறிவு நெறியானே இந்தப் பாஷ்யம் அன்பு மாத்திரையினாலே செய்யப்பட்டது எனப் பொருள்படும் சுலோகங்கள் சொல்லியருளினர். அப்படி எழுதப்பட்ட வேதாந்தசூத்திர சைவபாஷ்யத்து "அநாவிஷ்காராதி கரணத்தில் பாசுபதத்தைச் சரீரம் வீழுங் காலமேனும், பன்னிரண்டு வருஷகாலமேனும் அநுஷ்டித்தல் வேண்டும் என்பதை மேலே சொல்லிய சிவபுராண சுலோகாதாரமாகக் கூறியிருக்கின்றார். இவ்வாறு மேலே சொல்லிய சூதசங்கிதை, வாயுசங்கிதை, பிரமோத்தரகண்ட முதலிய உபப்பிரும்மண கருத்துகளுக்கு உடன்பாடாகவே ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் பாசுபதவிரதத்தை எடுத்துக் கூறியிருப்பாராக, இவைகளுக்கெல்லாம் மாறுபட ஏகான்மவாதிகள் "அத்தியாசிரமம்" என்றதற்குப் "பரமகம்ச சந்நியாசம்" என்று வேதபரிபாஷை தெரியாத சங்கராசாரியர் தமது பாஷ்யத்திலே விபரீதப்பொருள் பண்ணிவிட்டார். இவரைத் தொடர்ந்தே இவர் சிஷ்யர்களும் பிழைபட்டார்கள். இவைகளைத் தொடர்ந்து ஆங்கிலேய பாஷையில் மொழிபெயர்க்கும் மாக்ஸ் முல்லர் பண்டிதர் (Max Muller) முதலிய எல்லோரும் சுவேதாசுவதரோபநிஷத மொழிபெயர்ப்பிலே "அத்தியாசிரமம்" என்னும் பதத்துக்குப் "பரமகம்ச சந்நியாசி" எனப் பொருள்பட (The best of ascetics) என்றெழுதி வழுஉப்பட்டார்கள்.

(22) இந்திரியங்களை அடக்குதல்—அருண் ஞானத்தோடு எக்காலமும் கூடியிராத அறிவில்லாதவனுக்கு இந்திரியங்களெல்லாம் துஷ்டக்குதிரைகள்போல வசப்படாதனவாயும், அருண்ஞானத்தோடு எக்காலமும் கூடிய அறிஞனுக்கு அவ்விந்திரியங்கள் சற்குதிரைகள்போல வசப்பட்டனவாயிருப்பனவாம் என்ற கருத்தினால், சிவபிரான் ஸ்ரீராமருக்கு,

> யஸ்த்வவிஞாந வாந்பவத்ய யுக்தமநஸாஸ்தா |
> தஸ்யேந்திரியாண்ய வச்யாநி துஷ்டாச்வா இவசாரதே: |
> விஞ்ஞாநீயஸ் துபவதியுக்தே நமநசாசதா |
> தஸ்யேந்திரியாணிவச்யாநி ஸதச்வா இவஸாரதே: ||

என்று கூறியருளினார். இதனால் அருண்ஞான வாயிலாக இந்திரியங்களை அடக்கல் வேண்டுமென்பது அறியப்பட்டது. திறவினியல்பாவது இந்திரியங்களை அடக்கலேயாம் என்ற கருத்தினால், சைவ பாஷ்யகாரர்,

> யதித்வம் ஜிதேந்த்ரியத்வம் |

என்றருளிச்செய்தார்.

(23) குருவழிபாடு—எவ்வெச் சமயத்தாருக்குந் தனித்தனி குருவுளரேனும், உலகிலுள்ள சமய நூல்களினெல்லாம் தலைமையாகிய நமது வேதாகம சாஸ்திரங்களால் முடித்துக் கூட்டப்பட்டவர் சிவபெருமானே யாமாதலினாலும், அச்சிவபெருமானுக்கு ஒப்பானவரும் மேலானவரும் இல்லை என்று கொண்டே சுவேதாசுவதரோப நிஷதம்.

> நதத் ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே |

என்று கூறுதலாலும், அந்தச் சிவபிரானை அடைதலின் மேலாகிய பேறு இல்லை என்ற கருத்தினால், சிவபுராணம்

> மல் லாபாந்நபரோவாபஸ் தேஷாமஸ்தி |

என்று கூறுதலாலும், இந்தச் சிவப்பேத்தை உபதேசிக்கும் வைதிக சைவ ஞான யோக குருவினும் மற்றோர் குரு சிறந்தவராகக் கொள்ளப்படமாட்டாராதலின், இந்தப் பாச இருளை ஓட்டுகின்றமையினாலே "குரு" என்னும் நாமம் போந்ததென்பது பெரியோர் கருத்தாமாதலினாலும், சங்கரசங்கிதை சிவனடியாருக்குச் சொல்லிய இருபத்து மூன்று லக்ஷணங்களுள்ளே,

> ப்ரதமம் பஸ்ம ருத்ராக்ஷதாரணம் சமுதீரிதம் |
> த்விதீயம் குரு சேவாச ||

விபூதி ருத்திராக்ஷதாரணம் முதலாவது லக்ஷணம் என்றும், குருவை வழிபடுதல் இரண்டாவது லக்ஷணம் என்றும் கூறுதலாலும்,

> பாபிநாஞ்ச யதீசங்காத் தத்பாபாத்பதிதோபவேத் |
> தத்வதாசார்ய ஸங்கேந தத்தர்மபலபாக்பவேத் |
> யதேக வந்நிசம்பர்க்காந்மலந்த்யஜதி காஞ்சநம் |
> ததை வகுரு சம்பர்க்காத் பாபம் த்யஜதிமாநவ: |
> யதாவந்நிசமீபஸ்தோ க்ருககும்போவிலீயதே |
> ததாபாபம் விலீயேதாசார்யஸ்ய சமீபத: |
> யதாப்ரச்வலிதோ வந்நி: சுஷ்ககாஷ்டஞ்ச நிர்தகேத் |
> ததாயம்பி சந்துஷ்டோ குரு: பாபம் க்ஷணாத்தகேத் |
> மநசாகர்மணா வாசோ குரோ: க்ரோதம் நகாரயேத் |
> தஸ்ய க்ரோதேந தக்யந்தேக்யாயு: ஸ்ரீஞாநசத்கிரியா: ||

பாபிகளுடைய தொடக்கினால் ஒருவன் எவ்வாறு பதிதனாகின்றானோ, அவ்வாறே ஆசாரியர் கூட்டத்தினாலே புண்ணிய பலன்களை யுடையனாகின்றான் என்றும், தீயின் கூட்டத்தினால் சுவர்ணம் களிம்பை நீக்கிக் கொள்வது போல, குரு சம்பர்க்கத்தினாலே மனிதர் பாபத்தை ஒளிக்கின்றார் என்றும், தீயின் சமீபத்துள்ள நெய்க்குடம எவ்வாறு லயமடைகின்றதோ அவ்வாறே ஆசாரியருடைய சமீபத்திருக்கின்றவனுக்குப் பாபம் லயம் அடைகின்றது என்றும், எரியும் அக்கினியானது காய்ந்த விறகை எவ்வாறு தகிக்கின்றதோ, அவ்வாறே சந்தோஷமுடைய இந்தக் குருவும் பாபத்தை க்ஷணப்போதிலே தகிக்கின்றார் என்றும், மனம் வாக்குக் காயங்களினாலே குருவுக்குக் குரோதஞ் செய்தலாகாது, அவருடைய

கோபத்தினுலே ஆயுளும் செல்வமும் ஞானமும் நற்கிரியைகளும் கடப்படுகின்றன என்றும் கூறுதலால்; ஆயுள், செல்வம், ஞானம், சற்கிரியை முதலிய வெல்லாம் மேன்மேலும் விருத்தியாமாறும், பாசமாகிய இருள் தேயுமாறும், நமக்கு நன்னெறி சாட்டி உய்வித்த குருச்செய்த நன்றியை எக்காலமும் மறவாது மனம் வாக்குக்கள் ஒரு நெறிப்படக்காயத்தினுல் அக் குருவை வணங்குதல் இன்றியமையாது வேண்டப்படுமென்பது போதரவேஆகுவலாயனர்க்குக் குருவழிபாடு உபதேசித்தார்.

(24), இதய புண்டரீகத்தைத் துகளற்றதாக்குதல்—இதய கமலம் காமக்குரோதாதி நீங்கி சுத்தமாயிருத்தல் வேண்டுமென்ற உளக்கருத்தினுலன்றே இக் கைவல்லியோபநிஷதப் பொருளுக்கிசைந்தே, "அகத்தே அமர்ந்த பக்தியுடையராய், காமாதிபகை ஆறையும் அறுத்து ஐம்புலன்களுமடக்கிச் சிவஞானத்தையே தாரகமாகக்கொண்டு அன்பர் உள்ளக்கமலத்தைப் பிரியாதுள்ளார் சிவபிரான்" எனப் பொருள்படும் "அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற் றைம்புலனு மடக்கி ஞானப், புகலுடையார் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்" என்றருளிச்செய்தார். ஈண்டு "விரசம்" என்றது "துகளற்றது" (குற்றமற்றது) எனப் பொருள்படும். படவே சிவபிரானிடத்து அன்புடையராய் ஒழுகுபவருடைய உள்ளக்கமலம் மேலே கூறியவாறு காமாதி தோஷங்களை ஒழித்து நிற்குமாம் என்ற கருத்தினுலன்றே அவ்வாறு கூறப்பட்டது. இடையருத ஞானயோகங்களின் முன்னர்க் காமமுதலிய குற்றங்கள் காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுத்துய்போலுமாம் என்னுங் கருத்தினுல், உத்தரவேதம்,

காமம் வெகுளி மயக்க மிவைமுன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

என்று கூறியதுமாமென்க.

(25) தகரவித்தை—(முக்கியமாய) சர்வ வேதாந்தங்களின் கருத்து தகராதி உபாசனம் ஒன்றேயாம் என்று கொண்டு சைவபாஷ்யகாரர்,

சர்வ வேதாந்த ப்ரத்யயம் தகராத்யுபாசகமேக ஏவ |

என்று கூறினுர். அவ்வாறே சாந்தோக்கியோப நிஷதத்திலே பாபத்தினின்று நீங்கினமை (அபகதபாப்மா) என்றற்றொடக்கத்த எண்குணங்களும் வாசிசாகை எனப்படும் பிருகதாரண்ணியம், கடவல்லி, சுவேதாசுவதரம் என்னும் உபநிஷதங்களிலே லசித்துவமுதலிய குணங்களும், கைவல்லியோபநிஷதத்திலே "சிதானந்த ரூபம்" முதலியகுணங்களும் ஒருநெறிப்படத் "தகரவித்தியாப்பிரம"த்துக்குக் குணங்களாகச் சொல்லப்பட்டன. படவே, கைவல்லியோபநிஷதமானது சாந்தோக்கிய முதலிய உபநிஷதங்களிலே உபாசனுமூர்த்தியாக அக்குணங்களோடு விசேஷிக்கப்பட்டவர், விஷ்ணுவோ, ருத்திரரோ, சத்தியோ, அக்கினியோ, சூரியனே, வாயுவோ, மற்றியாரோ என நிகழுமைய மறுக்குமாறு, கைவல்லியோபநிஷதம் அத்தகரவித்தியாத் துரிய சதாசிவப்பிரமத்தை உமாசகாயர் என்றும், முக்கண்ணர் என்றும், நீலகண்டர் என்றும் விசேடித்தல் வாயிலாக அடையாளங்கூறி, (அதர்வசிகையிலே சொல்லப்பட்டவாறு) "பரமேசுவரர்" என்று நாமமுங் கூறி, (தமசுக்கு) பிரகிருதி மண்டலத்துக்கு மேலுள்ள மகா சிவலோகத்தினராம் ஆதித்தியவாணர் என்னுங் கருத்தினுல், சுவேதாசுவதரோபநிஷதம்

ஆதித்யவர்ணந்தமஸ: பரஸ்தாத் |

என்று கூறியதற்கிசைய

சமஸ்தசாக்ஷிந் தமச: பரஸ்தாத் |

சமஸ்த சாக்ஷியாய் (தமசுக்கு)ப் பிரதிமண்டலத்துக்கு மேலுள்ளார் எனச் சிவலோகத் தானமும் கூறிற்று. மகாநாராயணுேபநிஷதம் எனப்படுகின்ற தைத்திரீயோபநிஷதமும் துரியமூர்த்தியாகிய சதாசிவ நாயனுர்க்குச் சத்தியோசாத முதல் ஈசானம் இறுதியாகிய பஞ்சப்பிரம மந்திரங்களைக் கூறி, "இரணிய பதயே, அம்பிகாபதயே, பசுபதயே," எனப் பலவாருகத் தகரவித்தியாப்பிரம சிவனுரை விதந்து கூறியதுமா மென்க. கைவல்லியோபநிஷதத்திலும், மகாநாராயணுேப நிஷதத்திலும் உமாபதி, கிருஷ்ணபிங்களர் என்றற்றொடக்கத்தனவாகச் சகுணத்தின் பாற்படச சொல்லப்பட்டிருக்கின்றுரன்றி, பிருகதாரணிய முதலியவற்றிலே தகரவித்தியாப் பிரமத்துக்கு அடையாளம் சொல்லப்பட்டமைக்குப் பிரமாணமுளதோ வெனில், சைவ பாஷ்யகாரர்

அதவாபர மாத்மாநம் பரமாநந்த விக்ரகம் |
குரூபதேசாத் விஞ்ஞேயம் புருஷம் க்ருஷ்ணபிங்கலம் |
ப்ரம்ம ப்ரம்மபுரே கார்க்கிதகராப்ஜ மத்யமே |
அப்யாசாத் சம்ப்ரபச்யந்தி சந்தஸ்த் வஞ்சததாகுரு||

அவர் (யாஞ்ஞவல்க்கியர்) கார்க்கியை நோக்கி கார்க்கியே பிண்டமாகிய சரீரத்திலே பிரமபுரத்திலே தகர கமலாகசத்திலே குரு உபதேசங்கொண்டு புருஷரும் கிருஷ்ணபிங்களரும் பரமாதமாவும் பரமானந்த விக்கிரகருமாகிய பிரமத்தை யோகப்பியாசத்தினுலே சத்துக்கள் காண்கின்றுர்கள் அப்படியே நீயுஞ் செய் என்று பொருள்படும் உபப்பிரும்மணவாகியங்களை உதகரித்தருளினமையினுல் அறியப்படும். வில்லவரம்பல் குப்புச்சாமி ஐயர் தமது கீதார்த்த தீபிகையில் "உமாசகாயரும்," "பரமேசுவரரும்," "பிரபுவும்," "திரிலோசனரும்," "நீலகண்டரும்" என்றற்றொடக்கத்தனவாக வரும் சுருதி வாக்கியங்கள் நிர்க்குணப் பிரமோபாசனைக்கு அருகரல்லாதவர்கள் கடைத்தேறும் பொருட்டுச் சகுணோபாசனைக்கு யோக்கியமான ஈசுவராதி ரூபங்களைச் சொல்கின்றன என்று கூறினுர். இவர் கருத்தின்படிக்குச் சகுணோபாசனை நிர்க்குணோபாசனை என்னும் இரண்டே சமஸ்த சாஸ்திரங்களாலும் அறியப்படுவன என்று கொண்டே இந்தப்பிரகாரம் வரைந்தார். இவர் ஏகான்மவாத சுருதிகளின்படி மாயாப்பிரதிவிம்ப பிரம விஷ்ணு ருத்திரரே சகுணமூர்த்தியுட்பட்டாரன்றி, "சதாசிவநாயனுர் இந்தக குணமூர்த்தியுட்பட்டவரல்லரென்க. இது பற்றியே ஸ்ரீ அப்பய தீக்ஷிதர் பிரமம் நிருசிம்மோத்தரதாபநிமுதலிய உபநிஷதங்கொண்டும், புராணங்கொண்டும் துரியமூர்த்தியே சகுணவிஷயிணியாம் பராசத்தியினின்று வேறுருத சிவபிரான் என நிருபணஞ் செய்திருக்கின்றுர் என்று முன்னரே சொல்லியிருக்கின்றேம். சூதசங்கிதை

உமார்த்த விக்ரகாசுக்லா த்ரிநேத்ரா சந்த்ரசேகரா |
நீலக்ரீவாபராநந்த ப்ரமோதா தாண்ட ப்ரியா |
ப்ரம்மவிஷ்ணு மகாதேவை ருபாஸ்ய குணமூர்த்திபிः |
சர்வமூர்த்திவிஹீநஸ்ய சர்வதத்வாதிபஸ்யசததாப்யேஷாசாச்
தப்தாயபிண்டவத்விப்ரா ருத்ரமூர்த்திபரஸ்யது | [வதிச்ருதிः
மூர்த்யா துல்யாங்யமூர்த்தி ப்யோலக்ஷணைர்முநிசத்தமாः |
பரதத்வஸ்ய நாமாநி ப்ரத்யாசத்யா முநீச்வராः |
த்ரிமூர்த்திநாந்து ருத்ரஸ்ய சாபிதாநாநி சுவ்ர்தாः ||

அர்த்தநாரீசுவரரும், திரிநேத்திரமுடையரும், சந்திரசேகரரும், நீலக்கிரீவரும், பரானந்த தாண்டவப்பிரியரும், பிரமவிஷ்ணு ருத்திரர்களாகிய குணமூர்த்திகளினாலே உபாசிக்கப்படுபவரும், சர்வ வடிவங்களை ஒழித்து நின்றவராயினும், இந்த மூர்த்தம் அவருக்குத் துரிய பெரிய வடிவமாம் எனச் சுருதி சொல்லிற்று என்றும், ஒழுகக் காய்ச்சிய அயபிண்டம் போல ருத்திரமூர்த்தியானவர் துரியமூர்த்திக்கு ஒப்புடையவரென்றும், மற்ற விஷ்ணுவாதி மூர்த்திகளுக்கு ஒப்புடையரல்லர் என்றும், துரியமூர்த்திக்கு உள்ள பெயர் ருத்திரமூர்த்திக்கு உள்ளதாம் என்றும் சொல்லுதலால் துரிய மூர்த்தியாயுள்ள சகுண உமாசகாய சதாசிவ மூர்த்தியையும், அவரினின்று தோன்றி அவருக்குக் கீழ்ப்பட்ட குணமூர்த்தியாகிய ருத்திரமூர்த்தியையும் ஒன்று படுத்தி ஒரே குணமூர்த்தியுட்படுத்திக் குழப்புதல் அறிவிலாப்பாலர் செய்கையே யாமென்க. சிகரிணிமாலையுடையார்.

பிந்துரூபம் மஹாதேவம் வ்யோமாகாரம் சதாசிவ: |
சுத்தஸ்படிக சங்காசம் பாலேந்து க்ருதசேகரம் |
பஞ்சவக்த்ரதரம் சௌம்யம் தசபாகுந் த்ரிலோசநம் |
சர்வாயுதத்யோத கரம் சர்வபூஷண பூஷிதம் |
உமார்த்ததேகம் வரதம் சர்வகாரண காரணம் |
சிந்தயந் சித்தவிந்யஸ்த: முகூர்த்தமபி தாரயேத் |
சஏவமுக்த இத்யுக்த: தாந்திரிகேச் வபிசிக்ஷிதை: ||

விந்துரூபரும், மகாதேவரும், ஆகாயவடிவினரும், சதாசிவரும், சுத்த ஸ்படிக சங்காசரும், இளம்பிறையணிந்த சடாமகுடமுடையரும், ஐமுகமுடையரும், சௌமியரும், பத்துக்கையுடையரும், முக்கண்ணுடையரும் சர்வாயுதங்கள் விளங்கும் திருக்கரம் உடையரும், சர்வாலங்கார பூஷணரும், உமையொருபாகத்தினரும், வரதரும், சர்வகாரணகாரணரும், மனசுவைத்து ஒரு முகூர்த்தப் போதாயினும் தியானிக்கக்கடவன் என்று யோகயஞ்ஞவல்க்கியங்கொண்டு உதகரித்தவாற்றால் உணரப்படும். இது வன்றிக் கூர்மபுராணத்தினுல் சகுணம், நிர்க்குணம், அத்தியாசிரம பிராமீமி என வகுக்கப்பட்ட பாவனை மூன்றனுள்ளே, இறுதிக்கணின்ற அத்தியாசிரமப் பிராம்மிபாவனை எனப்படும் வைதிகபாசுபத யோக நிர்க்குணபாவனை வாயிலாக எய்துவதாமெனக் கூறப்படுதலாலும், இதற்கிசைந்தே தீக்ஷிதயோகியார் தமது இரத்நத்திரய பரீக்ஷைவாயிலாக "ஸ்ரீமத் கூர்மேண" என்றற்றொடக்கத்த சுலோகங்களால் விளக்குதலாலும், மாயாவாதிகளாகிய ஏகான்மவாதிகள் துரியப்பிரமம் நிர்க்குணப் பிரமமாய் (ஆன்மாவாகிய அறிவு ரூபமாய்) முடிதலாலும், இந்த அறிவுரூபம் வைதிகபாசுபதர்களுக்கு பரப்பிரமமாகாத சிவப்பிரமநிலையாய் முடிதலாலும், இந்த நிர்க்குணப் பிரமநிலை கீழ்ப்படிக்கணுள்ள சகுணோபாசனைக்கும், மேற்படிக்கணுள்ள வைதிக பாசுபத யோகத்துக்கும் இடைப்பட்டு நின்றதாதலினாலும், வைதிகபாசுபதயோகத்தைக்கடந்த ஞானபாதத்தினால் அடையப்படும் பிரமத்தை அடைதற்கு ஆதாரமாக மாயாவாதிகளுக்கு வேறு சாஸ்திரப் பிரமாணம் ஒன்றும் இல்லாமையாலும், அவர் எல்லோரையுங்கடந்து மேனிலைபெற்றோமென்று நினைப்பதும், எழுதுவதுஞ் செய்தல் கனவு கண்டலேயாம்.

(26) பிரம்யோனி, பூதயோனி—அந்தப் பிரம விஷ்ணு ருத்திரேந்திரர்களாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர். எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே உற்பத்தியாகின்றன. காரணமும் காரணங்களைப்படைத்தோரும் கருதினேரு மாகியவர் உற்பவித்தலின்று என்ற கருத்தினால்

ப்ரம்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே சர்வே சம்ப்ரசூயந்தே
சர்வாணிசேந்த்ரியாணிச சபூதைர் நகாரணம்
காரணாநாம் த்யாதா காரணந் தத்யேய:||

என்று உபநிஷத சிரசுகளுக்கெல்லாம் சிகையாகிய அதர்வசிகைப் பொருளைக் கைவல்லியோபநிஷதம் அடக்கி "பிரமயோநி" பிரமாதியர்க்குக் காரணம் என்றும், "பூதயோநி" (பூதமுதலிய இந்திரியங்களுக்குக் காரணர்) என்றுங் கூறி, அந்த அதர்வசிகை ஆகாசமத்தியிலே தியானிக்கப்படுபவராகக் கூறிய சர்வேசுவரரைக் கைவல்லியோபநிஷதம் "பரமேசுவரர்" என்று கூறிற்று.

(27) ஆதிமத்தியாந்தங் கடந்த ஏகர்—(ஆதிக்கண்ணே)பிரமாவாய் நின்று படைத்தலும், (மத்தியிலே) விஷ்ணுவாய் நின்று காத்தலும், (அந்தத்திலே) ருத்திரராய் நின்று அழித்தலுஞ்செய்து, தாம் இம்மூவரையுங் கடந்த துரிய உமாசகாய சதாசிவராம் என்றும், அதர்வசிரசு

ஏகோ ருத்ரோநத் விதீய: |

ஒருவரே ருத்திரர் இரண்டாவதாக ஒருவரிலர் என்றும் மகாநாராயணோபநிஷதம்

ஏகமவ்யக்த மநந்தரூபம் |

வெளிப்படாதவரும் அனந்தரூபமாம் ஏகர் என்றும், முண்டகோபநிஷதம்

தேவாநாம் பதிரேக: |

தேவர்களுக்குப் பதியாயுள்ள ஏகர் என்றும், சடவல்லியுபநிஷதம்

ஏகஸ்ததா சர்வபூதாந்த ராத்மா |

சமஸ்த சேதனசேதனப் பிரபஞ்சங்களுக்கும் அந்தரியாமியாம் ஏகர் என்றும், சாந்தோக்கியோபநிஷதம்

ஏகமே வாத்விதீயம் |

இரண்டாவதற்ற ஏகம் என்று கூறிய வெல்லாம் கைவல்லியோபநிஷதத்தினுற் கூறப்பட்ட ஏகரேயாம்.

(28) விசோகம்—சாந்தோக்கி யோப நிஷதம் தகரோபாசனைப் பிரமத்துக்குக் குணமாகக் கூறிய "விசோகம்" என்னும் பதத்தை இக்கைவல்லியோப நிஷதம் எடுத்துக்

கூறிற்று. ஈண்டு "விசோகம்" என்றது "சுவதந்திரம்" என்னும் குணத்தின் பாலதாகப் பொருள் படுத்தினார் சைவ பாஷ்யகாரர்.

(29) "அசிந்தியம்" என்றற்றொடக்கத்தன—சிவ பெருமானைக் குறித்து மாண்டூக்யோப நிஷதமும் முண்டகோப நிஷதமும் பிரயோகித்த அசிந்தியம் (நினைத்தற்கரியர்) என்னும் பதமணியையும், மைத்திராயணோபநிஷதம் உரைத்த "அவ்வியக்தம்" (வெளிப்படாதவர்) என்னும் பதமணியையும், மகா நாராயணோப நிடதம் கூறிய "அனந்தரூபம்" (அனந்த ரூபர்) என்னும் பதமணியையும், மகா நாராயணமும் சுவேதாசுவதரமும் மாண்டூக்கியம் முண்டக முதலிய உபநிஷதங்கள் உரைத்த "சிவம்" என்னும் பதமணியையும் சாபாலோப நிஷதம் பிரயோகித்த "அமிர்தம்" என்னும் பதமணியையும், சுவேதா சுவதரோப நிஷதமும், மகாநாராயணோப நிஷதமும், முண்டகோப நிஷதமுங் கூறிய "பிரமயோனி" என்னும் பதமணியையும், கடவல்லியும் முண்டகமும் கூறிய "விபு" (விபாபகராய்) என்னும் பதமணியையும் கடவல்லியும் சுவேதாசுவதரோப நிஷதமுங் கூறிய "அரூபம்" (நிஷ்களர்) என்னும் பதமணியையும், கோவை செய்து "சதருத்திரீயம்" எனப்படும் கைவல்லியோப நிஷதமாம் மங்கை தன்னுடல் முழுமையும் அலங்கரித்தாளென்க. சிவபெருமான் சதா சிவ வடிவம் பூண்டு நிஷ்களராயினமை தியான பூசையின் பொருட்டேயாம் எனவும் ஈசான முதலிய பஞ்சப் பிரமங்களே சதா சிவா வஸ்தை யாமெனவுங் கொண்ட கருத்தினால் வாதுளாகமம்,

> யோகிநாஞ்ச யதீநாஞ்சத்யாநி நாம்மந்த்ரிணாந்ததா |
> த்யாநபூஜா நிமித்தாய நிஷ்களம் சகளம் பவேத் |
> ஈசாந புருஷா கோர வாம ஜாதாதிகா: க்ரமாத் |
> எதா: சதாசிவாவஸ்தா இதி||

என்று கூறிற்று.

(30) தியானம்—அதர்வ சிகையிலே "அந்தத்தியானம் யாது" "தியானிப்போன் யாவன்" "தியானிக்கற் பாலர் (தியேயம்) யாவர்" என்னும் வினுக்களுக்கு உத்தரமாயுள்ள பொருளே விரித்துரைக்கப்பட்டது. நிர்க்குணோபாசனையிலே பேசி முடிக்கப்படுவது ஆன்மா ஒன்றேயாய், ஆங்குத் தியாதா, தியானம், தியேயம் என்னும் பகுப்பு இல்லாமையாலும், கூர்ம புராணம் கூறியவாறு நிர்க்குணோபாசனை வாயிலாக அடையப்படும் (அத்தியாசிரமம்) பாசுபத யோகத்திலே பேசப்படுவது ஆன்மா ஒன்றேயாகாது, தியாதா, தியானம், தியேயம், தியானப்பிரயோசனம் என்பனவா மாதலின், அவற்றை யோகியானவன் அறிந்து யோகஞ் செய்யக் கடவன் என்ற கருத்தினால், சிவபுராணம்

> த்யாதா த்யாநம் ததாத்யேயம் யச்சத்யாந ப்ரயோஜநம் |
> எதச் சதுஷ்டயம் ஞாத்வா யோகம் யுஞ்சீத யோகவித் ||

என்று கூறிற்று. "துறவியானவன் பூதகாரணராகிய சிவனைத் தியானித்து அவரை அடைகின்றான்" என்ற கருத்தினால், கைவல்லியோப நிஷதம்

> த்யாத்வாமுநிர் கச்சதி பூதயோநிம் |

என்று கூறியதும், ஞானாகாசமத்தியிலே சர்வைசுவரிய சம்பன்னரும் சர்வேசுவரரும், சம்புவுமாகிய காரணரே தியானிக்கற்பாலர் என்ற கருத்தினால்,

> காரணந்துத்யேய: சர்வைவச்வர்ய சம்பந்ந: சர்வேச்வர: சம்புராகாச மத்யே |

என்று கூறியதும், சுவேதாசுவதரோப நிஷதம் சிவதியானப் பியாசத்தினாலே என்ற கருத்தினால்,

> த்யாநநிர்மதநாப்யாசாத் |

என்று முடித்துக் கூறியதும் ஒரு நெறிப்பட ஒரு பொருளையே கொண்டு முடிவனவாம் என்னும் உண்மையை "ஆசீநாதிகரணத்திலே" சைவபாஷ்யகாரர் விளக்கியிருப்பாராக, சங்கராசாரியர் இந்தத் துரிய உமாசகாய பரமேசுவரத் தியானம் தமது நிர்க்குணோபாசன ஆன்மநிலைக்கு விரோதமாய் முடியும் என்று கொண்டமையானும், தமக்குச் சார்பாய வேறு சுருதிகள் இந்த அதிகரணத்துக்குப் பொருத்தமில்லாதிருக்கும் என்பதை நன்கு கண்டமையானும் இந்தக் கைவல்யப் பொருளை எடுத்தாளாது விட்டுவிட்டார். இவ்வாறே இராமாநுசாசாரியரும் உமாசகாயத்துவ முதலியன தமது நாராயணருக்கு இல்லாமையாலும், கைவல்லியோப நிஷதத்திலே "ஆசனநியமசுருதி" கூறும் உபநிடதபாகம் தமது நாராயணோபநிடதபாகங்களிலே இல்லாமையாலும், கைவல்லியப் பொருளை எடுத்தாளாது விட்டுவிட்டார். நீலகண்ட சிவாசாரியரோ "ஆசீநவிதி" கூறும் கைவல்லியோபநிடதப் பொருண் முழுதையும் அந்த ஆசீநாதிகரணத்திலே கைவல்லியப்பொருளை இழந்தாரல்லராகி, நமக்கெல்லாம் அவ்வுண்மைப்பொருளை உபதேசித்து, நம்மையெல்லாம் அச்சிவ கைவல்லிய பதத்துக்கு உரியராக்கினார். இதனால் சங்கராசாரியரோ, இராமாநுசாசாரியரோ, நீலகண்ட சிவாசாரியரோ வேதவியாசர் சூத்திரக்கருத்துக்கிசைய எடுத்து உண்மைச் சுருதிப்பொருளை விளக்கினார் என்பதை அன்பர்கள் ஆராயக் கடவர்கள். (இன்னும் வரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுருப்யோநம:

## திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரம்.

---

### விநாயகர் காப்பு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

(பொ-ரை). ஐந்து கைகளையும் யானை முகத்தையும் சந்திரனுடைய இளம் பிறையை யொத்த பற்களையும் உடைய நந்திக்கு மகனும் ஞானச் சுடர்க் கொழுந்தாயுமுள்ள விநாயகக் கடவுளைச் சிந்தை செய்து வணங்குகின்றேன்; என்றவாறு. (க)

போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக்கும் நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக்குட் டென்றிசைக் கொரு வேந்தனுங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே.

(பொ-ரை). தன்னை வணங்கும் பக்தர்கள் மனத்தில் தங்கிய பரிசுத்த தேகமுடையவனும் நான்கு திசைக்கும் தலைவனும் உமா தேவியாரை ஒரு பாகத்தில் வைத்தவனும் சொன்ன நான்கு திசைக்குள் தென்றிசைக்கு ராஜாவாகிய யமனை உதைத்தவனுமுள்ள பரமேசுரனை நான் வணங்குகிறேன்; என்றவாறு. (உ)

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னருள
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தா னைந்து
வென்றன னாறு விரிந்தனனே ழும்பர்ச்
சென்றவன் றானிருந்தா னுணர்ந் தெட்டே.

(பொ-ரை). தான் ஒன்றாயும் தன் சத்தியோடு இரண்டாயும், பிரணவத்தில் மூன்றாயுமிருந்து நான்கு வேதங்களையும் உணர்ந்தாங்குணர்ந்து ஐந்து புலன்களின் சேட்டைகளையடக்கி வேதாங்கங்களாறையும் சொல்லி மேல் ஏழுலகங்களினுமிருந்து அட்டமா சித்திகளையு மறிந்திருந்தான்; என்றவாறு. (௩)

ஒக்க நின்றானை யுலப்பிலி தேவர்கள்
நக்கு நின்றேத்திடு நாதனை நாடொறும்
பக்க நின்றா ரறியாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றி செய்வேனே.

(பொ-ரை). எவற்றிலும் உடனிருந்தவனும் அழிவில்லாத தேவர்கள் அநேகரால் சந்தோஷித்து எதிர் நின்று வணங்கப் படுகின்றவனும் அருகிருந்தாரும் அறியக் கூடாத மேலானவனும் உள்ள பரமேசுரனைப் புகுந்து நின்று வணங்குகின்றேன்; என்றவாறு. (௪)

அகலிடத்தார் மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தெம்மெய்யைப் போத விட்டானைப்
பகலிடத்தும் மிரவும் பணிந் தேத்தி
யிகலிடத் தேயிரு ணீங்குகின் றேனே.

(பொ-ரை). உலகத்தார்க்குச் சத்தியமான பொருளானவனும் அண்டங்களுக்கு விதை போன்றவனும் நாமெல்லாம் தஞ்சம் புகுமிடமாய் எம்மைப் பிறப் பிறப்புக்களிற் போக விட்டவனுமுள்ள கடவுளை இராத்திரியும் பகலும் ஒழியாது வணங்கி மாறு பாட்டான இவ்வுலகத்து இருளினின்றும் நீங்கிகின்றேன்; என்றவாறு. (௫)

சிவனொ டொக்குந் தெய்வந்தே டினுமில்லை
யவனொ டொப்பா ரிங்கியா வருமில்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவளச் சடைமுடித் தாமரை யானே.

(பொ-ரை). சிவனுக் கொப்பானதும் மேலானதுமான தெய்வம் தேடிப் பார்த்தாலுங்கிடையாது; இந்த உலகத்திலேயும் அவனுக்குச் சமான மொருவருமில்லை; அப்பேர்ப்பட்டவனுடைய உருவம் புவனங்களை யெல்லாம் கடந்து நின்று சுவர்ணப்பிரகாசஞ் செய்யும் வெள்ளை சடையுடைய தாமரை நிறம்; என்றவாறு. (௬)

அவனை யொழிய வமரரு மில்லை
யவனன்றிச் செய்யு மருந்தவ மில்லை
யவனன்றி மூவரா லாவதொன் றில்லை
யவனன்றி யூர்புகு மாறறி யேனே.

(பொ-ரை). அவனை யன்றித் தேவருமில்லை; அவனை யொழிந்துச் செய்யும் கடுமையான தபசுமில்லை; அவனை யல்லாமல் பிரம விஷ்ணு உருத்திரர்களா லாவதொன்றில்லை; ஆதலால், அவனை யல்லாமல் மோக்ஷத்துக்குப் போகும்வழி யறியேன்; என்றவாறு. (௭)

முன்னை யொப்பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
றன்னை யொப்பா யொன்றுமில்லாத் தலைமகன்
அன்னை யப்பாவென்னி லப்பனு மாயுளன்
பொன்னை யொப்பாகின்ற போதகத் தானே.

(பொ-ரை). பழையராய்த் தம்மிற் சமத்துவமுடைய பிரம விஷ்ணு உருத்திரர்களுக்கு மூத்தவன்; தனக்கொப்பொன்று மில்லாத் தலைமகன்; தாம் தகப்பனென்று சொன்னாலும் அப்படியே யுள்ளான்; பொன்னைப் போலப் பிரகாசிக்கும் அறிவினையுடையான் அவன்; என்றவாறு. (௮)

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினு மீசன ருளறிவா ரில்லை
சேயினு நல்லன ணியன னல்லன் பார்க்குந்
தாயினு நல்லனற் றாழ்சடை யோனே.

(பொ-ரை). அக்கினியில் உஷ்ணமாகவுள்ளவன் தண்ணீருள் குளிர்ச்சியாக வுள்ளவன்; அப்படி யிருந்தாலும் அவன் கருணையின் தன்மையை யறிபவர்களில்லை; பக்திமான்களுக்குப் பிள்ளையைப் பார்க்கிலும் நல்லவனுயுள்ளான் கீழே விழும் சடையையுடைய பரமேசுரன்; என்றவாறு. (௯)

பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க விருந்தவன் பேர்நந்தி
யென்னாற் றொழப்படு மெம்மிறை மற்றவன்
றன்னாற் றொழப்படுவா ரில்லை தானே.

(பொ-ரை). பொற் கயிற்றினாற் கட்டப்பட்டது போற் பொன்னிறம் பிரகாசிக்கப் பின்னால் தொங்கும் சடையையுடையன்; நந்தி யென்னும் பேருடையான்; என்னால் வணங்கப்படும் எம்முடைய தலைவனுவான்; அவன் தன்னால் வணங்கப்படுவா ரொருவருமில்லாதான்; என்றவாறு. (௧௦)

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலுமாய் நிற்குந்
தானே தடவரைத் தண்கட லாகுமே.

(பொ-ரை). பெரிய பூமியைத் தாங்குபவனுந்தானே; ஆகாயமாய் நிற்பவனுந்தானே; சுடுகின்ற அக்கினியாகவும் சூரியனாகவும் சந்திரனாகவும் மழை பெய்கின்ற மேகமாகவும் நிற்பவனுந்தானே; தானே உமையாயும், பர்வதம் சமுத்திரமாயு நிற்பான்; என்றவாறு. (௧௧)

(இன்னும் வரும்.)

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநம:

அருணந்திசிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## சித்தியார் உரை.

(முன் தொடர்ச்சி.)

### அளவை.

ஈண்டுப்பக்கப்போலி நான்கேதுப்போலி
யொருமூன்றும்
வேண்டு மெழுமூன்றாகும் விளங்கு
வமைப்போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண்டிருபத்தி
ரண்டாங்கருதிலிவை
யாண்டு மொழிவரவை யெல்லாமளக்கி
லறுபத்தைந்தாகும்.

(பொ-ரை.) அனுமானம் பிரயோகிக்குமிடத்துப் பட்சாபாசம் நாலாயிருக்கும்; ஏதுப்போலி மூன்றாயிருக்கும்; இதுவும் இருபத்தொரு பேதப்படும்; திருஷ்டாந்தாபாசம் பதினெட்டு வகைப்படும்; தோல்வித்தானம் இரண்டு வகையாய் இருபத்திரண்டாம்; இவற்றின்மேலும் பலவுண்டென்று சொல்லுவார்கள்; அவைகளின் பகுதியை விசாரித்தறியுமிடத்து அறுபத்தைந்தாகும்; இக் குற்றமெல்லாம் வராமல் பிரயோகிப்பதே நல்லது; எ-று.

(கு-ரை.) இவற்றின் விரிவெல்லாம் மறைஞானசம்பந்தர் சிவாக்கிரயோகிய ருரைகளிற் கண்டுகொள்க.

அளவை முற்றும்.

---

### உலோகாயிதன் மதம்.

இந்திர புரோகிதனியம்பு மொருநூலின்
தந்திரமெனு தறிவினோடருளிலாமற்
சந்தனபுயத்துமணமாலை கடயங்க
வுந்துபுலகத்திலுல காயிதனுரைப்பான்.

(பொ-ரை.) சாந்தம்பொருந்திய தோளிடத்து நல்ல வாசனையுள்ள மாலைகள் விளங்க உலகாயிதன் இந்திர புரோகிதனாகிய பிரகஸ்பதி பகவான் ஆன்மாக்கள் போகங் காரணமாயருளிய நூலைத் தனதறிவினோடு ஞானமும் கிருபையுமில்லாமல் அதை மெய்யென்று சொல்லுவான்; எ-று. (க)

ஈண்டளவை காட்சிமன மாதியிரு மூன்றாய்
வேண்டுமெனு மானமுத லானபல வேண்டா
பூண்டபொருள் பூதமவை புகழ்கடின சீதந்
தீண்டரிய வெம்மைசல னத்தினொடு சேர்வே.

(பொ-ரை.) இவ்விடத்துப் பிரமாணமென்பது பிரத்தியட்சமே, அது சந்தேகம் முதலாக ஆறுவிதப்படும், இதையொழித்து அனுமானமும் ஆகமமும் வேண்டாம். அப் பிரத்தியட்சத்தால் அறிவது நான்கு பூதங்களே. சொல்லப்பட்ட கடினம், குளிர்ச்சி, உஷ்ணம், அசைவு இவையெல்லாம் அவற்றின் தன்மைகள்; எ-று. (உ)

சாற்றுபெய ரானவை தலம்புனல்க னற்பின்
காற்றுமென லாமிவை கலந்தகுண மோதில்
நாற்றமிர தம்முருவ நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்தவியல் பாமிவை புணர்ப்பே.

(பொ-ரை.) அப் பூதங்கள் நான்கும் அப்படிக் கூடின பின்பு அவற்றுக்குச் சொல்லும் பெயர்களானவை பிருதிவியும் அப்புவும் தேயுவும் வாயுவுமென்று சொல்லலாம். இப் பூதங்கள் கூடின குணங்களின் பெயரை முறையே சொன்னால் கந்தம் ரசம் ரூபம் பரிசம் இவையாகும். தெய்வமாக வணங்கும் இப்பூதங்கள் நான்கும் நாசமில்லாதவை. இவை கூடுமிடத்து மேலான வாயு பூதத்திலே நின்று மூன்று பூதங்களில் ஒன்றிலொன்றாகக் கூடும்; எ-று. (௩)

ஒத்துறு புணர்ச்சியி னுருக்கள்பல வாகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோற்
புத்திகுண நற்பொறி புலன்களிவை யெல்லா
மித்தில்வரு நீரினி லெழுங்குமிழி யொத்தே.

(பொ-ரை.) அப்பூதங்களின் சொரூபங்களுங் குணங்களும் தம்மில் ஒத்துக் கூடுகிற கூட்டத்திலே வடிவுகள் பல உண்டாகும், அது எதுபோலென்றால், திரிகையில் வைத்த மண்ணில் பல குடங்கள் தோன்றுகிறதுபோல தண்ணீரில் கிளம்பிய குமிழியையொத்து புத்தியுங் குணமும் ஞானேந்திரியமாகிய பொறி புலன்களும் இவையெல்லாம் இவ்வுருவின் கண்ணே உண்டாம்; எ-று. (௪)

பூதமதி னொன்றுபிரி யப்புல னிறக்கும்
நீதியினி னிற்பன நடப்பனவு மூற்போல்
ஓதும்வகை யாகியுறு காரிய மூலந்தால்
ஆதியவை யாமிதனை யறிவதறி வாமே.

(பொ-ரை.) அப்பூதங்களில் வாயு பிரிய இந்திரியங்கள் கெடும். இப்படியே தாபரசங்கமங்களு மிறக்கும். சொன்னபடி கூடிய காரியமாகிய சொரூபகுணங்கள் இறந்தால் காரணமாகிய பூதங்களேயாம். இவற்றை இப்படி யறிவதே ஞானம்; எ-று. (௫)

இப்படி யன்றிக்கன்ம முயிரிறை
வேறுண் டென்று
செப்பிடு மவர்க்கு மண்ணோர் செய்திடுங்
குற்றமென்னே

வொப்பிலா மலடிபெற்ற மகனொரு முயற்
கொம்பேறித்
தம்பிலா காயப்பூவைப்பறித்
தமைசாற்றினரே.

(பொ-ரை.) முன்சொன்ன விதமல்லால், முன்செய்த கர்மம் பின் தொடருமென்றும், இதனைப் புசிக்க ஓர் ஆன்மா உண்டென்றும், இவற்றைக் கூட்டுகிற கர்த்தா உண்டென்றும் சமயிகள் உலகத்தாரை மயக்குகிறார்கள், அவர்கள் அப்படி மயக்குகிறதற்கு உலகத்தார் என்ன குற்றஞ் செய்தார்கள்? அப்படி மயக்கக் கூறுவது எப்படி யிருக்குது என்றால், மலடி பெற்ற புத்திரன் முசற்கொம்பின்மேலே யேறி ஆகாசத்திலே பூத்த பூவைத் தப்பாமல் பறித்ததற்குச் சமானமாகும்; எ-று. (சு)

செய்திடுங் கன்மமெல்லாஞ்
செய்தவர் தம்மைப்பற்றி
யெய்திடுமென்னினிங்கே
மாய்ந்திடுமேய்வதெங்ஙன்
மெய்தருதூலங் கெட்டுச்
சூக்கமாய் மேவுமென்னில்
ஐயனே தீபம்போனாலதனொளி
யாவதுண்டோ.

(பொ-ரை.) முற்பிறப்பி லான்மாக்கள் செய்த கர்மமெல்லாம் கெடாமல் ஆன்மாக்களைப் பொருந்திநின்று இப்பிறப்பிலே ஊட்டுமென்று சொன்னால், இப்பிறப்பிற் செய்த புண்ணிய பாவங்கள் இக்காயத்தோடு கெடுமாதலால் பின் பிறப்பிற் கூடும்விதம் எப்படி? காயத்தோடு ஸ்தூலங்கெட்டு சூக்ஷுமமாய்ப் பொருந்துமென்றால் திரியோடே கூடிநின்ற விளக்கொளி அவிந்தபோனால் பின்னும் திரியில்லாமல் அது எரியுமோ; எ-று. (எ)

மாய்ந்துபின்வயலிலிட்ட
வைதழைபலிக்குமாபோல்
ஏய்ந்திடுங் கன்மமென்னி
லிட்டித்திசையுமேனி
யோய்ந்து வந்தவரை யுண்ணப்பண்ணுஞ்
சோறுதரத்தற்றால்
வாய்திடும்பலம் வயிற்றிற்
கொண்டிடும் வழக்குவைத்தாய்.

(பொ-ரை.) வயலுக்கு எருப்போட்ட வைக்கோலும் தழையும் தான் கெட்டுப் பின்பு பயிர்க்கு நன்மையைக் கொடுக்கிறதுபோலக் கர்மமும் தோன்றாமல் கெட்டுப் பொருந்துமென்று சொன்னால், நீ உவமானமாகச்சொன்ன வைக்கோலும் தழையும் இட்டஇடத்தில் பயிர்க்கு நன்மையைக் கொடுக்கும் அதுபோலப் பிறர் காயத்திற்கு நன்மையைக் கொடுக்கவேண்டும், அது எப்படியென்றால், தேகம் தளர்ந்து பசித்துவந்தவரை யுண்ணப்பண்ணுவித்த சோறு அவர் வயிற்றில் மாண்டால் உண்டாகும் பிரயோசனம் எதுவென்றறிந்து பார்; எ-று. (அ)

உருவமு முணர்வுஞ் செய்தி
யொத்திரா கன்மமென்னின்
மருவுகைவிரல் கடம் மின்வளர்
வுடன் குறைவுண்டாகி
வருவதிங் கென்னகன்மஞ்
செய்து முன்மதியிலாதாய்
பெருகு பூதங்கடம்மின்
மிகுகுறைப்பெற்றியாமே.

(பொ-ரை.) ஒரு காயத்தின் செய்தியும் ஓர் உணர்வின் செய்தியும் ஒத்தில்லாமல் பேதிக்கப்படுவது கர்மச்செய்தி யென்று சொன்னால், அறிவிலாதாய் முன்பு எந்தக் கர்மஞ் செய்து பின்பு தொழிலைப்பொருந்திய கைவிரல்கள் ஒன்றுக் கொன்று ஏறியுங் குறைந்துமிருப்பது அபிவிர்த்தியாகும் பூதங்கள் மிகுந்துங் குறைதலால். காயமும் உணர்வும் பேதிக்கப் பட்டதல்லது கன்மத்தினாலன்று; எ-று. (கு)

இன்பொடு துன்பமெல்லா
மெய்துவகன்மமென்னின்
நன்புனல் சந்தனாதி நணுகவு
மணுகவொண்ணா
மின்பொலியழலினோடு
மேவுவ நன்மை தீமை
யென் செய்ததியம்பிடாய்
நீயிவையெலாமியல்பதாமே.

(பொ-ரை.) ஒரு பொருளுக்கு இன்ப துன்பங்களெல்லாம் கர்மத்தால் வருமென்று சொன்னால், தெளிந்த தண்ணீரானது சந்தனமுதலாகிய நல்ல நாற்றத்தோடு கூடவும் கூடுதற்கு முடியாத பிரகாசத்தையுடைய அக்கினியோடு கூடவும் எந்த நன்மை தீமை செய்ததென்று கூறாய், இவையெல்லாம் ஒரு பொருளுக்கு இயல்பாகுமாதலால் பூதகுணமன்றிக் கர்மமில்லை; எ-று. (கo)

காயத்தின் குணமதன்றிக்
கண்டாதான்மாவுண்டாயின்
மாயத்திற் சொல்லிடாதே
மனமுதலாதினுக்கு
நேயத்ததாக வேண்டுமன்றியே
நிகழ்த்து முண்மை
தேயத்தின் முயற்கொம்பெல்லை
செப்புவோர் செய்தியாமே.

(பொ-ரை.) வெற்றிலை பாக்குச் சுண்ணாம்பு கூடினால் ஒரு சிவப்பு நிறம் உண்டாகுதல்போல பிருதிவி அப்பு தேயு வாயு எனும் நான்கு பூதங்களுங் கூடுங்காலத்தில் ஓர் அறி

வுண்டாகும், இப்படியல்லாமல் வேறே ஓர் ஆன்மா தனியே உண்டானால் வீணா ஆகமப்பிரமாணஞ் சொல்லாமல் மனக் காட்சி முதலிய பிரத்தியட்சப் பிரமாணத்திற்குப் பொருந் தும்படி சொல்லவேண்டும். இப்படிச் சொல்லாது அனுமா னத்தாலும் ஆகமத்தாலும் சொல்வது உலகத்தில் கொம்பில் லாத முசலுக்குக் கொம்பும் அதற்கு அளவும் பெருமையுஞ் சொல்லுவாருடைய வார்த்தைக்குச் சமானமாகும். (கக)

அருவமே யிறைவனாகி
    லறிவின்றா காயமாகும்
உருவமே யென்னிற்பூதக்
    கூட்டத்தி லொருவனாகு
மருவிய விரண்டுங்கூடி
    நிற்பவ னென்னின்மண்மே
லிருவிசும் பொருகல்லேந்தி
    நிற்குமோ வியம்பிடாயே.

(பொ-ரை.) கர்த்தா ஆகாயம்போல அரூபியென்று சொன் னால் அறிவுமிருக்காது ஆகாயம்போலவாகும். அப்படிக்கின் றிக் கர்த்தா உருவமுடையவனென்று சொன்னால் பூதக் கூட்டத்தில் தோன்றுஞ் சரீரியாகவேண்டும். பொருந்திய ரூபாரூபத்தோடுங்கூடி நிற்பவனென்று சொன்னால் மிக்க ஆகாயமாகிய அரூபத்திலே உருபமாகிய கல்லைவிட்டால் தம் மில் கூடிநிற்குமோ, பிரபஞ்சத்தில் நில்லாதாகையால் அரு பாரூபம் கூடிநில்லாது; எ-று. (கஉ)

பூதத்தே யன்னமாகி
    யன்னத்தா லுடம்புபுத்தி
பேதித்தே னகமுமாகிப்
    பிரிந்தமை திருந்தவின்று
வேதத்தே யுரைக்கவென்னே
    மேதினி யோர்களெல்லாங்
கேதத்தே வீழ்ந்துவேறு
    நெறியல கேட்குமாறே.

(பொ-ரை.) பிருதிவி பூதத்தே உணவுதோன்றி அவ்வுண வால் உடலும் அவ்வுடலிலேயே புத்தியும் புத்தியிலே பேதிக் கப்பட்ட மனமுமுண்டாய் வேறுபட்டதை இப்பொழுது உங்கள் வேதமே சொல்லுகின்றது. அப்படியாகவும், பிர பஞ்சத்திலுள்ளோர்களெல்லாம் வருத்தத்திலே வீழ்ந்து வழி யல்லாதவற்றைக் கேட்டு அவற்றைக் கைக்கொள்ளுதல் ஏன்? எ-று. (கங)

போகத்தை மண்ணிற்கண்டு
    விட்டுப்போய் விண்ணிற்கொள்ள
மோகத்தா ராகியல்லன்
    முயன்றுழன் மூடரெல்லாந்
தாகத்திற் றண்ணீர்கண்டு
    விட்டுப்போய்த் தண்ணீர்கேட்டு
சோகித்தே யுண்ணவெண்ணித்
    துயருறு வீர்களாந்தோ.

(பொ-ரை.) பூமியிலே மெய்யாக ஸ்திரீபோகத்தைக் கண் டிருந்தும் அதனை அநுபவியாது கைவிட்டுப்போய், சுவர்க் கத்திலே போகமுண்டென்று கேட்டு அதனைக் கைக்கொள் ளுதற்கு ஆசையுடையராய்த் தவமென்னுஞ் சிறையிலே பிர யத்தனப்பட்டுத் தடுமாறும் அறிவில்லாதவரெல்லாம் தாகித்த விடத்தே தண்ணீரை மெய்யாகக் கண்டிருந்தும் அதனை உண்ணாமல் கைவிட்டுப்போய் மற்றொரு தண்ணீரை ஒரு வன் தூரத்திலே உண்டென்று சொல்ல அதைக்கேட்டு அத் தண்ணீரை உண்டு தாகந்தீரவேண்டுமென்று போய் வழியி லே துன்பம் அடைவோர் தன்மைக்கு ஒக்கும்; எ-று. (கச)

வாழவே வல்லைவாமி
    வலக்கைதா வென்னுயிர்க்குத்
தோழனீ யுன்னையொப்பார்
    சொல்லிடி னில்லைகண்டாய்
கோழைமா னுடர்தீதென்னுங்
    கொலைகள வாதிகொண்டே
சூழும்வார் குழலார்மொய்ப்பச்
    சுடரெனத் தோன்றினாயே.

(பொ-ரை.) இவ்வுலகத்துள் எம்மைப்போல நீயும் வாழ் வாய் வாமதந்திரியே உன் வலக்கையைத் தருவாயாக, என் னுயிர்க்குத் தோழன் நீயேயன்றிச் சொல்லுங்காலத்து வே றில்லை கண்டாய். மனமில்லாத மானுடர் பொல்லாங்கென் றுசொல்லும் கொலை, களவு முதலியவற்றை யாம் கைக் கொள்ளும் முறைமைபோலக் கைக்கொண்டு, சுற்றும் ஒழுங்கு நீண்ட கூந்தலையுடைய பெண்கள் சேவித்துப் போக விளக் குப்போல தோன்றினாய் ஆதலால் என்னுயிர்க்கினிய தோ ழன் நீயே; எ-று. (கரு)

ஈசனா ரயனார்மாலோ
    டிந்திரன் றெரிவைமார்பாற்
பேசொணா வகைகளெல்லாஞ்
    செய்தன்றோ பெரியோரானா
ராசையா லவர்போனாமு
    மாச்சே வேண்டுமாயின்
வாசமார் குழலாரோடும்
    வல்லவா கூடிவாழ்மின்.

(பொ-ரை.) உருத்திரன் பிரம்மா விஷ்ணு இவருடன் இந் திரனும் ஸ்திரீகளிடத்துச் சொல்லவொண்ணாதபடி தலையில்

தரித்தும் நாவில் தரித்தும் மார்பில் தரித்தும் கௌதமர் சாப ந்தரித்தும் மற்றுஞ் செய்தமன்றோ பெரியோரென் றெல்லாருஞ் சொல்லப்பட்டார்கள். ஆகையால், அப்படி அவர்களைப்போல எல்லாராலும் பெரியோரென்று கொண்டாடப் படுதற்கு நமக்கும் ஆசையுண்டாயின் மணம்பொருந்தின குழலினையுடைய பெண்களோடு வருந்தியும் பொருந்தி வாழுங்கள்; எ-று. (சகு)

தையலா ருடலாடீத்
தாமவ ரோடுங்கூடிச்
செய்யதா மரையைவென்ற
சீறடி செம்பஞ்சூட்டி
மெய்யெலாம் பாதஞ்சூடும்
வேடத்தார் மெய்யிற்கூடா
மையன்மா னுடர்பொய்மார்க்க
வேடத்தே மாய்கின்றாரே.

(பொ-ரை.) மகளிர் ஊடினகாலத்து அவ்வூடலை நீக்கி அவரோடுங்கூடித் தாமரையின் சிவப்பைப் பழித்த பாதத்தைச் செம்பஞ்சூட்டி அவரதடிகளால் தமது காயமெங்கும் புனைந்துகொள்ளும் வேடத்தின் நிற்பவராகிய உலோகாயிதர் உண்மையிற்கூடாத மயக்கத்தையுடைய மானுடர் பொய் வழியாகிய தவவேடத்தைப்புகுந்து மாயாநின்றார்கள்; எ-று.

வாசமார் குழலினார்கண்
மணியல்குற் றடத்தேமூழ்கி
நேசமார் குமுதச்செவ்வா
யமுதினை நிறையவுண்டு
தேசுலா மணிமென்றோண்மேற்
சேர்ந்துவீற் றிருந்திடாதே
மாசுலா மனத்தோரெல்லா
மறுமைகொண் டழிவர்மன்னோ.

(பொ-ரை.) வாசமமீர்ந்த கூந்தலையுடைய பெண்களின் போகவெள்ளத்துள் மூழ்கி அவர்களது அல்லிமலர்போன்ற சிவந்த வாயின் அமிழ்தைக் குடித்து ஒளிவீசு மணியணிந்த மெல்லிய தோள்மேல் அணைந்து வாழாதே குற்றஞ்சேர்ந்த மனத்தையுடைய பரசமயிகளெல்லாம் மறுமைப்பய னுண்டென் றழிவார்கள்; எ-று. (சஅ)

மதிநிலா நுதலாரோடு
மணிநிலா முன்றிலேறி
முதிர்நிலா வெறிப்பச்செவ்வா
யிளநிலா முகிழ்ப்பமிழ்த்த
கதிர்நிலா வடங்கொள்கொங்கைக்
கண்கண்மார் பகலமூழ்கும்
புதுநிலா விழைந்போகம்
விடுவர்புன் சமயத்தோரே,

(பொ-ரை.) பிறைபோன்ற நெற்றியுடைய மாதரோடு கூடி நிலா முற்றத்திலேறி பூரணசந்திரன் விட்டு விளங்க அவரது சிவந்தவாயில் நகையொளி தோன்ற நெருங்கிய ஒளிமிக்க முத்துவடத்தைத் தாங்கிய அவர்கள் மார்பு தம் மார்பழுந்தப் புல்லி யனுபவித்தலை விடுவார்கள் இவ்வழி நில்லாத அவமாய சமயத்தார்; எ-று. (சகூ)

ஊடுவ துணர்வதுற்ற
கல்விமங் கையரையுள்கி
வாடுவ தடியில்வீழ்ந்து
வருந்துவ தருந்தவம்பின்
கூடுவ துணர்வுகெட்டுக்
குணமெலாம் வேட்கையேயாய்
நீடுவ தின்பமுத்தி
யித்தினின் றார்கண்முத்தா.

(பொ-ரை.) கல்வி பொருந்தின மாதர் தம்முடன் புதிதாகக் கூடிய மாதரை நினைத்துத் தம்முடன் ஊடுவதானால் அவரை ஊடல் தீர்ப்பதற்காகத் தளர்தலும் அவர்கள் அடியிலே வீழ்ந்து வருந்துதலுமே யரிதாகச்செய்யுந் தவமானது. அப்படித் தவத்தின் நின்றபின் பந்த மகளிரோடுந் தன்னறிவு கெட்டுக் கூடுவது முத்தியாம். இந்திரியங்களெல்லாம் ஒன்றுபட விருப்பம் நிலைபெறுவது முத்தியின்பம், இவ்வழியில் நின்றவரே முத்தர்; எ-று. (உ0)

வீட்டினை யுளதென்றோடி
மெலிவதிங் கென்னைவீடு
காட்டினோர் கண்டோர் கேட்டோர்
கரியவை யுண்டேற்காட்டீர்
நாட்டினி லரசனாணைச்
சிசைபவே நடந்துநாளு
மீட்டிய பொருள்கொண்டிங்கே
யின்பத்து ளிசைந்திடீரே.

(பொ-ரை.) காணப்பட்ட ஸ்திரீபோகத்தையனுபவியாது வேறே வீட்டின்பமுளதென்று தமொறி மெலியுந் தவத்தைச் செய்வதியாது? அந்த வீட்டினைக் காட்டினவர்களையும் கண்டவர்களையும் கேட்டவர்களையும் உண்டாகிற் சாட்சிகாட்டீர், அதுமுடியாதாகையால் லோகத்தில் ராஜவினுக்கினை வழிநடந்து நாடோறுந் தேடிய பொருள்கொண்டு இப்பிரத்தியட்சமான இன்பத்தை இவ்விடத்திலே பொருந்துவீராக; எ-று.

உலோகாயிதன்மதம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநம:

## விநாயகபுராணக் காப்புச்செய்யுள்.

---

(முன் தொடர்ச்சி.)

அப்போது அச்சிவன் ஒரு யக்ஷரூபந்தாங்கி இந்திரன்முன்சென்று ஒருந்நதஸ்தானத்தி லிருந்தனர். இந்திரன்கோபித்து நீயாரடா யக்ஷா என்று கேட்டான். அதற்கு அவர்பயமற்று நீயாரடாவென்று இந்திரனைக் கேட்டார். அவன் கிலேசமுற்று மயங்கினன். அப்போது அவனைப்பார்த்து அங்கிருந்த வொருதுரும்பை யெடுத்து அவன் முன்னே போட்டு, இதைக் கொஞ்சம் நீ அசைத்திடு பார்ப்போமென்றனர் யக்ஷர். இந்திரன் அத்துரும்பை அல்பமாகவெண்ணி அசைக்கப் பார்த்தான். அது அவனுடைய சத்தி முழுதையுங் கவர்ந்து அவனேயொரு துரும்புபோலக் கீழே வீழ்ந்திடச்செய்தது. இந்திரன்வெட்கி இனி யென்னசெய்வதென்று யோசித்துக்கொண்டிருந்தான். அப்போது அக்கினியங்குவந்து நீயாரடா யக்ஷாவென்று அதட்டிக் கேட்டான். அதற்கு யக்ஷமூர்த்தி நீயாரடாவென்று அக்கினியைக் கேட்டார். நான் திரிலோகங்களையும் நீறுக்கவல்லவன், உன்னையுங் கொளுத்தத்தக்கவன், நீ அகங்கரியாதே யென்று அக்கினிகூறினான். ஆயின் இந்தத் திரணத்தைமாத்திரங் கொஞ்சஞ் சுட்டு நீறுக்குதி பார்ப்போமென்றனர் யக்ஷர். உடனே அந்தத் திரணத்தை அக்கினிதகித்தான். அது பிரயோஜனப்படவில்லை. அதனால் அக்கினி அதிக கோபங்கொண்டு தனது ஸப்தஜ்வாலைகளுந் தோன்ற வியாபித்து அதனைக் கொளுத்தப்பார்த்தான். அப்போதும் அந்தத்திரணம் நெருப்புக் கிரையாகாமனின்றது. அக்கினி பரிபவமெய்தி வருந்திக்கொண் டிருக்கையில் வருணன்-வாயு முதலானவர்களும் அங்கு ஒவ்வொருவராகவந்து யக்ஷமூர்த்தியை யெதிர்த்துத் தமது ஸாமர்த்தியங்களைக் காட்டினார்கள். இவர்களும் பரிபவமுற்று வருந்துகையில், பிரமன் அங்குவந்தான். பிரமனது வருகையைக்கண்ட யக்ஷமூர்த்தி புன்னகைகாட்டி இறுமாந்திருந்தனர். பிரமன் இடருழந்து யக்ஷமூர்த்தியைப் பார்த்து நீயாவன் என்று கேட்டான். அதற்கு நீயாவன் என்றனர் யக்ஷர். நான்திரிலோகத்தையும் படைத்தவன், நானே எல்லாவுயிர்களுக்கும் பிதாவாயுள்ளவன் என்றான் பிரமன். நீயாவரையும் படைத்தகர்த்தாவாயின், என்னைநீ படைத்ததுண்டோ வென்றனர் யக்ஷர். அதற்குப் பிரமன் மயங்கியபோது அவனைப்பார்த்து நீ சிருஷ்டிகர்த்தாவாயிருப்பது பின்னாகட்டும், இப்போது இந்தத்துரும்பைக் கொஞ்சம் அசைத்திடுபார்ப்போம் என்றனர் யக்ஷர். பிரமன் அந்தத் துரும்பை யசைக்கமுடியாமல் தனது பலங்குன்றி மூர்ச்சித்து வீழ்ந்தான். பின்பு விஷ்ணுவங்குவந்தார். விஷ்ணுவைப் பார்த்து நீயாவனென்றனர் யக்ஷர். நான் சர்வலோகரக்ஷக கர்த்தா, என்பெயர் விஷ்ணுவென்றார் அத்திதிகர்த்தா. நீயே லோகரக்ஷகனாயிருப்பது நிஜமாயின், எமக்கென்றாவது ஒரு துளி நீரேனும் பருகக் கொடுத்து எம்மை ரக்ஷித்ததுண்டோவென்றனர் யக்ஷர். விஷ்ணுமயங்கி நமதுகதி இப்படியாயிற்றேயென்று யோசித்துக்கொண் டிருக்கையில், அவரைப்பார்த்து நீ லோககர்த்தாவா யிருப்பதைப் பின்பு பார்த்துக்கொள்ளலாம். இந்தத் துரும்பை நீயாவது கொஞ்சம் அசைத்திடு பார்ப்போமென்றனர் யக்ஷர். விஷ்ணுவுக்கு ஒன்றுந்தோன்றாமல் யோசித்துக்கொண் டிருக்கும்போது லோகமாதாவாகிய உமாதேவியார் அங்கெழுந்தருளினர். அவரைப் பார்த்தமாத்திரத்தில் யாவரும் பயந்து எழுந்து நமஸ்கரித்து நின்றார்கள். அப்போது தேவியார் விஷ்ணுவைப்பார்த்து இந்த யக்ஷமூர்த்தி எமதுபதியாகிய சிவனன்றோ வென்று சொல்லி மறைந்தருளினார். உடனே யக்ஷமூர்த்தியும் மறைந்தருளினார். சிவபெருமானது திருவிளையாடலையறிந்த தேவர்கள் தங்களது அகந்தைவிலகித் திருவருளைச் சிந்தித்து வாழ்ந்தார்கள். இச் சிவமகிமை வேதத்திலும், சூதசங்கிதை முதலிய புராணங்களிலும் பிரகாசம் பண்ணப்பட்டிருக்கின்றது. இதனால் சிவனார் திருவுள்ள மிசையாதபோது ஒரு அணுவுமிசையாதென்பது ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று. சீவனியக்குவித்தாலன்றி அசேதன மசையாதென்னுமுண்மையே இதனால் வியக்தமாகியது.

பிரமன் சிருட்டிகர்த்தாவாயிருப்பதும், விஷ்ணு திதி கர்த்தாவாயிருப்பதும், ஏனைய தேவர்முதலினோர் தத்தங்கருமங்களை நடத்துவதுஞ் சிவனாரது திருவாணையின்படியேயன்றி வேறில்லை. இதுகாறும் யாம் விளக்கிக்காட்டிய வுண்மையால், சேதனாசேதனங்களை யியக்குமாறு பரமனமர்ந்த பண்பீதென்ன விளங்கியது. இவ்வுண்மையினை விளக்கவே "அக்கரங்கடோறுஞ் - சென்றிடுமகரம்போல நின்றனன் சிவ

னுஞ்சேர்ந்தே" எனவும், "உலகமும் பல்லுயிரு மொன்றி நிரைந்தோங்கி, யிலகுஞ் சிவனெம்மிறை" எனவும் பிறவான்றோர் கூறியதுங்காண்க. இன்னும் பலவுள. இவ்வளவும்ஸ்வபக்ஷவிளக்கமென் றறியத்தக்கது. பரபக்ஷங்களை வருவித்து நிரோதஞ் செய்வதாயின், விரியுமாகையாலீண்டிம்மட்டி னிறுத்தினும்.

இனி, யாமெடுத்துக்கொண்ட பாடலில் "அகர வுகர மகரங்கட்ம்மாற்-பகருமொருமுதலாகி" என்ற பகுதியையும் விசாரிப்பாம். அகாரம்-உகாரம்-மகாரம் என்னும் இவை யொன்றுகூடியபோது ஓம் என்று ஒலிக்கும். ஓம் என்றதே "அகர வுகர மகரங்கடம் மாற் பகருமொரு முதலாகி" என்றதன் முடிவென்றறிக. இவ்வோமென்றதனையே பிரணவம் என்று வேதங்கூறும். இதுவே தாரகம் என்று பெயர்பெறும். உச்சாரண மாத்திரத்தில் பாசத்தினின்றுந் தாண்டியுயரச் செய்கின்றமையால் ஓம் என்று கூறப்படுமெனவும், பிராணோத்கிரமணகாலத்தில் பரமாத்மாவினிடத்தில் சேர்ப்பிக்கின்றமையால் பிரணவம் என்று படிக்கப்படுமெனவும், ஸம்ஸாரபந்தத்தைத் தாண்டப்பண்ணுகின்றமையால் தாரகம் என்று ஸ்மரிக்கப்படுமெனவும் அதர்வசிரசு - ஜாபாலமுதலிய சுருதிகள் கொண்டாடித் துதிக்கும் மந்திரராஜமாகிய ஏகாக்ஷரஸ்வரூபர் விநாயகக்கடவுளென்றே யறியத்தக்கது. ஓம் என்னும் மஹாமந்திரம் இவ்விநாயகமூர்த்தியினது வடிவமென்பதை இவரது யானைமுகமே சான்றுகூறும். இதனால், அகரவுகர மகரங்களாலாகிய ஓம்என்னும் முதல் இதுவென்றுதுணியப்பட்டது. அகரவுகரமகரங்கள் வியஷ்டிப்பிரணவமும், ஓம் என்பது சமஷ்டிப் பிரணவமுமாம். சமஷ்டிப் பிரணவமாகிய ஓம் என்றது விநாயகரது வடிவமானவாறு வியஷ்டிப்பிரணவங்களாகிய அகர-உகர-மகரங்களு மவ்விநாயகரது வடிவங்களேயாம், அன்றி இவரில் வேறாகாத ஸ்கந்தர் - உமை - சிவன் - என்பவர்களையும் பிரணவவடிவங்களாக வேதங்கூறும். உமா என்பதில், உ - ம் - அ என்பவை அமைந்துகிடத்தல் காண்க. அகர வுகர மகரங்களடங்கிய உமா என்பதனமைதியை வேதவித்துக்களே விதப்பரென்க. சிவனும், ஸ்கந்தரும் அவ்வோங்கார வடிவினராதலே.

"எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும் பிரமனுக்குமீசனென்னத்
தக்கமுதல் பரம்பிரமஞ் சதாசிவனே மெனவேதஞ் சாற்றுமல்லால்
முக்கனல்சூழ் வேள்விவிற்சுப் பிரமணியனேமெனவு முக்காற்கூறும்
இக்கருத்தை யறியானை யெவ்வாறு விடுவிப்ப தியம்புமின்னே"

என்னுங்காஞ்சிப்புராணச் செய்யுளானறிக. இது பிரமனை விடுவிக்குமாறு வந்துவேண்டிய தேவர்முனிவர் முதலினோரைப்பார்த்துச் சிவபெருமான் கூறியவுண்மையைத் தெரிவித்தது. இனிப்பிரமனை முருகக்கடவுள் சிறைப்படுத்தியதையுங் கொஞ்சம் விரித்துப், பின்பு அதனுண்மையையு மினிதுவிளக்குவாம்.

"பல்கலைக்கு முதலாகப் புகன்றிடுவ தோமென்னும் பதமாமந்தச்
சொல்விளைக்கும் பொருளயன்மாலீசனெனுமூவரெனச் சொல்வர்மேலோர்
மல்குமறை யுட்பொருளாய்ச் சுடரொளியா யோகுடையார் மனத்தே தோன்று
மல்கியசீர்ப் பிரணவத்தை யுணர்ந்தவரே வீட்டின்பமடையவல்லார்"

என்று பிரமன் முருகக்கடவுளது ஸந்நிதியிற் கூறினன். இதனை முருகக்கடவுள் பிழையெனக் கொண்டே அப்பிரமனைச் சிறைப்படுத்தினர். இதனால், அகாரம் பிரஹ்மா, உகாரம விஷ்ணு, மகாரம் உருத்திரன் என்று கூறுவார் மதம் அவலமாயிற்று. ஆயின் சுருதியிற் பல ஸந்தர்ப்பங்களில் பிரமனை அகாரமென்றும், விஷ்ணுவை உகாரமென்றும், உருத்திரனை மகாரமென்றும், பரமசிவனை ஓங்காரமென்றுங் கூறுவதென்னை யெனின், அதனை விளக்குதும். ஒரு கட்டிடத்தில் மூன்றுஉள்ளுகளிருந்தன. அம்மூன்று உள்ளினுந் தனித்தனியே மூவர்குடியிருந்தார்கள், அம்மூவரும் இராமன் - பீமன் - காமன் என்பவர்களாம், இராமனிருந்த வுள்ளை இராமனதென்றும், பீமனிருந்த வுள்ளைப் பீமனதென்றும், காமனிருந்த வுள்ளைக காமனதென்றுங் கூறுவது குற்றமாகாது. குடியிருப்பவர்களை அவர்களிருப்பறிந்து கூறாமல் அவர்களே யுவ்வுள்ளுகளுக்கு ஸொந்தக்காரர் என்று கூறுவதே குற்றமாம், இந்த மூன்று உள்ளுகளையுங் கொண்டுவிளங்கிய கட்டிடத்துக்கு ஸொந்தக்காரன் அவற்றிற் குடியிருக்கும் மூவருக்கும் வேறாகிய சோமனொருவனென் றறியத்தக்கது. இவன் அந்தக்கட்டிடத்துக்கு ஸொந்தக்காரனாயிருதல் சித்தம். இவனது கட்டிடத்தி லடங்கிய வுள்ளுகளுக்கு இவனைச் சொந்தக்காரனென்பதொழிந்து குடிக்கூலிக்காரரை ஸொந்தக்காரரென்று கூறுவது தகுதியாகாது. இவ்வுபமானத்தை முறையே சீர்தூக்கிப் பார்க்கின், அகரவுகரமகரங்களில் வசிக்கும் பிரமன் முதலிய மூவரும் அவ்வக்ஷரத் திரயங்களுக்குஞ் சொந்தக்காரராகார். அவர்களவ் வெழுத்துக்களில் தனித்தனிக் குடியிருப்பவர்களென்றே அறியத்தக்க

து. ஆனகையால், அகரவுகர மகரங்களுக்கும், அவற்றையுடைய ஓங்காரத்துக்குஞ் சிவபராஞ்சுடரே கர்த்தாவென்று தெளியவேண்டியது.

இனி "வேறுமாகி" என்பதனையும் விசாரிப்பாம். அகரவுகர மகரங்களாக விரிந்தபோது மூன்றெழுத்தாயும், இம்மூன்றுங்கூடி ஓம் என்றுச் சரிக்கப்படும்போது நாதமாயும், ஓம் என்று எழுதும்போது விந்து வாயும், மூதன் மூன்றெழுத்தும் இவ்விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலிவடிவுங் கூடியபோது ஐந்தெழுத்தாயும் விளங்குவது ஏகாக்ஷரமாகிய விநாயகாது மந்திரத்திருமேனியேயாம். இவ்வோமென்னு மந்திரம் இதரதேவதாபரமான மந்திரங்களின் முதலிற்சேர்த்துப் படிக்கப்படும் வழக்குண்மையால், இதனை யொன்றோடுஞ் சேர்த்துப் படிக்காமல் வேறுபடுத்தி அநுஷ்டிக்குமாதிக்யத்தையும் விளக்குதற்பொருட்டே "வேறுமாகி" என்ற பிரயோகம் நின்றுப்பயன்செய்ததென்க. இன்னுங்கொஞ்ச மிதனை விளக்கிக்காட்டுகின்றோம். "கேசவாயநம:" என்று ஒரு மந்திரத்தை யுச்சரிக்கும்போது அதன் முதலில் ஓம் என்பதைச்சேர்த்து "ஓம் கேசவாயநம:" என்று உச்சரிக்கவேண்டும். இபபடியே எந்த மந்திரத்தையும் படிக்கவேண்டும். ஓம் என்பதுசேராத வொருமந்திரமுமில்லை. இவ்வோமென்பதுசேராதபோது மற்றமந்திரங்கள் பயன்படமாட்டா ஓமென்பதுயிரும், ஏனை மந்திரங்களுடல்களுமாம் உயிரில்லாதபோது உடல்க ளியங்காவாறு ஓமென்பது சேராதபோது ஏனைமந்திரங்க ளியங்கமாட்டாவென்க. உயிரில்லாத வுடல்கள் பிணங்களாயினவாறு ஓம் அல்லது பிரணவமில்லாத மந்திரங்கள் பிணங்களேயாகும். இங்கியதி ஸ்ரீபஞ்சாக்ஷரத்துக்கு மாத்திரங் கிடையாது. பஞ்சாக்ஷரமென்பது ஐந்தெழுத்து. இவ்வைந்தெழுத்து "ந - ம - சி - வா - ய" என்பதேயாம். இதன் முதலில் ஓம் என்பதில்லை. இது சேர்ந்தால் பஞ்சாக்ஷரமென்பது கெட்டு ஷடாக்ஷரம் என்று சொல்லவரும். அப்படியேற்பாடில்லை ஓம் என்பது சேராமலே பஞ்சாக்ஷரம் ஜீவித்தும், ஓம் என்பது சேர்ந்தே ஏனைமந்திரங்கள் ஜீவித்தும் இயங்கலால் பஞ்சாக்ஷரமந்திரம் ஜீவிதமந்திரமென்றும், ஏனைய தேவதாபரமான மந்திரங்கள் பிரேதமந்திரங்களென்றும் அறியத்தக்கது. எல்லாமெய்யெழுத்துகளிலுஞ் சேர்ந்து அவ்வெழுத்துக்களை அகரம் இயக்குதல் போலவே எல்லா மந்திரங்களிலுஞ் சேர்ந்து ஓம்என்னும் மந்திரம் உயிர்ப்பிக்குமென்க. பஞ்சாக்ஷரத்தின் மாத்திரம் சேராதது என்னையெனின், பஞ்சாக்ஷா மிப்பிரணவத்தைப்போலத் தானே யியங்குமாற்றலுடையதாதல் பற்றியென்க. பிரணவம் வேறுதுணை வேண்டாது உச்சரிக்கப்படுவது போல் பஞ்சாக்ஷரமும் வேறொன்றினுச்சிரயமில்லாமலுச்சரிக்கப்படுந் தகைமையினதாதல் காண்க. ஓம் என்பதும் பஞ்சாக்ஷர மென்னும் பெயர்பெறலா விரண்டுந் தம்மில் வேறுபடாத வொரேமந்திரமாகிய ஸ்தூல பஞ்சாக்ஷரம், ஸூக்ஷ்மபஞ்சாக்ஷரம் என வெளிப்பட்டு உபயோகமாமென்க. இதுநிற்க. அஷ்டாக்ஷரி என்னும் மொருமந்திரம் நூல்களிற் கேட்கப்படுகின்றது. அது "ஓம்-ந-மோ-நா-ரா-ய-ணா-ய" என்பதேயாம். இதில், ஓம் என்பதை நீக்கின், அஷ்டாக்ஷரி என்பது கெடும். ஓம் என்பது சேராதபோது அந்த மந்திரம் அவலமாம். ஓம் என்பது பிரதக் மந்திரம். இந்த மந்திரமே யோகிகள் தியானிக்கும் (அ-உ-ம்) எட்டு இரண்டும் ஆகியமந்திரம்.

இனி அவ்வோமென்பது அஷ்டாக்ஷரியோடுசேர்ந்து பிரிபடாமலிருப்பதால் அதனை அஷ்டாக்ஷரியினமிசமெனவும், அது ஏனை மந்திரங்களிற் சேர்ந்து உபகரித்தலால் அஷடாக்ஷரியே தன்னுடைய அமிசத்தா லேனைமந்திரங்களுக்கு உயிர்ப்பைத் தருகின்றதெனவும் ஆசங்கை பிறக்கலாம். இது அஸங்கதம். எங்ஙனமெனின், ஓம் என்பதிலடங்கிய அகாரஉகார மகாரங்களில் உகாரவாச்சியன் விஷ்ணுவென்பதை முன்னே விளக்கியிருக்கின்றோம். இவ்வுகாரஸ் தானமு மிரவலேயன்றி நாராயணருக்கு ஸொந்தமாயினதில்லை. இவ்வுகாரமும், இதற்கு முன்னும் பின்னும்போந்த அகார மகாரங்களுமாகிய வியஷ்டிகள் சேர்ந்த ஸமஷ்டிப்பிரணவரூபமாயுள்ளது துரீய சிவமென்று வேதத்திற் பலவிடங்களிற் படிக்கப்பட்டிருக்குமுண்மையால், அத்துவிதமாயுள்ளதும், நாலாவதாகியதுமாகிய துரீயசிவத்துக்குரிய ஓம் என்னும் மந்திரராஜத்தைச் சேதனவிசிட்டராகிய நாராயணருக்குச் சொந்தமெனவாதிப்பது கூடாது. அன்றி, ஓம் என்பது அஷ்டாக்ஷரியினமிசமாயினவாறு ஏனை ஏழு எழுத்துக்களும் அவ்வஷ்டாக்ஷரியினது அமிசமாகவேண்டுமன்றோ ? இதனால், ஓமென்பது இதரமந்திரங்களிற் புகுந்தும், தனித்தும் பயன்செய்தல் போல ஏனையெழுத்துக்களுந் தனித்தனி யிதரமந்திரங்களிற் புகுந்தும், தனித்தும் பயன் செய்திடல் வேண்டுமன்றோ ? அங்ஙனமில்லாமையானும், அதவா அவ்வெழுத்துக்களைப் பிரித்திடின், அவையொருபயனுந் தராதொழிதலானும், அவற்றோடினப்பட்டதாக ஓம் என்றதை யெண்ணுவது மதியீனமாக

வே முடியும். இனி முடிவுரையாதெனின், நாராய ணமந்திரம் ஓம் என்பது சிங்குமாயின், கேவலம் ஜட த்வமெய்தி யழியுமென்பதேயாம். அங்ஙனமாகாவ ண்ண அதறகுபகரிக்கு முபகார நிலையினதாகவே பி ரணவம் ஆதாரவாயிடுமென்க. இந்தப்பிரணவம் ஏனே மந்திரங்களிற் பிங்கஸம்பந்தத்தையும், நாராயணமந் திரத்தில் அபிந்நஸம்பந்தத்தையும் பெற்றிருத்தல் காண்க. நாராயணர் ஏனையதேவர்களை நோக்கஆதிக்ய முடையவராகையாலிவரது மந்திரத்தில் அபேதஸம் பந்தமுடைமைபிரணவத்துக்குண்டாயினதஸாமஞ் சஸமேயாம். இந்தவுண்மை நியாயங்களால் "வேறு மாகி" என்ற நயம் இனிது பிரகாசமாயிற்று. இது நிற்க.

மேலேபிரஸ்தாபிக்கப்பட்ட நாராயணபரமான அஷ்டாக்ஷரி ஸ்ரீபஞ்சாக்ஷரியைப்போல வேதத்தின து ஹ்ருதயம், அல்லது மத்தியிற் படிக்கப்படாமை யாலும்; ஆதியந்தங்களிற் கேட்கப்படுவது ஓம் என்ப தேயாகையாலும், அஷ்டாக்ஷரிக்குப் பூர்வபட்சிகள் கூறும்பலம் நிஷ்பலமேயாம். வேதத்தினதியந்தங்க ளிற் படிக்கப்படும் பிரணவத்தை நாராயணமந்திரந் தொடர்ந்துஅஷ்டாக்ஷரியாக நிலைக்குமானல்,எதிரிக ளது மனோரத மீடேறலாம். அங்ஙனமில்லாமைக்கு யார் என்னசெய்யலாம் ? வேதத்தின் முதலிலும், மு டிவிலும்போந்த பிரணவம் துரியசிவ வடிவமாயின மையாலும் இடையிற்போந்த ஸ்ரீபஞ்சாக்ஷரியும் அ ச்சிவனரது வடிவமாயினமையாலும் ஓமென்னும் பிரணவ தாரகம் சிவஸூநுவாகிய விநாயகப்பிரான து ஏகாக்ஷரியாகி, யாவுமியங்கக்கலந்தும், அவற்றி ன் வேறு என்பதுதோன்றத் தனித்தும் நடை பெறு வதுணர்ந்து ஞானிகள் மகிழ்வரென்க. இவ்வோமெ ன்பது "ஈசாந:" என்று தொடங்கிய மந்திரத்தில் "ஸதாசிவோம்" என்று தொடர்ந்துநிலைத்திருப்பது ஸித்தமாகையாலும், இதனை மேலிடங்களில் யாம்பிர காசிப்பித் திருக்கின்றமையாலும், இச்சிவமந்திரம் வேதமாகியவுடம்பிற் கலந்த வுயிராயுள்ளதென வே தவித்துக்கள் துணிந்து கூறுகின்றமையாலும் இம்ம ஹாமந்திரத்தினது ஸ்வரூபமாகிய பிரணவத்தைப் பிரதக் மந்திரமென்பதொழிய அஷ்டாக்ஷரியினிமி சமென்று கூறுதல் நியாயவாதிகளது சபையில் நிலைத்திடாதென்க.

அக்ஷரத்வயாத்மகமாகிய சிவ என்பது பஞ்சாக்ஷரி யின் மத்தியிலிருக்கின்றதெனவும், பஞ்சாக்ஷரி ஸ்ரீ ருத்ரத்தின் மத்தியி லிருக்கின்றதெனவும், ஸ்ரீருத்ரம் ஏழுகாண்டங்களோடுகூடிய எஜுர்வேதத்தினது நா லாவதுகாண்டத்தி லிருக்கின்றதெனவும், நாலாவ துகாண்டம் எஜுர்வேதம் "திரயி" என்னும்பேரு டைய ருக்கெஜுஸ்ஸாமங்களி னிடையி லிருக்கின்ற தெனவுங்கூறி, சிவ என்னும் பதத்தால் ஸ்ரீபஞ்சா க்ஷரி சிறந்ததென்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரியினல் ஸ்ரீரு த்ரம் சிறந்ததென்றும், ஸ்ரீருத்ரத்தினல் நாலாவது காண்டம் சிறந்ததென்றும்,நாலாவது காண்டத்தின ல் ஏழுகாண்டங்களோடுங் கூடிய எஜுர்வேதம் சிற ந்ததென்றும், எஜுர்வேதத்தின லேனையிரண்டு வே தங்களுஞ் சிறந்து எல்லாவேதங்களும் பிரமாணமா யினவென்றும் வைதிகோத்தமர்கள் வந்தித்து வாழ் த்துகின்றார்கள். இதனை

> "மும்மறையுணடுமறையின் முனிவிலெழு காண்டத்திற்
> செம்மைதருநடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையி
> லம்மநடுச்சங்கிதையி னுதியீரெழுத்தநடுப்
> பொம்மலுறவமர்மனுவின் பொருளாவானெவன்மைந்த"

என்னும் பரடலாலும் மறிந்திடுக. இந்த வியவஸ் தையால், சிவமந்திரம் வேதத்தின் மத்தியில் அதன து ஆன்மவடிவமாக நிலைத்திருந்த லினிதுபிரகாச மாயிற்று. ஆன்மஸம்பந்தம் பெறுதஜடம் பிரேத சப்தத்தால் வெளியாமாகையால், சிவசப்தசிரவணம் பெறுத வேதமு மவ்வாறே முடியுமென்க, வேதம் சிவசப்தத்தை ஹ்ருதயத்தில்வைத்து உச்சரித்திருப் பதுகொண்டே அவ்வேதம் ஸர்வஸம்பிரதிபந்நமாகி ய ஸப்பிரமாணமாயினதுகாண்க. இதனல், வேதமு ழுதுஞ் சிவமயமென்று தெளிவதே வைதிகர்ஸம்மத ம். முன்னும், இடையும், பின்னுஞ் சிவமயமாய்விள ங்கிய வேதத்தில் நாராயண பரமாயுள்ளது பிரணவ மென்று பிரஸங்கிப்பது கிலுஷ்டகல்பநமாமேயன்றி ஸாதுமார்க்கமர்சாது. இந்த விசாரத்தால் ஓமென் னும் பிரணவம் சிவபரத்வபோதகமாவதன்றித் தே வதாந்தரங்களின் பரமாகாதென்னு மெமதுபட்சம் வேறுன்றிப் பொலிவெய்தியது. இன்னுமொன்று சொல்லுகிறோம்.

சு. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்.

(இன்னும் வரும்)

---

உ

திருச்சித்தம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

## சிவபுண்ணியமகிமை.

சிவம் என்பது வேத சிவாகமங்களாற் பிரதிபாதிக்கப்படும் பரதத்வப்பொருளாம். இதனையே பதியென்று கூறுதலுமாம், இதற்கு வேறாயுள்ளவை அபரவஸ்துக்களாம். அவை, பசுபாசங்களென்று சொல்லப்படும். பதி-பசு-பாசங்களாகிய விம்மூன்றனுள் பதி நிர்மல சித்தும், பசு மலின சித்தும், பாசம் கேவலம் மலினமாகிய அசித்துமாம். இவற்றுள், அசித்தாகிய பாசநீங்கலாகப் பசுவைக் குறித்துச் செய்யும் புண்ணியம் பசுபுண்ணியமும், பதியைக் குறித்துச் செய்யும் புண்ணியம் பதிபுண்ணியமுமாம். இப்பதிபுண்ணியந்தானே சிவபுண்ணியமென்று பிரசித்தியடையும். பசுபுண்ணியம்-பதிபுண்ணியம் என்னுமிரண்டனுள் பசுபுண்ணியம் சிறுபான்மை செய்யத்தக்கதும், பதிபுண்ணியம் பெரும்பான்மை செய்யத்தக்கதுமாம். இனிப்பசுபுண்ணியம், சுமைதாங்கி - திருவாசல் - தடாகம்-கூபம்-தண்ணீர்ப்பந்தர் - அன்னசத்திரம் - வித்தியாசாலை முதலியனவாம். பதிபுண்ணியமோவெனின், அத்யயந பாடசாலை-குருபூசைமடம்-பழுதுற்றதீர்த்தங்களைப்புதுப்பித்தல்-சிவாலயத்திருப்பணி-கும்பாபிஷேகம் - சிவாலயத்துக்கு அபிஷேக நிவேதனம்-திரு விளக்கு-மலர்மாலை - கற்பூரக்கட்டளை முதலியனவாம். இவ்விருவித புண்ணியங்களில்பதிபுண்ணியமே மிகச்சிறந்ததாமென்றறிக. பசுபுண்ணியந்தவறினுமுய்தல் கூடும், பதிபுண்ணியந்தவறினுயதியில்லதோர்குற்றமாகுமென்றறிக. இதனை "ஆற்றருநோய் மிகுமவனிமழைகுன்றும், போற்றருமன்னரும் போர்வலிகுன்றுவர் கூற்றுதைத்தான் திருக்கோவில்களானவை - சாற்றிய பூசைகடப்பிடிற்றானே" என்னுந் திருமந்திர வுரையானறிந்தின்புறுக. இவ்வுண்மை தேராது நம்மனோர் சிவாலயத்திருப்பணியையும், ஏனைய சிவதருமங்களையுங் கைவிட்டபாவத்தின்பயனாகவன்றோ நாற்பது வருடகாலமாக மழைசெம்மையாய்ப் பெய்யாமலும், அதனால் கொடிய பஞ்சங்களதிகரித்தும், புருஷர்கள்-ஸ்திரீகள்-சிசுக்கள்-முதலினோர்க்குக் கால்வீக்கம்-விதைவாதம்-தேகரணங்கள்-சுரநோய்-வாந்திபேதி-வசூரி முதலிய நோய்கள் விர்த்தியாகியும், பெருங்காற்று - பெருவெள்ளங்களால் பல பல சேதங்களுண்டாகியும் உலகில் துன்பம் பெருகத்தலைபட்டது ? இவ்வசம்பாவிதங்கள் தொலைய வேண்டின் பதிபுண்ணியபரிபாலனமே முக்கிய ஏதுவாம்.

இப்பதிபுண்ணியத்திற்றலைப்பட்டோர் முக்கியமாகச் செய்யத்தக்க காரியமொன்றுண்டு, அது சிவார்ச்சகர்களாகிய ஆதிசைவர்களைப் போஷித்தலாம், ஈண்டுப் போஷணையென்றது அன்னபானீயங்களைக் கொடுத்தலேயன்றி அவர்களுக்கு வித்யாவிர்த்தி-சிவாகமத்தேர்ச்சி-தீக்ஷாஸம்ஸ்கார முதலிய சைவநலங்கள் பெருகச்செய்வதுமாம். "தாவரசங்கமங்களென்றிரண்டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க்கருளைவைப்பன்" எனறு சுருதி கூறுகின்றது. தாவரம் சிவலிங்கமூர்த்தமும், சங்கமம் சிவாசாரியமூர்த்தமுமாம், சங்கமபூசைமுதலும், தாவரபூசை இரண்டாவதுமாகச் செய்யவேண்டியது. சங்கமபூசை இனைத்தென்று மேலேகூறினும் இந்தப்பூசை சரிவர நடைபெறின், உலகுக்கொரு தீங்குமின்றாம். இப்போதுலகில் நடவடிக்கை யெப்படியிருக்கிறதெனின், அவர்களில், ஒவ்வொருவருக்கும் திருக்கோயில்களில் மாதமொன்றுக்கு ஐந்து நாள் எட்டுநாள் பூசைமுறை யேற்பட்டிருக்கின்றது. இவைகளுக்கு முறையே ஐந்துபட்டை எட்டுப்பட்டை. வெற்றன்னமும், ஐந்துபணம் எட்டுப்பணம் கைச்சம்பளமும் ஏற்பட்டிருக்கின்றது. இந்தச்சம்பளமும் மாசமாசங்கிடைப்பதில்லை. இவ்வளவு பெரியவருவாயைக்கொண்டு அவர்கள் எப்படி ஜீவிப்பார்கள். அவர்களது குடும்பஸம்ரக்ஷணையோடு குழந்தைகளுக்கு உபநயனம்-கலியாணம் ஆசாரியாபிஷேகமுதலிய நன்மைகள் இடையிடையே நடைபெறுதற்குமார்க்க மெங்கே ? தக்க ஏற்பாடுண்டாகாமையால் அவர்கள் திவசம்-சவண்டி-கிரகப்பிரவேசம் - சோபநம்-கலியாணம் முதலிய விசேடங்களுக்கு வீடுவீடாய்த் திரிந்தூரூராயலைந்து தங்கள் கௌரவத்தையுமிழந்து வருந்துகின்றனர். இவைகளை நாம் கவனியாமல் அவர்கள் நன்றாய்ப்படிப்பதில்லை. ஒழுக்கந்தவறுகின்றனர். அவர்களுக்குப்பூசைவிதி தெரியாது அவர்கள் கண்டருத்ராக்ஷந்தரிப்பதில்லை. காலத்தில் பூசைசெய்வதில்லை சிவ திரவியங்களை அபகரிக்கின்றனர் என்று வீணபவாதங்களை யேற்றி வெறுத்துக் கொள்ளுகின்றோம். இது சுத்தபிசகு. இனிநாம் செய்யவேண்டியதைக் கூறுகின்றோம்.

ஆதிசைவப்பிள்ளைகளுக்கு ஒவ்வொரு முக்கிய சிவக்ஷேத்திரங்களில் வித்யாசாலை யேற்படுத்தி, கீர்வாணம் தமிழ் என்னுமிரண்டு பாஷைகளையுங் கற்பித்தல்வேண்டும். கீர்வாண பாஷையில் வேதசிவாகமங்களைப் பயிலச்செய்வது போலத் தமிழ்ப்பாஷையில் தேவார திருவாசக முதலிய சைவத்திருமுறைகளையும் சிவஞானபோத முதலிய மெய்கண்டநூல்களையும் பயிலச் செய்தல் வேண்டும். மதுரை முதலிய ஏகதேச இடங்களில் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களில் ஏகதேசிகள் இவ்வாதிசைவ தர்மபரிபாலனஞ் செய்து வருகின்றனர். நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களில் பெரும்பாலார் தர்மசீலர் என்று பெயர்வகிக்கினும் அவர்கள் இத்தகைய பரமசைவ தர்மங்களில் பிரவேசிப்பதில்லை. ஸ்மார்த்தர்களுக்கு அன்னமிடல், அவர்களுக்குப் பலவிததானங்கள் செய்தல் முதலிய ஸாமானிய காரியங்களையே செய்து வருகின்றனர். இவர்கள் சிவாலய ஜீர்ணோத்தாரணம் கும்பாபிஷேகம் முதலிய பதிபுண்ணியங்களைச் செய்வதில்லையோவெனின். பதிபுண்ணியவுணர்ச்சியில்லாமலும், பதிபுண்ணியத்துக்கும் தாங்கள் செய்யும் ஏனையதர்மங்களுக்குந் தாரதம்யங்காணாமலும் "எல்லசெட்டி லேகா, ஏக் லேகா" என்றதுபோல எல்லாவற்றையுங் குழறுபடையாக்குவதால், அது கனம் பெற்றிலதென்க. இந்தச் செட்டிமார்கடானப் படிச்செய்கின்றார்களோவெனின், இரண்டு மூன்று தீக்ஷைகளைப் பெற்றுச் சைவர்களென்று பிரசித்தியடைந்திருக்கும் ஏனைய மரபினரும் அப்படியே செய்துவருகின்றனர். தங்களது மரபொழுக்கமினைத்தென்று சிஷ்யர்களுக்குத் தெரிந்து நடவாதபோது

அவர்கள் தமது ஆசாரியர்கள் பெருமையறிந்து அவர்களைப் பூசிப்பதில்லை யென்று நாம் வெறுத்துக் கொள்வதுதானெப்படி; ஆசாரியர்களைப் போஷித்தல் வேண்டுமென்றபடிச் சிஷ்யர்களுஞ் சீர்பெறவேண்டியது ஆவசியமாம். தாங்கள் சீர்பெற்றுத் தங்களாசாரியர்களையுஞ் சீர்பெறச் செய்வதை விட்டுப், பரதர்மங்களில் சைவர்களாகிய நம்மவர்தலைப்பட்டுக் கெடுதல் குலஸ்திரீயான்வள்தான் பாதுகாக்கத்தக்க கற்பு இனைத்தென்றறியாமலும், தனது காதலன்பாற்செய்யத் தக்க பணிவிடைகளைச் சாமானியமாக்கி, அவனது காலின் கீழொதுங்கும் ஏவலாளர்களிடத்தில் அளவுக்கதிகமான பணிகளை மெய்யன்புடன் புரிந்தும் இல்லொழுக்கம் பூண்டொழு மீன நிலையோடுதானே சேரும் பெற்றியினதாமென்றறிக. சைவ சமயிகளுக்கு விதித்த பதிபுண்ணியங்களை அவர்கள் செய்யாமலும் ஏனையோருக்கு விதித்த ஸாமானிய புண்ணியங்களைச் செய்தும் வருதல் வேரில் விடவேண்டிய நீரைத்துறில் விடுவது போலப்பயனற்றதாய் முடியுமெனல்சித்தம். சைவர்கள் ஆதிசைவர்-மஹாசைவர்-அநுசைவர் - அவாந்தரசைவர் முதலிய சிவசம்பந்திகளுக்கே அன்னமளித்தல்வேண்டும், எல்லாத் தானங்களையும் அவர்களுக்கே செய்தல் வேண்டும். மேலே மஹாசைவப்பிரஸ்தாபஞ் செய்தோம், மஹாசைவராவார் வேதசிவாகமங்களைத் தழுவிநிற்போர். இவர்கள் வேதியரில் சிவாகமவிதிப்படிச் சைவஸம்ஸ்காரம் பெற்றவர்கள். இவர்கள் வேதசிவாகமங்களைப்பதி வாக்கெனத்துணிந்து இருடியர் செய்த மிருதிகளை அவற்றோடு விரோதியாதவழித் தழுவுவார்கள். இவ்வுத்தம் வேதியர்க்குத்தானுதி ஸத்காரங்கள் செய்தலையாம் குறைகூறில மென்க. மேலையாம் ஸ்மார்த்தர் என்று கூறியது சிவாகமங்களினும் ஸ்மிருதியுயர்ந்தது என்றும், சிவாகமம் வேதியர்க்கருகமல்ல வென்றும் சிவ வேதியர் தம்மிற்றாழ்ந்தவர்களென்றும் தொல்லைச் சிவசாத்திர நிந்தை சிவனடியார் நிந்தைகளிற்றலைப்பட்ட விப்பிரரையேயாம். இன்னோர் பசுபதிப்பெயரியதனி முதற்கடவுளோடு ஏனைய சில்லறைத் தெய்வங்களைச் சமமென்றுபாராட்டிச் சிவநிந்தையைப்பாலன்னமாகக் கொண்டொழுகலாலிவர்களுக்கு பகரிப்பவர் செய்கையுஞ் சிவத்துரோகமாகவே முடியும். இதனுண்மை பின்வாக்கியங்களாலும் அறிந்தின்புறுவர் பெரியோரென்க.

அருணகிரியந்தாதி.

"ஆனவர நல்குநதி யாயிரஞ்சென் றூடுகிலென்
தானம் பதினாறீந்தான் செயிலென்—ஆனனந்த
ளஞ்சுடையார் சோணகிரி யண்ணலை யெண்ணாத
நெஞ்சுடையார் பூதலத்தே நின்று."

சிவஞானசித்தியார்.

"பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும்
அரனடிக் கன்பர்செய்யும் பாவமும் புணியமாகும்
வரனுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி
நரர்தமிற் பாலன்செய்த பாதக நன்மையாய்த்தே."

இந்தப் பிரமாணங்களாலே பரமபதியாகிய சிவபராஞ்சுடரைவிட்டுச் செய்யுஞ் புண்ணியம் புண்ணியமாகாதென்பதே சித்தம். இப்பதி புண்ணியத்திற் றலையாயது சிவாலயத்திருப்பணி, அதிற் சிறந்தது கும்பாபிஷேகம், அதிலுஞ் சிறந்தது நித்திய நைமித்திகம், அதனினுஞ் சிறந்தது ஆதிசைவபூசை, இந்தப் புண்ணியங்களை மந்திரக்கிரியாபாவனைகளோடு முக்கரணங்களுமொத்துச் செய்தல்வேண்டும். இவற்றுள், ஆதிசைவபூசையானது தளிர், இலை, மலர், காய், கனி முதலிய வற்றிற்குக் காரணமான வித்துப்போன்றதென அறியத்தக்கது. இவ்வருமையுணர்ந்து சிவபுண்ணியத்திற் றலைப்படும் பாக்யசாலிகள் வெகுசிலர். பிறரெல்லாம் பெருமைக்குத் திருப்பணி விஸ்தாரமாகச்செய்தும், மந்திர மூர்த்திகளாகிய ஆதிசைவர்களை வேலைக்காரராக வெண்ணியும், அவர்கட்குள் வேலைக்காரராயமர்ந்துள்ள ஏனைய விப்பிரர்களை அதிகமாக மதித்து அவர்களுக்குத் தானதருமங்களைச்செய்தும் கெடுகின்றனர். இது காலசுபாவமேயாம், இது என்போலுமெனின், நன்செய், புன்செய், சொர்ணதாயம், தோப்பு, தோட்டம், பாய்கால், வடிகால் முதலிய சகல சமுதாயங்களும், யாறு, குளம், குட்டைகளுமுள்ள நல்லகிராமங்களைப் பயிர்செய்து பெரும்பயனடைவதை யிழந்து, காடு, மேடு சூழ்ந்து பாய்கால், வடிகால், சொர்ணதாயம், தோட்டம், தோப்பு, யாறு, குளம், குட்டைமுதலிய ஜலங்களிரம்பாத அவலகிராமங்களைத்தேடியடைந்து முத்துலைபோட்டு மிகுந்த பாடுபட்டுப் பாட்டுக்குத்தக்க பலனடையாது அற்பபலனையடையும் செய்கைபோலு மறியத்தக்கது. அன்றியும், புண்ணியமழிவிட்டதனல், சிவாலயத் திருப்பணியிலிறங்கினவர் தம்முட்சிலர் விரைவிற் செய்து முடிக்காமலும், விரிவிற் புத்தியைச்செலுத்தி, அது முடிதற்குள்ளே சிலு சச்சரவுகளைக் கொண்டுவந்து போட்டுக்கொண்டு எடுத்த திருப்பணியைக் குறைவாக விடுத்தும், அதனல், கும்பாபிஷேகத்துக்குத் தடையுண்டு பண்ணியும், நித்திய நைமித்திகங்களை நிறுத்திவைத்தும் பல இடையூறுகளைத் தேடிக் குளிக்கப்போய்ச் சேறுபூசிக்கொள்வாரொத்துப் பாவங்களையார்ஜிக்கின்றனர். இதற்கெல்லாங் காரணம் சைவநூல்களைக் கற்றும், கற்ற பெரியோர்களைக்கலந்தும் சிவபுண்ணியத்தின்மகிமையறியாத குறைவேயாமென்றறிக. "பெரியாரைத் துணைக்கொள்" என்றருளிய அன்னையினது அமுதவாக்கைச் சிந்தித்து வாழ்வோரை இவ்வல்லலெல்லாந் தொடராவென்க. இவ்வுண்மையுணர்ந்தோர் பதிபுண்ணியத்திற் பதிந்த மனமுடையோராய், எவ்வித இடையூறும் கோரதபடி அதனைத் திருவருட்டுணையான் முடித்தும், முடிப்பித்துஞ் சிவப்பிரஸாதமெய்திச் சுகிப்பரென்க. இத்தகைய சைவஸாதனங்களிற் றலைப்படும் பெரியோர்பின்னுஞ் செய்யத்தக்க காரியங்களை ஈண்டுச் சிறிது கூறுவாம்,

உத்தம சிவக்ஷேத்திரங்களில் குருபூசை மடம் ஏற்படுத்தல் வேண்டும். அதில், சைவசித்தாந்த பரமாசாரிய சுவாமிகள் நால்வரது திருநட்சத்திர சுபதினங்களிலும், ஏனைய நாயன்மார்களது திருநட்சத்திர சுபதினங்களிலும் அத்தியாவசியகமாய் அபிஷேக அலங்கார தூபதீபாராதனை மஹேசுவர பூசையோடு திவ்யோத்ஸவங்கள் நடத்திடல்வேண்டும். அன்றியும், பொருள் கைகூடினல் ஒன்பது நாயன்மார், ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள், சந்தானகுரவர்முதலிய சைவசித்தாந்தத் தலைவர்களுக்கு அவரவர்களது திருநட்சத்திர சுபதினங்களில்

மேற்கூறியவாறே இவ்வுத்ஸவங்கள் நடத்திவரலாம். இப்படிப்பட்ட புண்ணியகாலங்களில் மஹேசுவரராய் வரத்தக்க அடியார்களைச் சமயம், விசேடம், நிர்வாணம், ஆசாரியாபிடேகமுதலிய சைவ ஸம்ஸ்கார தாரதம்ய மறிந்து பூசித்தல்வேண்டும். அவர்கள் விபூதி, கண்ட ருத்ராக்ஷம், சிரசு ருத்ராக்ஷமுடையவர்களா யிருத்தல்வேண்டும். அப்படிப்பட்டவர்களது திருவடிகளிலேயே பூவு நீருங்கொண்டு அர்ச்சித்து அன்னம் படைத்து ஆநந்திக்கவேண்டும். "பூண்பதற்குக் கண்டியினைக் கூசுமவர் தம்முகத்தைக் - காண்பதற்குக் கூசமரன் கைத்து" என்னுந் திருவாக்கால் ஊருத்திராக்ஷ தாரணஞ் செய்யாதார் நிஷேதிக்கப் படுகின்றனர். ஆகையால், சற்சைவர்கள், மற்றச்சைவர்கள் முதலிய யாவரும் சிரசு, கண்டம் முதலிய இடங்களில் (விபூதியைப்போல) அத்தியாவசியம் உருத்திராக்ஷதாரணஞ் செய்தே தீரவேண்டும். மற்றக் காலங்களில் தரிக்க நேராவிடினும் அவர்கள் மஹேசுரராய் வரிக்கப்படுங் காலங்களில் கட்டாயமாய்த்தரிக்கவேண்டியது மரபாமென்றறிக. இவ்வாறு தரிக்கச் சம்மதியாதவர்களை (சிவசிந்நத்தை அவமதிப்பாகத் தள்ளுபவர்களை) நாம் பந்தியினின்றுந் தள்ளக்கூடாதோ; சைவ சாதனங்களை விழையாதவர்களைக் குறைகூறிய வாக்கியங்கள் வருமாறு :—

"பூதியணி யாதவர்கள் புந்தி சுடுகாடு
ஆதியர னுமமுரை யாதவர் களுமர்
சோதிவிழி தந்தமணி தூயவுடற் பூணப்
பாதக ரெடுத்தவுடல் பன்றியுட லாமால்"—எனவும்,

"சதுர்வேத தரோவிப்ரோ - பூதிருத்ராக்ஷ வர்ஜிதஃ
தயாசண்டாள பாண்டஸ்தம் - ததாபாகீரதீஜலம்"

போந்தவற்றாலுண்மை விளங்கும்.

இப்படி வைதிக நூல்கள் சைவசாதனங்களிழந்தாரை வர்ஜித்தலால், பூர்வ புண்ணியமுடையார் அவற்றைத் தழுவி வாழ்ந்தின்புறுவ ரென்க. அவர்களைப் பூஷிக்கும் வாக்கியங்களை இனியீண்டெழுதுகிறோம்.

"அணிவ தென்று முருத்திர னக்கமே
பணிவ தீசன் கமலப் பதங்களே
தணிவ தன்னோனா றருமப் பொருளினே
துணிவ தெந்தை பிரான்திருத் தொண்டினே"

"திருந்த நோற்ப சிவவிர தங்களே
பொருந்தச் சொல்வதப் புண்ணிய னுமமே
அருந்து கின்றதத் தொண்டரோ டாடியே
வருந்திச் செய்வதவ் வானவன் பூசையே"—அன்றியும்,

"முகேபஞ்சாக்ஷரீமந்த்ரம் - களேருத்ராக்ஷமாலிகா
பாலேபஸ்மத்ரிபுண்ட்ரச்ச - ஸருத்ரோநாதஸம்சயஃ"

என்னும் வசனமானது "எவனுடைய முகத்தில் ஸ்ரீபஞ்சாக்ஷரமும், கண்டத்தில் உருத்திராக்ஷமாலிகையும், நெற்றியில் பஸ்மத்தினால் திரிபுண்டரமும் பிரகாசிக்கின்றனவோ, அவனை ஸ்ரீருத்ரமூர்த்தியென்று துதிப்பதற்கு எவ்வளவுஞ் சந்தேகமில்லை" என்று தெரிவிக்கின்றது.

இவ்வுண்மைகளால் பஸ்மருத்ராக்ஷ ஸ்ரீபஞ்சாக்ஷர சிவ பூசைகளின் மகிமை இனிது வெளிப்பட்டது. பஸ்மோபநிஷத்து, ருத்ராக்ஷோபநிஷத்து என்ப் பல வுபநிஷத்துக்களும் பஸ்ம ருத்ராக்ஷங்களைப் பிரதிபாதித்தலால் இவைகளைக் கைக்கொள்ளுவோர் வைதிகரும், கைக்கொள்ளாதவர்கள்வேதபாகியருமாயின்து சத்தியமென்றறிக. மஞ்சள், குங்குமம், கழுத்தில் திருமங்கலியமில்லாதவள் அமங்கலியென்று நிஷேதிக்கப்படுவது போலப் பஸ்ம ருத்ராக்ஷாதி சிவசிந்நங்கள்தரியாதவர்கள் தியஜிக்கப்படுவரென்க. உத்தம சைவராயுள்ளவர்கள் பஸ்ம ருத்ராக்ஷதாரண மில்லாதவர்களுக்குத் திலமளவுபகாரமுஞ் செய்தல் கூடாதென்க. சிவக்ஷேத்திரங்களில் சைவராயுள்ளவர்கள் அன்னசத்திரங்கட்டி வழிப்போக்கர்களை ஆதரிக்கின்றார்கள். அது உபகாரமான காரியமேயானாலும், அவ்வுபகாரிகள் கவனிக்கத்தக்க விஷயமொன்றுளது, என்னெனின், சிவதரிசனார்த்தமாய் வரத்தக்கவர்கள் சிவ சிந்நங்களைத் தாங்கினவர்களாய் ஸ்வாமி தரிசனஞ்செய்து விட்டு அன்னசத்திரத்திற் புசித்தலால் அது ஸார்த்தகமேயாம். அப்படிக்கின்றி வழிப்போக்கர்கள் சோற்றுக்கில்லாமல் அன்னசத்திரத்தில் வந்து தங்களால் அவர்களையாதரித்தல் ஸார்த்தகமாகா தென்க. பசி எவர்களுக்கும் பொதுவானதால் அவர்களையுமாதரிக்கலாமெனின், அவர்களைப்பஸ்ம மணியச்செய்தும், சிவாலயதரிசனஞ் செய்துவரச்செய்தும் அன்னமளித்துபசரித்தல் சால்புடைத்தாம். அப்படிச்செய்ய விசையாதவர்களை "தூரதோபரிவர்ஜயேத்" என்றபடித்தூரமாய் விலக்கவேண்டியதே உசிதமாம். "கண்ணுவாரேனு முனைக் கைகுவியாராயினந்த, மண்ணுவார் நட்பைமதியேன்பராபரமே" என்று சைவப்பெரியோர் அருளாக்கிய வுறுதியையறிந்தொழுகப்படுக.

சகலசமயாதிதாத்வைத சுத்தசிவ சந்மார்க்கம் பற்றிவாழத்தக்கவர்களுக்கே இவ்வுபதேசமன்றிப் புறச்சமயிகளுக்கன்றாம். சற்சைவர்களுக்குப் புத்திரர்களாய்ப் பிறந்தவர்தம்முள், பெரும் பாலார் அன்னியர்களுடைய சேர்க்கையால் தமது சமயவொழுக்கத்துக்கு மாறாய்த்திரிகின்றனராகையால், அவர்களையுத்தேசித்தே ஈதெழுதலாயிற்றெனவறிக. இவ்வுபதேசத்தைக்கடைப் பிடித்தொழுகத்தக்க சைவர்கள் இன்னுங்கவனிக்கத்தக்க விஷயமொன்றுண்டு, என்னெனின் எல்லாச்சைவமரகலந்தழைப்பதும் ஆசாரியராலின்றியமையாதாகையால், சைவசித்தாந்த பரமாசாரியஸ்வாமிகள் நால்வர்திருவடியிலன்புபாராட்டி உய்திதேடவேண்டு மென்பதேயாம். "மூவர்பழிச்சுபாடலையோத" எனவும், "மொழிக்குமொழிதித்திப்பாக மூவர்சொலுந் தமிழ்கேட்குந்திருச்செவி" எனவும், "தித்திக்குஞ் சொல்லான் மருவுற்றபூம்பொழில் சூழ்வாதவூர்வள்ளல்" எனவும் அவ்வாசாரியர்கள் சைவப்பெரியோர்களாற்றுதிக்கப்பட்டவாறறிக. இவ்வாசாரியர்கள பது தேசமொழிகளாகிய தேவார திருவாசகங்களையும், இவர்களது திவ்ய சரித்திரங்களாகிய பெரியபுராணம் திருவிளையாடற்புராணம், திருவாதவூரடிகள்புராணம் முதலிய அரியநூல்களையும் நாடோறும் பாராயணஞ் செய்தும், படித்துப் பொருளுணர்ந்தும் இன்புறுவர் பெரியோரென்க. பக்திஞானங்களை விளைவிக்கு நூல்களிவைகளேயாம். இவற்றையநுஸந்தியாதபோது அடியார்களது பெருமையும், ஆசாரியர்களது பெருமையும், அந்திவண்ணத் தமலனார் பெருமையுமறிவது துஸ்

ஸாத்யமாமெனவறிக. ஆகையால், சைவசமயிகளாவர் இவை சளைத்தாமநுட்டிப்பது மாத்திரமன்றித் தமது குழந்தைகளுக்கும் பாலியந்தொட்டநுஷ்டானமுண்டாகச் செய்து சைவ நலம் பெருக்குவது ஆவசியகமாம்.

உலகில் குருபக்தியானது சிவபக்தியினுஞ் சிறந்ததாம். "சிவனைவழிப்பட்டாரெண்ணிலிதேவர். அவனைவழிபட்டங்காமாறொன்றில்லை. அவனைவழிப்பட்டங்காமாறு காட்டுங் - குருவை வழிபடிற்கூடலு மாமே" என்று திருமந்திரங் கூறுகின்றது. இதனால், குருபக்தியினது ஆக்கப்பாடு வெளியாகியதுணர்க. உலகிலுபதேசகர்த்தர்களாய் வெளிவருங் குருமூர்த்திகளது பெருமைக்கே யெல்லைகற்பிக்க முடியாததாயின், உலகத்துக்கே குருவாயெழுந்தருளிய சமயாசாரியர்களது பெருமையையாம் அளவிட்டுரைக்குந் தரமோ? ஜகத் குருமூர்த்திகள் நால்வர்பரமாசாரியசுவாமிகளேயாமென்பதற்கு ஒரு நிதரிசனங்கூறுகின்றோம். "நாலுபேர் போனவழி நாம்போகவேண்டும்" எனவும், "நாலுபேர் என்னசொல்லுகிறார்களோ, அதை நாம் கேட்போம்" எனவும் எந்தமதத்தினர் கூறாதவர்கள்? எல்லாச்சமயிகளுக்கு மொப்பமுடிந்தவார்த்தையாகிய விதனை யோசிக்கின், நால்வர்களே யெல்லாச்சமயங்களுக்கும் பரமாசாரியர்களாயிடுதல் சித்திக்கின்றது. சைவசமயிகளுக்கு நேரே வெளிப்பட்டருளியும், ஏனையசமயிகளுக்கு அவ்வச்சமயாசாரியர்களை யதிட்டித்தருளியும் விளங்கும் பெருமையுடையாரெம் பெருமக்கள் நால்வர்பரமாசாரியஸ்வாமிகளென்றறிக. வேறு சமயங்களில் நால்வராசாரியர்கள் பிரஸ்தாபங் கேட்கப்படாமையாலும், நாலுபேர்சொன்னவார்த்தையைத் தட்டவெழுஞ் சமயிகளில்லாமையாலும் எமது சைவத்திருவாளர் பெருமையே உலகமுழுதும் வியாபித்ததறிக. இவ்வளவு பெரும்புகழ் நிறைந்த சமயகுரவர்களைச் சைவசமயிகளாகிய நம்மனோர் வந்தித்தும் வழிபட்டும் பிழைக்கும்வழி தேடலாகாதா? கிறிஸ்துவர்களைப் பார்க்கக்கூடாதா; மகம்மதியர்களைப் பார்க்கக்கூடாதா; அவர்கள் முறையே தங்கள் மதத்துக்குக் குருவின் பேரையே வைத்துக்கிறிஸ்தவமதம் - மகம்மதியமதம் என்று வழங்கிவரு மருமையைப் பார்த்தால் எவ்வளவு நன்றாயிருக்கிறது. இவர்கள் மாத்திரமேயன்றி மத்துவர்கள் தங்களது குருவின் பேரால் மத்வமதமென்றும் சங்கரமதஸ்தர் தங்கள் குருவின் பேரால் சங்கரமதமென்றும், பாஞ்சராத்திரிகள் தங்கள் குருவின் பேரால் இராமாநுஜ மதமென்றும் தத்தமதங்களைக் கௌரவித்திருக்கும் அழகும் எவ்வளவு நன்றாயிருக்கின்றது; இப்படி எல்லா மதத்தவருங் குருபக்தியை நன்கு பிரகாசப்படுத்தி வரவும், நமது சைவசமயிகள் மாத்திரம் பரமாசாரிய பக்தி குறைந்தவர்களாய் மலின மடைந்திருப்பது பரிதாபமென்க. நிராதரவான சமயிகளெல்லாந் தங்களாசாரியர்களை வாயுவினது அவதாரம், சிவனது அவதாரம், சேஷனது அவதாரம் என்று சொல்லிக் கொண்டிருக்கவும், ஸ்ரீஜ்ஞானசம்பந்தப் பெருமான் ஸ்ரீமுருகக்கடவுளது அவதார மென்று வாழ்த்தியின்புறுதற்கு ஆட்சேபமென்ன? ஸ்ரீஜ்ஞானசம்பந்தப் பெருமான் முருகக்கடவுளவதாரமென்பது சத்தியம். இவ்வுண்மை தேர்ந்து.

சைவ எல்லப்ப நாவலர்.

" சைவத்தின் மேற் சமயம் வேறிலையதிற்
சார் சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச்
செம் பொருள்வாய்
மெய்வைத்த சீர்த்திருத் தேவாரமுந்
திருவாசகமு
முய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம்
முயிர்த் துணையே"

என்றுகூறி ஆசாரியர்கள் பெருமையை வாழ்த்தினர். இதுவேயன்றோ சைவர்களாகிய நம்மனோர் கடைப்பிடித்தொழுகத் தக்கமரபாயுள்ளது? புறச்சமயிகளுக்கிருக்குஞ் சமயாபிமானம் நம்மவர்களுக்கில்லையேயென்னும் வருத்தமிகுதியாலேயே இவ்வளவதிகமாக வற்புறுத்தி யெழுத நேர்ந்ததென்க. புறச்சமயிகளுள்; சமணர்கள் விபூதிருத்ராக்ஷ முதலிய சைவசின்ன முடையவர்களைக் கண்டால் கண்டுமுட்டு என்று வருந்தி மூன்றுநாள் ஆகாரமின்றிக்கிடப்பார்கள். அவர்களைக் கண்டோமென்று ஒருவர் சொல்லக்கேட்டால் கேட்டுமுட்டு என்றுவருந்தி ஒன்றரைநாள் ஆகாரமின்றிக் கிடப்பார்கள். சைவநிந்தைபுரிவதால் அவர்களை நாம் பாவிகள் துஷ்டர்களென்று குறைகூறினும் அவர்களது சமயாபிமானத்துக்கு ஆச்சரியப்படவேண்டியிருக்கிறது. எந்தச்சமயிகளாயினும், தங்களது சமயங்களை உயிரினு மினியவாக வோம்புவார்களாயின் அவர்களை அவலர்களென்று நாம்சொல்லமாட்டோம். கிறிஸ்தவர்கள் கோடிக்கணக்காக முதல்வைத்து, அதன்வருவாயைக்கொண்டு பாதிரிகளைப் பலதேசங்களுக்கு மனுப்பித்தங்கள் மதத்தைப் போதிப்பித்துப் பிற மதஸ்தர்களைத் தங்கள் மதத்திற்சேரச்செய்து சமயபரிபாலனஞ் செய்துவருகிறார்கள். இந்துக்களில் எண்ணிறந்தோர் பலரை இதுவரையில் அவர்கள் கிறிஸ்தவர்களாக்கியிருக்கிறார்கள். இவர்கண்மாத்திரமோ, பூர்வமகம்மதியர்கள் நம்மவர்கள் பலரைப்பிடித்து மொட்டையடித்துக் குரான் என்னுந் தங்கள் சமயநூலைக் கையிற்கொடுத்துத் தெருவில் தியங்கவிடுத்ததை அறியாதாரில்லையே, இவர்களே யன்றோ லப்பைகள் மாப்பிள்ளைமார் என்று பிரசித்தியடைந்திருக்கின்றார்கள்? இவ்வாறு புறச்சமயிகளது சமயபரிபாலனம் நடைபெற்று வருவதை நமமவர் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்துவந்தும் கொஞ்சமேனுஞ்சைவாபிமானமின்றிக் காலம் போக்குதல் மிகப்பரிதாப மென்க. "இயல்பென்றுந் திரியாமல் அயர்வறச்செந்நியில் வைத்து ராஜாங்கத்திலமர்ந்தது வைதிக சைவமழகிதந்தோ" என்று ஸ்ரீதாயுமான சுவாமிகள் கூறினாராகையால், இயல்பென்றுந் திரியா நிலைமையினது சைவசித்தாந்தமென்று வெளியாயது. இவைகளையெல்லாந் தெளிந்து நம்மனோர் சைவ பரிபாலனத்திற் சிறந்து இன்புறுமாறு திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சூ. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்.

(இன்னும் வரும்)

# உண்மை விளக்கம்

## எனும்

# சித்தாந்த தீபிகை.

1897ஆ செப்டம்பர்மீ 21உ செவ்வாய்க்கிழமை.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநமஃ

## எல்லாம் நான்கு.

(இது ஆங்கிலேய உண்மை விளக்க மொழிபெயர்ப்பு.)

ஏனை மூன்று, ஐந்து, எழுமுதலிய எண்களைப்போலக் கரந்த பொருண்மை யுடைத்தாகாது சொன்மாத்திரையானே பொருளை விளக்கும் ஆற்றலுடைய எண் நான்கேயாம். அது தன்னகத்தடக்கிய பொருள்களைத் தெளிவாய் விளக்குவதோடு, உலகமுழுவதுஉம் வழங்கப்பட்டுப் * பரவை வழக்குடையதாயும் உயர்ந்த நயமுடையதாயும் இருக்கிறது. மக்களுக்குள் இந்நான்கின் வழித்தாக வழங்கப்படும் பழமொழிகள் பலவுள ; "அவற்றுள் நால்வர் கூடினது சபை" "நால்வர்வாக்குத் தேவர் வாக்கு" "நால்வரோ தேவரோ" என்பனவாகவரும் பழமொழிகள் மக்களுடைய தத்துவ வுண்மைகளினும், சமயவுண்மைகளினும், உலகநடையினும் மிக்குவழங்கப்பட்டுத் தலைமையுறுவதனால், பொருட்பாகுபாடனைத்தும் அந்நான்கினுள் அடங்கு மென்பது பெறப்படுகின்றது. முதலாக, நான்குவேதங்களுமே அதற்குச்சான்றாம். வேதமென்பன மக்களெல்லாருடைய அறிவுநிகழ்ச்சிகளையும் ஒருங்கேயடக்கியுள்ளன வென்பதுஉம், அத்தகைய வேதத்துக்குப் புறம்பாகவும் அவற்றிலில்லாதனவுமாகக் காணப்படுவனவானஞானமில வென்பதுஉம் நம்மனோர்க்கெல்லாம் உடன்பாடாம். அவை † பண்டாரம் போல யாவர் சென்றெதை வேண்டினும் அவர் வேண்டிய அளவுக்கு அதையுதவும் நீர்மையவாம். எவ்வெவர் தன்மையுந் தம்வயிற்படுத்து அவ்வர் இயல்புக்கும் இயைபுடையவா யிருத்தலின், நோக்குவார் உருவம், வடிவம், பிண்டம் முதலியவற்றை இருந்தபடியே காட்டும் ஆடியை அவற்றிற்குவமையாகக் கூறுவர் ஆன்றோர். ஆதலான், உகலமெல்லாம் தனக்குரியனவாக அவ்வேதங்களை யேற்றுக்கொள்ளுகின்றது. மக்கள் எல்லாரையும் பகுக்குமிடத்து செல்வமும் இன்பமும்எய்தவிரும்புவோரும், நல்லொழுக்கமும் வீடும் எய்த விரும்புவொருமென இரண்டு பிரிவினிலடங்குவர். இவ்விரண்டினையுமடைய விரும்பும் இருதிறத்தோரும் அவற்றையடைதற்குக் கருவியாக எடுத்தாளவேண்டியன அறம், பொருள், இன்பம், வீடெனும் நான்குமேயாமென்று வேதம் உரைக்கும். இந்நான்கனையும் அடையாதவர்கள், பொன்னுக்கும் வெள்ளிக்கும். ஆடுமாடுகளுக்கும் மழைக்கும், உணவுக்கும் அருந்துதற்கும், மனைவிக்கும்மக்களுக்கும், சுகத்திற்கும் வெற்றிக்கும் பாணன் கரைந்து இரத்தலை இருக்குவேதம் விளங்க உரைக்கவும் அதையறியாதவராப என்பதற்கு ஐயமில்லை. நன்மையெய்தவிரும்பும் மக்களிற் பெரும்பாலார் கூறிய இந்நான்கினையும் எய்தவிரும்ப வேண்டியதே, ஏனெனில் எல்லாரும் ஞானிகளும் யோகிகளுமாக முடியாதாகலானென்க. ஆயினும், இந்நான்கு பொருளையும் அடைய முயலுங்கால், எல்லாம் தன்னலத்தைக் குறித்துச் செய்யாதபடிமாத்திரம் நினைந்துகொள்ளல்வேண்டும். இப்போதே, நன்னெறியிற் பழகிப்பிறர்க்கு நன்றிசெய்தற்கண் கருத்துடையராய் கடவுட்குவேள்வி வேட்டலும் எளியோர்க்கு இடுதலுஞ் செய்தல் இன்றியமையாதவாம். தீயராயினோரும், உலோபிகளும், மேங்குணமிலாரும் இந்நான்கு மக்கட் பேற்றையும் எய்தல் முடியாது. நம்மனோர்மறுபிறப்புண்டென நம்புவதுஉம் மக்களொழுக்கந் தவறுதிருத்தற்குப் பெருங் கருவியாதலையோர்க. இந்நான்கு மக்கட்பேற்றினுள்ளும் இறுதிக்கண்ணதாம் வீடுபேறு ஒன்றுமே உயர்ந்ததென்றும் ஏனை அறம் பொருள் இன்பம் என்பன கன்மகாண்டத்தினாற் கூறப்படும் வினைகளாயொழிதலின் அவைதாழ்ந்தவென்றும் ஞானகாண்ட விதிகளே விதந்துரைக்கும். ஞானகாண்டமும் நான்குபிரிவினது. ஒருவர் செல்வத்தாற்றுய்க்கும் இன்பத்தின் கண் உவர்ப்புற்று நன்மை தீமையிரண்டன்பாலும் ஒத்த அறிவெய்துங்கால், பொருளினுண்மையை அளந்தறியவும், அவற்றின் இயல்பறியவும், அவற்றையடைதற்குச் சாதனமறியவும், அங்ஙனமடைந்ததனால் உண்டாம் பயனறியவும் விரும்புவரன்றே. இவை, வேதாந்த விசாரத்தில் பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் எனப்பெயர் உறுவனவாம். சமயமுந்தத்துவமும் யாரானும் ஒன்றோடொன்று தலையிடுந் தன்மையவல்ல என்பதை நினைவு கூறவேண்டியது. ஆயினும், அதிகாரியின் இலக்கணம் இனிதுகூறப்பட்டிருக்கின்றது அவ்விலக்கணம் நன்னெறிச் சேறலாம். நம்மனோர், தர்க்கம் தத்துவம் முதலியவற்றைப் பயிலுதற்குமுன் தன்மசாத்திரங்களிற் பழகவிதிக்கப்படிருத்தலானும் அது விளங்கும். நிற்க.

நாம் எடுத்தவிடயத்தோடு தொடர்ந்து செல்லுங்கால் பிரமாண இயலின்கண் நான்கு பொருள் கூறினும் ; அவை, மாயையும், அந்தக்கரணமும், ஆன்மாவும், கடவுளுமாம். இவை நான்கும் மேலிருந்து ஒன்றுக்கொன்றுயர் வுடையவாய் அத்துவிதசம்பந்தமுடையனவாம். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கு கரணங்களிருக்கின்றன ; சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியமென நான்கவத்தையுள ; தூலம், சூக்குமம், காரணம், சுத்தம் என நான்கு சரீரங்களுள. இனிச்சாதனங்களில் தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்குள ; இவற்றையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ப. உலகமுழுதும் பரந்த சமயமெனப்படுவது இந்நான்கும் உடையனவாயிருக்க வேண்

* பரவை வழக்கு—உலகவழக்கு.

† பண்டாரம் உள்ள இடம்.

டும். இந்நான்குமே மக்கட்குதவப்பட்டன வென்பதூஉம், இறைவனுக்குத் தன்னை அடிமையாகவோ, பிள்ளையாகவோ, தோழனாகவோ பிரிவாகவோ தந்திறத்திற்கேற்ப அவர்கள் வழிபடுதலேயவை யென்பதூஉந் தெளியவிளங்கும். முதற்குருவான தக்ஷிணாமூர்த்தியடி நிழற்கீழிருந்தார் சனகர், சனற்குமார், சனந்தனர், சனாதனர் எனும் நால்வரேயாம். பிற்காலத்தில், அந்நான்கு மார்க்கங்களையுங்காட்ட எழுந்தருளியோர் ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள், ஸ்ரீமத் அப்பர்சுவாமிகள், ஸ்ரீமத் சுந்தரமூர்த்திசுவாமிகள், ஸ்ரீமத் மாணிக்கவாசகசுவாமிகள் எனும் நால்வரேயாம். இவர்கள் இம்மார்க்கங்களை விளக்கவந்தவர்களே யொழிய இவர்களே மார்க்கிகள் அல்லர். அவர்களே உண்மைஞானிகள், உயர்ந்த தத்துவவுணர்ச்சி ஸ்ரீமத் அப்பர்சுவாமிகள் தேவாரத்திலும், உயர்ந்த அன்புடைமை ஸ்ரீமத் மணிவாசகப் பெருமான் திருவாசகத்திலுங் காணப்படும். முன்கூறிய நான்கு மார்க்கத்தோரும் முறையே எய்துவன சாலோக சாமீப சாரூப சாயுச்சியபதவிகளாம். பொதுவாகப்பார்க்குமிடத்து இறைவனை மும்மூர்த்தியாகவும் சிறப்பாகப்பார்க்குமிடத்து மூவரினும் மேலான நாலாவதாகவும் பெறுதும். இந்நாலாம் பொருளை ஏனை மூன்றனொடு கூட்டி எண்ணற்க என வேதம்விதிக்கும். உலக வொழுக்கத்தில் நான்கு சாதிகளும், நான்காசாரங்களுமிருக்கின்றன.

*அதர்வசிகை உபநிடதம் பிரணவத்தை நான்காகப் பகுத்து ஒவ்வொன்றிற்கும் பலபொருள் கூறிவிரிக்கும். இக்கருத்துக்களையெல்லாம் ஒருங்குதிரட்டி "மகின்மதோத்திரம்" என்பதில் ஒருசெய்யுள் கூறுகின்றது. "இரகசியமுள்ளதாய் மாறுதலில்லாததாயிருக்கும் ஒன்று அ உ ம் என மூன்றுங்கூடியதாம், அம்மூன்றும் மூன்றுவேதத்தையும் விழிப்பு, கனவு துயில் என்னும் மூன்று நிலையையும், துறக்கம் நிரயம் பூமியையும், பிரமன், விண்டு, உருத்திரனையும் குறிக்கும். நாசிவழிப்பிறக்கும் ஓசையால் கடவுளாகிய உன்னைக் குறிக்கும். நீயோ எல்லாவற்றிற்கும் இறைவனாய் நான்காவதாயிருக்கிறாய், அம்மூன்றுங் கூடிய ஓம் ஒன்று கூடிய நின் ஒருருவத்தையே குறிக்கிறது" என்றது.

முற்றும்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## சிவஞான போதக்காப்புச் செய்யுள்.

---

முன் தொடர்ச்சி.

இவ்வளவு விசேடங் கொண்டமையினும், "பொல்லார்" என்றது கொடியவர் என்றுபொருள்பயத்தலால் அந்தப்பொல்லாரை நல்லார் வணங்குதலசங்கதமாமெனின். அதனை விடுக்குதும். பொல்லாரைப் பொல்லாரே தழுவவுரியார். நல்லாருரியவராகாரென்பது ஸர்வஸம்பிரதி பந்நமாயினும் ஈண்டுப் பொல்லாரென்றது பாசவீக்கத்துக்குக் கெடுதி செய்கின்றவரென்றறிவித்தபடியாம். உயிர்கள் கின்மாநுபவம்பண்ணித்தொலைக்குங்கால், "ஓடியசேரின் கீழுயிர்போன கன்றாலே நீடுபெரும்பாவமின்றே நீங்குமென-நாடித்தன் - மைந்தனையு மூர்ந்தோன வழக்கே வழக்காக-நஞ்சனைய சிந்தை நமன்றூதர்-வெஞ்சினத்தா-லல்லலுறத்துமருநரகங் கண்டுநிற்க, வல்லகருணைமறம் போற்றி" என்றுபகரிக்கும் பானது மறக்கருணையைச் சிந்தித்தே "பொல்லா" என்றுதுதித்தது மராபாயதென்க. அன்றியும், "நல்லகுருநாதனம்மைவருத்துவது கொல்லவல பொல்லாக்குணம்போக்க" என்றவநுபவவுரையுஞ் சாலப்புடைத்தாமாறறிக. மெலியவனொருவன் வலியதன் பகைவனுக்குச் சிக்கிடந்தான். அவனினும் வலியதன்னுடைத் தோழன் அந்தப் பகைவனைக் கொன்றான். பகைவனைக் கொன்றதனால் பொல்லானென்று தனதுதோழன் வெளிவரின், அதனால் வருங்குற்றம்யாது; இவ்வாறு வியவஸ்தைப்படவிசாரித்துணர்ந்த நல்லார் பொல்லாரினை மலர் புனைந்து வாழ்ந்திடற் கிசையார் கொல்லோ; கூர்ந்து யோசித்திடுக. அன்றியும், பொல்லார் என்பது விக்னேசுவரர் என்று பொருள்படும். விக்னேசுவரர்=விக்னத்துக்கு ஈசுவரர் எனப்பொருள் விரிப்பின், விக்னத்தைச் செய்கின்றவர் என்பதே அதனுண்மைக் கருத்தாம். ஒருகருமந்தொடங்குமிடத்துத் தம்மை முதற்கண் வழிபடாதோர்க்கு விக்கினம் அல்லது இடையூறு விளைத்தலால் விச்கினேசுவரர் அல்லது பொல்லார் என்ற திவ்யநாமங்கள் சிறக்கப்பெற்று எஞ்சென்னியிற் பொறித்த இணைமலருடைய தந்திமுகத்தெந்தையை வணங்கியுய்வாமென்க. விநாயகரை முதற்கண்வழிபடாதோர் முட்டுப்படுமாறு சிவபெருமானே வரந்தருள் புரிந்தனர். அதை நிலைப்பித்தல் வேண்டி அச்சிவபரஞ்சுடரே திரிபுர சங்கார காலத்து மூத்தபிள்ளையாரை வழிபட லொழிந்து இடர்ப்படலாயினரென்க. இதனை "முப்புரமெரிசெய்த வச்சிவனுறை ரத-மச்சுத்து பொடிசெய்த-வதிதீரன்" என்று திருபபுகழ் விரித்தார் தெரித்தவாறுணர்ந்திடுக. பின்னர், சிவனார் பிள்ளையாரை வழிபட்டு முப்புரம் பொடித்து முதன்மை யெய்தினரென்க. நிற்க,

கல்லானிழலார் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியென்று மேலே தெரித்தாமன்றே; இந்த மூர்த்தியே ஆதிகுருமூர்த்தி. இவரதுபெருமையைக் குருஞானவாசிட்டம் பின்வருமாறு கூறுகின்றது. "ஸ்ரீமதோதக்ஷிணாமூர்த்தேர்-வடமூலநிவாஸிநঃ, ஸர்வாசார்யஸ்யகோநஸ்ய-தாசார்யச்சகிமார்க்தக:. நித்யசுத்தவிபுத்தாத்ம-நிஷ்டஸ்ஸ கருணாநிதி:, விஷ்ண்வாதீநாம் குரு:ப்ரோக்தோ-நதுதஸ்யக்வசித்குரு" என்று தொடங்கித்திருவாலின் கீழமர்ந்திருக்கும் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தியே ஸர்வாசார்யஸ்வாமியாயிருக்க அவருக்கு வேறே ஆசாரியர்யாவர். எதற்காக அவருக்கு ஆசாரியர் வேண்டும்; கருணாநிதியும், நித்யசுத்த விபுத்தாத்ம நிஷ்டருமான அவர் விஷ்ணுமுதலான சகலருக்குங் குருவென்று சொல்லப்படுகின்றாரே தவிர அவருக்கு மேலே யொரு குருவிருப்பதாக வோரிடத்திலுஞ் சொல்லப்படவில்லை என்று பிரகாசப்படுத்தியதோடு "உபதேஷ்ட்ருபதம்ப்ராப்தோ-தக்ஷிணாமூர்த்திரீச்வர:, தாரதம்யேந விஷ்ண்வாதி-நநுஜக்ராஹதத்பதே" என்று முடித்து, தாமுபதே

சிக்கும்படியான ஆசாரியஸ்தானத்தையடைந்திருப்பவராகிய ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியானவர் விஷ்ணுவாதிகளைத் தாரதம்யமாக அந்த உபதேஷ்ட்ருஸ்தானத்தி லேற்பாடு செய்திருக்கிறார் என்று முடிவு கூறிய அர்த்த வைபவங்களைப் பரியாலோசிக்குங்கால் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியே ஆதிகுரு மூர்த்தியென்றும், ஸர்வாசார்ய ஸ்வாமியென்றும் இனிது வெளிப்படுகின்றது. உலகில் குருவாக வெளிப்படுகிறவர்களுக்கெல்லாம் இவருடைய அநுக்ரகமில்லாதபோது பயனில்லை. அஷ்டாதசவித்தைகளும் முதல் இவரிடத்திலிருந்தே பிறந்தன. அது பற்றியேவேதம் "ஈசாநஸ்ஸர்வவித்யாநாம்" என்று விதந்தோதியது அன்றியும், "அஸ்ருஜத்ஸர்வ சாஸ்த்ராணி - மஹாதேவோமஹேச்வர:" என்று பாரதம், சாந்திபர்வம் கூறியது. சிவபரஞ்சுடர் பரம்-அபரம் என்று ஞானங்களை வெளிப்படுத்துங்கால் குருவென்னுந் திவ்யாபிதானம் புனைந்திடற்குரியார். அந்தக்குருத்வப்பிரகாசம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தமாகிய சிவமூர்த்தத்தினிடத்திலேயே யினிது நிலைத்தலாலும், காலஸம்ஹாரமூர்த்தமாகிய சிவபரஞ்சுடரால் சிரஞ்சீவித்வமெய்திய ஸ்ரீமார்க்கண்டேயரை எதனால் நீர் சிரஞ்சீவியாயிருக்கின்றீரென்று ஒருகால் சௌனகாதிகள் கேட்கையில், எதனால் தக்ஷிணாமுகரான சிவபெருமான் அபரோக்ஷமாக ஸாக்ஷாத்காரப்படுவரோ, அதுவே பரமரஹஸ்யமான சிவதத்வஞ்ஞானமென்றறியத்தக்கது, அதனாலேயே நான் சிரஞ்சீவியாயிருந்து கொண்டு ஸ்வாநுபூதிமானா யிருக்கிறேனென்று விடையுரைத்தாரென்று "ப்ரஹ்மாவர்த்தே மஹாபாண்டீர வடமூலே" என்று தொடங்கி ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி யுபநிஷத்துக்கூறியதாலும் நமது சுவேதவனப்பிள்ளையார் கல்லானிழலாரைத் துதித்த நலமீதென வெளிப்பட்டது. சர்வசாஸ்திர வக்த்ருத்வமும், ஸர்வஞ்ஞானமுமுடைய எமது சுவாமி (தக்ஷிணாமூர்த்தி) குருபரம்பரைகளை யுண்டுபண்ணுங்கால் அவைபலபடியாயிருக்கும். ஈண்டு அவர் விநாயகரைத்தந்தாரென்பது குருவாகத்தந்தருளினாரென்பதையே குறித்தவாறாயிற்று. இவ்வாறு பொருள்கொள்ளுங்கால் "கல்லானிழலாரருளிய பொல்லார்" என்பதற்கு ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாவார் எமக்குக் குருவாகத்தந்தருளிய விக்னேசுவரர் என்று பொருள் கோடல் ஸர்வஸம்பிரதிபந்நமாம். விரிக்கிற் பெருகும். ஒருவாறு காப்புச்செய்யுள் முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவானைக்காவுலா.

---

### முன்பத்திரிகையின் பிழைதிருத்தல்.

68-ம் பக்கம் வலப்பாகம் 11-ம் வரியில்
தவளக்கனி யென்று திருத்துக.

அங்கம் பிரியா வகிலாண்ட நாயகியே
எங்குஞ் சிவரூப மேயன்றோ—செங்கையினால்

ஆத்திமுடி யோனைநீ யாமென்றே பூதலத்தில்
மூர்த்திகரித் தேத்த முறையெனப்—பூத்தடத்துத்

தீண்டுறையி னின்றமையா டன்கோவைக் கங்கையுடன்
கண்டுபிடிப் பால்போற் காபற்பங்—கொண்டு

திரட்டத் திரண்ட செழுநீர்த் திரளா
யருட்டக்க வெண்ணாவ லானோன்—திருக்கோயில்

சேர்ந்தருளி வீற்றிருக்குஞ் சீர்ச்சம்பு நாதனெனுங்
கூர்ந்த திருநாமங் கொண்டபிரான்—சார்ந்தவுமை

பேருவகைதோன்றப் பிரியா தனேகநாட்
சீருளம காபூசை செய்ததற்பின்—ஊரின்

திருநாமந் தானுமமு தீச்சுரமே யாகப்
பெருஞானம் போதித்த பெம்மான்—நிருதி

இசைதழைக்கப் பின்னிரக்கஞ் செய்யும் பெருமா
னிசைதவத்தா லெவ்விடநீண் டென்றுந்—தசையுடலம்

வீங்கவரம் பெற்ற விருத்தா சுரனுயிரை
வாங்கிய * வீராத்திக்கு வானவர்கோ—னேங்கித்தன்

நாமத் தடங்கண்டு நாளுந் தொழப்பழைய
வாமத் துறக்கம் வழங்கினேன்—காமச்

சமிர நிமிருந் தணலிதவன் செய்ய
நிமிரு மொளிகாட்டி நின்றோன்—கமலபதி

புட்கரணி கண்டுதவம் பூணப் பொலன்சோதி
மட்கலில் லாத வரந்தந்தோன்—உட்கும்

மதிதனது பொய்கை மருங்குதவஞ் செய்ய
அதிக வினைதீர்த்த வம்மான்—உததி

பருகி யுமிழ்முனிவன் பாரொக்க நிற்க
வருபொழுது பூசிக்க வாய்ந்தோன்—பிரமகிரி

நின்று குறுமுனிகைக் நீங்கநெடுங் காவேரி
யன்று தொடங்கி யலைக்கரத்து—மன்றல்

மலர்சிதறி வந்துதொழ வானதிமுன் னானை
பலகதியும் வந்து பணிய—நிலைநின்ற

காட்சிக் கதியருளிக் கண்டுகலந் தாடினர்தம்
நீட்சித் துயரறுமி னீரொன்றோன்—ஆட்சிமலைக்

கண்ணுதற்கு விண்ணோர்தங் காவின் மலர்பறித்து
நண்ணுதற்குப் போனகண நாதர்களி—லெண்ணும்

வனப்புட்ப வந்தனு மாலிய வானும்
இனப்புட்ப் மாறுடி யேந்துஞ்—சினத்தினால்

தம்மிற்றாஞ் சாபித்துச் சரீவரன் சம்புதலத்
தெம்மைப்பூ சித்துய்ம்மி னென்றுவிட—அம்முறையே

---

* வீரகத்தி—விகாரம்.

வெள்வளையிற் புட்பவந்தன் வெள்ளானை யாய்ப்பிறந்து
வள்ளலைவெண் ணாவல்வாய் வந்திறைஞ்சத்—தள்ளிய

மாலிய வானுமுரு மாறிச் சிலந்தியாய்க்
கோலியவெண் ணாவற் குடிகொண்டு—நூலிழைத்து

நாதன் சடாமுடிமே னாவற் சருகுதிரா
ஏதங் கெடப்பந்த ரிட்டுவரப்—போதகங்கண்

டங்கையாற் றள்ளிநீ ராட்டியருச் சித்தேகப்
பொங்கர்வா ழுஞ்சிலந்தி போதமுனிந்—திங்கொளித்து

யானிட்ட பந்த ரிதுவோ தவிர்ப்பதென
மானிட்டை வேழம் வருமளவுந்—தானெட்டி

வெய்த்திருந்தநஞ்சமென மீன்மிடற்றிற் றூண்டிலெனப்
பொய்த்திருந்து பூட்கை புகப்பொழு—தத்திறலின்

மிக்க களிறலறி வீழச் சிலந்தியுமங்
கொக்க விறப்ப வுமைபாகர்—அக்கணத்து

வாரு மெனவெழுப்பி வாரணத்துக் கப்போதுஞ்
சேருஞ் சிவலோகச் சீரருளி—ஊரின்பேர்

ஆனைக்கா வாக்கி யருளச் சிலந்தியடி
யேனைக்காப் பின்புநா னிப்புவிக்குக்—கோனுகி

நின்னடிமை செய்யவரு ணீயென்ன மாலியவான்
சொன்னபடி தில்லைவாய்த் தொல்லைமுடிச்—சென்னி

யினிய சுபதேவ னேந்தெழிற்சோ டோய்ந்த
வனிதையரிற் புட்பவதி வாழத்—தனிமகவாய்ப்

போதுவித்துச் செங்கணு னென்னும்பேர் பூண்பித்துச்
சோதி மணிமகுடஞ் சூட்டுவித்துப்—பாதவத்தாள்

தன்னினூற் பந்தரிட்ட தானத்திற் றுனுறையப்
பொன்னினற் கோயில் புதிதமைப்பித்—தின்னமொரு

தந்திபுகா வாயிலுந் தக்கநவ தீர்த்தமா
மந்த மடவா ரனவரதஞ்—சிந்தித்துச்

சேவிக்கு மெல்லைத் திருச்சா லகநவமு
மாவித் தகநிருத்த மண்டபமு—நாவற்

றருமுனிக்குஞ் சுற்றெலாந் தங்குகட வுட்குந்
திருவிருப்புந் தேருந் தெருவும்—அரணுந்

திருக்கோ புரநிரையுஞ் செய்யக்கண் டுய்ய
வருட்கோலி முத்தி யளித்தோன்—விருப்பஞ்

சுரந்த சிலந்திமுடி சூட்டும் பெருமான்
பெருந்திருவெண் ணாவற் பெருமான்-கருந்துளவோன்

சேதுவிற் செய்த சிவபூ சையிலகன்ற
பாதகத்துக் கொன்றுகால் பாருதி—போதுதலுந்

தன்னுமைத் தாற்ப்ரதிட்டை சந்நிதியிற் செய்திறைஞ்ச
வன்னுன் வினைதீர்த் தருளினேன்—இந்நகரில்

மண்ணுஞ் சிவலிங்க மென்றஞ்சி வாராமற்
பண்ணுந்து சொன்மூவர் பாங்காகக்—கண்ணுற்று

நின்றேத்து பூக்கொண்டோ னீடென்பு பன்மலராய்
நன்றேத்து ஞான நகரினேன்—அன்றரகன்

மங்கைக் களித்த மணியாரங் காவையுமை
பங்கற் கமையும் பரிக்கவென—நங்கை

பொருந்தா திருப்பவது பொன்னி நீ ராழத்
திருந்தார் தொழுகழற்காற் சென்னி—பரஞ்சுடரே

கொண்டருணீ யென்னப்பொற் கும்ப நீ ரோடுவரக்
கண்டருளித் தாமணிந்த காரணத்தா—லெண்டிசையோ

ராரம்பூண் டானென் றிழைக்கும்பேர் பூண்டான் விண்
ணாரம்பூண் டான்பன் னகம்பூண்டான்—பாரிற்

பணிவார் பிறப்பறுக்கும் பாதத்தான் வெண்ணி
றணிவா னனைத்துலகை யாள்வா—னிணையில்லான்

தேவர் குலக்கொழுந்தா திப்பெருஞ் செல்வனியல்
நாவலன் றூது நடைப்பெருமான்—சேவுடையான்

சோமநா தப்பெருமான் சோதிமறை தேடரியான்
காமனு கங்கடிந்த கண்ணுதலான்—சேமமாந்

திக்காடை யாஞ்சந்த்ர சேகரன் தில்லையுளா
டிக்காட் டியபின் னிணையழகன்—அக்கு

மணியி னழகன் வசந்த னழகன்
அணியும் பணியி னழகன்— * துணராஞ்

சரனழகுக் காகந் தழலாகப் பார்த்த
அரனழகுக் காருமொவ் வாதான்—பரமன்

சிறக்குந் திருச்சா லகத்தொளிர் தேவேசன்
கறைக்கண்ட னென் னனைக் கன்று— † நிறக்கின்ற

மாபெருவெண் ணாவல் வடநா வலிற்கிளரக்
கோபுர மேருநெடுங் குன்றேய்ப்பத்—தீபவொளிச்

சீரா லயமுந் திருநீறிட் டான்மதிலு
மூரான துங்கயிலை யொப்பாகப்—பேராது

* துணராஞ் சரன் அழகு உமக்கு ஆகம் தழலாகப்பார்த்த என்றுபிரித்து காமன் அழகு கெட்டு உடல்வேக விழித்தருளிய வென்க.

† 'நிறக்கின்ற' என்பது முதல் 'மழநாடன்' என்னுந் துணையு மொருதொடர். இதிற் காட்டிய வுவமை மிகவு மருமையானது.

தன்னிருபாற் பொன்கொழித்துத் தாவுங்கனதரங்கப்
பொன்னிநதி சம்புநதி போலோங்கத்—தன்னகர்கு
ழிப்பதியு மிந்நாரு மிந்த்ரபதி முன்னுன
வப்பதியு மச்சுரரு மாமென்ன—மெய்ப்புலவோர்
மேதகு வித்யா தாரின் மிகவிளங்க்
மாத ரம்பையடரில் வாழ்வுபெறப்—பாதவங்க
ளண்டர்தரு விற்ழுேன்றி யாடகத் தெய்வீக
மண்டலமொப் பான மழநாடன்—திண்டிறலான்

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

## மக்கள் யாக்கை நிலைமை.

---

**வினு.**—உயிருள்ள பொருள்களுள் மக்கட்கு மாத்திரம் உருவம் மேல்நோக்கியதாயிருக்க வேண்டிய தென்னை?

**விடை.**—1. அவ்வாறிருப்பது இறைவனுக்கு விருப்பமுள்ளதாயிருக்கலாம். என்னும் இவ்விடையினுல் வினுக்களனைத்தும் எளிதில் விடுக்கப்படுவனவாய் இருத்தலின், இஃது இயைபுடைத்தாயினும், இதனினும் வலிய விடை கூறுதல் இன்றியமையாதது; ஆதலால், 2. உலகில் பெரும்பாலும் ஒருவினைசெய்வோர் அவ்வினையை முதன்முறை திறமற்றதாகவும் அதன் பின்னர்த் திறமுடையதாகவும் செய்தல் கண்கூடாயறிதுமன்றே. அதுபோல இறைவனும் முதலிற் படைத்த விலங்கினத்திற்குக் கீழ் நோக்கும் உருவையும், அஃதொழிந்த மக்களினத்திற்கு மேல்நோச்கும் உருவையும் அமைத் தருளினன் என்றறிக. விருக இனம் மறிந்த உரு வுடையவா யிருத்தலின் 'விலங்கு' எனப் பெயர் போந்தது மறிக. 3. இவ்வாறன்றி, உலக வின்பங்களையெல்லாம் நிலைபேறிலவென வெனக் கழித்து, நிலையுள்ள வீட்டின்பத்தை யெய்தற்குக் கருவியாயமைவது மக்கட் பிறப்பேயாதலினுலும், அத்தகைய மேலான வின்பத்தை அடைதற்கு மேல் நோக்கிய பார்வையே வேண்டுதலினுலும் அப்பிறப்புடைய உயிர்கட்கு மேல்நோக்கிய உருவையும், இவ்வாறன்றி அறியாமையின் வயப்பட்டு மேற் செல்லா அறிவுடைய விலங்கினத்திற்கு இவை இத்தன்மையவாதலை விளக்குதற் பொருட்டுக் கீழ்நோக்கு உருவையும் இறைவன் படைத்தா னென்று கோடலுமாம். 4. அறிவுடைய மக்கள் விண்ணவரையொத்து இறைவன் அடிசேரும் பருவமெய்தலின் அங்ஙனம் மேல்நோக்கும் உருவைப்படைத்தார் என்றலுமாம். 5. மக்கள் யாக்கை உலகவமைப்பிலக்கணத்தை உடையவாயிருத்தலின் அவ்வாக்கையையுடைய மக்கள் பிற உயிர்களை ஏவ, அவ்வேவலுக்கு அவ்வுயிர்களும் உள்ளாகின்றன. 6. ஒவ்வொரு பொருட்கும் அவற்றின் இயக்கத்திற்கு யேற்க உருவம் வடிவம் முதலியவை அமைந்திருக்கின்றன. விசும்பிற்கு வட்டவடிவும், தீப்பிழம்பிற்குக் கூம்பிய உருவும், அமைந்திருப்பதுபோல மக்களும் இறைவனுடைய வியத்தகு தொழில்களை யெல்லாம் அறிந்து உய்யுமாறு அவர்களுக்குச் செவ்விய உருவம் அமைந்ததென்று அறிக.

**வினு.**—மக்களின் தலைகள் மயிருள்ளனவா யிருத்தலென்னை?

**விடை.**—மக்கட்கு அழகுசெய்வன குஞ்சியேயாம். இக்குஞ்சி அங்ஙனம் அழகு செய்வதுஉமன்றி தூய்மை செய்யப்படும் மூளையின் கழிவுகளாய் அம்மூளைக்குப் புறத்திலுள்ள தசையின் நுண்ணிய துளைகளின் வழியாக வெளிவந்து காய்ந்து கரிய நிறத்தொடு தோன்றுகின்றது. மக்கள் யாக்கையிலுள்ள உலர்ந்த உறுப்புகள் யாவற்றினும் மயிரொன்றே மிகவுமுலர்ந்ததென்பது என்பை யுண்ணும் நாய்க்கும், கல்லையுண்ணும் தாதுணம் பறவைக்கும் முறையே அவ்வென்பும், கல்லும் செரிப்பனவாக, மயிர் இறகு முதலியன செரிக்காமையின்கண் வைத்துக் கண்டுகொள்க. அங்ஙனஞ் செரிக்காமையென்னை வெனின்? அவற்றின் அகட்டில் உள்ளதீ அம்மயிரை அழிக்குமாற்றலிலாவாறு, அவை யுலர்ந்திருத்தலின் என்க. 2. மூளை மூன்று வழியில் தூய்மை செய்யப்படுகின்றது. அவை கண்ணிற் பீளையாகவும் நீராகவும், மூக்கில் சளியாகவும், தலையில் மயிராகவுமாம்.

**வினு.**—ஏனைய உயிர்வருக்கங்களினும் மக்களுக்கு மாத்திரம் நீண்ட தலைமயிர் இருத்த லென்னை?

**விடை.**—மற்றைய உயிர்வருக்கங்களினும் மக்களுக்குமெய்ய மூளையிருத்தலால் அதனினின்றும் மயிர் மூளை தோன்றி நீண்ட மயிராக மாறுகின்றது. 2. அதுவல்லாமலும், மக்களுக்குள்ள மூளைக்கழிவுகள் கொழுமையுள்ளனவா யிருத்தலின் அவை யெளிதில் உலர்தலின்றி நீண்ட மயிர்வளர்தற்கு உதவியாயிருக்கின்றது. விலங்குக்களுக்குள்ள மூளைக் கழிவுகள் எளிதில் உலர்தற்றன்மையுடையவாயிருத்தலின் அவற்றின் மயிர் நீட்சியாக வளர்கின்றில.

**வினு.**—ஏனைய உயிர்வருக்கங்களின் தோலில்மயிர் ஆழ்ந்து வேரூன்ருதனவாகவும், மக்களின் தோலில் மாத்திரம் அது ஆழ்ந்து வேரோடுதல் என்னை?

**விடை.**—மக்கள் ஆக்கையில் அது வளர்தற்கேற்ற பொருள் மிகுதியாயிருத்தலின் அவ்வாக்கையில் ஆழ்ந்து வேரோடி வளர்கின்றது. இதுபற்றியே மற்ற உயிர்களின் தோலின் றன்மைக்கேற்ப மயிர் வளர்ச்சியும் அமைந்திருக்கிறது. மக்கள் ஆக்கையில் வடு-அல்லது தழும்பினுல் அன்றி மயிரின் தன்மை வேறுபடுதலிலதென்பது கண்கூடா யறியப்படும்.

**வினு.**—ஆண் பிள்ளைகளினும் பெண் பிள்ளைகளுக்கு மயிர் நிகளமாயிருத்த லென்னை?

**விடை.**—ஆண் மக்களினும் பெண் பிள்ளைகள் தண்ணிய யாக்கை உடையராயிருத்தலினுலும், கோழைப்பொருள் மிகுதியுடையராயிருத்தலினுலும், மயிர்வளர்ச்சிக்கு அது-(கோழை) கருவியாயிருத்தலானும் அவர்களுக்கு மயிர் நீண்டுவளர்கின்றது. அதன்றியும் இக்கோழைப்பொருள் மகளிர்க்கு ஆண்மக்களினும் அதிகமாக அவர்கள் உள்ளுறுப்புக்களில் பெரும்பாலும் மாதவிடாய்க்காலங்களில் சுரந்து மேலேறி மயிர் வளர்தற்குதவி செய்கின்றது. 2. மகளிர்க்கு மோவாய் மயிர் இல்லாமையால் அது வளர்தற்குரிய கோழைப்பொருளும் தலைமயிர் வளருமிடத்திற்சென்று அதுவளர்தற்குதவியாகின்றது.

இதில்வந்த அருஞ் சொற்களுக்குப் பொருள்.

மக்கள் - மனுஷர். யாக்கை - தேகம். உயிருள்ளபொருள் - பிராணி. இறைவன் - கடவுள். இயைபு - சம்பந்தம். விடை - சமாதானம். இன்றியமையாமை - அவசியம். பெரும்பாலும் - அதிகமாக. வினை - தொழில். முறை - தரம். கண்கூடு - பிரத்தியட்சம். அறிது மன்றே - அறிகின்றே மல்லவா. விலங்கு - மிருகம். விருகம் - மிருகம். மறிந்த - குறுக்கான. போந்தது - வந்தது. வீட்டின்பம் - மோட்சானந்தம். எய்தல் - அடைதல். கருவி - காரணம். வயப்பட்டு - வசப்பட்டு. கோடல் - கொள்ளுதல். விண்ணவர் - தேவர். அங்ஙனம் - அப்படி. இயக்கம் - அசைவு. விசும்பு - ஆகாயம். தீப்பிழம்பு - நெருப்புச்சுடர். வியத்தகு - ஆச்சரியப்படத்தக்க. உய்தல் - பிழைத்தல். செவ்விய - நேரான. குஞ்சி - ஆண்மயிர். தூய்மை - பரிசுத்தம். தசை - சதை. என்பு - எலும்பு. அகடு - உள் வயிறு. ஏனைய - மற்றைய. நொய்ய - மிருதுவான. தண்ணிய - குளிர்ந்த.

வேலாயுத தேசிகர்,
திருக்கழுக்குன்றம்.

## குறிப்புகள்.

மதுரைத் தேவஸ்தானத்தில் மானேஜர் வேலை காலியாயிருப்பதை அவ்விடத்தில் ஐகோர்ட் ப்ளீடர் ம-ா-ா-ஸ்ரீ நாகலிங்கம் பிள்ளையவர்கள் அங்கீகரிப்பது உசிதமென்று அநேகரபிப்பிராயப் படுகிறார்கள். அவர் சிவநேச மிகுந்தவராயும், நல்லொழுக்கத்திற் சிறந்தவராயும், யாவரும் விரும்பத்தக்க விதமுடையவராயும் விளங்கலால் அவரை யேற்படுத்துவது சிவதருமங்களொழுங்காக நடைபெறுதற்கு உபகாரமாயிருக்கும். இதைக்கோயில் கமிட்டி மெம்பர்கள் ஆலோசித்து யுக்தம்போற் செய்வார்களென்று பிரார்த்தித்துத் திருவருளைச் சிந்திக்கின்றோம்.—சென்னை சைவசித்தாந்த சபையார்.

* * * *

தத்துவ சாத்திரக்கல்வி.—ஸ்ரீ கோவிந்தசார்லு அவர்களால் இவ்விஷயத்தைக் குறித்துப் பிரசுரிக்கப்பட்ட துண்டுப் பத்திரிகையைக் களிப்பொடு படித்தோம். அதில் அவர் இவ்விஷயத்தை மேனாட்டாராலும் நம்மனோராலும் தியாசாபிக் சங்கத்தாராலும் அறியப்பட்டபடி தருக்கிக்க விரும்புகிறார். அப்பத்திரிகை முற்காலத்துப் அபிப்பிராயம் முதல் தற்காலத்திய அபிப்பிராயம் வரையில் தொடர்ந்து பேசுகின்றது. இவ்விஷயம் பெரும் புத்தகங்களாக எழுதப்படும் விரிவுடையதாயினும் இத்துண்டுப் பத்திரிகை அதைச்சுருக்கித் தெளிவாகவும் கவரத்தக்கதாகவும் விளக்குகின்றது. அவர் இதுபோல் இன்னும் பல விஷயங்கள் எழுதுவாரென்று எதிர் பார்க்கிறோம்.

* * * *

பாணினி முனிவர் அஷ்டத்தியாயி, ۸-வது பிரிவு*—சிவ சங்கிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் ஒப்பில்லாத இவ்வரிய நூலை ஆங்கிலத்தில் மிகப் பிரயாசையோடும் பணச்செலவோடும் மொழிபெயர்த்து வருகிறார். வேத உபநிடதங்களைக் கற்க விரும்பும் மாணவகர் அனைவருக்கும் இப்புத்தகம் மிகவும் இன்றியமையாதது. இந்நூலைப்பற்றி மாக்ஸ் முல்லர்பண்டிதர் "எந்தப்பாடையிலும் பாணினி முனிவரது இலக்கணநூல்கள் எட்டக்கும் ஒப்புடையனவில்லை" என்றுரைத்துத் தான் வடமொழிக்கல்வி பயிலுங்கால் இத்தகைய அரிய மொழிபெயர்ப்பு நூல் கிடைக்காமைக்காக மிகவும் வருந்துகிறதாகவும் விளம்பினர். இது, எட்டாய்மடித்த உயர்ந்த கடிதத்தினுல் 2000-பக்கங்களுடைய எட்டுப் புத்தகங்களாக முடிவுபெறும்; இதில் ஐந்து புத்தகங்கள் ஏற்கனவே வெளிப்பட்டுவிட்டன. சந்தா முன்பணமாக ரூபா 20. ஒரு புத்தகத்திற்கு ரூபா 3. இவ்வரிய வேலையை மேற்கொண்டவரை நமதரசர்களும், ஜமீன்தாரர்களும், வடமொழிக் கல்வியின்பால் அபிமானமுடையோரும் ஊக்கமுறுத்தற் பாலர்.

* பெனுரிஸ் கண்டோன்மெண்ட், பாணினி ஆபீஸில் வடமேற்கு மாகாண முனிசிப்தார் ஷ்ரீஷ் சந்தர்வாசு பி-ஏ. அவர்களால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது.

* * * *

குரோமோபதி:—சென்னைச் சத்துவசாதனிப் பத்திராதிபர் T. A. சுவாமிநாதையரால் வியாதிகளைப் புதுமுறையாக நீக்கும் விஷயத்தைப் போதிக்கும் ஆங்கிலநூலைத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இதில் 'கேஸ்' என்ற ஆங்கிலவார்த்தை எளிதில் நீக்கக் கூடியதாகவும் பலவிடத்தும் எழுதப்பட்டிருந்தாலும் இந்நூல் சாதாரணமான வெள்ளைத் தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதை மொழிபெயர்த்தவர் கருத்துலாபமடைதற்கல்லாது, (நாம் அதை முழுவதும் நம்பாவிடினும்) தான் வியாதியால் வீருந்தும் மக்களுக்கு நன்மை செய்யுமென்பது அவரது நம்பிக்கை. இந்நூல் பல சுதேச வைத்தியர் கைகளில் இருப்பதும், அவர்களில் ஒருவர் இதில் கூறப்பட்டன சில விஷயங்களில் நன்மையாகவே காணப்படுகின்றன வென்பதுங் கண்டோம். இதன்விலை அணா 8.

* * * *

திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையின் பன்னிரண்டாவது வருஷ மகோற்சவத்தைப் பற்றிய முழு அறிவிக்கை வரப்பெற்றோம். நமது சைவ சமயத்தினும் அதனுற் கூறப்படும் தத்துவ சாத்திர வுணர்ச்சியினும் நம்மனோர் பெருக்கமுற்று வருதற்குப் பெருமுயற்சி செய்து வருகிறார்கள். சபை அடியார்கள் அனைவரும் மலைக்கோட்டை நூறுகான்மண்டபத்தில் இளமதிய முகிழ்த்தசடைப் பெருமானை வழுத்துதற்கும், தத்துவக்கல்வி பயிறற்கும், பிரசங்கித்தற்கும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை ஒருங்கு குழுமுவார்கள். அவர்கட்கு விஷயங்களைத் தெரிவிக்கவும் பிரசங்கிக்கவும் ஒரு பண்டிதர் இருக்கிறார் அவர்கள் ஒரு புத்தகலைபிரேரி வைத்திருக்கிறார்கள். சைவசமயாசாரியர்கள் திருநட்சத்திரங்களிலும் அறுபத்துமூன்று நாயன்மார் திருநாட்களிலும் கடவுட் பூசனை செய்வதோடு ஏழைகட்கு உணவுங் கொடுக்கிறார்கள். அவர்கள் வைத்திருக்கும் வரவு செலவுக் கணக்கு முறைகளும் மிக நன்றாயிருக்கின்றன. சேமநிதி யாக்க ரூபா 200 வைத்திருக்கிறார்கள். இதுவல்லாமலும், ஞாயிற்றுக்கிழமைதோறும் ஒரு சமயப்பள்ளிக்கூடம் நடத்திவருகிறார்கள். அதன் விஷயத்தை நோக்குங்கால் அது நன்றாய் நடத்தப்படுகிறதென்று தோன்றுகிறது. முதல் வகுப்பில் 43-மாணவகரும், இரண்டாவது வகுப்பில் 58-மாணவகரும், மூன்றாவதில் 35 மாணவகரும் பிரதமமானதும் 4-வது மானவகுப்பில் 12-மாணவகருங் கல்வி பயில்கின்றார்கள். வருஷமகோற்சவத்தின் முன் சிறுவரும் சிறுமிகளும் பரிசோதிக்கப்பட்டு வெகுமதி செய்யப்படுகிறார்கள். இதில் 8-சிறுமிகள் பரிசோதனையில் தேறினர்கள். சைவசமாஜத்தை நிலைபெறுத்தினவரான ஸ்ரீமத் குருசாமி சர்மா அவர்களது தேக வியோகத்தைப் பற்றியும், இச்சபைக்கு அபிமானியாகிய ஸ்ரீமத் P. சுந்தரம்பிள்ளை எம். ஏ., அவர்களுடைய தேகவியோகத்தைப் பற்றியும் மிக விசனிக்கிறார்கள். சபையாரது அபிவிர்த்தியைக் குறித்து நாம் அவர்கள் நீடூழி வாழ்கவென்று திருவருளைச்சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுருப்யோநமः

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.


சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஆம் மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897ஆம் அக்டோபர்மீ 21உ {இலக்கம்-ரு


## கைவல்யோபநிஷத திராவிட இரத்னப் பிரகாசிகை.

(முன் தொடர்ச்சி.)

VI.

(இருதய புண்டரீகத்தின் வழிபடப் பட்டவர் துரிய காரணராகிய உமாசமேத சிவபிரானேயாக, பிரம விஷ்ணு ருத்திரர் முதலாயினோரைக் காரிய (விபு) மூர்த்திகளாக அறியவேண்டு மென்பது)

சப்ரம்மாஸசிவ: சேந்த்ர: சோக்ஷர: பரம: ஸ்வராட் |
ஸஏவவிஷ்ணு: சப்ராண: ஸகாலோக்நி: சசந்த்ரமா: |
ஸஏவசர்வம் யத்பூதம் யச்சபவ்யம் ஸநாதநம் |
ஞாத்வாதம்ம்ருத்யுமத்யேதிநாந்ய: பந்தாவிமுக்தயே

(இதன்பொருள்) (கசு. கஎ) அவர் பிரமா, அவர் உருத்திரர் (சிவன்) அவர் இந்திரன், அவர் அழிவற்றவர், அவர் பரமர், அவர் சுவராட்டு, அவரே விஷ்ணு, அவர் பிராணன், அவர் காலர், அவர் அக்கினி, அவர் சந்திரன்,

(கஅ. ககூ) அவரே இருந்ததும் இருப்பதுமாகிய எல்லாமானவர் என்றும் உள்ளவர், அவரை இவ்வாறு அறிந்து (அதனால்) பாசத்தைக் கடக்கின்றவனாகின்றான் முத்திக்கு வேறு வழியில்லை.

(திராவிட இரத்நப் பிரகாசிகை.)

31. அவர் பிரமா அவர் சிவன் என்றற் றொடக்கத்தன— உமாசகாயத்துவம் திரிலோசனத்துவ முதலாயின காரணமூர்த்தியாகிய துரிய சதாசிவர்க்கும் உருத்திர மூர்த்திக்கும் உண்மையாதல் முன்னரே நிரூபித்திருக்கின்றேம். இதனால் துரியமூர்த்தியை அவர் காரிய விபூதிமூர்த்திகளாகிய பிரம விஷ்ணு உருத்திரர் முதலாயினோரோடு சமப்படுத்தல் ஓர்காலும் கூடாதென்ற கருத்தினாலே கைவல்லியோபநிஷதமானது அவர் பிரமா, அவர் உருத்திரர் என்றற்றொடக்கத்தனவாகக் காரிய மூர்த்திகளை விதந்து, உபாசகர்களுக்கு உணர்த்தியதாமென்க. இவ்வுண்மைகொண்டே சூதசங்கிதை,

ப்ரதாநயேந பரந்தத்வம் மூர்த்திதவாரேண யோகிபி: |
த்யேயம் முமுட்சுபிர் நித்யம் க்ருதயாம் போஜ மத்யமே |
கார்யபூதா கரிர்ப்ரம்மப்ரமுகா: ஸர்வதேவதா: | அப்ரதாநதயாஸ்ததா | ஸர்வைச்வர்யேண ஸம்பந்நஸ்ஸர்வேச்வர: ஸர்வகாரணம் | சம்புரேவ ஸதாசம்பூர்ந விஷ்ணுர் நப்ராஜாபதி: | ஸர்வமந்யத்பரித்யஜ்ய தைவதம் பரமேச்வராத் | சிகாக்யதர்வணீசாத்வீ சர்வ வேதோத்தமோத்தம: | அஸ்மிந்நர்த்தே சமாப்தாஸா ச்ருதயச்சாபராஅபி ||

இதயாம் போசமத்தியிலே முமுட்சுக்களாகிய யோகிகளால் தியானிக்கப்படுவர் பாதத்துவத்துட்பட்ட சிவபிரா

னே என்றும், அரி பிரமா முதலாயினோர் காரிய (விபூதி) மூர்த்திகளாம் என்றும், இந்தப் பிரமா முதலாயினோர் பிரதானராகத் தியானிக்கப்படுபவ ரல்லரென்றும், சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், சர்வகாரணருமாயுள்ளவர் சம்புவாகிய உமாசமேத சிவபிரானே என்றும், மற்றை விஷ்ணு முதலாயினோர் அங்ஙனம் அல்லர் என்றும், ஆதலால் மற்றியாரையும் விடுத்துச் சிவன் ஒருவரே பிரதானராகத் தியானிக்கற்பாலர் என்றும், இவ்வாறு சர்வவேதங்களினும் உத்தமமாகிய அதர்வசிகைசொல்லி முற்றியது என்றும், இந்தச் சுருதி அர்த்தத்திலே மற்றைச் (சாந்தோக்கியம் பிருகதாரணியம் தைத்திரீயம் கைவல்லியம் முண்டக முதலிய முக்கிய) சுருதிப் பொருள்களும் முற்றியவாம் என்றுங்கூறி, பின்னரும் அச்சூதசங்கிதை இந்தச் சுருதிமுடிவை உரைத்த அதர்வசிகையின் மாட்சியைக் கூறப்புகுந்து,

......அதர்வணோத்ரும: ஸ்கந்த: சாகா ஸ்த்ரயோவேதா: பர்ண: ச்ருதிபுராணகா அங்காநி சாகாவர்ணம் தர்காஸ்தஸ்ஸ்யவரக்ஷகா: | புஷ்பம் சிவபரிஞாநம் பலம் முக்தி பராமதா | பகுநோக்தேந கிம் விப்ரா: சிவோத்யேய: சிவங்கர: | ஸர்வமந்யத் பரித்யஜ்ய தைவதம் புக்தி முக்தயே ||

அதர்வண வேதம் விருக்ஷமாக, இருக்கு யசுர்சாமம் என்னும் மூன்று வேதங்கள் மூன்று பெருஞ் சாகைகளாக, ஸ்மிருதி புராணங்கள் இலைகளாக, ஷடங்கங்கள் சிறுசாகைகளாக, வர்ணமுந் தர்க்கமும் காவலாக, சிவஞானமே புஷ்பம் என்றும், பர மாமிதமுத்தியே பழம் என்றும், அநேகஞ்சொல்லியென், மற்றியாரையும் விடுத்துப் போகமோக்ஷத்தின் பொருட்டுச் சங்கராகிய சிவன் ஒருவரே தியானிக்கற்பாலர் என்றுங் கூறிற்று. பராசரபுராணமும் கைவல்லியப் பொருளைக் கொண்டு முடிந்துநின்ற அதர்வசிகையின் பாலராய்ப் பேசப்பட்ட சிவபிரானையுற்று,

ஸர்வமந்யத் பரித்யஜ்ய சிவ ஏவசிவங்கர: | த்யே இத்யாஹபரமாச்ருதிரதர்வணிகலு | அதகிம் பகு நோக்தேநசிவ: சாம்ப: சநாதந: | சாட்சாந்நிஷ்டாநி சாஸ்த்ராணும் நாபரஸ்ஸத்யமீரிதம் ||

எல்லாவற்றையும் விடுத்துச் சங்கராகிய சிவன் ஒருவரோ தியானிக் கற்பாலர் என்று பரம சுருதியாம் அதர்வசிகை செப்பிற்று. அதிகஞ் சொல்லியென்! சாஸ்திரங்களுக்கு நேரே முடிவாய் நின்றவர்பராசத்திசமேதராகிய அநாதிசிவமேயாம், மற்றொருவரன்று; இது சத்தியமாம் என்று கூறிற்று. மேலே கூறியவாற்றல் பிரமவிஷ்ணு முதலாயினோர் தகரோபாசனைத்துரிய சாம்ப மூர்த்தியுடைய காரிய விபூதி மூர்த்திகளாம்என்பது பெறப்பட்டது. இக்கருத்துக்கொண்டே சிவதத்துவவிவேகமுடையார்,

சிவம் நீலக்ரீவம் சிகரி வரகந்யாசஹசரம் | த்ரிணேத்ரம் த்வாம் த்யேயம் கிரிசதகராம் போஜ குகரோ | விதாயைகம்சாகம் தீருகிண கமலாவல்லபகுணாஃ | விபூதிங் கைவல்ய ச்ருதிரபி சமாக்யாதி பவதஃ|| என்று கூற, சிவஞான சுவாமிகள்,

மலைமகடு ணைவன்முக்கணனீல மணிமிடற்ற வனென வானோர், திலகனேயுன்னைத் தகரமாங் குகையுட் டியானஞ் செய்திடு முறைசெப்பி, யலரவன் முகுந்த் னீசனொடைவயுமையநின் விபூதியென் றுரைக்கு, மலவிரு டுமித்துச் சிவச்சுடர் விளக்க வந்த கைவல்லியமறையே.

என்றிவ்வாறு அச்சுலோகத்தை மொழி பெயர்த்தார்கள். மாணிக்கவாசக சுவாமிகளும் காரணதுரிய மூர்த்தியாகிய உமாசமேத பரமேசுவரரையும் காரிய மூர்த்தியாகிய உருத்திர மூர்த்தியையும் சமப்படுத்தல் கூடாதாம் என்ற கருத்தினாலன்றோ "மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணுண்டு மண்மேற் றேவரென் றேயிறுமாந் தென்னபாவ ந்திரிதவரோ." என்று அருளிச்செய்தார். பிரம விஷ்ணு ருத்திரேந்திராதியரை உமாசமேத பரமேசுவரருடைய விபூதியராம் என்று "சர்வத்ர பிரசித்தி அதிகரணத்திலே சைவ பாஷ்யகாரர் உபதேசித்திருக்கின்றார்.

---

## VII.

(உமாசமேதராகிய சிவபிரானே பசுபாசங்களாகிய சேதனசேதனப் பிரபஞ்சங்களை யெல்லாம் அகத்தும் புறத்துமாகித் தாங்கி நிற்கு முண்மையை அறிந்து, அதனாற் பாசநீக்குதற்குரிய மற்றோர் உபாயம் உபதேசித்தமை)

சர்வ பூதஸ்தமாத்மாநம் சர்வபூதாநி சாத்மநி | (௨0)
சம்பச் யந் ப்ரம்ம பரமம் யாதி நாந்யேந சேதுநா||

(இதன்பொருள்) (௨0. ௨க) ப்ரமானமாவாகிய சிவத்தை எல்லாப் பூதங்களின் அகத்தும், எல்லாப்பூதங்களையும் பரமான்மாவாகிய சிவத்திலும் இருப்பதாகக் கண்டு பரமசிவத்தை அடைகின்றான்; மற்றோர் ஏதுவினாலன்று.

(திராவிட இரத்நப்பிரகாசிகை)

(32) ஆன்மா—(சேதனசேதனப் பிரபஞ்சமாகிய) விசுவத்தின் அறிவு தொழில்களை முழுமையும் அறிந்து, முழுமையும் செய்யும் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த் திருத்துவம் என்னும் சைதன்னியத்தை எது இயல்பாகவுடையதோ, அதுவே (பரம) ஆன்மா (பதி) என்ற கருத்தினால்

சைதந் யமாத் மா |

என்று சிவசூத்திரம் பிறந்தது என்று கொண்டு, கைலாச சங்கிதை

சைதந்யமிதி விச் வஸ்ய சர்வஞாந கரியாத்மகம் | ஸ்வாதந்த்ரியம் தத்ஸ்வவாவோய: ஸ ஆத் மேதி பரிகீர்த்தித: | சைதந்யமாத் மேதிமுநே சிவசூத்ரம் ப்ரவர்த்திதம்||

என்று கூறிற்று. பின்னரும் பிரயத்தின மொன்றுமின்றி எவற்றையும் (இருந்த இருந்தவாறு) அறிதலால், சிவனார் சர்வஞ்ஞர் எனப்படுவார் என்றும், இந்தச் சர்வஞ்ஞதை முதலிய குணங்களோடு எக்காலமும் கூடியிருத்தலினாலும், தம்மையொழிந்து மற்றொருவருக்கு (நிரவதியாகிய) அக்குணங்கள் இல்லாமையாலும், சிவபிரான் "பரமாத்மா" எனப்படுவர் என்றுங் கொண்ட கருத்தினால், வாயுசங்கிதை

---

IX

(மாண்டூக்கியோபநிஷதம் நிருசிம் மோத்தரதாப நியுபநிஷதம் என்பவற்றின் நெறியானே அம்பிகாச மேதராகிய சிவபிரானோடு ஆன்மா ஐக்கியமாமுறை யும் அதனுலெய்தும் பாசநீக்க பலமும் உபதேசி த்தமை)

ஸ ஏவமாயாபரி மோகிதாத்மா
சரீர மாஸ்தாய கரோதிசர்வம் | (உச)
ஸ்த்ரியந்நபாநாதி விசித்ரபோகை:
ஸஏவஜாக்ரத்பரித்ருப்திமேதி | (உரு)
ஸ்வப்நே ஸசீவ: சுக துக்கபோக்தா
ஸ்வமாய யா கல்ப்பித சீவலோ கே | (உசு)
சுசுப்திகாலே சகலே விலீநே
தமோபிபூத:சுக ரூப.மேதி | (உஎ)
புநச்ச ஜந்மாந்தர கர்ம யோகாத்
ஸ ஏவசீவ: ஸ்வபிதி ப்ரபுத்த: | (உஅ)
புரதிர யே க்ரீடதி யச்ச சீவ
ஸ்ததஸ்சு ஜாதம் சகலம் விசித்ரம் | (உகூ)
ஆதார மாநந்த மகண்ட போதம்
யஸ்மிந் லயம்யாதிபுரதிரயஞ்ச | (௩0)

ஏதஸ்மாச்சாயதேப்ராணோமநஸ்ஸர்வேந்த்ரியாணிச கம்வாயுர்ஜ்யோதி ராபச்ச ப்ருத்வீவிச்வஸ்யதாரிணீ யத்பரம் ப்ரம்ம சர்வாத்மாவிச்வஸ்யாயதநம் மகத் | சூக்மாத் சூட்சுமதரம் நித்யந்தத்வமேவத்வமேவதத் ஜாக்ரத்ச்வப்நசுசுப்த்யாதி ப்ரபஞ்சம்யத்ப்ரகாசதே தத்ப்ரம்மாகமிதி ஞாத்வா சர்வபந்தை: ப்ரமுச்யதே

(இதன் பொருள்) (உச) (மேலே சொல்லிய மந்திரத்துக்குக் கீழ்க்கடை கோவினிடத்துநின்ற) ஆன்மாவானவன் மாயையினாலே மிகுதியும் மோகிக்கப்பட்டவனாய் ஸ்தூல சரீரம்பற்றி அனைத்தையுஞ் செய்கின்றான்.

(உரு) அவ்வான்மா சாக்கிராவஸ்தையிலே ஸ்திரி அன்ன பானாதிகளாம் விசித்திர போகங்களினாலே (தூல சரீரியாய் நின்று) இன்புறுகின்றான்.

(உசு) அந்தச் சிவான்மாவானவன் சொப்பனாவஸ்தையிலே சுவமாயையினாலே கற்பிக்கப் பட்ட லோகம் அனைத்தினும் (சூக்கும சரீரியாய் நின்று) இன்ப துன்பம் நுகர்கின்றான்.

(உஎ) அவ்வான்மா வானவன் எல்லாம் ஒடுங்கிய சுழுத்தியிலே அஞ்ஞானத்தினால் மூடுண்டு சுகரூபத்தை அடைகின்றான்.

(உஅ) ஜென்மாந்தர கர்மங் கூடுதலால், அந்தச் சிவான்மாவானவன் பின்னர்ச் சுழுத்தியினின்றும் சொப்பனாவஸ்தையைச் சார்ந்து, (அதினின்று சாக்கிராவஸ்தையில் வந்து) விழிக்கின்றான்.

(உகூ) தூல சூக்கும காரண தேகங்களிலே எந்தச் சிவான்மா விளையாடுகின்றானோ, அவனிலிருந்தே விசித்திரமாயுள்ள எதுவும் பிறந்ததாகும்.

(௩க) இதனால் ஆதாரமாயும், ஆனந்தமாயும் அகண்டமாயுமுள்ள அந்தச் சிவான்மாவிலே முன்னர்த் தோன்றியதாகக் கூறிய மூன்று சரீரமும் லயமடைகின்றது.

(௩க. ௩உ) இந்த ஆன்மாவிலிருந்தே பிராணன், மனம், சர்வேந்திரியங்கள், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, அனைத்தையுந் தாங்கும் பூமி என்பன பிறந்தன

(௩௩. ௩ச) சர்வவியாபகமாயும், உலகத்துக்கோர் பெரிய ஆலயமாயும், நுண்ணியதினும் நுண்ணியதாயும் எந்தப் பிரமம் உளதோ, அந்தப் பிரமம் நீயேயாம் (ஆன்மாவேயாம்), நீயே (ஆன்மாவே) அந்தப பிரமமாம்.

(௩ரு. ௩சு) (ஆன்மா விசுவனாய்ச் சாக்கிரத்திலும், தைசசனாய்ச் சொப்பனத்திலும், பிராஞ்ஞனாய்ச் சுழுத்தியினும் நின்றபோது) எது (முறையே விராட்டாயும், சுராட்டாயும், சம்ராட்டாயும்) பிரகாசிக்கின்றதோ, அந்தப் பிரமம் நான் என்று (அருளினால்) அறிந்து சர்வபாசங்களினின்றும் விடுறுகின்றான்.

(திராவிட இரத்நப் பிரகாசிகை.)

(35) ஆன்மா அம்பிகாசமேத சிவத்தோடு அருளினாலே ஐக்கியமா முறைமை—ஆன்மா சாக்கிராவஸ்தையிலே தூல விசுவனாய் நிற்குங்கால் சிவபிரான் தூல வைசுவானரனாகிய விராட் புருஷனாய் நின்றார். இந்த விராட் புருஷனுக்குத் தூலசரீரம் திரிலோகசராசரமா மென்க. ஆன்மா தேசசனாய்ச் சூக்கும சரீரமாய் நிற்குங்கால் சிவபிரான் சூக்கும சிருஷ்டியுடைய சூத்திரான்மாவாகிய சூக்குமசரீர இரணியகருப்பனாகின்றார். ஆன்மாப் பிராஞ்ஞனாய்ச் சூக்குமதா சரீரியாய் நிற்குங்கால், சிவபிரான் சூக்குமதா சரீரியாய் உமாசமேதராகிய ஈசராய் நிற்கின்றார் என்னும் உண்மையினாலே சிகரிணிமாலையுடையார்

அஞ்ஞாந மாயாப்யாம் விச்வோ ஜாக்ரதவஸ்தாயாம் ஸ்வப்நே ஸ்யாத்தைஜஸ: | அவித்யாமாத்ர ஸாக்ஷித்வாத் சம்ப்ரசாதேப்ராஞ்ஞோபவேத் | வைச்வாநரோத்ர பகவாந் விராட் புருஷஉச்யதே | சரீரம் யஸ்ய நிகிலம் த்ரைலோக்யம் ஸசராசரம் | ஹிரண்ய கர்ப்போ ஜகதாம் சூட்சுமத்ருஷ்டேர்

விவர்த்திதா | யது பாதே: ப்ராண கல்ப்பம் சூத்ரமாகுர் வேதவித: | விசுத்த ஸத்வ விலசந்மாயாதிஷ்டாநரசிக: | ஈச்வர ஸ்த்வேஷ பகவா நம்பிகார்த்தாங் கருசிர:॥

என்று கூறினர். இந்தச் சுழுப்தி அவஸ்தையிலே சிவபிரான் சர்வஞ்ஞதாதி குணங்களினின்று பிரியாத சத்தியோடு இசைந்து நிற்கு முறைமை எவரும் அறிந்திலர் என்ற கருத்தினலன்றே சாந்தோக்கி யோபநிஷதமும்

அத்ரக்யஸ்யைதே ஸத்யா: காமா அந்ருதாபிதாநாஸ்தத் யதாபிகிரண்யநிதிம்நிகிதமக்ஷேத்ரஞ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ நவிந்தேயு ரேவமே வேமா: சர்வா: ப்ரஜா அக ரகர்கச சந்த்ய எதம் ப்ரம்ம லோகம் நவிந்த ந்த்யந்ருதேநகி ப்ரத்யூடா: ||

இந்த இதயத்தின் கண்ணே சத்திய காமமுதலிய ஞான சத்தி குணங்கள் அவித்தையினுலே மறைப் புண்டுகிடக்கின்றன, பொன்னின் படை ஒன்றின் மேலொன்று செறிந்து கிடக்கும் இரணியபண்டாரம் புலப்படாது நிலத்தினுள்ளேபுதையுண்டு கிடப்ப, அதன் மீது அடிக்கடி சஞ்சாரஞ் செய்தும் அறிவிலிகள் அதனை அறியலுருதவாறுபோல, உள்ளக்குகையின் கண்ணே அமர்ந்த (மூலபண்டார) சிதாகாசத்தைப் பிரமலோகத்தை நித்திராகா காலத்திலே எப்போதும் அணைந்து சுகித்துக்கொண்டுவந்தும், அசத்தியத்தினுலே எய்ப்புண்டு அறிவிலிகள் இந்தப் பிரமலோகத்தை (சிதம்பரத்தை)க்கண்டாரில்லை" என்று கூறிற்று. இங்கே சுழுத்தி அவஸ்தையிலே உமை யம்மையோடு கூட மறைந்து நின்ற சிவபிரானே முன்னர் இருதய புண்டரீகத்தின் கண்ணே இருப்பவராகத் தியானிக்கப்படுபவராகக் கூறப்பட்டாரா மென்க. ஈண்டு சுழுத்தி அவஸ்தையிலே யிருப்பதாகப் பேசப்படும் பிரமம் ஏகான்மவாதிகளுடைய நிர்விசேஷப் பிரமமன்றும் என்பதும், சிவாத்துவிதிகளுடைய சவிசேஷப் பிரமமாம் என்பதும் பிரமாணங்களினுலே வலியுறுத்தப்பட்டனவா மென்க. மாண்டூக்கியத்தின் ஜீவேசுர ஐக்கியம் நிருசிம்மோத்தரதாபநி யுபநிஷதத்தினுல் அறியப்படும் என்று சிகரிணிமாலை செப்புகின்றது. ஆதலால் அம்மாண்டூக்கிய சுருதிப் பொருளைக் கூறிய இக்கைவல்லியோப நிஷதபாகமும் அந்த நிருசிம்மோத்தரதாபநி யுபநிஷதங் கொண்டே பொருள் படுத்தவேண்டு மென்பது சித்தித்தது. இந்தத் தாபநியுபநிஷதம் சுழுத்தி அவஸ்தையிலே ஆன்மாவையும் பரமான்மாவையும் சிறுத்தி

ப்ராஞ்ஞ ஈச்வரஸ்த்ருதீய பாத: |

பிராஞ்ஞனும் ஈசுவரனும் மூன்ருவது பாதம் என்று கூறிற்று. பின்னரும் இந்தத் தாபநி யுபநிஷதம்

ஆத்மாந மாதாயமநசா ப்ரம்மணேகிகுர்யாத் |

ஞானசத்தியினுல் ஆன்மாவை எடுத்துப் பரமான்மாவாகிய பிரமத்தோடு ஐக்கியஞ் செய்க என்று கூறிற்று. ஈண்டு "மனம்" என்றது ஐதரேய உபநிஷத பரிபாஷையினுலே ஞானசத்தியின் மேலாயிற்று

அயத்நேநைவ ஜாநாதி தஸ்மாத் சர்வஞ்ஞ உச்யதே! சர்வாத்மா பரமை ரேபிர்குணைர்நித்ய சமந்வயாத்! ஸ்வஸ்மாத் பராத்ம விரகாத் பரமாத்மா சிவஃஸ்வயம்!!

என்று கூறிற்று. இதனுல் ஈண்டுக் கைவல்லியோப நிடதமந்திரத்தினுலே "ஆன்மா" எனப்பேசப்பட்டவர் சர்வஞ்ஞதாதி குணங்களினின்று வேறுருத பரமான்மாவாகிய உமாசமேத சிவபதியேயாம் என்று உணரப்படும்.

(33) பரமான்மாவாகிய சிவபிரான் சேதனு சேதனப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம்—சிவபிரான் ஆன்மாவில் இருக்கின்றுர்; ஆன்மாவுக்குள்ளே இருக்கின்றுர்; அவரை ஆன்மா அறிந்திலது; ஆன்மாவே அப்பரமான்மாவுக்கு உடல்; அவர் ஆன்மாவுக்குண்ணின்று (அதனைச்) செலுத்துகின்றுர்; அவரே (உன்னுடைய) ஆன்மாவுடைய அந்தரியாமியாம் உயிராய் சிவபிரானுர் என்று கொண்டு, பிரகதாரணியுபரிஷதம்.

யோவிஞ்ஞா நேதிஷ்டந் விஞ்ஞாநாதந்தரோயம் விஞ்ஞா நம்நவேத யஸ்ய விஞ்ஞாநம் சரீரம் யோவிஞ்ஞாநமந்தரோ யமத்யேஷத ஆத்மாந்தர்யாம்யம்ருதஃ ||

என்று கூறிற்று. இங்கே "அமிர்தம்" என்னும் பதம் சிவத்தின் மேலாகும், இந்தப் பிருகதாரணியோப நிஷதத்துக்கிசைந்து மத்தியந்தினசாகையும் ஒரே விஷயம் பேசும் சமானப் பிரகரணத்திலே, "விஞ்ஞானம்" என்றதற்குப் பிரதியாக "ஆன்மா" என்று வழங்கிற்று. ஆதலால் கண்ணுவசாசையுடையார் கூறிய "விஞ்ஞானமும்" மத்தியந்தின சாகையுடையார் கூறிய "ஆன்மாவும்" பசுவாகிய ஆன்மாவின்மேற் சென்றவாறு தெளியப்படும். ஐதரேயோப நிஷதத்திலே பராசத்தியின் பெயராகச் சொல்லப்பட்ட "விஞ்ஞானம்" என்னும் பதத்தின் கருத்து "ஆன்மா" எனப் பொருள்படும் இவ்விடத்து விஞ்ஞானம் என்னும் பதத்துக்குப் பொருளாகச் செல்லாதாமென்க. ஆன்மா (பசுவே) சரீரமாய், ஆன்மாவுக்கு அந்தரி யாமியாய் நின்று சிவபிரான் செலுத்துமாறு போல, அசேதனமாகிய பிருதிவி முதலியவைகளைச் சரீரமாகக்கொண்டும், அவைகளுக்கு அந்தரியாமியாய் நின்றும், அவற்றைத் தொழிற்படுத்துகின்றுர் என்று கொண்டு, அப்பிருகதாரணியோபநிஷதம்.

யஸ்யப்ருத்வீசரீரம் |

என்றற்றொடக்கத் தனவாகக் கூறிப்போந்தது. இவ்வுண்மையை நீலகண்ட சிவாசாரியர் தமது சைவ ப்ராஷ்யத்தில் "அகிகுண்டலாதி கரணத்திலே" விளக்கி யிருக்கின்றுர். இதனுல் சத்தாகிய சேதனப்பிரபஞ்சமும், அசத்தாகிய அசேதனப் பிரபஞ்சமும் சிவபிரானுக்குச் சரீரமாம் என்றும் இந்தச் சத்தும் அசத்துமாகிய பசுபாசங்களுக்குப் பதியாயுள்ளார் சிவபிரானுர் என்ற கருத்தினுலன்றே, சிவபுராணம்.

சச்சாசச்சஜகத் விச்வம் சரீரம் பரமேஷ்டிநஃ | யதிதம் சதிதிப்ரோக்தம் யச்சாசதிதி கத்யதே | தயோஃ பதித்வாத்து சிவஃ ஸதசத் பதிருச்யதே ||

இங்ஙனங் கூறிற்று. பரமான்மாவாகிய சிவபிரானுர் தமது அருட்சத்தியினுல் சேதனு சேதனப் பிரபஞ்சங்களெல்லாம் வியாபித்து அந்தரியாமியாய் நின்று செலுத்தி, அவை தம்மை ஆதாரமாகக் கொண்டு நிற்கச் செய்தருளினுர். இந்த மத்தியந்தின சாகை கண்ணுவசாகைகளின் பொருளை வாங்கி அருணந்தி சிவாசாரிவர், "இந்நிலைதானில்லையே னெல்லாமீச

னிடத்திலு, மீசனெல்லாவிடத்திலுநின்றவன்னிலையையறிந்து" என்று கூறியருளினர்.

---

VIII

(பிரணவ பஞ்சாக்ஷர வாயிலாகச் சிவசத்தியோடு கூடிய சிவபிரானை ஆன்மாவிலே வைத்துத் தியானிக்கும் மற்றோர் உபாயம் கூறினமை)

ஆத்மாநமரணிம்க்ருத்வா ப்ரணவஞ்சோத்தராரணிம் ஞாநநிர்மதநாதேவபாசந்தகதிபண்டித: |

(இதன் பொருள்) (உஉ. உரு) ஆன்மாவை அரணியாகவும், (கீழ்க்கடை கோலாகவும்) பிரணவத்தை மேற்கடை கோலாகவுங் கொண்டு (இடைவிடாது சிந்தித்தலாம்) கடைதல் வாயிலாகப் பிறந்த சிவஞானக்கினியினால் பாசத்தை அறிஞன் தகிக்கின்றான்.

(திராவிட இரத்நப் பிரகாசிகை.)

(34) ஆன்மாவிலே சிவத்தைக் காண்டல்—கடவல்லியுபநிஷதமும் சுவேதாசுவதரோபநிஷதமும் அவரை (சிவபிரானை) ஆன்மாவில் உளராக எவர் காண்கின்றாரோ, அவருக்கே நித்தியமாகிய பேரின்பமெனப் பொருள் படும்.

தமாத்மஸ்தம் யேநு பச்யந்தி தீராஸ்தேஷாம் சுகம் சாச்வதம் நேதரேஷாம் |

என்று கூறிய மந்திரத்துக்கு உபப்பிரும்மணமாகப் போந்த வாயுசங்கிதை

தஸ்மாத் சகதயா சக்த்யாக்ருதி பச்யந்தியேசிவம் தேஷாம் சாச்வதிகி சாந்திர்நேதரேஷா மிதிச்ருதி: |

இதயாகாசத்திலே (அறிவின்கண்ணே) அருட்சத்தியோடுகூடச் சிவத்தை எவர் அறிகின்றாரோ, அவர்க்கே நித்தியமாகிய பெரின்பமாம் என்று கூறிற்று. பின்னரும் சுவேதாசுவதரோபநிஷதம் (பிரமஞானிகளாகிய) அவர்கள் தியானயோக வாயிலாகச் சர்வஞ்ஞதை முதலிய சுவகுணங்களினாலே ஆவரிக்கப்பட்டிருக்கும் சிவசத்தியைக் கண்டார்கள் என்ற கருத்தினால்

தேத்யாந யோகாதநுகதா அபச்யந்தேவாத்ம சக்திம் ச்வகுணைர் நி கூடாம் |

என்று கூறிற்று. இவ்வுண்மை கூர்மபுராண உத்தரபாகத்து முப்பத்தெட்டாம் அத்தியாயத்தினாலும், சிகரிணிமாலை, இரத்நத்திரய பரீக்ஷை முதலியவைகளாலும் உணரப்படும். மகோபப் பிருமணங்களிலே சிகாரம் சிவம் என்றும், வகாரம் சத்தி என்றும், யகாரம் ஆன்மா என்றும், நகாரம் மாயை என்றும், மகாரம் மலம் என்றும் போந்த கருத்தினால்

சிகாரம் சிவரூபந்து வகாரம் சக்திருச்யதே |
யகாரமாத்மரூபஞ்ச நகாரம் க்ரந்தி ரூபகம் |
மகாரம் மலரூபஞ்ச இத்யர்த்த: பஞ்சவர்ணக:||

என்று கூறிற்று. முதற்கண்ணின்ற சிகாரமுதலிய இரு அக்ஷரமும் பதியாகிய சிவத்தையும், யகாரம் சேதனப் பிரபஞ்சமாகிய ஆன்மாவையும், நகாரமுதலிய இரு அக்ஷரமும் அசேதனப் பிரபஞ்சமாகிய பாசத்தையும் உணர்த்தியவாம் எனக்கொண்டு, ஆன்மாவிலே அருளோடு கூடிய சிவத்தை இடையறாது தயிலதாரைபோல மேலே சொல்லிய உபநிஷத உபப்பிரும்மணங்களுக் கிசையத் தியானயோகப்பியாசஞ் செய்தலினாலே பாசந்தகிக்கப்பட்டுப்போம் என்பது பெறப்படும். கைலாச சங்கிதையானது வேதங்கள் பிரணவத்தினின்று தோன்றியவாமென்றும், பிரணவப்பொருள் சிவபெருமான் என்றுங்கொண்ட கருத்தினால்

வேதா: ப்ரணவசம்பூதா: ப்ரணவார்த்தா மகேச்வர: |

என்று கூறிற்று. சிவபிரானே பிரணவம் என்றும், பிரணவமே சிவபிரான் என்றும், வாச்சிய வாசக சம்பந்தத்தினால் அதிகம் பேதம் இன்றும் என்றுங்கொண்டு, சிவபுராணம்

சிவோவா ப்ரணவோக்யேஷ ப்ரணவோவா சிவ: ஸ்மிருத: |
வாச்ய வாசகயோர் பேதோநாத் யந்தம் வித்யதேயத:||

என்று கூறிற்று. இதனால் மேலே கூறிய பஞ்சாக்ஷரத்தின் முதல் இரண்டெழுத்தும் இந்தப் பிரணவ பஞ்சாக்ஷரத்தினாலே குறிக்கப்பட்டுள்ளது. கீழ்க்கடை கோலாகக்கொள்ளப்பட்ட ஆன்மாவானது ஸ்ரீபஞ்சாக்ஷரத்திலே நடு எழுத்தினாலே குறிக்கப்பட்ட (சேதனப் பிரபஞ்சமாகிய) ஆன்மாவாகும்; இந்த ஆன்மாவிலே பிரணவப்பொருளாம் அருட்சத்தியோடு கூடிய சிவத்தை இடையறாது அபேதமுறத்தியானித்தல் வேண்டும் என்றும், அதனால் பாசம் தகிக்கப்பட்டுப் போம் என்றும் உண்மை சாதித்துக் கைவல்லியோபநிஷதம் மேலே சொல்லியவாறு உபதேசித்தது, இந்த மந்திரத்தைப் போன்ற மற்றோர் மந்திரம் சுவேதாசுவதரோபநிஷதத்து முதலாம் அத்தியாயத்துப் பதினான்காம் மந்திரத்திலும் காணப்படுகின்றது. இது சுருதிகளிலன்றிப் புராணோபப் பிரும்மணங்களிலுங் காணப்படுகின்றது. சீவான்மாவுக்கும் பரமான்மாவாகிய என்னோடுறப் பிரணவத்துக்கு முள்ள ஐக்கியம் சம்பந்தம் அறிவிக்கப்படுதலும் அறிவிப்பதுமாம் சம்பந்தம் என்று கொண்டே, கைலாயசங்கிதை

சீவாத்மநோ மயாசார்த்தமை க்யஸ்ய ப்ரணவஸ்யச |
போத்ய போதக பாவோத்ர சம்பந்த ஸ்ஸமுதீரித:||

என்று கூறிற்று. பிரணவத்தின் பொருள் சிவபெருமான் என்ற கருத்தினாலன்றோ, ஆன்மாவைக் கீழ்க்கடை கோலாகவும் (சிவப்பொருள் கொண்ட) பிரணவத்தை மேற்கடைகோலாகவுங்கொண்டு தியானமதனஞ் செய்தலால் அறிஞன் பாசத்தைத் தகிக்கின்றான் எனப் பொருள்படும்

ஆத்மாநமரணிங்க்ருத்வா |

என்னுங் கைவல்லிய சுருதியோடு, "சிவத்தை அறிந்து சாந்தத்தை அடைகின்றான்," எனவும், "ஈசுரராகிய அச்சிவபிரானை அறிந்து அமிர்தராகின்றார்" எனவும், "பிரமத்தை அறிகிறவன் பரத்தை (சிவத்தை) அடைகின்றான் எனவும், "சிவபிரானை அறிந்து வீடுறுகின்றான்" எனவும் பொருள் கொள்ளும்

ஞாத்வாசிவம் சாந்தமத்யந்த மேதி |
ஈசந்தம் ஞாத்வா ம்ருதா பவந்தி |
ப்ரம்பவிதா ப்ரேரிதாரம் |
ஞாத்வாதேவம் முச்யதே சர்வபாசை:||

என்னுஞ் சுருதிகளையும் சைவபாஷ்யத்து முதற் சூத்திரத்தின் கீழே நீலகண்டசிவாசாரியர் ஒருங்கு உதகரித்திருக்கின்றார். சிவபிரான் ஓங்காரப்பொருள் என்பது கொண்டே "ஓங்காரத்துட் பொருளதாயினனே" என்றற் றொடக்கத்த திராவிட சுருதிகளுங் காணப்படுகின்றன.

யதோ வாசோ நிவர்த்தந்தே ப்ராப்ய மநசாசக |

எவரிடத்திலிருந்து செல்லமாட்டாதுவாக்கானது மனசோடு மீண்டுவிடுகின்றது என்று தைத்திரீயசுருதி மொழிதலால், மேலே கண்டவாறு சட அந்தக்கரண மனசாகாத ஞானசத்தி எனப்படும் "மனசு"க்கே ஆன்மாவைச் சிவத்தோடு ஐக்கியஞ்செய்யும் வன்மையுளதென்பது பெறப்படுகின்றது. இது பற்றியே பிருகதாரண்யோபநிஷதம்

மநஸைவாநுத் ருஷ்டவ்யம் |

(அருண்) ஞானசத்தியினல் மாத்திரம் அறியத்தக்கது என்று பொருள்படக் கூறியதுமாமென்க. இம்மந்திர உண்மையைக் கடவல்லியுபநிஷதத்திலும் காண்க.

36. சிவமே தானெனநிற்றல்—சனற்குமார சங்கிதை

விசிந்தயேத் ஸ்வாத்மநி சம்புமீசம் சிவம் சாந்தமு மாத்விதீயம் |

யோகியானவன் தன்னறிவின்கண்ணே சம்புவும், ஈசரும், சாந்தரும், அருட்சத்தியோடு கூடிய அதல்லியருமாகிய சிவபிரானைச் சிந்திக்கக் கடவன் என்று கூறிற்று. இப்படிப்பாவிக்குமிடத்துப் பரமான்மாவாகிய சிவன் வேறு என்றும், ஆன்மாவாகிய தான் வேறு என்றும் மோகத்தினல் உபாசிப்பவனுக்குச் சிவத்துவம் எய்தாது என்றும், ஆதலால் சிவன் வேறு தான் வேறு என்னும் துவிதபாவனை ஒழிந்து, சிவனே தான் என்னும்படி அத்வைத பாவனையை எக்காலமும் செய்யக்கடவன் என்று கொண்டு சிவயோகம் பேசுமிடத்திலே, சர்வஞானோத்தர சுருதி

அகமாத்மா சிவோஷ்யந்ய: பரமாத்மேதிய: ஸ்மிருத: |
ஏவமுபாசதே மோகந் நசிவத்வ மாப்நுயாத் |
சிவாந்யஸ்த்வக மேவாந்ய: ப்ருதக்பாபம் விவர்ஜயேத் |
ய: சிவ: சோகமேவ வேத்யத் வைதம் பாவயேத்சதா||

சொல்லுகின்றது என்று கூறிற்று, இந்தச் சுருதியின்பொருளைக்கொண்டே திராவிட செம்புகேசுவர புராணம்

பேதமாகிய பாவனை பேணுவ தெல்லா
மேதமாகிய பந்தமேயென தியானெனு மால்
போதவாருயி ரபேத பாவனை புரிவஃதே
மாதராயுயிர் முத்தியென் றுரைத்திடுமறையும்.

என்று கூறிற்று, இக்கைவல்லியோபநிஷதத்திலே ஆன்மாவே சிவம், சிவமே ஆன்மா என்பது பொருள்பட

தத்வமே த்வமேவதத் |

அதுவே நீ, நீயே அது என "அத்துவிதங்" கூறியதின் பொருள் என்னையோவெனில் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்

அத்வைதமூாக மசிநோ பிருபாச நாயாமுக் தந்தவேதி பரமார்த்த தயாநவாச்யம் | பேதஸ்புடோ கருட மாந்த்ரிகயோரளிகந் தாதாத்ம்ய பாவ:மத:பி விஷம் ப்ரமார்ஷி||

கருடனும் மாந்திரிகனும் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினும், கருடோகம் பாவனை விஷத்தை நீக்கன் மாத்திரைக்கே வேண்டப்படும்; அதுபோல, பரமான்மா சீவான்மாஎன்னும் பதார்த்தங்கள் இரண்டும் தம்முள் வேறென்பது தேற்றமாயினும், உயிர்களுக்கு மல நீக்கத்தின் பொருட்டு ஈண்டு "ப்ரம்மாகம்" பாவனை கூறப்பட்டது. இங்ஙனமாதலில் அது கொண்டுதானே நிருபசரிதைக்கியம் கூறுதல் சாலாது என்பது பெறப்படுகின்றது.

மாந்திரிகன் தனது சரீரத்தைக் சருடனுகப்பாவிப்பானல்லன், மற்றுப் பாவிக்குமாறு என்னையெனில், அவன் தன் ஆன்மாவைக் கருடனுக்கு அதிதைவமாம் மந்திரரூபமாகப் பாவிப்பன், ஆண்டு எல்லாப் பொருளின் தருமங்களும் ஆன்மாவுக்குளவாம் என்னும் கருத்தால் சர்வஞானோத்தர சுருதி

சர்வேதர்மா ஆத்மநஸ்ஸந்தி |

என்று கூறிய முடிந்த வார்த்தையால், தற்பாவ பாவமாய்ச் சார்ந்த தன் வண்ணமா மியல்புடைய ஆன்மா அந்த மந்திர தன்மியாய், மந்திரசொரூபியே யாவன்; அங்ஙனம் பாவனை சத்திய பாவனையாதலினன்றே, சத்தியபலமாக விஷநிவிர்த்தியாகா நிற்கும் என்று கூறினர் சிவஞான யோகிகளுமாமென்க. இவ்வாறு சத்திய பலமாகச் சிவோகம் பாவனையாகிய பிரம்மாகம் பாவனையினலும் பாசமாகிய விஷம் நிவிர்த்தி யாகாநிற்கும் என்று ஓர்க.

(37) மாயையினல் மோகிக்கப்படுவது ஆன்மா வன்றிப் பரமான்மாவன்று மென்பது—முப்பத்து மூன்றும் ஈசுவர தத்துவத்தினராகிய அனந்தேசுவரரால் மாயையிலே யிருந்து பிறந்த கலைகாலநியதி வித்தை ராகம் என்னும் ஐந்து தத்துவங்களையும் ஆன்மா பஞ்சகஞ்சுகமாய்ப் பூண்டு புருஷனுய் (பசுவாய்) ப்போசங்களைப் புசிக்கின்றான் என்று சிவபுராணங்களும் சிவாகமங்களும் செப்புகின்றமையானும் இந்தப் பஞ்சகஞ் சுகமுடையனுய் நின்ற (வைதிக சைவருடைய) ஆன்மாவுக்கும் (சிவத்துக்கும்) மாயோபாதிப்பட்டுப் புருஷனுய் (பசுவாய்) நிற்கும் மாயாவாதிகளுடைய பிரமத்துக்கும் பேதமின்றும் என்ற கருத்தினல், கைலாயசங்கிதை

சர்வஞ்ஞ:சர்வகர்த்தாச சிவ ஏவஸ்வ மாயயா | சங்குசத்ரூப இவ ஸந்புருஷ: ஸம்பபூவ: | கலாதிபஞ்சகேநைவபோக்திருத்வேந ப்ரகல்ப்பித: | இதி ஸ்தாநத்வ யாந்தஸ்த: புருஷோந விரோதக: ||

முற்றறிவு முற்றுத்தொழிலுடைய ஆன்மா (சிவன்) சுவமாயையினலே புருஷனுயினன் (பசுவாயினன்); அவ்வான்மாவே (சிவன்றனே) கலாதி பஞ்சகத்தினலும் போக்தாவாம் புருஷனுயினன் (பசுவாயினன்) (ஏகான்மவாதிகளுடைய) மாயோபாதி கற்பனை, (வைதிகசைவருடைய) கலாதி பஞ்சக கற்பனை என்னும் இருதிறத்தானும் எய்திய புருஷன் (பசு) வேறுபாடிலன் என்று முடித்துக கூறியது. இவற்றின் விரிவைக் கைலாசசங்கிதையிலும், நாம் எழுதிய "சென்னை

ஆரியனுர் பிரமம் பரப்பிரமமாகாத சிவப்பிரமம்" என்னும் சிறு புஸ்தகத்திலும் காண்க. இதனுல் மாயாவாதோப நிஷதங்களிலே மாயோபாதிப் பட்டுப் பசுவாய் நிற்கும் பிரமம் ஆன்மா என்க; அங்ஙனம் மாயோபாதிப் பட்டுப் பசுவாய்ப்போதராத பிரமம் சிதம்பர்வாதோப நிஷதங்களிலே தரும தருமி சம்பந்தமாகிய சமவாயத்தினுலேனும் தாதான்மியத்தினுலேனும் சிவசத்தியை ஓர்காலும் பிரியாத பரப்பிரம சிவமேயாம் என்ற கருத்தினுல், சிவபுராணம்

அபரேது பராசக்திஃ சிவஸ்ய சமவாயிநீ | தாதாத்ம்யமநயோர்நித்யம் வந்நிதாககயோரிவ | அதஸ்தத்தர்ம தர்மித்வாத் பராசக்திஃ பராத்மநஃ ||

சூரியனுடைய கிரணம் போலப் பராசத்தி சிவபிரானுடைய சமவாயசத்தி என்றும், குணகுணி பாவத்தினுல் பராசத்திக்கும் பரமான்மாவுக்கும் உள்ள சம்பந்தம் அக்கினியும் சூடும் போல நித்தியமாகிய தாதான்மிய சம்பந்தமாம் என்றுங் கூறியதா மென்க. இதனுல் மாயையினுலே மோகிக்கப்பட்டுச் சாக்கிராவஸ்தையிலே தூலபோக முதலிய புசிக்கப் போந்தவன் ஆன்மாவன்றிப் பரமான்மாவாகிய சிவசத்தி சமேத சிவபிரானல்லரா மென்க. இந்தமாயோபாதிப்பட்ட ஆன்மா பிரமம் எனவும், ஈசன் எனவும், சம்பு எனவும், சிவன் எனவும், ஆங்காங்கு புராணங்களினும் உபநிஷதங்களினுஞ் சொல்லப்படும் ஆன்மாவையும், இப்பெயர் ஒற்றுமை வாயிலாக ஆன்மா எனவும், பிரமம் எனவும், ஈசன் எனவும், சம்பு எனவும், சிவன் எனவும் பேசப்படும் பரமான்மா வாகிய சிவபிரானையும் ஒன்றுபடுத்தி விவேகிகள் கலக்காதிருப்பாராக.

(இன்னும் வரும்).

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுருப்யோநம:

## திருமூலநாயனுர் அருளிச்செய்த திருமந்திரம்.

---

அயலும் புடையுமெம் மாதியை நோக்கி
வியலும் பெருந்தெய்வ மியாது மொன்றில்லை
முயலு முயலில முடிவுமற் றுங்கே
பெயலு மழைமுகிற் பேர்நந்தி தானே.

(பொழிப்புரை.) சமீபத்தினும் பக்கத்தினும் எம்மாதியை நோக்குமிடத்துச் சுருதி, யுக்தி, அனுபவத்திற்குப் பொருந்தும் பெரிய தெய்வம் யாதொன்றுமில்லை; முயற்சியும் முயற்சியில்லனவும் முடியவருதலும் முகில்போல் வேண்டியவற்றை யளிக்கும் நந்திப்பேர் வள்ளலாலேயாம்; என்றவாறு. (க)

கண்ணுத லானொரு காதலி னிற்கவு
மெண்ணிலி தேவ ரிறந்தா ரெனைப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களு
மண்ண லிவனென் றறியகில் லார்களே.

(பொ-ரை.) திரிநேத்திரனுகிய மாதேவன் நமக்குவேண்டியவற்றை அளிக்கும் ஆதரவிலிருக்கவும், அளவில்லாத்தேவ ரிறந்தொழிந்து போனுர்; மற்று மண்ணினும் வானினு முள்ளாரும் வழிபடுதற்குரிய தலைமையுடையான் இவனென்பதும் அறியமாட்டாராயினர்; எ-று. (உ)

மண்ணளந்தான் மலரோன் முதற் றேவர்க
ளெண்ணளந் தின்ன நினைக்கிலா ரீசனை
விண்ணளந்தான் றன்னை மேலளந்தா ரில்லைக்
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றுனே.

(பொ-ரை.) மண்ணளந்தமாலும் மலரோனுகிய பிரமனும் ஏனைத் தேவர்களும், விண்ணையளந்தவனும் தன்னை மேலளந்தறிந்தவரையில்லாதவனும், கண்ணுலளக்கப்படாது அதை விளக்குவானுமாகிய எம்மீசனைப்பன்முறையும் வழுத்திச் சிந்திக்கிலரையோ! எ-று. (ஙு)

கடந்துநின்றுன் கமல மல ராதி
கடந்துநின்றுன் கடல் வண்ணனெம் மாயன்
கடந்துநின்று னவர்க் கப்புற மீசன்
கடந்துநின்று னெங்குங் கண்டு நின்றுனே.

(பொ-ரை.) பிரமனுலும் விண்டுவாலும் அறியப்படாவாறு கடந்து நின்றுன் எம்மீசன்; அவ்வாறு கடந்துநின்றுனையினும், எவற்றினினும் நிறைந்து நின்று அவற்றையெல்லாம் ஒருங்கே யறிந்து நிற்குமியல்புடையன் எம்மீசனென்றறிக; எ-று. (ச)

ஆதியுமா யரனு யுடலுண் ணின்ற
வேதியுமாய் விரிந்தார்ந் திருந்தா ரருட்
சோதியுமாய்ச் சுருங் காததோர் தன்மையு
நீதியுமாய் நித்த மாகிநின் றுனே.

(பொ-ரை.) ஆதியும் அரனென்னுந் திருநாமமுடையனுய் உடலகத்து நிறைந்த வெளியுமாய் விரிந்து நிறைந்த கருணையே தனக்குரிய சோதிவடிவமாகி ஒடுக்கமில்லா வியல்பினனுய் மெய்ப்பொருளுமாய் நித்தியமாய் நின்றுனெம்மீசன்; எ-று. (ரு)

கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாணுதல் பாகனை
யாது குலாவி யமருந் தேவருங்
கோது குலாவிக் குணம் பயில்வாரே.

(பொ-ரை.) கொன்றைமாலையணிந்த குழற்சியையுடைய கற்றைச்சடையுடையனுய்ப் பார்வதியை ஒரு பங்கிற்கொண்ட ஈசனை, அமரருந் தேவரும் குற்றமுடைய குணத்தராவரன்றி வேறியாது சொல்லி வழுத்துவார்? எ-று. (சு)

காய மிரண்டுங் கலந்து கொதிக்கினு
மாயங் கத்தூரி யதுமிகு மவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணிலு
மீச னுறவுக் கெதிரில்லை தானே.

(பொ-ரை.) இரண்டுவிதமானகாயம் ஒன்றுபட்டுக் கொதிக்கினும் மாயமானகத்தூரி மிகுகின்ற வழியதுவே; ஆதலால், தேசத்தோடொட்ட எம்மீசனை ஒரு தேவனாகவைத்து வழிபடினும் எம்மீசன் உறவு கிடைத்தற்கு ஆக்ஷேபனையில்லை; எ-று. (எ)

அதிபதி செய்த அளகை வேந்தரை
நெதிபதி செய்த நிறைதவ நோக்கி
யதுபதி யாதரித் தாக்கம தீர்க்கி
யிதுபதி கொள்ளென்ற வெம்பெரு மானே.

(பொ-ரை.) அதிகாரஞ்செய்த அளகைவேந்தர் மிக்குநிறைந்த தவஞ்செய்தலைக்கண்டு அவரை உயர்த்தவிரும்பி இதுதான் நீங்கள் இருத்தற்குத் தகுதியான இடமென்று மோட்சவீட்டைக் கொடுத்தான் எம்பெருமான்; இதனால் அவனது அருளியல்பிருந்தவாறறிந்து கொள்க; எ-று. (அ)

முடிவு பிறப்பையு முன்னே படைத்த
வடிக ளுறையு மரனெறி நாடி
லிடியு முழக்கமு மீச ருருவங்
கடிமலர்க் குன்ற மலையது தானே.

(பொ-ரை.) இறப்பையும் பிறப்பையும் அநாதியேபடைத்த எம்மீசன் உறையும் மோட்சவுலகத்தை யெய்தற் குரிய அவ்வரனால் அமைக்கப்பட்ட வழியைத்தெரிந்து கொள்ள வேண்டில், இடியும் அதன் ஓசையும் அவனதுருவமென்றும் அவன் கொன்றைமலர் கிடக்கும் மலையென்றும் அறியவேண்டியது; எ-று. (கூ)

வானப்பெருங் கொண்டன் மாலயன் வானவ
ரூனப் பிறவி யொழிக்கு மொருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தவெங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே.

(பொ-ரை.) முகில்போல் நிறத்தனாகிய மால் தேவர் முதலாயினர் பிறவிவேரறுக்கும் உவமையில்லாதவனை, தாருகாவனத்தினின்றும் போந்த களிற்றியானை பிளிறப் பிளர்ததன் றோலை யுரித்த எம்பெருமான் பெருமைகளை எடுத்துச் சொன்னால் மோட்சத்தை யடைதல் கூடும். எ-று. (க0)

(இன்னும் வரும்.)

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுருப்யோநமஃ

அருணந்தி சிவாசாரியசுவாமிகள் அருளிச்செய்த

சித்தியார் உரை

---

உலோகாயிதன் மதமறுதலை.

உள்ளதாவதுகண்டதென்றுரை
கொண்டதென்னுலகத்துநீ
பிள்ளையாய் வளர்கின்ற நாளுனைப்
பெற்றதாயொடு தந்தையைக்
கள்ளமேபுரி காலனுருயிருண்ணவென்
றெரு காளையாய்
மெள்ளவேயுளரென்றுகொண்டு
விரும்புமாறு விளம்பிடே.

(பொழிப்புரை.) உலகாயிதா! நீ யுலகத்துக் காட்சியே மெய்யென்றும் அநுமானம் முதலிய் பொய்யென்றுங் கொண்ட தென்னை? நீ பிறந்து வளர்கின்ற நாளில் உன் மாதாவின் உயிரையும் பிறப்பதன்முன் உன்பிதாவின் உயிரையும் கண்ணால் காணத் தொழிலைப் புரியும் யமன் கொண்டுபோக நீ இளமை நீங்கி அறிந்தபின்பு மாதா பிதா நமக்குண்டென்று மெல்ல எண்ணியவழி நீ கூறிய காட்சியன்று; அநுமானமே காண், எ-று. (க)

இடித்துமின்னியிருண்டு மேக
மெழுந்தபோதிது பெய்யுமென்
றடுத்ததும்மகில் சந்தமுந்தி
யலைத்துவார் புனலாறுகொண்
டெடுத்துவந்திட மால்வரைக்
கணிருந்துகொண்டல் சொரிந்ததென்று
முடித்ததும் மிவைகாட்சியன்
றனுமானமென்று மொழிந்திடே.

(பொ-ரை.) மேகமானது முழங்கியும் மின்னியும் இருண்டும் பரந்தெழுந்தவிடத்து இதனன் மழைபெய்யு மென்று நினைப்புண்டானதும், ஆறனது, அகில் சந்தன முதலியவற்றைத் தள்ளி அலைந்தொழுகு நீரைக்கொண்டுவந்திட அதனைக்கண்டு பெரியமலையினிடத்தே மேகமிருந்து வருஷித்த தென்று நினைந்து நிச்சயித்ததும், இவை இரண்டும் நீ கூறிய காட்சியல்ல அநுமானமென்று கூறுவாயாக; எ-று. (உ)

காண்டலோ வனுமானமாவதுங்
காட்சிமுன்னதுங் காட்சியேல்
பூண்டபூதவுடம்பினுள் ளெழு
போதமென்கொடு கண்டனை

மாண்டவாயின் மனங்கொண்
ஞானமுணர்ந்ததும் மனுமானமென்
றீண்டுபூத மியைந்ததிவ்
வுடலென்பதென் பிரமாணமே.

(பொ-ரை.) நீர் அனுமானமென்று கூறுவதுங் காட்சியே அது பூர்வக்காட்சியாகையால் பூர்வக் காட்சியுங் காட்சியென்று நீ கூறில் பூதக்கூட்டத்தினுள் ஓர் அறிவெழுமென்றது அனுமானமன்றி யாதுகொண்டு கண்டனை? அன்றியும், சத்தாதிகளைப் பொறியிடமாக நின்றறியுமென்னும் அறிவுங்காட்சியல்ல அனுமானமென்று கொள்வாயாக; இஃதன்றிப் பிரமாணமு மில்லையென்று கூறுவை அங்ஙனங்கூறில் பூதக்கூட்டத்தில் உருத்தோன்று மென்று கூறியதியாது; உன் காட்சியும் அனுமானப் பிரமாணமே யென்றறிவாயாக; எ-று.

பழுதிலாமறைகண்டநூல்
பழுதின்றி யுண்டதுபாரின்மேல்
மொழிவர்சோதிட முன்னியின்னது
முடியுமென்பது முன்னமே
அழிவிலாதது கண்டனம்மவை
யன்றியுஞ் சிலவாகமங்களில்
எழுதியோர்படி யென்றுகொண்டிரு
நிதியெடுப்பது மெண்ணிடே.

(பொ-ரை.) குற்றமில்லாத வேதமுதலாகிய நூற்கள் குற்றமின்றிச் சொல்வனவுள, அதெப்படி யென்னில் பூமியினுள்சோதிட நூலோர் கருதி நிகழ்காலத்தில் நின்றும் எதிர்காலத்து வினையை முன்பு கூறுகிற்பர்கள்; பின்பு அதுவும் அழிவில்லாததாகக் கண்டனம்; அவையொழிந்தும் சிலநூற்பிரமாணத்திலுள்ளபடியை எடுத்துக்கொண்டு இறந்த காலத்துவைக்கப்பட்டுப் பூமியின்கண் மறைந்து கிடக்கும் பொருள்களையும் எடுக்கப்படும்; அவை நூற்பிரமாண மென்றறிவாயாக; எ-று. (௪)

போதமானவை நித்தமென்று
புகன்றதென்னை யுருக்களா
யாதலோடழி வாகுமாதலினுக்குவோ
ரவர் வேண்டிடுங்
காதலோடு கடாதிமண்கொடியற்று
வோருளர் கண்டனம்
சீதநீரிலெழுந்த கொப்புளிகழ்ந்த
மாருதச் செய்கையே.

(பொ-ரை.) பூதம் நான்கும் நித்தமென்றும் அழியாததன்மையுடைய தென்றுங் கூறியதென்னை? பூதக்கூட்டத்தில் உருத்தோன்றுதலும் கெடுதலு முண்டாதலால் இவைநித்தமன்றியிவை கூட்டுவானொரு கர்த்தாவை வேண்டும்; அது எதுபோலவென்றால், நீ உவமானமாகச் சொன்ன குடமுதலானவை மண்ணைக் கொண்டு உண்டாக்குவானைக் கண்டோமாதலால்; நீரிடமாகக் குமிழிதோன்றுதல்போல மனம்முதலாயின தோன்று மென்று கூறினாய், குமிழியும் வாயுவால் உண்டாம்; ஆகையால் ஒருவிடத்திலும் மனமுதலானவற்றைக் கூட்டுதற்கு ஒரு கர்த்தா வேண்டுமென்றறிவாயாக. (௫)

நீரின்வந்தெழு கொப்புளீரதுவா
யெழுந்நிகழ் பூதமு
மோரின்வேறுணர்வா யெழாவவை
பூதமாகி யுதித்திடுந்
தேரினூறடை காய்செறிந்தவை
சேரவேறு சிவப்பெழும்
பாரினிற் பிரியாதுபுந்தி
பழிப்புடம்பு கிடக்கவே.

(பொ-ரை.) நீரின் கண்ணே தோன்றுங் குமிழியும் நீராகுமதுபோல, விளங்கிய பூதமும் விசாரிக்குமிடத்து வேறாக அறியுமறிவாகாது காயபூதமேயாம்; அன்றியும் சுண்ணாம்பும், வெற்றிலையும், பாக்குங் கூடி அவை கலந்தவிடத்தில் ஒரு சிவப்புண்டாகுதல்போல பூதக் கூட்டத்தின் ஓர் அறிவு எழுமெனக் கூறியது. எ-று. (௬)

கூறுசேர்வையின் வந்தபோது
சிவப்பெனுங் குணமொன்றுமே
வேறுவேறு புலன்குணங்களுடற்
கண்வந்து விளைந்ததென்
னூறுகாயடை கூடும்வேறொருவன்
றனாலென நோக்கிநீ
தேறுபூதசெயற்கும் வேண்டு
மொருத்தனென்று தெளிந்திடே.

(பொ-ரை.) சுண்ணாம்பும், வெற்றிலையும், பாக்குமென்றிவை கூடப்பட்ட சேர்வையின் கண்வந்தவிடத்து சிவப்பெனும் ஒரு தன்மையே காணப்படும்; அப்படி ஒரு தன்மையாகாது புலன் என்றும் பொறியென்றுங் குணங்களென்றும் தனித்தனி உடற்கண் வந்தண்டாகிய தென்னை? அதல்லாமலும், சுண்ணாம்பும், வெற்றிலையும், பாக்கும் சிவப்பேறக் கூட்டுதற்கு ஒருவன் வேண்டு மென்பதனை நீ கருதியதுபோல்ப் பூதச் செயற்கும ஒருத்தன் வேண்டுமென்று நிச்சயமாகத் தெளிந்திடுவாயாக. எ-று. (௭)

ஆன்வைம்பொறி யுண்டிநித்திரை
யச்சமைதுனமாதியா
வூனில்வந்திடு முன்பிலாதவை
யென்றுரைக்கினு லாதைபோல்
வானின்வந்திடு மாதராணலியாகி
மானுடராதியா
யோனிபன்மையுமின்றி பூதமுறும்
புணர்ச்சியோர் தன்மையே.

(பொ-ரை.) சிலம்பியிடத்து நூல் தோன்றுதல்போல்முன்பில்லாதவையான பஞ்சேந்திரியம், உணவு, துயில், பயம்,

மைதுனம் முதலியவை காயத்தின் குணமாக இப்போது உண்டாமென்று நீ சொல்லில், மாதர், ஆண், அலியாகிமா னுடராதியாயும் ஆகாயத்தினின்றும் தோன்றல் வேண்டும்; பூதக்கூட்டம் ஒரு தன்மை யாதலால் மிருகபசுபக்ஷிதாபரா திகளாகிய யோனிபேதமு மில்லையாம். ஆகையால், நீ கூறி யது பொருளன்று; எ-று. (அ)

ஐந்துநான் கொருமூன் றிரண்டுட
னொன்றதாயு டலங்களின்
வந்திடாவுணர் விந்தியங்களும்
வன்னபன்மையு மின்மையாம்
புந்தியோடிய வன்னபோக
குணங்கள் பூதபுணர்ச்சிதான்
றந்திடாதிவை பேதமாயிடவந்த
வாவினை தந்தவா.

(பொ-ரை.) நீ முன்பில்லையென்று கூறிய கன்மமில்லையா யின், யோனிபேதமுமில்லையாய் அந்தயோனி பேதங்களின் உண்டாகும் உடலங்களின் இந்திரியங்களும் ஐந்து, நான்கு மூன்று, இரண்டு, ஒன்று என்னும் அறிவுகளும் இல்லையாம்; அதல்லாமலும், புந்தியால் அறியும் அட்சரங்களும் புசிப்பு களும் குணபேதங்களும் பூதக் கூட்டம் தாமாட்டாது; இந்தி ரியம் மிகக்குறைவாகவும் சாதிபேதமாகவும் குணபேதமாக வும் இப்படிப் பேதித்திடவந்த அதனைக்கன்மந் தந்ததென்று அறிவாயாக. எ-று. (க)

அறிவுபூதம தென்னில்வேறு
புறத்தறிந்தமை கண்டிலஞ்
செறிவுதானுடலத் தெனிற்
சவமானபோதுட றேருமோ
குறிகொளாதுடல் வாயுவானது
கூடிடாமையி னென்றினி
பிறிதராதுயிர் நிற்கஞானமுறக்க
மென்பிறவாததே.

(பொ-ரை.) பூதங்களே அறிவாமென்று நீ கூறில் புலப் படக்காணப்பட்ட மண்ணிலும் நீரிலும் நெருப்பிலுங் காற் றிலும் அறிவு கண்டிலமன்றோ? உடலிலே செறிந்தபோது தோன்றுவதென்னில் சவமாய்க் கிடந்தகாலத் தறிவு கண்ட தில்லை; குறிக்கமாட்டாது வாயுப்பிறிந்த வழியே யென்று கூறினால், அந்த வாயுவானதும் உறக்கத்திலே பிரியாது நிற்க அறியாமல் நிற்பானேன்? ஆகையால், பூதக்கூட்டத் தறிவு தோன்றாது, வேறோர் அறிவுண்டென் றறிவாயாக. எ-று.

அறிவுடற்குண மென்னிலானைய தாதியந்த
மெறும்பதா
வுறுமுடற்பெரி தானவற்றினு தித்திடும்
பெரிதாகவே
சிறுவுடற்செறி ஞானமுஞ்சிறி தாயிடும்
பரிணமுமும்
பெறுமுடற்சிறி தாவதென்பெரி தாவதென்
சிலபேசிடே.

(பொ-ரை.) அறிவென்று வேறொரு முதல் இல்லை, உடற் குணமே அறிவென்று நீ சொன்னால், ஆனைமுதல் எறும்பீறாக எடுத்த உடலில் பெரிதானவற்றின் உதிக்கும் அறிவு பெரிதா யுஞ் சிறிதானவற்றி னுதிக்கும் அறிவு சிறிதாயும் இருக்கவே ண்டும்; அப்படியன்றி பரிணமத்தையுடைய யானையுடலுக்கு அறிவு சிறிதாயும் சிறிய வுடலையுடைய மானுடற்கு அறிவு பெரிதாயும் இருப்பதென்? ஆகையால், அறிவுடற் குணம ன்று, வேறு நீ சொல்லத்தக்க துண்டாயிற்சொல்; எ-று. (கக)

போதமும்மெலி வாகியும்மலி பூதமானவை
கூடலிற்
பேதமோடு பெருத்துடற்கள் சிறுத்தபெற்
றிமையென்றிடின்
ஓதுடற்பெரி தானவுஞ்சிறி தாயிடா
சிறிதானவு
நீதியிற்பெரி தாயிடாமுன முள்ளதன்மையி
னிடுமே.

(பொ-ரை.) அப்படியல்ல, உடற்குணமே அறிவென்றது, பூதமானவை கூடுங்காலத்துப் போதமெலிவாகியும், பூதமலி வாகியுங் கூடலில் அறிவு சிறுத்தக் காயம் பெருத்ததென் றும், போதமலிவாகியும் பூதம் மெலிவாகியுங் கூடலில் அறி வுபெருத்தக் காயஞ்சிறுத்ததென்றும் அங்ஙனமுறைமைகூ றின், பூதக்கூட்டத்தாற் றோன்று நீ கூறிய உடல்பெரிதான வுடல் சிறிதாயிடாது, சிறிதானவுடல் பெரிதாயிடாது, முன் ன முன்ன முள்ள முறைமைப்பாட்டில் நிற்கவேண்டும்; அங்ஙனம் நில்லாது பெரிய உடல் காலஞ்சென்றால் சிறிதா யும் சிறிய உடல் காலஞ்சென்றால் பெரிதாயும் இருத்தலால் பூதக்கூட்டத்தில் தோன்றும் அறிவன்று; கன்மத்துக்கீடாக வே வடிவெடுத்துக் கொள்ளுதலாமென்று கருதுவாயாக. எ-று. (கஉ)

இயல்புகாணிவை யென்னின் வேறிசை
பெண்ணொடாணிரு தன்மையாஞ்
செயல்கொளர்விவர் செய்திகாரண
மாகவந்து செனிப்பதே
னியல்பதாமுடல் பூதகாரிய மாவதும்மிலை
யாகுமான்
மயலதாம்வினை யாலொருத்தன் வகுத்ததன்மை
யின் வந்ததே.

(பொ-ரை.) கன்மம் உடலாக வெடுத்துக் கொள்ளுதற்கறி வில்லை இவையெல்லாம் பூதவியல்பென்று நீ சொன்னால், இயல்பு ஒரு தன்மைப்பட்டிருத்தலன்றி வேற்றுமைப்படப் பொருந்தி இரண்டுதன்மையாகிய பெண் ஆண் என்னும்முறை

மையைக் கொள்ளாது; இதல்லாமலும், பூதகாரணமாகில் இரண்டு தன்மைப்படப் பெண் ஆண் என்னும் முறைமைகாரணமாகப் பிறப்பதென்னை? ஆகையால், இயல்பாமென்ற வுடல் பூதவியல்புமல்லவாய்ப் பூதகாரியமாவதும் இல்லையாம்; அதனால், நீ கூறியது மயக்கத்தை யுடைத்தாம்; கன்மத்துக்கீடாக ஒருத்தன் உண்டாக்கப்பட்ட தன்மையினாலே உருக்கள் வருமென்றறிவாயாக. எ-று. (கரு)

காரணம்மவை யென்றதென்னைகு டாதிபோ
னிகழ் காரிய
நேரணைந்து சமைந்துநின்றிடு மென்ப
தும்மது நேர்கிலோம்
போரணைந்திடு மொன்றேடொன்று பொருந்து
மாகில் வருந்தியு
நீரணைந்தொரு தீயினின்றது கண்டதாயி
னிகழ்த்திடே.

(பொ-ரை.) உருக்கட்குப் பெண்ணாண் செய்திகாரணமென்று நீ கூறியதென்னை? மண்ணினிடத்தில் கடாதிகள் தோன்றுமாறுபோலப் பூதகாரணத்தில் பெண் ஆண் காரியப்பட்டுத் தம்மிற் கூடிய கூட்டத்தே உருச்சமைந்திடுமென்று நீ சொல்லுகிற இது யாம் பொருந்துகிறேமில்லை; அதெப்படியென்னில், நீ கூறிய பூதங்கள் நான்கும் தம்மின் மாறுபடும் அவை மறுதலையாகாமல் கூடுமாயின் நீருந்தியும் ஓரிடத்தில் கூடிநின்ற தன்மையை உன்பிரத்தியட்சப் பிரமாணத்திற் கண்டதுண்டாயின் வருந்தியாவது சொல்வாயாக. எ-று.

பூதமேவு புணர்ச்சியே புரிகாய
காரண மாகுமேற்
காதலானொடு பெண்ணுமேவு புணர்ச்சி
காரண மாவதென்
ஆதியேயுலகத்தி லானொடு பெண்ணு
மாயணை காரிய
நாதனாயகி யோடுகூடி நயந்த
காரண மென்பரே.

(பொ-ரை.) பூதக்கூட்டமே பொருந்தப்பட்ட காயத்துக் காரணமாயின், பெண் ஆண் காதலோடு புணரும் புணர்ச்சி காரணமாக வுருக்கள் காரியப்படுவானேன்; அங்ஙனமானது, அநாதியே கர்த்தாநாயகியோடு கூடிப்போகத்தை விரும்ப, அது காரணமாக ஆதியே உலகின்கண் ஆண் பெண் காரியப்பட்டு அது காரணமாக உருக்கள் காரியப்பட்டு வருதலன்றிப்பூதக்கூட்டங் காரணமெனப் படாது. எ-று. (கரு)

கந்தம்வெம்மை கலந்திடும்புனல் கன்மமென்
செய்ததென்றனை
சந்தனந்தழல் சாரநீரிரு தன்மையுற்றிடு
மாறதோர்
தந்தகன்மமி ரண்டணைந்து தருஞ்சுகத்தொடு
துக்கமுஞ்
சிந்தியாவெழு சிவனுற்றிடும் வேறுடற்கிலை
தேறிடே.

(பொ-ரை.) தண்ணீரானது சந்தனாதிகளைக் கூடிக் குளிர்ந்தும் நெருப்பைக்கூடி வெப்பங்கலந்துமிருத்தலால், இதென்னகன்மஞ் செய்தது, ஆதலாற் கன்மமில்லையென்று கூறினாய்; நீ உவமானங்கூறிய நீர் சந்தனத்தையும் தழலையுஞ் சார ஒரு பொருட் கிரண்டுதன்மையுண்டான வாறுபோல விசாரிப்பாயாக, கன்மமிரண்டு வகைப்படப் பொருந்திச்சுகதுக்கங்களைக் கொடுக்கும்; அந்தச் சுகதுக்கங்களை யுற்றறிந்திடுவது சேதனமான வுயிருக்கல்லது அசேதனமான உருக்கட்கில்லையென்றறிவாயாக; எ-று. (கசு)

இன்பமெய்தியிருந்து நீவினையில்லை
யிங்கியல்பென்றிடிற்
றுன்பமெய்திடுவா னென்மற்றிது
சொல்லிடாய் சொலவல்லையேல்
முன்புசெய்திடு கன்மமென்றறி
கன்மமு முதல்வன்னறிந்
தன்பினுனுவிக்கு மப்பயனுங்
கமைப் பொடநாதியே.

(பொ-ரை.) நீ பெண்களுடன் கூடிப் போக வின்பத்தை யனுபவித்திருந்தும் இயல்பொழியக் கன்மமில்லை யென்று கூறில், அந்தப் பெண்கள் நீங்கிய விடத்துத் துக்கப்படுவானேன்? இதெதால் வந்ததென்று சொல்லவல்லையாகில் சொல்லுவாயாக; பெண்களுடன் கூடிப்போகத்தை அனுபவிப்பதும் அவரை நீங்கித்துன்பத்தை அனுபவிப்பதும் நீ முன்செய்த புண்ணிய பாவமென்றறிவாயாக; அந்தப்புண்ணிய பாவங்களுந் தானாக அணைவதன்று, கர்த்தாவானவன் அறிவுகள் செய்தகன்மத்துக் கீடாக அறிந்து அனுக்கிரகத்தாலே ஊட்டுவன்; அறிவுங் கன்மமும் அதனைக் கூட்டுதலும் அநாதியே யுள்ளது. எ-று. (கள)

அநாதியேலமைவின் றெனின்
மலமாயைகன்ம மணுச்சிவன்
அநாதிகன்மமணுக்கள் செய்யவறிந்து
கன்மமுடற் செயா
அநாதிகாரிய மாமுடற்க
ளசேதனம் மனையாவறிந்
தநாதியாதி யமைக்கவேண்டு
மமைப்பினேடு மநாதியே.

(பொ-ரை.) நீர் கூறியவை யநாதியே யாமாகில் ஒருவனாற் கூட்டுதலில்லை யென்று கூறின், மலமும் மாயையும் கன்மமும் கர்த்தாவும் அநாதி; கன்மத்தை யான்மாக்கள் செய்ய அந்தக்கன்மந்தானறிந்து ஆன்மாக்களுக்கு உருவை எடுத்துக் கூட்டமாட்டாது; அநாதியே காரியப்பட்டு

வரும் உடற்தள் அசேதனமாகையால் ஆன்மாவை அறிந்து கூட்டமாட்டாது; ஆகையால், அநாதியாகிய கர்த்தா ஆன்மாவையுங் கன்மநீதையும் அதற்குப் பொருந்தின உருவையும் ஆதியாகக் கூட்டல் வேண்டும்; அப்படி அவன் கூட்டினகூட்டரவும் அநாதியானதனால் இதுவும் அநாதிதான். எ-று. (கஅ)

காணொணுகரணங்களுக் குயிர்கண்
டிடாமையினின் றெனிற்
காணுமோகடங்கண்ட கண்ணினைக்
கண்டு நிற்பதுங்கண்ணதே
காணொணுதுயிர் தானுமிப்படி
கண்டிடுங் கரணங்களைக்
காணொணு கரணங்களுக்குயிருண்மை
யாவதுங் கண்டிடே.

(பொ-ரை.) புறக்கரணங்களுக் குயிர்காண வொண்ணுதாகையாற் காட்சிக்குப் புலப்படாமையின் ஆன்மாவென்று ஒன்றில்லையென்று கூறின், சரீரமானது தன்னைக்கண்ட கண்ணைத்தான் காணவல்லதா? அச்சரீரத்தைக் கண்டு நிற்பதுங் கண்ணுக்குள்ள தொழிலேகாண்; பிரத்தியட்சமாகிய கண்ணுக்குக் காணவொண்ணுதென்ற வுயிருமித்தன்மைத்து; உயிர் சேதனமாகையாற் கரணங்களைக் கண்டு நிற்கும்; கண்களைச் சரீரமறியாதவாறுபோலக் கரணங்களும் அவ்வான்மாவைக்காணவொண்ணுது; ஆன்மாவை உண்மையாக உண்டென அறிவாயாக. எ-று. (கக)

அங்கியானது தானுமொன்றை யணைந்து
நின்று நிகழ்ந்திடும்
பங்கியாதுயிர் தானுமிப்படி பற்றியல்லது
நின்றிடா
தெங்குமார்தயி லதிதையுண்டெழு தீபமான
தெரிந்திடு
மங்கதாமுட னின்றுகன்ம மருந்தியா
ருயிராவதே.

(பொ-ரை.) நெருப்பானதோ ரிந்தனத்தைப்பற்றி நின்று தன்வடிவைக் காட்டுந் தன்மையன்றித் தனித்துநின்று தன் வடிவைக்காட்டுந் தன்மையை யுடைத்தன்று; அதுபோல ஆன்மாவும் ஓர் உருவைக்கூடியன்றி நிற்கமாட்டாது; தகளியெங்கும் நிறைந்த எண்ணெயைப்பருகி யோங்கிய தீபமான தெரியாநிற்கும்; அப்படிக்கன்மத்தா லெடுத்துக்கொண்ட காயத்தினின்றுங் கன்மத்தைப்புசிப்பதான்மாவாம். எ-று. ()

(இன்னும் வரும்)

உ.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞ்ஞானசம்பந்தகுருப்யோநம:

# தாயுமான சுவாமிகளருளிச் செய்த பாடல் உரை.

---

## பொருள்வணக்கம்.

முன்தொடர்ச்சி.

விண்ணுதிபூத மெல்லாந் தன்னகத்திலடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணுரக்கண்டவன்பர் கண்ணூடேயானந்தக்
கடலாய் வேறொன்
றெண்ணுதபடிக் கிரங்கித் தானுகச் செய்தருளு
மிறையே யுன்றன்
தண்ணருஞ்சாந்தவருடனை நினைந்து காமலர்க
டலை மேற்கொள்வாம்.

(பொ-ரை.) ஆகாயம் முதலான பூதங்களை யெல்லாம் தனக்குள்ளே யடக்கிவெட்டவெளியாகி ஞானக் கண்ணிறையும்படி தரிசித்த அன்பர்களுடைய அந்த ஞானக் கண்ணினிடத்து இன்பசாகரமாகி அந்த அன்பர்கள் மற்றொன்றையும் நினையாத வண்ணம் அவர்களிடத்தில் மனமிரங்கி தானுகச் செய்தருளாநின்ற தலைவனே உனது குளிர்ச்சி நிறைந்தசாந்தருபமான கருணையை யெண்ணிக் கைம்மலர்களைச் சிரத்தின் மீது கொள்வோம். (க)

விண்ணிறைந்த வெளியா மென்மனவெளியிற்
கலந்தறிவாம் வெளியினூடும்
தண்ணிறைந்தபேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்தபேரன்பாலுள்ளுருகி மொழிகுழறி
யுவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக்கர முகிழ்ப்பநின்னருளைக்
கருத்தில் வைப்பாம்.

(பொ-ரை.) பூதாகாயம் நிறைதற்குரிய பரமாகாயமாகி எனது இதயாகாயத்திற் சேர்ந்து ஞானுகாயத்திலும் குளிர்ச்சிமிகுந்த பெரிய அமிர்தமாகி இடையறுத இன்பமயமான பெருமையுடையோனே உன்னிடத்தில் தனக்குள்ளே நிறைந்த பேரன்பினுல் மனங்கரைந்து சொல்தமொறி சந்தோஷமடைந்து விழிகள் தம்மிடத்து நிறைந்த நீரைச்சிந்தகைகள்குவிய உன் கருணையை எமது கருத்திலிருத்துவோம்.

ஆதியந்தங்காட்டாத முதலா யெம்மை
யடிமைக்காவளர்த் தெடுத்தவன்னைபோல
நீதிபெறுங்குருவாகி மனவாக்கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமலமாகி
வாதமிடுஞ்சமய நெறிக்கரியதாகி
மௌனத்தோர்பால் வெளியாய் வயங்காநின்ற
சோதியையென் னுயிர்த் துணையைநாடிக்கண்ணீர்
சொரியவிருகரங் குவித்துத்தொழுதல் செய்வாம்.

(பொ-ரை.) தோற்றக் கேடுகளை யுடையதல்லாத முதற்பொருளாகி எங்களைத் தனது திருத்தொண்டுக்காக வளர்த்தெடுத்ததாய்போல நீதியையுடைய ஆசாரியனாகி மனோவாக்குக்களுக்குத் தட்டுப்படாத சாசுவதப் பொருளாகி களங்கரஹிதமாகி மலரகிதமாகி தர்க்கவாதஞ் செய்கின்ற சமயமார்க்கங்களுக்கு அறிவரிதாகி மௌனநிலையை யுடையோரிடத்து வெளிப்பட்டு விளங்குகின்ற தேஜோராசியை என்னுயிர்க்குதவியாயிருப்பதைக் குறித்து கண்கள் நீரைச்சிந்த இருகைகளையுங் குவித்து வணங்குவோம் யாம். (கக)

அகரவுயிரெழுத்தனைத்து மாகிவேறு
யமர்ந்ததெனவகிலாண்ட மனைத்துமாகிப்
பகர்வனவெல்லாமாகி யல்லதாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மையாகித்
துகளறுசங்கற்ப விகற்பங்களெல்லாந்
தோயாதவறிவாகிச் சுத்தமாகி
நிகரில்பசுபதியான பொருளைநாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பானினைதல் செய்வாம்.

(பொ-ரை.) அகாவுயிரானது எல்லாவெழுத்துக்களுந் தானேயாகி அவற்றிற்கு வேறாகியமைந்து நிற்பதுபோலச் சகலாண்ட சராசரங்களும் தானே ஆகி சொல்லப்படுவனவாகிய பொருள்களெல்லாமாகி அவையல்லாததாகி எல்லாப்பொருள்களுக்கும் மேலான பொருளாகி சொல்லுதற்கரிய தன்மையதாகி குற்றமற்ற சங்கற்பமும விகற்பமுமாகிய எல்லாவற்றினும் படியாத ஞானவடிவாகி புனிதமாகி ஒப்பற்ற ஆன்மாக்களுக்கு இறைவனாகிய வஸ்துவை உத்தேசித்து பெருமூச்செறிந்து பெரிதான அன்போடு தியானிப்போம் யாம்.

### சின்மயானந்த தரு.

அங்கைகொடுமலர்தூவி யங்கமதுபுளகிப்ப
வன்பினாலுருகிவிழிநீர்
ஆறாகவார்த்த முத்தியின தாவேச
வாசைக்கடற் குண்மூழ்கிச்
சங்கரசுயம்பு வேசம்புவே யெனவுமொழி
தழுதழுத்திட வணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
தண்ணருள்கொடுத் தாள்வையோ
துங்கமிகு பக்குவச்சனகன்முதன் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியை யொரு சொல்லாலுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமலபீடமேற் கல்லாலடிக்குள் வளர்
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(பொ-ரை.) அழகிய கைகளால் மலர்களைச் சொரிந்து சரீரமானது புளகங்கொள்ள அன்பினால் மனங்கரைந்து கண்ணீர் ஆறாகிப்பெருக தெவிட்டாத மோக்ஷாவேசத்தோடுகூடியவாசையாகிய சமுத்திரத்தில் முழுகிசங்கரனே சுயம்புவாயிருப்பவனே சம்புவாயிருப்பவனே என்று துதித்தும் மொழிகுழறும்படி தொழுகின்ற நன்னெறி யொழுக்க மில்லாத துன்மார்க்கனாகிய என்னையும குளிர்ச்சியாகிய கருணைசெய்து ஆண்டருள்வாயோ பரிசுத்த மிகுந்த பக்குவத்தை யுடைய சனகன்முதலாகிய முனிவர்கள் நால்வரும் வணங்கிச் சமீபத்தில் வீற்றிருக்க சொல்லுதல் அருமையாகிய ஒப்பற்ற ஞானமார்க்கத்தை ஒரு மொழியால் அறிவுறுத்தி சொரூபானுபவத்தைக் காட்டி செவ்விய பத்மாசனத்தின்மீது கல்லாலின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற முடிவுசெய்யப்பட்ட மோட்சப் பிரதமான முதற்பொருளே சிரகிரியின்கண் ஆன்மாக்கள் பிரகாசிக்க வெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே ஞானானந்தங்களைக் கொடுக்கிற சதாசாரியனே. (க)

ஆக்கையெனுமிடிகரையை மெய்யென்றபாவிநா
னத்துவிதவாஞ்சையாதல்
அரியகொம்பிற்றேனை முடவனிச்சித்தபடி
யாகுமறிவவிழவின்பம்
தாக்கும்வகை யேதினாட்சரியைகிரியாயோக
சாதனம் விடுத்ததெல்லாம்
சன்மார்க்கமல்ல விவைநிற்க வென்மார்க்கங்கள்
சாராதபேரறிவதாய்
வாக்குமனமணுகாத பூரணப்பொருள்வந்து
வாய்க்கும்படிக்குபாயம்
வருவித்துவட்டாத பேரின்பமானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித்திளைத்த நீமுன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(பொ-ரை.) சரீரமென்கின்ற இடிகரையை உண்மையென்றெண்ணி யிருக்கிற பாவியாகிய நான் அத்துவிதப் பொருளின்மேல் இச்சைவைத்தல் யெட்டுதற்கரிய கொம்பிற் கட்டப்பட்டிருக்கின்ற தேனை உண்ண முடவன் விரும்பினவிதமாகும் இவ்வாறானபின் எனது அறிவானது விகசிக்கும்படி சுகமுண்டாகும் வகையாது இன்னாளளவும் சரியைகிரியை யோகம் என்பவற்றின் பழக்கத்தைவிட்டு விட்டதெல்லாம் நல்லநெறியன்று இவைநிற்கட்டும் இத்தன்மையான மார்க்கங்களும் அணுகாத பெரிய அறிவுருவாகி வாக்கும் மனமும் பொருந்தாத பூரணவஸ்துவானது வந்துகிடைக்கும்படி உபாயத்தை யுண்டாக்கித் தெவிட்டாத பேரானந்தமான இன்ப சாகரத்தை வாய்வைத்து நிறைய அனுபவிக்க நீ எனக்குப் பிரத்தியக்ஷமாவது எக்காலம் சித்தாந்த முத்திமுதலே. (உ)

ஒளவியமிருக்க நானென்கின்றவாணவ
மடைந்திட்டிருக்கலோபம்
அருளின்மை கூடசகலந்துள்ளிருக்கமே
லாசாபிசாசமுதலாம்
வெவ்வியகுணம் பலவிருக்குமென்னுறிலூடு
மெய்யனீவீற்றிருக்க
விதியில்லையென்னிலோ பூரணனெனும் பெயர்
விரிக்கிலுரை வேறுமுளதோ
கவ்வுமலமாகின்ற நாகபாசத்தினாற்
கட்டுண்டவுயிர்கண்மூர்ச்சை
கடிதகலவரியவரு ஞானசஞ்சீவியே
கதியான பூமிநடுவுள்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுணமேருவே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

(பொ-ரை.) பொறாமையானது இருக்கவும் நான் என்கிற ஆணவமானது சேர்ந்திருக்கவும் லோபகுணமும் அருளில்லா

யையும் கலந்து உள்ளேயிருக்கவும் பின்னும் ஆசையென்னும் பேய் முதலாகிய கொடிய குணங்கள் அனேகம் தங்கியிருக்கின்ற என்னறிவினிடத்தில் மெய்யனுகிய நீ எழுந்தருளியிருக்கவிதியில்லை யென்று சொல்வாயாயின் பூரணன் என்கின்ற உன்திருநாமத்தை விரித்தால் இதின் பொருளானது வேருயும் இருக்குமோ பற்றுகின்ற மும்மலமாகிய நாகபாசத்தால் பிணிப்புண்ட உயிர்களுடைய மூர்ச்சித்துக் கிடக்கிற நிலைவிரைவாக நீங்கும்படி பிரார்த்தியாமலே வந்தஞானசஞ்சீவினியே மோக்ஷமென்கிற நிலத்தினிடையில் செவ்வையாக வளர்ந்துயர்ந்த தெய்வீகமான குணமலையே சித்தாந்த முத்திமுதலே. (ரு)

ஐவகையெனும் பூதமாதியை வகுத்ததனு
வசராசரபேதமான
யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்துமறை
யாதிநூலையும் வகுத்துச்
சைவமுதலாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங்கடந்தமோன
சமரசம் வகுத்த நீ யுன்னைநானணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையே
பொய்வளரு நெஞ்சினர் கள்காணுத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரிபூரணவகண்டிதாகாரமாய்ப்
போக்குவரவற்ற பொருளே
தெய்வமறைமுடிவான பிரணவசொரூபியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணமூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

(பொ-ரை.) ஐந்துவகை யென்று சொல்லப்படுகிற பூதங்கள் முதலான பிரபஞ்சத்தைப் படைத்து அதனிடத்தில் அசரம் சரமென்று வேறுபட்டிருக்கிற உயிர்கள் எல்லாவற்றையும் படைத்து அவைகளுக்கு நல்லுணர்வையும் படைத்து வேத முதலான நூல்களையும் படைத்து சைவமுதலாகிய அளவில்லாத சமயங்களையும் படைத்து அதற்குமேல் சமயாதீதமான மோனமாகிய சமரச நிலையைப் படைத்த உன்னையான் அடையவும், குளிர்ந்த கிருபையை நீ படைக்கவில்லையோ, பொய்யானது விர்த்தியடைகின்ற மனத்தையுடையவர்களாகிய அஞ்ஞானிகள் காணுக் கூடாதகாட்சியே! பொய்யில்லாத மெய்யாது அறிவினிடத்து ஞான பரிபூரண அகண்டிதருபமாகி போக்குவரவுகள் இல்லாதிருக்கிற வஸ்துவே; தெய்வீகமான வேதத்தின் முடிவாகிய ஓங்காரசொருபியே சித்தாந்த முத்தி முதலே. எ-று. (அ)

ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினுல்
ஆகின்றவாக்கை நீர்மே
லமர்கின்ற குமிழியென நிற்கின்றதென்னநான்
அறியாதகாலமெல்லாம்
புந்திமகிழுறவுண்டு டுத்தின்பமாவதே
போந்த நெறியென்றிருந்தேன்
பூராயமாக நினதருள் வந்துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை
எந்த நிலைபேசினு மிணங்கவிலையல்லா
லிறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணா நானெஞ்சதுபகீரெனுந்துயிலுறு
த்ருவிழியுமிரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகானதங்ஙமிவை யென்கொலோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(பொ-ரை) "ஐந்துவகையா யிருக்கிற பூதபேதத்தினுல் உண்டாக்கப்படுகின்ற சரீரமானது நீரின்மீது அமைந்த குமிழியைப்போல நிற்கின்ற தென்றும் நான் உணராதகால முழுதும் மனமகிழ்ச்சிமிகும்படி உண்டுடுத்த இன்பம் அனுபவிப்பதே கைவந்த நல்லமார்க்கமென்று நினைந்திருந்தேன் உன்றிருவருள் வந்து ஆதியந்தமாக அறிவிக்க இவைகள் போன வழிதோன்றவில்லை; எந்த நிலையை யெடுத்துப் பேசினுலும் சம்மதிக்கவில்லை; அல்லாமலும் மரணத்தோடு சனனத்தையும் மனத்தில் நினைத்தால் மனமானது பகீரென்கின்றது; இரண்டுகண்களும் நித்திரைசெய்யாது சரீரமானது இரவுபகலாக செந்தீயிலிட்ட மெழுகாய் உருகுகின்றது! இத்தன்மைகள் என்னிடத்து உண்டாவதற்குக் காரணம் யாது? சித்தாந்தமுத்தி முதலே. எ-று. (கூ)

காரிட்டவாணவக் கருவறையிலறிவற்ற
கண்ணிலாக்குழவியைப்போற்
கட்டுண்டிருந்த வெமைவெளியில் விட்டல்லலாங்
காப்பிட்டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசபாழ்ம்பொய்யுடல்
பெலக்கவிளையமுத மூட்டிப்
பெரியபுவனத்தினிடைப் போக்குவரவுறுகின்ற
பெரியவிளையாட் டமைத்திட்
டேரிட்டதன்சுருதி மொழிதப்பி நமனைவிட்
டிடருறவுறுக்கி யிடர்தீர்த்
திரவுபகலில் லாதபேரின்ப வீட்டினி
லிசைந்து துயில்கொண்மினென்று
சீரிட்டவுலகன்னைவடி வானவெந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணமூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(பொ-ரை.) கருமையாகிய ஆணவமலத்தால் உளதாகின்றகருவாகிய சிறுவீட்டில் உணர்ச்சியில்லாத கண்ணற்ற குழந்தையைப்போல கட்டுப்பட்டிருந்த வெங்களை வெளியில் வரச்செய்து துன்பமாகிய காவலையமைத்து அதற்குப் பொருத்தமான பெயரமைத்து உண்மை யென்று பேசப்படுகின்ற பாழாகிய நிலையற்ற சரீரமானது வலிமை பெறும்படி விளைகின்ற பலவகை உணவுகளை யுண்பித்துப் பெரிதாகிய உலகத்தின்கண் இறப்புப் பிறப்புகளாகப் பொருந்துகின்ற பெரிதாகிய லீலையை அமைத்து வைத்து அழகுபொருந்திய தன் சொல்லாகிய வேதமார்க்கத்தில் தவறினுல் அப்படித் தவறினவுயிர்களை, யமனையனுப்பித் துன்பம் மிகும்படித்தண்டித்து அத்துன்பத்தையும் நீக்கி இராப்பகல்கள் அற்றபேரானந்த வீட்டிற்பொருந்தித் தூங்குங்கள் என்று எங்களுக்கு எல்லாச் சிறப்புக்களையும் அமைத்துவைத்த லோகமாதாவின் ரூபமான எமது தந்தையே சித்தாந்த முத்திமுதலே; எ-று.

(இன்னும் வரும்.)

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

1897ஹு அக்டோபர்மீ 21வ

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநமஃ

## விநாயகப்பிரபாவதீபிகை.

(முன்தொடர்ச்சி)

இந்தப்பிரணவம் தாரகமென்னும் பெயரினை யுடையது என்று முன்னே கூறினுமன்ரே? காசி க்ஷேத்திரத்தில் இந்தப்பிரணவ தாரகத்தையே சிவபெருமான் பிராணோத்கிரமணகாலத்தில் உயிர்களுக்கு உபதேசிக்கின்ருரென்று வேதங்கள் கூறுகின்றன. இவ்வுபதேசத்தால் அவ்வுயிர்கள் சிவனரது ஸாரூப்யத்தையேயடைகின்றன. இதுவும் வேதபடிதமாகியதுநிச்சயம். இவ்வுண்மையையோசிப்பவர்கள்மந்திரராஜமாகியதாரகத்தைச் சிவவடிவமென்னது வேறுயாதாகக்கூறுவார்கள்? பிரணவோபதேசத்தால் சிவஸித்தியே பிராப்தமாகின்றமையால், ஓமென்னும் அந்தப்பிரணவத்தைச் சிவஸ்வரூபமாகத்தெளிவது வெகுசுலபமென்க. இதனை அங்யதாகிரகிப்பது பாவத்தின் பயனென்றே அறியத்தக்கது. என்னை? காசியி லுபதேசிக்குந் தாரகமந்திரம இராமநாமமாகையால், இதுவே அந்தப்பிரணவதாரகமாமெனின், அதுகூடாது. எங்ஙனமெனின், காசியிலுபதேசிக்கு மந்திரம் இராமதாரகமாயினுமாகுக, பிரணவதாரகமாயினுமாகுக. அவ்வுபதேசத்தாற் கிடைக்கும்பேறு சிவப்பேருக முடிந்தமையா லவ்வுபதேசமந்திரம் சைவமந்திரமேயாகும். இராமநாமம் சிவமந்திரமாவதெங்ஙனமெனின், சிவஸஹஸ்ரநாமத்தில் இராமநாமம் படிக்கப்பட்டிருத்தல்காண்க. இராமாவதாரஞ் செய்தவர் சிவபெருமானன்றெனின், தசரதன் சேய்க்கே இராமநாம முரித்து என்று யாம்கொள்ளாமையால், சிவன் இராமாவதாரஞ் செய்யாதது எமக்குப் பாதகமானதில்லை. தாசரதியைக்காட்டிலும் வேறு இராமருளரோவெனின், இவருக்கு முன்னெரு இராமரும், பின்னெரு இராமரும் முறையே பரசுராமர் பலராமர் என்று கேட்கப்பட்டனமையால், இராமர் ஒருவரேயென்று சாதிக்கமுடியாது. தசரதராமருக்கு நமது எதிரிகள் கூறிய கௌரவம் விபசரித்துவிட்டமையாலும், பரசுராமர், பலராமர் என்பவர்களைத் தாரகப்பிரமங்களென்று வாதிப்பவரில்லாமையாலும் இம்மூவருந் தாரகப்பொருள்களாகாரென்பது ஸ்திரமாயிற்று. ஆகவே, இம்மூவருக்கும் வேருயுள்ளவரும், சிவபக்தர்களாகிய ஜமதக்னியும், தசரதரும், வசுதேவருந் தங்கள்பிள்ளைக்கு இராமர் என்று பேரிடுவதற் காதாரமாயுள்ளவருமாகிய ஸ்ரீ சிவபெருமானே இராமநாமத்துக்கு உரியவரென்பது சித்தாந்தமாயிற்று. இராமநாமம் விஷ்ணுவினது பரியாயநாமங்களிலொன்ருகாமையாலும், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் அதுபடிக்கப்படினும், சிவஸஹஸ்ரத்திற் படிக்கப்பட்டு விபசரிக்கின்றமையாலும், அன்றி, காசிப்பதியிலிறக்கின்றவர்களுக்குச் சிவஸித்தியைத் தருகின்றமையாலும் அம்மந்திரம் சிவமந்திரமென்பதே சித்தம். உண்மையாக விசாரிப்பவர்கள் காசிப்பதியிற் பிரணவதாரக முபதேசமாவதன்றி இராமதாரகமன்றெனவே துணிந்து கூறுவார்கள். இராமரஹஸ்யோப நிஷத்து, இராமதாபந்யுப நிஷத்து முதலியவைகளில் இராமருக்கு மூன்று கண்ணும் ஸோமார்த்த தாரணமும, ஜடாமண்லகஹ்வரமுங் கேட்கப்படுமுண்மையாலும் இராமமந்திரம் சைவமந்திரமாவதிற் றடையில்லை. இவ்விராம மந்திரமே தாரகமாயினும, பிரணவமே தாரகமாயினும் அவை சிவமந்திரங்களாக முடிந்தமையால், பூர்வபட்சிகள் வாய்திறக்கவிடமில்லாதொழிந்தது. இதனல், யாமிப்போதெடுத்துக்கொண்ட ஓம் என்னும் பிரணவம் சிவபரமாகத்துணியப்பட்டு அகர உகர மகரங்களாலாகியும், எல்லா மந்திரங்களுக்கும் முதலினின்று அவைகளையியக்கிப் பலஞ்செய்விப்பதாகியும், அவைகளினின் றும்பிரிந்து ஸ்ரீமூலமந்திரவடிவமாகி "ஏகாக்ஷரி" என்று பிரஸித்தியடைந்திருப்பதாகியும் விளங்குவதாலும் "வேறுமாகி" என்று யாமெடுத்துக் கொண்ட இச்செய்யுளிற் கூறியிருக்கு நலம் ஸமர்த்திக்கப்பட்டது.

இன்னும் "வேறுமாகி" என்பதனுண்மையை விரிப்பாம். அகர வுகர மகரங்களாகிய வியஷ்டிப்பிரணவமாகியும், இம்மூன்றெழுத்தானுமாகிய ஓம் என்னும ஸமஷ்டிப்பிரணவமாகியும் விநாயகக்கடவுள் விளங்குகின்ருரென்பது அவரது அருள்விலாஸமேயாகை

யால், உயிர்தண்மாட்டிரங்கி அவரிவ்வதிசய கோலங்களைக் கொள்ளாதபோது அவர்மாட்டு "ஒருநாமமோருருவமொன்றுமிலான்" என்னும் ஆசாரிய ஸூக்தியே பிரமாணமாய் நிற்கும். இவ்வுண்மையால் "வேறுமாகி" என்றது வியஷ்டியாயும், ஸமஷ்டியாயும் அவர் பிரணவாதாரமாயினமை தம்பொருட்டன்றென்பதையே தெரிவித்தது. "இன்னதன்மையனென்றறியாச்சிவன்" என்னும் பிரமாணத்திலிஃதடங்குமென்க. இனிப் "பலவேறுதிருமேனி தரித்துக்கொண்டு" என்றது (சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மஹேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் முதலிய) பலவருட்கோலங்களை, விநாயகர் பலதிருமேனிகளெடுத்து உயிர்களுக்கு அருளுந் தன்மையைமேலே விரித்தாம். ஆண்டுக்கண்டுகொள்க. அன்றியும் அவ்விநாயகப் பெருமானது திருவிளையாடல்கள் அவரதுபுராணத்திற் படிக்கப்பட்டவாற்றானுங் கண்டுதெளிக. இதுநிற்க.

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னுஞ்சதுர்விதபுருஷார்த்தங்களையுந் தம்மை வழிபடுவார்க்கு விநாயகக்கடவுள் அருள்வாரென்பதை "புகரில்பொருணான்கினையு மிடர்தீர்ந்தெய்தப் போற்றுநருக்கறக்கருணைபுரிந்து" என்பது தெரிவிக்கின்றது. இதனால் அவரதுவழிபாட்டானல்லது அறம், பொருள், இன்பம், வீடு என்னும்பேறுகள் புருடர்க்கு வந்தெய்தாவெனல் பெறப்படுகின்றது. யாவு மிவரைவழிபடுதலினானே யுண்டாவதால் பிறரைவழிபடுதலவலமாமெனின், அவரை யதிட்டித்து அவர்மாட்டுச் சீவர்கள் புரியும்வழிபாட்டையேற்று விநாயகப் பெருமானே பலந்தருவது உண்மையாகையால், அப்பிறர்வழிபாடும் விநாயகரதுவழிபாடே யாமென்றறிக. "யாதொருதெய்வங் கொண்டீரத்தெய்வமாகி யெங்கள், மாதொருபாகனார் தாம்வருவர்" என்னும் பிரமாணத்தானு மிதனை யறிந்திடுக. இதனை விரிக்கில், அறம் பொருள்-இன்பம் என்பவைகளை மாத்திரமே பிறதேவர்களை யதிட்டித்து உயிர்களுக்கருள்வதன்றி வீட்டின்பத்தினை யொருவரையதிட்டியாமல் தாமே தந்தருளுந் தலைமைப்பாடுடையராதல் பெறப்படும். இதனால், ஏனையதேவர்களை வழிபடுதலால் மோக்ஷவின்பங் கைகூடுமெனவும் அறியத்தக்கது. அவ்விநாயகக் கடவுளுக்கு வேறாகாத சிவபெருமான், உமாதேவியார், சுப்பிரமணியர், வீரபத்திரர் முதலியவர்களையும், ஞானஸம்பந்தாதி ஆசாரிய மூர்த்தங்களையும், அவரது திருவருளெய்திய சிவஞானச்செல்வர்களையும் வழிபடுதலும் வீடுபேற்றைத் தருமென்று மெய்ஞ்ஞானிகள் விதப்பரென்க. இவ்வாறருளுதலை அறக்கருணை யெனவும், தம்மைவழிபடாதவர்க்கு அவரருளுதலை மறக்கருணையெனவும் பிரஸ்தாபித்தமையால் அதனையுங் கொஞ்சம் எடுத்திசைப்பாம்.

அறக்கருணை = இதரூபமாக வருளல். மறக்கருணை = அகிதரூபமாகவருளல். இவற்றுள், இதரூபமாகவருளல் வெளிப்படை. அகிதரூபமாகவருளலே இனித்தெரியத்தக்கது.

"ஓடியதேரின் கீழுயிர்போனகன்றாலே
நீடுபெரும்பாவமின்றே நீங்குமென
நாடித்தன் மைந்தனையுமூர்ந்தோன் வழக்கேவழக்காக
நஞ்சனையசிந்தை நமன்றூதர்
வெஞ்சினத்தா-லல்லலுறுத்து மருநரகங்கண்டுநீற்க
வல்லகருணைமறம்போற்றி"

என்னும் போற்றிப்பஃறொடையால் மறககருணையின்றன்மை வியக்தமாகியது. இனி இதனை யினிது விளக்குவாம். மநுநீதிகண்ட சோழர் தமதுசெல்வப் புதல்வனை இரதத்தின் கீழ் வீழ்த்தியது கொடுமையேயாயினும், அது அப்புதல்வன் பசுவின் கன்றின்மேல் இரதத்தையோட்டியதனானேர்ந்த பாவத்தைப் பரிகரிக்கும் பண்பினதாய் முடிந்தமையின், அதனைக் கருணையென்றே கருதினர் மேலோர். அரசவள்ளல் தனது செல்வப் புதல்வன்மாட்டுக் கருணைகாரணமாக அவ்வாறு செய்ததன்றிக் கொடுமைகாரணமாகவன்று. தனதுமகன் கோஹத்தியால் நிரயத் துன்பத்தழுந்தி வருந்திப் பின்னும் பல பிறவிகளெடுத் துழலாவண்ணம் அந்தப்பிறவியிற்றானே அவனுடைய பாவத்தைத் துடைத்து அவனைப் புனிதப்படுத்தியது அவன் மாட்டுவைத்த கருணையென்னாது. வேறு யாதென்பேம்? உலகில் தமதுசெல்வப்புதல்வர்க்கு ஒருவித வலிகண்டபோது அவரை நெருப்பிற்காய்ச்சிய இருப்புக்கோலாற் சுடுவித்தலும், அவருடம்பிற்கண்ட புண்ணைக் கத்திகொண்டு அறுப்பித்தலும், அவ்வாறு சூடியும் அறுத்துந் தொழில் புரிந்தவர்க்கு அவர் மகிழுமாறு நிரம்ப நிதிகொடுத்தலும் அப்புதல்வரைப் பெற்றவர்க்கு உற்ற கடனாயிருப்பது யாருமறிந்த விஷயம். இது அப்புதல்வர்க்கு அப்போது அகிதமாயிருப்பினும் பின்னர் மகிழ்ச்சியையே தரும். இச்செய்கை அப்புதல்வரைப்பெற்றவரது கருணையைக்காட்டுமன்றிக் கொடுமையைக்காட்டாது. அது அநுபவிக்கின்ற காலத்திற் கொடுமையாக வருத்துதல்பற்றியே மறக்கருணை என்னும் பேர்பெற்றது. இவ்வுபமானங்களின் வாயிலாகவே சிவனாரது மறக்கருணையின்றன்மையும் வெளியாயதென்க.

சிவனாது மறக்கருணையால், சன்மாநுபவந் தீர்ந்து சிவாநுபவத்திற் செறிந்து உயிர்களின்பந்துய்த்தலாகிய பெரும்பேறு வந்துகூடுதலுண்மையாகையாலிவ்வுண்மையறிந்த ஸாதுக்கள் அக்கருணைமறத்தை வந்திப்பதன்றி நிந்தித்து வருந்தாரென்க. இவ்வருமையறிந்தே எமது உமாபதிசிவம் "கருணைமறம் போற்றி" என்று துதித்து மகிழ்ந்தனரென்க. சூடு போடவும், புண்ணையறுக்கவும், கண்ணையுரிக்கவும் வைத்தியரைத்தேடிப் புதல்வரைப் பெற்றவர்கள் அப்புதல்வர்க்கு உபகரித்தல போலவே ஸ்ரீ சிவபெருமான் தமது சொற்படி நடந்து சுகமடையர்த பாவிகளை இயமனுக்குக் காட்டிக்கொடுத்து அவன் தண்டிக்குமாறுசெய்து நலமுண்டாக்குவரென்க. நரகாநுபவம்பண்ணித் தீர்ந்தபின்னருயிர்கள் பரிசுத்தமெய்துதலால் சிவாநுபவங்கைகூடுதலவர்க்கெளிதென்க. இவ்வதீதநலங் கைகூடுதற் கேதுவாயதண்டம் உயிர்கண்மாட்டுப் பரமன் செலுத்தும் மறக்கருணையாயினது ஸர்வஸம்பிரதி பந்நமாயினதறிக. இன்னும் விரிக்கிற்பெருகும். எடுத்துக்கொண்ட விச்செய்யுளில் "இடர்தீர்ந்தெய்தப் போற்றுநருக் கறக்கருணைபுரிந்து" என்றதனால் இடரின்றியடையத்தக்கது அறக்கருணையென்று வெளிப்பட்டது. இதனால், இடர்கொண்டடையத் தக்கது மறக்கருணையென்றுபெறப்பட்டது. காலன் கைப்பட்டவுயிரிடர்கொண்டே சன்மாநுபவம்பண்ணித் தொலைத்தலால் எமதுபிரவசநம் உசிதமாயினதறிக,

இவ்வாறு உயிர்களுக்கருளும் விநாயகப்பெருமான் அநாதிமல முத்தரென்பது போன்ற "நிருமலனை" எனவும், அவர் ஸர்வகணங்களுக்குந் தலைவராதலை யறிவிக்குமாறு "கணபதியை" எனவும் ஈண்டெடுத்தோதலாயிற்று. தாம் நிர்மலராயிருந்தாலொழிய மலமுடையாரதுதோடங்களை மாற்றவேலாது. பிறரது மலமாயாதி தோடங்களை மோசித்து அவர்க்கருளுந் தலைமை யுடையாரென்பதையே "கணபதி" என்னு மவரதுதிருநாமந் தெரிவிக்கின்றது. இக்கணபதி நாமத்தால் "கணபத்யுபநிஷத்து" என வோருபநிஷத்தும் பிரகாசிக்கின்றது. அதில் இவரது பரதத்வநிலையையே யினிது பிரகாசம்பண்ணி யிருக்கின்றது. இவருக்குமேலொரு பரவஸ்து வில்லையென்பதே அதன்றுணிவு. அத்திருநாமமும் அந்தப்பொருளிலேயே பரிவஸாந முறுதலால், உயிர்கள் சுலபமாக வுலகத்துக்குத் தலைவரிவரென வறிந்தின்புறுதல் கூடுமென்க. இவ்வுண்மையால், பரமப்தியாகிய வவ்விநாயகரை வழிபடுமாறு "நினைந்துவாழ்வாம்" என்று இச்செய்யுளில் முடிவாகத் தெரிவித்ததாயிற்று. இனி நாம் வழிபடத்தக்க வவ்விநாயகரது சொரூபவர்ணனையை இனிது கூறுதும்

"ஒரு கோட்ட னிருசெவியன்
மும்மதத்தனல்வா யைங்கரத்தனறு
தருகொட்டம் பிறையிதழித்
தாழ்சடையான் றருமொருவா ரணத்தின்றாள்க
ளுருகோட்டன் பொடும்வணங்கி
யோவாதேயிரவுபக லுணர்வார்சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால்
செல்வமுமொன் றோவென்னச்செய்யுந்தேவே"

என்று அருணந்திசிவம் கட்டளையிட்டருளிய திருவரக்கில் ஒரு கொம்பும், இரண்டுசெவியும், மூன்று மதமும், நான்றவாயும், ஐந்துகரமும், யானைமுகமுங்கொண்ட இருட்கோலத்தையே துதித்திருக்கின்றது. இது உலகமுய்யவந்தருளிய சந்தானகுரவர் திருவாக்காகையாலிதனையே யாவருங் கடைப்பிடித்து வழிபடவுரியாரென்க. இவ்விநாயகரை வழிபடுதலாலாகியபயனையு மவர்கூறினாராகையாலிவரதுவழிபாடே வழிபாடெனவும், இவ்வழிபாட்டானடையத்தக்க சிவப்பேறே பெரும்பேறெனவு மதித்து, அவ்வமலநாதனை நினைந்துவாழ்தலே உலகம்பெற்றுய்யத்தக்க வாழ்க்கைப்பாடென்க. அவரைவழிபட்டு வாழவேண்டினார்க்கு "நினைந்துவாழ்வாம்" என வீண்டுக்கூறினமையால் நினைத்தலொன்றேவமையும்போலுமெனின், மனம்-வாக்கு-காயம் என்னுந் திரிகரணவழிபாடுகளிற் காயவழிபாட்டின்மேலிட்டது மனத்தின்வழிபாடு மாகையால், அதீதமாகிய மனத்தின்வழிபாட்டை மாத்திரங் கூறியது குற்றமாகாது. காயம், வாக்கு என்பவற்றின் முடிவிலேயே மனத்தின் வழிபாடு கேட்கபபடுகையால், நினைந்து என்றுங் கூறியது கைகூப்பி, துதித்து, நினைந்து என்றே முடிவுபெற்று எல்லாவழிபாடுகளையுங் கூறியதாகவே அமைந்தது. ஆகையால், யாமும் அவ்விநாயகக்கடவுளை ம்னமொழிமெய்களால் வழிபட்டு அவரது திருவருட்பிரஸாதத்தைப் பெற்று வாழ்வாமென்க.

இனியொன்று கூறுகிறோம். விநாயகக்கடவுளை முதற்கண்வழிபடாதவர்க்கு எடுத்தகாரியம்விக்கமின்றி நிறைவேறமாட்டாதென்னவும், அதுகாரணமாகவே யாவரும் அவரை முதற்கண்வழிபடவேண்டியதெனவும் ஆன்றோர் கூறுகின்றனர். இது எமக்கு மொப்பேயாயினும் யாமிந்தக் காரணத்தையே முத

லாகக் கொள்ளாமல் அவ்விநாயகக்கடவுள் முதற்க டவுளாயிருப்பது பற்றியே அவரை வழிபட்டுவாழ் வாமென்க, இன்னும் விரிக்கிற்பெருகும்.

**சித்தி புத்திகள்.**

கருணைமதம் பொழிமுகத்துக் கணேசரவர்
தமக்கறிவுந் தொழிலுமான
வருளெனுமுண் மையையெவரு மறியவவ
ருமையினவ தரித்தஞான்று
மொருமுனியோம் பியதழலி னவதரித்த
ஞான்றுமுட னுதித்தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்குஞ் சித்திபுத்தி
யெனுமிவர்தாள் சென்னிசேர்ப்பாம்.

இச்செய்யுள் விநாயகரது சத்திகளாகிய சித்தி புத்திகளைத் துதிக்க வெழுந்தது. கணங்களுக்கு ஈசர்=கணேசர். கணங்கள் பல்வேறு கூட்டங்கள். அவை பிரமதகணம், தேவகணம், அசுரகணம், பூத கணம், மனுஷ்யகணம் முதலாயின. இவ்வெல்லாக் கணங்களுக்கும் ஈசராதலையேகணேசர். என்னுஞ் சொல் தெரிவிக்கின்றது இவரையே "ஈஸ்வரஸ்ஸர் வபூதாநாம்" என்று வேதம்விதந்தோதியது. இவர து பரதத்வ நிலையைக் கணபத்யுபநிஷத்தாலு மறிய லாம். அதில், "த்வம்ஸக்திக்ரயாத்மகஃ" என்றுகூறப் பட்டிருக்கின்றது, என்பதேயாம். அச்சத்திக ளின் டெடுத்துக்கொண்ட சித்திபுத்திகளும், வல்லபையெ ன்பவருமேயாம். வல்லபையென்பவர் இச்சாசத்தி யும், சித்தியென்பவர் ஞானசத்தியும், புத்தியென்ப வர் கிரியாசத்தியுமாம். இச்சையெழாதபோது ஞா னக்கிரியைகள் வெளிப்படாவாகலி னிவ்விச்சையை யவ்விரண்டிலடக்கிச் சத்திகளிரண்டென்றே யிவ்வ ணக்கச்செய்யுளிற் றுதித்தவாறறிக. உயிர்கள் பி ழைக்கவேண்டு மென்னு மிச்சையே விநாயகரிட மெழலால், அதுவும் ஸ்வப்ரயோஜநமாகாமல் பரப் பிரயோஜநமாகவே முடிந்தது, இவ்விச்சைகலந்த சித்திபுத்திகளில், சித்தியால் ஞானமோக்ஷங்களும், புத்தியால் போகலாபமும் பிராப்தமாமென்க. இவ் வுண்மை போதரவே இச்செய்யுளில் "கணேசரவர் தமக்கறிவுந் தொழிலுமான-சித்திபுத்தியெனு மிவர் தாள்" என்று விசதப்படுத்தி யிருக்கின்றது. பதி யாகிய கணேசர் சத்தித்திரயங்களை யுடையராதல் போல் பசுக்களும் இச்சாஞானக்கிரியைகளை யுடை யராதலை "இச்சாஞானக்கிரியை யென்றிசைக்குஞ் சத்திகளுளையுளதத்திறமெமக்கே" என்று பண்டார மும்மணிக்கோவை பிரகாசப் படுத்தியது. பதிக்கு ள்ள அறிவு முதலியன சுத்தமும், பசுவுக்குள்ள அ றிவுமுதலியன மலினமுமாமென்க. மலினசத்திகளை யுடைய பசுவைச் சுத்தசத்திகளை யுடைய பதி இய க்கி யுபகரிக்குமென்க இதனால், பரனதுசத்திகளை வழிபடல் உயிர்களுக்கு அவசியமாயின தறிக. மூன்றாக வுயிர்களை ரக்ஷிக்கும் பொருட்டுப் பிரிந்த சத்தி ஒன்றேயாதையா லச்சத்தியே அருளென்று சிறந்திருக்கின்றது. "அருளது சத்தியாகும்" என் றார் பெரியாரும். இதனை விளக்கவே இவ்வணக்கச் செய்யுளிலும் "கணேசரவர்தமக்கறிவுந் தொழிலு மான - வருளெனுமுண்மையை" என்று கூறியிருக் கின்றது. அருளே சத்தியாதலேக்கியே சிவனரது திருமேனியை அருட்டிருமேனியெனவும், சத்தித் திருமேனி யெனவும் மேலோர் துதித்திருக்கின்ற னர். "காயமோமாயையன்று காண்பது சத்திதன் னால்" என்பதுமோத்து. பரனது திருமேனி அருண் மேனியாதல் கொண்டே "த்வம்குணத்ரயாதீதஃ" எனவும், "த்வம்தேஹத்ரயாதீதஃ" எனவும் விநாய கக்கடவுளைப் பிரதிபாதிக்குங் கணபத்யுபநிஷத்துக் கண்டாகோஷமாக முழங்குகின்றது. திரிகுணங்கள் மாயையிற் காரியமாயுள்ளன. அவற்றோடினப்படுத் திக் கூறிய தேகத்திரயங்களும் அம்மாயையிற் காரி யப்பட்டனவேயாம். மாயாகுணங்களும், மாயாவுரு வங்களும் பரனிடங் கூறுதலஸங் கதமாகையால், உபநிஷத்திற்போந்த குணாதீத-தேஹாதீததர்மங்கள் கணேசரிடத்தில் ஸாமஞ்சஸமாயின. இனி அப்பர மனது உருவங்களுங் குணங்களும் "த்வம்சக்தித்ர யாத்மகஃ" என்று சுருதிகூறிய வருட்சத்தியா லாய வெனலே முடிவென்றறிக. மாயையையுஞ் சிவனது சத்தியென்று தேகங்கூறுமெனின், அதனைப் பரனு க்கு வேறாகிய பின்னஸம்பந்தமுடைய பரிக்ரகமாத் திரமாகவே கொள்வர் மேலோர். அருட்சத்தியை அப்பரனுக்கு வேறாகாத வபின்னஸம்பந்தமுடைய தாதாத்மியமாகக் கொள்வதே மரபு. இவ்வுண்மை யுணர்ந்தபேர் சித்திபுத்திகளாகிய சத்திகளை மாயா சத்திகளாக மயங்காரென்க. மாயைக்கும், அருளுக் கும் பேதமறியாத மாயாவாதிகளது வலையிற் சிக்கி யே யுலகந் தடுமாறியலைகின்றது. மாயையை அருட் சத்தியின் பேதமாகிய கிரியை யியக்காதபோது அம் மாயை யிருந்தும் பயனின்றென்க. இவ்வருட்சத்தி யாகிய சிவசத்திக்கும், சிவத்துக்கு முள்ள வபேதத் தை முதற்பாடலிற் பிரஸங்கித் தோமாகையா லிச சிவசத்தியையே பரதேவதையென வழிபடுதலும், இச்சிவசத்தியையேசத்தி புத்திகளெனத் தெளிந்தி

ன்புறுதலுஞ் சிவனடியார் கொள்ளத்தக்க பெரு நலங்களாம்.

இனிக் கணேசரது சத்திகள் அக்கணநாத ரவதரிக்குந்தோறுங் கூடவே யவதரித்துக்கொண் டிருப்பார்கள். சத்தனைவிட்டுச் சத்தியும், சத்தியைவிட்டுச் சத்தனு மிருப்பது கூடாதாகையால், சத்தராகிய கணபதியோடு அவரது சத்திக ளவதரித்துக்கொண் டிருப்பது ஸஹஜந்தான். இதனை விளக்கவே இச்செய்யுளில் "அவர் உமையினவதரித்தஞான்றும், ஒரு முனியோம் பியதழலினவதரித்தஞான்று முடனுகித்தோன்றித், திருவுளத்தின் வழிநிற்குஞ் 'சித்திபுத்தியெனுமிவர்தாள்" என்று கூறியிருக்கின்றது. உமாதேவியாரிடத்தும், ஒரு முனிபுங்கவரிடத்தும், விநாயகக்கடவுள் அவதரித்தகாலங்களில் அவரது சத்திகளாகிய சித்திபுத்திகளுங் கூடவே தோன்றியசரிதம் பின்னர் வெளியாமென்க. இவ்விருசத்திகளையு மெமதல்லனீங்கி யுய்தற்பொருட்டு யாமும் வணங்கிவாழ்த்துதல் செய்வாம். விரிக்கிற் பெருகும். ஈண்டொருவாறு பொருள் வரையப்பெற்ற செய்யுட்கள் ஸ்ரீ கச்சியப்பமுனிவர் செய்தனவென்றறிக. இனி வேறு சிலதுதிகள் யாம் கூறுகின்றேம்.

சூ. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதகம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோயில் வழிபாடு.

(முன் தொடர்ச்சி.)

இங்ஙனநிற்க, ஷெ வசனங்களில் "எதை இது என்று உபாசிக்கிறுர்களோ அது பிரஹ்மமல்ல" என்று ஒவ்வோ ரிந்திரிய பிரஸ்தாபங்களிலும் பெறப்பட்டமையால், இது-இது-இது-இது-இது என்று முறையே வாக்கினுலும், மனதினுலும், கண்ணினுலும், காதினுலும், மூக்கினுலுஞ் சுட்டப்பட்ட பொருள் பிரஹ்மமாகமாட்டாதென்று கூறுவதும் ஸாமஞ்சஸமேயாகும். பிரஹ்மமானது சுத்தவறிவாகையால், அது ஆத்மாவினது அறிவுக்குமாத்திரமே விஷயமாகும். ஆத்மாவினது அறிவு தடை நீங்கிய போதுதானே அது சிறக்கும். அதற்குத் தடையுள்ளபோதுதானே கருவிகரணங்கள் சேர்க்கப்படுதலால் அது தனிக்கவாவது, சேர்ந்த கருவிகளைக்கொண்டு பிரஹ்மத்தை அறியவாவது கூடாது. கருவிகரணங்களும், அவற்றேடு கூடியுள்ள ஆத்மாவுங் கண்டப்பொருள்களாகையாலும் அகண்டமாகிய சிவத்தைச் சுட்டியறிந்து அநுபவிக்கமுடியாது. அகண்டமாகிய சிவத்தைக் கருவிகரணங்க ளோய்ந்தவிடத்தில் ஆத்மா சுட்டற்ற நிலையிலிருந்து அநுபவியாநிற்கும். ஆகையால், பிரஹ்மம் இது என்னுஞ் சுட்டுக்கு விஷயமாகாதது என்று கூறுவது சைவநலமாகவே முடிந்தது. "இதுவென்றதெல்லாம் பொய்யென்றுன்" என்று மேலோர் கூறிய அமுதவுரையுஞ் சான்றும். சிவம் ஆத்மாவில் வேற்ற நின்றநுபவ வேத்யமாகுங்கால், ஞாத்ரு-ஞான ஞேயங்கள் கேட்கப் படாமையாலும், அதனைத் திரிபுடிரஹிதம் என்றுவேதங் கூறுகின்றமையாலும், அந்தநிலை இதுவென்று சுட்டும் யோக்யதையைப் பெற லின்மையாலும் இதுவென்றுசுட்டி யுபாசிப்பது பிரஹ்மமாகாது என்று கூறுவது ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று.

இப்படி விசாரிப்பதொழிந்து இதுவென்று சுட்டியுபாசித்தல் கூடாதென்பதனை அர்ச்சாபிம்பங்களைக் கூறியதாகக் கொண்டிருக்கும் பூர்வபட்சிகள் பின்விஷயங்களைச் சற்றே யோசிக்கட்டும். மேல் வசவனங்கள் பிரஹ்மமானது கண்ணுக்கு விஷயமாகாது என்றபடி மனதுக்கும் விஷயமாகாது என்று கூறினமையால், அந்தர்ப்பாஹ்யேந்திரியங்க ளெவற்றிற்கும் விஷயமாகாத அதனை நம்மவர் எவ்வாறு அறிந்து அநுபவிப்பார்கள்? கண்ணினுற்சுட்டி இதுவென்று உபாசிப்பதை மறுத்தபடியே மனதினுற்சுட்டி இதுவென்று உபாசிப்பதையுங் கண்டித்ததை யோசியாததென்னை? பிரஹ்மம் என்று மனசினுல் நினைப்பதே அந்தப் பிரஹ்மத்தை உபாசித்தல் என்று கொண்ட அவர் மதமும் புன்மதமாக முடிந்தமையின், அவர் பிறரிடமேற்றுந் தூஷணம் அப்படியே குதித்துத் தம்மிடமுந் தாவியேறிக்கொள்வதில் என்ன தடை? இதுவென்று சுட்டியறியாததன்மை எல்லாக் கருவிகரணங்களு மோய்ந்தவிடத்தன்றி அமையாது. அதனுல், மனம் நசியாதபோது சுட்டறிவு கெடாது. அது கெடாதபோது இதுவென்று உபாசித்தல் கெடாது. ஆகவே, இது என்று உபாசித்தலை மறுத்த வசனங்கள் தமக்கு ஸாதகமாவதில்லை. மனசினுல் பிரஹ்மம் ஒன்று உண்டென்று நினைப்பதும் இது என்று சுட்டுவதாக முடிதலின், நம்மவரது புது ஸித்தாந்தம் புண்பட்டழிந்தது- "సంకల్పో బంధః, అసంకల్పో బంధః" என்ற தேத்யாதி உபநிஷத்வாக்கிய

ங்களையும் அறிந்திடுக. இதனால், அர்ச்சாபிம்பங்களைத் தூஷிப்பதற்கே அந்த வசனங்கள் பிறந்தனவா கமயங்கி உதகரிப்பது தெரியாமையாம் முடிந்தது.

அன்றியும், அந்த வசனங்களில் "அதை நாமறியோம். அதைத் தெரிவிக்கும் வழியும் நமக்குத் தெரியாது. அது தெரிந்ததற்கு வேறாயும், தெரியாததற்குப் புறம்பாயும் இருக்கிறது என்று முன்னோருரைக்கக் கேட்டோம்" என்ற வுரைகளையும் நம்மவர் எழுதி ஆளுகின்றார்கள். நாமறியோம் என்று முன்னோரேஉரைக்கையில், நம்மவர் அதை எப்படி அறியக்கூடும்? அதைத் தெரிவிக்குமவழி முன்னோருக்கே தெரியாதபோது நம்மவர் பிறருக்கு எப்படித் தெரிவிக்கக்கூடும்? நம்மவர் எதைத் தெரிந்ததாகக் கருதுவாரோ, அதற்கு அந்தப் பிரஹ்மம் வேறாய் விடுமெனின்,அவர் அதைத் தெரிந்தவராதல் எங்ஙனம்? நம்மவருக்கு எது தெரியாதோ, அதற்கு அந்தப் பிரஹ்மம் புறம்பாகுமெனின், அது அவருக்கு விஷயமாவது எப்படி? அறியமுடியாது, அறிவிக்க முடியாது, தெரிந்ததற்கு வேறு, தெரியாததற்குப் புறம்பு என்ற ஸித்தாந்தங்கள் ஒன்றோடொன்றுமுரணுதலால், அவற்றை ஸமன்வயப்படுத்திக் காட்டாது வீணே ஆள்வதில் என்னபயன்? இனி அவற்றினுண்மையை ஈண்டு யாம் பொருத்திக் காட்டுகின்றோம். "நாமறியோம்" என்றது ஆத்மாதானேஅறியமாட்டாதென்பதையும், "நமக்குத் தெரிவிக்கும் வழியுந் தெரியாது" என்றது ஆத்மாவுக்குச் சிவமே தெரிவிக்கத் தக்கதென்பதையும், "தெரிந்ததற்கு வேறாயும்" என்றது சுட்டறிவுக்கு எட்டாதென்பதையும், "தெரியாததற்குப் புறம்பாயும்" என்றது ஸமாதியில் அநுபவிக்கத் தக்கதென்பதையும் வெளியாக்கின. இப்படி யறிவதொழிந்து அந்த வாக்கியங்களுக்கு ஒன்றோடொன்று முரணுண்டாக்கப்பொருள் கூறுவது அறியாமையாக முடியும். அப்படியே ரூபமற்றது - ரூபமுள்ளது என்றவிடத்துங் கோணுதலின்றிப் பொருள் கூறவேண்டும். ரூபமற்றது என்றவிடத்தில் முன்பின் யோசியாமல் தப்பர்த்தங் கூறுவது கூடாது. பிரஹ்மம் ரூபமுள்ளது, அதைப் பிம்பங்களிற் பாவித்துப் பூசிக்கலாம் என்ற வுண்மைகளை இடம்வந்துழிவிரிப்பாம்.

சு - வது காட்டிய வசனத்தில் "அதிரிசிய-அநாத்ம" சப்தங்கள் வந்தமையும் எம்மைப் பாதிக்கமாட்டா. முதல் வசனமே மூன்றாவது வசனங்களிற்போந்த ஸமாதானமே ஈண்டும் பொருந்தும்.

டு-வது வசனத்தில் "எவ்விதசரீரமும் அற்றவர்" என்று பொருளுண்டாவதாகக் கூறுகின்றனர். அதில் "அகாயம்" என்பதேயன்றி வேறு பிரயோகமில்லை. அது சரீரமின்மையைமாத்திரம் விளக்கும். எவ்விதசரீரமுமில்லையென்று விளக்காது. அதனால், நம்மவர் தேடும் பொருள் மிகையாயிற்று. அதவா "எவ்விதசரீரமு மற்றவர்" என்று ஒரு வசன மிருப்பினும் அதுவும் எம்மைப் பாதிக்கமாட்டாது. யாமே அந்தப்பரம்பொருளுக்கு அதீதத்தை ஒப்பியிருக்கின்றோமாகையால். நம்மவர் பரனுக்கு அருவத்தை யொப்பினமையால், அவரை அருவப்பொருள்களி லொன்றாக்குந்தோஷம அவர் பக்கலேவந்துசாரும்.

சு - வது வசனத்துக்கு "படைப்பை=விக்கிரகங்களை" தொழுவோர்கள் மிகவுங் கொடிய அந்தகாரத்தை அடைவார்கள் என்று பொருள்கூறி ஸந்தோஷிக்கின்றார்கள். படைப்பு என்றதற்கு அர்ச்சாபிம்பம் என்று எந்த நிகண்டில், அல்லது எந்த வியாக்கியானத்திற் பெறப்பட்டிருக்கின்றது? அதில், "సంభూతిముపాసతే" எனவும், "సంభూత్యాగ్ంరతాః" எனவும் போந்தவை முறையே பிரகிருதியும், விகிருதியும் ஆம். நம்ம பூர்வபட்சிகள் இயற்கையைத் தொழுவோர் என்றது பிரகிருதியையும், படைப்பைத் தொழுவோர் என்றது விகிருதியையும் விளக்கின. பிரகிருதி விகிருதிகளை உபாசித்தல் கூடாதென்பது எமக்கும் ஒப்பே. அர்த்தத்துக்குமேல் அநர்த்தமாக "படைப்பை=விக்கிரகங்களை" என்று கொஞ்சியுரைத்ததையே ஈண்டு நெஞ்சிலொழித்தது. பிரகிருதிவிகிருதிகளைக் காரணவஸ்து வல்லவென்றுவேதம் அறுதியிட்டுரைத்து, அதீதமான தொன்றையே காரணவஸ்துவெனவும், அதனையே தியானிக்கவேண்டியதெனவும், அது "த்யேய" வஸ்துவாக அறிந்தநுபவிக்கத் தக்கதெனவும் பரிஷ்கரித்திருக்கின்றது. "బ్రహ్మవిష్ణు రుద్రేన్ద్రాస్సమ్ప్రసూయన్తే న కారణం, కారణంతు ధ్యేయస్సర్వైశ్వర్య సంపన్న స్సర్వేశ్వరశ్శంభుః" எனப்போந்த அதர்வசிகை மந்திரமே அதுவாம். இந்தச்சுருதியில் பிரஹ்ம விஷ்ணு ருத்ரேந்திரர்கள் படைக்கப்பட்டமையும், அதனால் அவர்கள் காரணராகாமையும் விளக்கி, அநந்தரம் காரணவஸ்துவை "சம்பு" வாசகத்தால் நிரூபணஞ்செய்து, அவரையே தியானமார்க்கத்தால் உபாஸிக்கத்தக்க த்யேய வஸ்துவாகவும் பிரகாசம்பண்ணியிருத்தலால், பூர்வபட்சிகள் உதகரித்த வசனம் எமக்குப் பாதகமானதில்லை. அந்த

வசனத்தின் கருத்தை யநுஸரித்த ஷை வாஜஸநீயம், "అన్థతమః ప్రవిశన్తి యే విద్యాముపాసతే, తతో భూయ ఇవతే తమో య ఉ విద్యాయాగ్ం రతాః" என்னும் (கூ) வது மந்திரத்தாலும் எமது உண்மை விளங்கும். இதில் அவித்யோபாஸனே, வித்யோபாஸனே, என்னும் இரண்டு விதங் கேட்கப்படுகின்றது. இயற்கையைத் தொழுவோர் என்பவரே அவித்யோபாஸகர். படைப்பைத் தொழுவோர் என்பவரே வித்யோபாஸகர். இவ்விருதிறத்தவரும் பாசஞானியர், பசுஞானியர் என முறையே வெளியாகா நிற்பர். இவரையே கேவலம் பிரகிருதியை உபாசிக்கின்றவர்களும், காரிய பிரஹ்மோபாஸனே செய்கின்றவர்களும் என அறிந்தோர் கூறுகின்றனர். காரிய பிரஹ்மங்களென்றது சேதனர் தம்முட்சிவசத்திபதிந்த விசிட்டபுருடரை. இவர் தம்மையே பதிகளென மயங்கிப் பசுபதியாகிய சிவனே நாடாத படிறர்தம்மையே ஆண்டு நிஷேதித்தபடியாம். இவ்வுண்மைகளேத் தெளியாமல் பூர்வபட்சிகள் வீண்விபரீதம் பேசுவதை யாவரோ ஒப்புவார்கள் ?

நம்மனோர் சித்தஸமாதானத்துடன் பின்வரும் "மந்திரத்தை" கூர்ந்து யோசிக்கக்கடவர். "పూషన్నేకర్షే యమసూర్య ప్రాజాపత్యవ్యూహరశ్మీన్ సమూహ తేజః, యత్తే రూపం కల్యాణ తమంతత్తే పశ్యామయోऽసావసౌ పురుషస్సోऽహమస్మి" என்னும் இது அவர் பிரமாணமாகக்கொண்ட வாஜஸநேயத்தில் (கசு) வது திருமந்திரமாகையால், அதை யாம் ஸூசிப்பித்தல் அவசியமாயிற்று. இதில் பரனது அஷ்டதநுவி லொன்றாகிய சூரியோபாஸனே சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தச் சூரியன் விகிருதிகளாகிய படைப்பிற் சேர்ந்தவனேயனறிவேறில்லே. படைப்பைத் தொழக்கூடாது என்று உபந்யஸிக்கு நம்மவர் இதற்கு என்ன ஸமாதானந் தேடிக்கொண்டனர் ? "య ఏషోऽన్తరాదిత్యే హిరణ్మయః" என்னுஞ் சுருதியில் ஆதித்யாந்தராத்மா ஹிரண்மய புருஷனென்று சொல்லி, "ఏష భూతానా మధిపతిః" என்று அந்தப்புருஷனே இன்னாரெனவும் பிரகாசம் பண்ணியிருக்கின்றது. பூதேசர் என்று அமரகோசத்தால் ரூடியாகப பிரஸித்தியடைந்திருக்கும் ஹிரண்மயஸ்வரூபர் "హిరణ్యయోహం శివరూపమస్మి" என்னுஞ் சுருதியால் வெளியாகின்றனர். அன்றியும், "నమో హిరణ్యబాహవే హిరణ్యవర్ణాయ హిరణ్యరూపాయ హిరణ్యపతయేऽమ్బికాపతయ ఉమాపతయే పశుపతయే నమోనమః" என்னுஞ் சுருதியாலும் அது சிறக்கும். "సూర్యో ముఖ్యశరీరంతు శివస్య పరమాత్మనః" என்னும் உபப்பிரஹ்மணமுஞ் சான்றும். இந்த விசாரத்தால் விகிருதியாகிய சூரியோபாஸனே கூடாது என்பதற்கும், கூடும் எனபதற்கும் யாம் தேடிய ஸமாதானங்கள் வெளியாயின. இந்த உபாஸனேயைப் பிரதிபாதிக்கும் வாஜஸநேயத்திற்றானே அந்தர்யாமியாகிய சிவனேக் குறித்து "యత్తే రూపం కల్యాణతమం తత్తే పశ్యామి" என்று கூறி, சிறந்த மங்கலமாகிய நின்வடிவம் யாதோ, அதனே நான் பார்க்கின்றேன் எனத் துதித்திருக்கின்றமையுங் கண்டுணர்க. இப்படிப் பலபடியாலும் பரனது உண்மையும், அவனேயறிந்து உபாசிக்கவேண்டிய விதமும் வெளியாயின்மையால், இவை தெரியாமல் பூர்வபட்சிகள் செய்யும் வெறுங்கோஷம் சண்டசோஷகரமே ஆயிற்று. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இப்படி ஒவ்வொரு வாக்கியமும் எமது உண்மையையே விளக்கி நம்மவர்களுக்கு ஒரு நலத்தையுஞ் செய்யாமல் கைவிட்டமையால், அவர்கள் குணப்பட்டுய்யுமாறு ஏனேவிஷயங்களேயும் பிரகாசப்படுத்துவாம். வேதத்தில் பிரஹ்மத்துக்கு உருவஞ் சொல்லவில்லேயென்று மயங்கிய அன்னோர் பின்வசனங்களே யோசிக்கட்டும்.

"ఉమాసహాయం పరమేశ్వరం ప్రభుం, త్రిలోచనం నీలకంఠం ప్రశాంతం, ధ్యాత్వా మునిర్గచ్ఛతి భూతయోనిం, సమస్తసాక్షిం తమసః పరస్తాత్" என்னுங் கைவல்யோபநிஷத் வாக்கியத்தில், உமாஸஹாயம்-திரிலோசனம்-நீலகண்டம் என்னும் உருவங்கள் பரனுக்குக் கேட்கப்படுகின்றன.

"ఋతగ్ం సత్యం పరం బ్రహ్మ పురుషం కృష్ణపింగళం, ఊర్ధ్వరేతం విరూపాక్షం విశ్వరూపాయవై నమః" என்னுந் தைத்திரியவசனத்தில். கிருஷ்ண பிங்களம் - ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் - விஸ்வரூபம் இத்யாதிகள் பிரஹ்மத்தினது ஸ்வரூபலக்ஷணமாகக் கேட்டுப்படுகின்றன. இதில், கிருஷ்ணம் என்பது கழுத்தையும், பிங்களம் என்பது ஜடையையும் வர்ணபேதங்களால் விளக்கின இது நீலலோஹிதர் என்னுந் திருநாமத்துக்கு அர்த்தவைபமாயிற்று. மேல், ஜீவர்களேப் போல அதோமுகமானரேதஸை உடையவரல்லவென்பதை விளக்க "ஊர்த்வரேதம்" என்பதும், ஜீவஸாமாந்யமான நேத்ரங்களுடையவரல்ல வென்பதை விளக்க, உபநயன விசேடத்தைக் காட்டும் "விரூபாக்ஷம்" என்பதும் வெளியாயின. இவ்வளவேயுன்றி "விஸ்வரூபர்" எனவும் பெறப்பட்டது. இது விஸ்வத்தைத் திருமேனியாக வுடையவரென்பது அஷ்டமூர்த்தியென்பதே அதுவாம். வேதத்தில் "పృథివ్యై

భవః, ఆపశ్శర్వః, అగ్నేరుద్రో, వాయుర్భీమ, ఆకాశస్య మహాదేవ, ఆత్మనః పశుపతిః, సూర్యస్యోగ్రః, చంద్రస్యసోమః" என்னும் வசனத்தால் சிவபெருமான் பிருதிவி என்னுந் தநுவுக்குப் பவன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், ஆபஃ என்னுந் தநுவுக்கு ஸர்வான் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், அக்கினி என்னுந் தநுவுககு ருத்ரன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், வாயுவென்னுந் தநுவுக்குப்பீமன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்னியமுமாக இருக்கின்றாரெனவும், ஆகாசம் என்னுந் தநுவுக்கு மஹாதேவன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும் சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், ஆத்மர் என்னுந் தநுவுக்குப் பசுபதி என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், சூரியன் என்னுந் தநுவுக்கு உக்கிரன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும், சந்திரன் என்னுந் தநுவுக்கு ஸோமன் என்னு நாமத்தால் அதிஷ்டானமும், சைதன்யமுமாக இருக்கின்றாரெனவும் பெறப்படுகின்றது. இதில், சூரியதநுவே பிரகிருத விசாரமாயுள்ளது. இந்தத் தநுவுக்கு அந்தராத்மாவாயிருந்து ஜகச்சக்ஷுவாயும், அநேகசக்ஷுக்களைப் பிரகாசப்படுத்துவதாயும் விளங்குந் தன்மையாலன்றோ "விஸ்வதஸ்சக்ஷுரு தம்" எனவுங் கேட்கப்படுகின்றது? அந்தச் சக்ஷுக்களில் ஆத்மஜ்யோதியா யிருக்குந் தன்மையை ఆత్మజ్యోతిర్నామజ్యోతి జ్యోతిశ్చక్షుషా పశ్యతి. సబాహ్యాభ్యన్తరంజ్యోతిస్సజ్యోతి శ్శృపముచ్యతే" என்னுஞ் சுருதியாலறிந்திடுக. இவ்வுண்மைகளையே "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்—புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" என்னுந் திராவிடஸூக்தியும் பிரகாசம்பண்ணிற்று. இந்த விசாரத்தால் பரனுக்கு அஷ்ட தநுக்கள் கேட்கப்பட்டமையும், அத்துடன் ஆதித்யோபாஸனை பெறப்பட்டமையும் வெளியாயினமையால், அவருக்கு ஒருதநுவு மில்லையென்றும், அவரது படைப்பை வணங்கக்கூடாதென்றும் பூர்வபக்ஷிகள் பேசுவது அவைதிகமென்னத் தட்டில்லை. இன்னும் விரிக்கிற் பெருகும்.

அன்றியும், "విశ్వతశ్చక్షురుత విశ్వతోముఖో విశ్వతోహస్త ఉత విశ్వతస్పాత్, సంబాహుభ్యాంధమతి సంపతత్రైర్ద్యావా ప్రథివీజనయన్దేవఏకః" என்னும் வாக்கியத்தில் விசுவரூபரான அவருக்கு "சக்ஷு - முகம் - ஹஸ்தம்-பாதம்-பாஹு" இத்யாதிகளுங் கேட்கப்படுகின்றன. இதனுண்மை மேல் செய்த சூரியோபாஸனை விசாரத்தாலும் விளங்கும்.

"యఏషోన్తరాదిత్యే హిరణ్మయఃపురుషః" என்னும் வாக்கியத்தில் "ஹிரண்மயம்" என்று பரனுக்குப் பொன்னிறமான திருமேனி கேட்கப்படுகின்றது. அன்றியும், அதை வற்புறுத்தற்கு, "నమోహిరణ్యబాహవే హిరణ్యవర్ణాయ హిరణ్యరూపాయ హిరణ్య పతయేమ్బికాపతయ ఉమాపతయే పశుపతయే నమోనమః" எனவும் பிரகாசம் பண்ணப்பட்டிருக்கின்றது. "பொன்னார்மேனியன்" என்றது மாத்திரமேயன்றி "அம்பிகாபதி, உமாபதி" என்று அவன் சிற்சக்தியுத்தனா யிருப்பதையும் இரட்டித்துக் கூறினமையால், பரனுக்கு உருவமில்லை யென்று கூறுவது உருக்காட்டா தொழிந்தது. மேலுண்மையையே "பொன்னார் மேனியனே" எனவும், "பொன் வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி பொலிந்திலங்கும்" எனவும் பூர்வாசாரியர்களுங்கூறியிருக்கின்றனர். இந்த உபநிஷதத்தில் உபாஸகனது ஹருத்புண்டரீகத்தை வர்ணித்து, தந்மத்தியில், "తస్యాశ్శిఖాయా మధ్యే పరమాత్మా వ్యవస్థితః" என்று பரமாத்வாவுக்கு இடஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. அநந்தரம், "అంగుష్ఠమాత్రః పురుషః" என்று அவ்வந்தராத்மாவினது ரூபபரிமாணமுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது. அன்றியும், அப்பரனது பஞ்சவக்திரங்களை ஸத்யோஜாத-வாமதேவ-அகோர-தத்புருஷ ஈசானமந்திரங்களால் பிரகாசம் பண்ணியிருக்கின்றது. இத்யாதி பஹுளங்களை யோசியாவிடின், அந்தத் தெரியாமைக்கு யார் என்ன செய்யலாம்?

சூ. சோமசுந்தரநாயகர்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்.

(இன்னும் வரும்)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநம:

## திருப்புகழ் பழநி.

இதனடியில் வரும் ஸ்ரீ அருணகிரிநாதசுவாமிகள் அருளிச் செய்த திருப்புகழ்பாடல் முதலிலெனக்குக் கிடைத்தபோது இரண்டொரு அடி குறைவாக இருந்தது. அதைப் பூர்த்தி செய்யப்பல ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்தும் இவ்வரியபாடல் அவைகளில் அகப்படவில்லை. அதனால் இதைத் திருப்புகழ் முதற் பாகத்தில் சேர்க்கக்கூடாமற் போயிற்று. அப்பால் இப்பாடலைச் சேலம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ஸ்ரீ சரவணப்பிள்ளை யவர்களிடம் அனுப்பினேன். அநேகநாள் சென்றபின்பு முருகப்பெருமானுடைய திருவருளால் அவர்களுக்குக் கிடைத்த ஏட்டுப்பிரதியில் இப்பாடலகப்பட்டது. அதைக்கொண்டு பிள்ளையவர்கள் பாடலைச்சரிப்படுத்தி யனுப்பினார்கள். அதைக்கண்டவுடன் எனக்குப் பெரும்புதைய லகப்பட்டதுபோலிருந்தது. மிகவும் அருமையும் அற்புதமுமான இப்பாடலை அன்பர்கள் யாவரும் படித்துப் பேரானந்தம் அடையும் வண்ணம் இதைச் சித்தாந்த தீபிகை யென்னும் சிவமணங்கமழும் பத்திரிகையில் பிரசுரிக்கலாயிற்று.

*குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினிலீ ம்ருகமத மெழுகியர்
இந்துஞ் சந்தந் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வநிதையர்
கொஞ்சுங் கெஞ்சுஞ் †செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர்
விரகாலும்,

கும்பும் பம்புஞ் சொம்புந் தெம்புங்
குடியென வளர்தரு சொடியவர் கடியவர்
எங்கெக் கெம்பங் கென்றென் றென்றுந்
தனதுரி மையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கின் பந்தந் தெந்தன்
பொருளுள தெவைகளு நயமொடு கவர்பவர்
மயலாலும்;

என்றென் றுங்‡கன் றுந்துன் புங்கொண்
டுனதிரு மலரடி பரவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டென்றுஞ் சென்றுந்
தொழுமகி மையிலீலை யுணர்வினி னருள்பெற
இன்பும் பண்புந் தெம்புஞ் சம்பந்
தமுமிக வருள்பெற விடைதரு விதமுன
மருள்வாயே,

* குன்றுங் குன்றும்படி, செண்டுங் கன்றும்படி எனத் தனித்தனி இயைக்க.

† செஞ்சும் - செய்தும் என்பதன் மரூஉ.

‡ கன்றுதலையும் துன்பத்தையுங் கொண்டேன். கொண்டு= கொண்டேன்.

*எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு மலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை யிரணிய வலனுயிர்
றுங்குஞ் சிங்கம் †வங்கந் தன்கண்
துயில்பவ ‡னெகினனை யுதவிய கருமுகில்
மருகோனே;

§ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுந்
துளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடியென விழுமெழு படிகளு மதிர்பட
ஒண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை
யடுவோனே,

உந்தன் தஞ்சந் தஞ்சந் தஞ்சஞ்
சிவனருள் குருபர வெனமுநி வரர்பணி
யுந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொல்பட நடமிடு பரனரு ளறுமுக
உண்கண வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை
புயவீரா;

§அன்றென் றொன்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கஞ் சிந்தும் பங்கந் தஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி யெதிர்பட
அன்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை யெதிர்வர விடுகவி புகல்தரு
திறலோனே,

அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயவ னிரதமை நடவிய
துங்கன் வஞ்சன் சங்கன் றங்கைக்
கொருமகன் முவிதழல் வருதக ||ரிவர்வல
அங்கங் கஞ்சஞ் சங்கம் பொங்குங்
கயனிறை வளமுறு சிவகிரி மருவிய
பெருமாளே.

வ. த. சுப்பிரமணிய பிள்ளை,
மதுரை.

* ஏங்கும் என்பது குறுகிற்று.

† வங்கம்=தோணி; தோணிபோற் கடலிற் கண்வளர்பவன்.

‡ எகினன்=அன்னவூர்தியாகிய பிரமன்.

§ ஒன்றென்ற என்றுந் துன்றுங்குன்று - ஒன்றாகிய சூரிய மண்டலத்தை யளாவுங் கிரவுஞ்ச கிரி.

§ அன்றென்ற ஒன்றுங்கொண்டு அன்பின்று=பிறமதங்கள் முத்திக்குவழியல, என்ற ஒன்றை மாத்திரங்கொண்டு அன்பில்லாமல்; அத்தி நாத்தியென்ற ஒன்றையே கொண்டென்றாலும் பொருந்தும்.

|| இவர்வல=ஏறி நடத்த வல்ல.

உ
திருச்சிற்றம்பலம்.

# யாக்கை நிலைமை.

(முன்தொடர்ச்சி.)

வினா.—மகளிரிற் சிலர்க்கு மெல்லியமயிரும் மற்றுஞ் சிலர்க்கு வற்கென்றமயிரும் இருத்தலென்னை ?

விடை.—மயிரினியல்பு தோலினியல்பையொட்டி இருக்குமென்பது பெரிதும் அறியற்பாலது ; தோல்வலியவாயின் மயிரும் வலியவாதலும், பரியவாயின் பரியவாதலும், நுண்ணியவாயின் நுண்ணியவாதலும், மெல்லியவாயின் மெல்லியவாதலும்இருத்தல் யாக்கையினியல் பறிந்தார் வாய்க்கேட்டுணர்க. அல்லதூஉம், மயிர்த்துளை பெரிதாயின் அதன்வழித்தாக வெளிப்போதுங் கோழைப்பொருள் மிகுந்து வற்கென்ற மயிராகமாறுதலும், குறுகிய துளையாயின் கோழைப் பொருளுங் குறைந்து மெல்லிய மயிராகத்திரிதலும் உண்மையால், குறுகியமயிர்த் துளையுடைய மகளிர்க்கு மெல்லிய மயிரும் ஏனையோர்க்கு வற்கென்ற மயிரும் உளவாகுமென்பதறிக. ஆண்மக்கட்கு வற்கென்ற மயிரிருத்தல் அவர்கட்கு மயிர்த்துளை அகற்சியுடைய வாயிருத்தலினென்க. மகளிர்க்கு மயிர்த்துளை குறுகியவாயிருத்த லென்னையோவெனின், அவர்களது யாக்கை தண்ணிய வாயிருத்தலின் அத்தண்மையால் மயிர்த்துளை சுருக்கமுறுவனவா மென்றறிக. 2 -பித்த யாக்கையுடைய ஆண்மக்களுக்கு வலியவும் பரியவுமான மயிர்வளர்தல், யாக்கை வெம்மையால் அவர்களது மயிர்த்துளை அகற்சியுடையவாயிருத்தலின் என்க. இதுபற்றியே ஆண்மக்களுக்கு மோவாய்மயிர் விரைவில் முளைப்பதூஉமென்க. இது போலவே, வலியவும் பரியவுமான மயிருடைய விலங்குகள் மிகவுந்தறுகண்மையுடையவாயிருத்தலும், அத்தறுகண்மையை விளைக்கும் பித்தும் வெம்மையும் அவற்றின் யாக்கையில் மிகுந்திருத்தலாலென்க; கரடியும் கேழலொருத்தலுமே அதற்குச் சான்றும். இதற்கு மாறாக, மெல்லிய மயிருடைய விலங்குகள் மிகவும் அச்சமுடைய வென்பது மானினும் முயலினும் வைத்துக் கண்டு கொள்க. 3—அல்லதூஉம், நாட்டியல் பினாலும் வலியவும் மெலியவுமான மயிர் முளைத்தலுண்டு ; வெய்தான நாட்டிலிருப்போர்க்கு எருபதி நாட்டிற்குத் தெற்கேயுள்ள நிகிரோவர்க்கு இருத்தல்போல வலியவும் பரியவுமான மயிர் முளைக்குமென்றறிக. இதற்கு மறுதலையாகக் குளிர்ந்த நாட்டிலுள்ளோர்க்கு, வடகடல் சார்ந்த நிலத்திலிருப்போர்க்குப்போல நுண்ணியவும் மெல்லியவுமான மயிர் முளைத்தலும் அறிந்து கொள்க.

வினா.—சிலர்க்குச் சுருண்ட மயிரும் வேறு சிலர்க்கு நேரொழுகிய வழுவழுப்பான மயிரும் முளைத்த லென்னை?

விடை.—சிலர் யாக்கையிலுள்ள வெம்மை மிகுதியால் மயிர்சுருளு மென்றறிக ; இது, நேரொழுகிய மயிருடையான் ஒருவன் வெந்நீரில் முழுகிய பிறகு அவன் மயிர்சுரிந்தபோதற்கண் வைத்துக் கண்டுகொள்ளப்படும். அது வன்றியும் மஞ்சனச்சாலை ஏவலாளர் நிகிரோவரைப்போலவும் பித்த யாக்கையினர்போலவும் சுரிந்த மயிருடையரா யிருக்கின்றனர். ஆயினும், மயிர்வழுவழுப்பா யிருத்தல் தண்ணிய கோழைப் பொருண் மிகுதியினாலேயே யென்றறியற் பாலது.

வினா.—மகளிர்க்கு மோவாய் மயிர் இல்லாத தென்னை ?

விடை.—அவரது யாக்கையில் வெம்மையின்மையினால். இங்ஙனமே பெண்டன்மையுடைய ஆடவர் சிலர்க்கு மோவாய் மயிரில்லாமையும் மகளிரைப்போல எழில்நலம் உண்மையும் நிகழ்கின்ற தென்பது கண்டுகொள்க.

வினா.—கழுவேற்றப்பட்டார்க்கு மயிர் முளைத்தல் என்னை?

விடை.—அவர்களது யாக்கையிலுள்ள ஈரமெல்லாம் ஞாயிற்றின் வெம்மையால் ஆவியாக மாறி மயிராக வெளிப்படுகிறது.

வினா.—ஏனைய மயிரினும் மோவாய் மயிர் திண்மையாயும் பருமையாயும் பெரும்பாலும் மோவாய் மயிரைக் களைந்து கொள்வோர்க்கு அது மிகவும் திண்மையாயும் பருமையாயுமிருத்த லென்னை ?

விடை.—நெகிழ்ச்சிப் பொருளில் எத்துணைக் கோழையாகவும் ஆவியாகவும் மாறி முளைத்தமயிர் களையப்படுப்போகின்றனவோ அத்துணை எஞ்சியகோழைப் பொருள் களையப்பட்டவிடத்தை நிரப்புகின்றது ; ஆதலால் எத்துணை மயிர் களையப்படுகின்றதோ அத்துணை கோழைப் பொருள் ஒருங்குதிரண்டு திண்ணிய மயிராக மாறி முளைக்கின்றது.

வினா.—மகளிர் யாக்கை மாத்திரம் ஊற்றினிமை யுடையவாயும் வனப்புடையவாயும் இருத்தலென்னை ?

விடை.—மகளிர்க்கு யாக்கையிலுள்ள ஈர்க்கழிவுகளனைத்தும் மாதவிடாய்க் காலங்களில் கழிந்து போகின்றன ; ஆண்மக்களுக்கு அவையெல்லாம் மயிராக வெளிப்படுகின்றன.

### அருஞ்சொற்களுக்குப் பொருள்.

மகளிர் - பெண்கள். வற்கென்ற - வன்மையான. போதும் வரும். விரைவில் - சீக்கிரத்தில். தறுகண்மை - வீரம். கேழலொருத்தல் - ஆண்பன்றி. சுரிதல் - சுருளல். மஞ்சனச்சாலை குளிக்குமிடம். எழில் - அழகு. ஞாயிறு - சூரியன். வெம்மை - உட்டணம். ஏனைய - மற்றைய. பெரும்பாலும் - பிராயிகம். எத்துணை - எவ்வளவு. எஞ்சிய - மிகுந்த. ஊற்றினிமை - வழுவழுப்பு. வனப்பு - அழகு.

திரு - வேலாயுத தேசிகர்.

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:
# உண்மை விளக்கம்
எனும்
# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை

1897ஆ மகாராணியாரின் வைர ஜூபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897ஆ நவம்பர்மீ 2உ {இலக்கம்-சூ

## கைவல்யோபநிஷத திராவிட இரத்நப் பிரகாசிகை.

(முன்தொடர்ச்சி.)

X.

(பிரமா ஆசுவலாயனர்க்கு விபூதியோகமாகிய சிவாத்து விதம் உபதேசித்தமை)

த்ருசுதாமசுயத் போக்யம் போக்தா போக்ச்ச
யத்பவேத் | (கூஎ)
தேப்யோவிலக்ஷ: சாக்ஷி சிந்மாத்ரோகம்
சதாசிவ: | (கூஅ)
மய்யேவ ஸகலம் ஜாதம்மயி சர்வம்
ப்ரதிஷ்டிதம் | (கூகூ)
மயிசர்வம் லயம்யாதி தத் ப்ரம்மாத்வய
மஸ்ம்யஹம் | (சo)
அணோரணீயா நகமேவ தத்வந் மஹாநஹம்
விஸ்வமஹம் விசித்ரம் | (சக)
புராத நோஹம் புருஷோ கமீசோ
ஹிரண் மயோகம் சிவரூப மஸ்மி | (சஉ)
அபாணி பாதோஹ மசிந்த்ய சக்தி:
பச்யாம் யசட்சு: ஸச்ருணோம்ய கர்ண :(சங)
அஹம் விஜா நாமி விவிக்த ரூபோ
நசாஸ்தி வேத்தா மமசித் சதாஹம் | (சச)
வேனைர நே கைரஹமே வவேத்யோ
வேதாந்த க்ருத்வேத விதேவ சாஹம் | (சரு)
நபுண்ய பாபே மம நாஸ்தி நாசோ
நஜந்மதே கேந்த்ரிய புத்திரஸ்தி | (சசூ)
நபூமிரா போநசவந் நிரஸ்தி
நசாநிலோ மேஸ்திநசாம் பரஞ்ச | (சஎ)
ஏவம் விதித்வா பரமாத்ம ரூபம்
குகாசயம் நிஷ்கள மத்விதீ யம் | (சஅ)
சமஸ்த சாக்ஷிம் சதசத் விகீநம்
ப்ரயாதி சுத்தம் பரமாத்ம ரூபம் | (சகூ)

(இதன்பொருள்) (கூஎ) தூல சூக்கும காரணதேக மூன்றினும், முறையே எது போக்கியமாயும், போக்தாவாயும், போகமாயுமாயிற்றோ,

(கூஅ) அம்மூன்றிற்கும் விலக்ஷணமாகிய (வேறாகிய) சாட்சியாய், அறிவுமாத்திரமாயுள்ள "நானே அந்தச் சதாசிவப் பிரமம்"

(கூகூ) என்னிலிருந்தே யாவும் உண்டாயிற்று. என்னிலே யாவும் நிலைத்தது.

(ச0) என்னிலே யாவும் ஒடுங்குகின்றது. அந்த இரண்டாவதற்ற பிரமும் நானே.

(சக) அணுவுக்கணுவாய் இருக்கும் சிவனார் நானதல்போல, மகத்துக்கு மகானாகிய சிவனாரும் நானே, விசித்திரமாகிய உலகமும் நானே.

(சஉ) பழையேனும் நானே. பொன்மயமானவரும் நானே. சிவரூபரும் நானே.

(சங) கைகால் இலாதவரும் நானே. அவரது நினைத்தற்கரிய சத்தியும் நானே. கண்ணில்லாமற் பார்க்கிறேன் காதில்லாமற் கேட்கிறேன.

(சச) ஏகரூபமுடையனல்லேன், என்னை அறிபவன் இல்லை. எக்காலமும் சிவஞானரூபியாவிருக்கின்றேன்.

(சரு) அநேக வேதங்களினலே நானே அறியப்பட்டேன். வேதாந்தஞ் செய்தவனும் நான். வேதத்தை அறிந்தவனும் நான்.

(சசு) எனக்குப் புண்ணியபாபம் இல்லை. எனக்கு நாசம் இல்லை.

(சஎ) நான் பூமி அல்லேன். அப்பு அல்லேன். அக்கினி அல்லேன். ஆகாயமல்லேன்.

(சஅ) என்றிவ்வாறு உள்ளக் குகையின்கண்ணே நிஷ்களமாயும் அத்துவிதமாயு முள்ள பரமான்ம சொரூபத்தை அறிந்து,

(சகூ) சமஸ்தசாட்சியும், சதசத்துக்கு (பசுபாசங்களுக்கு) வேறானவராயும், சுத்தராயுமுள்ள பரமான்ம சிவரூபத்தை அடைகின்றான்.

(திராவிட இரத்நப்பிரகாசிகை).

(38) விபூதியோகம்—பாசுபதம், பிரதம், சிரோவிரதம், அத்தியாசிரமம், சாம்பவம், ஐசுவரம் என்பன பாசுபத விரதத்துக்குப் பெயராகச் சூதசங்கிதையிலே கூறப்பட்டிருக்கின்றன. இதனல் பசுமம், ஐசுவரியம், ஐசுவரம் என்பனவும் (பாதாதி கேசாந்தம் அக்கினிமுதலிய மந்திரங்கொண்டு தரிக்கப்படும்) விபூதி விரதமாகிய பாசுபத விரதத்துக்குப் பெயராமென்க. இந்த விபூதி விரதாநுஷ்டானம் வாயிலாக உமாசமேதராகிய சிவபெருமான் தியானிக்கப்படுங்கால், இந்த யோகம் பாசுபத யோகம் எனப்படுமென்க. இது பற்றியே லிங்கபுராணம்

சர்வவே தாகமாம் போஜமகரந்தசு மத்யமே |
பீத்வாயோ கம்ருதம் யோகீமுச்யதே ப்ரம்மவித்தம: |
ஏவம் பாசுபதம் யோகம் யோகைச்வரிய மநுத்தமம் |
அத்யாசிரமமிதம் ஜ்ஞேயம் முக்தயே கேந லப்யதே ||

"சர்வ வேதாகமம் என்னும் கமலமலரின்கண்ணேயுள்ள மகரந்தமாகிய யோகாமிர்தத்தைப் பிரமவித்தாகிய யோகி பானஞ்செய்து பாசத்தினின்று விடுபடுகின்றான். பாசுபத யோகமானது உத்தமமாகிய யோகைசுவரியமேயாம் (விபூதி யோகமேயாம்) ; இந்த யோகம் அத்தியாச்சிரமயோகம் எனப்படும். இந்த விபூதியோகம் எவருக்குத்தான் எய்தப் பெறும்" என்று கூறுகின்றது. இதனல், ஐசுவரியம் ஐசுவரம் என்பன விபூதியின் பரியாய நாமங்களாய் முடிய, பாசுபத யோகம் விபூதியோகம் எனப்பட்டதாயிற்று. இந்த விபூதி என்னும் பெயர் அப்பிராகிருதியாகிய பராசத்திக்குப் பெயராம் என்ற கருத்தினலன்றே, சிவபுராணம்

யதோவாசோ நிவர்த்தந்தே மநசா சேந்த்ரியை ஸ்ஸஹ |
அப்ராக்ருதீ பராசைஷா விபூதிः பாரமேச்வரீ |
சைவேஹ பரமந்தாம சைவேக பரமாகதி: |
சைவேக பரமா காஷ்டா விபூதி: பரமேஷ்டிந:||

எங்கிருந்து மனசும் வாக்கும் இந்திரியங்களோடு கூடச் செல்லமாட்டாவாய் மீண்டு விடுகின்றனவோ அப்படிப்பட்ட அப்பிராகிருதியாம் விபூதியானது பராசத்தியேயாம். இந்தப் பராசத்தி விபூதியே பரமாகிய வீடு; இதுவே பரமாகியகதி; இதுவே பரமாகிய முடிந்த எல்லை; இதுவே பரமசிவனார் விபூதியாம் என்று கூறிற்று. இதனல் விபூதியோகம் என்பது (கூர்மபுராணம் மூன்றாவது பாவனையாகக் கூறிய) பிராம்மியோகம் என்பதுமாயிற்று. விபூதியானது பராசத்திசொரூபமானமையாலன்றே, ஸ்ரீஞான சம்பந்த வள்ளலாரருளிய "மந்திரமாவது நீறு" என்னுந் திராவிட சூக்தத்தைப் "பரையின் வரலாறு" என்று கூறியருளினர் அகஸ்திய மகாமுனி வருமாமென்க. இந்த விபூதியோகத்தினற் சிவபிரான் அடையப்படுவாரன்றி மற்றைச் "சாமர்த்தியத்தினலும், புத்தியினலும்,மிகுந்த கேள்வியினலும் எய்தப்பெறர்" என்ற கருத்தினல் விபூதி நிஷதக்களாகிய முண்டகோபநிஷதமும் கடவல்லியுபநிஷதமும்

நாயமாத்மா ப்ரவசநே நலப்யோநமேதயா நபகுநாச்ருதேந |

என்று கூறியவாமென்க. மேலே கூறிய லிங்கபுராணப் பொருளையும் இச்சுருதிப் பொருளையும் இசைத்துப் பார்க்குங்கால் அவை ஒரு நெறிப்பட விபூதியோகம உடையார்க்கே சிவபிரான் எய்தப் பெறுவார் என்பது உபதேசித்தனவாமென்க. மேலும், அம்முண்டகோபநிஷதமும் கடவல்லியுபநிஷதமும் எந்தப் பரமான்மாவாகிய சிவத்தை (அறிஞனய) இவன் அடைய அன்புறுகின்றானே, அவன் அவ்வன்பினற்றானே இந்தப் பரமான்மாவாகிய சிவபிரான் எய்தப்பெறுகின்றார். அவனுக்கு இந்தச் சிவனார் தமது சொரூபத்தை அருளுகின்றார் என்ற கருத்தினல்

யமேவைஷ வ்ருணுதே தேநலப்யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம் |

என்று கூறிற்று. இந்தப் பாசுபதயோக வித்தையிலே சித்திபெற்றவர் வாமதேவர், கிருஷ்ணர், அகஸ்தியர், விசுவாமித்திரர் முதலாயினேர் என்பது பொருள்படச் சைவ பாஷ்யகாரர் தமது சிவாத்துவித வேதசூத்திர சைவபாஷ்யத்து "உபய லிங்காதிகரணத்திலே" கூறி யிருக்கின்றார். இந்த வாமதேவர், கிருஷ்ணர், விசுவாமித்திரர், அகஸ்தியர் என்போர் தங்கள் இடைவிடாத சிவோகம்பாவனுத் தியானயோகத்தினலே பரப்பிரம சிவாவிர்ப்பாவமாய் அசாதாரணகுண

ங்கள் பிரகாசிக்கப் பெற்றார்கள். இதனாலன்றோ, பிருகதாரணியோபநிஷதத்திலே வாமதேவர் "நான் மனு, நான் சூரியன்" என்று கூறியதாகப் பொருள்கொண்ட

அகம் மனுரபவஞ் சூர்யச்ச |

என்னும் மந்திரங் காணப்படுகின்றது. கிருஷ்ணர் அர்ச்சுனரை நோக்கி, "அர்ச்சுனா! உனக்கு அருட்கண் கொடுக்கின்றேன். ஆனால் நீ எனது பாசுபதயோகப்பயனை (விபூதியோகப் பயனை)க் காண்பாயாக என்ற கருத்தினால்,

திவ்ந்ததாமி தேசட்சு: பச்யமே யோகமைச்வரம் |

என்று கூறினார். மேலும், கிருஷ்ணர் அர்ச்சுனா, சர்வபூதங்களுக்கும் விதையாய் (காரணமாய்) எது உளதோ அது நான், (சராசர) பூதமாய் எது இருக்கின்றதோ, அது என்னையன்றியில்லை என்ற கருத்தினால்

யச்சாபி சர்வபூதாநாம் பீஜதேதஹ மர்ச்சுந |
நததஸ்தி விநாயத்ஸ்யாத் மயாபூதஞ் சராசரம்||

என்றற் றொடக்கத்தனவாகக் கூறிய உண்மைகளை உபதேசித்து, அங்ஙனம் உபதேசித்தவாறே தமது விசுவரூபத்தை அவ்வர்ச்சுனருக்குத் தரிசிப்பிக்க, தாம் அருளிய அருட்கண் கொண்டு தம்மை நோக்கச் செய்தபோது அர்ச்சுனர் "விசுவேசுரரே, விசுவரூபரே, அநேக கைகளும், வயிறுகளும், முகங்களும், கண்களுமுள்ள அனந்தரூபராகிய உம்மை எவ்விடத்தும் பார்க்கின்றேன். உம்முடைய ஆதியைக் கண்டிலேன், பின்னர் மத்தியைக்கண்டிலேன், அந்தத்தைக் கண்டிலேன்" என்றற் றொடக்கத்தனவாகத் துதித்தாராக மகாபாரதம்கூறுகின்றது. விசுவாமித்திரர் ஓர் கால்மற்றோர் சுவர்க்கத்தைப் படைக்கும் வன்மையுடையராயினார். அகஸ்தியர் ஓர்கால் சலத்தைப் பானஞ்செய்ய வன்மையுடையராயினார். இந்த விபூதியோகத்தைப் பாசுபதயோகோபநிஷத மந்திரப் பொருள் கொண்டு சிவராகவ சம்வாதத்திலே சிவனார் உபதேசித்திருக்கின்றார். எந்தெந்தச் சுருதிகளைச் சிவனார் எடுத்து ஸ்ரீ ராமருக்கு "எல்லாந் தாமே" என்பது போதர உபதேசித்திருக்கின்றாரோ, அவ்வாறு பாசுபதயோகியாகிய பிரமதேவரும் அந்த விபூதியோகத்தை அவ்வாறே ஆசுவலாயன முனிவர்க்கு உபதேசித்தாராகக்கைவல்லியோபநிஷதத்தினால் அறியப்படுகின்றது.

A. மாண்டுக்கியோபநிஷதப் பொருள்கொண்டு ஆன்மாவும் சிவமும் (முன்னரே மேலே கூறியவாறு) அபேதமாய் ஐக்கிய பாவனை யுற்று நின்ற நிலை (உள-வது) மந்திரபாகத்தினால் சூசிக்கப்படுகின்றது.

B. (சராசர) பூதங்களெல்லாம் எதினின்று தோன்றி நின்று ஒடுங்குகின்றனவோ அந்தப் பிரமத்தை அறிக என்னுங் கருத்தினால்,

யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே |
யேந ஜாதாநி ஜீவந்தி |
யத் ப்ரயந்த்யபி சம்விசந்தி |
தத் விசிஞ்ஞா சஸ்வ||

என்னும் தைத்திரீய சுருதியும், (சராசரமாகிய) பூதமெல்லாம் ஆகாயத்திலே தோன்றி (நின்று) ஒடுங்குகின்றன என்ற கருத்தினால்

சர்வாணிஹவா இமாநி பூதாந்யாகாசாதேவ சமுத்பத்யந்த ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி |

என்னுஞ் சாந்தோக்கிய சுருதியும்: இச் (சராசர) பூதங்களெல்லாம் ஆனந்தத்திலே தோன்றிநின்று ஒடுங்குகின்றனஎன்ற கருத்தினால்,

ஆநந்தாத்யேவ கல்விமாநி பூதாநி ஜாயந்தே |
ஆநந்தேந ஜாதாநி ஜீவந்தி |
ஆநந்தம் ப்ரயந்த்யபி ஸம்விசந்தி |

என்னுந் தைத்திரீய சுருதியும் கூறியவாறு, ஆனந்தாகாசமாகிய சிதம்பர சத்தியினின்று வேறுறாத சிவமாகிய பிரமத்தோடு ஆன்மா அபேதமாய் நின்ற ஐக்கிய பாவனை நிலை, "என்னிலிருந்தே யாவும் உண்டாயிற்று" என்றற் றொடக்கத்த கைவல்லியத்தின் (ஙகூ-ம்) சுருதியினால் உணர்த்தப்படுகின்றது.

சிவோகம்பாவனையினாலே சிவாவிர்ப்பாவ முற்ற பாசுபத யோகிகளே தாமும் சிவமும் வேறற நின்றமையால், அவ்வாறு கூற வல்லுநராகின்றார் என்ற கருத்தினாலன்றோ, சர்வஞானோத்தரசுருதி மேலே சொல்லிய கைவல்லியத்து(ஙகூ-ம் ௨௦-ம்) சுருதிகளுக்கிசைய "நானே உலகத்துக்கு நாதன், என்னாலே எல்லாம் பிரகாசிக்கின்றது, நாததத்துவமுதல் பிருதிவியந்தமாயுள்ள தத்துவமெல்லாம் என்னின்றே நிலையுறுகின்றன. அகத்தும் புறத்துமாகக் காணப்படுவதாயேனும் கேட்கப்படுவதாயேனும் பிரபஞ்சத்தில் எவ்வளவு நிண்ணியதாய் எது எது உளதேனும் அததுவெல்லாம் என்னாலே வியாபிக்கப்பட்டது. சிவன் வேறு நான் வேறு என்னும் துவித பாவனையைவிட்டு எந்தச் சிவயோகியும் அத்துவிதபாவனை செய்யக்கடவன்" என்ற கருத்தினால்,

அகமேவ ஜகந்நாதோ மத்தஸ்ஸர்வம் ப்ரகாசதே |
சிவாத்யவநி பர்யந்தந் தத்சர்வம் மயி ஸம்ஸ்திதம் |
யத்கிஞ்சிஜ்ஜ கத்யஸ்மிந் த்ருஷ்யதே ச்ரூயதேபிவா |
பகிரந்தர் விபாகேந தத்சர்வம் வ்யாபதம் மயா |
சுவாந்ய ஸ்த்வஹ மேவாந்யஃ ப்ருதக்பாவம் விவர்சயேத் |
யஃசிவஃ சோகமே வேத்யத் வைதம் பாவயேத்ஸதா||

என்று கூறிற்று. (ஆனந்த) ஆகாசமானது பராசத்தியாம் என்ற கருத்தினாலன்றோ, கூர்ம புராணம் "சிவபிரானுடைய பராசத்தி ஆகாசம் என்னும் பெயர் பெறுவர்" என்ற கருத்தினால்

யஸ்யசா பரமாதேவீ சக்திராகாச சம்ஞிதா |

என்று கூறிற்று. சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாகிய ஈசுவரன் நானே, சிருஷ்டி திதி சங்காரம் என்னுடைய பிரவிருத்தியாகவே சொல்லப்படுகின்றது என்ற கருத்தினால், கூர்மபுராணம்

அஹம் ஹிசர்வபூதாநா மந்தர்யா மீச்வரஃ பரஃ |
ஸர்க ஸ்திதியந்த கர்த்திருத்வம் ப்ரவ்ருத்திர் மமகியதே||

என்றற் றொடக்கத்தனவாகச் சாங்கியயோகம் எனப்படும் நிர்க்குணபாவனையிலே முடித்துப் பேசிய ஏகமாம் ஆன்ம நிலையையும் மேலே கைவல்லியோபநிஷதமும் சர்வஞான சுருதியும் பிறவுங் கூறிய உமாசமேத சிவனாரோடு ஆன்மா நின்ற ஐக்கிய பாவனா நிலையையும் ஒன்றென்று சாஸ்திரவு

ணர்ச்சி அற்ந்த விவேகிகள் விபரீதப்படுத்தி ஓர் போதம் உணராரென்க.

(C) அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்துமாயுள்ள சிவபிரானைச் சிவப்பிரசாதத்தினுலே அறிதல் வேண்டும் என்ற கருத்துக்கொண்ட

அணோரணியாந் மகதோமஹீயாநாத்மாஸ்ய ஜந்தோர்நிகிதோ குகாயாம் |

என்னுங் கடவல்லியுபநிஷதமும், மகாநாராறணோபநிஷதமும் கூறும் மந்திரப்பொருள் கொண்டு சாதிக்கப்படும் சிவஜீவபாவனுபேத ஐக்கியநிலை கைவல்லியோபநிஷதத்து (சஈ-வது) மந்திரத்துள்ள அணுவுக்கணுவானவனும் நானே என்னும் சுருதியினுல் உரைக்கப்பட்டது.

(D) சிவபிரான் பிறவாதவர், பெரியர், நித்தியர் என்ற கருத்தினுல்

அஜ ஆத்மா மகாந் த்ருவ: |

என்னும் பிருகதாரண்ணியோபநிஷதமும், "பிரகிருதி மண்டலத்துக்கு மேலாம் விசுவரும் பழையோருமாம் சிவபிரான்" என்ற கருத்தினுல்

விச்வம் புராணந்தமச: பரஸ்தாத் |

என்னும் மகோபநிஷதமும், "சூரிய மத்தியிலே இரண்மயராகிய புருஷராகிய சிவபிரான் காணப்படுகின்றார்" என்ற கருத்தினுல்

யஏஷோந்த ராதித்யே கிரண்மய: புருஷோத்ருச்யதே |

என்னுஞ் சாந்தோக்கியோபநிஷதமும் கூறும் சுருதிகள்கொண்டு, ஆன்மாவும் (சிவசத்தி சமேதராகிய) சிவமும் அபேதமாய் நிற்குநிலை கைவல்லியோபநிஷதத்து (சக-ம் சஉ-ம்) சுருதிபாகங்களினுலே உணர்த்தப்பட்டது.

(E) கையின்றிப் பற்றுகின்றவரும், காலின்றிச் செல்பவரும், கண்ணின்றிப் பார்க்கின்றவரும், காதின்றிக் கேட்பவருமாயுள்ளார் சிவபிரான; அவர் அறியப்படாததை அறிகின்றார்; அவரை யாரும் அறிந்திலர்" என்னுங் கருத்தினுல்

அபாணிபாதோ ஜவநோக்கு கிதோபச்யத்யசட்சு: ஸச்ருணோம்ய கர்ண: | ஸவேத்தி வேத்யம் நசதஸ்யாஸ்திவேத்தா||

என்னும் சுவேதாசுவதரோபநிஷதமும், "நினைத்தற்கரியரும் அளத்தற்கரியரும் ஆதிமத்தியாந்தமிலாதவரும் சிவபிரான்" என்ற கருத்தினுல்

அசிந்த்யாயாப்ரமேயா யாநாதி நிதநாய |

என்னும் மைத்திராயணோபநிடதமும், "எல்லாவேதங்களும், இந்தப் பிரணவப் பொருளாகிய சிவத்தை அறிகின்றன" என்ற கருத்தினுல்

சர்வே வேதாயத் பதமா மநந்தி |

என்னுங் கடவல்லி சுருதியும், சிவபிரான் ஏகரும், வெளிப்படாதவரும், (விவிக்தரூபரல்லர்) அனந்தரூபருமாயுள்ளார்" என்ற கருத்தினுல்

ஏதேகமவ்யக்த மநந்த ரூபம் |

என்னும் மகோபநிஷதமும், சிவபிரான் மகாமாயையின் கண்ணே விசுத்தமாகிய அநேக சரீரங்களை எடுப்பார் என்ற கருத்தினுல்

ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர: |

என்னும் இருக்குவேதமும், சித்தருபியும் முடிவில்லாதவருமாயுள்ளவர் சிவபிரான் என்ற கருத்தினுல்

சத்யம் ஞாந மநந்தம் ப்ரம்ம |

என்னுந் தைத்திரியமும், மகானுகிய சிவபிரானிலிருந்தே இருக்காதி வேதங்களும் உபநிஷதங்களும் தோன்றின என்ற கருத்தினுல்

அஸ்ய மகதோ பூதஸ்யநி: ச்வசிதமேதத் ருக்வேத: ...... ..................உபநிஷத: |

என்னும் பிருகதாரணியோபநிஷதமுங் கூறிய சுருதிப்பொருள்கொண்டு உணர்த்தப்படும் ஜீவான்ம பரமான்ம ஐக்கியநிலை கைவல்லியோபநிஷதத்து (சஈ. சச. சரு-ம்) சுருதிப் பாகங்களினுலே சாதிக்கப்படுகின்றது.

(F) இங்ஙனம் மேலே சொல்லியவாறு சிவத்தோடு ஆன்மா ஐக்கியமுற்று நிற்குங்கால் சிவனுடைய சர்வஞ்ஞதாதி குணங்களெல்லாம் ஆன்மாவில் விளங்கப்பெற்றுத் தான் சிவசாமியம் அடைகின்றான். இதுவே சிவத்தவம் எனப்படும் என்று நீலகண்ட சிவாசாரியர் கூறியவாறே சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அனந்தசக்தி, சுவதந்திரத்துவம், நிராமயான்மா, விசுத்ததேகம் என்னும் சிவகுணங்கள் விளங்கப்பெற்று ஆன்மா சிவத்துவத்தை அடைகின்றான் என்ற கருத்தினுல்

சர்வஞ்ஞதா த்ருப்தி ரநாதிபோத ஸ்வதந்த்ரதாநித்யமலுப்தசக்தி: | அநந்தசக்திச்ச நிராமயாத்மா விசுத்ததேஹ: சசிவத்வமேதி||

என்னும் சர்வஞானோத்தரசுருதி கூறுகின்றமையாலும், "முத்தன் சிவசமமாகின்றான்" என்னுங் கருத்தினுல்

முக்த: சிவசமோ பவேத் |

என்று சிவபுராணங் கூறுகின்றமையாலும், இவற்றிற்கிசையவே இப்படிப்பட்ட முத்தன் (வித்வான்) புண்ணியபாபங்கள் நீர்ந்தவனுய், நிரஞ்சனனுய், சிவசாமியத்தை அடைகின்றானென்னுங் கருத்தினுல்

ததாவித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம்சாம்யமுபைதி |

என்று முண்டகோபநிஷதமானது ஆன்மா சிவத்தோடு சிவசாமியமுற்று விளங்கினுன். என்னும் உண்மையைக் குறிக்கும் பொருட்டு, கைவல்லியத்து (சஈ-வது) சுருதிபாகம் "புண்ணியமில்லை, பாபம் இல்லை" என்பது பொருள்படசூசகமாய்க் கூறிற்று.

(G) இந்த முத்தனுக்குச் சிவலோகத்திலிருந்து மீளத்திரும்புவதில்லை, அதனுல் பிறப்பிறப்பில்லை என்ற கருத்தினுலன்றே

ப்ரம்மலோகம பிஸம்பத்யதே |

நசபு நராவர்த்ததே |

என்று சாந்தோக்கியோபநிஷதம் கூறிய பொருளைக்கொண்டு பாசுபதயோகிக்குச் சென்ன மரணமில்லை என்னும் உண்மையைக் கைவல்லியசுருதி (சஈ-ம்) சுருதிய பாகத்தினுல் குறிப்பித்தது. இவ்வாறு சிவசாமியத்தினுல் அதீதவின்ப

முற்று நின்ற முத்தனுக்கு தூலமாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசத்தை இடமாகக்கொண்டு எய்தும் சப்தாதி விஷயங்களை உணரவாரான் என்ற கருத்தினுல்,

யத்ரநாந்த் பச்யத்நாந்யத்ச்ருணோதி நாந்யத் விஜாநாதி |
அறிஞன் ஒன்றையும் காண்கின்றிலனுய், ஒன்றையுங் கேட்கின்றிலனுய், ஒன்றையும் அறிகின்றிலனுய், நின்ற (அதீத) நிலையானது "பூமா" எனப்படும் என்று சாந்தோக்கியோபநிஷதங் கூறிய பொருளை, கைவல்லிய (சஎ-ம்) சுருதிப்பாகம் ஸ்தூலபூதங்களைக் கூறுதல் வாயிலாகக் குறிப்பால் உணர்த்திற்று என்று கோடலுமாகும். இந்தச சிவபிரான் சத்தாகிய பசுவுக்கும், அசத்தாகிய பாசத்துக்கும் வேருய், அவற்றுக்குப் பதியாய் நின்ருர் என்ற கருத்தினுல்

ஸச்சா ஸச்ச ஜகத்விச்வம் சரீரம் பரமேஷ்டிநః |
பதிதம் ஸதிதி ப்ரோக்தம் யச்சா ஸதிதி கத்யதே |
தயோ: பதித்வாத்துசிவ: ஸதசத்பசு ருச்யதே||

என்று சிவபுராணங் கூறியவாறு, சமஸ்தசாட்சியாய் நின்ற சிவபிரானைச் சத்தாகிய பசுவுக்கும் அசத்தாகிய பாசத்துக்கும் வேருகிய சத்தி என்பதை உணர்த்துமாறு

சமஸ்தசாக்ஷிம் ஸதஸ்த் விகீநம் |

என்று கைவல்லியத்து (சகூ-வது) மந்திரம் கூறி, பின்னர்ப் பிரகிருதி மண்டலத்துக்கு மேலே சமஸ்தசாட்சியாக முன்னரே (கடு-ம்) மந்திரத்திற பேசப்பட்ட உமாசமேதராகிய சிவபிரானே இந்தச் சத்துக்கும் அசத்துக்கும் வேருய்அவைக்குப் பதியாயுள்ள பதியாம் என்பது போதர, ஆங்குப் பிரயோகிக்கப்பட்ட "சமஸ்த சாட்சியாய்" நின்ருர் எனப் பொருள்படும் பதம் இவ்விறுதி (சகூ-வது) மந்திரத்திலும் சூசிக்கப்பட்டதாமென்க.

---

(கைவல்லியோபநிஷதத்தை வைதிகபாசுபத தீக்ஷயுடையோன் செபித்து மேற்கதியடையுமாறு உபதேசித்தமை)

யச்சத ருத்ரீயமதீதே சோக்நி பூதோபவதி |
ஸவாயு பூதோபவதி |
ஸ ஆத்ம பூதோபவதி |
ஸ சுராபாநாத் பூதோபவதி |
ஸ ப்ரம்ம ஹத்யாய்ா: பூதோபவதி |
ஸசுவர்ணஸ் தேயாத் பூதோபவதி |
ஸக்ருத்யா க்ருத்யாத் பூதோபவதி |
தஸ்மாதவிமுந்த மாச்ரிதோ பவத்வித்யாச்ரமீ |
சர்வதா ஸக்ருத் வாஜபேத் |
அநேந ஞாந மாப்நோதி ஸம்சாரார்ணவ நாசநம் |
தஸ்மாதேவம் விதித்வைநம் கைவல்யம் பதமச்நுதே |
கைவல்யம் பதமச்நுதே||

(இதன்பொருள்) எவன் இந்தச் சதருத்திரீயத்தை அத்தியயனஞ் செய்கின்ருனே, அவன் அக்கினியைப்போலச்சுத்தனுகின்ருன். அவன் வாயுவைப் போலச் சுத்தனுகிருன். அவன் சுவர்ணத்தைத் திருடிய குற்றத்தினின்று சுத்தனுகின்ருன். சுராபானஞ் செய்த தோஷத்தினின்று சுத்தனுகின்ருன். பிரமகத்தி தோஷத்தினின்று சுத்தனுகின்ருன். செய்யக் கூடாததைச் செய்தும், செய்யவேண்டியதைச் செய்யாதும் விட்ட தோஷத்தினின்று சுத்தனுகின்ருன். ஆதனுல் வாராணசியை அடைந்து வைதிக பாசுபத விரதமுடையவனுய், எப்போதுமேனும், ஓர் முறையேனும் இந்தஉபநிஷதத்தைச் செபித்து வருவதினுல், சம்சாரசமுத்திரத்தை நாசஞ் செய்யும் சிவஞானத்தை அடையற்பாலனுகின்ருன். ஆதலினுல், இவ்வாறு சிவத்தை அறிந்து, கைவல்லிய பயனைத் துய்க்கின்ருன். கைவல்லிய பயனைத் துய்க்கின்ருன்.

அவிமுக்தம்—வைதிகபாசுபத தீக்ஷயுடையனுய் (அத்தியாசிரமியாய்), இக்கைவல்லியோபநிஷதத்தை அவிமுக்தம் எனப்படும் ஸ்ரீகாசிப்பதியை அடைந்து செபிக்க என்று ஈண்டுக் கூறப்பட்டமையில், உபலக்ஷயால (இனம்பற்றி) சிதம்பரம், திருவாரூர், காளகஸ்தி, கேதீச்சரம், நகுலேசுவரமுதலிய சிவஸ்தலங்களும், திருச்செந்தூர் முதலிய சுப்பிரமணிய ஸ்தலங்களும் அக்கைவல்லியோபநிஷதம் செபித்தற்கு உரித்த ஸ்தானங்களாகத் தழுவப்படும்.

**சேந்திநாதய்யர்.**

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

## திருமூலரின் ஓர்திருமந்திரம்.

"சென்னை ஆரியனுர்" இனத்தராகிய "வேதாந்த சங்கை நிவாரணம்" எழுதிய வேதாந்தியார் தமது புஸ்தகத்துப் பத்தொன்பதாம் பக்கத்திலே அறுபத்துமூன்று குருமணிகளுள் ஒருவராகிய திருமூலநாயனுர் திருவாய் மலர்ந்தருளிய

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே.

என்னுந் திருமந்திரத்துக்குப் பராவஸ்தையிற் கண்ட செய்யுளை இலக்கறியாது தம்முடைய ஏகான்மவாதத்ததாமென்று திரித்துணர்ந்து தமது மாயாவாதச் செய்யுள்களோடிசைத்துப் பொருள்படுத்த நேர்ந்தமை தவருமென்றும், அது அவர் பக்கத்துக்குப் போந்த செய்யுளன்ருய் நமது வைதிக சைவ பாசுபதயோக பக்கத்துக்குப் பொருள் படுத்தற் கியைந்ததாமென்றும், அத்திருமூலநாயனுர் பிரமாணசாக்ஷியம் வாயிலாக நிரூபணஞ் செய்வதே நெறியாமென்றும் நினைந்து பின்னர்ப் போதருமாறு எழுதுவேமாயினேம்.

அறுபதின் மும்மைச் சிவபக்தர்களுள்ளே ஒருவராகப் பேசப்பட்டிருப்பவராக அறியக்கிடந்த (சிவபெருமான் உமாதேவியாருக்கருளிய) சிவரகசியத்தினுலும்,

தக்ஷச்சர்யாக்ரியா யோகே விந்யஸ்தாத்மா மகேச்வரே |
சிவத்திலே தம்முயிரைச் செலுத்திச் சரியா கிரியா யோகத் திறலைமை படைத்த திருமூலநாயனுர் என்றுரைக்குஞ் சிவபக்த விலாசத்தினுலும்,

திருவாரூரிலே வன்மீகநாதர் "தில்லை வாழந்தணர் தம்ம டியார்க்கு மடியேன்" என்று அடி யெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்திநாயனரால் அருளப்பட்ட திருத்தொண்டத்தொகையிலே அமைந்த "நம்பிரான்திருமூல னடியார்க்கு மடியேன்" என்னுந்திருவாக்கினுலும்,

"குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலமேய்ப் போன்குரம்பைப்பு
முடிமன்னு கூனற்பிறை யாளன்றன்னை முழுத்தமிழின் [க்கு
படிபன்னு வேதத்தின் சொற்படியே பரவிட்டெனுச்சி
பிடிமன்ன வைத்தபிரான் மூலனுகின்ற வங்கண்ணே."

என்று திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் அநுக்கிரகம் பெற்ற ஆதிசைவராகிய நம்பியாண்டார் நம்பியருளிய திருவந்தாதியினுலும்,

(க) "ஞானமுதலிய நான்குநான் குண்மை தெள்ளுந் தீந்தமிழாற் கூறுந்திருமூலர்" எனவும்,

(உ) "ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுத னுன்குமலர் நற்றிருமந் திரமாலை [ளா
பான்மைமுறை யோராண்டுக் கொன்ருகப் பரம்பொரு
மேனவெயி றணிந்தாரை யொன்றவ னெனவெடுத்து."

எனவும்,

(ரூ) "ஆவடுதண் டுறையணைந்தங் கரும்பொருளை யுறவணங்கி
மேவுவார் புறக்குடபான் மிக்குயர்ந்த வரசின்கீழ்த்
தேவிருக்கை யமர்ந்தருளிச் சிவயோகத் தலைநின்று
பூவலரு மிதயத்துப் பொருளோடும் புணர்ந்திருந்தார்."

எனவும்,

(ச) பித்தற்ற மயலன்று பிறிதொருசார் புளதன்று
சித்தவிகற் பங்களைந்து தெளிந்தசிவ யோகத்தில்
வைத்தகருத் தினராகி வரம்பில்பெரு மையிலிருந்தா
ரித்தகைமை யளப்பரிதால் யாரானு மெனவுரைப்பார்."

எனவும் போதரும்.

(உலகெலா முணர்ந்தோதற் கரியவன்) என்று நடராஜவள்ளலார் அடியெடுத்துக் கைகொடுக்கச் சேக்கிழார் நாயனர் பாடி யருளிய பெரியபுராணத்தினுலும்,

"கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர்நீடும் பசுக்களைக்கண்
டவனுடலிற் பாய்ந்து போத
வயலாகப் பண்டையுட லருளான் மேவி
யாவடுதண் டுறையாண்டுக் கொருபாவாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகினரே." என்று சிதம்பரத் தில்லைத் தீக்ஷிதருள் ஒருவராயும் சந்தான சாரியர்களுள் ஒருவராயுமுள்ள உமாபதி சிவாசாரியருளிய திருத்தொண்டர் புராணத்தினுலும்,

"சக்ரவர்த்தி தவராச யோகி யெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளென்னுளோ"

என்று போற்றுந் தாயுமானசுவாமிகள் திருப்பாடற்றிரட்டினுலும், சிவாகமங்களிலேயுள்ள சரியை கிரியை யோகஞான பாதப்பொருள்களை ஒன்பது தந்திரங்களுள் அடக்கித் திருமந்திரமெனப்பெயரிய அதிரகசிய நுட்பார்த்தங்கொண்ட ஞான நூலையருளினவர் ஏகான்மவாதமெனப்படும் மாயாவாதியா காது சிவராசயோகியாராயுள்ளார் ஸ்ரீமூலநாதரென வடமொழிச்சிவரகசிய சிவபக்தவிலாசாதிகளே கூறப்படுந் திருமூல நாயனரேயாம் என்பது வைதிக சைவராயினோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்த பக்ஷமாமன்றே?

சிவபுராணுதிகளிலே சிகாரமுதலிய மூன்றும் இவையாமென்றுணர

சிகாரஞ்சிவ ரூபந்து வகாரஞ் சக்திருச்யதே |
யகார மாத்ம ரூபஞ்ச |

என்று கூறப்பட்டவாறு திருமூலநாயனர்

"சிகாரஞ் சிவமே வகாரம் பரமே
யகார முயிரென்றறையலுமாமே" என்றும்,

"தற்பதந் தொம்பதந் தானு மசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்பது மிகபர நிகழ்சிவ மிம்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே" என்றும்,

"வேதாந்த தொம்பதமேவும் பசுவென்ப" என்றும் போந்த திருமந்திரமொழிகளால், ஞாதிரு (ஆன்மா) என்பது வேதத்தின் அந்தத்திலே பேசப்படும் பசுவாகிய துவம்பத உயிராமெனவும், ஞானமென்பது தற்பதத்தினுலே பேசப்படும் பரையாகிய பரமாம் எனவும், சிவம் என்பது அசிபதத்தினுலே சொல்லப்படும் சிவனும் என்றும் ஈண்டு (ஞானபாத மல்லாத பராவஸ்தை கூறும் யோகபாதத்திலே) கொள்ளற் பாற்றும். ரௌரவாகமத்திலே சாக்கிர சாக்கிரம் (நனவில் நனவு) சாக்கிரசொப்பனம் (நனவிற் கனவு) சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரியம், காலபரம், அதீதம், பரதரிசனம், விசுவக்கிராசம், உபசாந்தம, சிவதரிசனம், சாயுச்சியமென அவாந்தர பராவஸ்தாபேதங்கள் பேசப்படுவனவாம். இந்த ரௌரவாகமப் பராவஸ்தையை யுற்று (இறுதிச் சாயுச்சியம் ஒழித்து நின்ற சாக்கிர சாக்கிரமுதற் சிவதரிசன மீருயுள்ளபத்தையும் பத்தவஸ்தையாமென்று கொண்டு திருமூலநாயனர்),

"ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்து" என்றும்,

"தொந்தத் தசியை யவ்வாசியிற் றேற்றியே
யந்த முறை யீரைந்தாக மதத்தட்டு
வந்த மிலாத வவத்தையவ் வாக்கியத்
தந்து முறையிற் சிவமுன் வைத் தோதிடே" என்றுந்

தொகைப்படுத்திக் கூறினர்.

இந்தப்பத்தவஸ்தையும் பிராசாத மந்திரமார்க்கத்துற்ற அத்தியான்மிக நிராலம்ப உன்மனயோகம் பற்றியதாமென உரைப்படும் சாக்கிர சாக்கிரமுதல் காலபராந்தமாம் ஐந்தும் சமனந்த பசுத்தவ நிவிர்த்திய நந்தரம் உன்மூலமாம் தியானத்தானத்தில் விளங்கும் ஆன்மாவினது ஆன்மசாக்கிராதி ஐந்தவஸ்தை என்றும், அவற்றுள்ளே மூன்றுநீக்கிச் சாக்கிர துரியமுதற்கொண்டு விசுவக்கிராசாந்தமைந்தும் உன்மனந்தமாம் சமாதித்தானத்தில் விளங்கும் பரத்தினது பரசாக்கிராதி ஐந்தவஸ்தை என்றும், அவற்றுள் மூன்று நீக்கிப் பரதரிசன முதற்கொண்டு சாயுச்சிய முடிவாமைந்தும் உன்மனேபரி

சாக்ஷாத்கார ஸ்தானத்தில் விளங்கும் சிவனது சிவசாக்கிராதி ஐந்தவஸ்தை என்றும், இந்த மூவகை அவஸ்தையுள் அவ்வச் சுழுத்தியீறும் மூவகை மூன்றவஸ்தையும் முறையே காரிய விசுவம், காரண விசுவம், வாசனுவிசுவம் என்னும் மூன்றின் வியாப்திக் கிராசோபசாந்திகளாம் என்றும், அவஸ்தை பேதங்களுள்ளே உயிர்க்கும் (ஆன்மாவுக்கும்) பரத்துக்கும், சிவனுக்குந் தனித்தனி துரியங்கள் பொதுவாய் உளவாம என்ற கருத்தினல் திருமூலநாயனர் பராவஸ்தையை வகைப்படுத்திக் கூறுமிடத்து,

கூரிய கனுத் துரியத்தி லவனு
மரிய துரிய நனவாதி மூன்றிற்
பரியபர துரியத்திற் பரனுந்
திரிய வருந் துரியந்திற் சிவமே.

என்றும், உயிருக்குச் சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிரசுழுத்தி, சாக்கிரதுரியமுளவாம என்னுங் கருத்தாற் பின்னரும் அப்பராவஸ்தையிலே விரிவுபடுத்திக் கூறுமிடத்து,

அணுவின் றுரியத்தி லான நனவு
மணுவகை வின் கண்ணுன கனவு
மணுவசை விற்பரா திதஞ் சுழுத்தி
பணியிற் பர துரியம பரமாமே.

என்றும், பின்னறப் பரத்துக்குச் சாக்கிர துரியம், காலபரம், அதீதம், பரதரிசனம் என்பன உளவாம் என்ற கருத்தினுல்,

பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசக முண்ட கனவு மெச்சாந்தி
யுறுவுறு கின்ற சுழுனையு மோவத்
தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே.

என்றும், சிவனுக்குப் பரதரிசனம், விசுவக்கிராசம், உபசாந்தம், சிவதரிசனம் என்னும் நான்கும் உளவாம் என்ற கருத்தினுல்,

பரமா நனவின்பின் பார்சக முண்ட
கிரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
யுரமா முபசாந்த முற்றற் றவே
தாணுஞ் சிவதுரி யத்தனு மாமே.

என்றுந் திருவாய்மலர்ந்தருளினுர். இந்தப்பராவஸ்தை இறுதியிலே பிரமாதி பரநாதாந்தம் வரையும் தனித்தனி ஒவ்வொன்றினும் பார்த்தன்முதல் அவசமாத லிறுதியாம் ஐவைந்து அவஸ்தை கொள்ளப் படுதலினுல் எய்தும் என்ற கருத்தினுல்,

சார்வாம் பாரசிவம் சத்திப் பரநாத
மேலாம் விந்து சதாசிவ மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரம னரியம நாபதி
தேவா முருத்திர னீசனுங் கானிலே.

என்றுரைத்தார். அகரகசியம் சர்வசாரமுதலிய ஏகான்மவாதோபநிடதங்களிலே தூலப் பிரகிருதி ராசசசாத்துவிக குணப்பாலராய்த் துவம்பத தற்பதங்களினுல் உறைக்கப்படும் காரிய காரணேபாதியாஞ் சீவேசுரரை ஒழிந்துகடந்த "அசி" என்னும் பதத்தால் ஒருமையுற அறியப்படும் பிரத்தியக்ஷப் பிரகாசித ஆன்மாவே பிரமம் என்று அறியப்படும். சுவகிரகத்திலே தன்மனைவி மக்களாயினேர்க்கு எசமானுய் நின்றுன் ஒருவன் மற்ருேர் இராசமந்திரியை நணுகியவிடத்துத் தான் தாசனுய் ஒழுகுவானன்றித் தன் கிரகத்து ஆதிபத்தியத்தை இராசமந்திரிமுன் செலுத்த இயலாதவாறுபோல, அடிப்புறத்து மாயாவாதோபநிஷதங்களில் ஸ்தூலப்பிரகிருதி சுத்தா சுத்தசாத்துவிக ராசசகுணப் பிரதிவிம்ப மித்தையராம் சீவேசுரர்க்கு மேலாய்ப் பிரமமெனப்பட்டு, சாங்கிய யோகோபநிடதங்களினுந் தலைமைவாய்ந்த வைதீகபாசுபதயோக அதர்வசிகை முதலிய உபநிஷதங்களினுலே, ஞானதிருவாய் (ஆன்மாவாகிய சீவப்பிரமமாய்) நிற்பதன்றிப் பரப்பிரமத்துக்கு முன்னே தானும் பரபிரமமென்று நிற்றலாகுமோ? ஓர் போதும் ஆகாது! ஆகாது! சென்னை ஆரியவேதாந்தியார் பிரமம் வைதிகசைவசித்தாந்தியாம் நமது சீவான்மாவும் ஒன்றுமென்றுணரப் பலதிருஷ்டாந்தங்கள் வாயிலாகப் பரீக்ஷித்துச் "சென்னை ஆரியனுர் பிரமம் பரம்பிரமமாகாத சீவப் பிரமம்" என்னும் சிறுநூலிலே சுருக்கியும், "இந்து சாதன" ப்பத்திரிகையில் "வைதிக சைவசுத்தாத்துவித" விஷயத்தின் கீழ விரிதும் நிருபணஞ் செய்திருக்கின்றேம். வைதிகசைவ பதிபசு பாசவிளக்கம் சுவேதாசுவதரோபநிஷதாதிகளிலே சுருக்கமுற நிகழ்வதேயாகச் சீவேசுர மாயாவாத விசாரத்தினுல் சேவிக்கும் பிரமம் (ஆன்மா) பலசாங்கிய யோகோபநிடதங்களிலே பெரிதும் முடிவாய்ப்பேசப்படுகின்ற மையாலன்றே லிங்கபுராணமும் சைவபுராணமும்,

சைவசங்க்ஷிப்யவேதோக்தம் |

சைவம் சுருக்கமுற வேதத்திற சொல்லப்பட்டது என்ற கருத்தை அறிந்து, சாங்கியயோகோப நிடதங்களை வேதாந்தம் என்றும், அதிலே பிரதிபாதிக்கப்பட்ட பிரமத்தை (ஆன்மாவை) ஞாதிரு என்றும், அதனைத் துவம் பதத்தினுலே சுட்டிப்பசு என்றுங் கொண்டு,

"வேதாந்த தொம்பதமேவும பசுவென்ப" என்று அருளிச் செய்தார் ஸ்ரீ மூலநாதர். உயிரும் (ஆன்மாவும்,) பரமும், சிவனும் அதர்வசிகை முடிவுகொண்டு துவம்பத தற்பத அசிபதங்களில் வைத்து உணரற்பாலனவாம் என்ற கருத்தால்,

உயிரைப் பரனை யுயர்சிவன் றன்னை
யயர்வற் றறிதொந் தத்தசி யதனுற்
செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி
யயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே.

என்று கூறினுர். சீவபரசிவங்களுக்குப் பராவஸ்தையிலே சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்னும் மூன்றும் முறையே நிறுத்தப்பட்டு ஒன்றுக்கொன்று மேலாகச் சோபானமுறையிற் பேசப்பட்டாற் போல, (வைதிக பாசுபதோப நிடதமாகாத) சாங்கியயோகோப நிடதநெறியானே முன்னர்க்கூறிய காரிய விசுவவியாப்தியை யொட்டி உணர்த்தப்புகுந்து எப்பிரகாரத்தால் மெய்யாகிய கயிற்றைப் பொய்யாகிய பாம்பு மறைத்ததாகவும், மறையாததாகவும் கொள்ளப்படுமாமோ,

அப்பிரகாரம் மெய்யாகிய தன்னை (பிரமத்தை) மாயைமறைத்ததாகவும் கொள்ளப்படுமென்று பிரித்துப்பொருள் கூறிய வேதாந்த சங்கை நிவாரண ஏகான்மவாதியார்க் கிசைந்து திருமூலநாயனார்

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை ம்றைத்தது தன்கரணங்களாந்
தன்னின் மறைந்தது தன்கரணங்களே.

என்று கூறியருளினார். ஈண்டு "தன்னை" என்றது ஆன்மாவாகிய பிரமத்தை யாமென்க. பின்னர்ச் காரண விசுவவியாப்தியை யொட்டிப் பரையாம் பரத்தின் மேனிலை உணர்த்தப் புகுந்து, திருமூலநாயனார் "பொன்னைமறைத்தது" என்னும் முந்திய செய்யுளை அடுத்து

மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தின் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதமே.

என்றருளினார், ஈண்டுப் "பரம்" என்றது சென்னை ஆரியனார் கருத்துறநின்ற ஏகான்மவாதோப நிடதங்களிலே அசியென்னும் பதத்தாற் சுட்டப்படுவதும், திருமூலநாயனாரால் சிவம் பதத்தினாலே சுட்டப்படுவதுமாகிய பிரமம் எனப்படும் சீவான்மாவினது வியாப்தியினும் மேலாய் வியாபகமுற்ற காரண விசுவ (வியாப்திப் பரையையேயாமென்க). பிருதிவி வியாபகம், ஆகாயம் வியாபகம் என்று ஒருவன் சொல்லக்கேட்ட மற்றவன் வியாபகம் என்னும் பதம் சமமாய்ப் பிருதிவி ஆகாயம் எனும் ஈரிடத்தும் சேர்க்கப்பட்டிருத்தலறிந்து, ஆகாயவியாபகத்தையும் பிருதிவிவியாபகத்தையும் பொருளினாற் சமத்துவமுடையதன்றேனும், ஆகாயத்தினும் பிருதிவி வியாபகமுடையதென்றேனும் கொள்ளாது பிருதிவி வியாபகத்தினும் ஆகாயவியாபகத்தையே தலைமைபடைத்து வியாபகமாமெனக்கொண்டு கருதினார்போல, "தன்னை மறைத்தது" "பரத்தை மறைத்தது" என்றுந் திருமூலர் திருமந்திரமொழியைக்கேட்டபோதும் கண்டபோதும், தனக்கும் (சீவப்பிரமத்துக்கும்) பரத்துக்கும் (பரைக்கும்) சமமாக இசைக்கப்பட்டமை அறிந்து தானாகிய பிரமத்தையும் (ஆன்மாவையும்) அதற்கு மேலாய்நின்ற பரையையும் சமப்படுத்திச் சாஸ்திர விரோதமுறப் "பரம்" என்றது தமது பிரமத்தை உணர்த்தியதாமென்று "அரக்கர் சேனை நீறுபட்டழிய" என்னும் வைஷ்ணவக்கம்பர் இராமாயண வாக்கியத்துள்ளே "நீறு" என்னும் பதத்தைக்கண்டு விபூதி மகாத்மியம் பேசப்பட்டதாமென்றுளறிய ஒருவர்போல, திரிந்துணர்ந்து ஏகான்மவாதியார் தமதுவேதாந்தசங்கை நிவாரணத்திலே, "மாயை ஒருவிதத்திற் பொய்யாயுமிருக்கவேண்டும்" என்றும், "இந்த மாயை கடவுளை மறைத்ததாகவும் ஆகவேண்டும்" என்றும், எடுத்துக்கொண்டு, "ஓர் பிரபு கோவிலில் வாகனம் ஒன்றிருக்கின்றது அது என்ன வாகனம் என்று பார்த்துவாவெனத் தச்சனொருவனை அனுப்பினார்" என்றும், அந்தத்தச்சன் அப்படியே போய்ப்பார்த்து வந்து யானை வாகனமென்று சொன்னான்" என்றும், அதற்குப் பிரபு "அது யாதுமாத்தினாற் செய்யப்பட்டதென்று கேட்டார்" என்றும், அதற்குத் "தச்சன் இன்ன மரமென்று தான்பாக்கவில்லை என்றுசொன்னான்" என்றும்அப்போது "யானைக்கும் மரத்துக்கும் எத்தனை காததூரம்,மரமே யானை தானே,யானைவாகனத்தை ஆராயின் மரத்தை யன்றிப் பொருளுளதோ, மரம் யானையாய்த்தோற்றும்படி மரத்திற் சிற்சில பாகம் எடுக்கப்பட்டது, அதுவேயன்றி யானை என்னுஞ் சொல்லுககுப் பொருளில்லை என்றும் யானை என்னுஞ்சொல்லுக்குப் பொருளில்லாதிருந்தும் யானை பொய்யாயிருந்தும் மெய்யாய் மரத்தை மறைக்கவில்லையா" என்றும், மெய்யைப்பொய் மறைக்கும் என்பதற்குப் பிரமாணம் இவையாமென்று சூதசங்கிதை காலஅளவை உரைத்த அத்தியாயத்துப் பத்துப்பதினோராஞ் செய்யுள்களையும், வேதாந்த சூடாமணி அறுபதாஞ் செய்யுளையும் வரைந்து, இவற்றோடு திருமந்திரத்துப் பராவஸ்தையிற் கண்ட,

மரத்தை மறைத்தது மாமதயனை
மரத்தின் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்த்து பார்முதற் பூதமே.

என்னும் இருபத்திரண்டாந் திருப்பாட்டையும் மேலேகூறியவாறு பொருள் படுத்திச் சேர்த்து ஓரினப்படுத்தித் திருமூலநாயனார் ஈண்டுப் பிரயோகித்த பரையைச் சுட்டிய "பரம்" என்னும் பதத்தைத் தம்பக்கத்துக்கு வேதாகமசாஸ்திரவாராய்ச்சி இல்லாமையால் இலக்கறியாது கவர்ந்தார் "அரி" என்பது விஷ்ணுவுக்கும் சிம்மத்துக்கும் பெயராய் நின்றவிடத்து அவ்வரி என்னும்பதம் விஷ்ணுஎன்று பொருள்படுத்த வேண்டிய இடத்திற் சிம்மமென்று பொருள்படுத்தல் நீதியா? ஆன்மாவாகிய ஒன்றே அறியப்படுந் தமது அத்துவிதத்தினும் மேலாகிய பிராசாதகலைபற்றி வைதிகபாசுபத யோகத்திற் பேசப்படும் பராசத்தியாம் பரத்தைத் தம் பக்காக்குகின்றார், பொன்னை மறைத்தது என்னுந் திருச்செய்யுளைப் போலத் தம் பக்கத்துக்கு உள்ளபடி பொருள் படக்கிடக்கில் அவர்களுக்கதிற் றோஷமின்றாம். மரத்தை மறைத்தது என்னுஞ்செய்யுளிற்போந்த பரம் என்னும் பதத்தை அச்செய்யுளையருளிய திருமூலநாயனார் கருத்துக்கொப்பக் காலபரம் அதீதம் பரதரிசனம் விசுவக்கிராசம் என்னும் பராவஸ்தைப் பாற்படநின்ற பரைக்குப் பொருள்படுத்தாது, அதற்குக் கீழ்ப்பட்ட சாக்கிர சுழுத்தி சாக்கிர துரியம் என்னும் பராவஸ்தைப் பார்படநின்ற ஆன்மாவுக்கு (பிரமத்துக்கு) இசைவுற வேதாந்தியார் பொருள்படுத்தியது எப்பிரமாணத்தினாலோ? பொருளை நன்கு விசாரியாது பதங்களைக்கண்டவுடன் மயங்கித் தம் பக்கத்துக்குப் பொருள் படுத்தத் துணிதல் இந்தவேதாந்தசங்கை நிவாரண வேதாந்தியாருக்கு எக்காலுமும் சுபாவமாமென்க. "பொன்னை மறைத்தது" என்ற செய்யுளால் சீவனையும் (சீவப்பிரமத்தையும்,) "மரத்தை மறைத்தது" என்ற அடுத்த செய்யுளால் பரத்தையும் (பரையையும்) உணர்த்தி, பின்னர்ச் சிவத்தின் நிலை உணர்த்தி அதனோடு முத்திரையும் முப்பத்தாறு தத்துவங்களுக்குமேல் பஞ்சாக்ஷர நெறிகொண்டுணர்த்த வேண்டித்திருமூலநாயனார்,

ஆரு றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
யீரு ரபாயி னிருளற்ற தற்பரன்
பேரு சிவாய வடங்கும் பின்முத்தியே.

என்றருளினர். இந்தச் சிவபரசிவங்களுக்குச் சூதகிதை சொல்லியவாறு வேதாந்தியாருடைய ஞானேந்திரியமைந்து கன்மேந்திரியமைந்து சப்தாதியைந்து பூதாதியைந்து வாயுப்பத்து அந்தக்கரணநான்கு அவித்தையொன்று சிவனென்றுமாகச்சேர்ந்து முப்பத்தாறாக விரிக்கப்படும் தூலப்பிரகிருதி ஆன்மதத்துவ மிருபத்துநான்கின் பாற்படாது, அதனின் உயர்ந்த வித்தியாதத்துவமேழினு முயர்ந்த சிவதத்துவ மைந்தின் அதீதத்திலே ஐக்கியம் பேசப்படுவனவாமென்றும், இவைகளுக்குச் சாக்கிரசாக்கிரமுதல் சிவதரிசனமீறும் பராவஸ்தை திருமூலநாயனாரால் சிவாகமத்தினின்று வேறுபடாது உரைக்கப்பட்டதாமென்றும், இருபத்தைந்தாந் தத்துவமாகிய காரணப்பகுதியையும் (பிரகிருதியையும்) காரணஅசுத்தமாயையையும் (மாயையையும்,) காரணசுத்த மாயையையும் (மாமாயையையும்) ஆன்மாவாகிய புருஷன் யோகமார்க்கத்தில் கண்டு நீங்கிப் பஞ்சமலங்களையும் எய்து அறுக்குமாறு, எல்லாமாயும் அல்லவாயுமாய் உய்யச் செய்யும் உன்மணைப் பற்றிய சாக்கிர சாக்கிரமுதற் சிவதரிசனமீறாகிய பத்து அவஸ்தையாம் பராவஸ்தா நிராலம்பத்தினுல் சாயுச்சிய மடைதல் சுத்தமாம் என்ற கருத்தினுலே திருமூலநாயனார்,

ஐயைந்து மட்டப் பகுதியு மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியா யெவற்குமா யன்றாகி
யுய்யுமப ராவத்தை யுள்ளுறல் சுத்தமே.

என்றும், உயிரும், (அருளாம்) பரமும், நேயமும் உபாதியெல்லாமொழிய ஒன்றாய் அதர்வசிகை முடிபுகொண்டு மருவும் என்ற கருத்தினுல் பராவஸ்தை இறுதி இருபத்தேழாம் செய்யுளால்

நின்றா னருளும் பரமுமுன் னேயமு
மொன்றாய் மருவு முருவு முபாதியுஞ்
சென்றா னெனைவிடுத் தாங்கிற் செல்லாமையு
நன்றான ஞானத்தி னதப் பிராணனே.

என்றருளினர். மேலே கூறியவாற்றால் தமதுதத்துவங்களுட் பேசப்படாது மேலாம் பாசுபத பிராசாத யோகமார்க்கத்துப் பராவஸ்தையிற் பரையையுற்றுப் பரமென்று கூறப்பட்ட பதச்செய்யுளில் "மரத்தைமறைத்தது" என்பதுதமது "பொன்னை மறைத்தது" என்பதுபோலிருக்கக் கண்டு இலக்கறியாது திருடப்பட்ட நமது திருமந்திரசெய்யுட் சொத்தை அத்திருமூலர் பிரமாணசாக்ஷியச் செய்யுள்கள் வாயிலாக நம் பக்கலுறப் பொருள்செய்து மீட்டுக்கொண்டேம்.

சென்னை வேதாந்தியார் தம்மதத்தரல்லராயுள்ள திருமூலர் முதலாயினோரால் அருளப்பட்டனவாய், சைவசித்தாந்த சாஸ்திரம் பொருள்கள் முழுமையும் அமையப் பெற்றுள்ளனவாயுள்ள நூல்களுள்ளே தம்பக்கத்துக்கு முடிவாய்ப் பிரமாணஞ் சொல்லப்பட்டதென்று சிக்குண்டு யாதுக்காக அவதிப்படுகின்றார், தமக்குத் தெரியாத நூல்களுள் முன் பின் யோசியாது பொருள் படுத்துவதால் அடையும் பயன் என்னையோ! திருமந்திரத்துக்குப் பிறவிடங்களிலிருந்தும், தேவாரம், சிவஞானபோதம், கந்தரலங்காரம், கந்தரநுபூதி முதலியவைகளிலிருந்தும் வேதாந்தியார் தம்பக்கத்துக்குப் பொருள்படுத்தி உதகரிக்கும் உதாரணங்கள் அவர் விடுத்த விஷயத்துக்குப் பொறுத்தமுறுவனவோ அன்றோ என்பதனை மேலேசொல்லியவாறு வைதிகசைவசித்தாந்தப் பொருள்கொண்டு நிறுத்து விஷயத்தின் உபக்கிரமோப சங்காரங்களினுல் நிருபணஞ் செய்துவாய்மை கடைப்பிடித்தல் நமது வைதிகசைவசித்தாந்த நெறியுணர்க்குக் கடனமென்க.

சி. செந்தினதையர்.

முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுரவேநமஃ

## தாயுமான சுவாமிகளருளிச் செய்த பாடல் உரை.

---

### சின்மயானந்த குரு.

(முன் தொடர்ச்சி.)

கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவமறிந் துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பட்சத்தை யென்சொல்லுவே
னருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்தமீது
மத்துவித நிலையரா வென்னையாண் டென்னடிமை
யானவர்க ளறிவினூடே
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(இ-ள்.) மேன்மையான கீர்த்தியமைந்த வேதாந்தம் சித்தாந்தம் முதலாகிய முடிவுகளிடத்தினும், இரண்டற்ற நிலைமை யுடையவர்களாய் அடியேனை யாட்கொண்டு தேவரீருக்

கடியரானவர்களுடைய அறிவினிடத்தும், ஞானச்செல்வம் வாய்ந்த கல்லாலவிருட்சத்தினடியிலும் வீற்றிருக்கின்ற சித்தாந்த முத்திக்தலைவரே! திரிசிரபுரமென்னும் க்ஷேத்திரம் பிரசித்தியாகும்படி எழுந்தருளிய தக்ஷிணமூர்த்தியே! ஞானானந்த போதகரே! கருவிலமைந்த மூசையைப்போன்ற சரீரத்தின்மத்தியிலே களிம்பினல் மூடப்பட்ட செம்பைப்போன்ற அடியேன் காணுதற்குத் தகுதியாய் வசித்திருக்கையில், தேவரீர் ஞானக்கினியை வளர்த்துக் குழைவுண்டாகும்படி அம்மூசையினுள்ளாகவே உருகச்செய்து, பக்குவகால முணர்ந்து தேவரீருடைய திருவருளான மாத்திரையினல் அச்செம்பைப் பரிசித்து அதை வேறுபடுத்தி, பத்துமாற்றுடைய தங்கமாகச்செய்து அடிமைகொண்டருளிய தேவரீரன்பை அடியேன் என்னென்று கூறுவேன்.—எ-று.

சிவபெருமானை இரதவாதம் புரிவோராகக் கற்பித்தமைக் கேற்க, குகை, செம்பு, அக்கினி, குளிகை முதலியவற்றையும் முறையே கற்பித்தமைகாண்க. நாதாந்தம் போதாந்தம் கலாந்தம் முதலியவற்றைக் குறிப்பிப்பான், "வேதாந்த சித்தாந்த மாதியாமந்தம்." என்றனர். (எ)

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபேதமு மற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரிதன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்றை மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(இ-ள்.) மோனசிரியராயெழுந்தருளியவரே! சித்தாந்த முத்தித் தலைவரே! திரிசிரபுரம் என்னும் க்ஷேத்திரம் மகிமை யமையும்படி வீற்றிருக்கின்ற தக்ஷிணமூர்த்தியே! ஞானானந்த வாசிரியரே! ஒன்று படுதலும் நீங்குதலு மின்றிச் சேர்க்கை யில்லாததாய், சுருங்குதலும் பெருகுதலுமின்றி, குணங்களுமின்றி, வருதலும் செல்லுதலுமின்றி, ஊர்ஜிதமான ஓர் குறியுமின்றி, மும்மலங்களுமின்றி, அறிதலுமின்றி, உயர்வு தாழ்வு மத்தி மருங்கு என்னும் விகாரங்க ளெய்தலுமின்றி, விந்துதத்துவமும் நாத தத்துவமுமின்றி, ஐந்துவகையாகின்ற பூதபேதங்களுமின்றி, காண்போனிடத்துள்ள அறிவுமின்றி, வாட்டமடைதலுமின்றி, மேன்மை யமைந்த ஒன்றென்பதுமின்றி, இரண்டென்பதுமின்றி, வாக்குமின்றி, மனமுமின்றி, நிலைபேறுமுள்ள பரிபூரணத்தன்மை யமைந்த சுகக்கடலிலே வாய்வைத்துப் புசித்துப் பரவசமடைந்து, தேடுதலுமின்றி யிருக்கும் இடம் எதுவோ? அதுவே உண்மையான நிலையென்றநுக்கிரகித்தருளினீர்.—எ-று.

சேர்தல் பிரிதலாதியாக முறையே கூறிவந்த விகாரங்களின்றித் தனித்த ததாகாரமே உண்மைநிலை யென்றுரைத்தபடி. (அ)

தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாய
மோராமன் மந்திரமு முன்னுமன் முத்திநிலை
யொன்றோ டிரண்டெனும
லொளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
மொலியெனவு முணர்வுறமற்
பாராது பார்ப்பதே யேதுசாதன மற்ற
பரமவநு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது புராதன லன்னிலை
பதிந்தநின் பழவடியர்தஞ்
சோயிருக்க நினதருள் வேண்டு மையனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயானந்தகுருவே.

(இ-ள்.) சித்தாந்த முத்தித்தலைவரே! திரிசிரபுரமென்னும் க்ஷேத்திரம் விளக்கமுறும்படி எழுந்தருளியிருக்கும் தக்ஷிணமூர்த்தியே! ஞானானந்த வாசிரியரே! எமது கடவுளே! வேறொருவராலும் கொடுக்கவேலாத திருவருளனைத்தையும் பாலிக்கும்பொருட்டு, மோனசிரியராய் வடிவுகொண்டு மாதாவைப்போன்ற கிருபையை வெளிப்படுத்தித் தேவரீர்திருவடிகளை அடியேன் சிரத்திற் றரித்தருளி, மந்திரவகைகளையுஞ் சிந்தியாமல், மோட்சநிலைமை ஒன்றுடனே இரண்டென்றுரையாமல், ஒளிமயமாயுள்ள தென்றும், வெளிமயமாயுள்ள தென்றும், உருவாயுள்ளதென்றும் நாத தத்துவமென்றுசொல்லத்தக்க சத்தரூபமாயுள்ளதென்றும் அறியாமல்,நோக்காமல் நோக்குகின்றதே காரணங்கருவியற்ற மேலான அநுபவம்,சித்தித்திற்குரிய தன்மையென்று அறிவித்தருளினீர், ஆனல்,வேறொன்றையும் நோக்காமல் அத்தன்மையான நிலைமையில அமைந்துள்ளவர்களாகிய தேவரீருடைய புராதன அடியார்களுடைய சிறப்புற்றவனுயிருப்பதற்குத் தேவரீர் திருவருளைப் பாலிக்கவேண்டும்.—எ-று.

எனவே தேவரீர் அநுக்கிரகித்த நிலைமையில் அடியேன் இடைவிடாதிருந்து புராதன அடியார்களைப்போன்ற சிறப்படைதற்குத் தேவரீர் திருவருளித்தல்வேண்டு மென்றபடி. இதனானன்றே மணிவாசகப்பிரானும், "அவனருளாலே யவன்றாள் வணங்கி." எனத் திருவாய்மலர்ந்தனர். (கூ)

போதமா யாதிநடு வந்தமு மிலாததாய்ப்
புனிதமா யவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
வாதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருளாகி லெளியனேற்
கறிவாவதே தறிவிலா
வேதம்வரு வகையேது வினையேது வினைதலைக்
கீடான காயமேதென்
னிச்சா சுதந்தரஞ் சிறிதுமிலை யிகபர
மிரண்டினுண் மலைவுதீரத்
திதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(இ-ள்.) சித்தாந்த முத்தித்தலைவரே! திரிசிரபுரமென்னும் க்ஷேத்திரம் விளக்கமுறுமாறு எழுந்தருளி யிருக்கின்ற தக்ஷிணாமூர்த்தியே! ஞானனந்த வாசிரியரே! ஞானமயமாகவும் ஆதிமத்தியாந்த ரகிதமாகவும் தூய்மையாகவும் விகாரமற்றதாகவும் செல்லுதல் மீளுதலற்ற இன்பமயமாகவுமுள்ள தேவரீருடைய பரிபூரணத்துவமே அடைக்கல மடையத்தக்க இடமாகக்கருதி, அதனிடத்திலே அன்புகொள்ளாவாறு அடியேனுடைய அறிவை மறைப்பதும் தேவரீர் திருவருளே, மீண்டும் அவ்வறியாமையைப்போக்கி அத்தகைய அறிவை விளக்குவிப்பதும் தேவரீர் திருவருளே யாகுமானல், அடியேனுக்கு அறிவென்பதேது? அறிவற்றதாகிய மூடம் வரும் வகை எவ்வாறு? அம்மூடத்தினல் விளையும் இருவினைகளேது? அவ்வினைகளுக்கொத்ததாக வருகின்ற சரீரமேது? அடியேனுடைய அவாவிற்குரிய உரிமை சற்றேனுமில்லையே! ஆதலால் இகத்தையும் பரத்தையுங்குறித்த அடியேன் மனதிலுள்ள மயக்கம் நிவாரணமாகும்படி குற்றமற்ற திருவருள் சுரந்துணர்த்தி, இனியேனும் அடியேனை ஆட்கொள்ளுவீரோ? எ-று.

யானெனதென்னும் செருக்ககன்று யாவும் சிவமயமாகக் காணுகையில் அறிவு முதலியவை தோன்றுதென்பதைக் குறிபார்த்தவாறறிக. அறிவை மறைப்பது திரோபவமும் அறிவை விளக்குவது அநுக்கிரகமுமாகலானும், இவ்விரண்டும் பஞ்சகிர்த்தியங்களுள் அடங்கலானும், பஞ்சகிர்த்தியகர்த்தா சிவபிரானொருவரேயாகலானும், "அறிவினை மறைப்பதுநி னருள்பின்னு மறிவின்மைதீர்த் தறிவித்து நிற்பதுநினருள்" என்றனர். (கo)

பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்பரப்பை
வலமாக வந்தும்
பரவையிடை மூழ்கிய நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்து
மௌனத் திருந்துமுயர் மலைநுழைவு புக்கியு
மன்னுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனே டங்கியைச்
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுட்டி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயானந்த குருவே.

(இ-ள்.) சித்தாந்த முத்தித்தலைவரே! திரிசிரபுரம் என்னும் க்ஷேத்திரம் மேன்மையடையுமாறு எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே! ஞானனந்த போதகரே! பத்திமார்க்கத்தில் நிலைபேருகவிருந்தும், ஒன்பது கண்டங்களாகப் பிரித்திருக்கின்ற இவ்வுலகத்தைப் பிரதக்ஷணமாக வந்தும், சமுத்திரத்திற் கலக்கின்றனவாகிய ஜீவநதிகளிடத்தில் நீராடியும், பசியும் தாகமுமில்லாமல் அக்கினிநடுவிலிருந்தும், உலர்ந்துதிர்கின்ற சருகுகளையும் நீரையும் காற்றையும் கொடூரமாகிய பசிப்பிணிக்காக வயிற்றிற் சேர்த்தும், மோன நிலைமையிலிருந்தும், அதியுன்னதமாகிய மலையினிடத்துள்ள குகைகளிற் புகுந்திருந்தும், நிலைபெற்றிருக்கும் பத்துநாடிகள் முழுமையும் சுத்திபுரிந்தும், மூலாக்கினியையும் பிராணவாயுவையும் சந்திரமண்டலத்திற்சேர்த்தும், அவ்விடத்திலொழுகுகின்ற அமுததாரையைப்புசித்தும், அநித்தியத்தன்மை வாய்ந்த இச்சரீரம் கற்பாந்தங்களிலெல்லாம் அழியாது நிலைபேருயிருக்கும்படி மேலான காயசித்திகளைச்செய்தும், மெய்யறிவில்லாதவர்கட்கு முத்தி கிட்டுமோ?—எ-று.

ஒன்பது கண்டங்களாவன:--சம்புத்தீவு, சாகத்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலித்தீவு, சோமேதகத்தீவு, புட்கரத்தீவு. தசநாடிகளாவன:—சுழிமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி. கடலிற்கலக்கின்ற நதிகளே ஜீவநதிகளும், அவைகளே தெய்வீகமுள்ளவைகளுமாகலின், "பரவையிடை மூழ்கிய நதிகளிடை மூழ்கியும்" என்றார். அன்றியும், "பரவையிடை மூழ்கியும்" எனப்பாடமோதிச் சேதுமுதலிய இடங்களிற் சமுத்திரஸ்நானஞ் செய்தும் எனப்பொருளுரைப்பாருமுளர்.

சின்மயானந்தகுரு முற்றுப்பெற்றது.

ஆகத்திருவிருத்தம் கூக.

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

1897ஆ நவம்பர்மீ 21உ

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஸத்குரவே நம:.

## பழைமையும் புதுமையும்.

"மாறுக் கீழ்நாடு" என்றோர் வசனமுளது. கிழக்குத் தேயங்களு ளொன்றாகிய இந்து தேசம் ஒரு பொழுதும் மாறா நிலைமையுடைத்தென்பது நெடுங்காலமாய் நடைபெற்றுலாவி வரும் ஒரு பிழை, அல்லது பிராந்தியெனத் தகும். இந்தப் பிராந்தி எவ்வளவு சீக்கிரத்தில் ஒழியுமோ அவ்வளவு நமதுநாட்டிற்கும் நமது நாட்டார்க்கும் அதனை யாள்வோர்க்கும் நல்லது. நமது வரலாற்றை யறியாத அந்நியருக்கு நமது கிருக கிருத்யாதி ஆசாரானுஷ்டானங்களும், ஸம்பிரதாயக் கிரமங்களும், அவற்றின் பாவோத்தேசியங்களை யுணர்த்தும் யுக்தி நியாய வாதங்களும் சற்றேனும் புலப்படாவாயினும், அவர்களுக்கும் நமக்கும் ஸம்பிரதாயம் நடையுடை பாவனை முதலியவைகளிலுள்ள வித்தியாச மாத்திரம் எளிதில் விளங்குகின்றது. கீழ்நாட்டாராகிய நாம் அந்நியர்களாகிய அவர்களுடையபகட்டு மிகுந்த நவநாகரிகத்தை யெளிதிற் கைக்கொள்ள மனமில்லா திருப்பதையும், சிற்சில சமயங்களில் அதனை எதிர்ப்பதையும் கண்டு, "கீழ்நாடொரு பொழுதும் மாறாது. பூர்வஸ்திதிக்கு ஹானியில்லை" என்னு மெண்ணம்அவர்களுக்கு ஜனிக்கின்றது. இவ்வபிப்பிராயமானது திடசித்தமுள்ள கீழ்த்தேசத்தாருக்கு அநுகுணமாயிருப்பதுமன்றி, ஆதிமுதல் அவர்க்குள்ள தப்புஎண்ணத்துடனேயே குடிகொண்டிருக்கச் செய்கின்றது. இந்த விஷயத்தில் ஐரோப்பியரும் இந்தியரும் ஒன்றுபோல் பிரமையடைந்திருக்கிறார்கள்; இந்தப் பிரமையோ வெனின், நம்பூர்வ சரித்திரங்களைச்சரியாய் விசாரித்தறியாததனால் விளைவதாகும் இஃதென்று ஐரோப்பிய பண்டிதர்களும் அடிக்கடி எடுத்துரைத்திருக்கின்றனர். எவிதயும் தொன்றுதொட்டுள்ள வழக்கமெனக் கூறுதல் கீழ்த்தேசத்தவருக்கு இன்றியமையா வழக்கம். ஆயினும், வழக்கமெனப் புகலுமொருவனைத் தர்க்கித்து, அது முதன் முதலில் எப்பொழுது கைப்பிடிக்கப்பட்டது, அதன் நடை முதற்காலமெத்தனையெனக் கணக்கிடின், அவன் ஒன்று, அல்லது, இரண்டு தலைமுறைக்கதிகம் பின்னேடி நிரூபித்தல் முடியாததாகும். கேள்வி வார்த்தைகளே அவனது அத்தாக்ஷியா யேற்படும்! ஆதார மொன்றுங் காணாது அவனுந் தியங்கி நிற்பான். வெகு நவீனமாய் ஒரு வழக்கம் சமீபகாலத்திலேயே ஒரு குடும்பத்தில் மூத்தோரால் ஏற்படுத்தப்பட்டு, அதுஇப்பொழுது அக்குடும்பத்திலுள்ளவனுக்குத் தெரியாதிருக்கும் பட்சத்தில், அது நெடுநாளாய் வம்சபரம்பரையாகத் தங்கள் குடும்பத்தில் வழங்கிவருகிறபுராதனபத்ததியென்று அவன் சொல்லுவான். அவன் ராமர், தர்மபுத்திரர் முதலிய பண்டைக்காலத்துச் சங்கதிகளை யடிக்கடி யெடுத்தோதுவான். ஆனாலும், ராமாயணத்திலாவது, மகாபாரதத்திலாவது ஒரு மூலையேனும் ஓதியிருப்பானென்று நம்புவதற்கிடமில்லை. கேவலம் விருத்தமான ஆசாரங்களும் வைதிக கர்மங்களெனக் கொண்டாடப்படுகின்றன. அவ்வாறு வேதப்பிரமாணமுளதோ இல்லையோதெய்வத்திற்கே தெரியும்—நமக்குத் தெரியாது, விசாரித்தற்பாலது. ஒருவன் இன்று தன் விரிவிலா அறிவினால், ஏதோ ஒன்றை அவலம்பிக்கட்டும். அதையே வஸிஷ்டர் முதலிய மகாரிஷிகளால் இன்னாரின்னாருக்குணர்த்தப்பட்டதெனச் சொல்லுவான். ஒருவன் சுத்த பொய்க்கதை ஒன்று சொல்லட்டும். அதுவும் வியாஸ, ஸூத புராணிகர்களுடைய வாக்கினின்றும் பிறந்ததெனப் பிரமாணம் காட்டுகிறான்; குஜிலி புஸ்தகக்கடைக் காவியச்சோரன் முன்னது பின்னதாகத் தான் அங்கங்கிருந்து கொழித்தெடுத்தெழுதிய வைத்தியக் கைமுறைப் புத்தகத்தை அகஸ்தியர் நூலென்று பேரிட்டு ஏமாற்றச் சிறிதும் கூசுவதில்லை. பேதமை நிறைந்த ஜனங்கள் எளிதில் இவ் வபத்தங்களை முழுமூச்சாய் நம்புவார்களேயல்லாமல், ஐரோப்பிய நிபுணர்களது ஸர்வஸம்மதமான தேகாரோக்ய ஸாதக பாரிசுத்தியாதியாசாரங்கள் விஷயத்திலும், செவ்வெனச் சோதித்தறிந்த வைத்திய சிகிச்சையிலுமாத்திரம் அநுமானத்தைக் கைவிடார். ஒன்றின்மீது நம்பிக்கையும், மற்றொன்றின்மீது நம்பிக்கைக் குறைவும் ஏற்படுவதற்குக் காரணம் எளி

திற் புலப்படும். கீழ்த்தேசத்தான் மாறுபாட்டுக்
குட்படானென்றல்ல. அவன் அப்படி யுட்படாதிரு
ப்பானாகில் அது இயற்கையி னமைப்புக்கு விரோத
மாகும். சிருஷ்டியி லடங்கிய வனைத்தும் இடை
விடாது மாறிக்கொண்டே யிருக்கின்றது. ஆனால்,
அவ்வேற்றுமையின் தாரதம்யம் வெகு நுட்பமா
னது. பூகோள இலக்கண மறிந்தவர்கள் சொல்
வதை நம்புவோமாயின், அநேக மகாதீவுகளும் அதி
யுன்னத பர்வத சிகரங்களும் பூ ப்ரளயத்தால் இருந்
திருந்தாற்போல வெளியானவை யல்லவென்றும்,
அமரிக்கையாயும் கண்ணுக்குக் கோசரமாகாமலும்
நடந்துவருகிற அநவரத கதாகத அசைவினாலேயே
(கமனாகமனச் சக்தியினாலேயே) உண்டாயினவென்
றும் கொள்ளவேண்டியது. நூற்றாண்டுகள் கணக்
காய் இடைவிடாது இவ்வாறு கதாகதமாய் அசை
ந்துவந்தாலும், பூமியின் மேற்பரப்புமாத்திரமே சில
அடிகள் வரை உயரக்கூடுமென்று ஏற்படுவதால்,
இந்த ஓயா மாறுபாடானது மிகவும் நிதானமாய்
நடந்துவருகிறதென்று அறியலாகும். அப்போதை
க்கப்போது பூகம்பங்களும், எரிமலைகளின் உற்பேத
கத்தால் ஜுவாலாப் பிரவாஹங்களும் இவை முத
லிய பிரளய சூசனைகளும் இயற்கையிலேயே அமைக்
கப்பட்டிருக்கின்றன வென்பதுண்மையே. இம்மா
திரியாகவே மானிடச்சங்கம், அல்லது ராசிகளுக்
கும் பிரளயாவஸ்தையும் அதற்குரிய மாறுபாடுகளு
முண்டு. ஆனால் அவற்றின் பயன் அநேகமாய்க்
கோரமாகவும் விபரீதமாகவும் இருக்கும். பூகம்பங்
களால் தேசங்கள் நாசமடைவதுபோலவே மனித
ஸமூகமும் நாசமடையும். உண்மையை விசாரித்
தால், பாதகண்டத்தில் ஜனஸமூகம் அடிக்கடி மாறு
ண்டிருக்கிறது. பாதகண்ட நிவாஸியாகிய ஆரியன்
வெகு பிராசீன வம்சாவளியை யுடையவன். அதி
விஸ்தாரமாயுள்ள இந்தக் காலார்ணவத்தில் அவ
னுக்கு (ஆரியனுக்கு) எதிர்ப்படாத புயல்களாவது,
அவனுக்கு இடறாத நீர்மட்டத்துக் குள்ளடங்கிய
குன்றுகளாவது, அவன் தட்டுப்பட்டு அமிழாத
மணற்கரைகளாவது உண்டோ? அப்படியிருந்தும்
அவன் இத்தனை இடையூறுகளையும் மாறுபாடுகளை
யுங் கடந்து மூளிமுக்கறையாகிச் சேதமடையாமல்
முழுமையாய் உள்ளது உள்ளபடி தப்பி வெளிவந்
தது ஆச்சரியமன்றோ? ஆயினும் இவன்விஷயத்
தில் ஒரு விசேஷமுண்டு. அவனுடைய நிலவாசி
யைப்போல் அவனும் ஆழமாய் உழுது பண்படுத்து
வதற் கிடங்கொடுப்பதில்லை. இப்பொழுது இருப்ப
தைவிட ஆழமாய்ப் பூமியை உழுதல்கூடுமென்பது
திண்ணம். ஆனால் இதற்கு அந்நியதேசத்துக் கலப்
பை அவ்வளவாக ஏற்றதல்ல. அந்நியதேசத்துக்
கலப்பையைக்கொண் டுழுதால், அது கற்கரடுகளை
யும் மணலையும் மேலே கிளப்பிவிடுகின்றது. அத
னால் நிலமானது அநேக நாள்வரையில் பயன்படா
மற் போகின்றது. அந்நிய தேசத்து நாகரிகமானது
அவனுடைய துர்க்குணங்களுக்கு வலிமையூட்டி,
நற்குணங்கள் ஆதரவின்றி யடங்கும்படி செய்து
விடுகிறதென்று பொதுவாய்ச் சொல்லலாம், மறு
படி இத்துர்க்குணங்களை மாற்றுவதற்கு ஒரு புருஷ
ஆயிஸு பிடிக்கும். இப்பொழுதுள்ளபடி பார்த்
தால், இந்திய வேளாளனானவன் அவனுக்குக் கிடை
த்த கருவி கரணங்களைக்கொண்டு சக்தி வஞ்சனை
யில்லாமல் நிதானமாயும் நிலையாயும் பாடுபட்டு உத்
தம பலன்களை விளைவித்திருக்கிறான். அந்தப்பலன்
கள் நீடித்து நிலைத்திருக்கக்கூடியனவாயு மிருக்கின்
றன. அதிசய பலன்களைக் காட்டவெண்ணி அவன்
அவசரப்பட்டு நிலத்தின் செழிப்பை வற்றப்பண்ணு
வதில்லை. பழைய ஜீவனோபாய பத்ததியில் அவனு
க்கு இவ்வளவுதொல்லையும் ஸ்வயகாரிய திருஷ்டியும்
கிடையாது. உண்மையுரைக்கின், மலையின் சிகரத்
தைப்போ லுயர்ந்த வொரு நாகரிகத்தை அவன்
மெள்ளமெள்ளக் கட்டிவிட்டான். அதில் எட்டா
உச்சிகளும் ஏறவொட்டாக் குன்றுகளும் மிகுந்த
வழுக்கலான செங்குத்துகளும் பலவுள. மிகவும்
நிந்திக்கப்பட்ட இந்தக் கலியுகத்தில் மதவிஷயத்தி
லும் நீதியாசாரங்களிலும் பெருத்த மாறுபாடுகளு
ண்டாயிருக்கின்றன. தத்துவ விசாரணையிலும கலை
ஞானத்திலும் விசேஷப் பயிற்சியுண்டாயிருக்கிறது.
இரண்டொரு திருஷ்டாந்தங்களை மாத்திரம் இங்
கெடுத்து வரைவோம்:—

எது எப்படியிருந்தாலும், மது மாம்சங்களின்
தீமைப்பயனைக் குறித்து ஹிந்துக்களுக்கு ஒரே எண்
ணமாயிருக்கவேண்டியதல்லவா? சென்னையில் ஸர்
ஜன் ஜெனராலாயிருந்த கனம்பொருந்திய டாக்டர்
உ. ர. காரீனிஷ் என்னும் துரையானவர் 1884-ம் வரு
ஷத்தில் சென்னைக் கலாசாலைகளிற் றேர்ந்த பண்டி
தர்களுக்குப் பட்டமளிப்பதற்காகக் கூடிய சங்கத்
தில், பூர்வகாலத்து ஆரிய தத்துவஞானிகளுக்குரிய
முக்கிய லக்ஷணங்களான "அடக்கவாழ்க்கை," "ஒப்
பில்கொள்கை" ஆகிய இவ்விரு உத்தமகுணங்களை
யும் அனுசரிக்கக்கடவீரென்று சபையாருக்குப் புத்
திசொல்லினர். அன்றியும் "உங்களுடைய முன்

னோர்களின் வழக்கப்படி நீங்களும் 'அடக்கவாழ்க்கை' யை யவலம்பிப்பதால், இக்காலத்துக்கற்றறிந்தோரில் அதி வல்லபமுள்ள தத்துவஞானிகளின் அநுமதியும் ஆதரவும் உங்களுக்குண்டாகும். மயக்கும் மதுவும், வீரியமுற்ற மாம்சமும் ஆயுள், ஆரோக்யங்களுக்காவது, மனவலிமைக்கும் தேக திடத்திற்குமாவது அவசியமில்லையென்றும், அல்லாமலும், மதுபான வெறியானது வடதேசத்தார்க்கே கெடுதியை உண்டாக்குவதாயிருக்கிறதென அவர்கள் கூறுகின்றார்கள்'' என்றிவ்விதமாக அந்த கார்னிஷ் துரை வற்புறுத்தினர். முந்திய நாள்தான் "உத்தர அமெரிகா விவேசனி'' என்னும் பத்திரிகையில் மது மாம்சங்களைப் புசிப்பதில் மிதமாயிருக்கவேண்டுமென்று ஒருவர் எழுதி, நாகலோக (அமெரிகா) வாசிகளாகிய தமது ஸ்வஜனங்களுக்குப் புத்திமதி கூறினர். இவர்கள் விஷயமிப்படியிருக்க, மிகவும் சிலாகிக்கப்பெற்ற துவாபரயுகத்திலும், சுருதிகல்பமென்னப்பட்ட காலத்திலும் மேல் வருணத்தவர்களுமே மிதமிஞ்சி மதுமாம்சங்களைப் புசிக்கவில்லையா? இன்ன மாம்ஸங்களை யிப்படிப் புசித்தல் வேண்டும், இன்ன மீனை யிவ்வாறுபயோகிக்கவேண்டுமென்று இப்பொழுது பிராஹ்மணர்களிலெவரும் விதிகளேற்படுத்தத் தலைப்படாராயினும், ஸ்மிருதி கர்த்தாவாகிய மனு இவைகளைப்பற்றி வேண்டியமட்டும் நிபந்தனைகள் செய்திருக்கின்றார். அல்லாமலும், பலி கொடுக்கும் ஏற்பாடு ஆதியிலிருந்த அநாகரிகத்தின் சின்னமெனக் கொள்ளவேண்டியதாயிருக்கிறது. காலக்கிரமத்தில் ஜனங்களின் மனது சீர்ப்படச் சீர்ப்பட, விவேகிகளும் படித்தறிந்தவர்களும் கண்டனைக் கேதுவான இந்த துராசாரங்களை மெள்ளத் தவிர்த்தனர். மேலும், வேதபாஹ்யரென்னும் குற்றம் சம்பவிக்குமெனப் பயந்து, தீதில்லாப் புதிய ஆசாரங்களை யேற்படுத்தி இந்த ஆசாரங்களுக்குப் பழைய பேர்களையே வழங்கிவந்தனர். பூர்வத்து யஜ்ஞசாலைகளுக்குப் பதிலாக அமைக்கப்பட்ட நவீன தேவாலயங்களில் "பலிபீடம்'' என்னும் நாமமாத்திரம் வழக்கத்திலிருக்கின்றதேயொழிய எவ்விதபலியுங்கிடையாது. மதுமாம்ஸங்களை விலக்குவதில் இப்பொழுது சைவமதம் வெகு கண்டிதமாயிருக்கின்றது. "சைவம்'' என்றால் மதுமாம்ஸவிலக்கு என்று பொருள்படலாயிற்று. மதுமாம்ஸங்களைத் தொடாத வைஷ்ணவன் கூட தான் "சைவம்'' என்று இந்த அர்த்தத்திற் சொல்லிக்கொள்கிறான். இப்பொழுது யஜ்ஞங்கள் அபூர்வமாய்ச் செய்யப்படினும், அவைகளை யாமோதித்து ஆதரிப்பவர்கள் அரிதாயிற்று. இந்தச் சந்தர்பத்தில், மஹான் அப்பையதீக்ஷிதர் காலத்து நடந்ததொரு சங்கதியைச் சொல்வோம். கலியுகத்தில் யஜ்ஞங்கள் விஷயமாய் உண்டாயிருக்கும் சீர்திருத்த ஏற்பாட்டைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில், வைஷ்ணவபண்டிதரொருவர் இந்தக்கதையை எமக்கு எடுத்துச் சொன்னர். மஹான் தீக்ஷிதரவர்கள் ஒரு பெரிய யஜ்ஞஞ்செய்யத் தொடங்கினபொழுது, வழக்கப்படி வபாஹோமத்தினிமித்தம் கொண்டுவரப்பட்டிருந்த பசுக்கூட்டத்தை (ஆடுகளை) ப்பார்த்து மனமுருகி, ஜீவஹிம்ஸைசெய்ய மனதொப்பாமல், "வேதமே உன்னை நம்பினேன்'' என்று உரக்கப் புலம்பினராம். இதனால், வேதவிதியில்லாவிடின் அம்மஹான் இப்படி ஜீவவதை செய்திரா ரென்று தெரியவருகிறது. முன்னளிற் சில சாக்தேய, வைஷ்ணவ சமயத்தவர்கள் விசேஷமாய் மதுமாம்ஸாதி ஸேவனஞ் செய்துவந்தார்களென்றும், இப்பொழுதுங்கூட எங்கேயோ சில மூலை முடுக்குகளில் இது நடந்துவருகிறதினாலும், யோசனையில்லாத அறிவிலிகள் (இந்தியர்களும் அந்நியர்களும்) ஹிந்துமதத்தை யேசுகிறார்கள். ஆயினும், இவ்விரு சமயத்தவர்களிலும் தீர்க்காலோசனை மிகுந்தவர்கள் இந்த துரப்பியாசங்களை யொப்புவதேயில்லை யென்பதையும், சனங்களின் பொது அபிப்பிராயமானது, மற்றெதையும்போல் வளர்ந்து தேர்ந்து, மேற்கண்ட துராசாரங்களை மறுக்குந் தன்மையதாய் ஏற்பட்ட காரணத்தினாலேயே இப்பொழுதும மது மாம்ஸாதி ஸேவனஞ் செய்து வருவதாகச் சொல்லிய பிரஷ்டர்கள் இரகசியமாய் நடத்துகிறார்க ளென்பதையும் மறக்கலாகாது.

சுருதிகல்பத்தில், அக்னி, வருணன், வாயு, இந்திரன், விஷ்ணு (சூரியன்), மருத்துக்கள், மற்றும் அநேக தேவதைகளுக்கு ஜனங்கள் வணங்கிவந்ததாகத் தெரிகின்றது. இந்நாட்டு ஜனங்கள் வைதிக கர்மங்களை யனுஷ்டியாது கைவிட்டிருக்கிறார்களென்று ஒரு "ஜில்லா வரலாறு புத்தகம்'' எழுதியவரொருவர் குறைகூறுகிறார்; அக்னியாராதனைதான் நிஜமான வைதிகபூஜை யென்றும், தேவாலயங்களில் நடக்கும் பூஜை அவைதிகமென்றும், பிராஹ்மண வீடுகளிலெல்லாம் ஔபாஸனக்னிஹோத்திரக்கிரமம் தப்பாது நடந்துவர வேண்டுமென்றும் எமது நண்பராகிய பிராஹ்மண வித்வானொருவர் சொல்வதுண்டு. ஆனல், ஸ்தூல பூதங்களையே தெய்வமாகக் கொண்டாடுவதைவிட, இக்காலத்துச்

சைவ வைஷ்ணவாதி சமயத்தவர்கள், அக்னியிலும் சூரியனிலும் அந்தர்யாமியாயுள்ள மெய்த்தேவனைச் சிவனென்றும் (ருத்ரனென்றும) விஷ்ணுவென்றும் பாவித்துப் பூஜிப்பது மனோபரி பக்குவத்தேர்ச்சியை. யுணர்த்துகின்ற தல்லவா? "என் முன்னிலையில் இராநின்ற அக்னியையும், வலிமைபொருந்திய வாயுவையும், அதிகாரப்புஷ்டியுள்ள இந்திரனையும் பிரார்த்திக்கிறேன். எனக்கு ஆரோக்யமும், ஐசுவரியமும், பிரஜை பசுவாதிகளும் அளிப்பாயாக" என்று பிரார்த்தித்துவந்ததற்குப் பதிலாக, இப்பொழுது "ஓ அன்பின் உருவே, ஐம்பூதத்தினு ணின்றிலங்கி அனைத்தையும விளங்கச்செய்தும் அவையெல்லாம் கடந்து நின்ற சிவனே" என்று துதித்தல் வழக்கமாயிருக்கிறது. இவை முதலிய விஷயங்களில் மாறுபாடும், நெடுநாளாய்வந்த நம்பிக்கைகளை விடுவிக்கும் பொருட்டான மனப்போராட்டமும், அவை முடிவில் அடைந்த வெற்றியும் உபநிஷதங்களிலெல்லாம் புராதனமான கேனோபநிஷத்தில் மிக விவரமாய் வரையப்பட்டிருக்கின்றது. அதி அற்புத அலங்கிருதையான மலையரையன் பாவை, மாதுமையாள், "அதுவே பிரம்மம். அந்த பிரம்மத்தினுடைய விஜயத்தினாலேயே நீங்கள் ஜயமடைகிறீர்கள்" என்று அன்புகூர்ந்து எடுத்துரைத்தனள். அதன்பிறகுதான் தேவர்களுக்கு பிரம்மமின்னதென்று விளங்கலாயிற்று. தேவர்களே இவ் வுண்மையை அருள் சக்தி ஸ்வரூபமாகிய உமாதேவியினிடமிருந்து தெரிந்துகொள்ளவேண்டுமானால், தேவர்கள்தான் ஸர்வசக்தியு முள்ளவர்களென்று நம்பியிருந்தவர்களுக் கெப்படி ஸாத்தியமாகும்? வீடுகள் தோறும் ஓர் அக்னிகுண்டத்தை வைத்து ஸ்துலாக்னியைப் பூஜிப்பதைக்காட்டிலும், ஒரு தேவாலயத்தில் பிரணவக்குறியாக வொரு சின்னத்தை யேற்படுத்தி அதுவே 'தீயின்வெம்மைசெய்தோன்' என்று பூஜித்தல் மேம்பாடுடைத்தல்லவா? சமுத்திரத்தையும், நதியையும், குளத்தையும் தெய்வமென் றாராதிப்பதைவிட, ஓர் அறிகுறியை யேற்படுத்தி, காரணம் எளிதில் விளங்காவண்ணம அதைச்சுற்றிலும் தண்ணீர் நிரம்பவும், அவ்வறிகுறியை 'நீரிலின் சுவை நிகழ்ந்தோன்' என வாராதிப்பது புத்தி விசேஷத்தை யுணர்த்துமன்றோ? வைதிக பூஜாக்கிரமமானது திருந்தி, தேர்ந்து, தாந்திரிக, ஆகமாதி பூஜாவிதானமாகத் திரிந்தது. பழைய வேதமந்திரங்களையே பூஜைமுறையி லுபயோகித்து வந்தாலும், அவற்றின் அபிப்பிராயமும் பிரயோகபத்ததியும் பிற்காலத்திய வேதோபநிஷதங்களை யனுசரித்துமாறின. இப்படியாக, பழைய பத்ததிகள் மாறி, புதிய பூஜாவிதிகள் எப்பொழுது ஆசரணைக்கு வந்தனவென்பது விசாரித் தறியவேண்டிய விஷயம். இதைக் கண்டுபிடிக்க பண்டிதர்களிலெவரும் இதுகாறும் முயன்றாரில்லை. இவ்வாறு வரவர புத்தியதிகரித்து, மென்மேலும் சீர்திருத்த யோசனைகள் தோன்றி யிந்த மாறுபாடு விளைந்திருக்கிறதென்று அறியாத மூடர்தான் இக்காலத்திய விக்கிரகாராதனையையிகழ்கிறார்கள். இருக் (Rig) வேதத்திற் சொல்லிய பழைமுறைகளை நாம் இப்பொழுது கைக்கொள்வதால் நமக்கு எந்தவிஷயத்திலும் லாபமில்லை. கூடுமாயின் ஏற்பட்டு வெகு நாளான காரணத்தினாலும், அவிஙவகத்தினாலும் மத்தியில் ஸம்பவித்திருக்கிற தோஷகளேயும் அதன்மேற் கவிந்திருக்கிற மலினத்தையும் நிவர்த்திக்கலாமேயன்றி, பின்சென்று பழைய வேதோக்த ஆராதனைக் கிரமத்தை நாடுதல் ஆபாஸத்திற் கிடமாகும். இப்பொழுது நிலைபெற்றுள்ள சமயங்களில், முக்கியமாய் சைவம், வைஷ்ணவம் என்ற இரண்டு மதங்களிலும் (மற்றவைகள் இவ்விரண்டினு ளைக்கியம்) உத்தமோத்தமமான தெய்வபக்தியும், மதாசார வியவகாரக் கொள்கைகளும், தத்வசாஸ்திர இரகசியங்களும் அடங்கியிருக்கின்றன; பரோக்ஷானுபவ சித்தாந்தங்களும், அபரோக்ஷானுபூதிக்குரிய விஷய வழிபாடுகளு மடங்கியிருக்கின்றன. அந்நியமதப் பாதிரிமார்களிற் சிலரும், சில பாஷண்ட மதஸ்தர்களும் ஒரு தெய்வம் உயர்ந்தது, மற்றொன்று தாழ்ந்ததென்ற அர்த்தவாதஞ் செய்யக்கூடிய சில கதைகளை உபயோகமில்லாத குப்பைக் கூடையிலிருந்து எடுப்பதுபோல் எடுத்துக் கலகமிடினும், இக்கதைகள் ஷை புன்மையர்களின் அசுத்தாந்தஃகரண பரிணாமப் பிரதிபல விசேஷங்களேயன்றி, அந்தந்த மதாவலம்பகர்களாகிய பக்தஜன ஹ்ருதயங்களிற் புகாவென்பது புத்திசாலிகளுக்கு விளம்பாமலே விளங்கும். வைஷ்ணவ புராணங்கள் கட்டுக்கதைகளென்றும் குச்சிதங்களென்றும் சைவன் திரஸ்கரிக்கிறான்; வைஷ்ணவன் தன் கொள்கைக்கு விரோதமானவைகளைத் தாமஸபுராணங்களென ஒதுக்குகிறான். கருதரிய கருத்தாய் விளங்கும் பரமவஸ்துவென்று தாங்கள் கொண்ட பாவத்திற் கியையாதவற்றையெல்லாம் இவ்விதமாக இருதிறத்தாரும் மறக்க வழிதேடினார்கள், மறந்தும்விட்டார்கள். இப்பொழுது சைவர்கள் "என் அன்பே" எனவும், வைஷ்ணவர்கள் "பரமதயாளா" எனவும்

கடவுளைக் கொண்டாடுகிறார்கள். இம்மாதிரியாகத் தமிழர்கள் கைக்கொண்டு நிலைநாட்டிய அபிப்பிராய பேதங்களுக்கும் அபிவிருத்திக்கும் இன்னமொரு திருஷ்டாந்தம் கொடுப்போம். மாறுபாடுகள் சாதாரணமா யுண்டாகக்கூடியதென்று காட்டும்பொருட்டு, பின் வரையப்பட்டுள்ளவைபோன்ற சூத்திரங்கள் தமிழ்ப்பாஷையி லேற்பட்டிருக்கின்றன:—

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினானே."

"தொன்மைய வாமெனு மெவையும் நன்றாகா
இன்று தோன்றிய நூலெனு மெவையும் தீதாகா."*

ஜனாசார சம்பந்தமான திருஷ்டாந்த மொன்றை யெடுத்துக் காட்டுவோம். விதவா விவாஹத்தைப் பற்றிப் பேசுவோமாக. கிரந்தாராய்ச்சிசெய்து ஸ்வதந்திராபிப்பிராய முள்ளவர்களும் பண்டிதர்களும் இந்த வழக்கம் (ஸ்திரீ புனர் விவாகம்) முன் காலத்தில் ஹிந்து தேசத்தில் தெரியாததல்லவென்று தாராளமாய் ஒப்புக்கொள்வார்கள். கீழ் ஜாதிகளில் இது இன்னும் வழங்கி வருகின்றது. ஆனால் கெட்டுப்போன இந்தக் கலிகாலத்தில் இந்த வழக்கம கூடாதென்று சொல்லுகிறார்கள். இப்படி நிபந்தனை யேற்படுத்தினவர்கள் யார் என்று நாம் கேட்க வேண்டியிருக்கிறது. பிரம்மசாரியாசிரமம் கிருகஸ்தாசிரமத்தைவிட மேலானதென்றும், அது கலிகாலத்தில் அபரிமித ஜனாபிவிருத்தியைத் தடுப்பதற்கான வோருபாயமென்றும், கூடுமாயின் கைம்பெண்ணானவள் தான் முதலில் விவாஹஞ் செய்துகொண்ட கணவனை விசுவசித்துப் பதிவிரதையாய்க் காலங்கழித்தல் உத்தமமென்றும், இவ்வகை யபிப்பிராயமானது வரவர மேற்கொண்டு, அநுபவ முதிர்ந்த புத்திசாலிகளின் மனதில் தோற்றிய தென்றே சொல்ல வேண்டியிருக்கிறதல்லவா? நேசித்தணுகிய ஸ்திரீ புருஷர்கள் மரண பரியந்தம் ஒருவருக்கொருவர் அன்பு மாறாது கற்புற்று, ஆதியில் தாங்கள் செய்த பிரமாணத்திற் கிணங்க அருந்ததியைப் போல் உறுதியாய்ச் சத்தியம் புரளாமல் வர்த்திக்க வேண்டு மென்னும் விவாக லக்ஷணமாகிய இந்த மேதக்க கொள்கையானது மேற்கண்ட அபிப்பிராயத்தால் வெளியாகின்றது. ஐரோப்பியர்களின் கற்பு நிலைமையும் கிறிஸ்து மதச் சித்தர்களிலொருவராகிய பால் எனபவர் சொல்லிய வாக்கியங்களை யாதாரமாகக் கொண்டு நிற்கின்றது. அவர் சொல்லியதாவது: "கன்னிமாருக்கும் கைம்பெண்களுக்கும் நான் உரைப்பது யாதெனில் 'நான் பொறுத்துக் கொண்டிருப்பது போல் அவர்களும் அடங்கியிருந்தால் அவர்களுக்கு நன்மையுண்டு. ஆனால் அவர்களுக்குத் தாங்கமுடியாவிட்டால் அவர்கள் விவாகம்செய்து கொள்ளட்டும்; ஏனென்றால், காமத்தால் தஹிக்கப்படுவதைவிட மணம்புரிந்து கொள்ள உத்தமம்.'"

"இந்திய ஸங்க ஸம்ஸ்காரிணி" என்னும் இங்கிலீஷ் வாரப் பத்திரிகையானது கருணை மிகுந்த மகா கனம் பொருந்திய சக்கிரவர்த்தினி சிமாட்டியவர்கள் தமக்கு நேர்ந்த வைதவ்யத்தைப் பெருமையுடன் வஹித்து வருவதற்காகப் புகழ்ந்துகூறிச் சில நாள் கூட ஆகவில்லை. தற்காலத்து ஐரோப்பியர்களுக்கும் இம்மாதிரியான அபிப்பிராய மிருக்குமானால், அநாதியாய் நாகரிகச் சிறப்பிற்றேர்ந்த இந்துக்களுக்குள் இவ்வபிப்பிராயம் முதலியன நன்றாய் நாட்டங் கொண்டு, சிஷ்டாசாரமென வம்ச பரம்பரையாய்க் கொண்டாடப்பட்டு வருவதும், உயர் ஜாதியாராகிய மேன்மக்கள் ஸ்திரீகளுக்குப் புனர் விவாகங் கூடாதெனத் தவிர்த்தலும் ஆச்சரியமோ? ஆனால், இதேமாதிரியாக பல துராசாரங்களும் பண்டை நாள் தொடங்கி இக்காலத்தில் வந்திருப்பது நமது துரதிருஷ்டமே. "காமத்தால் தகிக்கப்படுவதைவிட மணம் புரிந்து கொள்ளல் உத்தமம்" என்று 'பால்' எனனும் சித்தர் சொல்லிய வார்த்தையிலடங்கிய எச்சரிக்கையைக் கருத்தில் வைக்காததினால் மதிமோசமாயிற்று. அன்றியும், இக்கொடிய வழக்கமானது ஆரியமதக்கொள்கைகளிலொன்றாகிய கர்ம ஸித்தாந்தத்தால் ஜனங்களுக் களிக்கப்பட்ட ஸ்வதந்திரத்திற்கு ஒவ்வாததாயிருக்கின்றது. ஒருவருடைய சக்தியும் யோக்யதையும் அவருக்கேயமையுமே யன்றி மற்றொருவருக்கும் வராது. ஆனது

* காளிதாஸ மகா கவி விரசிதமான **மாளவிகாக்னிமித்ரம்** என்னும் நாடகத்தின் பிரஸ்தாவனையில் பாரி பாரிசுவிகனென்பவன் இந்த நவீன நாடகத்தைப் பிரதர்சிப்பதிலும் பழைய நாடக மொன்றை யெடுத்தாடுவது நல்லதென்று சொன்னதற்கு ஸூத்திரதாரன் ஸமாதானம்சொல்லியசுலோகம் இதே தாத்பரிய முடையதாயிருக்கிறது. அந்தச் சுலோகத்தின் முதலிரண்டு பாதங்களின் நேரான மொழி பெயர்ப்பென்று இந்தத் தமிழ் வாக்கியத்தைச் சொல்லலாகும் போலிருக்கிறது :—

పురాణ మిత్యేవ నసాధు సర్వం
నచాపి కావ్యం నవమిత్య వద్యం
సన్తః పరీక్ష్యా న్యతర ద్భజన్తే
మూఢః పర ప్రత్యయ నేయబుద్ధిః

பற்றி, "இல்லாததைக் கொண்டுவா!, கல்லீர்த தைப்பாடு" என்பதுபோல் தனது சக்திக்கு மிஞ்சின காரியத்தைச் செய்யென்று எவரையும் பலவந்தப்படுத்துவது தகாது. அப்படிப்பட்ட காரியங்களை யவர்கள்செய்யாவிடின் அது அவர்மீது குற்றமாகாது. இது எல்லாரும் ஒப்புக் கொள்ளக்கூடிய விஷயமே. செய்பிழையாயினும் செய்யாப்பிழையாயினும் அதனால் கெடுதல் விளைவதானால்தான் குற்றமெனத் தகும். கைம்பெண் ஒருத்தியை அவள் தாங்கமுடியாததை வஹிக்கும்படி கட்டாயப்படுத்தினால் அது அவளுக்கும் அவளிருக்கும் ஊராருக்கும் தொலையாத் தீங்காய் முடியுமேயென்று நினைப்போமாகில், இம்மாதிரியான அஸந்தர்ப்ப வியவகாரம் நடக்குமென்று "அஹிம்ஸா: பரமோதர்ம:" வென முறையிடும் சாஸ்திரங்கள் எதிர்பார்க்கவில்லை. உயிர்க்கிதஞ் செய்தலே பாபம், உயிர்க்கிதஞ்செய்தலே புண்யமெனக் கொள்ளப்பட்டிருக்கிறது. பலவந்தமாய் வைதவ்யாசாரத்தை யனுஷ்டிக்கும்படி செய்தலினால் அநேக இடங்களில் பெருந் துன்பத்திற்குக் காரணமாயிருக்கிறதென்று தெரிகிறது. ஆனால் இத்துன்பமானது நமது ஸ்திரீகளுக்குள்ள அமரிக்கை, பொறுமை, தெய்வபக்தியென்னுங் நற்குண விசேஷத்தால் மேற்கிளம்பாது அடங்கி யாறி யிருக்கின்றது. சிலர் வைதவ்யம் கூடாதென்றும், அது அநியாயமென்றும் விபரீதமாய் உரத்து ஓலமிடுவதினாலும், இப்பொழுது நம்மவர் கற்றுவரும் கல்வியின் தன்மையினாலும் மேற்கூறிய பொறுமைக்குணமும் ஈசுவராதீனபுத்தியும் நிலையாது தெறிபட்டோடும்படியான காலம் வரப்போகுதேயென்று மனம் குன்றுகிறோம். தற்காலத்தில் வழங்கிவருகிற ஐரோப்பிய படிப்பினுக்கும் திருப்தி, பொறுமை யென்னும் ஊருக்கும் வெகுதூரம். **ரேநால்ட்ஸ்** முதலானோர் இங்கிலீஷில் எழுதியிருக்கிற சிருங்கார லாவண்ய மிகுந்து, காமக்குரோதாதிகளை மென்மேலுந் தூண்டி மனதுக்கும் தேகத்துக்கும் இன்னா விளைவிப்பதற்கிடமாயுள்ள "புதுமைகள்" என வழங்கும் கட்டுக்கதைகளை நமது சிறுமிகள் வாசிக்கத் தலைப்படுவாரேல், அவர்களின் கதியும் நமது நாட்டின் கதியும் என்னவாகுமோ நாம் நினைக்க மனம் தடுமாறுகின்றது. பலவந்த வைதவ்யானுஷ்டானத்தால் இப்பொழுது நீதிக்குறைவுக்கு ஆஸ்பதமிருப்பதோடுகூட, மேற்சொல்லிய துஷ்டசாதனங்களும் சகவாஸமும் சேர்ந்தால் அநீதிக்காடு அடர்ந்து வளர்ந்து ஓங்குமென மொழிவதற்குச் சந்தேகமில்லை. பெற்றோர்களின் கட்டுதிட்டங்களுக் கிணங்காது ஹத்துமீறி, குடித்தனத்தை விட்டுக் குதித்தோடி, கலியாணச் சந்தையில் விலைகூறி விற்பனைக்குத் தயாராயிருக்கும் பஜாரி*ப்பெண்கள் இப்பொழுதுகூடச் சிலர் இருப்பதாய்க் காண்கிறோம். புருஷனோவெனின் ஸ்வயகாரியத்தில் மிகுந்த அக்கரையும் திருஷ்டியுமுள்ளவன்; அந்நியனை விட்டு ஆழம்பார்ப்பானேயன்றி தான் தண்ணீரிலிறங்கத் துணியான்; படிப்பது சூதசங்கிதையாயினும் அவன் இடிப்பது சிவன் கோவிலே; போதிப்பது பரோபகாரமும், சீலமும், தவமுமாயினும் அவன் தன்னுபகாரமும், சொன்னலமும், அவமும் தவிர பிறிதொன்றறியான். ஏதுமறியா இளமாதை அவளிருக்கும் வழியினின்றும் (ஒருவேளை அதுவே அவளுக்குச் சௌக்கியமானதாயிருந்தாலு மிருக்கலாம்) தன் துர்போதனையினால் அவன் தப்பிவிப்பானேயொழிய, தான்மாத்திரம் ஒருக்காலும் அப்படிப்பட்ட நஷ்டத்திற் குட்படான். இருக்கிற சங்கதிகளைப் பார்த்தால், கொஞ்சம் முனயோசனையையும் புத்தியையுங் கூட்டுமிடத்து, கிராக்கி யில்லாதிருக்கையில் விற்பனைச் சரக்குப் பிடிப்பதற்கொப்பான இந்த விஷயத்தில் நாம் எச்சரிக்கையுடன் நடக்கவேண்டியது. ஸ்திரீகளுக்குப் புருஷன் கல்வி கற்பிப்பதற்குமுன்னர், தான் கற்கவேண்டியது வெகுவாயிருக்கின்றது. வீட்டிலுள்ள ஸ்திரீகள் மாத்திரம் தடையாயில்லாவிட்டால், நவீனச் சீர்திருத்த ஏற்பாடுகளை அநுசரிக்கலாகுமென்று புருஷன் சொல்வது கொஞ்சமேனும் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததாயில்லை. அப்படிச் சொல்பவனுடைய மனைவியாவது தாயாராவது அவனுக்குள்ள மற்ற துர்குணங்களைப்போக்க இதுவரையிலும் நாடினவர்களல்ல.

மாறுபாடும், ஸ்வதந்திர வாஞ்சையும் ஆரிய தர்மானுஸாரிகளின் மூளைக் கெட்டாததுமல்ல, ஒட்டாததுமல்லவென்றும், ஆரிய தர்மமானது மாறுதலே முக்கிய லட்சணமா யமைக்கப்பெற்று, அப்போதைக்கப்போது ஸந்தர்பானுசாரமாய்த் திரிந்தும், திருந்தியும் வருகிறதென்றும்† மேலே வரையப்பட்டுள்ள நியாயத்தால் விளக்குவிக்க நாடி நிற்கின்றனம்.

---

* பஜாரி=பஜார், அல்லது, கடைத்தெருவுக்கு வந்தவள்.

† நிர்ணயிக்கப்பட்டிருக்கிற நியாய விசாரணா ஸ்தலங்களாகிய கச்சேரிகளில்லாவிடின், 'ஹிந்துலா' என்னும் நமது லௌகிக நியாய சட்டமானது எவ்வளவு மாறுபாடடைந்திருக்குமோ அறியேம். கச்சேரிகளில் நியாயாதிபதிகளின் சித்தானு ஸாரமாயாகுந் தீர்மானங்களினின்றும் காத்துக்கொள்ளும் பொருட்டு நம்மவர்கள் எத்தனை பரியாயங்களும் உபாயங்களுந் தேடுகிறார்கள்? சட்ட நிர்மாணாதிகாரிகள் காலத்துடனொத்து அதற்கியைய நடப்பதில்லை. ஒருக்கால் அவர்களப்படிச் செய்வது சரியாயிருந்தாலும் இருக்கலாம்.

## கம்பநாடரும் அவர் கவிப்புலமையும்.

**தோற்றுவாய்.**—கம்பநாடார் சரிதத்தை உள்ளபடி கோத்தெழுதுவதற்கான ஆதரவுகள் ஒன்று மிலது. பண்டைத் தமிழ்ப்பாவலர் சரிதங்களைக் கோத்தெழுதலாவதான சாதனங்கள் எவைதான் உள்ளன? "பழங்காலைத் தூர்க்காதே, புதுக்காலை வெட்டாதே" என்றேவிடுகின்ற நாட்டிலே ஜீவிய சரிதம் என்பதொன்றுண்டோ. பலபேர்களுடைய வரலாறுகளும் ஒரேஅச்சிலே வார்த்தெடுத்தாற்போல ஒருபடித்தாகத்தானே இருக்கும். எவரிடத்தேனும் சிலகுணங்குறிச் செயல்கள் சிறந்து தோன்றினல், அவைகள் கன்னபரம்பரையிலே பாரித்துத் தூரித்துப் போகின்றன, மாற்சரியத்தால் உலக்கை தேய்ந்து உறிப்பிடி ஆவதும் உண்டு. (Mackenze) மெக்கன்சி என்னும் தண்டத்தலைவர் இரண்டு லக்ஷ ரூபா வரையில் செலவிட்டுச் சேகரித்த எட்டுப்பிரதிகளும் பாவலர் நாவலர்களை மூடியிருக்கும் அந்தகாரத்தைப் போக்கின பாடில்லை. துரைத்தனப் பணத்தை வாரியிறைத்துப் புராதன சிலாசானை ஆராய்ச்சி செய்கின்ற விற்பன்னர்களும் தமிழ்ப்புலவர்களுடைய ஜீவகாலக் கிரமத்தை இதுகாறும் வரையறை செய்ததுமில்லை. ஆயினும் நிகழும் சகாப்தத்தின் ஆதியில் வதிந்த மாணாக்கர்கள் இருந்த நிலைமையில் இப்பொழுது நாமிருக்க வில்லை. அச்சியந்திரம் ஊன்றி வேர்கொண்டு விட்டது. இருந்த இடனுந் தெரியாமல் பெட்டி பேழைகளில் தூக்கி மக்கிக்கிடந்த பழம்பனுவல்கள் ஒவ்வொன்றாய் அச்சியந்திரத்தின் மீது ஏறி வருகின்றன. சிலாசாசனங்கள் முதலான சாதனங்களில் சிற்சில அச்சிற் கிடைக்கின்றன. புராதனப் புலவர்களில் சிலர் 'நாங்கள் இன்னின்ன காலத்தவர்' என இப்பொழுது கண்ணெதிர்ப் படுகின்றார்கள். நம்முடைய மைந்தரும் அவர் மைந்தரும் அப்புலவர்களை இன்னும் நன்குணரக் கூடும். புலவர் சரிதங்களையும் அவர்கள் இயற்றிய நூல்களையும் பலமுகத்தான் ஆராய்வது இன்னும் நமக்குக் கைவந்திலாத நவமான காரியமாகவே இராநின்றது. நூல்களின் குற்ற நற்றங்களை ஆராய்வதற்கான கட்டளைக் கருவிகள் நமக்கு இன்னுஞ் சால்கில. புராதன கவிகளை இக்காலத்துக் கட்டளைக் கருவிகளான் அளந்து பார்ப்பதும் தக்க தொன்றன்று. ஆகவே இந்த வியாசத்தில் கம்பநாடரது ஜீவசரிதத்தை விரிவாக ஆராயப் புகுவதும் அவருடைய நூல்களின் தாராதரங்களைப் பல்லப்படத் தேடித் துருவிப் பார்ப்பதும் ஆன நோக்கம் இல்லை. ஏனைக் கவிராயர்களில இவர் எம்மாத்திரம், ஏனைக் காவியங்களில் இவருடைய இராமாயணம் எம்மாத்திரம், என்பன துணிவதே இந்த வியாசத்தின் ஒருதலையான நோக்கம். இவருடைய புலமை யினையும் இவருடைய குணங்குறிகளையும் இராமாயணத்தால் அறியக் கூடுமாயின் அவற்றை ஆராய்வதும் இந்த வியாசத்தின் ஒருபுடை நோக்கமாம்.

**காவியகதியின் பூருவோத்தரம்.**—தமிழிலக்கியத்தின் இறந்தகால சரிதத்தை ஆராயப் புகுவோமாயின் ஆசிரியர் அகத்தியனார் காலத்துக்கு அப்பால் அடியெடுத்துவைக்க இயலாது. அக்காலம் தலைச்சங்கமிருந்து தமிழாராய்ச்சி செய்த காலமாகும். அக்காலத்தில் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று தமிழும் வழக்காறுடையனவாக இருந்தன. அம்மூவகைத் தமிழையும் வகைப்படுத்தி அகத்தியனார் அகத்தியர் எனத் தமது பெயரால் ஓர் இலக்கணத்தை அருளிச் செய்தார். அவர் மாணாக்கர் பன்னிருவரில் முதன்மை பெற்றவரான தொல்காப்பிய முனிவர் அகத்தியத்தின் இயற்றமிழ்க் கூறுபாட்டினை ஆதரவாகக்கொண்டு தம்பெயரால் தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தை அருளிச் செய்தார். அகத்திய முதலாக ஏனை இலக்கணங்களெல்லாம் இறந்தனவாக இன்றுகாறும் ஒரெழுத்தளவும் சிதைவுறாது எஞ்சிநிற்பது இத்தொல்காப்பியம் என்னும் இலக்கணம் ஒன்றுமே யாம். நன்னூல் சின்னூல் முதலியவற்றைப் பெற்றெடுத்த இவ்விலக்கணம் எழுத்தையும் சொல்லையும் ஆராய்வதுடனே பொருளிலக்கணத்தை நிரம்பவும் ஆராய்கின்றது. இப்பொருளிலக்கணம் ஒன்றுமே தலைச்சங்கத்திற்கு முற்பட்ட காலத்துக் கவிகள் கூறின பொருளைத் திறந்து காட்ட வல்லதான திறவுகோலாய் இராநின்றது, அப்பொருளாவது அகப்பொருளென்றும் புறப்பொருளென்றும் இரண்டு பாகுபாடுடையது. அவற்றுள், அகமாவது—"ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து அக்கூட்டம் நிகழ்ந்த பின்னர் அவ்விருவராலும் ஒருவருக் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத் துணர்வினால் மாத்திரமே அநுபவிக்கப்படும் இன்பமாம்". [ஆகுபெயரி லக்ஷணத்தால் இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை அகம் என்பர். அகம் - உள்] புறமாவது—"மேற் கூறிய ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லாரா

னும் அநுபவித்து உணரப்படுவதாய் இஃது இவ்வா
றிருந்ததெனப் பிறர்க்கு எடுத்துக் கூறப் படுவதாய்
அறமும் பொருளும் என்னும் இயல்பினை உடைய
தாய்ப் புறத்தே நிகழும் ஒழுக்கமாம். [ஆகு பெயரி
லக்ஷணத்தால் அறமும் பொருளும் பற்றிப்புறத்தே
நிகழும் ஒழுக்கத்தைப் புறம் என்ப. புறம்-வெளி]
ஆகவே அக்காலத்துத் தமிழ்ப்புலவர்கள் அறம்
பொருள் இன்பம் என்னும் மூன்றையும் பாட்டில
மைத்துப் பாடினர் என்பது போதரும். இடைச்
சங்கத்து நூல்களிலும் கடைச்சங்கத்து நூல்களி
லும் எஞ்சி நின்றனவற்றை ஆராய்ந்து பார்க்கு மிட
த்தும் இது துணியப் படுகின்றது. தமிழ்நாட்டின்
கருப்பொருள் உரிப்பொருள்களை அமைத்து அறம்
பொருளின்பங்களை விளக்கி அரசர்கள் வள்ளல்கள்
முதலானோர் புகழினையும் சரிதங்களையும் விரித்துப்
பாடிய நூல்கள் சொற்றொடர் நிலைச்செய்யுள் என
வரையறுக்கப் பட்டிருக்கின்றன. காவியம் என்னும்
பெயராவது காவிய லக்ஷணமாவது தொல்காப்பி
யத்திற் கூறப்பட்டதில்லை. வடமொழியில் தானும்
காவியம் என்பது தொல்லைநாளில், கவியொருவன்
பாடினது யாது அதுவே காவியம் எனப்பொது
வகையால் வழங்கினதல்லது யாதொரு வகைப்
பட்ட நூலைச் சுட்டி வந்ததில்லை. வான்மீகிமுனிவர்
அருளிச்செய்த இராமாயணம் சிறப்பு வகையால்
காவியம் என வழங்கப்பெற்றது. அதுமுதலாக அத்
துறைபபட்ட நூல்கள் வடமொழியில் காவியம் என
வழங்கலாயின.

கடைச்சங்கத்தார் காலத்திலே வடமொழிவல்ல
ஆரியரும் தென்மொழி வல்ல தமிழரும் நெருங்கிப்
பழகுவாராயினர், வடமொழி வல்லவர் தங்கள்
கோட்பாடுகளையும் கருத்துக்களையும் தமிழர்களிட
த்தில் எடுத்துப் பேசுவர். தமிழரும் வடமொழியை
ஓதுவர். ஜைனரும் புத்தரும் இவ்விரண்டு மொழி
களிலும் கைவந்தவர்கள், இதனால் வடமொழிப்போ
க்குகளும் கருத்துகளும் தமிழ் நூல்களில் விரவு
வன ஆயின. தமிழ்க்கவிஞர்கள் வடமொழி நூல்க
ளின போக்கைப் பின்பற்றிக் கவிபாடுவா ராயினர்.
இங்ஙனஞ் செய்ய லுற்றவர்களில் மிகச் சித்திபெற்
றவர் திருத்தக்க தேவர் என்பவர், இவர் செய்த நூல்
சீவக சிந்தாமணி. அவர்தாம் இயற்றிய நூலில் ஜைன
மத சித்தாந்தங்களை அங்கங்கே ஏற்றுவதனையே
ஒருதலைக் கருத்தாகக் கொண்டராயினும், வடமொ
ழிக் காவியப் போக்கினைத் தமிழில் கொணர்ந்து
கூட்டும் ஒருசார் கருத்தினையும் நிறைவுறுத்தினர்.
சிலப்பதிகார முதலிய தமிழ்ப்போக்கே போக்கான
நூல்களுடனே ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த வேறு
பாடு நன்கு புலப்படும். ஜைனர்கள் இயற்றிய
ஐஞ்சிறு காப்பியங்களும் இவ்வடமொழிப் போக்கி
னையே பின்பற்றினவாம்.

திருத்தொண்டர் புராண முடையாரும் கந்தபுரா
ணமுடையாரும் வடமொழிப் போக்கினையே கையா
ண்டவர்கள. கந்த புராணத்தை மொழி பெயர்த்த
கச்சியப்ப சிவாசாரியருக்கு இப்பால் சிலகாலங்கழி
த்துத் திருவவதரித்த கம்பநாடர், வடமொழிப்
பயிற்சி ஒருசிறிதும் இலரெனினும், வடமொழிப்
போக்கைப் பின்பற்றிய தமிழ்க்காவியங்களை ஓதி
அவற்றின் கட்டுக்கோப்பின் மர்மங்களை நன்குணர்ந்
தவராகி, தமக்கு எடுத்துக் காட்டாக இருந்த காவி
யங்களினுஞ் சிறந்த காவியம் பாடுவாராயினர். இது
முதலாக ஏனைப் பிற்காலத்துக் கவிராயர்களுக்குக்
கம்பராமாயணமே மேல் வரிச்சட்டமாகி விட்டது.
சிந்தாமணி முதலாக இற்றை நாள் காவியங்கள்
இறுதியாக உள்ள எல்லாவற்றிற்கும் கம்பராமாய
ணம் சிரோரத்தினமாக விளங்குவதாயிற்று. இந்தச்
சிறப்பினை உட்கொண்டு அக்காலத்தவர் கம்பநாட
ரைக் கவிச்சக்ரவர்த்தி எனக்கொண்டாடினர்கள்.

> அம்பிலே சிலையைநாட்டி அமரர்க்கன் றமுதமீய்ந்த
> தம்பிரா னென்னத்தானும் தமிழிலே தாலைநாட்டிக்
> கம்பநா டுடையவள்ளல் கவிச்சக்ர வர்த்திபார்மேல்
> நம்புபா மாலையாலே நாருக்கின் றமுத மீய்ந்தான்.

என்றும் புகழ்ந்தார்கள்.

**எடுத்துக்கொண்ட விஷயம்.**—கவிச்சக்ரவர்த்தி யாகி
ன்ற இவர் யார்? இவர் எக்காலத்தவர்? அவர் கால
த்து ஏனைப் புலவர்கள் எவர்? இவர்ககு ஓதலான
நூல்கள் எவை? அவற்றில் எவற்றால் இவர் புலமை
உருப்பெற்றது. இககவிராயரையும் இவருடைய புல
மையினையும் சிறப்பெய்துவித்த இராமாயணத்தின்
முக்கியாமிசங்கள் என்ன? இவர் அருளிசசெய்த
ஏனை நூல்கள் என்ன? இவரைக்குறித்து இவர் இய
ற்றிய நூல்களான் ஏதேனும் அறியலாகுமோ? முன்
னே தோற்றுவாய் செய்தபடி இந்த வியாசத்தில்
விடுக்கப்புகுந்த விஷயங்கள் இவ்வினாக்களே யாகும.
கைக்கெட்டலான சாதனங்களின் சார்பைக் கொ
ண்டு, ஒருதலைச் சார்பாக ஒன்றுங் கூறாமல், நடுவு
நிலைமையாகவே இயன்ற மட்டில் இவ்வினாக்கள்
இங்கு விடுக்கப்படும். "எப்பொருள் எத்தன்மைத்
தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப
தறிவு."

**ஆசிரியர்பெயர்.**—தமிழாசிரியர்களில் எவருடைய பெயர்தான் உள்ளபடி வழங்குகின்றது? புராதன கவீச்சுரர்களுடைய பெயர்களெல்லாம் ஒட்டுப்பெயர்களாகவே இருக்கின்றன: அவரவர் பிறந்து வளர்ந்த நாட்டினடியாகப் பிறந்த இடப்பெயராதல் ஒன்று, குணங்குறி செயற்கை விசேடத்தால் உண்டான காரண விடுகுறிப் பெயராதல் ஒன்று இவ்வாசிரியர் கதியும் இதுவாயிற்று. இவர் கம்பர் என்றும், கம்பநாடர் என்றும், கம்பநாட்டாழ்வார் என்றும் வழங்கப் பெறுவர். கம்பர் என்பது ஏகாம்பரமுடையாரது பெயரின் மரூஉ வென்பர் சிலர். காளி வரம்பெற்றுக் கவிபாடு முன்னே அறிவிலாச் சிறியராய்க் கம்பம்போல் இருந்தவராதலின் இவரை ஏனைச்சிறுர்கள் கம்பன் (தடியன்) கம்பன் என்றழைத்து வந்த காரணத்தால் கம்பர் எனப் படுவாராயினர் என்பர் வேறுசிலர். இவர்க்கு இளமையில் கல்வி பயிற்றுவித்த கணக்காயரது கம்பங் கொல்லையைக் காத்துவந்த காரணத்தால் கம்பர் எனப் பட்டார் என்பாருமுளர். காளிங்கராயன் குதிரையைச் சாவவும் வாழவும் பாடியதைக் கேட்டு அரசன் இவரை வருவித்த வளவிலே இவரும் கமபங்கொல்லையைக் காதத கம்பத்துடனே சென்றாராக இவரைககண்ட அரசன் இக்கம்பனே அது செய்தவன் எனக் கேட்டதனால் உண்டான பெயர் என்று முரைப்பர். தஞ்சாவூரின் சமீபத்தில் இன்றும உளதாய கம்பநாடு இவருடைய ஜன்மதேச மாகையால் இவர் கம்பர் கம்பநாடர் என்றழைக்கப் படுவாராயினர் என்பதே உண்மை. இவர் இராமபக்தியில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பதைக் கண்டு வியந்த ஸ்ரீரங்கத்து வித்துவாமிசர்கள் இவரைக் கம்ப நாட்டாழ்வார் எனப் புகழ்ந்தார்கள். இவரைப் புகழ்ந்து பாடிய தனியன்களில் "கம்பநாடுடைய வள்ளல்" என்றும் "கம்பநாடாழ்வான்கவி" என்றும் வருவன இதற்கு இயைந்த சான்றாகும். கம்பநாட்டில் இவர் திருவழுந்தூரில் பிறந்தவராதலின் "மன்றே புகழுந் திருவழுந்தூர் வள்ளல்" எனச் சடகோபரந்தாதியிலும் "சிரணி சோழநாட்டுத் திருவழுந்தூரில் வாழ்வோன்" இராமாயணத் தனியன் ஒன்றிலும் வருகின்றனவும் மேற்கூறினவற்றைப் பின்னும் வற்புறுத்தும்.

**வமிசமரபு.**—இவர் ஒரு அரசனுடைய புதல்வர் என்றும் ஒச்சன் வீட்டில் வளர்ந்தவர் என்றும் சிலர் கூறுகின்றனர். திருவழுந்தூர்ப் பிடாரி கோயிற் பூசைசெய்யும் ஒச்சனுடைய பிள்ளையே எனக் கூறுவர் சிலர். இவர் தன்மகன் அம்பிகாபதியை அரசன்கொன்ற காரணம்பற்றிப் பழிவாங்கத் தருணம் பார்த்திருந்தவர், வேட்டையாடும்போது ஒருயானையால் துரத்திவரப்பட்ட அரசகுமாரனைக் "காட்டானை விட்டாலும் கவியானை விடாது" என்று ஈட்டியால் குத்திக் கொன்றனர் என்பதொரு கதையைக் கொண்டு, இவர் க்ஷத்திரிய ரல்லாராயின் அங்ஙனஞ் செய்யத் துணியார் என யூகித்து, இவரை இராஜவமிசத்தில் பிறந்தவர் என்பர். இவர் உள்ளபடி க்ஷத்திரியராயின், தமிழ்நாட்டு மூவேந்தரும் ஒரொருகால் இவரிடத்து உள்ளப்பற்றுடையரா யிருந்ததனால், இவராயினும், இவர் புதல்வராயினும், புதல்வர்ப் புதல்வராயினும் யாதொரு நாட்டையாவது ஊரையாவது கொடுக்கப் பெற்று, அரசியல் நடத்தியிருக்கலாம், எல்லாரும் பாவலரும் நாவலரு மாகத் தானே காலங் கழித்தனர். ஆகவே "மகனறிவு தந்தையறிவு" என்ற பிரமாணத்தைக் கொண்டு பார்க்குமிடத்தும் இவர் க்ஷத்திரியரல்லர் என்பதே துணியப் படுகின்றது. வெண்ணெய் நல்லூர் சடையபப முதலியார் முதலாயினரும் மூவேந்தரும் கம்பருடனே சமபந்தி போஜனம் செய்ததாகவும், கம்பருடைய மாணுக்கரான ஏகம்பவாண முதலியார் வீட்டிலே சிலநாளிருந்து விருந்துண்டதாகவும் கூறப்படுதலால் கம்பரை ஓச்சஜாதியைச் சேர்ந்தவர் என்பதும் பொருந்தாது. "உழுங்குலத்திற் பிறந்தாரோ உலகுய்யப் பிறந்தாரே" என வேளாளரைப் புகழ்ந்துபாடிய ஏரெழுபதைக் கூலிக்குப்பாடி யிருக்கலாம்; அல்லது "அழுவதுங் கொண்டு புலம்பா மனஞ் சுண்டது மறைத்தே, ரெழுவதுங் கொண்டு புகழ்க்கம்ப நாட னெழுப்பரா" என்ற தொண்டை மண்டல சதகச்செய்யுளின்படி ஏரெழுபதை வெண்குன்றத்தூர்த் திவளகிரி முதலியார் பொருட்டாகப் பாடியிருக்கலாம், என்று கொண்டு, கம்பரை வேளாளரல்லர் எனக் கூறவுங் கூடும். இவர் தமது அன்னதாதாவான சடையப்பரை இராமாயணத்தில் பலவிடத்தும் புகழ்ந்தாரேனும், தாமும் வேளாளரல்லரேல், திருவபிஷேகப் படலத்தில் "வெண்ணெயூர்ச் சடையன் றங்கள் மரபினோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி" எனப்பாடப் பொறுப்பரோ.

**இளமையும் கல்விப்பயிற்சியும்.**—காளிங்க ராயன் குதிரையால் இவர் காளிவரம்பெற்ற கதையைப் பலரும் கேட்டிருப்பார்கள். ஒரு பிரமராக்ஷசனுடைய உபதேசத்தால் கம்பர் கவிபாடுந் தெய்வப்புலமை பெற்றனரெனத் தஞ்சாவூர் ஸ்ரீவேலாயுத முதலி

யார் பதித்த ஏரொழுபது முகவுரையில் உரைத்திருக்கின்றது. இத்தன்மைத்தான கதைகளால் பெறப்படும் உண்மையாவது, அவர் இளமையிலே தானே கவிபாடுந் திறமுடையவர் என்பதே யாகும். இளமையில் சடையப்ப முதலியார் விட்டில் வந்த படியால் அம்முதலியாருடைய மைந்தரோடு இவரும் ஒரு கணக்காயரிடத்தில் சிறிது கல்விப்பயிற்சி செய்யப்பெற்றனர் என்பதில் ஐயமின்று. இவர் வரகவி என்று கூறுவார் கூறுக. இவர் பலநூல்களையும் படித்தவர் என்பதற்கு இவருடைய இராமாயணமே சான்று பகரும். மற்றைப்படி இவர் இளமைப் பருவத்துச் செயல்கள் யாதொன்றும் சன்னபரம்பரையாகத் தானும் வழங்குவதின்று. முந்நூறு வருஷங்களுக்கு முன்னிருந்த மகாகவியான ஷேக்ஸ்பியரைக் குறித்து இங்கிலீஷ் சரித ஆசிரியர்கள் என்ன விசேஷங் கண்டு பிடித்து விட்டார்கள்? ஷேக்ஸ்பியர் பிறந்த தேதியே இன்னும் சந்தேகாஸ்பதமாகத்தானே இருக்கிறது. ஆதிகவியாகிய சாஸர் இறந்த வருஷம் இன்னும் துணிந்தபடி இல்லையே. ஆகவே கம்பர் இளமையைக் குறித்து நாம் ஒன்றும் உணராமலிருப்பது அதிசயமாகுமா? சன்ன பரம்பரையும் கட்டுக்கதையுமே வழக்காறுன இந்த நாட்டில் கம்பருடைய காலவரையறை யாயினும் பரும்படியாக வேனும் தெரிவதான சில ஏதுக்கள் உளவாயிருப்பது எவ்வளவு சிரேஷ்டம்.

கம்பர்காலம்.—இராமாயணத் தனியன் ஒன்று.

எண்ணிய சகாத்தமெண் ணூற்றேழின்மேற் சடையன்வாழ்வு
நண்ணிய வெண்ணெய்நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய விராமகாதை பங்குனி யத்தநாளில்
கண்ணிய பாங்கர்முன்னே கவியரங் கேற்றினானே.

எனப் பாடியிருப்பது கொண்டு கம்பர்காலம் கிறிஸ்தாப்தம் 885-அதாவது 1,000 வருஷத்துக்கு முற்பட்டதென்று சொல்லலாம். ஆனல், "எண்ணிய சகாத்த முந்நூற் றேழின்மேற் சடையன் வாழ்வு" என்றும் பிரதிபேத மிருத்தலால் இது ஒருதலையாத் துணிதல் கூடாததாக இராநின்றது. இராமாயணத்தில் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தர் பாடினது என்பது உலகப்பிரசித்தம். புகழேந்தி ஒட்டக் கூத்தர் காலத்தவர் என்பதற்கு,

நூலார் கலைவல்ல செம்பியன் கேட்ப
நொடித்து மிக்க
கோலா கலனொட்டக் கூத்தனை யன்று
தற் கோலியென்று
மேலார் கவிசொல்லி வெய்த்தானத்தே சென்று
வென்று சொண்ட
மாலார்க ளந்தைப் புகழேந்தியுந்
தொண்டை மண்டலமே.

என்றுற்போன்ற சான்றுகள் உள்ளன.

பாடும் புலவர் புகழொட்டக் கூத்தன பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கச்சோழனென்றேயெனைச்சொல்லுவரோ.

என்ற தனிப்பாடலால் குலோத்துங்கச் சோழன் ஒட்டக்கூத்தருடைய மாணக்கன் என்பது தெரியப்படும்.

T. செல்வகேசவறய முதலியார், M. A.

(இன்னும் வரும்)

---

உ

சிவமயம்.

## திருவானைக்காவுலா.

---

மிக்க விழாவரு வீதி வளநாடன்
செக்கர்வான் திங்களணி சேகரத்தான்—நக்கதிரு

* ஆதிரையான் மூலமறை யத்தத்தா னம்மகத்தான்
ஓதமெறி, நாகைக் கா, ரோணத்தான்—சோதியான்

† கிச்சதனி லாடியான் கேதகையொன் றுவணியான்
அச்சமனை யன்னுபுரட் டாதியான்—பிச்சை

அடர்ந்திட்ட மாமுனிவ ராச்சிரமந் தோறும்
படர்ந்திட்ட மையற் பசியான்—கொடுங்கூற்

றெடுக்கைக்கு வந்துபிறந் தேங்காத் திகையான்
கடுக்கைத் தொடைமார் கழியான்—பொடிச்சுதையான்

வன்னி வளர்க்குஞ்சோ மாசியான் வஞ்சகமே
பன்னுமவர் நெஞ்சத்தற் பங்குனியான்—முந்நீரிற்

றீவணத்த குஞ்சித் திரையான் சிறுவனையாள்
காவணத்தி லேனோர்மை காசியான்—மூவரைவிட்

டப்புரத்தார் யார்க்கு மளித்தவுயி ரானியான்
மைப்புரத்தான் றங்கை வலத்தினன்—செப்பரிய

அம்பர வம்பரத்தா னம்பொற் சிலைச்சிலையான்
பைம்பணியி னும்பைம் பணியினன்—செம்பொதியின்

கோவான கோவான்மேற் கொள்ளு மவயவத்தான்
மாவா ரணத்தான்மா வாரணத்தான்—சாவாசக்

---

* இதுமுதல் ஆதிரை, மூலம், அஸ்தம், மகம், ஓணம், சுவாதி என நாண்மீனின் பெயரமைதி காண்க.

† கிச்சு - நெருப்பு. இது தொடங்கி ஆடி முதல் ஆனிவரையும் மாதப்பெயர் முறையே தொனிப்பது காண்க.

கங்கையினுன் கங்கையினுன் காசியிலான் காசியிலான்
பைங்கடல்சூழ் பாரிடத்தான் பாரிடத்தான்—செங்கமல

அத்த னகத்திருக்கா ளத்தியான் கங்குலறத்த
அத்த னகத்திருக்கா ளத்தியான்—எத்திசையும்

வாவிச் சுவேத வனத்தினுன் றேடரிய
வாவிச் சுவேத வனத்தினுன்—சேவைக்

கரிய கமலா * லயத்தான மீவோன்
அரிய கமலா லயத்தான—வருக

நவிலுமா ணிக்க † நகத்தான் வாரி
நவிலுமா ணிக்க நகத்தான்—பவளமணிப்

பண்ணதி ரேகாம் பரத்தினு னந்தமறைப்
பண்ணதி ரேகாம் பரத்தினு—னண்ணும்

நவமணியப் பஞ்ச நதியானென் றேத்து
நவமணியப் பஞ்ச நதியா—னெவரையுமவந்

திக்சாமன் சோதிச் சிராமலையா னீன்றசெவ்வந்
திக்காமன் சோதிச் சிராமலையான்—மைக்கோல

வாமத்சா னீலி வனத்தினு னலகியமெய்
வாமத்தா னீலி வனத்தினு—னுமத்தா

னுலு கவியடைவெண் ணுவலா னேவலா
னுலு கவியடைவெண் ணுவலான்—கோல

மருத வனத்தன் மழவை வயித்யன்
அருண கிரிக்க ணமலன்—மருகல்

பறியல் கொறுக்கை பழன மிவற்று
ளுறையு நிருத்த னொருத்தன்—மறைகொள்

அடவி யகத்து ளவியும் விளக்கை
முடுகு மெலிக்கு முடியுங்—குடையும்

அவனி யனைத்து மாகு மளித்த
சிவனிசை நக்கு செவியன்—அவனடியில்

மெய்க்கணிட்ட வர்ச்சனைக்கு மெத்தமெச்சி விட்டுவெக்
சக்கரத்தை யுற்றளித்த தத்துவத்தன்–மிக்கதத்வ [கொர்

‡ மெட்டிரட்டி முப்பதிற்றி ரட்டிபத்தி ரட்டிதப்பு
சிட்டொட்டு நித்தசித்த சிற்குணத்தன்—வட்டயிட்ட

செஞ்சடையன் சிங்கவுரஞ் சிந்துகொடுஞ் சிம்புளினன்
பஞ்சமுகன் சங்கணியும் பைங்குழையன்—செஞ்சரணங்

குஞ்சிதவங் கங்கொளமென் கொம்புவிரும் புந்திறனின்
றஞ்சனடந் தந்தவிளங் கம்பலவன்—நெஞ்சினுறை

நாதன் பிறந்துழலு நாயேனை யாட்கொள்ளும்
பாதன் பரமன் பரஞ்சோதி—ஆதவன்சூழ்

ஆசைகொண்ட சம்புவின்கீ ழாறெண் சதுரியுகம்
பூசைகொண்ட சம்புவிறற் பூதேசன்—தேசு

சுலவு மிடபக் கொடியேற்றி வீதி
யுலவுதிரு நாளி லொருநாட்—டலவலய

மூடுமிரு டீர முறைசெய்வான் மூரித்தே
ரோடு பரிதி யுதயமெழ—வாடகக்காற்

செச்சைப் பவளச் செழுந்தரள மாணிக்க
வச்சப்ர வாளசித்ர மண்டபத்துப்—பச்சை

மயிலை வடிவுடைய மங்கையை யின்சொற்
குயிலை யணைந்து சுலாவுந்—துயிலை

மணத்தகடம் பன்கொடியு மாயோன்கைச் சங்கு
முணர்த்த வுணர்ந்தமளி யோவித் தணப்பிலாக்

கன்னி முகங்கருகக் கங்கை யுடல்வெளுப்பப்
*பொன்னி தனையழைத்துப் புல்லியபின் †முன்னிகழ்ந்த

போதக மின்மையாற் போதசத்தா லவ்வூரில்
வேதியர் பூசிக்க வேகொண்டு சீதப்

பனிமண் டலமதியத் தம்போற் பதிக்குந்
தனிமண் டலத்துத் தவிசி—னினிதிருந்து

வேதமு மூவர் விளம்பிய வித்தார
நாதமுங் கேட்டு நடங்கண்டு—சோதிப்

புகையழலிற் றந்த புலிப்பட் டிருப்பத்
தகைய கலைமருங்கிற் சாத்திப்—பகுவாய்

அரவ மணிக்கச் சதன்மே லசைத்துச்
சரண பரிபுரமுஞ் சாத்திக்—கரதலத்துக்

‡காகோ தரகங் கணங்கவினக் காண்டகுதோள்
மாகோ மளவலய மாட்சிதர—நாகேசன்

$ அன்றளித்த பேரார மாகத் தழகெறிப்ப
மின்றளிர்த்த பொற்றோடு வீறுபெறத்—தன்றிய

நக்ஷத்ர மாலை நவசந்த்ர மாலையுடன்
அக்ஷத் திருமாலை யாங்கிலங்க—வட்சத்

தலத்துத் திருமேனித் தாழ்வடங்க டாழ
மலர்க்கொத் திதழித்தார் வாய்ப்ப—மலர்க்குவளைத்

தாமங் கமழச் சடைநீ ருவினிலா
யாமென்று முந்நூலு மாங்கிலங்கச்—சோமக்

---

* லயத்தானுய் வேதற்கு - எனவும் பாடாந்தரம்.

† நகத்தான்வலாரி - எனவும் பாடாந்தரம்.

‡ எட்டிரட்டி=௧௬; முப்பதிற்றிரட்டி=௬0; பத்திரட்டி=௨0; தொண்ணூற்றாறு தத்துவங்களையு நியதிகளைந்த சிட்டொன்க.

---

* பொன்னி=காவிரிநீர், பார்வதியார்க்கும், கங்காதேவிக்கும் இயற்கையாயுள்ள கருமை வெண்மைகளை, பொன்னியை யழைத்துப் புல்லினமையா லுண்டாகிய கோப நாணங்களாகக் கற்பித்திருக்கு மமைதிகாண்க.

† முன்பூசித்த புட்பவந்தனுகிய யானை.

‡ சர்ப்ப கங்களம்.

$ இவ்வாரத்தினது வரலாற்றை - 'அன்றரகன் மங்கைக்களித்த மணியாரம்' என்று தொடங்கிக் கீழ்க்கூறிய வாற்றாற் காண்க.

கிரணபி ஷேகங் கிளரக் கரமான்
தருண ம்ருகமதன்மேற் றுவப் * பரிணமச்
செக்கர் விசும்பிற் செறிந்தசிறு காரொன்னத்
தக்க கருஞ்சட்டை சாத்தியெனத்—தொக்க
தருணியர் செங்கட் சகோரம் படுப்பான்
உருவிலியை யொட்டிருத்தி யொப்பப்—பெருவனையின்
மங்கை முயக்கத்தீ மாமுலைமேற் கத்தூரிப்
பங்க மடங்கப் படிந்ததெனத்—தன்கருணை
யன்ப ருளத்திருளை வாங்கியன்பு செய்யாத
வன்ப ருளத்திலிட வைத்ததெனத்—தன்கண்கள்
மூன்றிகூக்கு மாறுக மூடிருளைக் கேடகற்றித்
தான்றரித்து வைத்த தகைமையெனத்—தோன்றச்
சிவந்ததிரு மார்பிற் றிருச்சாந்து சேர்த்துக்
கவின்றநல் வாசங் கமழப்—பவங்கொள்
தணிமா லயனர் தலைமாலை போற்கிண்
கிணிமாலை தம்மிற் கெழுமப்—பணியின்
நிழல்பூத்த வேணியார் நெற்றிக்க ணின்று
தழல்பூத்த நீறு தயங்க—வெழில்பூத்த
செல்விக் கமலத் திருமுகஞ் சோதிதரக்
கைவைத்த வீரமழுக் காட்சிதர—எவ்வுழுகும்
உண்ணடு மன்ப ருளத்துத் தியானம்போற்
கண்ணடி காட்டுவதுங் கண்டருளி—வெண்ணவல்
மாமுனியுந் தானும் வருவதெனத் தண்டரளத்
தாம மணிக்கவிகை தானிழற்றச்—சேமத்
திருவாடு தண்டிற் சிறந்தேறித் தேவர்
மருவா டகவாயில் வந்து—சுரலோக
வானென்னப் பூலோக மங்கை தவப்பேறு
தானென்ன மேருவெனத் தாருவென—ஞானக்
கடற்கான சொங்கென்னக் காட்டுகதி யென்னத்
தடக்கா சினிதப்பே றென்ன—விடைக்கோடிகின்
றுநேவ ரத்ந வலங்கார வாடகத்தே
ருடு கவுரி யுடனேறி—நீடுதிருக்
கொற்றக் குடைசதுக்கங் கோலநிலாப் பந்தர்பல
சுற்றக் கிரணவொளி சூழ்ந்தமைய—முற்றுகன
மந்திர வட்டத்து மயாந்தன வந்தனபோற்
சந்திர வட்டங்க டாந்தழைப்பச் சிந்துரமேற்
பிச்ச மனேகம் பெருங்கடல் சூழ்
வைச்சதுரங்க வகைமான—மெச்சியவ
ராசுபுடை வீசுசாந் தாற்றியினல் வட்டமிட
மாசறு முத்தி னடைப்பைவரப்—பாசமும்
அங்குசமுங் கொடுங்கொண் டைந்துகரத் தண்ணலார்
வெங்க ணடலாகு மீதேறச்—செங்கண்மால்
கந்தன் விரிஞ்சன் * ககவாக னத்தேற
இந்திரன் சாத்த னிபத்தேறப்—† புங்கவங்கன்
தோறு முருத்திரர்க ளேறத் தொகையன்னத்
தேற வசுக்க ளெரிக்கடவுள்—மாறில்
ஒரு ‡ மைமி லேற § வொலிகலை யேற
எருமைமி லேற வியமன்—வருணன்
சுறவேறக் கோளரியிற் றுர்க்கை யினிதேற
எறிசூல வைரவர்நா யேறத்—திறல்படைத்த
காளி கடியேறக் சந்திருவ ருஞ்சுரரு
மூளு வெழிலி முதுகேற—நீளருகர்
சேரக் கழவேறத் தென்மதுரை || பேரிஞேன்
ஆரச் சிவிகை யதுவேறப்—பூரிக்கப்
பாடும் || புலவன் பரிவேறப்—பாணியிற்று
ணேடுங் திறம்பா || வுரைத்தோனுங்—கூடலிலே
சம்புப் பரியழைத்த || த்க்கோனுந் தண்டேறச்
செம்பொற் றடமவுலிச் செங்கணுன்—வெம்புரவி
மேவிவர வில்லவரு மீனவரு மெய்த்தவத்தோர்
யாவரு மேத்தி யிறைஞ்சிவரப்—பூவி
லெதிரின் றியநாற்பத் தெண்ணு யிரரும்
பதினெண் மடத்திற் பயிலு முதலிகளும்
வேழஞ்செய் பூசைபுரி வெள்வாயிற் கௌசிகருஞ்
சோழன் கொணர்ந்திருச் சோழியரு—மாழிசூழ்
தந்த்ரப் பெரிய சரண மறையோரு
மந்த்ரச் சிவமா மறையோரு—மெந்தைமுடிக்
கங்கா குலமரபில் வந்துசிவ காரியங்கள்
தங்காத லாற்புரியுந் தக்கோரும்—பைங்காவ
லாரிய பட்டர்களு மன்பா லகங்குழைந்து
சிரிய பாட்டோதுந் திருப்பேரு—நேரிலன்
சுந்தரனை யாண்டநாட் டொல்லா வணவோலை
வந்தவையில் வாசித்த மந்த்ரிகளு—மிந்துநுதற்
கன்னலுரை கொவ்வையிதழ்க் காரனகப் பாரதனத்
தன்னநடைத் தேவ ரடியாரு—மன்னுங்
குமாரராங் கோயிற்கைக் கோளர் குழாமும்
உமாபதியாங் கண்காணி யோருஞ்—சமூகப்
படைவயிர ராகப் படையும் பரன்று
ளடையு மகம்படியார் யாருங்—கடலுலகத்

* இதுமுதல் திருமார்பிற்றிருச் சார்ந்து சேர்த்து என் பதுவரையும் ஒருதொடர்.

* ககம்=பறவை; இங்கே முறையே கருடன், மயில், அன்னம்.

† புங்கவம்=எருது.

‡ மை=ஆடு § வாயுதேவன் மானேற,

|| ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய நம்பிகள், ஆளுடைய வரசுகள், ஆளுடையவடிகள். (மரபறியாதார் ஆளுடைய வடிகள் என்பதை ஆளுடைய வடிமை யென்பர்.)

துள்ள தயோதனரு முட்சமயத் தோர்யாருந்
தெள்ளிய * மாடலருஞ் சென்னியரும்—வெள்ளமென

எங்குந் திரண்டுவர வேற்றுக்கொடி யீண்டச்
சங்குங் குழலுந் தடமுரசும்—வங்கியமு

மத்தளமும் பேரிகையு மண்ணளவும் விண்ணளவு
மெத்திசையு மொத்திசைப்ப யாழ்முரல—வொய்த்துச்

சகமேவுந் தேவர்க டம்பிரான் வந்தான்
மகமேரு வில்வளைத்தோன் வந்தான்—பகவிப்

படியிடந்து மாலறியாப் பாதத்தோன் வந்தான்
வடிவழகுக் காருமொவ்வான் வந்தா—விடுநூற்

சிலந்திமுடி சூட்டுஞ் சிவன்வந்தான் செவ்வி
மலர்ந்த முகமுடையான் வந்தான் † தலம்புகழ்ந்த

தாளுயர்க்கும் புள்ளூர்தித் தம்பிரான் வந்தானென்
றுளுமொற்றை யெக்காள மார்ப்பெடுப்பக்—கூளுகுறள்

சுற்றுங் கவர்ந்துவரத் துள்ளுமக ரத்துவசன் [யார்
வெற்றிச், சிலைகொடுசே, வித்துவரப்—பொற்றோடை

தோரண வீதிதனிற் றோன்றினன் றோன்றுதலும்
ஆரண னூட்டி லரம்பையரு—நாரணனூர்

வைகுண்ட லோகத்து மங்கையரும் ‡ வாகனமாம்[ரின்
பெய்கொண்ட லோனுலகிற் பெண்படையு—மொய்கதி

மண்டலக் கன்னியரு மாநாக மங்கையரு
மெண்டிசை வெற்பிலுள வேழையருங் கண்டுருகி

மானுட மங்கையராய் மண்டபத்துங் கோபுரத்து
மீனுடை விண்டோய விடுதளத்தும்—ஏனைக்

கடையினு முன்றிலினுங் கற்புரிசை சூழும்
இடையினும் வீதியினு மெய்தி—மடவீர்

விருதேற்ற வேள்பய வெண்ணுவ லீசர்
வருதேர்ப் பவனிதொழ வாரீர்—§ எருதேறி

தும்பைச் சடைப்பிறையைச் சூழ்செக்கர் வான்போலு
செம்பொற் றிருவா சிகைபாரீர்—வெம்பணத்தில் [ஞ்

---

## விவேகசிந்தாமணி பிரசுரங்கள் *

---

சென்னை திருவல்லிக்கேணியில் நிலை கொண்டிருக்கும் "அறிவைப் பரவச்செய்யும் சங்கத்தின் காரிய தரிசியாகிய ஸி. வி. ஸ்வாமிநாத அய்யரவர்கள் தம்மால் வெளியிடப்பட்ட இப்புத்தக ரத்னங்களை எமது விமரிசைக்காக அனுப்பியதற்கு அவருக்கு வந்தனம் செய்கின்றோம். இவைகளை வேறு வேறாயும் விவரமாயும் விஸ்தரித்து விமரிசை செய்வதற்கு நமது பத்திரிகை இடங்கொடாதாதலின், பொதுவாய் நாம் சொல்லக் கூடியதென்னவெனில், கல்வியிற் சிறந்து, பொறுமையும் ஊக்கமும் அமைந்து, 'விவேகசிந்தாமணி' யெனும் நன்னடைத்தமிழ்ப் பத்திரிகை யொன்றை மாதந்தோறும் பிரசுரித்துக்கொண்டு, இத்தகைய புத்தகங்களையும் வெளியிட்டு வருகின்ற நமது நண்பராகிய ஸி. வி. ஸ்வாமிநாதய்யருக்கு எல்லோரும் வேண்டிய சகாயம் புரிந்து உற்சாகப் படுத்தக் கடவரென்று நம்புகிறோம். படாடோபமின்றி, அடக்கத்துடன் அவர் செய்து வரும் வேலையை நமது தமிழ் நாட்டுச் சீமான்கள் அபிமானித்தருள வேண்டும். இவரது விடா முயற்சியின் பயனாக, தமிழ் என்றால் கண்ணையும் வாயையும் இறுகமூடிக்கொள்ளும் சுபாவ மேற்கொண்ட பட்டப் பரிக்ஷைகளிற் றேர்ந்த கலாசாலாவித்வான்களிற் பலர் இப்பொழுது தமிழ் பாஷைக்கு முன்றணையாய் ஏற்பட்டு, கதைகளெழுதியும், இங்கிலீஷிலிருந்து மொழி பெயர்த்தும் பலவாறாகத் தமிழ் பாஷையை அபிவிருத்தி செய்யக் கங்கணம் கட்டினவர்களானார்கள். இவர்கள் எழுதும் நடையும், பத்ததியும் தமிழர்களுக்குப் புதுமையாயிருப்பினும், அவை எல்லோராலும் நன்கு மதிக்கத் தக்கவைகளாயிருக்கின்றன வென்று காண்கிறது. கதைகள் வெகு இனிமையாயும், ஸ்திரீபாலர்களுக்குப் பொழுது போக்காயும், நீதி போதகமாயு மிருக்கின்றன: புத்தகங்களும் வெகு நேர்த்தியாய்க் கட்டப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டார் இந்தப் பரோபகாரமான கனகாரியத்திற்குத் துணை நிற்பாராக, சுபமஸ்து.

| | | | |
|---|---|---|---|
| * கமலாம்பாள் சரித்திரம் | விலை | ரூபா. | 1—8—0 |
| கோல்பெர்ட்டு சரித்திரம் | ,, | ,, | 0—5—0 |
| விவேகரஸத்தாலாட்டு | ,, | ,, | 0—0—6 |
| சத்திய தேவதை கதை | ,, | ,, | 0—5—0 |

---

## பிழை திருத்தம்.

முந்திய ௫-ம் இலக்கப்பத்திரிகையிற் போந்த கைவல்லியோபநிஷத் திராவிட இரத்நப்பிரகாசிகையிற் கண்ட பிழை திருத்தம் வருமாறு:—

98-ம் பக்கத்து வலப்பாகத்தின் 48-ம் வரியோடு 100-ம் பக்கத்து இடப்பாகத்தின் 47-ம் வரியைச்சேர்த்து, 102-ம் பக்கத்து இடப்பாகத்து 9-ம் வரி இறுதியாக வாசிக்க. VIII-ம் பிரிவு முடியும் இந்தவிடத்திலே அடியிலுள்ள கையடையாளங்கொண்டதைச் சேர்த்துவாசிக்க.

☞ 100-ம் பக்கத்து இடப்பாகத்து 46-ம் வரியோடு 102-ம் பக்கத்து இடப்பாகத்து 10-ம் வரி தொடுத்துச் சேர்த்து வாசிக்க. 103-ம் பக்கத்து இடப்பாகத்து 26-ம் வரியோடு IX-ம் பிரிவு முடிந்தது.

---

* பாவலரு மெனவும் பாடம்.

† தலமளந்த வெனவும் பாடாந்தரம்.

‡ இந்திரன் - பெய்கொண்டலாம் வாகனத்தனென விகுதி பிரித்துக் கூட்டுக.

§ ஈண்டுப்பெயர்.

MADRAS:—Printed by P. C. KALLIANA SUNDARA NADAR, at the C. N. PRESS, 4, Guruvappen Street, Black Town, and Published by T. A. SWAMINATHA AIYAR, Armenian Street,

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஸு மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1897ஸு டிசம்பர்மீ 21உ { இலக்கம்-எ.

உ

திருச்சிற்றம்பலம்.

## திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரம்.

மனத்தி லெழுகின்ற மாயைநன் னுட
னினைத்த தறிவ னெனில்தா நினைக்கில
ரெனக்கிறை யன்பில னென்ப ரிறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. (உஉ)

(இதன்பொழிப்புரை.) உயிரின் கண்ணே (நினைக்குந் தோறும்) உதியாநின்ற (சுத்த) மாயையாம் நல்ல பிரதேசத்தை யுடையராகிய சிவபிரான் (எவ்வெவரும்) நினைப்பதை அறிகின்றாரென (வேதாகமங்கள்) சொல்லுமாயின், (பின் யாதினால் அவரெல்லாம்) தாம் அவரை நினைக்கின்றாரில்லை; (அவ்வவரெல்லாந் தனித்தனியே) எனக்கு இறைவராகிய சிவபிரான் அன்பிலராயினர் என்பர்; (அவ்வாறு உரைத்தல் பழுதாம், யாதினாலெனில்) உய்யவேண்டித் தம்மிடத்தெய்தினர் உறவைத் தாம் விரும்பிநின்றார் (ஆதலினென்க.)

(குறிப்புரை.) ஆன்மாவின் அந்தரியாகஞானபூசை வாயிலாகச் சிவபிரானைச் சிந்திக்கச் சிந்திக்க அவர் அவ்வான்மாவின் கண்ணே விளங்கித் தோன்றுவர். இது நோக்கியே அருணந்தி சிவாசாரியர் "சிந்தையினிற் பூசித்துச் சிவனை ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க வந்திடு மொளிபோல வரவர வந்திடுவன் பின்மலமானதறுமே" என்று அருளிச் செய்தார். இவ்வுண்மை "மனத்தி லெழுகின்ற மாயை நன்னுடன்" என்றதனால் உணரற்பாற்று. குண்டலினி எனப்படும் சுத்தமாயையே பிரணவ மெனப்படும். இந்தப் பிரணவம் தேவர்களெல்லோர்க்கும் பிறப்பிடமாயும், சிவபெருமான் ஒருவர்க்கு இருப்பிடமாயும் போந்ததென்பது,

ஈசன் மேவரு பீடமா யேனையோர் தோற்றும்
வாச மாயெலா வெழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறு
மாசி றாரகப் பிரமமா மதன்பய னுய்ந்தான்.

என்பதனால் உணரப்படும். இதனால் சுத்தமாயாப் பிரதேசம் சிவபிரான் ஆதீனத்ததாயிற்று. இதுபற்றியே, ஈண்டுத் திருமூல நாயனார் சிவபிரானை "மாயைநன்னுடன்" என்றார்.

பஞ்சாரம் சக்ரம் பரிவர்த்ததே பிருது |

என்னும் யசுர்வேதிய ஆரணியக மந்திரத்திக்கு வியாசருளிய உபப்பிருமணத்தினால், பிரமசக்கரம் விஷ்ணுசக்கர முதலியவைகளிற் போந்த பிரணவங்கள் கவுணப்பொருளினுலே போந்தனவாம் என்றும், முக்கியமாய் சாந்தோக்கிய முதலிய பாசுபதோப நிடதங்களிலே முடித்துப் பேசப்பட்ட உற்கிதையாம் பிரணவமே அதர்வ சிகையினுல் முடித்துக் காட்டப்பட்ட ஆகாய மத்தியஸ்த துரிய சிவபிரானைப் பொருளாகக் கொண்டதாய், பிரம விஷ்ணு ருத்திர மகேசுவர சக்கரம்நான்கிற்கும் மேலாய்நின்ற சதாசிவ சக்கரத்தின் பாலதாய்நின்ற பிரணவத்திலே முக்கியப்பொருளிலே போந்ததா

மென்று அறியப்படுகின்றது. எவ்வெவர் எவ்வெவற்றை உன்னினும் அவ்வவற்றை யெல்லாம் உடனிருந்து சிவபிரான் அறிகின்றாரென்று கொண்டன்றே ஸ்ரீ அப்பமூர்த்திகள்,

உள்குவா ருள்கிற் றெல்லா முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச சிரித்திட் டேனே.

என்று அருளிச்செய்தார். இவ்வுண்மை "நினைத்ததறிவன்" என்றதனால் உணர்த்தப்பட்டது. இதனால் பரப்பிரகிருதிரூபசுத்தமாயைக்கும், பரப்பிரகிரிதிக்குக் கீழுள்ள சூக்குமப்பிரகிருதியினின்றுதித்த கலாதத்துவத்திற் பிறந்த மூலப்பிரகிருதியின்பாலதாய் (ஏகான்ம வாதிகளுடைய) சாத்துவிககுணச் சுத்தமாயைக்கும் பேதம் பெரிதாமென்க. இதனால் பரப்பிரகிருதிச் சுத்தமாயையின்பாலராம் ஈசர் மூலப்பிரகிருதிச் சாத்துவிககுண சுத்தமாயாப் பிரதிவிம்ப 'ஈசன்' அல்லராமென்று கடைப்பிடிக்க. சிவபிரான் அன்பினில் விளைந்த ஆரமுதாயும், அன்பே சிவமாயும், அமர்ந்தாராதலினாலும், அவரை அன்புகொண்டே அறிதல் முறையாய விடத்தும், அன்பில்லாதான் ஒருவன் தனக்குச் சிவபிரான் அருளிற்றிலரென்று பிதற்றுவான் என்பதை உணர்த்துதற்கே "எனக்கிறை யன்பிலனென்பர்" என்று குறிக்கப்பட்டது. தம்மிடத்திலே (சிவபெருமானிடத்திலே) உய்யவேண்டும் என்ற கருத்தினால் "அடைந்தாரை அவர்க்குவரும் ஏதத்தை நீக்கி ஆதாரமாய் நின்று பேணுவது தலைமைக்குணமுடையார்க்குக் கடமையாமாதலில்," "சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடனாதல்" என்று சிவஞான போதமும் "சார்ந்தார்க் கின்னமுதானானே" என்று திராவிட சுருதியும் கூறின. அவ்வுண்மை "பிழைக்க நின்றார் பக்கம் பேணிநின்றானே" என்றதனால் உணர்த்தப்பட்டது.

வல்லவன் வன்னிக் கிறையிடை வாரண
நில்லென நிற்பித்த நீதியு ளீசனை
யில்லென வேண்டா மிறையவர் தம்முத
லல்லும் பகலு மருளுகின் றானே. (௨௫)

(இ-ரை.) அக்கினிக்குத் தெய்வமாகிய சிவபிரான் சர்வகர்த்திருத்துவமுடையவர் (சர்வவல்லமை யுடையர்); (தேவர்களைத் துரந்து போந்த கயாசுரன் என்னும்) யானையை (அவர்மேல் அடராது) நில் என்று (தம்பாதத்தினால் உதைத்துத் தடுத்து) இடைக்கண்ணே நிற்பித்த நீதியுளராகிய சிவபிரானை (நம்மிடத்து அன்பு வைக்க) வில்லை என்று சொல்ல வேண்டியதின்றாம்; தமது (ஆன்ம) நாயகராகிய சிவபிரான் (தம்மைப் பிரியாதுடனின்று) அல்லும் பகலுந் திருவருள் பாலிக்கின்றார் (ஆதலிலென்க.)

(கு-ரை.) சிவபிரான் அக்கினிக்கு இறைவராயினாராதலினன்றோ "உருத்திரனை யுடைத்து அக்கினி" என்பது பொருள்பட,

த்வமக்நே |

என்று சுருதி கூறியதாமெனச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் "அக்நிம்" என்றற்றொடக்கத்த எழுபத்தைந்தாம் சுலோகத்தினால் உரைத்தது. "பொருப்பிடையான் நெருப்பிடையான்" என்றது திராவிட சுருதியுமாமென்க. இது "வன்னிக்கிறை" என்பதனால் உணர்த்தப்பட்டது. கயாசுரன்என்பான் ஒருவன் யானை வடிவமுற்றுத் தவத்தினரை யெல்லாம் துரந்துசெல்ல, அத்தவத்தினரெல்லாம் ஸ்ரீகாசிவிசுவேசுரப் பெருமானைச் சரண்புகுவாராக, சிவாபிரானார் உக்கிர வடிவமொன்று கொண்டு நின்று தவத்தினர்மீது தொடர்ந்த கயாசுரன் என்னும் அந்தயானையைத் தம்பாதத்தினால் உதைத்துக்கொன்று அதன் தோலைக் கிழித்துப் போர்த்து உயிர்களிடத்துக் கொண்ட அன்பை விளக்கினார் என்பது போதரவே, "வாரணனில்லென நிற்பித்த நீதியுளீசனை யில்லென வேண்டாம்" என உணர்த்தினார். சிற்றறிவு சிறுதொழிலுடைய ஆன்மாக்கள் ஐம்பொறிப் பாலனவாய விஷயங்களைத் தனித்தனியே அவாவி அறிந்து செய்து கொண்டிருக்கும் சகலாவஸ்தையிலும் (பகலிலும்), கருவிகளெல்லாங் கழன்று அதனாற் சிற்றறிவு சிறுதொழில் வெளிப்படற் கேதுவின்றிக் கிடக்கும் கேவலாவஸ்தையிலும் (அல்லிலும்), சிவபிரான் அவ்வவ்வான்மாக்களுக்கு அவ்வவ்வான்மாக்களினும் இனியராய்ப் பேராதுநின்று காத்தருளுகின்றாராதலில் "அல்லும் பகலு மருளுகின்றானே" என்று சொல்லப்பட்டது. இதனால் இரவும் பகலுமாகிய எக்காலமும் நமக்கு உயிர்க்குயிராய் நின்று அருளுகின்றாராதலில் அவரை அன்பிலரென்று கூறுதல் அடாதென்பதாம் என்க.

போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமி னென்றுஞ் சிவனடிக் கேசெல்வ
மாற்றிய தென்று மயலுற்றுச் சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. (௨௬)

(இ-ரை.) அநாதிமல முத்தராகிய சிவபிரான் திருவடியை வாழ்த்தியும் புகழ்ந்தும் (சிந்தையைத்) தெளிவியுங்கள்; சிவபிரான்றிருவடிக்கே எக்காலமும் (செல்லும்) செல்வமாகச் (சிந்தை) நேர்பட்டதாமென மோகமுற்றுச் சிந்தையைப் (பசுகரணத்தினின்று சிவகரணமாமாறு) மாற்றி நின்ற ஞானிகளுடைய சன்மார்க்க நெறியின்பாலராய் நின்றார் சிவபிரான்.

(கு-ரை). உலகியல்பெல்லாந் தூர்ந்துபோகத் தம்சிந்தை உருக உருக வாழ்த்திப் புகழ்ந்து நிற்கும் மெய்யடியாரிதயம் இன்பமாய்த் தெளிந்திருக்குமாதலில் ஸ்ரீஞானசம்பந்தர் அருளிய "பாரூர்பாடலார் பேராரின்பமே" என்னுந்திருவாக்குக்கு இசைவுறவே, "போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி தேற்றுமின்" என்று உரைக்கப்பட்டது. இதுபற்றியே திராவிடசுருதியும் "தேறினார் சித்தத்திருந்தார் தாமே" என்று கூறிற்று. ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் "காணுங் கரணங்களெல்லாம பேரின்பமெனப், பேணுமடியார் பிறப்பகல" எனவும், உய்யவந்த தேவநாயனார்

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக்க ராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்.

எனவும், அருண்மொழித்தேவர் "உணர்வு நேர்பெற வருஞ் சிவயோகம்" எனவும், "அளப்பருங் கரணங்களுஞ்சிந்

னதையோக" எனவும் கூறிய உண்மைபோதர "சிந்தையை மாற்றிநின்றூர்வழி மன்னிநின் றனே" என்றுரைக்கப்பட்டது. ஈண்டு (நெறி) வழி என்றது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் சன்மார்க்க நெறியின்பாலதாம்.

பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
னிறப்பிலி யாவர்க்கு மின்ப மருளுந்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமு மாமே. (உடு)

(இ-ரை). பிறப்பில்லாராகிய பிஞ்ஞகராம் சிவபிரான் பேரருளுடையர்; இறப்பிலராகிய இந்தச் சிவபிரான் எல்லோர்க்கும் பேரின்பமளிப்பாராயினர்; துறக்கற்பாலரல்லராகிய இந்தச் சிவபிரானைப் பிரியாது தொழுமின்கள்; அவ்வாறு தொழுதால் (நம்மை ஓர் காலத்தும் பிரியாது) மறவாதுடனிற்கும் சிவபிரானுல் (நம்மைப் பற்றிய) மாயை நீங்கி விடுதலுமாம்.

(கு-ரை). சிவபிரான் பிறவாதவரென்பது போதரச் சுவேதாசுவதரோபநிடதம் "அவர் பிறவாதவரும் நித்தியருமாம்" எனப் பொருள்படும்.

அஜம் த்ருவம் |

என்று கூறிற்று. இதனுற் சிவபிரான் "பிறப்பிலி" எனப்பட்டார். சிவபிரான் இறவாதவர் என்பது போதரப் பிருகதாரணியோபநிடதம் "இந்தப் பெரிய மகானுகிய பரமான்மாவானவர் (சிவனூர்) ஜரையில்லாதவரும், இறவாதவருமாயுள்ளார்" என்பது பொருள்பட

ஸவாஏஷமஹாநஜ ஆத்மா ஜரோமர: |

என்று கூறிற்று. "பிறப்பிலியை யிறப்பிலியைப் பேராவாணி விண்ணவரை" எனவும்,

" பிறவாது மிறவாதும் பெருகி ஞனைப்
பேய்பாட நமோடும் பித்தன் றன்னை
மறவாத மனத்தகத்து மன்னி ஞனை
மலையானைக் கடலானை வனத்து ளானை"

எனவுந் திராவிடசுருதிகள் கூறுமாற்றுல், சிவபிரான் "பிறப்பிலி" எனவும்,"இறப்பிலி" எனவும் பட்டார். சிவபிரான் கங்கை சந்திரன் அரவு முதலிய அமைந்த சடாமுடியையுடையராதலில் திராவிடசுருதி "முடித்தவன்காண் பிஞ்ஞகனும் வேடத்தான்காண் பிணையல்வெறிகமழ்கொன்றை யரவுசென்னி முடித்தவன்காண்" என்று கூறினமைக்கிசைய அவர் "பிஞ்ஞகன்" எனப்பட்டார். எந்தெந்த இடங்களிலே எந்தெந்தக்காலங்களிலே எந்தெந்த யோனிவாய்ப்பட்டு நாம் பிறக்கும் காலத்தும் அந்தந்த இடங்களிலே அந்தந்தக் காலங்களிலே அந்தந்த யோனிகளிலே தாமும் பிரியாது பெத்தநிலையிலே தாம் நம்முள்ளே மறைந்து நமக்குப் பின்னுகியும், முத்திநிலையிலே நம்மைத் தம்முள்ளே அடக்கித் தாம் நமக்கு முன்னுகியும் இப்படியே என்றும் துறக்கப்படாது உபகரித்து நின்றமையால் "துறப்பிலி" எனப்பட்டார். சிவபிரான் இவ்வாறு பெத்தமுத்திநிலைகளிலே துறக்கப்படாது என்றும் உபகரித்து நிற்கும் இவ்வியல்பு இருபாவிருபஃதிற் போந்த "கோலீங்கொண்டவாறுணராதே" என்னுஞ் செய்யுளால் அறியப்படும். சிவபிரான் தம்மை மறந்த சித்தருக்களாயினேரையும் தாம் மறவாது நினைந்தருளுகின்றூராதலில் பெரியோர் "அடையாதார்க்கு நீடருள் புரியுநித்தன்" என்றும், "எண்ணலாரையு நினைத்தருள் புரிதருநிமலன்", எனவும் கூறியவுண்மை "மறப்பிலி" என்றமையினல் உணர்த்தப்பட்டது. இவ்வாறே திராவிடசுருதியும் "மறப்பிலியை மதியேந்து சடையான்றன்னை" என்று கூறிற்று. அவ்வாறு மறவாது எத்துங்கால் மாயாவினைகளெல்லாம் நீங்கிவிடும் என்ற கருத்தினுல் ஸ்ரீஞானசம்பந்தர்,

உய்யலுறுவீர்கா
ளையனுரைச்
கையினுற்றொழு
மையும்வினைதானே.

என்று கூறிய உண்மை "மாயாவிருத்தமுமாமே" என்றதால் குறிக்கப்பட்டது.

தொடர்ந்துநின் றுனைத் தொழுமின் றொழுதாற்
படர்ந்துநின் றன்பரி பாரக முற்றுங்
கடந்துநின் றன்கம லம்மலர் மேலே
யுடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. (உசு)

(இ-ரை.) (நம்மைப்பிரியாது) தொடர்ந்துநின்ற சிவபிரானைத்தொழுங்கள்; அவ்வாறுதொழுதால் அவர் (நும்மை) நினையாநிற்பர்; எப்புறமும் பிரபஞ்சமெல்லாம் கடந்து நின்றூராய்ப்பின் இதயகமலத்தின் கண்ணே அமர்ந்திருந்தார், (இது) அவர் திருவடிப் புண்ணியமேயாம்.

(கு-ரை) ஆன்மாக்களைப் பெத்தமுத்தி இரண்டினும் பிரியாது தொடர்ந்து நின்றூராகிய சிவபிரானை எக்காலமும் மறவாதிருத்தல் கடமையாம் என்பது பற்றியே தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர்,

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

என்று கூறினர். இவ்வுண்மை கடைப்பிடித்துச் சிவபிரானைத் தொழுதால் நன்றி மறவாமையசு முடியுமென்பது போதர, "தொடர்ந்துநின் றுனைத் தொழுமின்" என்று கூறியதாம். அண்டமோரணுவாம் பெருமைகொண்டு நின்ற சிவபிரான் அணுவோரண்டமாஞ் சிறுமைகொண்டு ஆன்மாக்களுக்கு அருளும் பொருட்டு உள்ளக் கமலத்தின் கண்ணே பிரியாதுளராயினர் என்பது போதர, "பரிபாரகமுற்றுங் கடந்துநின்றன் கமலம்மலர்மேலே யுடந்திருந்தான்" என்று உரைக்கப்பட்டது. தாமே பிரமம் தாமே பிரமம் எனப் பிரமாவும் விஷ்ணுவும் அன்னரூபமும் பன்றி ரூபமுமுற்று விண்ணிற் பறந்தும் மண்ணையிடந்தும் காண்டற் கரியராய் அண்டங்களை யெல்லாம் மேருவெனும்படி கடந்துருவிநின்ற சிவபிரான் தம்மைத் "தொடர்ந்துவிடாத தொண்டர்க், கணியன சேயனதேவர்க் கையாற னடித்தலமே" என்றும் "பண்டானைப் பரந்தானைக் குவிந்தான்றன்னை" என்றும் ஸ்ரீ அப்பமூர்த்திகள் அருளியவாறு, அடியவர் உள்ளக்கமலத்தின்கண் ஆயினமை அருட் புண்ணிய விசேஷமாமன்றி மற்றியாது

மின்றும் என்னும் அருமை உணர்த்தி "அடிப்புண்ணியமாம்" என்றுரைக்கப்பட்டது.

சந்தி யெனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமி லீசனரு ணமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படுமவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றனே. (உஎ)

(இ-ரை.) சந்தியின்கண் உண்டாகிய செவ்வானின் எழிலையுடைய கமல மலர்போலும் ஒளிபொருந்திய வதனத்தையுடைய முடிவிலாச் சிவனார் திருவருள் நமக்கேயா மென்று, அச்சிவபெருமானைத் தினந்தோறும் வணங்குகின்றாரது சிந்தையின் கண்ணே (அவர்) புகுந்து (பிரியாது) நின்றார்.

(கு-ரை). சிவபிரான் அந்தியின்கண் உண்டாகிய செவ்வானெழிலையுடைய அம்பலத்தின்கண்ணுள்ளனாகிய பரமனும் என்பது "அந்தியின்வாயெழிலம்பலத்தெம்பரன்" என்றுமாணிக்கவாசகசுவாமிகளும் "ஆகாத நஞ்சுண்ட வந்திவண்ணர்" என்று வாகீசரும் கூறிய கருத்திற்கிசையவே "அந்தியெனத் தக்கவந்தமிலீசன்" என்று குறிக்கப்பட்டது. நினைத்துணைப்போதும் சிவபிரானை மறந்தால் உய்வில்லையாமாதலில் உய்தியின்பொருட்டுச் சிவபிரானை வணங்குதல் நெறியாமென்பது போதர ஸ்ரீவாகீசர் "அம்பலக்கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ" எனவும், "நாடோறும் நவின்றேத்த நன்மையாமே" எனவும் உணர்த்திய உண்மை "நந்தியை நாளும் வணங்கப் படுமவர் புந்தியினுள்ளே புகுந்து நின்றான்" என்று உணர்த்தப்பட்டது.

இணங்கிநின் றனெங்கு மாகிநின் றனும்
பிணங்கிநின் றன்பின்முன் னாகிநின் றனு
முணங்கிநின் றனம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. (உஅ)

(இ - ரை) உயிரின் கண்ணே உடங்கியைந்து நின்றாராய்ப் பின் எங்குமாகி நின்றோரும், சமீபத்தினராய் நின்று (பின் என்பனவைக் கெல்லாம்) பின்னும், (முன் என்பவைக் கெல்லாம்) முன்னுமாய் நின்றோருமாகிய சிவநாதர் (யாண்டும்) மறைந்து நின்றார்; (அங்ஙன மாயினும்) தம்மை வழிபட்டவர்க்கு வழித்துணையாவர்.

(கு-ரை). சிவபிரான் ஆன்மாவுக்கு உயிராயினார், அதனால் அவருக்கு ஆன்மா உடலாயிற்று என்பது போதர, பிருகதாரணியோபநிடதம்,

யஸ்யாத்மா சரீரம் |

என்று கூறியதற்கிசைய "இணங்கிநின்றான்" என்று உணர்த்தப்பட்டது. சிவபிரான் எங்குமாகிநின்றான் என்பது "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி, யருநிலையதிங்களாய் ஞாயிறாகியாகாசமா யட்டமூர்த்தியாகி" எனவும், "எல்லாவுலகமுமானாய் நீயே" எனவும், "ஊனா யுயிரானா யுடலானா யுலகானாய், வானாய் நிலனாய் கடலானாய் மலையானாய்" என்றற் றொடக்கத்த ஸ்ரீவாகீச ஸ்ரீசுந்தர சுருதிகளினாலே உணரப்படும். சிவபிரான் நம்மை நெருங்கிச் சமீபத்துள்ளாராய், பின்னர் அவர் முந்தியனவெல்லாம் பிந்த முந்துபவராயும், பிந்துவன வெல்லாம் முந்தப் பிந்துபவராயும் நின்றார் என்பது போதர, ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" எனவும், ஸ்ரீவாகீசர் "முன்னுமாய்ப் பின்னுமாய் முடிவானான் காண்" எனவும், கந்தபுராணம் "முன்னதின் முன்னென மொழிதமேயெனில் பின்னதிற் பின்னுமாய்ப் பேசநிற்றியால்" என்வும் போந்த உண்மை, "பின்முன்னாகி நின்றான்" என்பதனால் உணரப்படும். "அமராபதி" என்பதைச் சிவனார்க்குப் பெயராய்க்கொண்டு "சிவநாதன்" என்று பொருள்படுத்தப் பட்டது. இஃதொழிந்து அமராபதி என்றதை இந்திரனுக்குப் பெயராக்கொண்டு இந்திரனுக்கு நாயகராகிய சிவனாரென்று பொருள் கோடலுமாம். சிவபிரான் வணங்கிநின்றார்க்கே வழித்துணை யாவர் என்னும் உண்மை ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனாருளிய "வானநாடனே வழித்துணை மருந்தே" என்றதனால் அறியப்படும்.

காணநில் லாயடி யேற்குற வாருள்ள
நாணநில் லேனுன்னை நான்றழு விக்கொள்ளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி யமர்ந்துநின் றனே. (உகூ)

(இ-ரை.) (சுவாமீ) நீவிர் எனக்குக் காணநில்லீர்; அடியேனுக்கு உறவாவார் நீவிரன்றி மற்றியார்; அறிவினாலே நும்மை நான் தழுவிக்கொள்ளத் தாழ்க்க மாட்டேன். கோணபட்ட குணத்தினை யுடையராகிய (ஞானிகள்) அறிவின் கண்ணே பசுமரத்தாணி போலாயமர்ந்து (விளங்க) நின்றவரே.

(கு-ரை.) சிவபிரான் ஊனக் கண்ணுக்குப் புலப்படாது உள்ளக் கண்ணுக்கே புலப்படுவார் என்னும் உண்மை போதர, நெஞ்சுவிடுதூது "விண்மேற், றுளக்சாமனின்ற பெருஞ்சோதி—யுளக்கண்ணுக், கல்லாது தோன்றா வமலன்" எனவும், பட்டினத்தார் "உளக்கண்ணுக் கல்லாதுன் கண்ணாலோருமதோ" எனவும் உணர்த்திய திருவாக்குகளுக்கிசைய, சிவபிரான் உள்ளக் கண்ணுக்குப் புலப்பட்டு நிறறல் வேண்டும் என்னும் பிரார்த்தனையினாலே "காணநில்லாய்" என்று கூறப்பட்டது. சிவபிரானே ஆன்மாக்களுக்கு மிக்க இனியராய் உற்றவுறவினராய் நிற்பவராதலின், அச்சிவபிரானையே தமக்கு எப்பொருள்களுமாமெனக்கொண்டு, மற்றையுலகினரை யெல்லாம் பொருட் படுத்தாது மெய்யடியார் துறந்து நிற்பாராதலில், அக்கருத்துக்கொண்டே சுந்தரமூர்த்திநாயனார் "திருவுமெய்ப்பொருளுஞ் செல்வமு மெனக்குன் சீருடைக்கழல்களென்றெண்ணி, யொருவரை மதியாதுறுமைகள் செய்து மூடியு முறைப்பனாய்த் திரிவேன்" எனவும், திருநாவுக்கரசுசுவாமிகள்,

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையுந்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் றண்கடலு
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டேனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே.

எனவும், பட்டினத்தடிகள் "யாவரே யிருந்தும் யாவரே வாழ்ந்தும் யாவரே யெமக்குறவாயும், தேவரீரல்லாற்-றிசை

முகமெனக்குத் திருவுளமறிய வேறுளதோ" எனவும் அருளிய திருவாக்குகளுக் கிசையவே "அடியேற்குறவார்" என்று குறிக்கப்பட்டது. அருணகிரிநாதர் "அறிவையறிவது பொருளெனவருளிய பெருமாளே" எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் "தாயிலானைத் தழுவு மென்னெஞ்சியே" எனவும் உரைத்தமைக் கிசையவே, ஸ்ரீமூலர் "உள்ள நாணநில் லேனுன்னை நான்றழு விக்கொள்ள" என்றருளிச் செய்தார். சாத்துவிக ராசச தாமசம் என்னும் முக்குணங்களும் ஏக தேசக்காட்சிகளிற் சென்று கோணமில்லாது வியாபகமுறல் வேண்டும் என்று கொண்டு "விரிந்திடு மறிவுங்காட்டி வீட்டையு மளிப்பன மேலோன்" எனவும், "குணமொரு மூன்றுந்திருந்து சாத்துவிகமே" எனவும் போந்த திருவாக்குகளுக் கிசையவே "கோணமில்லாத குணத்தடியார் மனத்து நின்றோன்" எனக் கூறப்பட்டது. மெய்யடியார் தம்முள்ளத்தைச் சிவபிரானிடத்து ஒப்புவிக்குங்கால் சிவபிரான் அவர் உள்ளத்தைப் பிரியாது தாம் அவர்க்கு அபின்னமாய்த் தமது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதும் பதித்து நின்றார் என்பது உணர்த்த, ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் "ஆனந்த வார்கழலே, யொப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும்" என்று கூறிய திருவாக்குக் கருத்துள்ப்பட "அடியார் மனத்தாணிய ணாகி யமர்ந்துநின் றோனே" என்று உரைக்கப்பட்டது.

வானின் றழைக்கு மழைபோ லிறைவனுந்
தானின் றழைக்குங்கொல் லென்று தயங்குவா
ரானின் றழைக்கு மதுபோலென் னந்தியை
நானின் றழைப்பது ஞாலங் கரியே. (௩0)

(இ-ரை.) ஆகாயத்தினின்று (இடி இடித்து) அழைக்கும் மேகம்போல, (சிவபிரான்) தாம் நின்று நம்மை (உரத்த சத்தத்தினால்) அழைப்பாரோ என்று (பலர்) வருந்துகின்றார்; (அஃது பொருந்து மாறின்றாம்); தலையீற்றுப் பசுவானது (கன்றை நினைந்து கதறி) நின்றழைக்குமாறு போல, என் சிவபிரானை நான் (தலையன்பினால்) நின்று அழைப்பதற்கு ஞாலமே சான்றாம்.

(கு-ரை.) தலையீற்றுப் பசுவானது அன்பு மிகுதியினாலே தன் கன்றை நினைந்து கதறி அழைத்தல் ஞாலத்திலே வழக்கமாதல்போல, கசிந்துருகும் மெய்யன்பு ஒன்றே வேண்டி ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் "குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கீழ்க் கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்று அருளியவாறே, ஸ்ரீமூலரும் சிவபிரானையுற்றுக் கசிந்துருகி நின்றாரென்பது போதரவே "ஆனின்றழைக்குமது போலென்னந்தியை நானின்றழைப்பது ஞாலங்கரியே" என்றார்.

மண்ணகத் தானொக்கும் வானகத் தானொக்கும்
விண்ணகத் தானொக்கும் வேதத்தி னானொக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. (௩௧)

(இ-ரை.) சிவபிரான் பூவுலகத்துள்ளார் போல்வர். புவலோகத்துள்ளார் போல்வர். சுவலோகத்துள்ளார் போல்வர். பிரணவத்துள்ளார் போல்வர். (அங்ஙனம் யாண்டும் வியாபித்துளராயினும்), பண்ணின் கண்ணுள்ள இன்னிசைகொண்டு (யாழ்கொண்டு) கானஞ்செய்யும் சிவபிரானுக்கே (உள்ளக்) கண்ணிடமாக நின்று யான் அன்பு செய்தேன்.

(கு-ரை.) மண், வான், விண் என்னும் மூன்றிடம் ஈண்டு குறிக்கப்பட்டமையால், இம்மூன்றும் முறையே காயத்திரியின் மூன்று வியாகிருதிகளினாலே குறிக்கப்பட்ட பூலோக, புவலோக, சுவலோகமாமென்று பொருள்கோடலே சால்பாம். ஈண்டுப் பூலோகம் என்றது பிருதிவியாய்ப் பிரமாண்ட ரூபத்தையும், புவலோக மென்றது அந்தரிக்ஷமாய்ச் சூக்குமப்பிரகிருதி மாயாபதத்தையும், சுவலோக மென்றது ஆகாசமாய்ச் சிவதத்துவத்தின்பாலதான பரமாகாசபதத்தையும் குறித்ததாமெனக் கோடற்பாற்று. "பூலோக புவலோக சுவலோகமாய்ப் பூதங்களாய்" என்று திராவிடசுருதியுங் கூறிற்று. எனவே, ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்களின்பாலராயினர் சிவபிரான் என்பது கொள்ளுதற்கே "மண்ணகத்தான்," "வானகத்தான்," "விண்ணகத்தான்" என்று கூறி, இம்மூன்றும் அகார உகார மகார வியஷ்டிப் பிரணவத்தினாற் குறிக்கப்படும் என்று காட்டற்கே "வேதத்தினான்" என்றும், இப்பிரபஞ்ச மெல்லாவற்றையும் மகாசங்கார காலத்தில் ஒடுக்கிவிட்டுத் தாம் ஏகராய் நாதாந்தத்தில் விளங்குவார் என்பது கொண்டு ஸ்ரீவாகீசர் "பண்ணாரப்பல்லிலயம் பாடினான்காண்" எனவும்,

பெருங்கடன் மூடிப் பிரளயங்கொண்டு பிரமனும்போ
யிருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான்க ளேபரமுங்
கருங்கடல் வண்ணன்க ளேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.

என்று கூறிய கருத்துற, "பண்ணகத் தின்னிசை பாடலுற்றான்" எனக் கூறப்பட்டது. இவ்வாறு சமஸ்தப் பிரபஞ்சங்களை யெல்லாம் ஒடுக்கிநின்ற இப்பெருவெளியின் கண்ணே ஆன்மாச் சிவத்தோடு அத்துவிதமாய் இசைந்து பேரின்பந் துய்க்குங்கொல்லாம் என்பது போதரப் பட்டினத்தார் "பூதமுங் கரணம் பொறிகளைம்புலனும் பொருந்தியகுணங்களோர்மூன்றும், நாதமுங் கடந்தவெளியிலே நீயுநானுமாய் நிற்குநாளுளதோ" என்று உரைக்குங் கருத்துக் கிசைய "பாடலுற் றானுக்கே கண்ணகத் தேநின்று காதலித் தேனே" என்று உரைக்கப்பட்டது.

தேவர்பி ரானம்பி ரான்றிசை பத்தையு
மேவுபி ரான்விரி நீருல கேழையுந்
தாவுபி ரான்றன்மை தானறி வாரில்லை
பாவுபி ரானருட் பாடலு மாமே. (௩௨)

(இ-ரை.) தேவநாயகராகிய சிவபிரானே நமது நாயகர்; பத்துத் திசையையும் வியாபித்து நிற்கும் சிவபிரான் விரிந்த நீர்மையையுடைய சப்தலோகங்களையும் கடந்து நின்றார்; அவரது இயல்பைத்தான் அறிகின்றாரில்லை; (ஆதலால்) துதிக்கற்பாலராம் சிவபிரானுடைய அருட்பாக்களும் (அவரை அறிதற்கு) வாயிலாம்.

பின்றும் என்னும் அருமை உணர்த்தி "அடிப்புண்ணியமாம்" என்றுரைக்கப்பட்டது.

சந்தி யெனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமி லீசனரு ணமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படுமவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. (உஎ)

(இ-ரை.) சந்தியின்கண் உண்டாகிய செவ்வானின் எழிலையுடைய கமல மலர்போலும் ஒளிபொருந்திய வதனத்தையுடைய முடிவிலாச் சிவனார் திருவருள் நமக்கேயா மென்று, அச்சிவபெருமானைத் தினந்தோறும் வணங்குகின்றாரது சிந்தையின் கண்ணே (அவர்) புகுந்து (பிரியாது) நின்றார்.

(கு-ரை). சிவபிரான் அந்தியின்கண் உண்டாகிய செவ்வானெழிலையுடைய அம்பலத்தின்கண்ணுள்ளனாகிய பரமனும் என்பது "அந்தியின்வாயெழிலம்பலத்தெம்பரன்" என்றுமாணிக்கவாசகசுவாமிகளும் "ஆகாத நஞ்சுண்ட வந்திவண்ணர்" என்று வாகீசரும் கூறிய கருத்திற்கிசையவே "அந்தியெனத் தக்கவந்தமிலீசன்" என்று குறிக்கப்பட்டது. தினைத்துணைப்போதும் சிவபிரானை மறந்தால் உய்வில்லையாமாதலில் உய்தியின்பொருட்டுச் சிவபிரானை வணங்குதல் நெறியாமென்பது போதர ஸ்ரீவாகீசர் "அம்பலக்கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ" எனவும், "நாடோறும் நவின்றேத்த நன்மையாமே" எனவும் உணர்த்திய உண்மை "நந்தியை நாளும் வணங்கப் படுமவர் புந்தியினுள்ளே புகுந்து நின்றான்" என்று உணர்த்தப்பட்டது.

இணங்கிநின் றானெங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானு
முணங்கிநின் றானம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. (உஅ)

(இ-ரை) உயிரின் கண்ணே உடங்கியைந்து நின்றாராய்ப் பின் எங்குமாகி நின்றேரும், சமீபத்தினராய் நின்று (பின் என்பவைக் கெல்லாம்) பின்னும், (முன் என்பவைக் கெல்லாம்) முன்னுமாய் நின்றேருமாகிய சிவநாதர் (யாண்டும்) மறைந்து நின்றார்; (அங்ஙன மாயினும்) தம்மை வழிபட்டவர்க்கு வழித்துணையாவர்.

(கு-ரை). சிவபிரான் ஆன்மாவுக்கு உயிராயினர், அதனால் அவருக்கு ஆன்மா உடலாயிற்று என்பது போதர, பிருகதாரணியோபநிடதம்,

யஸ்யாத்மா சரீரம் |

என்று கூறியதற்கிசைய "இணங்கிநின்றான்" என்று உணர்த்தப்பட்டது. சிவபிரான் எங்குமாகிநின்றான் என்பது "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி, யருநிலயதிங்களாய் ஞாயிறுமாகியாகாசமா யட்டமூர்த்தியாகி" எனவும், "எல்லாவுலகமுமானாய் நீயே" எனவும், "ஊனா யுயிரானா யுடலானா யுலகானாய், வானாய் நிலனாய் கடலானாய் மலையானாய்" என்றற்றொடக்கத்த ஸ்ரீவாகீச ஸ்ரீசுந்தர சுருதிகளினாலே உணரப்படும். சிவபிரான் நம்மை நெருங்கிச் சமீபத்துள்ளாராய், பின்னர் அவர் முந்தியனவெல்லாம் பிந்த முந்துபவராயும், பிந்துவன வெல்லாம் முந்தப் பிந்துபவராயும் நின்றார் என்பது போதர, ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" எனவும், ஸ்ரீவாகீசர் "முன்னுமாய்ப் பின்னுமாய் முடிவானான் காண்" எனவும், கந்தபுராணம் "முன்னதின் முன்னென மொழிதமேயெனில் பின்னதிற் பின்னுமாய்ப் பேசநிற்றியால்" என்வும் போந்த உண்மை, "பின்முன்னாகி நின்றான்" என்பதனால் உணரப்படும். "அமராபதி" என்பதைச் சிவனார்க்குப் பெயராய்க்கொண்டு "சிவநாதன்" என்று பொருள்படுத்தப் பட்டது. இஃதொழிந்து அமராபதி என்றதை இந்திரனுக்குப் பெயராகக்கொண்டு இந்திரனுக்கு நாயகராகிய சிவனாரென்று பொருள் கோடலுமாம். சிவபிரான் வணங்கிநின்றார்க்கே வழித்துணை யாவர் என்னும் உண்மை ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனாருளிய "வானநாடனே வழித்துணை மருந்தே" என்றதனால் அறியப்படும்.

காணநில் லாயடி யேற்குற வாருள்ள
நாணநில் லேனுன்னை நான்தழு விக்கொள்ளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி யமர்ந்துநின் றானே. (உகூ)

(இ-ரை.) (சுவாமீ) நீவிர் எனக்குக் காணநில்லீர்; அடியேனுக்கு உறவாவார் நீவிரன்றி மற்றியார்; அறிவினாலே நும்மை நான் தழுவிக்கொள்ளத் தாழ்க்க மாட்டேன். நேர்பட்ட குணத்தினை யுடையீராகிய (ஞானிகள்) அறிவின் கண்ணே பசுமரத்தாணி போலாயமர்ந்து (விளங்க) நின்றவரே.

(கு-ரை.) சிவபிரான் ஊனக் கண்ணுக்குப் புலப்படாது உள்ளக் கண்ணுக்கே புலப்படுவார் என்னும் உண்மை போதர, நெஞ்சுவிடுதூது "விண்மேற், றுளக்காமனின்ற பெருஞ்சோதி—யுளக்கண்ணுக், கல்லாது தோன்றா வமலன்" எனவும், பட்டினத்தார் "உளக்கண்ணுக் கல்லாதூன் கண்ணாலோருமதோ" எனவும் உணர்த்திய திருவாக்குகளுக்கிசைய, சிவபிரான் உள்ளக் கண்ணுக்குப் புலப்பட்டு நிற்றல் வேண்டும் என்னும் பிரார்த்தனையினாலே "காணநில்லாய்" என்று கூறப்பட்டது. சிவபிரானே ஆன்மாக்களுக்கு மிக்க இனியராய் உற்றவுறவினராய் நிற்பவராதலில், அச்சிவபிரானையே தமக்கு எப்பொருள்களுமாமெனக்கொண்டு, மற்றையுலகினரை யெல்லாம் பொருட் படுத்தாது மெய்யடியார் துறந்து நிற்பாராதலில், அக்கருத்துக்கொண்டே சுந்தரமூர்த்திநாயனார் "திருவுமெய்ப்பொருளுஞ் செல்வமு மெனக்குன் சீருடைக்கழல்களென்றெண்ணி, யொருவரை மதியாதுறுமைகள் செய்து மூடியு முறைப்பனாய்த் திரிவேன்" எனவும், திருநாவுக்கரசுசுவாமிகள்,

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையுந்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் றண்கடலு
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டேமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே.

எனவும், பட்டினத்தடிகள் "யாவரே யிருந்தும் யாவரே வாழ்ந்தும் யாவரே யெமக்குறவாயும், தேவரீரல்லாற் றிசை

முகமெனக்குத் திருவுளமறிய வேறுளதோ" எனவும் அருளிய திருவாக்குகளுக் கிசையவே "அடியேற்குறவார்" என்று குறிக்கப்பட்டது. அருணகிரிநாதர் "அறிவையறிவது பொருளெனவருளிய பெருமாளே" எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் "தாயிலானைத் தழுவு மென்னெஞ்சியே" எனவும் உரைத்தமைக் கிசையவே, ஸ்ரீமூலர் "உள்ள நாணநில் லேனுன்னை நான்றழு விக்கொள்ள" என்றருள்ச் செய்தார். சாத்துவிக ராசச தாமசம் என்னும் முக்குணங்களும் ஏகதேசக்கீர்ட்சிகளிற் சென்று கோணிநில்லாது வியாபகமுறல் வேண்டும் என்று கொண்டு "விரிந்திடு மறிவுங்காட்டி வீட்டையு மளிப்பன மேலோன்" எனவும், "குணமொரு மூன்றுந்திருந்து சாத்துவிகமே" எனவும் போந்த திருவாக்குகளுக் கிசையவே "கோணநில்லாத குணத்தடியார் மனத்து நின்றான்" எனக் கூறப்பட்டது. மெய்யடியார் தம்முள்ளத்தைச் சிவபிரானிடத்து ஒப்புவிக்குங்கால் சிவபிரான் அவர் உள்ளத்தைப் பிரியாது தாம் அவர்க்கு அபின்னமாய்த் தமது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதும் பதித்து நின்றார் என்பது உணர்த்த, ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் "ஆனந்த வார்கழலே, யொப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும்" என்று கூறிய திருவாக்குக் கருத்துள்ப்பட "அடியார் மனத்தாணிய ஞகி யமர்ந்துநின் றானே" என்று உரைக்கப்பட்டது.

வானின் றழைக்கு மழைபோ லிறைவனுந்
தானின் றழைக்குந்தொல் லென்று தயங்குவா
ரானின் றழைக்கு மதுபோலென் னந்தியை
நானின் றழைப்பது ஞாலங் கரியே. (௯0)

(இ-ரை.) ஆகாயத்தினின்று (இடி இடித்து) அழைக்கும் மேகம்போல, (சிவபிரான்) தாம் நின்று நம்மை (உரத்த சத்தத்தினுல்) அழைப்பாரோ என்று (பலர்) வருந்துகின்றார்; (அஃது பொருந்து மாறின்றாம்); தலையீற்றுப் பசுவானது (கன்றை நினைந்து கதறி) நின்றழைக்குமாறு போல, என் சிவபிரானை நான் (தலையன்பினுல்) நின்று அழைப்பதற்கு ஞாலமே சான்றாம்.

(கு-ரை.) தலையீற்றுப் பசுவானது அன்பு மிகுதியினுலே தன் கன்றை நினைந்து கதறி அழைத்தல் ஞாலத்திலே வழக்கமாதல்போல, கசிந்துருகும் மெய்யன்பு ஒன்றே வேண்டி ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் "குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கீழ்க் கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" என்று அருளியவாறே, ஸ்ரீமூலரும் சிவபிரானையுற்றுக் கசிந்துருகி நின்றாரென்பது போதாவே "ஆனின்றழைக்குமது போலென்னந்தியை நானின்றழைப்பது ஞாலங்கரியே" என்றார்.

ம்ண்ணகத தானெக்கும் வானகத் தானெக்கும்
விண்ணகத் தானெக்கும் வேதத்தி னனெக்கும்
பண்ணகத் தின்னிசைப பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. (௯௧)

(இ-ரை.) சிவபிரான் பூவுலகத்துள்ளார் போல்வர். புவலோகத்துள்ளார் போல்வர். சுவலோகத்துள்ளார் போல்வர். பிரணவத்துள்ளார் போல்வர். (அங்ஙனம் யாண்டும் வியாபித்துளராயினும்), பண்ணின் கண்ணுள்ள இன்னிசைகொண்டு (யாழ்கொண்டு) கானஞ்செய்யும் சிவபிரானுக்கே (உள்ளக்) கண்ணிடமாக நின்று யான் அன்பு செய்தேன்.

(கு-ரை.) மண், வான், விண் என்னும் மூன்றிடம் ஈண்டு குறிக்கப்பட்டமையால், இம்மூன்றும் முறையே காயத்திரியின் மூன்று வியாகிருதிகளினுலே குறிக்கப்பட்ட பூலோக, புவலோக, சுவலோகமாமென்று பொருள்கோடலே சால்பாம். ஈண்டுப் பூலோகம் என்றது பிருதிவியாய்ப் பிரமாண்ட ரூபத்தையும், புவலோக மென்றது அந்தரிக்ஷமாய்ச் சூக்குமப்பிரகிருதி மாயாபதத்தையும், சுவலோக மென்றது ஆகாசமாய்ச் சிவதீத்துவத்தின்பாலதான பரமாகாசபதத்தையும் குறித்ததாமெனக் கோடற்பாற்று. "பூலோக புவலோக சுவலோகமாய்ப் பூதங்களாய்" என்று திராவிடசுருதியுங் கூறிற்று. எனவே, ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்களின்பாலராயினர் சிவபிரான் என்பது கொள்ளுதற்கே "மண்ணகத்தான்," "வானகத்தான்," "விண்ணகத்தான்" என்று கூறி, இம்மூன்றும் அகார உகார மகார வியஷ்டிப் பிரணவத்தினுற் குறிக்கப்படும் என்று காட்டற்கே "வேதத்தினன்" என்றும், இப்பிரபஞ்ச மெல்லாவற்றையும் மகாசங்கார காலத்தில் ஒடுக்கிவிட்டுத் தாம் ஏகராய் நாதாந்தத்தில் விளங்குவார் என்பது கொண்டு ஸ்ரீவாகீசர் "பண்ணாரப்பல்லியம் பாடினன்காண்" எனவும்,

பெருங்கடன் மூடிப் பிரளயங்கொண்டு பிரமனும்போ
யிருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான்க ளேபரமுங்
கருங்கடல் வண்ணன்க ளேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.

என்று கூறிய கருத்தற, "பண்ணகத் தின்னிசை பாடலுற்றான்" எனக் கூறப்பட்டது. இவ்வாறு சமஸ்தப் பிரபஞ்சங்களை யெல்லாம் ஒடுக்கிநின்ற இப்பெரு வெளியின் கண்ணே ஆன்மாச் சிவத்தோடு அத்துவிதமாய் இசைந்து பேரின்பந் துய்க்குங்கொல்லாம் என்பது போதரப் பட்டினத்தார் "பூதமுங் கரணம் பொறிகளைம்புலனும் பொருந்தியகுணங்களோர்மூன்றும், நாதமுங் கடந்தவெளியிலே நீயுநானுமாய் நிற்குநாளுளதோ" என்று உரைக்குங் கருத்துக் கிசைய "பாடலுற் றானுக்கே கண்ணகத் தேநின்று காதலித் தேனே" என்று உரைக்கப்பட்டது.

தேவர்பி ரானம்பி ரான்றிசை பத்தையு
மேவுபி ரான்விரி நீருல கேழையுந்
தாவுபி ரான்றன்மை தானறி வாரில்லை
பாவுபி ரானருட் பாடலு மாமே. (௯௨)

(இ-ரை.) தேவநாயகராகிய சிவபிரானே நமது நாயகர்; பத்துத் திசையையும் வியாபித்து நிற்கும் சிவபிரான் விரிந்த நீர்மையையுடைய சப்தலோகங்களையும் கடந்து நின்றார்; அவரது இயல்பைத்தான் அறிகின்றாரில்லை; (ஆதலால்) துதிக்கற் பாலராம் சிவபிரானுடைய அருட்பாக்களும் (அவரை அறிதற்கு) வாயிலாம்.

(கு-ரை.) தேவநாயகராகிய சிவபிரான் பத்துத்திசைகள் பொருந்திய பூவுலகத்தையும் அதற்கு மேல் நின்ற சப்த லோகங்களையுந் தாண்டி நின்றாராதலில்; அவர் பெருமை யார்க்கும் அறிதற் கரிதாகிய பெரும்பெற்றியதாம் என்றுணர ஸ்ரீஞானசம்பந்தர் "ஆயினும் பெரிய ராரறிவாரவர் பெற்றியே" என்றும், அருண்மொழித்தேவர்,

ஆயி னும்பெரி யாரவ ரென்பது
மேய விவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்
ளேயும் யாவு மிவர்வடி வென்றதாம்.
பின்பு மாரறி வாரவர் பெற்றியை
யென்ப தியாருணர் வானுஞ்சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யாரென வோழ்த்திறு
ரன்பு சூழ்சண்பை யாண்டகை யாரவர்.

என்றும், ஸ்ரீவாகீசர் "இறையவன்காணேழுலகு மாயினான் காண்" என்றும் கூறிய கருத்துக்கிசையவே "உலகேழையுந் தாவுபி ரான்றன்மை தானறி வாரில்லை" என்றருளினர் ஸ்ரீமூலர். அங்ஙனமாயினும் காமுகனானவன் காமுகிவாயினின்றும் பிறக்கின்ற இனிய மொழியினால் வசப்பட்டாற்போலச் சிவபிரான் தம்மெய்யடியார்களுடைய வாயினின்று பிறக்கும் அருட்பாக்களினாலே வசியப்படுவாரென்பது சுந்தரமூர்த்திநாயனார் திருநாவுக்கரசுநாயனார் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மாணிக்கவாசகசுவாமி முதலாயினோருடைய சரித்திரங்களாலும் பாக்களினாலும் அறிதல் கண்கூடாமாதலில், பசுகரணமுற்றார் போலிமருட்பாக்களை ஓதாது பதிகரணமுற்றாராய மெய்யடியாரருளிய அருட்பாக்களை ஓதுகின்றவருளத்திலே சிவபெருமான் தயிரில் நெய்போல விளங்கி நிற்பார். "பாவுற்ற பாடலுகப் பார்தாமே" என்று திராவிட சூக்தி கூறிற்று. இதனை உணர்த்தவே "பாவுபி ரானருட் பாடலுமாமே" என்று உபதேசிக்கப்பட்டது.

பதிபல வாவது பண்டிவ் வுலகம
விதிபல செய்தொன்று மெய்ம்மை யுணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல லாரு
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. (௩௩)

(இ-ரை). பண்டே இவ்வுலகமானது (வேதத்துக் கருமகாண்டம் பற்றி) அக்கினி தேவன முதலிய பதிகள் பலனையுடையதாய் முற்றியது; அவ்வேத) விதிகள் பலவற்றைச் செய்தும் மெய்ப்பொருளாகிய சிவபிரானைச் சேரும் மெய்ந்நெறியை உலகினர் ஓராராயினர்; சாமகான முதலிய ஸ்துதிகள் பலவற்றை ஸ்தோத்திரமாகக் கோஷிக்க வல்லவரும் (அச்சிவபிரான் உண்மையை) உணரமாட்டாராய்ச் சோர்வடைவாராயினர்.

(கு-ரை). அன்னம் பிரமம், மனம் பிரமம், விஞ்ஞானம் பிரமம், அக்கினி பிரமம், இந்திரன் பிரமம், ஆதித்தியன் பிரமம், நாராயணன் பிரமம் (நிர்க்குண) ஆன்மா பிரமம், என்றற்றொடக்கத்தனவாகப் பல பதிகள் முதல்வராக வேதத்திலே கூறப்படுகின்றமையில் இவரெல்லாம் அவாந்தர பதிகளாக, சிவபிரான் ஒருவரே முழு முதற் கடவுளாகிய பதி என்பது ப்ரோத்தர ஸ்காந்த புராணம்

சர்வேஷாம் ஜநக: சம்பு: பரமாத்மேதி விச்ருத: |
ஹவ்யாசோ ஹவிரா காரோ ஜநகோ ஜாதவேதச: |
கர்த்தா யஞ்ஞஸ்ய தேவோயம் ரக்ஷகோஸ்ய ஜகத்ப்ரபு: |
சிவ ஏவேதி வேதாந்தா நாந்யோ ஸ்தீதி வதந்திஹி |
அஸ்தி சேதத்ரயஜ்ஞேச: சமுத்தி ஷ்டது மத்புர:||

புங்கவ ரெவர்க்கு நல்கும் புவிபுக ழவிகொள் வானு
மங்கியின் முதலும் வேள்விச் சதிபனு மளிக்கின் றானுஞ்
சங்கரன் றானே வேதஞ் சாற்றுமான் மகத்துக் காதி
யிங்கொரு தேவுண்டென்னி னெழுகெனவுரைத்திமாதோ.

என்று கூறினமையால், சிவபிரானே முழுமுதற் கடவுளென்பது அறியப்படுகின்றது என்னும் இவ்வுண்மை அறிந்து அவரோடு அத்துவிதமுற்று மெய்ம்மை யுணர்தல் அரிதாம் என்றுங் கொண்ட கருத்தினாலன்றோ ஸ்ரீமூலர் "பதிபலவாவது பண்டிவ்வுலகம், விதிபல செய்தொன்று மெய்ம்மை யுணரார்" என்று கூறினர். இக்கருத்தை அநுசரித்தே சிவதத்துவ விவேகம்

கதிஸ்த்வம் ப்ராப்தாநாம் புரகர ஜநிம் ப்ராம்மணகுலே விசேஷா தேதஸ்மிந்யுக இதிபுராணேஷு விதிதம் | அதஸ்த்யத்வைவத்வாம் ஜடமதிருபாஸ்தே யமபரம் ஸவிப்ர: பாபீயாந் பவதமபி தேவம் நலபதே||

"வேதியர் குலத்திற் பிறந்தவர் தமக்கு விசேடமா யிக்கலியுகத்தில், வேதநீ தெய்வ மெனப்புரா ணங்கள் விளம்பவுமன் பினு லன்றன், பாததா மரையை வழிபடா தேனைப் பண்ணவர் தமைவழி படுவோர், பாதக மறையோர் மூடர்களவர்க்குப் பயன்றரா பரதெய்வங் களுமே."

என்று கூறிற்று, சிவபிரானே முழுமுதற்கடவுளென்று சிவஞானத்தினாலறிந்து மெய்யன்பு செய்யமாட்டாதார் வேதாத்தியயனங்களெல்லாம் பொருள்படுமாறின்றாம் என்பது போதர, ஸ்ரீவாகீசர்

வேத மோதிலென் சாத்திரங் கேட்கிலெ
னீதி நூல்பல நித்தல்ப யிற்றிலெ
ன்றோதி யங்கமோ ராறமு ணரிலெ
னீச னையுள்கு வார்க்கன்றி யில்லையே.

எரி பெருக்குவ ரவ்வெரி யீசன
துருவ ருக்கம தாவது ணர்கில
ரரிய யற்கரி யானைய யர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே.

அருக்கன் பாதம்வ ணங்குவ ரந்தியி
லருக்க னாவா னரனுரு வல்லனோ
விருக்கு நான்மறை யீசனை யேதொழு
கருத்தி னைநினை யார்கன் மனவரே.

தாயினு நல்ல சங்கர னுக் கன்ப
ராய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்டம னத்தரே.

கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போற்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பராற்
றேவ தேவன் சிவன்பெருந் தன்மையே.

நூறு கோடி பிரமர்க ணொந்தினு
ராறு கோடி நாராயண ரங்ஙனே
யேறு கங்கை மணலெண்ணி லிந்திர
ரீறி லாதவ னீச னொருவனே.

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
வத்த னென்றரி யோடு பிரமனுந்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே.

என்னுந் திருவாக்குக் கிணங்கவே மதியில்லாதவர் வேதங்கள் கொண்டு கீதங்கள் பாடியும் சிவபிரானைப் பரமபதியாகக் கொண்டு இலக்காக்காமையால் அவரெல்லாம் நிரதிசய பேரின்பமுற்று உய்யமாட்டாது சோர்வுற்றுப் பதியைப் பசுவென்றும் பசுவைப் பதியென்றுங் கொண்ட அதிபாதக காரணத்தாற் செனனங்கடோறும் துன்புறுவர் என்பது "துதிபலதோத்திரஞ் சொல்லவல் லாரு மதியிலர் நெஞ்சினுள் வாடு கின் றுரே" என்று கூறினர்.

சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்த னமரர்க் கருளிய மெய்ந்நெறி
யார்ந்த சுடரன்ன வாயிர நாமமும்
போந்து மிருந்தும் புகழுவென் றுனே. (௩௪)

(இ-ரை). சந்தனத்திலே கமழுகின்ற கஸ்தூரி வாசம் போல யாண்டும் வியாபித்து நின்ற சிவபதியானவர் தாம் தேவர்களுக்கு அருளிச்செய்த மெய்ந்நெறியார்ந்த திபத்தை நிகர்த்த சிவசகச்சிரநாமத்தையும் நடந்தாலும் இருந்தாலும துதிக்க என்று அருளிச்செய்தார்.

(கு-ரை). சிவபிரான் அருட்பாக்களைப்பாடி அவரைச் சேர்தல் முறையாம், அஃதன்றி மெய்ப்பொருளை உணர்ந்து சாமகானங்களினாலே சிவபிரானை அடைதலும் முறையாம், அஃதன்றிச் சிவபிரானருளிய ஆயிரந் திருநாமங்களையும் நிற்கும்போதும், இருக்கும்போதும், கிடக்கும்போதும், உண்ணும்போதும், துயிலும்போதும், விழிக்கும்போதும், இமைக்கும்போதுமாகிய எக்காலமும் சிந்தையோடுற அன்போடுற "உமாபதயே," "அம்பிகாபதயே," "நீலகண்டரே," "கங்காதரரே," "சிவபரம்பொருளே" என்றற்றொடக்கத்தனவாகிய எண்ணில்லாத சகச்சிரநாமங்களை அன்போடுருகி உச்சரித்துவரில், அவ்வாசகமாகிய மந்திரசப்தத்துக்கும் வாச்சியமாகிய சிவத்துக்கும் பேதமில்லாமையால், சந்தனத்திற் கலந்துள்ள கஸ்தூரியானது சந்தனத்தினின்று வேறுபடாது நின்றாற்போல சமஸ்த சேதனாசேதனப் பிரபஞ்சங்கடோறும் அபின்னமாய் வியாபித்து நின்ற சிவபிரான் சேதனனாகிய ஆன்மாவானவன் செபிக்கும் சிவநாமமந்திரவாயிலாக அச்சிவபிரான் கடைந்தபொழுது தோன்றும் அக்கினி போல வெளிப்பட்டு நின்றருளுவார் என்பது காட்டற்கே "ஆயிர நாமமும் போந்து மிருந்தும் புகழுவென் றுனே" என்று சூசித்தார். திராவிட சுருதியும் அக்கருத்துப்பற்றியே "பேரவன்காண்பேராயிரங்களேத்தும் பெரியவன்காண்" என்று கூறிற்று.

ஆற்றுகி லாவழி யாரு மிறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ் மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை யெட்டுக்கு
மாற்றுவ னப்படி மாடமு மாமே. (௩௫)

(இ-ரை). எவரும் ஆகும் நெறியினாலே செய்யவேண்டின் சிவபிரானைப் புகழுங்கள்; அப்படியே புகழ்ந்தால் அவர் நமக்கு அவ்வாறு புகழாகிய (பிரசாதத்தை) உப்பரிகையைமேற்றிசைக்கும் கிழக்கு இறுதியாம் திசைகள் எட்டுக்குமாகப் பரந்து நிற்பச் செவ்விதாக உயர்த்திவிடுவார்.

(கு-ரை). சற்குரு வாயிலாக ஆகா நெறியை ஒழித்து, ஆம் நெறியைக் கடைப்பிடித்து சத்தியாதி சத்தி பரியந்தமாகப் போந்த தத்துவங்களெல்லாங் கடந்து அப்பாற் பட்டாராக வேதாகமங்களால், ஒரே முழக்கமாய் முழக்கப்படும் "எல்லையில் புகழ் எந்தை" யாராகிய சிவபிரானைத் துதித்தால், "புகலூர் பாடுமின் புலவீர்காள், ளிம்மையே தருஞ் சோறுங் கூறையு மேத்தலா மிடர் கெடலுமா மம்மையே சிவலோகமாள்வதற்கியாது மையுறவில்லையே" என்று சுந்தரமூர்த்தி நாயனாரருளியவாறு, சுத்த தத்துவங்களுக்கெல்லாம் தலைமையாய் நின்ற பரப்பிரம சிவலோகத்தின் கண்ணே "ஒருக்கால் வணக்குறீரானை யென்றும் வானவர் வணங்க வைப்பன்" என்று அருளிய நெறியானே இம்மையில் எல்லையில்லாப் புகழையும், அம்மையில் எல்லையிலாப் பேரின்ப போகத்தையும் சிவலோகமாம் மகா உப்பரிகையின் கண்ணே "தம்மைப்போலத் தம்மடியார்க்கு மின்ப மளிப்பார்" என ஸ்ரீஞானசம்பந்தர் உணர்த்திய பொருட் கிசையவே "புகழ்ந்திடின் மேற்றிசைக்குங் கிழக்குத் திசை யெட்டுக்கு மாற்றுவ னப்படி மாடமுமாமே" என அருளப்பட்டது.

அப்பனை நந்தியை யாரா வமுதினை
யொப்பிலி வள்ளலை யூழி முதல்வனை
யெப்பரி சாயினு மேத்துமி னேத்தினு
லப்பரி சீச னருள்பெற லாமே. (௩௬)

(இ-ரை). அப்பரும், நந்தியும், ஆராவமுதும், ஒப்பிலாதவரும், வள்ளலும், ஊழி முதல்வருமாகிய நாதரை எவ்வாறாயினும் துதியுங்கள்; அவ்வாறு துதித்தால் அந்தப் பிரகாரஞ் சிவபிரானார் திருவருள் பெறலாம்.

(கு-ரை). மேலே சொல்லியவாறு எப்பிரகாரத்தினாலேனும் பிதாவும், ஆராவமுதமும், ஒப்பிலாதவரும், வேண்டிய வேண்டியாங்கு கொடுக்கும் வள்ளலாரும், ஊழி முதல் வருமாம் சிவபிரான் அவ்வவர்க் கிசைய அவ்வப்பரிசே அருளுகின்றார் என்பது போதரவே "எப்பரி சாயினு மேத்துமி னேத்தினு லப்பரி சீச னருள் பெறலாமே" என்று கூறப்பட்டது.

நானுநின் றேத்துவ னாடொறு நந்தியைத்
தானுநின் றன்றழற் போலொக்கு மேனியன்
வானுணின் றார்மதி போலுட லுள்ளுவந்
தானினின் றங்கே யுயிர்க்கின்ற வாறே. (௩௭)

(இ-ரை). நானும் என்னந்தியை நாடோறும் துதிப்பேன், அப்போது அக்கினி துல்லிய சரீரியாகிய சிவபிரான் பிரத்தியக்ஷமாவார்; அவர் உடலகத்தே உவந்து நின்று பிரத்தியக்ஷ

மாய் விளங்குமாறு ஆகாயத்திலே உதித்து நிற்கும் பூரண சந்திரன் போலாம்.

(கு-ரை). சிவபிரானுடைய தாணிழலைத் தலைக்கொண்டு அச்சிவபிரானை நேர் நோக்கித் தொழுது துதித்து நிற்கும் மெய்யடியார் உள்ளத்தின் கண்ணே வீணகானத்தையும், சந்திரனையும், தென்றலையும், இளவேனிலையும், பொய்கையையும் ஒத்துக் குளிர்ந்து விளங்குவார் என்பது போதர அருண்மொழித் தேவர்

......................வீங்கிளவே னிறபருவந்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம் போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயாழொலியினதா
யையர் திருவடி நீழ லருளாகிக் குளிர்ந்ததே.

எனவும், திருநாவுக்கரசுநாயனார்

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிளவேனிலு
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீச னெந்தை யிணையடி நீழலே.

எனவும், "மாலை யெழுந்த மதியே போற்றி" எனவும், "வானகத்தில் வளர் முகிலை மதியந் தன்னை" எனவும் கூறிய கருத்துக் கிசையவே, "வானுணின்றார் மதிபோலுட லுள்ளுவந் தானினின் றுங்கே யுயிர்க்கின்ற வாறே" என்று கூறப்பட்டது.

பிதற்றொழி யேன்பெரி யானரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாவுரு வானைப்
பிதற்றொழி யேனெங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் றனே. (௩அ)

(இ-ரை). பெரியாரும், அரியாருமாகிய சிவபிரானைத் துதித்தலாம் பிதற்றுதல் ஒழியேன்; பிறவாத்திருமேனியுடையாரைத் துதிப்ப தொழியேன்; எங்கள் புகழ் படைத்த சிவபிரானைத் துதிப்ப தொழியேன்; பெருந் தபசுடையாரைத் துதிப்ப தொழியேன்.

(கு-ரை). பாலரைப் போல அறவொழிதலும், உன்மத்தரைப்போல ஒருகாற் செய்து ஒருகால் ஒழிதலும், பேய்பிடியுண்டாரைப் போலச் செயலிழப்பின்றி செய்தலுமாகிய குணங்களைப் பொருந்திப் பரமானந்த மேலீட்டினாலே பாடலாடல்களாகிய தொழில்களைச் செய்திடினுஞ் செய்வர்கள் ஞானிகள் என்ற கருத்தினாலே, "பாலருடனுன்மத்தர் பசாசர்குண மருவிப் பாடலினோடாடலிவை பயின்றிடினும் பயில்வர்" என்ற திருவாக்கின் பொருள் ஈண்டுப் "பிதற்றொழியேன்" என்ற சொல்லாற் சூசிப்பிக்கப்பட்டது.

வாழ்த்த வல்லார் மனத் துள்ளூறு சோதியைத்
தீத்தனை யங்கே திளைக்கின்ற தேவனை
யேத்தியு மெம்பெரு மானென் றிறைஞ்சியு
மாத்தஞ் செய் தீச னருட் பெறலாமே. (௩௯)

(இ-ரை). வாழ்த்த வல்லாருடைய மனத்தின் கண்ணே பற்றி நிற்கும் சோதியரும், தீர்த்தரும், ஆங்கே அநுபவிக்கப் பெறுகின்ற தேவருமாயுள்ளாரை (நானும்) துதித்தும், எம்பெருமானென்று வணங்கியும், ஆப்தமாகியும் (விசுவசித்தும்) அதனால் சிவனார் திருவருளைப் பெறலுமாம்.

(கு-ரை). சிவபிரானை உண்ணேக்கி நின்று உருகியொன்றுய சிந்தையோடு வாழ்த்தினால் சிவபிரான் அவ்வன்புடை வாயிலாகக் காரணராம் சிவபிரான் அருளம்மையாரோடு பிரத்தியக்ஷமாவாராக, அவரை அவ்வாறு வாழ்த்துதல் அரிதாம் என்றும், அவ்வாறு வாழ்த்தவல்லாருளரேல் அச்சிவபிரான் அவர் உள்ளத்தின் கண்ணே உள்ளூறககலந்து நிற்பாரென்பது போதர "வாழ்த்த வல்லார் மனத்துள்ளூறு சோதி" என்று உரைக்கப்பட்டது. இந்த அன்போடுதித்த துதியினாலே பிரீதிகொண்டு மெய்யடியார் உருகிய சிந்தையின் கண்ணே சிவபிரான் கலந்து நிற்குங்கால் ஆன்மாக்களுடைய மாயாபாசப்படல மெல்லாம் கிழிந்தொழிந்துபோம் என்பது உணர்த்தற்கே "தீர்த்தன்" என்னும் பதம் பிரயோகிக்கப்பட்டது. ஈண்டுத் "தீர்த்தன்" எனற்பாலது "தீத்தன்" என நின்றது. "தீர்த்தன்காண் டிருமாலோர் பங்கத்தான்காண்" என்றது திராவிட சுருதியுமாமென்க.

குறைந்தடைந் தீசன் குரைகழ லாடு
நிறைந்தடை செம்பொனி னேரொளி யொக்கு
மறஞ்சிடஞ் செய்யாது வாழ்த்தி வல்லார்க்குப்
புறஞ்சடஞ் செய்யான் புகுந்து நின்றனே. (௪0)

(இ-ரை.) சிறுமைகொண்டு நணுகி, சிவபிரான் திருவடியை நாடுமின்; அவ்வாறு நாடில், ஆவர் நிறைந்து அடைந்த செம்பொற் பிரகாச மொத்து விளங்குவர்; மறத்தல் செய்யாது வாழ்த்த வல்லவர்களுக்கு (அன்னியமாய் நின்று) புறமாய் நின்று கபடஞ் செய்யாராய், (அனன்னியமாய்) அகத்தே புகுந்துநின்றார்.

(கு-ரை.) "குறையுடையார் குற்றேவல் கொள்வான்றன்காண்" எனவும், "குறையுடையார் மனத்துளான் குமரன்றதை" எனவும், ஸ்ரீவாகீசப் பெருந்தகையார் அருளியவாறே குறைவுடையாராம் ஏழை அடியார்களுடைய பாபமெல்லாம் போக்கிச் சிவபிரான் உள்ளத்தின் கண்ணே விளங்கியருளுவார் என்ற கருத்தினால், "குறைந்தடைந்தீசன் குரைகழல் நாடும்" என்று உணர்த்தப்பட்டது.

இரண்மய: புருஷோத்ருச்யதே |

"பொன்மயமாயுள்ள சிவபிரான் (புருஷர்) காணப்படுகின்றார்" என்று சாந்தோக்கிய சுருதி முதலியவைகளும், "பொன்னார் மேனியனே" என்றற் றொடக்கத்தனவாகப் போதரும் திராவிட சுருதிகளுங் கூறியவைக்கிசையவே, ஈண்டு "செம்பொனி னேரொளியொக்கும்" என்று குறிக்கப்பட்டது. பொய்யருடைய மனத்தின்கண்ணே சிவபிரான் விளங்காராய்ப் புறம்பாகி, எக்காலத்தும் மறவாது வாழ்த்துகின்ற மெய்யடியாருடைய அறிவின்கண்ணே அகத்தாகி விளங்கி நிற்பார் என்று ஸ்ரீவாகீசப் பெருந்தகையார் "பொய்யர் மனத்துப் புறம்பாவான்காண்" எனவும், "மறவாதே தன்றிறமே வாழ்த்துந் தொண்டர் மனத்தகத்தே யனவரதம் மன்னிநின்ற திறலானை" எனவும் அருளிய திராவிட சுருதிகளுக் கிசையவே, ஈண்டு "மறஞ்சிடஞ் செய்யாது வாழ்த்த வல்லார்க்குப் புறஞ்சடஞ் செய்யான் புகுந்து நின்றனே" என்று கூறப்பட்டது. 'மறஞ்சு'-'மறந்து' என்பதின் போலி; 'மறைந்து' என்பதின் போலியாகக்கொண்டு ஏற்பப் பொருளுரைத்தலுமமையும்.

---

உ

சிவமயம்.

ஸ்ரீஞாநசம்பந்தகுருவேநமஃ

## ஸ்ரீதாயுமானஸ்வாமிகள் திருப்பாடலுரை.

---

முன்முறையிற்பிழைதிருத்தம்.

131-ம் பக்கம் வலப்பாகம் 34-ம வரி.

ஒன்பது கண்டங்களாவன:—சம்புத்தீவு.................... புட்கரத்தீவு. என்பதைக் கீழ்வருமாறு கொள்க.

ஒன்பது கண்டங்களாவன:—

குருகண்டம்.

* * * *

இரணயகண்டம்.

* * * *

இரம்யகண்டம.

* * * *

கேதுமால * இளாவிர்த * பத்திராசுவ

* * *

கண்டம் * கண்டம் * கண்டம்

* * * *

அரிவருஷகண்டம்.

* * * *

கிம்புருஷகண்டம்.

* * * *

பரதகண்டம்.

இவற்றுள் நடுவிலுள்ள இளாவிர்தகண்டம் மேருமலையைச் சூழ்ந்துள்ளது. அதற்கும், அதற்குவடக்கிலுள்ள மூன்று கண்டங்களுக்கும் இடை யிடையில் முறையே, நீலகிரி, சுவேதகிரி, சிருங்ககிரி, என்னும் மூன்று மலைகளும், மேற்கிலுங் கிழக்கிலுமுள்ள ஒவ்வொருகண்டத்திற்கும் இடையில், முறையே கந்தமாதனம், மாலியவான், என்னு மிரண்டுமலைகளும், தெற்கிலுள்ள மூன்று கண்டங்களுக்கும் இடையிடையில் முறையே நிஷதகிரி, ஏமகூடகிரி, இமயகிரி, என்னும் மூன்று மலைகளும் உள்ளன. இவ்வெட்டுமலைகளும் அஷ்டகுல பர்வத மெனப்படும். இந்நவகண்டங்களுங் கூடியதே ஜம்புத்தீபம் அல்லது நாவலந்தீவு என்பது.

---

### மௌனகுருவணக்கம்.

ஆசைநிகளத்தினை நிர்த்தூளிபடவுதறி
யாங்காரமுளையையெற்றி
அத்துவிதமதமாகி மதமாறுமாறுக
வங்கையின் விலாழியாக்கிப்
பாசவிருடன்னிழ லெனச்சுளித்தார்த்துமேற்
பார்த்துப்பரந்தமனதைப்
பாரித்தகவளமாய்ப் பூரிக்கவுண்டுமுக
படாமன்னமாயைநூறித்
தேசுபெறநீவைத்த சின்முத்திராங்குசச்
செங்கைக்குளேயடக்கிச்
சின்மயானந்தசுக வெள்ளம்படிந்துநின்
றிருவருட்பூர்த்தியுான
வாசமுறுசற்சார மீதென்னையொருஞான
மத்தகஜமெனவளர்த்தாய்
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மந்திராசாரியனே! யோக தந்த்ராசாரியனே! திருமூலர்மரபிலெழுந்தருளிய மௌனதேசிகனே! ஆசையாகிய விலங்கைப்பொடியாக்கி, அகங்காரமாகிய முளையைப் பிடுங்கி யெறிந்து, அத்துவிதமாகிய மதத்தையுடையதாய், புறச்சமயங்கள் ஆறும் நதிபோலத் துதிக்கையுமிழும் நீராக்கி, பாசமாகிய விருளைத்தன்னிழலென்று கோபித்து, ஆரவாரித்து, மேலேபார்த்து, பரவியமனதைப் பெருங்கவளமாய், நிறையவுண்டு நெற்றிப்பட்டம் போன்ற மாயையையழித்து, ஒளிபெறநீயமைத்த ஞானமுத்திரையாகிய வங்குசத்தைத்தரித்த திருக்கரத்திலடங்கி, ஞானமயமாகிய பேரின்ப வெள்ளத்தின் மூழ்கி, உனது திருவருளின் நிறைவாகிய வாசயோக்கியமான கூட்டத்தில் என்னையொரு ஞானமதயானை யென்னும்படி வளர்த்தாய். எ-று.

தந்த்ரம்-நூல். திருமூலர் - திருமந்திர மருளிச்செய்த திருமூலநாயனார். ஆறுமதம்:—உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பஞ்சராத்திரம், பாட்டசாரியம் என்பன. மதமாறுமாறுக விலாழியாக்கி யெனறது அவற்றைப் பூர்வபட்சஞ்செய்து என்றபடி. தன்னை யானையெனக் கூறியதற்கேற்ப, ஆசை முதலியவற்றை நிகள முதலியவாக வுருவகஞ்செய்தனர். (க)

ஐந்துவகையாகின்ற பூதமுதனாதமு
மடங்கவெளியாகவெளிசெய்
தறியாமையறிவாதி பிறிவாகவறிவார்க
ளறிவாகநின்றநிலையிற்
சிந்தையறநில்லென் றுசும்மாவிருத்திமேற்
சின்மயானந்தவெள்ளந்
தேக்கித்திளைத்தநா னதுவாயிருக்கநீ
செய்சித்ரமிகநன்றுகாண்
எந்தைவடவாற்பரம குருவாழ்கவாழவரு
ளியநந்திமரபுவாழ்க
எனறடியர்மனமகிழ வேதாகமத்துணி
பிரண்டில்லையொன்றென்னவே
வந்தகுருவேவீறு சிவஞானசித்திநெறி
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) "வடவால நிழற்கீழ் எழுந்தருளிய எமது தந்தையாகிய பரமாசாரியர் வாழ்க. யாவரும் பெருவாழ்வடையவருளிய திருநந்திதேவர் மரபுவாழ்க" என்று அன்பர்கள் மனமகிழும்படி, 'வேதமுடியும சிவாகமமுடியும், தம்முள் முரணுவனவல்ல; ஒப்பனவே' என்று எம்மனோர்க்கருளிச் செய்ய வந்த தேசிகனே! சர்வோத்தமமாகிய சிவஞானமானது சித்

திப்பதற்குரிய மார்க்கத்தைச் சொல்லாது சொல்லுகின்ற குருநாதனே! மந்த்ரகுருவே!..............'ஐந்து வகையாகிய பூதமுதல் நாதமீறுகிய தத்துவங்களையெல்லாம் விளங்க ஆராய்ந்து, அறியாமையுமறிதலு முதலியவற்றைப் பிரித்த திய வல்லவர், அறிவுருவாகநின்ற நிலையிலே நீமனச்சேட்டையறநில்' என்று என்னைச்சும்மா விருக்கச்செய்து,அதன் மேலும் ஞானமயமாகிய ஆனந்த வெள்ளத்தை நிறைத்து அதை நானனுபவித்து, அதன்மயமா யிருக்கும்படி நீசெய்த விசித்திரம் மிகவு நன்று! எ-று.

ஆன்மதத்துவம் இருபத்நான்கும், வித்தியாதத்துவமேழும், சிவதத்துவமைந்தும், ஆகிய முப்பத்தாறினையும், பூமிமுதல் நாதபரியந்தமென்பது வழக்காறுதலால் அவற்றை, 'ஐந்துவகை யாகின்ற பூதமுதல் நாதமும்' என்றார். வேத சிவாகமங்களின் முடிபு ஒன்றே என்பதை "வேதமொடாகம மெய்யா மிறைவனூல், ஓதும்பொதுவுஞ் சிறப்புமென றுன்னுக, நாதனுரையிவை நாடிலிரண்டந்தம், பேதமதென்னிற் பெரியோர்க்க பேதமே" என்னுந் திருமந்திரத்தாலுணர்க. ஸ்ரீகண்ட பரமசிவன், திருநந்திதேவர், சனற்குமாரமுனிவர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதிமாமுனிவர், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதிசிவாசாரியர், என்பது குருமரபாதலால், 'வடவாற் பரமகுரு வாழ்க, வாழவருளிய நந்தி மரபுவாழ்க' என்றார். இம்முறையை, மேல் எந்நாட்கண்ணியில், குருமரபு வணக்கத்தில் ஆசிரியர் விதந்தோதியவாறு காண்க. (உ)

ஆதிக்கநல்கினவ ராரிந்தமாயைக்கெ
னறிவின்றியிடமில்லையோ
அந்தரப்புட்பமுங் கானலின்னீருமோ
ரவசரத்துபயோகமோ
போதித்தநிலையையு மயக்குதேயபயநான்
புக்கவருடோற்றிடாமற்
பொய்யானவுலகத்தை மெய்யாநிறுத்திஎன்
புந்திக்குளிந்த்ரஜாலஞ்
சாதிக்குதேயிதனை வெல்லவுமுபாயநீ
தந்தருள்வதென்றுபுகல்வாய்
சண்மதஸ்தாபனமும் வேதாந்தசித்தாந்த
சமரசநிர்வாகநிலையு
மாதிக்கொடண்டப் பரப்பெலாமறியவே
வந்தருளுஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) ஆறுசமயங்களையுந் தாபிக்கும் பாண்டித்ய நிலையையும், வேதாந்த சித்தாந்தங்களுக்குள்ள சமரசத் தன்மையை நிர்வகிக்கத்தக்க நிலையையும், பெரிய திசையோடுகூடிய உலகமெல்லாம் அறியும்படி எழுந்தருளிவந்து, அடியேனுக் கருளிச்செய்த ஞானதேசிகனே! மந்த்ரகுருவே!............ இந்தமாயைக்கு இத்தனை யேற்றங் கொடுத்தவரார்? இதற்கு (அதிகாரஞ்செலுத்த) என்னறிவையல்லது வேறிடமில்லையோ? நீஎனக்குப்போதித்த வுண்மை நிலையையும், மயக்குகின்றதே. நான் அபயமாகவடைந்த திருவருள் தோன்றாதபடி, அநித்தியமாகிய பிரபஞ்சத்தை நித்தியமாக வலியுறுத்தி, யென்னறிவினிடத்தில் இந்த்ரஜாலவித்தை விளையாடுகின்றதே! ஆகாயத்தாமரையும், கானற்சலமும், ஓர் அவசரத்துக்கு உபயோகப்படுமோ? ஆதலால், இம்மாயையை வெல்லுதற்குமொரு உபாயத்தை நீரநுக்கிரகிப்பது எந்நாள்? சொல்வீராக, எ-று.

சண்மதங்களாவன:—வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம், என்பன. இவற்றை 'அறுவகைச் சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளாய்' என்னுஞ் சித்தியார்த் திருவிருத்தத் துரையாற்காண்க. மாயை தனுகரண புவன போகங்களுக்குக் காரணமாயுள்ளது. மாயைநித்தியமாயினும் அதன்காரியமாகிய பிரபஞ்சம் நிலையாமை யுடையதாதலால், 'பொய்யானவுலக' மென்றும், அதை மெய்யென்று கொள்வது வியர்த்தமென்பார், 'அந்தரப்புட்பமுங் கானலின்னீருமோரவசரத்துபயோகமோ' என்றுங்கூறினர். மயக்குது, சாதிக்குது, என்பன மரூஉ; 'ஏங்குதே நெஞ்சம்' என மேல் வருவதுமிது. (௩)

மின்னனையபொய்யுடலை நிலையென்றுமையிலகு
விழிகொண்டுமையல்பூட்டு
மின்னார்களின்பமே மெய்யென்றும்வளர்மாட
மேல்வீடுசொர்க்கமென்றும்
பொன்னையழியாதுவளர் பொருளென்றுபோற்றியிப்
பொய்வேடமிகுதிகாட்டிப்
பொறையறிவுதுறவீத லாதிநற்குணமெலாம்
போக்கிலேபோகவிட்டுத்
தன்னிகரிலோபாதி பாழ்ம்பேய்பிடித்திடத்
தரணிமிசைலோகாயதன்
சமயநடைசாராமல் வேதாந்தசித்தாந்த
சமரசசிவாநுபூதி
மன்னவொருசொற்கொண் டெனைத்தடுத்தாண்டன்பின்
வாழ்வித்தஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மின்னலையொத்த நிலையாமையுடைய வுடம்பை நிலையுள்ளதென்றும், மையுண்டு விளங்கும் கண்களைக்கொண்டு, காமவிலங்கிடுகின்ற மாதரைக்கூடுதலே பேரின்பமென்றும், உயர்ந்த மாளிகைகளின் மேலுப்பரிகைகளே சுவர்க்கலோகமென்றுங் கொண்டு, செல்வத்தை யழியாமல் வளர்கின்ற பொருளென்று காத்து, இப்பொய்க்கேற்ற வேடத்தை மிகவும்பூண்டு, பொறுமை, அறிவு, துறவு, ஈகைமுதலிய நற்குணங்களையெல்லாம் விபரீதவழியிற் செல்லவிட்டு, தனக்கொப்பில்லாத லோபமுதலிய கொடிய பிசாசுகள் பிடித்துக்கொள்ள, பூமியில் உலோகாயதனுடைய சமயவொழுக்கத்தை நான்சேராமல் அன்பாற்றடுத்து, வேதாந்த சித்தாந்த சமரசபாவமாகிய சிவாநந்தாநுபவ நிலையையடையும்படி, ஒரு சொல்லால் ஆட்கொண்டு என்னை வாழச்செய்த ஞானதேசிகனே! மந்த்ரகுருவே! எ-று.

உலோகாயிதன் 'தேகமே ஆன்மாபோகமே முத்தி' என்பவன். "ஒருசொறகொண்டு" என்பதை 'ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும்' எனவும், 'உன்னஞ்ச மகிழ்ந்தொருசொ லுரைத்தனேயே' எனவும், மேலுங் கூறுவதனுற் காண்க. (ச)

போனகமிருக்கின்ற சாலையிடைவேண்டுவே
புசித்தற்கிருக்குமதுபோற்
புருஷர்பெறுதர்மாதி வேதமுடனுகமம்
புகலுமதினுலாம்பயன்
ஞானநெறிமுக்யநெறி காட்சியனுமானமுத
னுனுவிதங்கடேர்ந்து
நானுனெனக்குளறு படைபூடைபெயர்த்திடவு
நான்குசாதனமுமோர்ந்திட்
டானநெறியாஞ்சரியை யாதிசோபானமுற்
றணுபக்ஷசம்புபக்ஷம்
ஆமிருவிகற்பமு மாயாதிசேவையு
மறிந்திரண்டொன்றென்னுமோர்
மானதவிகற்பமற வென்றுநிற்பதுநமது
மரபென்றபரமகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மடைப்பள்ளியில் உண்ணுதற்கு வேண்டிய பொருள்களிருப்பதுபோல, மக்களடைதற்குரிய அறமுதலிய புருஷார்த்தங்களை வேதசிவாகமங்கள் கூறுநிற்கும். அதனுலாகும் பயனையும், ஞானநெறியாகிய முக்கிய நெறியையும், பிரத்தியக்ஷம் அநுமானமுதலிய பலவகை அளவைகளையும் ஆராய்ந்து, நான் நான் என அகங்கரிக்குங் குழறுபடையை யொழித்திடவும் சாதன சதுஷ்டயத்தை யுணர்ந்து, முத்திக்குநேர் வழியாகிய சரியை முதலிய சௌபானங்களை யடைந்து, அணுபக்ஷம் சம்புபக்ஷமென்கிற பேதங்களையும், மாயை முதலியவற்றின் சேவையையுந் தெளியவுணர்ந்து, இரண்டொன்று என்னும் மனோவிகற்ப மொழிய வெற்றிகொண்டு நிற்பதுவே நமது மரபென்றருளிச்செய்த பரமாசாரியனே! மந்தர குருவே! எ-று.

வேதம் அறம்பொருளின்பம் வீடென்னும் புருஷார்த்த நான்கையும், ஆகமம் அவற்றுள் வீடொன்றினை மாத்திரமுங் கூறுமென்க. சாதன சதுஷ்டயமாவன:—நித்யாநித்யவஸ்து விவேகம், இகமுத்தார்த்த பலபோக விராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்பன; இவற்றை யடைந்தபின்னரே சரியையாதிகளுக்கு அதிகாரியாந்தன்மை போதருமென்பதை "நான்குசாதனமுமோர்ந்திட்,டானநெறியாஞ்சரியை யாதி சோபானமுற்று" என்பதனுல் உய்த்துணர்ந்தகொள்க. சோபானம்-படிக்கட்டு. அணுபக்ஷம் - ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட்டடையு நெறி; சம்புபக்ஷம்-இறைவன் திருத்த அவை பக்குவப்பட்டடையு நெறி. மாயை முதலிய தத்துவங்கள் இறைவனுக்குப் பரிக்கிரக சத்திகளாதலின், அவை அவ்விறைவன் திருக்குறிப்பைநோக்கி நிற்குநிலையினைமாயாதி சேவையென்முர். "ஒன்ருகாமலிரண்டாகாமல், ஒன்று மிரண்டு மின்ருகாமல்" என்பது அத்துவித இலக்கணமாதலின் 'இரண்டொன்றென்னு மோர் மானதவிகற்பமற' என்முர். 'என்றும் நிற்பது நமது மரபென்ற' என்று கொள்ளினுமமையும். (இ)

கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
கருணைசிறிதேனுமில்லாக்
காட்சியுங்கொலைகளவு கட்காமமாட்சியாக்
காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாதபொய்ம்மொழியு மல்லாதுநன்மைகள்
பொருந்துகுணமேதுமறியேன்
புருஷர்வடிவானதே யல்லாதுகனவிலும்
புருஷார்த்தமேதுமில்லேன்
எல்லாமறிந்தநீ யறியாததன்றெனக்
கெவ்வண்ணமுய்வண்ணமோ
இருளையிருளென்றவர்க் கொளிதாரகம்பெறு
மெனக்குநின்னருடாரகம்
வல்லானெனும்பெய ருனககுள்ளதேயிந்த
வஞ்சகனையாளநினையாய்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மந்த்ரகுருவே!..................(பதி நூற்களைக்) கல்லாத அறிவும், கேளாத கேள்வியும், சிறிதாயினுந் தயையில்லாத தோற்றமும், கொலை, களவு, கள், காமம், இவற்றையே யுரிமையாக விரும்புமனமும், கொடிதாகிய பொய்வார்த்தையும், அல்லாமல் நன்மை பொருந்திய குணங்கள் யாதுமறியேன். புருஷரூபங்கொண்டதே யன்றிச் சொப்பனத்திலும் புருஷார்த்தஞ் சிறிது முடையவனல்லேன். இது யாவுமறிந்த நீயறியாததன்று. எனக்கு உய்யும் வகை யெவ்வாறே அறியேன். இருளை யிருளென்று கொண்டவர்களுக்கு ஒளியானது ஆதாரமாகும்; அதுபோலவுன்னையடைந்த எனக்கு உன்திருவருளே யாதாரமாகும். எல்லாம் வல்லவனென்னும் திருநாமம் உனக்கேயுள்ளது. ஆதலின், இந்தவஞ்சகனை யாண்டருள நினைவாயாக. எ-று.

"பசு நூல்கற்கும் பிச்சரைக்காணுகண்," "அறிவு நூல் கல்லாதுலக நூலோதுவதெல்லாங் கலகலகூஉந்துணை" என்பராதலால், பதிநூற்களைக்கல்லாத அறிவென்று பொருள் கூறப்பட்டது. (சு)

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
கண்காணமதயானைநீ
கைகாட்டவுங்கையா னெகிடிக்கெனப்பெரிய
கட்டைமிகவேந்திவருமே
போனகமமைந்ததென வக்காமதேனுநின்
பொன்னடியினின்றுசொலுமே
புவிராஜர்கவிராஜர் தவராஜனென்றுனைப்
போற்றிஜயபோற்றியென்பார்
ஞானகருணைகர முகங்கண்டபோதிலே
நவநாதசித்தர்களுமுன்
நட்பினைவிரும்புவார் சுகர்வாமதேவர்முதன்
ஞானிகளுமுனைமெச்சுவார்

வானகமுமண்ணகமும் வந்தெதிர்வணங்கிடுமுன்
மகிமையதுசொல்லவெளிதோ
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மந்த்ரகுருவே!............உமது அருள் நோக்கம் பட்டால் காட்டில் சஞ்சரிக்கின்ற புலி பசுவோடுகூடி விளையாடும். நீர் கைகாட்டின வளவில், தீ மூட்டத்திற்காகப் பெரிய மரக்கட்டைகளை மதயானை துதிக்கையால் அன்போடு சுமந்து வரும். அந்தக் காமதேனுவானது, உமது பொன்னடியின்கீழ் நின்று, உணவு சித்தமாயிருக்கிறதென்று விண்ணப்பிக்கும். புவிவேந்தர்களும், கவிவேந்தர்களும், உம்மைத் தவவேந்தரென்று துதித்து, ஜெயவிஜயயீபவ! எம்மைக்காத்தருள்க! என்பார்கள். ஞானத்துக்குங் கருணைக்கு மிருப்பிடமாகிய உமது திருமுகத்தைக்கண்ட மாத்திரத்தில், சத்தியநாதர் முதலிய வொன்பது சித்தர்களும், உமது நட்பை விரும்புவார்கள். சுகர், வாமதேவர் முதலிய ஞானிகளும், உம்மைக் கொண்டாடுவார்கள். விண்ணுலகத்தாரும், மண்ணுலகத்தாரும், வந்து எதிரேநின்று தொழுகின்ற வுமது பிரபாவமானது சொல்லற் கெளிதாமோ! ஆகாது. எ-று.

அருட்செல்வராகிய தம்முடைய பரமாசாரியர் சந்நிதானப் பெருமையைக்கூறிய முகத்தால் சிவஞானிகளுக்குள்ள, எல்லாம் வல்ல தன்மைவிளக்கிய வாருயிற்று. "விரும்புந் திருத்தில்லை யம்பலத்தானருண மேவிலொரு, திரும்பும் படைத்தளிக்கும் மகிலாண்டத்தொகுதியையே" என்றுபிறர் கூறியவாறுங் காண்க. (எ)

சருகுசலபக்ஷணிக ளொருகோடியல்லாற்
சகோரபக்ஷிகள்போலவே
தவளநிலவொழுகமிர்த தாரையுண்டழியாத
தன்மையரனந்தகோடி
இருவினைகளற்றிரவு பகலென்பதறியாத
வேகாந்தமோனஞான
இன்பநிஷ்டையர்கோடி மணிமந்த்ரசித்திநிலை
யெய்தினர்கள்கோடிசூழக்
குருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின்மிசை
கொலுவீற்றிருக்குநின்னைக்
கும்பிட்டனந்தமுறை தெண்டனிட்டென்மனக்
குறையெலாந்தீரும்வண்ண
மருமலரெடுத்துனிரு தாளையர்ச்சிக்கவெனை
வாவென்றழைப்பதெந்தாள்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மந்த்ரகுருவே!............உலர்ந்த இலைகளையும், நீரையுமுண்டு, தவஞ்செய்பவர்க ளொருகோடியும், அல்லாமல், சகோரபக்ஷிகளைப்போல வெண்மையாகிய மதியினின் றொழுகுகின்ற அமிர்ததாரையையுண்டு, அழியாநிலைபெற்ற யோகிக ளநேககோடியும், இருவினைகளுநீங்கி, இராப்பகலென்பதை யுணராமல், தனிமையில் மௌன நிலையோடிருந்து, சுகமயமாகிய ஞானநிஷ்டையுடையவர்க ளொருகோடியும், மணிமந்த்ரசித்தி நிலைகளை யடைந்தவர்க ளொருகோடியும், சூழ்ந்திருப்ப மாணிக்கமிழைத்த சிம்மாசனத்தின்மீது திருவோலக்கமாக வெழுந்தருளியிருக்கு மும்மை யென்மனக் குறையெல்லா மொழியும்படி கைகுவித்து, அநேகமுறை நமஸ்கரித்து, மணம்பொருந்திய மலர்களைக்கொண்டு, உமதிரண்டு திருவடிகளையு மர்ச்சிக்கும்படி, அடியேனை வாவென்று தேவரீர் அழைத்தருள்வது எந்நாளோ! எ-று.

சகோரபக்ஷி - நிலாமுகிப்புள்; இது சந்திரிகையையுண்டுயிர்வாழ்வது. "தண்ணிலாவுக்கொண் சகோரமென நின்றவன்" என்பதனாலுங் காண்க. யோகத்திருப்போர் மதிமண்டல வமுதத்தை யுண்டு கொண்டிருப்பவராதலால், அவர்களுக்குச் சகோரபக்ஷியை உவமித்தார். (அ)

ஆங்காரமானகுல வேடவெம்பேய்பாழ்த்த
வாணவத்தினும்வலிதுகாண்
அறிவினைமயக்கிடு நடுவறியவொட்டாதி
யாதொன்றுதொடினுமதுவாய்த்
தாங்காதமொழிபேசு மரிகரப்பிர்மாதி
தம்மொடுசமானமென்னுந்
தடையற்றதேரிலஞ் சுருவாணிபோலவே
தன்னிலசையாதுநிற்கும்
ஈங்காரெனக்குநிக ரென்னப்ரதாபித்
திராவணாகாரமாகி
இதயவெளியெங்கணுந் தன்னரசுநாடுசெய்
திருக்குமிதனுடனேநேரமும்
வாங்காநிலாதடிமை போராடமுடியுமோ
மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மௌனோபதேசகுருவே! மந்த்ரகுருவே!...... ............அகங்காரமென்கின்ற குலவேடரையொத்த கொடியபேயானது, பாழான ஆணவத்தினும் வலியது. அது என்னறிவை மயக்கும்; நடுவு நிலைமையை யறியவொட்டாது; யாதொரு பொருளைப்பற்றினு மதன்மயமாய் நின்று சகிக்காமல் வார்த்தை சொல்லும்; அரியரப்பிர்ம்மாதிகளோடு நான் சமமாவேனென்னும்; தடையறச் செல்லுந் தேரினச்சாணியைப்போலத் தன்னிடத்தசையாமல் நிற்கும்; இவ்வுலகத்திலென்னை யொப்பார் யாவரென்று வீரம்பேசியிராவணருபங்கொண்டு, இதயாகாசமெல்லாந் தன்னரசு நாடாகச்செய்து கொண்டிருக்கும். இதனுடனெப்போது நீங்கிநில்லாமலுனதடிமையாகிய நான் போராடிக்கொண்டிருக்க முடியுமோ (முடியாது). எ-று.

ஆதலாலிதனை யொழித்தருள்வாயாக வென்பதுகுறிப்பெச்சம். "ஒருபொருளுங்காட்டா திருளுருவங்காட்டும், இருபொருளுங் காட்டாதிது" என்பது ஆணவத்தன்மையாதலால் பாழ்த்தவாணவமென்றார். (கூ)

(இன்னும்வரும்.)

---

# உண்மை விளக்கம்

## எனும்

# சித்தாந்த தீபிகை.

1897௵ டிசம்பர்ீ 21உ

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுரவேநம:

## சிதம்பர இரகசியம்.

(உடு) அநாதிமுத்த சித்துருவாகிய இறை சுவயம்பிரகாசமாய்த் தன்னுண்மையினிற்குந் தன்மையில் சிவம் எனவும், உலகெலாமாகி வேருயுடனுமாய் உயிர்களின் வழிநிற்குந் தன்மையில் சத்தி எனவும் இருதிறப்பட்டு, பின் பராசத்தியோடிசைந்து சிருட்டியாதி பஞ்சகிருத்தியஞ் செய்யுந் தன்மையில் பதி எனவும் பெயர் பெற்றுநிற்கும். இந்தச் சிவம் பதி என்னும் ஈரியல்பையுற்றுச் சர்வஞானோத்தரம்,

(91) பதிச்சகிம் விதோஞேயஃ சாதிகாரப தேஸ்திதஃ | சிவச்சகீதிருச: ப்ரோக்தோ யோதிகார விவர்ச்சித: |

(பராசத்தியோ டிசைந்து பஞ்சகிருத்திய) அதிகாரத்து நிற்கும் அவசரத்துப் பதி எனவும், அவ்வதிகாரமெலா மொழிந்து நிற்கும் அவசரத்துச் சிவம் எனவும் பெயர் போதரும் என்று போதித்த வாருயிற்று. சைவபுராணம்,

(92) விச்வதாத்ரீத்வஜாக்யாச சைவீ சித்ப்ரக்ருதி:ஸ்ம்ருதா |

உலகங்களுக்கெல்லாம் தாயாரும், பிறவாதவரும், ஞானப்பிரகிருதி (சித்பிரகிருதி) யாயு முள்ளார் சிவை (பராசத்தி) என்றும்,

(93) யாமாது: பரமம் வ்யோம பர:ப்ரக்ருதி யோகத: | பரப்பிரகிருதி யோடிசைந்து நின்றமைபற்றி அந்தச் சாங்கியாதீதை பரமவியோமம் (பரமாகாசம்) எனப்படும் என்றும், கூர்மபுராணம்

(94) த்வயைவ சங்கதோ தேவா: ஸ்வாத்மாநந்தம் சமச்நுதே | த்வமக்ஷரம் பரம்வ்யோம மதச் சோதிர் நிரஞ்சநம் |

பராசத்தியாம் உம்மோடிசைந்தே சிவனார் ஆனந்தம் அடைந்தார், (நீவிரே) பாசரகிதராகிய பெருஞ் சோதியினராய்ப் பரமவியோமம் பரமாகாசம் எனப்படுபவருமாம் என்றும்,

(95) யோகிநாம ம்ருதம் ஸ்தாநம் வ்யோமாக்யம் பரமக்ஷரம் | ஆநந்த மைச்வரந்தாம சாகாஷ்டா ஸா பராகதி: |

யோகிகளுடைய அமிருதமாம் ஸ்தானம் ஆனந்தைசுவரிய கோசமும் (பொக்ஷ கிரகமும்) அக்ஷரமுமாயுள்ள பரமவியோமம் (பரமாகாசம்) எனப்பெயர் பெறும் என்றும் இதுவே முடிந்த எல்லையாம் என்றுங் கூறிற்று. ஆனந்தைசுவரியம் என்றது சர்வஞ்ஞதாதி மங்கல குணங்களி னீங்காத சிவசத்தியின் பெயராய்ப் போந்த தென்பது மேலே உதகரித்த அதர்வசிகோபநிடத உபப்பிருமமணங்களாலே அறியப் படுதலால், பரமவியோமம் என்றது அப்பராசத்தியின் பெயராயே முடிந்ததாமென்க. கூர்மரால் எடுத் தாளப்பட்ட பௌதிகமாகிய சகுணம் சாங்கியமாகிய நிர்க்குணம் என்னும் இரண்டு பாவனைகளின் மேலாய் நின்ற அத்தியாசிரம பாரமேச்வரி எனப்படும் பாவனை இந்தப் பிராம்மியாகிய பரமவியோகத்திலே முற்றுமாமெனவும் ஓர்க.

(உசு) உலகங்களையெல்லாம் சிருட்டியாதி பஞ்சகிருத்தியஞ் செய்து பாலிக்கும் பொருட்டேனும், மெய்யன்பர்கள் தம்மை உபாசித்து உய்யும் பொருட்டேனும், சிதம்பர சத்தியாம் பரமானந்த ஆகாயமத்தியிலே இருப்பவராகக்கொண்டு அதர்வசிகோபநிடதம்

(96) சர்வைச்வர்ய சம்பந்ந: சர்வேச்வர: சம்புராகாசமத்யே த்யேய: |

சர்வஞ்ஞதாதி கல்யாணகுணங்களை யுடைமையால் சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், சம்புவுமாயுள்ளார் ஆகாசமத்தியிலே தியானிக்கற்பாலர் என்று கூறியதாம் என்றும், பிரபஞ்சத்தை யெல்லாஞ் சிவபிரான் தமது பராசத்தித் துவாரமாக நின்றே சிருட்டியாதி கிருத்தியஞ் செய்து உயிர்களை ரக்ஷிப்பார் என்றுங் கொண்டு, அந்த அதர்வசிகோபநிடதப் பொருளுக்கிசைய ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் "உடையாணடுவு ணீயிருத்தி" என்று திருவாய்மலர்ந்தருளினார்என்றும், இப்பொருள்கொண்டே உய்யவந்ததேவநாயனார்

> ..............................நாடனைத்து
> நங்கையினாற் செய்தளிக்கு நாயகனு—நங்கையினு
> நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகா
> ணெம்பெரு மானார் தமியல்பு.

என்றும் அருள, தைத்திரீய பிரமானந்தவல்லி

(97) யோவேத நிகிதம் குகாயாம் பரமேவ்யோமந் |

"எவர் தமது உள்ளக் குகையின்கண்ணே (சிதம்பர) பரமாகாயத்தில் இருப்பவராகப் (பரசிவ) பிரமத்தைத் தேர்கின்றாரோ" என்றுந் தொடங்கிக் கூறிப் போந்தது. இவ்வாறு இதயமாகிய உள்ளக்குகையின்கண்ணே சிதாகாயத்து ஆனந்த பரப்பிரம நடனவிலாசத் தானந்தத்தை உணர்த்திய உபநிடதங்களுக் கியையத் திருஞானசம்பந்த நாயனார் தமது திராவிட சூக்தத்திலே

> கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
> பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
> நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலுஞ்
> சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே.

என்று திருவாய்மலர்ந்தருளிய பொருளைச் சேக்கிழார்நாயனார்

> ஒன்றுவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோல
> மன்றினுன் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி
> நின்றுநீ யாடல செய்கை நினைப்பதே நியம மாகு
> மென்று பூம்புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட.

என்று இங்ஙனம் விளக்கியருளினர். பிருதிவியாதி தத்துவ சமூகங்களெல்லாம் சிவபெருமானுக்கு ஸ்தூல சரீரமும், ஆன்மா சூக்குமசரீரமும் சிவசத்தியார் அதிசூக்கும சரீரமாம் (ஆகாய சரீரமாம்) என்ற கருத்தினுலன்றே, பிருகதாரணியோப நிடதமும் தைத்திரீயோபநிடதமும்

(98) ஆகாச ஏவ யஸ்யாயதநம் |
ஆகாச சரீரம் ப்ரம்ம |

பிரமத்துக்கு ஆகாயந்தான் (சிசம்பரந்தான்) ஆலயம் (சரீரம்) என்றும், அப்பிரமம் ஆகாய சரீர முடையது என்றும், கூற, மைத்திராயணுப நிடதம்

(99) ஹ்ருத்யாகாச மயம் கோச மாநந்தம் பரமாலயம் |

இந்தப் பிரமம் இதயத்துள்ள ஆகாச மயமும், கோசமும் (சர்வ கல்யாண குண பொக்ஷமும்), ஆனந்தமும், பரமாலயமுமாம் (சிவாலயமுமாம்) என்று கூற, இரத்தினத்திரய பரீக்ஷையுடையார்

(100) யஸ்ய ஸாபரமா தேவீ சக்திராகாச சம்ஞிதா |

"சிவபெருமானுடைய பராசத்தியார் ஆகாயம் என்னும் பெயர் பெறுவர்" என்று கூர்ம புராணப் பிரமாண மெடுத்துக் கூறினராக, கோயிற்புராணம் வாயிலாக உமாபதி சிவாசாரியர்

அத்தன் பரதத் துவனித் தநடத்
தமரும் பொதுவின் பெயர் மன்றமலஞ்
சத்தும் பரிரண் மயகோ சமகந்
தனிபுண் டரிகங் குவைகண் ககனஞ்
சுத்தம் பரமற் புதமெய்ப் பதமச்
சுழுனு வழிஞா னசுகோ தயநற்
சித்தம் பரமுத் திபரப் பிரமந்
திகழுஞ் சபைசத் திசிவா லயமே.

என்று அருளிச் செய்ய, சிதம்பர மான்மியம் வாயிலாகச் சூதாசாரியர்

(101) யத்ர ந்ருத்யதி தேவேச: பரமாநந்த விக்ரக: | தஸ்ய தேசஸ்ய நாமாநி ச்ருதாந் யேதாநி பூதலே | அமலம் சத் பரம் நித்யம் மகாந் கோசோ ஹிரண்மய: | அந்த: புரம் விவிக்தஞ்ச புண்டரீகம் குகாவரம் | ககநம் பரிசுத்தஞ்ச பரமத்புத முத்தமம் | சத்தி யாஸ்பதம் சுசும் நாயா மாத்ம ஞாந சுகோதய: | சிதம்பரம் சுவ முக்திச்ச லக்ஷ்த் ப்ரம்ம சுரோத்தம | சக்திச்ச மகதி திவ்யா விபுலச்ச சிவாலய: |

என்று கூறிய சுலோகங்களால் தத்துவா தீத சிவபிரான் அனவரததாண்டவத்திலே திருவுளம் பொருந்தப் பெற்ற அம்பலத்தின் (சிதம்பரத்தின்) பெயர்களாவன சத்து, பரம், நித்தியம், இரண்மய கோசம், மகத்து, விவிக்தம், புண்டரீகம், குகை, ககனம், பரிசுத்தம், அற்புதம், சத்தியமாயதநம் (சத்தியாஸ்பதம்) ஞானனந்தம் (ஞானசுகம்), சிதம்பரம், பரப்பிரமம், சபை, சத்தி, சிவாலய முதலியவாம் எனச் சொல்லியருளினர். சத் என்னும் பதம் சாமவேதிய சாந்தோக்கியோபநிடதத்து ஆறுவது பிரபாடகத்து முதலாம் கண்டத்து முதன் மந்திரத்திலும், பரம் என்னும் பதம் கிருஷ்ணயசுர்வேதிய சுவேதாசுவதரோப நிடதத்து மூன்றும் அத்தியாயத்து ஏழாம் மந்திரத்தினும், இரண்மயகோசம் என்பது இரண்டாவது முண்டகத்து இரண்டாம் கண்டத்து ஒன்பதாம் மந்திரத்தினும், மகத்து என்னும் பதம் வாசசநேயபிருகதாரணியோபநிடதத்து நான்காம் அத்தியாயத்து நான்காம் பிராம்மணத்துப் பன்னிரண்டாம் மந்திரத்தினும், விவிக்தம் (தனி) என்னும் பதம் கைவல்லியோப நிடதத்து ஒன்பதாம் மந்திரத்தினும், புண்டரீகம் என்னும் பதம் கைவல்லியோபநிடதத்துப் பதினெராம் மந்திரத்தினும், சாந்தோக்கியோப நிடதத்து எட்டாம் பிரபாடகத்து முதலாங் கண்டத்து முதலாம் இரண்டாம் மந்திரங்களினும், மகாநாராயணுேபநிடதத்துப் பத்தாம் பிரிவின் ஏழாம் மந்தரத்தினும், குகை என்னும் பதம் தைத்திரீயோபநிடதத்துப் பிரமானந்தவல்லி முதலாம் அனுவாகத்தினும், ககனம் என்னும் பதம் மகாநாராயணுேபநிடதத்துப் பத்தாம் பிரிவின் ஏழாம் மந்திரத்தினும், சுத்தம் என்னும் பதம் பிருகதாரண்ணியோப நிடதத்து ஏழாம் அத்தியாயத்துப் பதினன்காம் பிராம்மணத்து எட்டாம் மந்திரத்தினும், அற்புதம் என்னும் பதம் மகாநாராயணுேப நிடதத்து இரண்டாம் பிரிவின் ஏழாம் மந்திரத்தினும் கைவல்லியோப நிடதத்து இருபத்து மூன்றும் மந்திரத்தினும், சத்தியமாயதனம் (சத்தியாஸ் பதம்) என்னும் பதம் தலவகாரோப நிடதத்து நாலாம் கண்டத்து எட்டாம் மந்திரத்தினும், ஞானனந்தம் என்னும் பதம் தைத்திரீயோப நிடதத்துப் பிரமானந்த வல்லியிலும், பரமவியோமம் (சிதம் பரம்) என்னும் பதம் தைத்திரீயோப நிடதத்துச் சிக்ஷாவல்லி பிரமானந்தவல்லி பிருகுவல்லி களினும், சபா என்னும் பதம் சாந்தோக்கியோப நிடதத்தினும், சத்தியம் என்னும் பதம் சுவேதாசுவதரோப நிடதத்து ஆறும் அத்தியாயத்து எட்டாம் மந்திரத்தினும், பரமாலயம் (சிவாலயம்) என்னும் பதம் தைத்திரீயோபநிடதத்து ஆறுவது பிரபாடகத்து இருபத்தேழாம் மந்திரத்தினும் காணப்படுவனவாம். சிகரிணிமாலையுடையார் "இருதயகமலம் இரவி விம்ப முதலிய எவ்வெவ்விடங்களில் சிவபெருமானைத் தியானிக்கினும் அவ்வவ்விடங்கள் அனைத்தினும் சோதிமயமாகிய கைலாசத்தை விபாவித்து, அதன் மத்தியிலிருப்பவராகச் சிவபெருமானைத் தியானிக்க" என்னுங் கருத்தோடு

(102) ஹ்ருதயகமல ரவிவிம்பாதிசு யத்ர யத்ர சிவஸ்ய த்யாநந் தத்ர சர்வத்ராபிச் யோதிர்மயம் கைலாசம் விபாவ்ய தந்மத்ய விருத்திவேந சிவோத்யேயஃ |

என்று கூறியது போல, தானியாகுபெயரால் சிதம்பரம் எந்நாளும் நீக்கமின்றி விளங்கும் சேதன அசேதனங்களும் அவ்வப்பெயர் பெறுமாமென்பது தெளியப்படுகின்றது. இதுபற்றியே திருமூலநாயனர் "அம்பலமாவது சராசரம் என்றும், அம்பலமாவது சிவன்றிருவடி என்றும், அம்பலமாவது அப்புத் தேயு மண்டலங்களாம் என்றும், அம்பலமாவது ஸ்ரீபஞ்சாக்ஷரம்" என்றுங்கொண்ட பொருளினல்

அம்பல மாவ தகில சராசர
மம்பல மாவது வாதிப் பிரானடி
யம்பல மாவது வப்புத்தீ மண்டல
மம்பல மாவது வஞ்செழுத் தாமே.

என்றருளிச் செய்தார். சாந்தோக்கியோபநிடதத்து எட்டாவது பிரபாடகத்திலே "பிரமபுரமாகிய இச்சரீரத்திலேயுள்ள தகரமாகிய (சூக்குமமாகிய) புண்டரீக வீட்டினுள்ளேயிருக்கும் ஆகாயத்தை நாடவேண்டியது" என்பது முதலாகத் தகரவித்தை சொல்லப்பட்டதன்றோ. இந்தஇதயத்துள்ள அந்தராகாசம் எனப்படும் இந்தச் சூக்குமாகாசத்தின் இடைவெளி மிகு நுண்ணியதாயினும் பூமி, ஆகாயம், அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், மின்னல், நக்ஷத்திர முதலியவாய்ப் புறத்தே யுள்ளனவும் இல்லனவுமாய எவையெல்லாம் சேரினும், அவையெல்லாம் அடங்கிநிற்கும் அத்துணை விரிவுடைய ஆகாயசத்தாம் என்பது போதா, அச்சாந்தோக்கியோபநிடதம்

(103) அயமாகாசஸ்தாவா ேசோந்தர் கிருதய ஆகாச உபே அஸ்மிந் த்யாவா பருதிவீ அந்தரேவ சமாகிதே உபாவக்நிச்ச வாயுச்ச சூர்யாசந்த்ர மசாவுபௌ வித்யுந்நக்ஷத்ராணி யச்ச ஸ்யேகாஸ்தி யச்சநாஸ்தி சர்வம் தத்ஸ்மிந் சமாகிதமித |

என்று கூறிற்று. மனவாசகங் கடந்தார்

தோற்றந் துடியதனிற் றோயுந்திதி யமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய வமுக்கியருள் டானெடுத்து—நேயத்தா
லாநந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதந் தான்.

என்றருளிய திருவாக்கினுல் ஆகாசத்துச் சிவத்தைப் பிரியாத பரையடியாம் என்பது பெறப்பட்டதாயிற்று. ஸ்ரீவாகீசர் "வானைக் கடந்தண்டத் தப்பால் மதிப்பன.............. ஐயாற னடித்தலமே" என்றும், "அரைமாத்திரையி லடங்குமடி அகலமளக்கிற் பாரில்லாவடி" என்றும், "மூசுவண்டறை பொய்கையும் போன்றதே யீசனெந்தை யிணையடிநீழலே" என்றும், "சிறுமானேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங்கிறுமாந்திருப்பன் கொலோ" என்றும், "தேடிக்கண்டுகொண்டேன் திருமாலொடு நான்முகனுந் தேடித் தேடொணுத் தேவனையென்னுள்ளே தேடிக்கண்டு கொண்டேன்" என்றும், "மாடமாளிகை சூழ் தில்லையம்பலத் தாடிபாதமென் னெஞ்சுளிருக்கவே" என்றும், ஸ்ரீஞானசம்பந்தர் "உலகேத்தச்செய்யானுறை கோயில் சிற்றம்பலந்தானே" எனவும், "சிற்றம்பலமேய விறைவன் கழலேத்து மின்பமின்பமே" என்றும், "சிற்றம்பலமேத்த மாணுநோ யெல்லாம் வாளா மாயுமே" என்றும், "சிற்றம்பலமேய நட்டப்பெருமானை நாளுந் தொழுவோமே" என்றும், திருவள்ளுவநாயனுர் "மலர்மிசையேகினுன் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்" என்றும், ஸ்ரீமூலநாயனுர் "தன்னையறியத் தனக்கொரு கேடில்லை" என்றுங் கூறிய திருவாக்குக்களாலும் இவைபோன்ற மற்றைய நாயன்மார் வாக்குக்களாலும், சிவத்தை நாடுக என்றேனும், சிவன் திருவடியை நாடுக என்றேனும், (சிற்றம்பலத்தை) நாடுக என்றேனும், சிற்றம்பலத்துமேய திருவடியை நாடுக என்றேனும், சிற்றம்பலமேய நட்டப்பெருமானை நாடுக என்றேனும், தன்னை நாடுக என்றேனும், சிற்றம்பலமேய நட்டப்பெருமானடியை நெஞ்சுள்ளே நாடுக என்றேனும் பொருள்பட நிற்பனவாக, வைதிக சைவர்கள் சிற்றம்பலம், நட்டப்பெருமான், நெஞ்சு, ஆன்மா, அருள், திருவடி, சிதம்பரம், சிவம் என்பவைகளுள் ஒன்றையேனும் கெடுக்காது, அதற்கிசைய வைதிகசைவ வேதவியாசர் சூதாசாரியர் முதலாயினோர் கருத்துக்கு மாறுபடாத பொருள் கொள்ள வல்லுநரே யாவர். ஏகான்மவாதிகளாகிய மாயாவாதிகள் ஆன்மா, (சிதம்பரம்) பரமாகாயம், பிரமம் (சிவம்) என்பன காணப்படும் இடங்கடோறும், ஒன்றை (பிரமத்தை) மாத்திரம் நிலைக்கவிட்டு, மற்றிரண்டையும் பொய்க்கா தொழியின் அவர்கள் ஏகான்மவாத சித்தாந்தம் நிலைக்காதாமாதலில் ஒன்றொழித்து மற்றவைகளைத் தங்கள் சாங்கியோபநிடதப்படி கெடுத்து விடுவார். ஈசகேநாதியுபநிடதங்கள் சிதம்பரோபநிடதங்களாய் அருட்சிதம்பரசத்தியின் மாட்சியே பெரிதும் வைதிக பரிபாஷா சப்தங்களால் விளங்குவனவாக, இந்த உபநிடதங்களைத் தமது மாயாவாதோபநிடத நெறிகொண்டு பொருள் போதிக்கப் போந்து, மேலே சொல்லிய

(104) ப்ரம்ம யோவேத நிகிதங் குகாயாம் பரமே வ்யோமந் |

குகை எனப்படும் பரமாகாயத்தே அமையப்பெற்ற பிரமத்தை எவர் அறிகின்றுரோ என்று பொருள்பட்ட தைத்திரீய மந்திரத்துக்குச் சங்கராசாரியர் தமது மாயாவாத பாஷ்யத்திலே "மேலாகிய அவ்வியாகிருதம் எனப்பெயர் பெறும் ஆகாசமாகிய குகையின் கண்ணே பிரமத்தை எவர் அறிகின்றுரோ" என்றற் றொடக்கத்ததாகப் பொருள் படுத்தினுர். சங்கராசாரியரால் சொல்லப்பட்ட "அவ்வியாகிருதம்" என்பது அஞ்ஞான மாயையாய் அவித்தியா சடசத்தி எனப் பொருள்படும். படவே, சங்கராசாரியர் அறிந்த (சீவப்) பிரமம் அஞ்ஞான பந்தக் குகையிலே யாமென்பது பெறப்படுகின்றது. இதற்குப் பிரமாணம் வேண்டுமென்று கொண்டே சங்கராசாரியர் தாம் சூதசங்கிதையைப் பதினெட்டுத்தரம் படித்த ஓர் பிரகாரம் மாற்றியபோது

(105) சம்சாரகே குகாவாச்யே மாயாஞாநாதிசம்ஞிதே |
நிகிதம் ப்ரம்ம யோவேத பரமவ்யோம சம்ஞிதே |

"பிரம சொரூபத்தை மாயை அஞ்ஞான முதலிய பெயர்களையுடைய் பரமாகாசம் எனப்படும் சம்சாரமாகிய குகையிலே பிரத்தியக் சொருபமாக எவன் அறிகின்றுனே" என்றற்றொடக்கத்ததாகப் பொருள்படப் பிரமகீதை மூன்றும் அத்தியாயத்து முப்பத்திரண்டாம் சுலோகம் தடுமாறிப் போக மாற்றப்பட்டமை நன்கு வெளிப்படுகின்றது. மேலே சொல்லிய சூதசங்கிதா கற்பனு சுலோகத்தின் கண்ணே பரமாகாசத்தை மாயை அஞ்ஞானம் என்று கூறுதலோடமையாது, பின்னரும் அப்பரமாகாசம் பலவாருகக்கூறப்படும் என்றகருத்தினுல் "முதலிய" எனப் பொருள்படும் "ஆதி" என்னும் பதம் சொல்லப்பட்டமை காரணமாக, "அவித்தியா" "சடசத்தி" முதலிய பெயர்களும் அதற்குச் சொல்லப்படும் என்றும், இதுவே (பரமாகாசமே) அவ்யாகிருதம் என்றும் சங்கராசாரியர் சிஷர் வித்தியாரணியர் தமது ஆசாரியர் மாயா

வாத பாஷ்யக் கருத்தோடு இணங்கி விரித்துப் பொருள் கூறினர். சுருதியிலும் அதன் உபப் பிரும்மணங்களாகிய புராணங்களினும் "ஆகாயம் என்னும் பதம் சிவசத்திக்கும், அபேதத்தினல் சிவத்துக்கும் பெயராகச் சென்ற விடத்தும் இந்தச் சூதசங்கிதையில் மாத்திரம் அவ்வாகாசத்தை மாயை எனவும், அஞ்ஞானம் எனவும், அவித்தை எனவும், சடசத்தி எனவும் அவ்வியாகிருதம் எனவும் பொருள்படக் கூறியதற்கு, "சொன்னதைச் சொல்லுங் கிளி" என்றபடி படியாது மிக ஆராய்வோடு ஏகான்மவாத விசாரஞ் செய்பவராய்க் "சொன்னதெல்லாஞ் சரி சரி எனக் கேட்கும்" அவிவேக மூளையிலராயுமுள்ள சென்னை ஆரியனுரும் அவர் இனத்தாரும் யாது சமாதானம் விடுப்பாரோ? இந்துஸதானி பாஷையின் "தோகா" என்னும் கவிகளிலே போல "சம்ஞிதே, சம்ஞிதே" என்று இறுதிப் பிராசத்தோடு மேலே போந்த சுலோகத் திரடிகளும் சொல்லப் பட்டமைக்குக் காரணம் என்னையோ? அப்படிச் சூதாசாரியர் சுலோகஞ் செய்தற்குப் போந்த அவசரம் இதுதானே? சொல்லுவாராக. இது இடையிலே மாற்றிக்கொண்டு போங்காலத்துச் சங்கராசாரியர் தவறிவிட்ட பிழையேயாம். பதினெட்டுத்தரம் படித்தவர் இப்படிப்பட்ட பிழைகளை எதிரிகள் கண்களுக்குப் புலப்படாது திருத்தி வைத்தற்குப் பத்தொன்பதாந்தரஞ் சூதசங்கிதையைப் படியாத வழுவினல் நேர்ந்ததேயாம். இப்போது அச்சுப் புஸ்தகங்களிலே கரதலாமலகம் போல விளங்குமாறு எட்டுப்பிரதிகளிலே அந்த இறுதிப் பிராசப் பிழை கண்டுணர அவரால் இயலாமற் போயிற்று. இப்படியே சூதசங்கிதையிலே சிவசத்தியின் பெயர்களை யெல்லாம் பரப்பிரமத்தின் பெயராக்க வேண்டிச் "சம்ஞிதா" என்றும் "ஆக்கியம்" என்றும் "சம்ஞம்" என்றும் சுலோகத்துக்குச் சுலோகமாக அடிக்கடி பிரயோகித் திருக்கின்றுர். மேலே போந்த முதலாம் அடி இறுதியும், இரண்டாம் அடி இறுதியும் "சம்ஞிதே" "சம்ஞிதே" என்று ஒரே சொல்லாய் முடிவதைச் சென்னை ஆரியனுர் தமது தெலுங்கெழுத்துச் சூதசங்கிதை வியாக்கியானத்து முன்னூற்றுப் பத்தாம் பக்கத்து முப்பத்திரண்டாஞ் சுலோகத்தை உடனே திருப்பிப் பார்த்து, அச்சுலோகம் சங்கராசாரியர் தமது மாயாவாத பாஷ்யத்துக்கியைய மாற்றிப் புகட்டப்பட்ட கட்டுச் சுலோகமாம் என்று பார்த்தேனுங் கேட்டேனும் உணர மாட்டாது போகார்

(உஎ) கார்க்கி என்பாள் யாஞ்ஞ வல்க்கிய முனிவரை நோக்கி ஆகாசத்துக்கு மேலுள்ளதும், பூமிக்குக் கீழுள்ளதும், இவ்விரண்டக்கும் இடையிலுள்ளதும், பூமி ஆகாசமாகிய இவ்விரண்டும் இறப்பெதிர் நிகழ் வெனப்படடவும் குறுக்கும் மறுக்குமாய் எங்குள்ளவென்று வினவ, அதற்கு முனிவர் "இவையெல்லாம் குறுக்கும் மறுக்குமாய் ஆகாசத்திலே என்று கூற, ஆகாயம் குறுக்கும் மறுச்குமாய் எங்குற்றதென்று பின்னர்க் கார்க்கி வினவ, அதற்கு முனிவர் பருமனல்லாததும், சிறிதல்லாததும், நீட்சியல்லாததும், குறுக்கலல்லாததும், சிவப்பல்லாததும், பச்சையல்லாததும், நிழலில் இலாததும், ருளல்லாததும், காற்றல்லாததும், ஆகாயமல்லாததும், பற்றில்லாததும், ரசமல்லாததும், கந்தமல்லாததும், கண்ணல்லாததும், காதல்லாததும், வாக்கல்லாததும், மனமல்லாததும், ஒளியல்லாததும், பிராணனல்லாததும், முகமல்லாததும், அகத்திலாததும், புறத்திலாததும், ஒன்றையும் அயிலாததும், ஒன்றுல் அயிலப்படாதது மாயுள்ள அக்ஷரத்தினுடைய (பிரமத்தினுடைய) ஆஞ்ஞையினலே கார்க்கியே சூரிய சந்திரர் என்போர் (திருதி என்று ஐதரேயோப நிஷத்தினலே சொலலப்படும் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்தவ பிரஞ்ஞான சைதன்னிய சிதம்பர பராசத்தியாகிய ஞானு கீாயமாம்) விசேஷதிருகியுற்று உறுதியுடையனவாய் நிலைத்தன, அந்த அக்ஷரத்தின் (பிரமத்தின்) ஆஞ்ஞையினலே பூமியும் ஆகாசமும் இறுகிநின்றன. இந்த அக்ஷரத்தினுடைய ஆஞ்ஞையினலே நிமிஷங்களும் முகூர்த்தங்களும், பகற்போது இராப்போதுகளும். ஒருமாச அமாமாசங்களும், இருதுக்களும், வருஷங்களும் உறுதிகொண்டேற்றன, இந்த அக்ஷரத்தின் ஆஞ்ஞையினலே கார்க்கியே கீழே நதிகள் சுவேத பருவதங்களிலே நின்று மேலைத்திசை நோக்கியும், மேலே நதிகள் கீழைத்திசை நோக்கியும், மற்றவைகள் மற்றத்திசை நோக்கியும் பாயாநின்றன. இந்த அக்ஷர (பிரமத்தினுடைய) ஆஞ்ஞையினலே கார்க்கியே ஈவோரை மறுஷர் போற்றுகின்றுர். தேவர்கள் எசமானன் வசப்படுகின்றுர். பிதிர்கள் ஓமத்தின் வசத்தராகின்றுர் என்று பிரமவித்துக்கள் சொல்கின்றுர்கள்" என்று உத்தரமளித்தாராகப் பிருகதாரணியோபநிஷதத்து ஐந்தாம் அத்தியாயத்து, எட்டாம் பிராம்மணத்து, ஐந்தாம் ஆறும் ஏழாம் எட்டாம் ஒன்பதாம் மந்திரங்கள் கூறுமாற்றுல் சர்வஞ்ஞத்துவாதி விசிஷ்ட தருமமுடையது பிரமமெனப் பிரதிபாதித்து, இந்த அக்ஷரத்திலே கார்க்கி ஆகாசமானது (சிதம்பராகாசமானது) குறுக்கும் மறுக்குமாய் நின்றதென்று சொல்லப்பட்டதென்றும், இந்த ஆகாயம் புறத்தே காணப்படும் பூதாகாசமாகாது (புறத்தேயுள்ள வாயுவாம் வாதவியாபகத்தினும் வியாபகமாய் சடாகாயம் நின்றுற்போல, மாயாவாதிகளுடைய பரமாகாசமாகிய சடசத்தியாம் அவித்தியா அஞ்ஞான அவ்வியாகிருத மாயாவாதசத்திவாதத்தினும் வியாபகமாய் அதனுற் பரமாய் எவற்றையும் வியாபித்துத் தாங்கி நடாத்தும்) பராசத்தியாகிய பரமசத்தியே ஆகாயம் எனப்படும் என்றும், இதுவே சிதம்பரசத்தி என்றும், அதனுல் இந்தக் கார்க்கி ஆகாயம் (சிதம்பரசத்தி), (மாயாவாதிகளுடைய) கூடஸ்த பிரமத்திலே போய் முற்றுதென்று இரத்தினத்திரய பரீக்ஷை வாயிலாக விளக்கினவர் யாரெனில், சைவசித்தாந்திகளுடைய சகுணப்பிரமங்களாகிய திரிமூர்த்தி களுட்பட்டருத்திரராகாதவராய், சங்கராசாரியருடையவும் இவர் இனததனராம் சென்னை ஆரியனுருடையவும் மாயாவாதோபநிஷத நெறியானே மாயாப்பிரதிபிம்பராயுற்ற உருத்திரரின் அம்சராய்ப் பிறந்தாரென்று அச் சென்னை ஆரியனுரால் "சங்கராசாரியரது அவதார மகிமை" யிலே போற்றப்பட்ட சங்கராசாரியர் அவதாரத்தினும் (உருத்திரரின் மிக மிக மேலானவராம்) அட்ட வித்தியேசுரருடைய அவதாரரெனச் சிவரகசியத்திலே பெறப்படும் ஸ்ரீ அப்பய தீக்ஷித யோகியாரேயாமென்க.

(இன்னும்வரும்)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

## பூர்வீக சமய நிலை.*

கனவான்களே!

உங்களுக்கு மதவிஷயமாகச் சில பிரசங்கங்கள் செய்ய வேண்டுமென்பது என்னுடைய கருத்து. எப்படிப்பட்டவர்களும முக்கியமாகக் கொண்டாடுகின்ற அரிய விஷயமாகிய மதத்தைப்பற்றி நாம் ஒன்றுகூடி ஆலோசிப்போம். நாம் அவ்விஷயத்தை, தத்துவ விசார மூலமாகவும், தெய்வ விசார மூலமாகவும், கவனிப்போம். இவ்விஷயமாக நம்ம பூர்வீகர்கள் பொதுவாக அநுஷ்டித்து வந்த முறையின்னதென்று ஆராய்வோம். பூர்வகாலத்து ரிஷிகளும், தத்வஞானிகளும், கையாண்டுவந்த தருமங்களும் பிரமாணங்களும் இத்தன்மைய வென்பதை ஊன்றி யுணர்வோம். இவ்வுலகத்தில் ஜனிக்கிற ஒவ்வொருவருக்கும், எல்லாம் வல்லவரும் யாவையும் படைப்பவரும் பரமபிதாவுமாகிய கடவுள்பிரசாதிக்கிற மெய்ஞ்ஞானவொளி யேதேனும் நம்முடைய ஹ்ருதயத்தில் எங்காகிலும் ஒருவேளை யின்னும் காணக்கூடுமா என்பதையும் நமக்குள் ஆழ்ந்து ஆராய முயல்வோம்.

கனவான்களே! உண்மையை அறிய முயல்வதும், அறிந்தபின் அச்சித்தாந்த வுண்மை நெறியிலொழுகுவதும், அவ்வுண்மை வரம்பு கடவாமையும், ஒவ்வொருவருக்கும் உரிய கடமையாம். நிகிருஷ்டமான மதத்திற் பிறந்ததற்காக, ஒருவனையும் கடவுள் நித்தியதண்டனைக்கே ஆளாகும்படி செய்யமாட்டார். என்றாலும், உண்மை நெறியை யறியவும், அறிந்து அதனை யந்தக்கரணசுத்தியாய் அநுஷ்டிக்கவும், ஒவ்வொருவனையும் பொறுத்த கடமையாம். ஒருவன் அநித்யமாகிய இவ்வுலக இன்பத்திற்காகப் பாடுபட்டுக் கடவுளோடு ஐக்கியமாகி அநுபவிக்கும் நித்தியாநந்த வாழ்வாகிய பெரும்பேற்றை யடைவதற்கேற்ற சாதனங்களைக்கைவிட்டு நடப்பானானால், அவன் ஈசுவரதண்டனைக்கு ஆளாவான்.

கனவான்களே! பூர்வத்தில் சமயநிலையின் இருப்பையும், அதன் சுபாவத்தையும் பற்றி மனிதர்கள் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மிகவும் பழமையான சரித்திராதாரமாக விசாரிக்கத் தொடங்குவோம். ஆகவே, இந்தப் பிரசங்கம், தத்துவவிசாரரூபமாகாமல் சரித்திர ரூபமாகவே யிருக்கும். நான் காட்டப்போகிற பிரமாணங்கள் மிகவும் நம்பத்தக்கவைகளே. சந்தேகமானவைகளை நான் முற்றிலுந் தள்ளிவிட்டேன்; ஏனெனில் உண்மை விஷயத்திற்குக் கற்பனையாகிய பகட்டலங்காரம் வேண்டியதில்லையே. இந்தப் பிரமாணங்களில், கி. மு. 2000 வருஷங்களுக்கு முன்னிருந்த பூர்வீகர்களால் நமக்குக் கிடைத்துள்ள புராதன ஸ்தோத்திரங்களே முக்கியமாயுள்ளன. மனிதர்கள் ஆதியில் அநுசரித்தது ஒரு தெய்வ வழிபாடேயன்றிப் பலதெய்வ வழிபாடேயன்றிப் பலதெய்வ வழிபாடல்ல என்னும் உண்மைக்கு அவைகள் ஆதாரமாகும்.

### தெய்வத்தினிருப்பைப்பற்றி மனிதஜாதியாருடைய சித்தாந்தம்.

கனவான்களே! இவ்வுலகத்தில் தோன்றி யொடுங்கினவர்களாகிய பழய ஸெமிட்டிகர், எகிப்தியர், ஆரியர் முதலியோரையும், இப்போது ஐரோப்பா முதலிய எல்லாக்கண்டங்களிலும் வசிப்போரையும் நான் வரவழைத்துக் கிழ்வரும் கேள்விகளைக் கேட்பதாக வைத்துக்கொள்ளுங்கள்.—தெய்வ முண்டா? இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தாள்பவரும், சர்வஜனபிதாவும், துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனஞ் செய்பவரும், எல்லையற்றவருமாகிய வொருபரமாத்மாவுண்டா?—"ஆம், கடவுளிருக்கிறார்" என்னும் மறுமொழியே நிச்சயமாய்க்கிடைக்கும். ஆகவேகடவுளுண்டு என்பதையொத்துக் கொள்ளவேண்டும். இந்தவுணர்ச்சியும் நம்பிக்கையும் நம்முடைய இருதயத்தில் செவ்வையாகவேஊன்றியிருக்கிறது. இவ்வளவு அற்புதமான உலகத்தைப்படைத்தவர், ஒருவர் இல்லையென்று சொல்லும்படி நாம் அத்தனை அவிவேகதசையை அடைந்திருக்க வில்லை. ஏனெனில், தான்காணுகிற சகல வஸ்து நிலைமைக்கும், காரியத்திற்கும் காரணத்தையுங் கர்த்தாவையும் நிர்ணயித்துத்தெளிய, விரும்பும் உற்சாகமானது மனுஷனுக்கு எந்த நிலையிலிருந்தபோதிலும், எந்தவர்க்கத்தானாயிருந்தபோதிலும், இயற்கையாகவே மூண்டுகொண்டிருக்கிறது. மனுஷன் மிகததாழ்ந்த நிலையிலிருந்தபோதும் "காரணமின்றிக் காரியமில்லை" என்னு முண்மை யவனறிந்ததே; ஒருமாளிகையைக் கண்டபோது அதைக்கட்டினவனையும், ஒருபடத்தைக் கண்டபோது சித்திரக்காரனையும், ஒரு விக்கிரகத்தைக் கண்டபோது சிற்பி

* மங்களூர் வித்யாசாலையில் ரெவரெண்டு ஜ. பர்ட்டோலி துரையவர்கள்செய்த பிரசங்கங்களின் மொழிபெயர்ப்பு.

யையும் அவை நினைப்பூட்டும். அதுபோல உன்னதமான பர்வதங்களும், வளப்பமான வனங்களும், ஏரிகளும், நதிகளும், அமைந்துள்ள இப்பூமியும், காணுதற்கரிய ஆழமுடையதாய் ஓயாது மோதுகின்ற அலைகளையும், காலக்கிரமமான ஸ்திதியையும், பயங்கரமான ஜலசரங்களையுமுடைய சமுத்திரமும், ஜோதிமயமாய்; மகத்தான எண்ணிறந்த அண்டங்களோடுகூடிய ஆகாசமும், ஆகிய, இவையெல்லாம் அளவற்ற அற்புதங்களுக்குக் காரணபூதமாய் சர்வவல்லமையுள்ள வோர்மூலப் பொருளையே காட்டுகின்றன. இக்காரணப் பொருள்யாது? இவ்வற்புதகாரியங்களெல்லாம் தாமே அமைந்தனவா? இல்லை, சிருஷ்டிக்கப்பட்ட எல்லா ஜீவாத்மாக்களும் 'எம்மைப்படைத்தவர் வேறொரு கடவுளே' என்று தெளிவாக வுரைப்பதுபோல விளங்கும். இதுவுண்மைதான்: அவைகள் தம்மைப் படைத்துக் கொள்ளவுமில்லை; அவைகள் கடவுளுமல்ல. பூமிதெய்வமன்று; கடல் தெய்வமன்று; ஆகாசம் தெய்வமன்று; ஏனெனில், இப்படைப்புகளெல்லாம் காலதேசவரையறை யுடையவைகள்; கடவுளோ அகண்டமாய் முடிவற்றவர்; இவையெல்லாம் அநித்தியமானவை; கடவுள் நித்தியமானவர்; இவைகளெல்லாம் அடிக்கடி பலவிகாரங்களையடையும்; கடவுள் நிர்விகாரி; இவைகளுக்கு அறிவுமில்லை இச்சையுமில்லை. கடவுள் ஒப்புயர்வில்லாத சுவதந்திரப்பொருள். அவருடைய அறிவும், சங்கல்பமுமே இக்காணப்பட்ட எல்லாப் பொருள்களுக்குங் காரணமாகும்.

கனவான்களே! இதுதான் யாவர்க்கும் ஒப்பமுடிந்ததுணிபாம். கடவுளென்று பொருள்படும சொல்லொன்றில்லாத பாஷையேயில்லை. எல்லாவற்றுக்கும் மூலமாயுள்ள அப்பரம்பொருள் உண்டென்பதை முன்னும் துணிந்திருக்கிறார்கள்; இன்னும் துணிகின்றார்கள். மனுஷ ஜாதியினுடைய ஆதிநிலையிலிருந்து படிப்படியாய், அச்சாதியடைந்துள்ள பலவகை நிலைகளையும் கவனியுங்கள்; பூசாரம், ஜாதி, வகுப்பு, முதலியவற்றையும்விடாது பாருங்கள்; நாகரீகம்பெற்றநிலைமையும், நாகரீகமற்ற நிலையையும் பாருங்கள். ஆப்பிரிக்காகண்டத்தின், சுடுமணல்வெளிகளில் குடிசைபோட்டுக் கொண்டிருக்கிற சீரழிந்தஜனங்களுள்ளும், அமெரிக்காவின் வனாந்தரங்களில் திரிந்துகொண்டிருக்கும் அநாகரீக கூட்டத்தாருள்ளும் ஆராய்ந்துபாருங்கள். கடவுள், கடவுள்என்னுநாமம் எங்குங்கேட்கலாம். பலசாதியாரும், பரமாத்மாவினிடத்துநம்பிக்கையுங் அவர்க்காக ஆலயங்களும், பலிபீடங்களும், குருமாரும், உற்சவங்களும், பலிகளும் ஏற்படுத்திக் கொண்டாடுதலுங் காணலாம். எவ்வளவு அநாகரிகமாயிருந்தாலும், ஏதேனும் ஒருவகையான தெய்வ வழிபாடில்லாத ஜாதியேயில்லை. இக்காலத்தில் எது வுண்மையோ அப்படியே பத்தொன்பது நூற்றாண்டுக்கு முந்தியு மிருந்தது. அப்போது கிரேக்தேசத்துப் பெரியோனாகிய ப்ளுடார்ச் என்பவர் கீழ்வருமாறு எழுதுகிறார். 'சுவர்களும், கல்வியும், சட்டங்களும், அரண்மனைகளும், செல்வமும், வித்தியாசாலைகளும், நாடகசாலைகளும், இல்லாத அநேகநகரங்களைக் காணலாம்; ஆனால் கோயில்களாவது, தெய்வங்களாவது இல்லாததும், பிரார்த்தனையும்பிரமாணமும் அநுஷ்டிக்காததும், குறிகேட்காததும், தெய்வாநுக்கிரகத்தைப் பெறவும், வருகின்ற துன்பங்களை நிவர்த்திக்கவும் ஆசைகொண்டு பூசை செய்யாததும், ஆகியவொருவூரையேனும் யாரும் எப்போதுங் கண்டதில்லை. ஆகாயத்திற் கட்டப்பட்ட வொரு நகரத்தைக் கண்டாலுங் காணலாம், ஏதேனுமொரு மதப்பற்றில்லாத ஜனத்தைக்காண்பது அரிது' என்பதாம். நூதன தத்துவசாஸ்திர முடிவுகளும் இவற்றோடு மாறுபடுவனவல்ல. டீல் என்னும் பெரியவர் சொல்வதாவது:—"மதக்கொள்கையேயில்லாத சில ஜனங்கள் உண்டென்று சொல்வது ஊன்றிப்பாராமையினாலும், கருத்தறியாமையினாலுமே. ஏதேனுமொரு பரவஸ்துவினிடத்தில் நம்பிக்கையில்லாத வொரு ஜாதியையாவது, கூட்டத்தையாவது, இதுவரையிலுங் கண்டதில்லை. அவர்களுடைய இருப்பைப்பற்றிப் பேசுகின்ற பிரயாணிகளுடைய சொல்லும் வாஸ்தவம் வெளியானபோது பொய்யாய்விட்டது. ஆதலால் தெய்வபக்தியென்பது மனுஷ்ஜாதிக்கே சகஜமான வோர் மனோபாவமென்று பொதுவாகக்கூறுவது நிராக்ஷேபமானது." தெய்வமுண்டென்னுந் துணிபு உண்மையில் மனுஷஜாதிக்கு சகஜமான மனோபாவந்தான். ஏனெனில், மனிதனைச் சிட்டித்த கடவுள், அவன் கேவலம் அறிவற்ற மிருகத்தனமையடைந்து கொடும்பாவச் சேற்றில் சிக்கியலைந்தாலும், கடவுள் திருநாமத்தை தன்னையறியாமல் உச்சரிக்கவும், அநாதியாகிய அவரைமுந்தருளியிருக்கும, விட்டின்பத்தை ஆவலோடு நாடுகின்ற புத்தியையே அவனுக்கு அமைத்திருக்கிறார். டெர்டூலியன் என்பவர் தம்முடைய காலத்திலிருந்த பாமர ஜனங்களை நோக்கிக் கூறியதென்னவெனில்:—"ஆத்மதிர்ஷ்டாந்தத்தைக்கொண்டே தெ

ய்வமுண்டென்பதை நிரூபிக்க வேண்டுமென்பது உங்களிஷ்டமா? நன்று; மனுஷன் எவ்வளவு பாப கூபங்களிலே மூழ்கியிருக்கட்டும்; தான் பழகிவந்த ஆசாரப் பிசாசங்களுக்கு வசப்பட்டிருக்கட்டும்; துர்க்குணங்களிலும் துர்விஷயங்களிலும் அடிபட்டுப் பொய்த்தெய்வங்களுக்கு கொத்தடிமையாகக் கிடக்கட்டும்; அவனுடைய ஆத்மாவோ, மதுமயக்கமும், சந்நிபாதவேதையுந் தீர்ந்தவன் புத்திபோல, மேற்கூறிய துர்விஷய மூர்ச்சையிலிருந்து தெளிந்தபோது, எந்தப் பரவஸ்துவினுடைய கருணை தனக்கு இன்றியமையாததோ அந்த வஸ்துவின் சொரூபத்தையே நோக்கி நிற்கும். ஏ அருள் வடிவே! சர்வோத்தமனே! என்னுஞ் சொற்களே அவன் வாயிலிருந்து பரவசமாய் வெளிப்படும். சகலாத்மாக்களுடைய இயற்கை நாட்டமிதுவே. சுபாவமாய் ஆஸ்திகபுத்தியுடைய ஆத்மாவினல் கிடைக்கும் பிரமாணம் இதுவல்லவோ! ஆத்மாவானது இவ்வாறு கடவுள் திருநாமத்தை யுச்சரிக்கும்போது, அதனுடைய நோக்கம் அவர் கோயில்கொண்டிருக்கும் இந்நாட்டுத்திருப்பதி மேலதன்று. தன்முக்ய பிதாவாகிய அவர் வீற்றிருக்கும் அவ்வீட்டுத் திருப்பதிமேலதேயாம்."

கனவான்களே! இவ்விஷயமாக இன்னும் நான் விவகரிப்பதில்லை. என்னைப் பெருமைப் படுத்தும்படி இங்குவந்துள்ள நீங்கள் நாஸ்திகர்களல்லவே; தெய்வபக்தியுடையவர்களன்றோ? நாஸ்திகவாதமிந்த நாட்டில் வேரூன்ற முடியாது, எந்தமுகம் பார்த்தாலும் ஒன்றுகிய பரவஸ்துவினிடத்தில் இந்து ஜனங்கள் வைத்திருக்கும் பக்தியைக்காட்டும் நிராக்ஷேபமான சாசனங்கள் நிறைந்துள்ளன. "பரவஸ்துவொன்றே; இரண்டாவதில்லை." (ஏகமேவாத்விதீயம்பிர்ம்மா).

### ஒருதெய்வ வழிபாடா? பலதெய்வ வழிபாடா?

தெய்வ முண்டென்பது யார்க்கும் ஒப்ப முடிந்த துணிபாயினமையால் பூர்வீகாள் அத்தெய்வத்தை யெவ்வாறு வழிபட்டு வந்தார்களென்பதைப் பரியாலோசிப்போம். கிறிஸ்து சகாப்தத்துக்குமுன், யூதரொழிந்த மற்றெல்லாச் சாதியாரும், பலபேதமான தெய்வங்களை வழிபட்டார்கள் என்று சரித்திரத்தால் வெளியாகின்றது. ஆகவே, விக்ரகாராதனம் ஆதியில் மனுஷ்யாளுடைய சம்மதமா? ஆதிமதம் ஒரு தெய்வவுபாசனையா? பலதெய்வ வுபாசனையா? மனிதன் பூமியிற்றேன்றினவுடனே, தன்னைப்படைத்த ஜகதீசனை மறந்து, தான்படைத்ததொருபொருளை யாராதிக்கும்படியான ஈனஸ்திதியையடைந்து விட்டானு? என்பவற்றையும ஆராய்வோம.

இந்த விசாரத்துக்கு கிரேக்தேசத்துப் பூர்வீக ஆசிரியர்களில் ஒருவர் (Theophrastus) ஆதி மனுஷாளுடைய தெய்வ பக்தியைப்பற்றிக் கூறியிருப்பது முக்கிய ஆதாரமாயுள்ளது. அதாவது "ஆதியில் விக்ரகவாயிலாக ஆராதிக்கு முறையில்லை. உயிர்ப்பலி யிடுதலுமில்லை. ஆலயங்களாவது, பலிபீடங்களாவது, ஆசாரியரினமாவது, கிடையாது. பல தெய்வங்களின் பெயரும், பரம்பரையும், அதுவரையும் கற்பிக்கப்படவில்லை. அக்காலத்திய ஆராதனை யெல்லாம், கடவுள் சர்வபூதகாரணப் பொருளென்றுணர்ந்து அவரைச் சித்தசுத்தியோடு வணங்குவதேயாம். பச்சிலையும், பூவும், பாலும், பழமும் அரூபியாகிய தெய்வத்துக்குச் சமர்ப்பிப்பதோடு, இரண்டு கைகளையும் உயரத்தூக்கி, நல்ல பானீயங்களையும் ஈசுரார்ப்பணமாக வார்ப்பதும் வழக்கம்; ஆசாரிய சிஷ்யக்கிரமமில்லை." என்பதாம். பூர்வீக சமயநிலை விஷயத்தில் மற்றெல்லாச் சனங்களுடைய ஐதிகங்களும் மேற்கூறியவைகளோடு அணுவளவு மாறுபடா வென்பதைப் பின்னுங் காணலாம்.

### பூர்வீக எகிப்தியர் மதாசாரம்.

பலதேசத்துப் புதுமைகளையுங் காணவேண்டி வருகின்ற கல்வியிற்சிறந்த ஐரோப்பியர்களை, கண்டமாத்திரத்தில் பிரமிக்கச் செய்கிற பிரமாண்டமான செய்குன்றுகளும், (Pyramids) ராஜமாளிகைகளும், அதிவிசித்திரமான ஆலயங்களும், உருக்குலைந்து கிடக்கின்ற இடமாகிய பேரோஸ் நாட்டில் (Land of the Pharaohs) நீங்கள் போயிருப்பதாகப் பாவித்துக் கொள்ளுங்கள். அந்தநாடுதான எகிப்து தேசமென்பது. அந்தநாடுதான் தீப்ஸ் (Thebes) முதலானேருடைய சொந்தநாடு. நிகழ்கின்ற கிறிஸ்து சகாப்தத்துக்கு முன்னர், இருபத்தாறு தலைமுறை அரசர்கள் 2000-வருஷம் இடையருது செங்கோல் செலுத்தியதும் அந்தநாடே. தீபியருடைய ஆசாரியன நாவள்யமான ஆசாரியவுடை யணிந்துகொண்டு பரவஸ்துவை—தானுவென் னும் பெயராற் றுதிக்கும் திறத்தைக் கவனியுங்கள்:—

"—தானுவே! வெல்க. இன்னதன்மைய னென்றறியப்படாத சர்வோத்தமனே! வெல்க. யாவையுஞ் செய்தும் செய்யாதவனே! சர்வஜன பரமபிதாவே! சர்வதேவ ஜநகனே! அகண்டமான காலதத்வ

வியாபகனே! ஆகர்சம், பிரிதிவி, அப்புமுதலிய்பூதங்களைப்படைத்து அமைதி செய்தோனே! நிலைகுலைந்து கிடந்தவற்றை யெல்லாம் சீர்ப்படுத்தினவனே! பிரபஞ்ச நியாமகனாகிய கீடவுளே! உனக்குப் பிதா இல்லை. உன்னனுக் கிரகத்துப் பாத்திரமானவரே யுன்னைப்பெற்றவர். உனக்கு மாதா இல்லை. பக்தர்க்கருள்புரியு மிச்சையே யுனக்குத் திருமேனி கொடுப்பது. உன் திருநேத்திரங்களின் ஒளியே அந்தகாரத்தை யோட்டுவது. அண்ட முடிவுக்கப்பாலினு மிருக்கிறாய். பாதாள மேழிற்குங் கீழுமிருக்கிறாய். பாதாளலோகத்தில் நீ நிற்கும்போது மத்தியலோகத்துக்குமேல் உன்முழந்தாளிருக்கும்; மேலண்டத்திலுன முடியிருக்கும். நீ படைத்த பொருளெல்லாவற்றுக்கும் நீயே ஆதாரபூதம். சுவசக்தியினாலேயே நீ யியங்குகிறாய். சுவ சாமர்த்தியத்தினாலேயே நீ சர்வோத்தமனாயிருக்கிறாய். மேகமுழக்கமே உனது ஓசை. காற்றே யுனது சுவாசம். ஆகாயமும், பூமியும், நீ யிட்ட கட்டளைக்கடங்கி நடக்கின்றன. நீ யிவைகளுக் கமைத்துச் செப்பனிட்டுக்காட்டிய வழியை அதிக்கிரமிக்காமல் தாந்தாம் முறையே யியங்குகின்றன. நீ யிளைப்பாறுவதே இராத்திரி. நீ கண்ணை விழித்தாற் பகலாகிறது. உன்னதமான ஆகாசத்தை யமைத்து, அவ்வண்டமத்தியில் சூரியனாகிய நிராலம்ப தீபமிட்டு, தேவ மனுஷ்யாதி சேதன வர்க்கங்களையும், அவற்றிற் காதாரமாகப் புவன பேதங்களையும், படைத்த பகவானுடைய மகிமையைப் போற்றுவோமாக.''

கடவுளுடைய சுபாவ சக்திகளைப்பற்றி பூர்விக எகிப்தியருடைய போதங்களிவ்வாறிருந்தன. ஆதலான், அவர்கள் ஒருதெய்வ வுபாசகர்களேயன்றி வேறல்ல. அவர்களுக்குப் பலதெய்வங்களில் நம்பிக்கை யிருப்பதாகத் தோற்றினாலும், அத்தெய்வங்களெல்லாம், ஒன்றாகிய சுயம்பு மூர்த்தியின் அநந்த கல்யாண குணங்களில் ஒவ்வொன்றையு மோரோர் தெய்வமாக வுபசரித்துக் கூறப்பட்டனவேயாகி யம்முதற்பொருளுக் கதீனமான அம்சங்களே. இப்படியிருந்தும், கடவுள் சொரூபவிஷயமாக, அவர்களுக்கிருந்த துல்ய ஞாநமானது விரைவில் விபரீதமாயிற்று. கடவுளை யறிந்துவைததும், அவரைப் பதியென்று போற்றி வணங்காமல், அகம்பாவ மேலிட்டு, அஞ்ஞானவிருள் அவருள்ளத்திற் குடிகொண்டது. காணப்பட்ட விசித்திர பிரபஞ்சமாகிய காரியத்தைக் கொண்டு காரணனை யறியமாட்டாது மயங்கினார்கள். நெருப்பையும், காற்றையும், தாராகணங்களையும்,சந்திர சூரியர்களையும். அவைகளின் வீரிய விசித்திர தேஜசுகளால் பிரமித்து கடவுளாகக்கொண்டார்கள். நிர்விகாரியாகிய அப்பரமனுடைய சொரூபத்தை, விகாரியாகிய மனிதன், பக்ஷி, மிருகம், கிருமி இவற்றேடொப்ப மதித்தார்கள். முடிவில் கடவுளென்னும் பொருளையே யசத்தாக்கிவிட்டு நித்தியானந்தனாகிய ஆண்டவனைக் கைவிட்டு, பிராணிகளையே வணங்கிச் சேவிக்கலானார்கள். எகிப்தியருடைய அபிமதத்தை மாரியட் (Mariette) என்பவர் தொகுத்துச் சொல்லியதிது:—

"எகிப்து தேசத்துத் தேவமந்திரத் (Pantheon) தின் உச்சியில், நித்தியராயும், சுவயம்புவாயும், அகோசரராயும், அநந்தகல்யாணகுண நிதியாயுமுள்ள ஓர் ஏகமூர்த்தி வியாபித்துக்கொண்டிருக்கிறார். அவர் மண்ணையும், விண்ணையும் படைத்தவர். சராசரம்யாவையும் படைத்தவர் அவரே; அவரையன்றி யொன்று மின்று. இவ்வுண்மை நல்லாசாரியரிடத்தில் உபதேசம் பெற்ற பக்குவான்மாக்களுக் கல்லாது விளங்காது. ஆனல் இப்படிப்பட்ட துல்யஞான தசையிலிருக்க எகிப்தியருக்குப் பொறுக்கவில்லை. இப்பிரபஞ்சத்தையும், அதன் அமைப்பையும், அதிற் பிரபலித்திருக்கும் கோட்பாடுகளையும், உயிர்வாழ்க்கையின் பயனையும், ஓர் பெரிய நாடகமாகவும், கடவுளைச் சூத்திர தாரியாகவும், எல்லாமக்கடவுளிடத்தே தோன்றியொடுங்குவதாகவும், அக்கடவுள் தன் குணம்ச பூதர்களாய், வியக்தரூபிகளாய், சில சக்திகளை மாத்திரம் பெற்றிருந்தும், தன் வீரிய சுபாவங்களை வகித்தவர்களாயுள்ள அநேக தேவதைகளை யதிஷ்டித்து காரிய நடத்துகிறார் என்பதாகவும் நினைத்தார்கள்."

(இன்னும்வரும்.)

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

## கம்பநாடரும் அவர் கவிப்புலமையும்.

(140-வது பக்கத்தொடர்ச்சி.)

குலோத்துங்கச் சோழனைநோக்கி

"என்றும்
அடைந்தாரைக் காக்கும் அகளங்கா துங்கா
நடந்தாயே நாலாறடி"

எனக்கம்பர் கூறினதாகவும், புகழேந்தி அவனை நோக்கி

"பழியும்புகழு மெவர்க்கு முண்டாமிந்தப் பாரிலுனைக்
கழியுஞ்சிலையுங் கல்லுமென்று லகளங்கா துங்கா"

எனக் கூறினதாகவும் தனிப்பாடல்கள் வழங்கி வருகின்றன. இவையெல்லாம குலோத்துங்கச் சோழனையே நோக்கினவாமாதலின், கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப்புலவர் என்னும் மூவரும் அவ்வரசன் காலத்தினர் என்பது தோற்றமாம். II-வது இராஜேந்திர சோழனுக்கு I-வது குலோத்துங்கனென்று பெயர். அவன் கி. பி. 1063-ம் ஆண்டிலே அதாவது சாலிவாகன சகாப்தம் 985-ம் ஆண்டிலே சிங்காசனம ஏறினுன் என்றும், II-வது குலோத்துங்க சோழன் 1127-ம் ஆண்டிலே சிங்காசனம் ஏறினன் என்றும், 1894-வது வருஷதது இந்தியன் ஆண்டிக்வெரி (Indian Antiquary) யின் அக்டோபர்மாதத்துச் சஞ்சிகையில் சோழர்களுடைய தேதிகள் என்னும் தலைப்பின்கீழ் ஹல்ட்ஸச் (Hultzeh) என்னும் யூரோப்பிய புலவரால் நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கிறது.

I-வது இராஜேந்திரசோழன் கமபரையும் ஒட்டரையும் இராமாயணம் பாடும்படி ஏவினுன் என்றும், I-வ்து குலோத்துங்கன் காலத்திலே இராமாயணம் அரங்கேறிய தென்றும் கூறுகின்றார்கள். ஆகவே கம்பர் சாலிவாகன சகாப்தம் 985-க்கு முன்னும் பின்னும் இருந்தவர் என்றேற்படுகின்றது. அம்பிகாபதிக்குக் கலியாண மகோற்சவம் நடந்தேறுகையில் சடையப்பமுதலியார்சிறிதுகாலந்தாழ்த்துவந்தமையின் இருக்க இடம்பெருது சாலவக்கடையின் அருகில் நின்றதைப் பார்த்து வருந்திய தன்மனைவியை நோக்கிக் கம்பர் "என ஐயனை வைக்குமிடத்தில் வைப்பேன் வருந்தாதே" என்றதும், இவர் அறுபதாவது பிராயத்தில் காலகதி யடைநததாகக் கூறப்படுவதும் உண்மையானுல் இவர் நாற்பது பிராயத்துக்குமேல் ஐம்பது பிராயத்துக்குள்ளாக இராமாயணம் பாடியிருக்கவேண்டும். ஆகவே இவா கிறிஸ்தாப்தம் 11-வது நூற்றுண்டின் முன்பாகத்தில் பிறந்தவர் என்று முடிவாகிறது. இவர் இற்றைக்குச் சற்றேறக்குறைய 840-வருஷங்களுக்கு முன்பிறந்தவரென்றுல் வெருவாய் இழுக்காது.

ஔவையாரும் இவருடன் ஏககாலத்தினர் எனக் கூறப்படுகின்றனர். இதைத் தலைக்கட்டுவது இலகுவான காரியமன்று. "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி" என்னும் வாக்குண்டா மடியில் வருகின்ற 'வான்கோழி' என்னும் வார்த்தை இங்கிலீஷில் டர்க்கி (Turkey) என்னும் வார்த்தையின் பிரதிபதமென்றும், அங்கிலேயர் இங்குவரு முன்னர் இங்கே வான்கோழி என்பதொன்று கிடையாதென்றும் ஆகவே ஔவையார் சிலகாலத்துக்கு முன்னிருந்தவராதற்பாலர் என்றும் சில அங்கிலேயர் மன்றுடுகின்றனர். வான்கோழி என்பது நிகண்டு திவாகரங்களிற் காணுத சொல்லாக இருக்கின்றது. வின்ஸ்லோ அகராதியில் வான்கோழி என்பதற்குப் பெரியகோழி எனப் பொருள் உரைத்திருக்கின்றது. சில ஆசிரியர்கள் வான்கோழி என்பதற்கு மேற்காட்டிய அடியில் பெண்மயில் என்பது பொருள்எனக் கூறுகின்றனர். இங்ஙனம் பொருளுரைத்த ஒருவர் "ஆண் ஆடுவதைக்கண்டு பெட்டை ஆடுமென்றும், ஆண் ஆடுஞ்சீர்போலப் பெட்டை ஆடாதென்றும், ஆண் ஆடிநின்றவுடன் பெட்டையும் நின்று விடுமென்றும், அறிந்து, இவ்வாறே உரை செய்யலாயிற்று" எனக் காரணமுங்காட்டி யிருக்கின்றனர். ஆகவே ஔவையார் சிலகாலத்துக்கு முன் இருந்தவர் என்பது உறுதிப்படுவதில்லை.

சிலப்பதிகாரம் இரண்டாவது மதுரைக் காண்டத்தின் ஈற்றில்

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணமால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து.

என்ற வெண்பாவிலும், மணிமேகலை சிறைசெய்த கதையில்

மாபெருந் தெய்வந் தோன்றிட மடக்கொடி
நீயே ளென்றே நேரிழைக் குரைக்கும்
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுமவள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேருய்

என்ற விடத்தும்

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதொழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

என்ற திருக்குறளை உதகரித்திருப்பதனாலே திருவள்ளுவர் மேலைக்காவியங்கள் பாடுமுன்னரே இருந்தவரென்பது பெறப்படும். கதை ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாய் ஏககாலத்துச்செய்யப்பட்டன மேற்கூறிய சிலப்பதிகாரமும் மணிமேகலையும் அவற்றில் சிலப்பதிகாரத்தில "கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான்" என்று கூறப்பட்ட அரசன் சிங்களத்தீவில் கி. பி. 113 ஆண்டிலே அரசியல் பெற்றுனென மகாவமிசம் என்னும் சரித்திரத்திலே செப்பி யிருக்கின்றது. ஆகவே வள்ளுவனர் 1800-வருஷங்களுக்கு முற்பட்டவர் என்பது தெளிவாகின்றது. ஔவையார் திருவள்ளுவருடன் பிறந்தவரென்பது கபிலரகவல் முதலியவற்றால் துணிந்தபடியாதலின் ஔவையாரும் இற்றைக்கு 1800-வருஷ முற்பட்டவர் என்பது பெறப்படும். ஆகவே ஔவையார் கிறிஸ்தாப்தத்தின் தொடக்கத்திலே பிறந்தவர் என்ற வாறுயிற்று.

புறநானூற்றில் ஔவையார் பெயரால் 33-அகவல் கற்றவளாயில் காணப்படுகின்றன. அதனல் ஔவையார் எப்படியும் கடைச்சங்கத்தார் காலத்தினர் என்பது அறியப்படுகின்றது புறநானூற்றில் பாடப்பெற்ற பாரி என்னும் வள்ளலை

"கொடுக்கிலாதானைப் பாரியென்று கூறினுங்
கொடுப்பாரிலையே."

எனச் சுந்தரமூர்த்திநாயனர் தமது தேவாரத்தில் கூறி யிருத்தலானும், கி. பி. 5-வது நூற்றுண்டுக்கிப்பாலும் 7-வது நூற்றுண்டுக் கப்பாலும் இருந்தவரெனத் துணியப்பட்ட சம்பந்தமூர்த்தி நாயனருக்குச் சுந்தரர் பிற்பட்டவராதலாலும், சுந்தரர் சங்கத்திற்கு நெடுங்காலம் இப்பாற்பட்டவர் என்பது தேற்றம்.

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என்ற நல்வழி வெண்பாவில் மூவர்தமிழும் என்பது மூவர் தேவாரத்தை யாதலால் சுந்தரமூர்த்தியாருக்குப் பின்னரும் ஔவையார் இருந்தனர் என்பதும் உறுதியாகின்றது. இவர் பின்னும் குலோத்துங்கச் சோழராஜன் காலத்திலும் இருந்தாரெனின் அதிசயம் இன்னும் அதிகரிக்கின்றது.

(இன்னும்வரும்)

உ

சிவமயம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருவேநமஃ

# திருவானைக்காவுலா.

முன்முறையிற்பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 141 | 14 | மைகாசி | வைகாசி |
| 142 | 17 | னலகிய | னல்கிய |
| ,, | 32 | வட்டயிட்ட | வட்டமிட்ட |
| ,, | 34 | யாமென்று | யாமென்ற |
| 143 | 11 | முன்றிகூக்கு | மூன்றினுக்கு |
| ,, | ,, | மூடிருனே | மூடிருளை |
| ,, | 19 | செல்வி | செவ்வி |
| ,, | 29 | சொங் | சோங் |
| ,, | 30 | தப்பே | தவப்பே |
| ,, | ,, | கோடி | கொடி |
| ,, | 35 | மயாந்தன | மாய்ந்தன |
| ,, | 37 | மனேகம் | மனேகம் பிறங்கப் |
| ,, | 4 | புங்கவங்கன் | புங்கவங்கள் |
| ,, | 12 | வெழிலி | மெழிலி |
| ,, | 13 | கழ | கழு |
| ,, | ,, | பேரி | யேறி |
| ,, | 15 | வேற | யேற |
| ,, | 24 | கொணர்ந்திரு | சொணர்ந்ததிரு |
| ,, | 30 | நேரிலன் | நேரிலான் |
| ,, | 33 | லுளை | லுளைக் |
| ,, | ,, | கரனகப் | காரளகப் |
| 144 | 6 | யொய் | மொய் |
| ,, | 14 | கூளு | கூளி |

சிலவிடங்களில் தனிச்சீர்க்குமுன் கோடிட்டுக்கொள்க.

அங்கணுல கெல்லா மடக்கு மராவிவர்க்குக்
கங்கண மான கவின்பாரீர்—தங்கைக்கு
வாய்த்தமண வாளனு மென்றறிந்து *மைத்துனனர்
சாத்திய வங்கண்மணித் தார்பாரீர்—நேத்திரங்கள்
மூன்றினிடை யோட முயன்ற விருண்முறிபோற்
றேன்றும் புருரத் திணைபாரீர்—வான்றரளத்
தோடிருந்த †காதுறைவார் யாழிசையோர் சோதிகரத்
தூடிருந்து தாவு முழைபாரீர்—தாடொழுத
சேகரத்த ராணுர்தஞ் சென்மவினைக் காடீர
மாகரத்தி லேந்து மழுப்பாரீர்—பாகத்தில்
நன்றாய்க் குடியிருந்து நாதனையுங் கங்கையையும்
ஒன்றாக்கி விட்ட வுமைபாரீர்—நின்றேத்தும்

* திருமால்.

† 'பண்ணுலாமிருவரிசைகொ ணின்செவியிற் பாணிமாலொலியு மேற்றிலையோ' என்பதனுற் காண்க. யாழிசையை ஓர்கின்ற சோதியாகிய எம்பெருமான்.

தையலார் மேனியெலாந் தன்னிறமாய்த் தோற்றுவிக்குந்
துய்யபூங் கொன்றைத் தொடைபாரீர்—பையவெனச்

செல்வார்தங் காதலெலாந் தென்னனைக் காவார்க்குச்
சொல்வா ரெமக்கருளீர் தோளென்பார்—வில்வாங்கி

எண்கொண்ட பூங்கணைவே ளெய்தவடுத் தேவரீர்
கண்கொண்டு பாரீர் கடிதென்பா—ரொண்கண்கள்

செங்காலிற் சாத்தித் திருந்தமா லாமெமக்குச்
*சங்காழி தாரீர் தனித்தென்பார்—வெங்காதற்

பேதையர்மட் டில்லையோ †பின்னிரக்கஞ் செய்வாரென்
றோதுதிரு நாம முமக்கென்பார்—தாதிதழித்

தேமாலை மார்பீர் செழுநீர்த் திரளாகில்
யாமாட வொட்டாத தென்னென்பார்—கோமானே

வெங்கைவே ழஞ்செய்த பூசைதனை வெவ்வினையேங்
கொங்கைவே ழஞ்செய்யக் கொள்ளென்பா—ரெங்கள்

செழுநீர்த் திரளார் திருமேனி யெல்லாங்
கழுநீர்த் திரளாகக் காண்பா—ரழுநீர்க்

கடலிற் றனிமையினு கத்தைக்காண் பார்பூ
மடலிற்கை வைப்பார் மருள்வார்—வடிவழக

ருற்று ரெமக்கென் றுருவெளியி லோடிப்போய்
முற்று முலையின் முயங்குவார்—சொற்றுன்

அயர்வார் கலைநா ணகல்வா ரறிவு
பெயர்வா ரவரிலொரு பேதை—கயிலைக்

## பேதை.

கடவுள் பகைவன் களவுறா றன்னை
யடிவரவு திட்டு ‡ மலேகம்—புடவிபுகழ்

சீரானைக் காவான்த்ரி கோணு சலப்புறத்துப்
பேரானை மீனுப் பிடிக்குருளை—சூராலங்

காட்டிற் பயினடத்தோன் கச்சி§யே காம்பரத்துக்
கோட்டிற் பயிலாக் குயிற்பிள்ளை—மூட்டமரின்

மண்டலகைச் சேனையோன் மாணிக்க மாமலைசூழ்
கொண்டலிடிக் காடாக் குழாமஞ்ஞை—முண்டகக்கண்

என்னனைக் கன்று ரிமையத் தராதலத்து
மன்னுத சஞ்சீ வனிக்கன்று—தன்னே

* சங்காழி - சங்கசக்கரம் ; இங்கே வளையும் மோதிரமும். திருமாலுக்குப் பஞ்சாயுதமும் சிவபெருமானளித்தவையே ; இவ்வுண்மை 'தார்சாக்குஞ் செஞ்சடையான் சங்கரிக்கு நாள் வளைமால் - பார்காக்கத்தந்த படையைந்தும்' எனமேற் பெதும்பைப் பருவத்துக் கூறுதலானும் விளங்கும்.

† 'பின்னிரக்கஞ் செய்வார்' என்பதனை 'உலகமெல்லாம்' பெற்றானைப் பின்னிரக்கஞ் செய்வான்றன்னைப் - பிரானென்று போற்றாதார் புரங்கண் மூன்றுஞ் - செற்றானைத்திருவானைக் காவுளானைச் - செழுநீர்த் திரளைச் சென்றாடி னேனே.' என்னும் ஆளுடைய வரசுகள் திருத்தாண்டகத்தாலுணர்க.

‡ அலேகம்-வெள்ளேடு.

§ ஏக ஆம்பிரம்-ஒற்றைமாமரம்.

ரடியார்க் கெளியா னயன்மேவு பொய்கைப்
படியார் களியன்னப் பார்ப்பு—விடையான்

சடையி லடங்குஞ் சலம்போற் றடத்து
ணிடையி லடங்கு * மிறைபோல்—வடதருவின்

வித்தி லடங்கும் வினையம்போன் மேகசரீ
ரத்தி லடங்கு மசனிபோ—லத்தி

யுழையி லடங்கிய வோங்கல்போ லூதுங்
கழையி லடங்குங் கனல்போல்—விழைபொய்கைத்

தோயத் தடங்குந் துணைத்தா மரைமுகைபோற்
காயத் தடங்குங் கனதனத்தாள்—† தாயிற்

சிறந்தபிரா னல்லாத தெய்வங்கள் போலே
யிறந்து பிறக்கு மெயிற்றாள்—நறுங்கொன்றை

நீரக்கொள் வேணியர்பைஞ் ஞீலி வனத்திலதி
காரங்கொள் ளாயமன்போற் ‡ கண்ணினாள்—தேரிற்

பருதி யகன்றகலாப் பக்குவத்திற் கங்குற்
குருளை யனைய குழலாள்—கருதிற்

பெரிய வடநூற் பிராகிருத பாடைக்
குரிய குதலை யுரைப்பா—ளெரிகின்ற

நந்தா மணிவிளக்கை நாடுங் குரலளிப்பொற்
செந்தா மரையென்று சிந்திப்பாள்—முந்துகதிர்

துன்றிச்சு ரக்கடவு ரேத் தெழுந்தோறுங்
குன்றிச்சு டென்றள்ளக் குந்துவா—ளென்றும்

மகத்தி லெழும்பிறையை வாவென் றுரைப்பா
ளகத்தி முகைகண் டயிர்ப்பாள்—மிகுத்த

செழுங்கமுகின் செந்தாற்றைத் தீயென்று § வண்டற்
குழந்தையைக்கொண் டேகக் குறிப்பாள்—முழங்கும்

ஒருவ ரிதற்கு ளுளரென்று மென்றோற்
கருவி யுடைக்குங் கருத்தாள்—நிரைமகுட

மாட மணிமுகட்டிற் கார்கண்டு வண்ணமயி
லாட வளைக்கைவிரித் தாடுவாள்—கூடல்வாய்த்

தொல்லானைக் காவுடையான் சூழ்ந்தவிளை யாடல்போற்
கல்லானை முன்னங் கரும்பளிப்பாள்—முல்லைக்

கொடிக்குயின்ற பந்தருழைக்||கோட்டுக் குழிசி
யிடைப்புளின வல்சியுலை யேற்றி—யடர்த்தீதரளச்

* நரசிங்கமூர்த்தி.

† சிவபெருமானது பதித்தன்மை மிகவும் அருமையாக விளக்கியவாறுகாண்க.

‡ பிறரை வசிகரிக்குந் தன்மையில்லாத கண்ணென்பது கருத்து.

§ வண்டற்குழந்தை - மரப்பாவை ; வண்டல் - மகளிர்விளையாட்டு.

|| கோட்டுக்குழிசி - சங்கமாகிய பானை. புளினவல்சி - மணலரிசி. கோடு - சங்கம் ; கோட்டுக்குழிசி என்பதை 'நந்தான் கழிந்தபெருங் கருங்குழிசி' என்னும் பெரிய புராணத்தாலுணர்க.

சிற்றி விழைத்துச் சிறுசோ றமைத்தருந்தச்
சுற்றில் விருந்தழைப்பாள் சோதிமணி—முற்றத்து
வந்தன ளவ்வளவில் வாய்த்தசிறுத் தொண்டர்பால்
முந்த விருந்துண்ட மூர்த்தியான்—றந்திவனத்
*துள்ளான்மண் காக்கைக் குரியா னிலும்வலியான்
அள்ளா விடமுன் பருந்தினேன்—வெள்ளானை
பூசிக்க வீடளித்துப் புன்சிலந்தி சூடுதற்கு
மாசித்ர மௌலி வழங்கினேன்—தேசுதிகழ்
தீத்திர ளெங்கள் செழுநீர்த் திரடேவர்
பூத்திரள் சிந்திப் புடைசூழ—வத்துமறை
நாற்றுரகத் தேற்றதல ஞாலத்துநாணுகித்
தோற்றுரகத் தேற்றுத் துவசத்தன்—வேற்றுச்
சுடருருளைத் தேரின்மேற் றேன்றுதலு மீன்றோர்
வடமணியல் குற்றேரின் வந்தா—ளுடனே
தொழத்தொழுது பூத்தூவத் தூவிமட மாதர்
நிழற்குள்ளி தானுக நின்றாள்—தழற்கரத்தோன்
கொன்றைச் சடாடவியுங் கொக்கிறகு மக்கணியுங்
† கன்றுக்ர வாளரவுங் கச்சபமுஞ்—சென்றசென்ற
எல்லா வுகாந்தத்து மீசற் கொருதிவசஞ்
செல்லாது காட்டுஞ் சிறுபிறையு—நல்லவிசை
வாணர் படைவீடு முச்சுடரின் மண்டலமுங்
காணரிய நீலமணிக் கந்தரமு—மாணிக்கக்
கேயூர வாகு கிரிகிளையு மானுமொரு
மாயூர நீங்காத வாமமுஞ்—சேயவொளித்
தெக்கண பாகமுஞ் செங்கைத் தமருகமும்
அக்கினியு மக்சணியு மாகமு—மொக்கச்
செழியா விருமென்று சேர்க்குமடி யார்க்கு
வழியான வுந்தி மடுவும்—உழுவை
யதளுடையு மம்மலத்து ளாடிச் சிவந்த
சத்தளமுங் கண்டுருகித் தானே—புதிய
இவனா விருந்தழைமி னென்றீ ளதகேட்
டுவகை மிகுந்தன்னை மா ருன்போற்—றவமுனிவர்
மாத ரிடவறிந்த ரில்லையோ மால்கொண்டா
யாதரவா னியமைத்த வாரமுத—மேதினிதா
னன்றோ வதுபரமற் காகா தவர்விடைக்கா
மென்றோத வேதிவர்க்கா மென்று—நின்றோர்வாளைத்
தாலால முண்டுகளித் தாரமுத முண்டுபெத
னலா * நா ளுண்ணு நவமதியு—மேலான
ஆதிப் பெருஞ்செல்வர்க் கன்னமே யேதரிது
பேதைப் பருவம்போய்ப் பேரணங்காம்—போதழைத்து
வேண்டிய வின்ப விருந்திடுநீ யென்றளவிற்
காண்டகுதேர் வீதி கடந்தா—லாண்டவர்க்கிங்
கூட்ட நினைத்தா ளுமைபோல வென்றுவந்து
வாட்ட நினையா மதன்சென்றான்—கூட்டத்து
வல்லிய ரெங்கட்கு மாதே விருந்திடென
வில்லிடைக்கொண் டேகினு ரீண்டொருத்தி—அல்லி

## பெதும்பை

உறங்கணைவேள் வல்விற் கொருநாட் கொருநாட்
பிறங்குகரும் பன்னுள் பெதும்பை—நிறைந்தபொருள்
வித்தைபோ காதெனினும் வேனுலி லேசிறிது
தத்தைபோற் கற்றுத் தனித்துரைப்பாள்—மெய்த்து
நிரம்பாச் செயலா னெகிழ்ச்சியான் முக்க
ணரன்பார்த்த வம்புயப்போ தன்னுள்—திருந்தவிவ
ளாலிங் கனமே யமையு மெனத்தேவர்
மாலிங் குறலாம் வனப்பினுள்—நூலன்பு
மையொத்த கண்டர்மேல் வையா தவர்மனம்போல்
மெய்யொப் பனைதான் விரும்புவாள்—மையல்
தருசுரத மும்பிறவுந் தான்வளர்த்த வெட்டுக்
குருகுகளிற் கண்டறிந்து கொள்வாள்—அரனுர்,
சகங்காயுங் கூத்துச் சமைந்து திரைநின்று
முகங்காட்டி யன்ன முலையாள்—அகங்கைப்
பலியுகந்த தம்பிரான் பத்தியர்போல் மெய்த்த
கலியுகந் தட்டாத கண்ணுள்—†சிலைமகரங்
காட்டுதலை மீனலவன் கன்னியிலுண் டாகுமழைக்
கூட்டரவிற் கூடுங் குழலினுள்—வீட்டடுத்த

---

* உள்ளான், காக்கை, வலியான், பருந்து எனப்பறைப்வ பெயர்கள் தொனிப்பது காண்க.

† முன்னசசிட்டார் கொண்டபாடம், 'கன்று கதிர்வாளரவு' ஏட்டுப்பிரதிகளில் ஒற்று முதலியஇல்லாமல் 'கனறுகாகிவாளாவு' என்றிருக்கின்றது. ஙிகரத்தைத் திகரமாகக்சொண்டால் 'கன்றுகதிர்' என்னலாம். ஆயின் முன்னடி 'கொன்றைச் சடாடவி' யென்றிருப்பதால், அதற்கேற்ப நெகிழிசையில்லாமல் 'கன்றுக்ரவாளரவு' என்று யாம்பாடங் கொண்டோம். உக்ரம் என்பதை உக்கிரம்என்று வெண்டளைநோக் காதெழுதப் படுவதுபோல ஏட்டுப்பிரதிகளிற் பல இடங்கள் உண்டு.

* நாளுள்ளு நவமதியின் என்றம்பாடம்.

† தனுசு, மகரம், துலாம், மீனம், கடகம், கன்னி இவை கார்முகராசிகள்; இக்காலத்தில் மேகங்கள் கருமையடைந்து கால்வாங்கி நிற்கும்.

Madras:—Printed by P. C. Kalliana Sundara Nadar, at the C. N. Press, 4, Guruvappan Street, Black Town, and Published by T. A. Swaminatha Aiyar, Armenian Street.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவ்கரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஆம் மகாராணியாரின் வைர ஜூபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1898ஆம் ஜனவரிமீ. { இலக்கம்-அ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுரவேநம:

## ஸ்ரீஹரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரம்.

### கஞ்சனூர் என வழங்கும் ஸ்ரீகஞ்சாபுர மான்மியம்.

பிரமாவின் சரீரமாகிய பிரமாண்டத்தின் பிங்கலை நாடியாகிய இமாசலத்தின் பாலதாம் உத்தரகைலாச முதல் இடைநாடியாகிய இலங்கையின் பாலதாம் தக்ஷிண கைலாசம் இறுதியாய்க் கிடந்த பாடல்பெற்ற ஸ்தலங்கள் இருநூற்றெழுபத்திரண்டனுள்ளே கஞ்சாபுரம் என்னும் ஸ்தலம் ஒன்றுளது. இது அகஸ்தியருடைய கையிலிருந்த கமண்டலத்தை விநாயகக்கடவுள் காகவடிவாய்ச் சென்று கவிழ்ப்ப, சையகிரியினின்றும் பாயும் அதியுத்தம திவ்யதீர்த்தமாகிய காவேரியாற்றுக்கு வடகரையிலேயுள்ளது.

(க) அக்கினீசுவரர் பிரமாவுக்கு அருளினமை வருமாறு:—முன்னோர் காலத்திலே பிரமா தமக்குச் சிருஷ்டித்தொழில் செய்யும் வன்மை இல்லாதொழிந்தமையால் அதனையடையும் பொருட்டு ஸ்ரீகைலாசத்தை அடைந்து கவலைகொண்டிருந்தார். அப்பொழுது "அன்பனே! நீ பூலோகத்திலே காவேரிதீரத்திலுள்ள திவ்யக்ஷேத்திரமாகிய கஞ்சாபுரத்தை அடைந்து தவஞ்செய்குதி" என ஓர் அசரீரிவாக்கெழுந்தது; அது கேட்ட பிரமதேவர் மகிழ்ச்சிகொண்டு அந்த ஸ்தலத்தை அடைந்து எவராலுஞ் செயற்கரிய தபசுசெய்து கொண்டிருந்தார். இவ்வாறு நெடுங்காலந் தவசுசெய்துகொண்டிருந்த போது கஞ்சாபுரீசுவரர் அவர் செய்த தபசு கண்டு பிரீதிகொண்டு, அவர் முன்னே எழுந்தருளி, "பிரமனே! உன் நியமத்தினாலும் பூசையினாலும் மகிழ்வடைந்தேம்; உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்குதி" எனத் திருவாய்மலர்ந்தருளினார். அது கேட்ட பிரமா கஞ்சாபுரீசுவரரை நோக்கி, "எம்பெருமானே! அடியேனுக்கு இப்பொழுது சிருஷ்டிசாமர்த்தியத்தைப் பிரசாதித்தருளல் வேண்டும்" என்று வேண்டினார். அதற்குக் கஞ்சாபுரீசுவரர் "உனக்கு அச்சிருஷ்டி சாமர்த்தியத்தை யருளினேம்" என்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினார்.

(உ) இந்திரன் வீரகத்திபாபம் நீங்கப்பெற்றமை வருமாறு:—ஓர்கால் இந்திரன் விருத்திராசுரனைக்கொன்றமையினாலே தன்னைப்பற்றிய வீரகத்தி என்னும் பாபத்தை ஒழிக்கும் பொருட்டு யாண்டும் உள்ள புண்ணியஸ்தலங்கடோறும் சென்று பணிந்தும் தன் பாபம் நீங்கப்பெறாமையால் வருத்தமுற, ஆகாயவாணியானது "இந்திரனே! காவேரிக்கு வடகரையிலேயுள்ள கஞ்சாபுரத்தை அடைந்து தவம் இயற்றுதி" என்று அருள், அதுகேட்டு இந்திரன் அத்தலத்தை அடைந்து காவேரி நதியிலே படிந்து, கற்பகநாயகி யம்மையாரோடு அக்கினீசுவரப் பெருமானைப் பூசித்து, தன் வீரகத்திபாபம் நீங்கப்பெற்றுச் சுவர்க்கலோகத்தை அடைந்தான்.

(ரு) அயன்முதலியோர் மகாபாதகந் தீர்ந்தமைவருமாறு:— வித்தியுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூன்று சகோதரர் சிவபிரானை நோக்கித் தபசுசெய்து வழிபாடாற்றி, அவர் அருளினாலே முப்புரங்களையும் உடையராயினர். அவர்களைச் செயித்தல் தேவர்களுக்கும் மற்றைய அசுரர்களுக்கும் அரிதாயிற்று. அதனால் இந்த வித்தியுன்மாலி முதலிய மூவரும் உலகிலுள்ளோரையெல்லாம் உபத்திரவஞ் செய்வாராயினர். இந்த உபத்திரவத்தைச் சகிக்கலாற்றாது பிரமா இந்திரன் முதலியோர் வைகுண்டலோகத்தில் எழுந்தருளிய விஷ்ணுமூர்த்தியை அடைந்து வணங்கித் துதித்து அவர்க்கு முன்னே அஞ்சலியஸ்தராய் நிற்ப, விஷ்ணுமூர்த்தியானவர் முகம் வாடிநிற்கும் அவர்களை அன்பினோடு நோக்கி, "நீவிர் எதன் பொருட்டு நம்மிடத்து வந்தீர்கள்? உங்களுக்குநேர்ந்த இடையூறு இரகசியமாயிருப்பினும் என்! பராசியமாயிருப்பினும் என்! அதனை ஒழிக்கும் பொருட்டுச் சொன்மின்" என்றார். அப்போது தேவர்கள் அச்சமிகுதியோடு அவர் முன்னே நின்று, "மிகுந்த கருவமுள்ள முப்புரத்தசுரர்களாலே நாங்கள் மிகவும் வருந்திவிட்டோம்; எப்பிரகாரத்தினாலேனும் அவர்களை நாசஞ்செய்தருளல் வேண்டும்" என்றார்கள். விஷ்ணு அவர்கள் சொல்லியதைக் கேட்டு, "தேவர்களே! அவ்வசுரர்களுக்குப் பயந்தே நாமும் மகாமேருமலைக்கொடுமுடியின்கண்ணே நெடுங்காலம் மறைந்திருந்தோம். பின்னர் நீங்கள் இங்கே வருவீர்கள் என்றோர்ந்தே நாமும் இங்கே வந்திருந்தோம். நாமெல்லாம் இங்கிருப்பதை அவ்வசுரர்கள் அறிந்தால் இடையூறு செய்வார்கள். ஆதலினால் நாமெல்லாம் அம்மேருமலைக்குத் தானே போவோம் என்னும் இனியவார்த்தை கூறி, அங்கே சென்று அவ்வசுரர் பெருமைகளையெல்லாம் இவ்வாறு சொல்வாராயினர்.

"அவ்வசுரர்கள் எக்காலமும் நல்லொழுக்கமுடையர். பஸ்மஜாபாலோபநிஷத மந்திரவிதிப்படி காலை மாலை உச்சி என்னும் முப்போதினும் விபூதிகொண்டு உத்தூளனதிரிபுண்டரஞ் செய்பவர்கள். திரிகாலமும் அன்பினோடு சிவபூசை செய்பவர்கள். சிவ விரதங்களையும் நக்த விரதங்களையும் அநுஷ்டிப்பவர்கள். வைதிகாக்கினி வளர்ப்பவர்கள். வீடுகடோறும் புரோடாச அவிசுகளை அக்கினியிலே ஓமஞ் செய்து அதனாலெய்திய தூமத்தினாலே தூயர்கள். எல்லோரும் ருத்திராக்ஷமாலை பூண்பவர்கள். பஞ்சாக்ஷரசெபஞ் செய்பவர்கள். சிவபூசையின் மகிமையை இத்துணையதென்று அறிந்தவர்கள். சிவபுராணங்களைப் படித்து அவற்றின் பொருள்களை ஆராய்பவர்கள். சிவநாமத்தை உச்சரிப்பவர்கள். சிவனடியாரிடத்தே சதாகாலமும் அன்புடையவர்கள். சிவனடியாரைத் தரிசித்தலினும், அவரை நமஸ்கரித்தலினும, அவரைப் பூசித்தலினும் எப்பொழுதும் பற்றுடையர்கள். சிவாகமவிதிப்படி சிவபூசை செய்தலின் விருப்புடையர்கள். பிரதக்ஷிணநமஸ்காரங்களையும் சிவகைங்கரியங்களையும் எக்காலமுஞ்செய்பவர்கள். அவர்கள் மனைவியரும் அவ்வியல்பினரேயாம், இவர்கள் தங்கள் நாயகர்களுக்குத் தொண்டு செய்தலிற் பற்றுடையர்கள் சிவபூசை பஞ்சாக்ஷரசெபஞ் சிவதிருப்பணிஎன்பவை செய்தலிலே பற்றுடையர்கள். கற்பிலே அருந்ததியினுஞ் சிறந்தவர்கள். இத்தவவிசேஷமுடைய அவ்வசுரோத்தமர்களை எவ்வாறுதான் சிவபெருமானும் செயிக்க வல்லராவர்! தேவர்களே! அவர்கள் நியமத்தை அழிக்க நினைத்தாலும் அந்நினைவு அகாலமரணத்தையும் நரகத்துன்பத்தையும் நிச்சயமாய் விளைப்பதே யாகும்" என்று இவ்வாறு விஷ்ணு சொல்ல, அதனைக்கேட்ட தேவர்களெல்லாம் பயத்தினாலே நடுநடுங்கி அஞ்சலியஸ்தராய் அவரை நோக்கி, "சுவாமீ! எம்மை ரக்ஷிக்க ரக்ஷிக்க" என்று பின்னரும் வேண்டினார்கள். அப்போது மகாவிஷ்ணு கருணாநிதியாகிய மகாதேவரைத் தியானித்துப் புத்தராயினர். அப்போது நாரதர் அப்புத்தருக்குச் சிஷராயினர். பின்னர் விஷ்ணுவானவர் தமது சிஷராகிய நாரதரோடு முப்புரத்தை அடைந்து, அங்கே அவ்வசுரர்களுக்குச் சிவபக்தியை நழுவச்செய்கின்ற கன்மங்களை உபதேசித்தார். அவ்வுபதேசத்தைக் கேட்ட அசுரர்களெல்லாம் அப்புத்தருடைய மாயையினுள்ளே சிக்குண்டு மயங்கிச் சென்மாந்தரங்களிலே பயன் விளைப்பனவாகிய வைதிககன்மங்களையெல்லாம் துறந்தொழிந்தார்கள்: அவ்வசுரப் பெண்களும் அப்புத்தசிஷ்யருடைய வாக்கினாலே மயங்கிப் போய்க் கற்புநெறிகோடி வியபிசாரிகளாயினார்கள். அம்முப்புரத்தில் மூவர் மாத்திரமே சிவபூசையை விடுத்தாரல்லர். குருவும் சிஷனுமாகிய விஷ்ணுவும் நாரதரும் தாங்கள் முடிக்க நினைந்துவந்ததை முடித்துவிட்டு மீண்டும் தம்வழியே செல்லும்போது, நாரதர் ஆச்சரியத்தோடு விஷ்ணுவை நோக்கி, 'சுவாமீ, நும் மாயையைக் கடத்தல் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும், மனிதர்களுக்கும் அரிதாமன்றோ. அங்ஙனமாயினும் மூவசுரர் மாத்திரம் நும்மாயையுட் சிக்குண்டாரல்லர்" என்று சொல்லிக்கொண்டு இமாசலத்தின் சிகரத்தை அடைந்தார். அங்கே விஷ்ணு தேவர்களை நோக்கி, "திரிபுரத்தசுரர்கள் வைதிககருமங்களையெல்லாம் விட்டுப் பௌத்தாசாரம் கடைப்பிடித்து மயங்கிப்போமாறு செய்துவிட்டு வந்தோம்" என்றார். அதன் பின்னர் விஷ்ணுமுதலிய தேவரெல்லாம் இவையனைத்தையும் சிவபிரானுக்கு விண்ணப்பஞ்செய்யுமாறு திருக்கைலாசத்துக்குப் போய், அங்கே கைலாசமலையின் மீது ஏறுதற்கு வன்மையிலராய் இது என்னை! ஆச்சரியம்! என்று ஆலோசித்து, ஒவ்வொருவரும் தத்தம் அநாசாரங்களை நினைந்து வருந்திநின்றார். நிற்கும்போது "நீவிர் பரமான்மாவாகிய சிவபெருமானுடைய அடியார்களுக்கு அபராதஞ் செய்தமையினால் இம்மலையின் மீது ஏறவன்மையிலராயினீர்" என்று பிரம விஷ்ணுவாதி தேவர்கேட்குமாறு அசரீரிவாக்கு எழுந்து ஓய்ந்தது. அப்போது அவரெல்லாம் அவ்வபராதத்தைப் போக்க நினைந்து, இமாசலத்தின் சிகரத்தைஅடைந்து நெடுங்காலம் உக்கிரதபசு செய்தார்கள். செய்தும் என்னை! சிவபிரான் அவர்களுக்குத் திருவருள் பாலித்தாரில்லை. அவர்கள் பின்னர்த் தாங்கள் செய்த பாபமிகுதியைநினைந்து சலமத்தியிலே நின்று சதருத்திரீயத்தைக் கோடி முறை செபித்தார்கள். செபிக்கவே, நீவிரெல்லாம் காவேரிக்கு வடகரையிலுள்ள கஞ்சாபுரத்தை அடைந்து அங்கே காவேரிதீர்த்தத்திலே படிந்து சிவபிரானைப் பூசியுங்கள். அப்போது உங்களைப்பற்றிய மகாபாதகம் ஒழிந்துபோய்விடும்" என்று அசரீரிவாக்கெழுந்தது. அது கேட்டுத் தேவர்கள் அந்தக் கஞ்சாபுரத்தை அடைந்து காவேரிநதியிலே ஸ்நானஞ்செய்து,

விபூதியை உத்தூளன திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராக்ஷம் பூண்டு, நியமத்தோடு சிவாலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து எழுந்து ஆலயத்தினுள்ளே பிரவேசித்து அக்கினீசுவரப் பெருமானை அன்பினோடு பூசித்து வழிபட்டார்கள். அப்போது சிவபிரான் பூதகணங்கள் புடைசூழ இடபாரூடராய்க் கற்பகநாயகியாரோடு சிவலிங்கத்திலே ஆவிர்ப்பவித்து, "உங்களுக்கு வேண்டிய வரத்தைக் கொடுக்குமாறு எழுந்தருளினேம்" என அவர்கள் மனசையெல்லாம் கவரத்தக்கதாகக் காம்பீரியவாக்கினால் உரைக்கத்தொடங்கி "நீங்கள்செய்த மகாபாதகம் தபசினாலும் தீராது போக, நீவிர் இந்தக் கஞ்சாபுரத்திலே நம்மை விசேஷமாகப் பூசித்தமையினாலே, தேவர்களே! நீங்கள் செய்தது மகாபாதகமாயவிடத்தும் அதற்குப் பிராயச்சித்தம் உடனே நேர்ந்துவிட்டது. ஆதலினால் எத்தலங்களினும் இத்தலத்திலே நமக்குப் பிரீதி மிகுதியும் உண்டு. இவ்விடத்திலே நீவிர் எக்காலமும் எம்மைப் பூசியுங்கள். உங்களை வருத்திய அசுரர்களையெல்லாம் நாம் சீக்கிரம் நாசஞ் செய்துவிடுவேம்" என்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினார்.

---

## ஸ்ரீஹரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரம்.

(ச) அரதத்தாசாரியர் இறந்துபோய இருபிராமணச் சிறுவர்களை எழுப்பினமை வருமாறு:—மேலே போந்தவாறு பெருமை வாய்ந்துள்ள கஞ்சாபுரத்திலே பூவுலகமெங்கும் மிகுந்த புகழ்படைத்தவரும், சகலாகமங்களின் தாற்பரியங்களை நன்குணர்ந்தவரும், பிராமணருமாகிய அரதத்தாசாரியர் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் இருக்குங் காலத்திலே சிவப்பிரியர் என்னும் ஓர் பிராமணரும் இருந்தார். இவர் தமது ஆசாரநெறியிலே வழுவின்றி ஒழுகுபவர். பஞ்சயஞ்ஞம் செய்பவர். வைதிகவிபூதிகொண்டு உத்தூளனந் திரிபுண்டரமாகத் தரிப்பவர். அன்பினோடு முப்போதும் சிவபூசைசெய்தலிலே பற்றுடையவர். உருத்திராக்ஷமாலை பூண்பவர். பஞ்சாக்ஷரசெபஞ் செய்பவர். சிவலிங்கப்பெருமானைப் பிரதக்ஷிண நமஸ்காராதி செய்து வழிபடுபவர். சிவபக்தர்களுக்குத் தொண்டுபூண்பவர்.

இத்துணைச் சிறப்பினராகிய சிவப்பிரியருக்குச் சுமதி தருமபாலர் என்னும் இரு புதல்வர்கள் உளராயினார். இவ்விருபாலரும் அறிவுடையர், அழகுடையர், அக்ஷராப்பியாசஞ் செய்தலில் நிபுணர், மாதுரியத்தோடு கேட்கத்தகும் இனிய மொழியுடையர், பார்ப்பவர் கண்களுக்கெல்லாம் ஆனந்தம் விளைப்பவர், நாநாவித வஸ்திராபரணங்களைத் தரிப்பவர், தமது சிறுகுழந்தை விளையாட்டுக்களால் தமது தந்தை தாயைப்பிரீதி செய்பவர். இவ்விருவரும் முறையே ஐந்தும் ஆறுமாம் வயசுடையராயிருக்கும் இந்தப் பாலிய தசையிலே தைவாதீனமாய் விஷூசியினாலும் சர்ப்பவிஷத்தினாலும் முறையே தொடக்குண்டு இறந்துபோயினார். அதுகண்ட சிவப்பிரியர் சோகமேலீட்டினாலே மூர்ச்சையடைந்தார். பின்னர் எழுந்து அவ்விருகுழந்தைகளையும் கட்டியணைத்து, "முற்பிறப்பிலே யான் பெரியோர்க்கு யாதாயினும் துரோகஞ் செய்தேனோ, ஐயோ! கொடியேனுடைய இருபாலரும் ஒரே காலத்தில் உயிர்துறந்தார்களே! இரக்கமில்லாது பிறகுழந்தைகளைக் கொலை செய்தேனோ! பால் குடிக்க விருப்புடைய குழந்தைகளை அங்ஙனம் குடிக்காதபோக இரக்கமின்றித்தனங்களிலே பாலூறவொட்டாச் செயல்களைச் செய்தேனோ! பிறர் ஈட்டிவைத்த பொருளை அபகரித்து விட்டேனோ! பிறர் பொருளை முன்னர் மகிழ்வினோடு கடனாக வாங்கி, பின்னர் வஞ்சனையினால் அதனைக் கொடாது ஒழிந்தேனோ! கூலிக்காரரைக்கொண்டு அநேக கிருஷிகத் தொழில்களைச் செய்வித்துவிட்டு அவர்க்குத் தினந்தோறுங் கொடுக்கற்பாலதாகிய கூலியைக் கொடாதொழிந்தேனோ! சபத்தினி குழந்தைகளுக்கெல்லாம் அசூயையினாலே விஷமுதலியன ஊட்டிப் பிராணவதைசெய்து ஒழிந்தேனோ! சபத்தினி குழந்தைகள் பசியினால் வருந்தும்போது பொருமைகொண்டு என் கண்டபரியந்தம் அன்னத்தை மிச்சமின்றித் தின்று திணித்தொழிந்தேனோ! கொடியேனுடைய இரு பாலர்களும் ஒரே காலத்திலே உயிர் துறந்தார்களே!!! என்று புலம்பி அழுதார். "என்பாலர்காள்! நீவிர் எழுந்து என் சோகத்தைத் தீருங்கள்" என்பார். "உங்கள் சிநேக பாலர்கள் உங்கள் இருவரையும் படிக்க வரும்பொருட்டு அழைக்கின்றார்களே, நீங்கள் எழுந்து பாடங் கேட்குதிர்" என்றும் புலம்புவார்.

அப்போது அங்குள்ள மகாசனங்கள் ஒருங்குகூடி, அவர்கள் கவலையை ஒழித்தற்கும்,; அவ்விறந்த பாலர்களை வீட்டினின்று கொண்டுபோய்த் தகன சம்ஸ்காரஞ் செய்தற்கும் முயன்றார்கள். முயன்றும் என்னை! தந்தையாராகிய சிவப்பிரியர் அவ்விரு குழந்தைகளின் மேற்கொண்ட சோகத்தினால் வருந்தி, அவர் தகன சம்ஸ்காரஞ் செய்தற்கு இசைந்தாரில்லை. ஓமஞ் செய்தற்கும். சிவார்ச்சனை செய்தற்கும் உரியகாலம் தவறி அதீதமாகும்போது, அப்பாலர் விருத்தாந்தத்தை (சனங்கள் வாயிலாக அறிந்துகொண்ட) சுதர்சனாசாரியர் என்னும் பிள்ளைத் திருநாமத்தையுடைய அரதத்தாசாரியர் அங்கே எழுந்தருளி, சிவப்பிரியரை நோக்கி, "குழந்தைகளைத் தகனசம்ஸ்காரஞ் செய்யும் பொருட்டு வீட்டினின்றும் விரைந்துகொண்டு போக இசைவீராக" என்றார். அதற்கு அவர் ஆசாரியசுவாமிகளை நோக்கி, "யோகீசுவரரே! நான் அது செய்தற்கு இசையேன்" என்று சோகாக்கினியினாலே வெதும்பிக் கூறினார். அப்போது அரதத்தாசாரியர் அப்பாலர்களை எழுப்புகிறோம் என்று சொல்லி, விபூதி அபிமந்திரித்து அவ்விருவர் மீதும் அதனை இட்டார். இட்டவுடனே அவ்விருவரும் எழுந்து தூரத்திலே போய்க் கைகளைத் தங்கள் தலைகளின்மீது வகித்துக் கூப்பிக்கொண்டு நின்றார்கள். அது கண்டு அரதத்தாசாரியர் "நீங்கள் யாவர்? உங்கள் பெயர் என்னை? எதன்பொருட்டு நீங்கள் ஈண்டுவந்தீர்கள்" என்று கேட்டார். அதற்கு அவ்விருபாலரும் "நாங்கள் இழிஞர்; சுவாமீ! முற்செனனத்திலே எங்களுக்குள்ள பெயர்கள் நந்தனும் வீரனுமாம். நாங்கள் சிவப்பிரியருக்கு நெடுங்காலம் கூலிக்காரராகி வயலுக்கு உழவுத்தொழில் செய்தோம். களைபிடுங்கினேம். புல்லறுத்தேம். மாடுமேய்த்தன் முதலியன செய்தேம். பசிக்கொடுமையால்

எங்கள் குடும்பச்செலவுக்கு வேண்டற்பாலதாகிய கூலியைக் கொடுக்கும்படி கேட்டால், இப்போதன்றோ உங்களுக்குக் கூலி கொடுத்தேம்" என்று கோபித்து வாளாநிட்டுவார். (பின்னுங் கேட்டால்) கயிற்றினால் எங்களைக்கட்டி வேண்டிய மட்டும் தடிகளாற் புடைத்துவிடுவார். பிறருக்குத் தொழில் செய்து சீவனஞ் செய்யப் போதலும் கூடாமற் போயிற்று. எங்களுடைய பிதா எங்களை இவருக்கு விற்றுவிட்டார். இந்தச் சிவப்பிரியர் முன்னர்க் கூலிகொடாமையால் இச்சென னத்திலே அதனைப் பெறும் பொருட்டு இவருக்குப் புதல்வ ராய்ப்பிறந்தேம். இவ்வளவு காலத்துள்ளே பெறற்பாலதாய கடன் முழுதும் அடையப்பெற்றேம்" என்றார்கள். அதைக் கேட்ட ஆசாரியர் உங்களுக்குச் சாதி ஸமரணை எய்தியதின் காரணம் என்னை? என்றார். மகாமுனிவரே! சிவப்பிரியர் சகவாசத்தினாலே எங்கள் பாபம் நிவர்த்தியாய்விட்டது. காவேரிதீர்த்தத்திலே இறந்தமையினால் எங்களுக்குப் பிராமண சென்னமும் வாய்த்தது; இச்சிவப் பிரியருக்குத் தொண்டு செய்தமையால் சாதிஸ்மரணையும் எங்களுக்கு எய்திற்றுஎன்று அவ்விருபாலரும் சொன்னார்கள். அப்பொழுது சிவாஞ்ஞை யினாலே கோடிசூரியப்பிரகாசமுடைய ரத்னஸ்தம்பங்கள் ஆயிரம் நெருங்கவும், கிண்கிணிசாலங்கள் பிரகாசிக்கவும், தேவரம்பையர் குழுமவும், தேவவாத்தியங்கள் முழங்கவும் ஓர் விமானமானது அவ்விடத்தே அவ்விருவரையும் அழைத்துச் செல்லுமாறு போந்தது. சிவதூதர்கள் பாலர்காள்! உங்கள் இருவர்க்கும் அரதத்தாசாரியர் பாலித்த கிருபையினாலும், அவர் உங்களை விபூதிகொண்டு பரிசித்தமையினாலும், நீங்கள் சிவப்பிரியருக்குத் தொண்டு செய்தமையானும், ஸ்ரீகைலாசத்தை அடைய நேர்ந்தீர்கள் என்றார்கள். உடனே அவ்விருவரும் (மானிட சரீரம் விடுத்து) திவ்யசரீரமெடுத்து விமான மேற்கொண்டார்கள். சுதர்சனுசாரியரிடத்தும சிவப்பிரியரிடத்தும் அநுமதி பெற்றுக்கொண்டு அப்பாலர்கள் விரைந்து கைலாசத்தை அடைந்தார்கள். சனங்கள் இவவாச்சரியம் அனைத்தையும் பார்த்தார்கள். சிஷ்டாசாரமுடையராதலின் சிவப்பிரியர் அப்பாலர்களைச் சண்டாளரென்று கொண்டு அவர்களைத் தொட்டுத் தகனசம்ஸ்காரஞ் செய்ய உடன்படாதிருந்தார். அதுகண்ட அரதத்தாசாரியர்சிரித்துக்கொண்டு, ஐயரே! நீவிர் உமது சரீரத்தினின்று தோன்றியபாலர்களைத் தொட்டுத் தீகன சம்ஸ்காரஞ் செய்தற்கு உடன்படாதிருத்தல் என்னை? நீவிர் சிறிதும் சந்தேகிக்கவேண்டியதின்று என்று உபதேசித்து அவரைக்கொண்டு அவவிருபாலர்களின் தகனசம்ஸ்காரத்தைச் செய்வித்தார். கூலிகொடாத குற்றத்தையும், சிவபக்தர்களுக்குத் தொண்டுசெய்தலின் மாட்சியையும், அரதத்தாசாரியர் பெருமையையும் சனங்கள் மீட்டும் மீட்டும் சிந்தித்துத் தத்தம் வீடு சார்ந்தார். அரதத்தாசாரியர் மாத்தியான்னிகஞ் செய்து முடித்துக்கொண்டு அன்பினோடு சிவபூசை செய்யுமாறு விரைந்து தமது கிரகஞ் சார்ந்தார்.

(ரு) இருஷிகள் அரதத்தாசாரியர் சரித்திரத்தை விரித்துச் சொல்லுமாறு உபமன்னியுமுனிவரைக் கேட்டமை வருமாறு:—அரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரத்தை இருஷிகளாயினோரெல்லாம் கேட்டு ஆனந்தக்கண்ணீர் வாரச் சரீரமுழுமையும் உரோமாஞ்சங்கொள்ள, நாத்தழுதழுப்ப, உபமன்னியு மகாமுனிவரை நோக்கி, முனிவர்பெருமானே! உமது முகாம்போசத்தினின்று ஒழுகுந் தேனை எக்காலமும் செவிகளாற் பருகும் எங்களுக்கு இன்று நீவிர் சொல்லியருளிய அரதத்தாசாரிய சுவாமிகளுடைய மகரந்தரசம் எங்களுக்கு இன்னும் தெவிட்டியதில்லை. முனிவர் சிகாமணியே! சிறிது கடைக்கண்பாலித்துத் தருமார்த்த காம மோக்ஷங்களைப் பலிப்பிக்கும் அவருடைய சனனுதி விருத்தாந்தத்தை அடியேங்களுக்கு விரித்துச் சொல்லியருளல் வேண்டும். மேலும், பிருகுமுனிவர்சாபத்தினாலேசமஸ்தலோகரக்ஷகராகிய மகாவிஷ்ணு வானவர் பூமியின்கண்ணே இருபத்தைந்து அவதாரங்கொண்டாரென்று புராணங்களிலே முன்னரே சுருக்கமாகக் கேள்வியுற்றிருக்கின்றோம். அவ்விருபத்தைந்து அவதாரத்தின் ரூபம் என்னை? பிரயோசனம் என்னை? என்று ஆலோசித்துச் சொல்லல் வேண்டும்" சர்வஞ்ஞ சிகாமணியே! என்று வேண்டினர். "முனிசிரேஷ்டர்காள்! நீங்கள் அன்பினோடு நன்று கேட்டீர்கள், அதனைச் சிவப்பிரசாதத்தினாலே சொல்கின்றேம், சாவதானமாகக் கேளுங்கள்" என்று உபமன்னியுமுனிவர் சொல்வாராயினர்.

(சு) விஷ்ணு மந்தரமலையிலே தவஞ்செய்தமைவருமாறு:—முன்னொருகால் பிருகுமுனிவர் விஷ்ணுவைச்சபித்தமையால் அவர் மனம் நொந்து பூமியிலே அநேக அவதாரஞ் செய்தாரென்று உபமன்னியு சொல்லத் தொடங்கும்போது; முனிவர்கள் சாபம் அடைந்த பின்னர் அவ்விஷ்ணு மந்தரமலையை அடைந்தாரென்றும் கேள்வியுற்றோம், அதனையும் எங்களுக்குக் கூறியருளல் வேண்டும் என்று கேட்ப, உபமன்னியு இவ்வாறு கூறுகின்றார். பிருகுமுனிவர் சபித்தபோது விஷ்ணுவானவர் நடுநடுங்கி, உருத்திரரும், மகேசுவரரும், கணங்கள் புடைசூழப்பெற்றவரும், புகல் அடைந்தோரைக் காப்பவருமாகிய அருளாம்பிகாசமேத சிவபிரானைத் தமது உள்ளக்கமலத்திலே சிந்தித்து, கருடன்மீதிவர்ந்து தேவர்கள் வாசஞ்செய்வதாயும் மனோகரமாய குகைகளையுடையதும், கின்னரர்கள் உறையும் வனங்களையுடையதும், ஒலிக்கின்ற பற்பல அருவிகளையுடையதும், பற்பல கணங்களுக்கு உறையுளாகிய உத்தியானங்களை யுடையதும, சப்திக்கின்ற பற்பல பறவைகளையுடையதும், பலவகை விருக்ஷம் கொடி செடி என்பவற்றை அளாவிய பரிமள வாயுவையுடையதும், மனசுக்கு இனிமையும் இன்பமும் விளைப்பனவாகிய பாரிசாதங்களையுடையதும், பற்பல ரத்நக்குவியல்களையுடையதும், சுவர்ணப்பிரகாச தோரணங்களையுடையதும், ஸ்ரீகைலாசம் போல இலங்கும் அநேகாயிர பிராசாதங்களையுடையதும், இன்னும் இவை போன்ற அநேக வளங்களையுடையதுமாகிய மந்தரமலையை அடைந்து, அங்கே சுவர்ணக்குகையொன்றிலே சடையுடையராயும், முண்டிதராயும், மேகலையுடையராயும், பஸ்மதிஷ்டராயும் அமர்ந்து, அக்கினியை ஓம்பி, தினந்தோறும் திரிகாலங்களினும் ஸ்நானஞ் செய்து, கிருச்சிரசாந்திராயண விரதாதிகளை அநுஷ்டித்து தேகத்தைவாட்டியும், ஆயிரம் தேவவருஷம் வாயுபக்ஷணஞ் செய்துந் தவம் இயற்றுவாராயினர்.

(தொடரும்).

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## சித்தியாருரை.

---

### உலோகாயிதன் மதமறுதலை.

அறிவுதானுட லத்தின்வேறது
வாயிறந்துபி றந்திடின்
அறிவுமுன்புள திங்குவந்தும
றிந்திடாமைய தின்றெனின்
அறிவையோகன வத்துநீநன
வத்தையன்றுத ரத்திருந்
தறியுமவ்வறி வோமயக்கறி
வாதலாலறி யாதுகாண்.

(பொ-ரை.) 'அறிவானது இவ்வுடலத்தின் வேறுபட்டு இறந்தும் பிறந்துந் திரியுமாயின், முன்னுள்ளதாகிய அவ்வறிவு இப்பிறப்பிலும் அறியாமையின்றி அறிவேயாயிருக்கவேண்டும். அஃதில்லையே' என்று நீகேட்டால், நீ கனவுகாணுமிடத்து அக்கனவை நனவாகவன்றிக் கனவென்று அறிகிருயோ? அன்றியும் நீ தாயுதரத்திலிருந்து அறியுமறிவோ பூததேகமானபின்பு மயங்கின அறிவு. ஆதலால் ஆன்மாவுக்கு அறியாமையும் குணமென்று காணுய். எ-று.

ஈசுவரனுக்கு அறிவே குணம், பாசத்துக்கு அறியாமையே குணம். பசுவாகிய ஆன்மாவுக்கு அறிவு மறியாமையுங் குணமாதல் காண்க. (உக)

இறந்திடும்மறி வேபிறந்திடு
மென்பதிங்கிசை யாதெனின்
உறங்கிடும்பொழு தின்றிநின்றுணர்
விங்குதித்திடு மாறதோர்
பிறந்தவிவ்வுடல் போகவேறுடல்
பின்புவந்தமை பேசிடின்
மறந்திடுங்கன வத்துவேறுடல்
வந்தவாறும தித்திடே.

(பொ-ரை.) 'இறந்த அறிவே பிறக்குமென்று இங்கே கூறியது பொருந்தாது' என்று நீசொன்னுல், நீ தூங்கும்போது அறிவின்றிக் கிடந்து விழித்தபின் அவ்வறிவு உண்டாகுந் தன்மையை விசாரிப்பாயாக. 'இப்போதெடுத்துக் கொண்ட காயங்கெட்டால் பின்பு, மற்றொருகாய முண்டாவதெப்படி?' என்று நீகேட்டால், நனவை மறந்திடுங் கனவிலே உன்னை யெடுத்துக்கொண்டு திரியுமுடல் எப்படி வருவதோ, அப்படி வருவதென்றறிவாயாக எ-று.

உறங்கும்போது முகத்திற் பாம்பேறவுந் தெரியாது விழித்தபின் பாம்பைக்காணவும் அஞ்சுதல் காண்க. (உஉ)

கரணம்வாயுவி டத்தடங்கவ
டங்கிவந்தெழு காரியம்
மரணமானவி டத்துமற்றிவை
மாய்ந்துபின்புவ ருஞ்செயல்
கிரணமார்கலை கெட்டுதிப்பவி
றப்பினேடுபி றப்பையுந்
தரணியோர்கண்ம திக்குரைப்பரு
யிர்க்குமிப்படி சாற்றிடே.

(பொ-ரை.) ஒருவன் மரணமான விடத்து இந்திரியங்கள் கெட்டுப் பின்பு அவை வருமுறைமையானது, ஒருவன் மூர்ச்சையான விடத்துக்கரணங்கள் வாயுவிடத்தடங்க அவ்வாயுவுஞ் சேட்டையற்றுப் பின்பவன் மூர்ச்சை தெளிந்தபோது அவைகள் சேட்டிக்கு முறைமைபோலும். அன்றியும், சந்திரனுடைய ஒளிபொருந்திய கலைகள் கெட்டுந் தோன்றியும் வர, அதனை இறப்பும் பிறப்புமாக உலகத்தார் கூறுவர். இத்தன்மையை ஆன்மாவுக்குஞ் சொல்வாயாக. எ-று.

வாயு இயங்காத காலத்துக் கரணங்கள் இயங்கா வென்பதறிக. 'மாதத்திலேயொரு திங்களுண்டாகி மடிவதைநின், போதத்திலே சற்றும் வைத்திலையே' என்பது பட்டினத்தடிகள் திருவாக்கு.

ஸ்தூல சரீரத்திலுள்ள கரணங்கள் சூக்ஷம சரீரத்திலும் பொருந்துமென்பதும், ஆன்மா நித்தியமென்பதுங் கருத்து.

பூதமானவை காரியங்கள்பொ
லிந்துமன்னிய ழிந்திடும்
ஆதலாலொரு நாதனிங்குள
னென்றறிந்துகொ ளையனே
பேதமானக டாதிமண்ணினில்
வந்தவாறுபி டித்திடிற்
கோதிலாதகு லாலனல்வரு
செய்கையென்று குறிப்பரே.

(பொ-ரை.) நீகூறிய பூதங்கள் காரியப்பட்டு, பொலிவடைந்து, புசிப்பளவும் நிலைபெற்று, மீளவு மழியாநிற்கும்; ஆதலால், இதனை ஆக்குதலு மழித்தலுஞ் செய்வானொரு கர்த்தா வுண்டென்று அறிந்துகொள்வாயாக. 'மண்ணினிடத்து கடகலசாதி பேதங்கள் வந்தாற்போல பூதகாரியமே சரீரம்' என்னில், அம்மண்ணும் குலாலனது செய்கையாற் காரியப்பட்டதென்று அறிவாயாக. ஐயனே! எ-று.

அசையுந் தன்மை யொன்றேயுடைய சடப்பொருள்கள் ஒருவன் அசைவித்தாலன்றித் தாமேயசையா, ஆதலால், பூதசடங்களைத் [illegible]ாகக் காரியப்படுத்த வொரு கர்த்தா வேண்டுமென்பதை [illegible]புவமைமுகத்தால் விளக்கியவாறு. (உச)

வேத[illegible] ஞரணம்மறி
[illegible]யாவிழுப்பொருள் பேணுதபால்
தாத[illegible]யிரு கானடந்திடு
[illegible]தோழன்வன்மைசெய் தொண்டனுக்

காதலாலடி யார்களுக்கெளி
யானடிக்கம லங்கனி
காதலாலணை யீண்டன்வேண்டினம்
விம்மையேதருங் கண்டிடே.

(பொ-ரை.) பிரம்மாவும், விஷ்ணுவும், வேதங்களும், அறிதற்கரிய பரம்பொருளாகிய சிவபெருமான், தான்தடுத்தாட் கொண்ட சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தூதுவனாய்ப் பரவையாரிடத்து, இருமுறை நடந்ததனைவனுதலால், அடியார்க்கெளியனுவன். அவனுடைய ஸ்ரீபாதகமலங்களை நீ யன்போடு வழிபட்டால் விரும்பிய போகங்களை இம்மையிலே தந்தருளுவன்; இவ்வுண்மையை அவனை வழிபட்டறிந்து கொள்வாயாக. எ-று.

தம்பிரான் றோழரென்னுஞ் சுந்தரமூர்த்தி சுவாமிகளையிங்கே வன்மைசெய் தொண்டனென்பதை 'மற்று நீ வன்மை பேசி வன்றொண்டனென்னு நாமம்-பெற்றனை' என்னும் பெரிய புராணத்தாற்காண்க. (௨௫)

பொன்குலாவும ணிக்கலன்கண்ம
லம்புகிற்கைபொ ருந்திடா
மின்குலாமிடை யார்கடாமுல
கத்தின்வேட்கைவி டும்பொருள்
புன்புலான்மல மூத்திராதிபொ
சிந்துநாறுபு லேக்கலம்
என்கொலாமிவர் மேல்விழுந்ததி
வற்றினென்பெற வெண்ணியே.

(பொ-ரை.) பொன்னுலு மணியாலும் விளங்கச்செய்த ஆபரணங்கள் மலத்தில் விழுந்தால் அவற்றை யெடுக்கக் கை வராது. அதுபோல, மின்னற்கொடிபோலும் இடையாரென்று நீ புகழும் மகளிரும் அசுத்தமிகுதியால் விரும்பத்தகாத பொருளேயாம். ஏனெனில் அவர்கள் மலமூத்திராதிகளிந்து தீ நாற்றம் வீசுகின்ற புல்லிய மூயிசத்தாலாகிய அசுத்தபாண்டமே யாவார்; இவ்வசுத்தவஸ்துவில் எதுபெறச்சருதி அவரிடத்து விருப்பமுண்டாகியது; இது என்ன பேதைமை! எ-று. (௨௬)

தோலிரததமி றைச்சிமேதையெ
லும்புமச்சைசு வேதநீ
ராலெடுத்தமு டைக்குரம்பையு
மூக்கினேடுபு ழுக்குமாம்
நூலெனவழுககிடு கோழையிரனு
ரைக்குமூத்திர பாத்திரஞ்
சேலடார்த்தக ணூர்களென்பது
தேர்மலத்திர டிண்ணமே.

(பொ-ரை-) தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மூளை, சுக்கிலமென்னும் எழுவகைத்தாதுக்களாற் கட்டியதொரு நாற்றச்சிறு குடில்; ஊத்தையும், புழுத்திரளும், நூல்போலொழுகுங் கோழையும், ஈரலும் பொங்கி நுரைக்கு மூத்திரபாண்டம்; இத்தகைய காயத்தையுடைய மகளிரைச் சேலினுஞ் சிறந்த கண்ணியரென்பதை யாராய்க; யாவும் மலத்திரளென்பது நிச்சயம. (எ-று)

இவ்விரண்டுசெய்யுளின் கருத்தையுட்கொண்டே 'என்னைக்கண்டு நீ மாதரார்படிவ மீதிச்சைவைத்துழல்கின்றாய்—பொன்னையுந் துகிலையும் பிரித்திடில் வெறும் புழுமலக்கூடு' என்றார் பிறரும். (௨எ)

ஆசையுற்றுழல் சூகரங்கள
சுத்தமேவிய ளைந்துதின்
றேசுகித்தன வாயிடுஞ்சுக
மேமையோடுறு மின்பநீ
மாசதற் றுளிர் நித்தசுத்தவ
ளந்தருஞ்சுக வாரிகாண்
ஈசனுக்கடி மைத்திறத்தினி
சைந்து நாம்பெறு மின்பமே.

(பொ-ரை.) நீ மகளிரோடு கூடிப்பெறு மின்பமானது, திரிகின்றபன்றிகள் ஆசைமிகுந்து அமேத்தியத்திற் புகுந்து அதனைத்தின்று அதனிற்புரண்டு சுகித்த தன்மையை யொக்கும். கர்த்தாவுக்கு அடிமைத்திறஞ் செய்து நாம் பெறுமின்பமோ, அழியாததாய், நிர்மலமாய், குற்றமற்று விளங்குஞ் சிறப்பினதாகிய பேரின்ப சாகரமென்றறிவாயாக. எ-று.

மேத்தியம்-சுத்தமானது. வாழ்க்கைத்துணையாகிய மனையாளோடுகூடி யில்லறநடத்துவோர் புத்திரோற்பத்திக்காகப் பெண்போகந் துய்ப்பரென்பதும், அவ்வாறு துய்ப்பதற்குக் காலமு மந்திரமுமுண்டென்பதும், உன்னைப்போலக் காலவரையில்லாமல், போகமே முத்தியென்று கொண்டு கலவி செய்யாரென்பதும் இங்கேபெறப்படும். இதனை 'புத்திரராைக் காமுற்றவர் தோட்புணர்வார்கல்—லுத்தமர் நூலோர்ந் தனைப்போலோ; காலமு மந்திரமுமுண்டுகலவியினும், காலமுமுண்டோவுனக்குக் காண்' என்பதனுலறிக. (௨அ)

குரோதமேகுண மாயிருந்தவர்
சாந்திநன்மைகு றிக்கொளார்
அராகமேயணை வார்களாசைய
றுத்தவின்பம றிந்திடார்
பராவுதேவர்ப ராவுதூயப
ராப ரன்னடி பற்றி நீ
விராவுமெய்யில்வி டாதவின்பம்வி
ளைந்திடும்மிது மெய்ம்மையே.

(பொ-ரை.) கோபமிகுதியை யியல்பாகவுடையார் பொறை யினாலுண்டாகிய நன்மையை யறியமாட்டார். ஆசையையே மேற்கொண்டவர்கள் நிராசை யுடையவர்க்குண்டாகுஞ் சுகத்தை யறியமாட்டார். (அதுபோல, மாதர் சுகத்தை மேற்கொண்ட நீ பரசுகமாகிய பேரின்பத்தை யறியாய்; அதனை யறியவிரும்பினுல்) யாவரும் வணங்கும் அரிபிரமேந்திரர்களாற் றுதிக்கப்படுவாரும், சுத்தமான பராசத்திக்கு

மேலானவருமாகிய மஹாதேவருடைய ஸ்ரீபாதங்களைப் பற்றுக்கோடகக்கொள்; அதனுலுன்னுடைய சரீரத்திலே ஒழியாத சுகாநந்தம் விளையாநிற்கும்; இது சத்தியம். எ-று.

மெய்யில் விடாத வின்பம் விளைந்திடும் என்பதை 'காயத் துள்ளமு தூறவூற நீ கண்டுகொள்ளென்று காட்டிய—சேயமாமலர்ச்சேவடி, என்னுந் திருவாசகத்தாற்காண்க. (உ௯)

காமமாதிகு ணாங்களைச்சுக
மென்றுகொண்டனை காதலாற்
றாமமாரழ லங்கிசிதம
லிந்தபோதுசு கந்தரும்
நாமமார்தரு சீதம்வெம்மைந
லிந்தபோதுத ருஞ்சுகஞ்
சேமமாகிய வின்பமாமிகு
தெய்வநன்னெறி சேரவே.

(பொ-ரை.) காமாதி குணங்களைப் பிரமையாற் சுகமென்று கொண்டாய்; புகையொடு கூடி எரிகின்ற நெருப்பானது குளிர்ச்சி மிகுந்தகாலத்தில் சுகந்தரும்; பயத்தைத் தருகின்ற குளிர்ச்சியானது வெப்பமிகுந்து வருந்துங்காலத்திற் சுகந்தரும். கர்த்தாவினுடைய ஞானமார்க்கத்திற் சேர்ந்தால் ஒருக்காலும் வெறுக்காத இன்பமுண்டாம். எ-று.

வெப்பமும் குளிர்ச்சியும் எப்போதும் சுகஞ்செய்யாது ஒவ்வோர் காலத்துச்செய்தல் போலக் காமமும் எப்போதுமின்பமாகாமற் பிணிகவலையாதிகள் சேர்ந்தபோது வெறுக்கப்படுவதாலும், காமபோகத்துக்கு இடமாகிய மகளிர்க்குள்ள பருவமும் பிறவும் நிலையற்றனவாதலாலும், ஞானத்தாலுளதாகுந் தெவிட்டாத நித்திய வின்பமே அடைதற்குரியதென்று விரித்துரைத்துக்கொள்க. (௩0)

படிக்குநூல்கள்சி வாகமம்பசு
பாசமோடுப தித்திறம்
எடுத்தியம்புவ தீசன்வார்கழ
லேத்திடுந்தொழி லென்றுமே
விடுத்திடும்பொருள் காமமாதிகள்
வேண்டிடும்பொரு ளீண்டருள்
முடித்துமும்மலம் விட்டுநின்மல
னேடுநின்றிடன் முத்தியே.

(பொ-ரை.) யாம் கற்றற்குரிய நூல்கள் வேதாகமங்களாம்; அவைபதிபசு பாசத்திறங்களைக்குறித்துப்பேசும்; எமது தொழில் ஸ்ரீபரமேசுவரனுடைய பாதங்களை வணங்குதல்; எப்போதுங் கைவிடும் பொருளாவன காமக்குரோதாதிகள்; இங்கு வேண்டும் பொருளாவது அருள்; இச்சித்தாந்தத்தில் அசையாது நின்று ஆணவமாயை கன்மமென்னு மும்மலங்களையும் விட்டு நின்மலனுகிய அப்பரமேசுவரனேடு (அப்பொடுகலந்தவுப்புப்போல) நிற்பது முத்தியின்பம். எ-று.

சிவாகமம்-என்பதிற் சிவம்-வேதம்; அன்றியும் ஆகமத்துக்குப் பிறிதினியைபு நீக்கிய விசேடண மாகக்கொண்டாலும் பொருந்தும்; பிடகாகமம், பாஞ்சராத்திராகமமெனவும் வழக்குண்மையால். சிவாகமம் என்ற யாத்திரத்தில் இனஞ்செப்பும் ஆற்றலால் வேதத்தையுங்குறிக்கும்; வேதாகமம், வேதசிவாகமம், என்பன பெருவழக்காதலால். இனி வேதமெனினும் இனஞ்செப்பு மாற்றலாநல் ஆகமத்தையுணர்த்து மாயினும், வேதத்தைக்கூறி ஆகமத்தைக்கொள்ள வைத்தலினும், ஆகமத்தால் வேதத்தைக்கொள்ள வைத்தலே சிறப்புடைத்து. என்னை? சிவாகமத்தின்முன்னர் வேதம் பூர்வபக்ஷமாதலின்; இதனை யிந்நூலாசிரியர் சுபக்ஷத்தில் 'ஆரணநூல் பொதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம்; பிறநூல் திகழ்பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' என்று கூறியவாற்றுலுணர்க. ஆகவே 'படிக்கு நூல்கள் சிவாகமம்' என்ற விடத்து வேதாகமங்களெனக்கொள்ளாது சிவாகம மென்றே கொள்வதும் இழுக்காது. ஆயின் நூல்களெனப் பன்மையாற் கூறியிருப்பதனேடு முரணுமெனின், சிவாகமங்கள் காமிகமுதல்வாதுளமிறுதியாக இருபத்தெட்டென்னும் தொகையுடையன ஆதலால் முரணுமாறில்லையென விடுக்க. (௩க)

உலோகாயிதன் மதமறுதலை
முற்றிற்று.

---

## பௌத்தரிற் சௌத்திராந்திகன் மதம்.

---

நீதியார் வேதநூலி னெறியலா
வறங்க ளுளும்
ஓதியோ ரைந்துசில முடையரா
யுடல மூடிப்
போதிநீண் மரத்தின் மேவும் புத்தர்நால்
வரினும் வைத்துச்
சாதிதா னிலாத கொள்கைச் சௌத்திராந
திகன்முன் சாற்றும்.

(பொ-ரை.) சிக்ஷை முதலிய அங்கங்களையுடைய வேதநூல் நெறியல்லாத வாக்கிய நெறியாகிய பிடகநூலை நாடோறும் ஓதி, உருவமுதலிய பஞ்சகந்தங்களின் குணங்களையுடையவராய், உடம்பைத் துவராடையாற்போர்த்து அரசவிருக்ஷத்தைத் தெய்வம்போலப் பேணி யதன்கீழ்ப் பொருந்தியிருக்கும் பௌத்தர் நால்வகையாருள்ளும் சாதி பேதமில்லாத கோட்பாடுடைய சௌத்திராந்திகன் முன்னே சொல்லுகிருன். எ-று.

சிக்ஷை முதலிய ஆறு:—க-சிக்ஷை (வேதத்தின் உச்சாரணலக்ஷணத்தை யுணர்த்துவது) உ-வியாகரணம் (பதலக்ஷணத்தை விவரிப்பது.) ௩-நிருத்தம் (பதங்களுக்கு விவரணங்கூறுவது.) ச-சோதிடம் (வைதிககருமங்களுக்குக் காலம் அறிவிப்பது.) ரு-கற்பம் (வைதிககருமங்களைப் பிரயோகிக்கு முறையைக் கற்பிப்பது.) கூ-சந்தசு (சந்தோபேதங்களுக்கு அக்ஷரசங்கியை கற்பிப்பது. (இவை ஷடங்கமெனப்படும்,

உருவமுதலிய:—உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம்; இவை பின்னர் விளக்கப்படும். நால்வகையார்:—சௌத்திரி, யோகாசாரன், மாத்மிகன், வைபாடிகன்.

பௌத்தர் துவராடை போர்ப்பவரென்பதை—'குண்டமணர் துவர்க்கூறைகள் மெய்யிற் கொள்கையினர்' என்னுந் தேவாரத்தாலுங் காண்க. (க)

முழுதுணர்ந்துலகிற்கோறன் முதற்செயன்
முனிந்து மற்றும்
பழுதிலாவருளினலே பரதுக்க
துக்கனுகித்
தொழுதுவானவரும்போற்றத் தொல்பிட
கங்களான
வழுவிலாகமங்கள்சொன்ன மாதவ
னுதனுவான்.

(பொ-ள.) எல்லாமறிந்து பிரபஞ்சத்திற் கொலைமுதலிய பாவச்செயல்களை வெறுத்துக் குற்றமிலாத அருளுடைமையால், பிறவுயிர்க்கு நேருந் துன்பத்தைத் தனக்கு நேர்ந்தது போற்கொண்டு, தேவர்களால் தொழுது துதிக்கப் பழையபிடகங்களென்னும் வழுவற்ற ஆகமங்களையருளிய புத்தமுனியே கர்த்தா ஆவான். எ-று.

கொலைமுதலிய:—கொலை, பொய், களவு, காமம், கள். (உ)

மருவியவளவைகாட்சி மானமென்
றிரண்டிவற்றுற்
கருதியபொருள்கண்ஞான ஞேயமாய்க்
கணத்திற் பங்கம்
வருமுரு வருவம் வீடு வழக்கென
நான்க தாகித்
தருமவை யொன்றிரண்டாய்த் தான்விரிந்
தெட்டினுமே.

(பொ-ள.) பிடகநூலிற் போந்த அளவையாவன, காட்சியுமநுமானமுமென விரண்டாம். இவ்வளவைகளாற் குறிக்கும்பொருள்கள் ஞானமு (அறிவு)ம், ஞேயமு (அறியப்படு பொருளு) மாயொரு மாத்திரையிற் கெட்டுவரும் உருவும் அருவும் வீடும் வழக்குமென நான்காகி, அவை ஒன்றிரண்டாய் எட்டாகவிரியும் எ-று.

எட்டாய் விரியுமாற்றையடுத்த செய்யுளிற் காண்க. கணத்திற் கெடுகை நால்வகை:—கெட்டுக் கெட்டேபோதல், கெட்டுவளர்தல், கூட்டொத்து நிற்றல், கெட்டுக் குறைதல். கணம்-தாமரை யிதழையடுக்கி யூசியைச்செருக எட்டிதழையுருவச் செல்லுங்கால நுட்பம். (௩)

உருவியல் பூதமோடங் குபாதாய
ரூப மாகும்
அருவியல் சித்தங்கன்ம மென்றிரண்
டாகும் வீட்டின்
மருவியல் குற்றங்கந்த மெனவழங்
கிடும் வழக்கின்
இருவிய லுள்ளதோடங் கில்லதா
மியம்புங் காலே.

(பொ-ள) உருவினதியல்பு பூதவுரு, உபாதாயவுருவென விரண்டாம்; அருவினதியல்பு சித்தவுரு, கன்மவுருவென விரண்டாம்; வீட்டியல்பு குற்றவீடு, கந்தவீடென்றிரண்டாம்; வழக்கியல்பு உள்வழக்கு, இல்வழக்கெனவிரண்டாம், சொல்லுமிடத்து, எ-று.

உபாதாயம்—உபாதானம். (ச)

மண்புன லனல்கால்பூதம் வலிகந்த
மிரதம் வன்னம்
எண்டரு முபாதாயந்தா னிவையிரு
நான்குங் கூடி
யுண்டொரு பொருளுரூப முறுபுல
னுபாங்க மோடக்
கண்டது சித்தங்கன்ம நன்று தீ
தென்றல் காணே.

(பொ-ள.) பூதவுருவாவது பிரிதிவி, அப்பு, தேயு, வாயுவென நான்காம்; உபாதாயரூபமாவது கடினம், கந்தம், இரதம், வன்னம் எனநான்காம்; இவையெட்டுங்கூடிய விடத்து உளதாகும்பொருள் உருவாகும். புலன்கள் பொறிவழியோடியறியக்கண்டது சித்தவுருவாம்; அப்படிக்கண்ட பொருளை நன்னென்றுந் தீதென்றுங் காண்டல் கன்மவுருவாம். எ-று.

கன்மம்-கன்மபலம். இவையெட்டும் உருவகந்தமும், பொறியைந்துஞ்சித்தமுமாகிய ஆறும் குறிப்புக்கந்தமும், அவ்வாறினுலு மறியு மாறறிவும் விஞ்ஞானகந்தமும், சுகம் துக்கம் சுகதுக்கமாகிய மூன்றும் வேதனுகந்தமும், புண்ணியம்பத்தும் பாவம்பத்துமாகிய இருபதும் பாவனுகந்தமுமாம். புண்ணியம் பத்தாவன:—(மனம்) அருள், அவாவின்மை, தவவிருப்பம், (வாக்கு) இனியவைகூறல், மெய்ம்மைகூறல், பயனுளகூறல், அறமுரைத்தல், (காயம்) வணக்கம், ஈகை, தவஞ்செய்தல் என்பன. பாவம் பத்தாவன:—(மனம்) தீயசிந்தனை, ஆசை, கோபம், (வாக்கு) கடுஞ்சொல், பொய்யுரை, பயனில்சொல், கோட்சொல், (காயம்) களவு, கொலை, வீண்செய்கை என்பன. (ரு)

(தொடரும்)

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநமஃ

## ஸ்ரீ தாயுமானசுவாமிகள் பாடலுரை.

---

### மௌனகுரு வணக்கம்.

(முன்தொடர்ச்சி.)

பற்றுவெகுவிதமாகி யொன்றைவிட்டொன்றனைப்
பற்றியுழல்கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தைபெற்றநான் வெளியாகநின்னருள்
பகர்ந்துமறியேன்றுவிதமோ
சிற்றறிவதன்றியு மெவரேனுமொருமொழி
திடுக்கென்றுரைத்தபோது
சிந்தைசெவியாகவே பறையறையவுதரவெந்
தீநெஞ்சமளவளாவ
உற்றுணரவுணர்வற்றுன் மத்தவெறியினர்போல
வுளறுவேன்முத்திமார்க்கம்
உணர்வதெப்படியின்ப துன்பஞ்சமானமா
யுறுவதெப்படியாயினு
மற்றெனக்கையநீ சொன்னவொருவார்த்தையினை
மலையிலக்கெனநம்பினேன்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே.

(இ-ள்.) மந்த்ரகுருவே!....................பற்றுதற்குரிய இடம்பலவாய், ஒன்றைவிட்டு மற்றொன்றைப் பிடித்துத்திரிகின்ற புழுவைப்போல் கொடியமனத்தைப்படைத்த நான், வெளிப்படையாக வுமது திருவருளைப் புகழ்ந்து மறியேன். துவிதநிலை யென்றுலோவது சிற்றறிவாய் முடியும். அன்றியும் யாராயினுமொரு சொல்லைத் திடுக்கென்று சொன்னபோது, காதே மனமாகப் பறையடிக்கவும், கொடியவுதராக்கினியானது நெஞ்சத்தைப் பொருந்துவதனால், ஊன்றியுணரவுணர்வுமற்று, உன்மத்தம்பிடித்த வெறியனைப்போலுளறுவேன். இப்படிப்பட்ட நான் முத்திநெறியை யறிவதெவ்வாறு? இன்ப துன்பங்களிடத்துச் சமபுத்திபெண்ணுவ தெவ்வாறு? ஆனாலும், நீர் எனக்குபதேசித்த வொருசொல்லை, மலையைக் குறியாகக் கொண்டாற்போல நம்பியிருக்கின்றேன். எ-று.

மனமோரிடம் பற்றிநில்லாது ஓடுதலால் "காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோட" எனக்குரங்காகவு மேற்கூறுவர். பிறர் சொல்வதைச் செவியால்வாங்கி, மனத்தால் நினைத்து, தக்க விடைகொடுக்கும் பொறுமையுந் தகுதியுமில்லேனென்பார் "சிந்தை செவியாகப் பறையறைய........ உளறுவேன்" என்றார். மலையிலக்கென நம்பினேனெனபதற்கு மலையானது அளக்கலாகா வளவுடையதாதலால், அதனையிலக்காகக் கொள்வோர் எவ்வழியுஞ் சென்றடையலாம்; அதுபோல, யான்வழுவி நடப்பினும் நீர் உபதேசித்த பொருள் உய்யுநெறியிற் சேர்க்குமென்று துணிந்திருக்கின்றேனென்பது கருத்து.

(௧௦)

மௌனகுருவணக்கம் முற்றிற்று.

### கருணாகரக்கடவுள்.

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்ய மா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்த முக்த
தற்பரவிசுவாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞான பகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
சர்வகா லமுநி னைவனோ
அற்புத வகோசர நிவர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தி யான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
அனுபூதி யனுசூத முங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்த குருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

(இ-ள்.) ஆச்சரியபூதனே! யாவர்க்கு மெட்டாதவனே! நிவர்த்திமார்க்கத்தை யடைந்த சநகனாதி மெய்யன்பர்க்கு, இன்ப நிறைவாகிய அத்துவிதநிச்சய சொரூபத்தினது பிரத்தியக்ஷாநுபவ ரகசியமும், யதார்த்தமாகத் தோன்ற முக்கண்மூர்த்தியாய்க் கல்லாலினிழலில் எழுந்தருளியிருந்த ஞானாசாரியனே! நினைத்தற்கரிய சிற்றம்பலத்தில் ஆநந்தக்கூத்தாடுகின்ற கருணாகரக்கடவுளே! உன்னை நிர்க்குணன் முதலிய அநந்த நாமங்களால் அழைத்துச் சதாகாலமுந் தியானிக்கப் பெறுவேனோ! எ-று.

நிவர்த்திமார்க்கம் - முத்திநெறி. சநகனாதியர் - சநகர், சநந்தனர், சநாதனர், சநற்குமாரர் என்னும் நால்வர். இவர்கள் பிரமாவின் மானசபுத்திரர். இவர்கள் வேதங்களையும் உபநிடதங்களையும் நெடுங்காலமோதியுஞ் ஞானங்கைவராமல் சிவபெருமானையடைந்து ஆகமாந்தமாகிய சித்தாந்தோபதேசம் பெற்று.ஞானங்கைவரப் பெற்றார்களென்று சங்கரசங்கிதையிற் கூறப்பட்டுள்ளது. இம்முநிவர் பொருட்டாகவே எம்பிரான் குருமூர்த்தங்கொண்டு கைலாசத்திற் கல்லாலடியில் தக்ஷிணாமுகமா யெழுந்தருளியது. குரு - அஞ்ஞானத்தை யகற்றி அருட்டரிசனம் பண்ணுவிப்போன். ஆசாரியன் ஓதுவிக்கக் கேட்ட மாணாக்கன், தான் கேட்டதைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடி யநுபவிக்கவே ஞானம் பூர்த்தியாகும். அவ்வாறின்றி எமது பரமகுருநாதன் அம்முநிவர்களுக்குக் கேட்டலாதி நால்வகை ஞானங்களையும் ஒருங்கே யுதிப்பித்த மகிமாதிசயமானது 'அன்பருக்கானந்த பூர்த்தியான அத்துவித நிச்சய சொரூப சாக்ஷாத்கார அநுபூதி யநுசூதமுங் கற்பனையறக்காண' என்பதனாற் பெறப்பட்டது. இவ்வுண்மையை 'சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந், தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்' என்னும் பெரியபுராணத்தாலுணர்க. காண என்றதனால் பரமாசாரியன் சந்நிதிமகிமையும், சொல்லாமற் சொல்லியருளிய அருமையும், சின்முத்

திரையால் கட்புலனும்படி யுணர்த்திய முறைமையும் பெறப் படும். திராவிடமகாபாஷியத்தில் 'சல்லானிழல் மலைவில் லார்' என்பதில், 'மலைவில்லார்' என்பதற்கு மலைவுதீர்த் தருளியவர்' என்று ஸ்ரீசிவஞானயோகிகள் கூறியருளிய வா ய்மையும், இங்கே 'கற்பனைபிறக்காண' என்னும் பகுதியும் இணங்கி நிற்குந்தன்மையை யுய்த்துணர்க. சிற்சபை யென் பது ஞானசபை; அதுவே ஞானாகாசம். இது பராசத்திவடி வமாயுள்ளது. ஆனந்த நிர்த்தம் - ஆனந்தத்துக்கேதுவாகிய பஞ்சகிர்த்திய நடனம். நடனம் பஞ்சகிர்த்திய வியல்பின தென்பதை 'மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ், சாய வமுக்கியருள் தானெடுத்து—நேயத்தால், ஆனந்த வாரி தியி லான்மாவைத் தானழுத்தல், தானெந்தை யார் பரதந் தான்.' என்பதனுற் காணக. சிற்சபையிலானந்த நிர்த்தம் என்பதனால் பராசத்தியை யதிட்டித்து (இடமாக்கொண்டு) பஞ்சகிர்த்தியத்தைச் செய்கின்றவர் பசுபதியென்னும்பண்பு விளங்கும். கருணாகரம் - கருணைக்குப்பிறப்பிடம். கருணா - ஆகரம் எனப்பிரிக்க. கடவுள் - தொழிலாகுபெயர்; பிரபஞ் சத்தை நடத்துபவரென்பது பொருள்; கடவுதல் - நடத்து தல்.

நிர்க்குண—குணரகிதனே; 'இப்படிய னிந்நிறத்த னிவ் வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே' எனவும் 'இன்னதன்மைய னென்றறியாச்சிவன்' எனவும் வருவனவற்றாற் காண்க.

நிராமய—நோயற்றவனே; '(பிறப்பிலாரிறப்பிலார்)பிணி யொன்றில்லார்' என்றது தேவாரம்.

நிரஞ்சன—இருளற்றவனே; என்பதுஒளிவடிவானவனே; 'இருநிலனும் விசும்பும் விண்ணும் மேழுலகுங் கடந்தண்டத் தப்பானின்ற, பேரொளியை' என்றதுமது.

நிராலம்ப—பற்றுக்கோடில்லாதவனே; என்பது எவற்றிற் கும் ஆதாரமானவனே; 'தானலாதுலகமில்லை' என்றது தமிழ்வேதம்.

நிர்விஷய—விஷயரகிதனே; 'நேரிழையைக் கலந்திருந் தே புலன்களைந்தும் வென்றானை' என்றதனாற்காண்க.

கைவல்ய—மோக்ஷரூபியே; தந்ததுன்றன்னைக் கொண்ட தென்றன்னைச் சங்கராவார்கொலோ சதுரர், அந்தமொன் றில்லா வானந்தம்பெற்றேன் யாதுநீபெற்றதொன் றென் பால்' என்றது திருவாசகம்.

மாநிஷ்கள—மகத்தாகிய நிஷ்கள வடிவனே; 'அருவமு முருவமு மானாய் போற்றி' என்றதுமது.

அசங்க—கூட்டமில்லாதவனே; 'உற்றாரென்றொருவரை யுமில்லாதானே' என்றார் ஆளுடைய வரசுகள்.

சஞ்சலரகித—அசைவற்றவனே; 'பொய்யாத பொழிலே மூந்தாங்கின்ற கற்றூண்காண்' என்றதும் அரசுகளே.

நிர்வசன—மௌனியே; 'சொல்லாமற் சொன்னவனை' என்றார் பரஞ்சோதி முனிவர்.

நிர்த்தோந்த—இரண்டாவதில்லாதவனே; 'தன்னியல்பார் மற்றொருவரில்லான் கண்டாய்' 'ஒருவனென்னும் ஒருவன் காண்க' என்பன காண்க.

நித்த—எப்போது முள்ளவனே; 'காலங்களூழிகண்டிருக் கின்றானே' என்றது தேவாரம்.

முக்த—பாசவிமுக்தனே; 'பந்திப்பரியாய நீயேயென் றும்' 'துறவிநீதே கட்டறுத்த சோதியானை' என்றதுமது.

தற்பர—ஆன்ம ப்ரியனே; 'எவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற தாயானை' என்றதுகாண்க.

விசுவாதீத—உலகத்தைக் கடந்தவனே; 'அண்டத்துக்கப் புறமாய் நின்றார்போலும்' என்றது தமிழ்வேதம்.

வியோம பரிபூரண—பரமாகாசத்தில் நிறைந்துள்ளவ னே; 'பாரிலங்கு புனலனல்கால் பரமாகாசம் பருதிமதிசுரு தியுமாய்ப் பரந்தார் போலும்' என்றது தமிழ்மறை. 'சிற்ப ரவியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துனின்று, பொற்புடன டஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி' என்றது திருத் தொண்டர் புராணம்.

சதானந்த—நித்தியானந்தனே; 'இன்பனாய்த் துன்பங் களைகின்றானே' என்பது காண்க.

ஞான—ஞான சொரூபனே; 'கற்றிருந்த கலைஞான மா னாய் நீயே' 'ஞானப்பெருங்கடலை' எனவருவன காண்க.

பகவ—ஷட்குண சம்பந்நனே; ஷட்குணங்கள்:—ஐசுவரி யம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம். பகவத் ஸப்தம் மற்றைத்தேவர்க்கு உபசாரமும், சிவனார்க்குவாஸ் தவமுமாகும்; பகவதி யென்னும்பெயர் பராசத்தியார்க்கே உரித்தாதலானுணர்க.

சம்பு—சுகரூபியே; 'இன்பன்காண்டுன்பங்க ளில்லாதான் காண்' என்றார் எம்மரசுகள்.

சிவ—மங்களரூபியே; 'நிச்சல்மணாளனே யென்றேனு னே' 'நித்தல் மணவாளனென நிற்கின்றான்காண்' என்றது தேவாரம். (நிச்சல், நித்தல் - எப்போதும்)

சங்கர—சுகத்தைச் செய்கின்றவனே; 'பத்தர்களுக்கின் பம் பயந்தார் போலும்' என்றதனாற்காண்க.

சர்வேச—சர்வேச்சுரனே; 'மேலோர்க்கு மேலோர்க்கு மேலாய் போற்றி' என்றது திராவிட வேதம். (க)

மண்ணாதி யைந்தொடு புறத்துள கருவியும்
வாக்காதி சுரோத் ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னு சுத்தாதி யுடனே
தொண்ணூற் றெட்டாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண் டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல் லுகேன்
பண்ணாரு மிசையி னொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்று தவறுப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகை கூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

(இ-ள்) இனிய ஓசையோடு கூடிய தோத்திரங்களைப் பாடிப் படித்துத் திருவருள் வழியே வழுவாமனின்று பரிபாக முதிர்ந்து நெஞ்சமிகவு நெகிழ்ந்துருகி வீழ்ந்து தொழுதெழுந்து இரண்டு கைகளையுங் குவித்துக்கொண்டு, இன்பக்கண்ணீர் வெள்ளம் பெருக்கெடுப்ப நிற்கின்ற அன்பரினத்தைக் கைவிடாத அற்புதச்சுற்றமே! கருதரிய............கடவுளே! நீ மௌனகுருவாய் வந்து உபதேசித்த ஒருமொழியே யான் கொண்டது; அதனாற் பிருதுவியாதி பஞ்சபூதங்களும், புறநிலைக்கருவிகளும், வாக்கு முதலிய கன்மேந்திரியமும், சுரோத்திரம் (செவி) முதலிய ஞானேந்திரியமும், சத்த முதலிய விஷயமும், மனமுதலிய அந்தக்கரணமும், கலைமுதலிய வித்யாதத்வமும், சுத்தவித்தை முதலிய சிவதத்வமும் இவற்றின் கூறுபாடுமாகிய தொண்ணூற்றாறுதத்வங்களும், இவற்றைப்பற்றிய பிறவிஷயங்களும் எனக்குப் பரிஷ்காரமாய்த் தோன்ற அதனால் இடையறாது உண்டாகின்ற ஆனந்தமேலீட்டை என்ன சொல்வேன். எ-று.

கைவிடாக் காட்சியுறவே - என்பதில் 'உற' என்பதை யெச்சமாய்க்கொள்வது பொருந்தாது; மேல் எட்டாவது பாடலில் 'கலக்கவரு நல்லவுறவே' என்பதையுங்காண்க.

பூதம் - ௫, பொறி (ஞானேந்திரியம்) ௫, புலன் (விஷயம்)- ௫, கன்மேந்திரியம் - ௫, அந்தக்கரணம் - ௪, ஆகிய ஆன்மதத்வம் ௨௪-ம்,

காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் வித்யாதத்வம் ௭-ம்,

சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் சிவதத்வம் ௫-ம் ஆகிய ௩௬-ம் உண்ணிலைக்கருவிகளாம்.

பூதகாரியம் - ௨௫, வாயு - ௧௦, கன்மேந்திரிய காரியமாகிய வசனாதி - ௫, வாக்கு - ௪, குணம் ௩, அகங்காரம் - ௩ ஆகிய ௬௦ தத்துவங்களும் புறநிலைக் கருவிகளாம், ஆக தத்துவம் ௯௬. இவற்றின் விவரங்களை விரிந்த நூல்களிற்காண்க. மற்றுள்ளனவு மென்றது இவற்றின் தோற்றவொடுக்கமுறையும் காரியங்களும் பிறவும்.

(௨)

எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
எல்லாமு னுடைய செயலே
எங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாஞ்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவருமிண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்த நெறி தானு மிவையே
யல்லாம லில்லையென நன்றுவறிந்தேன்
அறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினேன்
அதுவுநின தருளென் னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேது புகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

(இ-ள்.) கருதரிய......கடவுளே! இருக்குமுதலிய எல்லா வேதங்களும், 'சேதனப் பிரபஞ்சமெல்லா முனக்கடிமையே; அசேதனப்பிரபஞ்சமெல்லா முன்னுடைமையே; அவற்றின் செயலெல்லாமுன்னுடைய செயலே; சர்வவியாபகன் நீயே' என்று சொல்லுந்தன்மையுடையனவென்னும்படி முழங்கின. பேச்சற்ற மௌனவிரதிகளும், யாவர்க்கும் பேருபகாரமாக வெளியிட்ட வுண்மைகளுமிவை; சதாசாரியர்களுந் தொகுத்துச்சொல்லிய முறையு மிவையே. இவற்றையல்லாது வேறு வகையில்லையெனச் செவ்வனே அறிந்துவைத்தும், நானின்பத்தையடையாமல், இப்படியாயினேன். (வீணாகக் காலங் கழித்தேன்) அதுவுமுன்திருவருளே யென்று கல்வியறிவில்லாத வேழையாகிய எனக்கு அறிவித்தாய். நான் நற்கதியடைவதற்கு வழியாது? அதனைச் சொல்வாயாக. எ-று.

'சகமலாதடிமையில்லை' 'அயனுந் திருமாலும் வானவர்கோவும் வழியடியார் சாழலோ' எனவும், 'ஆக்குதியழித்தியானபல்பொருள்' எனவும் 'ஆட்டுவித்தாலா ரொருவ ராடாதாரே' எனவும் போந்த அமுத உரைகளினுண்மையை, எல்லாமுனடிமையே, எல்லாமுனுடைமையே, எல்லாமுனுடைய செயலே, என்றும், வேதம் சைவமயம் என்பதனால் 'இருக்காதி வேதமெல்லாஞ் சொல்லான் முழக்கியது' என்றுங் கூறினர்.

'எல்லாமுனுடைய செயலே' என்னுங்கால், ஆன்மாசெய்யும் நல்வினை தீவினைக்கீடாகச் சுகதுக்கங்களை யிறைவன்கூட்டுவனென்பது பொருந்ாதெனின், இதுவிபரீதவுணர்ச்சியேயாம். பசுபாசங்கள் சுதந்தரமுடையன வல்லவென்பதே யதன்கருத்தாம்: ஆன்மா சேதனனாயினும், அறிவித்தாலன்றியறியான்; கண்ணுக்கொளியிருந்துங் கதிரொளி காட்டினாலன்றிக் காணாதவாறுபோல; இவ்வுண்மை யிவ்வாசிரியர் உடல் பொய்யுறவு என்னும் பகுதியில் 'நீயுணர்த்தானுணருநேசத்தாலோ வறிவென், றேயெனக்கோர் நாமமிட்டதே' என்பதனால் விளங்கும். பாசஞ்சடமாதலின் அசைவித்தாலன்றியசையாது. இப்பசுபாசங்களை யறிவித்தலையும் அசைவித்தலையுமே, 'எல்லாமுன்னுடைய செய'லென்று கூறினர். ஆன்மாவுக்குத் தனுகரணங்களை யிறைவன் கூட்டாதபோது, அதன் ஞானக்கிரியைகள் நிகழமாட்டா; அவன் காரியப்படுத்தாதபோது, பாசமும் தனுகரணமுதலியவாகப் பரிணமிக்காது. ஆன்மாவுக்குத் தனுகரணங்களையாக்கிக்கொள்ளவும், பாசத்துக்குத் தனுகரணமாகத்திரிந்து, ஆன்மாவை வந்தடையவும் வல்லமையில்லை. ஞானக்கிரியைகளை விளக்கினமை யிறைவன் செயலேயன்றி, அவை விளங்கப்பெற்ற வான்மா செய்யுஞ் செயலு மிறைவன் செயலென்பது பொருந்தாது, அவ்விறைவன் விளக்கினமையா லவன்செயலேயெனின், ஆன்மா அறிவித்தாலறிந்துகொள்ளுந் தன்மையுடையதென்பதை மேலே காட்டினேமாகையால் உய்த்துணர்க. ஆன்மாவுக்கொரு யோக்கியதையுமில்லையெனில், இறைவன் விதிவிலக்கு ரூபமான வேதசிவாகமங்களை யருளிச்செய்தமை அறியாமையாக வன்றேமுடியும். உலகத்தில் பிருகாதிகள் நடந்துகொள்ள வேண்டிய முறைமைக்கென்று ஒரு சட்டமேற்படுமோ? ஆதலின் ஆன்மா, வேதாகமங்களில் விதித்தவழி

விட்டு விலக்கு வழியிற் சென்றால் அக்குற்றம் அவ்வான்மாவைச்சேர்ந்ததே ; இறைவன் மேற் சுமத்துவது பெரும்பாவமென்றுணர்க. ஆயினும், 'எனக்கெனச் செயல்வேறிலை யாவுமிங் கொருநின், றனக்கெனத்தகும்' என்பது மயங்கவைத்தலாமெனின், அன்று : எல்லாந்தானே யறியுமியல்புள்ள இறைவன் சந்நிதியில் ஆன்மா முனைத்துநிற்க மாட்டாமையை விளக்கியபடியேயாம். 'இவன்றானும் புத்தியுஞ் சித்திவனுமோபுத்தி, இது வசித்தென்றிடலவனுக் கிவனுமசித்தாமே' என்னுஞ் சிவஞான சித்தியாரை யுணர்க. இவ்வுண்மைகளை யறியும் பரிபாகமில்லாமல் 'எல்லாமுனுடைய செய'லென்பது பொருந்ாதென்றும், "இந்தச்சீவனால் வருமூறு பகையெலா மிவன்செய லல்லாம, லந்தத்தேவனால் வருமென்றமூடர்கள்" என்றுங் கூறு மூடவாசகம் பீடழிந்தது காண்க. (௫)

பட்டப்பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனது பக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாக வொருசொல்
திட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவும்
சேராம லாரா கநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள் போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாக வுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லையென்னவே
நடுவே முளைத்த மனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தா வனே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(இ-ள்.) கருதரிய..............கடவுளே! பார்த்தவிடமெல்லாம் வியாபித்த நிலைகுலையாமல் பரமவெளியாகத் தோன்றும்படி மௌனகுருவாகி வந்து, ஒரு சொல்லைத்திருத்தமாக எனக்கு நீ யுபதேசித்திருக்கவும், அதனை விட்டு என்னை வேறு யாரீாகவோ எண்ணி, மண்லாற் சிறுவீடுகட்டி, அதிலடப்பட்ட மணற்சோற்றைப் பலநாளு முண்டுகளிக்கின்ற சிறியர்களைப்போல், கொரேயாய்க் கற்ற கல்வியையும், கேட்ட கேள்வியையும், நல்ல நிலையிடமாகவெண்ணி, நடுவிலுண்டாகிய மனத்தை, 'நான் நீ'யென்று இரண்டில்லை யென்னும்படி வசப்படுத்த வறியாமல் மெலிந்தேன். ஆதலால், பட்டப்பகலை இருட்காலமென்கின்ற மயக்கவறிவுடையார் பக்கத்தைச் சார்ந்தவனோ யான்? நின்கருணைக்கெப்போதுபாத்திரமாவேனோ? (அறிகிலேன்) எ.று.

பட்டப்பகலை யிருளென்பது, தெளியக்கிடந்ததொன்றை விபரீதமாகக்கொள்வது. நீ யுபதேசிக்கப்பெற்ற பெருமையையும், அதன்வழியொழுக வேண்டுமென்னு முரிமையையும் மறந்தே னென்பார் 'ஆராக நான், என்றார். இரண்டில்லையென்னவே கட்டவறியாமலெனக் கூட்டுக. இதுசோகம் பாவனை முறைமையாகும். (௬)

மெய்விடா நாவுள்ள மெய்யருளிருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமிலை
மெய்யேது மறியா வெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யை யெல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென் செய்குவேன்
மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞான குருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கடொறு நின்ற குருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்து டுணர்த்து குருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

(இ-ள்.) கருமைநிற நீங்காத நீலகண்டத்தையுடையவுருத்திரமூர்த்திவடிவான ஞானகுருவே! விஷ்ணுரூபமாகிய குருவே! தாமரை மலரை யிடமாகக்கொண்டு வேதாத்தியயனம் பண்ணுகின்ற பிரமனுருவாகிய குருவே! எல்லாச் சமயங்களிலும் நின்றருள் செய்கின்ற குருவே! 'எம்மைக் கைவிடாதே'யென்று வணங்கு மன்பர்களுக்கு அன்புருவமாய் அவர் கருத்திற்கலந்து யாவையு முணர்த்துகின்ற குருவே! கருதரிய ..............கடவுளே! மெய்ம்மை நீங்காத நாவினையுடைய மெய்யருள்ளத்திலணுகி, உள்ளபடியே யுண்மையான பொருள்களையெல்லாம் மெய்ம்மையாகுமென்று நீயுணர்த்தியது மெய்யே ; இதற்கையமில்லை. மெய்ம்மை சிறிது மறியாதவனும், வெறும் பொய்யை விடாதவனுமாகிய என்னுள்ளத்திருந்து, உள்ளபடியே பொய்யாயினவெல்லாம் பொய்யென்னுது மெய்யேயென்று சொல்லும்படி நியமித்து வைத்தனையாயின் அற்பனாகிய யான் என்செயவல்லேன். எ-று.

ஆன்மாக்களுடைய கன்மத்துக்குத் தக்கபடி வினைப்போகங்களை யூட்டி மலபரிபாகப் படுத்துகின்றவன் நீயேயென்பது கருத்து. ஆசாரியனைத் திரிமூர்த்தி வடிவமாகக்கொண்டு துதிப்பது மரபு. அன்றியும், "திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வே ளாதி, தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கு முதற்குருவாய்" என்றபடி கொள்ளினுமமையும். (௭)

(தொடரும்).




"Hridyakasa Mayam Kosam Anandam Paramalayam" Maitran-Upanishad.

# உண்மை விளக்கம்
## எனும்
# சித்தாந்த தீபிகை.

1898ஞு ஜனவரியீ

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநமஃ.

## சிதம்பர இரகசியம்.

(முன்தொடர்ச்சி.)

☞ ஸ்ரீசிதம்பர ஆலயத்தின் புகைப்பட மொன்று இத்துடன் அநுப்பப்பட்டிருக்கிறது. மற்றைய ஆலயங்களின் படங்களும் பின்னர்ச் சமயோசிதமாய் அநுப்பப்படும்.

(உஅ) (105-ம் இலக்க) சுலோகத்தினுலே சொல்லப்பட்ட அவ்வியாகிருத மாயா அஞ்ஞான அவித்தியா சடசத்தியாகிய பரமாகாசந்தான் மேலே பேசிய கார்க்கி ஆகாசமாம் என்றும், பாகிய (சட) ஆகாசத்தை அபேக்ஷித்து இந்த அவ்வியாகிருத சடசத்தி ஆகாயம் பரமாம் (சிரேஷ்டமாம்) ஆதலில், பரமாகாசம் (பரமவியோமம்) எனப்பட்டதாம் என்றும், மேலேகூறிய பிரமகீதை மூன்ரும் அத்தியாயத்து முப்பத்திரண்டாஞ் சுலோகத்துக்கு வித்தியாரணியர் தீபிகை பிடித்தார். பிரகாசித்தலால் ஆகாசம் எனப்பட்டுச் சிற்பிரகிருதி எனப்படும் பரமதேவியாராகிய சிதம்பர பராசத்தியைச் சங்கராசாரியர் (அத்தைத்திரீயத்திலே சொல்லப்பட்ட "வியோமத்தை" ஆகாசத்தை) அவ்வியாகிருதம் என்று பாஷ்யத்திற் கூறி, அதற்கு இசையத் தைத்திரீயப் பொருள் கூறப்புகுந்த பிரமகீதா சுலோகத்தைத் தங்கருத்துறத் திருத்திப் பரமாகாசத்தை (பரம வியோமத்தை) சடப்பிரகிருதியாம் மாயை என்றும், அப்பரமாகாசத்தை அஞ்ஞானம் என்றும், அப்பரமாகாசத்துக்கு இவை முதலாய பெயர் உளவென்பது தொனிக்க "ஆதி" சப்தத்தினுல் காட்டிவிட, இதைப் பற்றி இவரைத் தொடர்ந்த வித்தியாரணியர் அந்த "ஆதி" என்னும் சப்தத்தினுல் அப்பரமாகாசத்தை அவித்தை என்றும், அப்பரமாகாசத்தைச் சடசத்தி என்றுங் கூறி, இந்தப் பரமாகாசம் அவ்வியாகிருதம் எனப்படும் என்று தமது சங்கராசாரியருடைய பாஷ்யக்கருத்தால் வியோம சப்தம் அவ்வியா கிருதத்திலே பொருண் முடிபுகாட்டி முற்றியதெனக் குறித்ததோடமையாது, இந்தப்பரமாகாசந்தான் கார்க்கி ஆகாசம் என்றும்,பிருகதாரணியோபநிடதக் கருத்தை ஈண்டுவலித்து இழுத்துக்காட்டி, பிரபுவாகிய புண்ணியசீலன் ஒருவனை மற்ருெருவன் கொன்று பிரேதமாக்கிவிட்டு இந்தப் பிரபு பிரேதம் சாமானிய மனுஷனுடைய பிரேதத்தினும் (பரமாம்) சிரேஷ்டமாம் என்று கூறியதுபோல, பாகிய (புறத்துள்ள) ஆகாசத்தினும் இந்த அவ்வியாகிருத சடசத்திப் பரமாகாசம் சிரேஷ்ட முடையதென்று சங்கராசாரியர் சீஷர்கள்வியாக்கியை எழுதுவார்களேல், மற்றைய சுருதி புராணுதிகளுக் கெல்லாம் முழுமையும் மாறுபட அவ்வாறெழுதி விபூதி ருத்திராக்ஷங்களை யெல்லாம் சாம்பவமூர்த்தி எனும்படி தரித்து, லோககுரு என்று பெயரும்பூண்டு யாண்டுந் தொனித்து நிற்குஞ் சங்கராசாரியர் செய்த செய்கைகளுக்கும், இவர் சீஷர் வித்தியாரணியர் முதலாயினோர் செய்த செய்கைகளுக்கும் நாமெல்லாம் யாது செய்யவேண்டும்!!] சங்கர மதத்தவரே! சொல்லும்! சொல்லும்!! தேவியாரையுஞ் சிவனுரையுந் துதித்துச் சங்கராசாரியர் சௌந்தரியலகரி சொல்வி என்! சிவபுஜங்கம் சொல்வி என்! மற்றெவ்வகைத் தோத்திரங்களை யெல்லாம் செய்துமென்! சிதம்பரசத்தியாம் பராசத்தியைச் சடசத்தி என்றும், மாயை என்றும், அவித்தை என்றும் பொருள்படப் பாஷ்யஞ் செய்து அதற்கிசையச் சூதசங்கிதையிலும் (Forgery) கூட லேகனம் செய்தமைக்குச் சிவபெருமான் தக்க விசாரணை செய்யாது போகார்!! போகார்!!! எங்களையெல்லாம் வாழவைக்கும் பரமாகாச பராசத்தியைக் கொன்றவருக்கு உய்வு எங்ஙனம் அடுக்கும்! பிரசித்தமாய் ஒருவனை நிந்தித்துவிட்டு இரகசியத்திலே அவனை வாழ்த்துதல் நிஷ்பிரயோசனமாய் முடிதல்போல, எவர்களும் படித்துய்தற்கியன்ற உபநிஷத பாஷ்யத்தையும் சூத்திர பாஷ்யத்தையும் பராசத்தியார்க்குப் பொருள்பட ஆக்காது, அவரை உயிரிலா அவித்தியா சடசத்தி ஆக்கிவிட்டு, சௌந்தரியலகரி முதலியவற்றிலே தேவியாரைத் துதித்தல் நிஷ்பிரயோசனமாய் முடியுமோ? இன்றேல் பிரயோசனமாய் முடியுமோ?

(உகூ) பிருகதாரணியோபநிடதத்து ஐந்தாம் அத்தியாயத்து ஆரும் பிராம்மணத்தின் பொருள் போதிக்கப் போந்த பிரமகீதை பத்தாம் அத்தியாயம் அவ்வுபநிடதப் பொருளுக்கிசையப் பூவுலகமுதலிய உலகங்களை யெல்லாம் குறுக்கும் மறுக்குமாய் ஒன்றுக்குமேல் ஒன்ருய் நிறுத்திப்பேசி மேலே போய்ப்பிரமலோகத்திலே (சிவலோகத்திலே) முற்றியதாகப் பொருள் முடிக்காமலும், அவ்வுலக மெல்லாம் அச்சிவத்தின் சிதம்பர சத்தியினுலே தாங்கப்படுதலைக் காட்டாமலும், உலகம் அனைத்தும் தற்பரமாகிய பிரத்தியகாத்மாவிலே (கூடஸ்த பிரமத்திலே) தன்னிலே (சங்கராசாரியரிலே) அவ்வியாகிருத மாயையினுல் சோவையிடப்பட்டு அவை யெல்லாம் அத்தியாசமாய் (கற்பிதமாய்) விளங்கும் என்ற கருத்தினுல் சூதசங்கிதை

(106) ஒத: ப்ரோதச்ச தேலோகா ப்ரம்ம சம்ஞெ பரே சிவே | ஏவம் சர்வே சதாசாக்ஷி ஸ்வரூபே ப்ரத்யகாத்மநி | சர்வாந்தர தமேப்ரோதா ஒதா அத்யாசத: ஸ்திதா: |

என்று கூறியதற்குக் காரணம் ஏகான்ம வாதியராகிய சங்கராசாரியர் அச்சூத சங்கிதையை இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்பதினெட்டுத்தரம் திருப்பித் திருப்பிப் படித்து உற்றுணர்ந்து பார்த்துத் தமது ஏகான்மவாத பாஷ்யத்துக்குப்பொரு

த்த முறமாற்றி வைத்தமையே யன்றிப் பிறிது வழிசொல்ல வாயுண்டோ! சங்கராசாரியரோடு சிவரகசியத்திலே ஒருங்கு பிரதிபாதிக்கப்பட்ட அப்பயதீக்ஷிதர் தமது சைவக் கிரந்தங்கள் எங்கும் பிரத்தியக்கான்ம நிர்க்குணப்பிரம கூடஸ்த பிரமத்தைத் தாழ்ந்த படியிலே அடக்கிவைத்துப் பேசி யிருப்பாராக, அவர் பேசியது கூடலேகனஞ் செய்யப்பட்ட சூதசங்கிதைக்கு மாத்திரம் உடன்பாடாகாது மற்றை வலிய உபப்பிரும்மணங்களுக் கெல்லாம் ஒத்த கருத்தேயாய் முடிதலால், சூதசங்கிதையாம் மங்கை கபடகிருத்தியத்தினால் தன்னுண்மை தவறப் பெற்றதென்பதும், கற்புத்தவறப் பெற்றதென்பதும் ஆயவும் வேண்டுமோ?

(௯0) மேலும் அப்பய தீக்ஷிதயோகியார் தருமஞான ரூபமாயுள்ள சிதம்பர சத்தியை (ஆகாசத்தை) சர்வாதாரமும் சர்வகாரணமுமாமென்று பிருகதாரணியமும் சாந்தோக்கியமும் கூறியவாமென்று நாட்டி, தைத்திரீய சுருதியானது பரப்பிரமத்தினது வாக்குமனாதீத நிரதிசயானந்தத்தையுற்று, "எங்கிருந்து வாக்கானது மனசோடு செல்லமாட்டாதாய் மீண்டுவிடுகின்றதோ அப்படிப்பட்ட பிரமத்தினது ஆனந்தத்தை அறிந்தவன் யாண்டும் பயப்படுவானல்லன்" என்றும்,

(107) ஏஷ ஆகாச ஆநந்தோ நஸ் யாத் |

"இந்த ஆகாசம் ஆனந்தமாயி ராதொழியில்" என்றும், ஆகாசத்தையும் ஆனந்தத்தையும் ஒன்றும் என்ற கருத்தினால் சமானாதிகரணத்தில் வைத்துச் சொல்லுதலால், (சிதம்பர சத்தியிலே) பரமாகாசத்திலே ஆனந்தம் முடிவுபெற்று என்றுங் கூறி முடித்தாராக, பிரமகீதை மூன்றாம் அத்தியாயத்து முப்பத்திரண்டாஞ் சுலோகம் அந்தப் பரமாகாசத்தை (பரமவியோமத்தை) சடசத்தி என்றும், அவித்தை என்றும், அவ்வியாகிருதம் என்றும், அஞ்ஞானம்என்றும், மாயை என்றுங் கூறி, அறுபத்தெட்டாஞ் சுலோக வாயிலாகப் "பிரமானந்தத்தை (பிரமமாகிய ஆனந்தத்தை) தன்சுவரூபமாக அறிந்தவனே பயம் நீங்கினவனாவன்" என்று கூறுமேல், அப்பரமவியோம (ஆகாய) சடசத்தியே பிரமானந்தமாயும், அவித்தையே பிரமானந்தமாயும், அவ்வியா கிருதமே பிரமானந்தமாயும், அஞ்ஞானமே பிரமானந்தமாயும், மாயையே பிரமானந்த மாயும் முடிந்து, பிரமகீதா சுலோகத்தின்படி மாயாவாதிகளும், அவர் முன்னோரும் அவர் பின்னோருமாகிய எல்லோரும் தற்சுவரூபமாகநின்ற நிலையும் மாயையாய், அஞ்ஞானமாய், அவ்வியாகிருதமாய், அவித்தையாய், சடசத்தியாய், முடிந்து, பிரமகீதையானது தன்னை விசுவசித்த ஏகான்மவாதக் கும்புகளையெல்லாம் இருட்குழியிலே பொறித்து விட்டமையை அம்மதத்தவர் முன்பின் யோசிக்கும் விவேகமூளைப் பிரகாசம் சிறிதுமின்றி அச்சூதசங்கிதாப்பிரமகீதை பதினெண் புராணங்களுட்பட்டதென்றும் பூரணப் பிரமாணமுடையதென்றுங் கொண்டு பார்த்துப் பார்த்து எழுதித் தம்மிடத்து அச்சுச்சாலையிருக்கும் வாய்ப்பொன்று மாத்திர நோக்கிச் சிவத்துரோகத் துச்சமொழிப் பத்திரிகைகளை யெல்லாம் அச்சிட்டு வெளிப்படுத்திப் "பூச்சியடித்தான்" கதையை ஞாபகப்படுத்தா திருப்பாராக. சங்கராசாரியர் சூதசங்கிதையிலே செய்த கூடலேகனம் இத்துணை அனர்த்தத்தை அவர் மதத்தவர் தலையிலே முடித்து விட்டது. மூலைக்குள்ளே ஜகத்குரு என்று பெயர் மாத்திரையாய்ச் சொல்லப்பட்டுக் கிடந்த சங்கராசாரியர் பெயரை இக்காலத்தவர் ஒரே கிளப்பிலே கிளப்பித் தலைக்குமேலே வைத்துத் தூற்றுதற்குக் காரணராயினர். இந்த மாயா அஞ்ஞான அவித்தியா அவ்வியாகிருத சடசத்திப் பிரமத்தைத் தற்சொரூபமாக அறிந்தவன் யாண்டும் அஞ்சுவானல்லன் என்னும் வாய்மையினாலன்றோ, பிற்காலத்தவர் தாமும் அவ்வியாகிருத மாயா அவித்தியா அஞ்ஞான சடசத்திக் குகையுட் பொறிந்து இன்னது எழுதலாம் இன்னது எழுதப்படாது என்பது நோக்காது, வைதிக சைவ சுத்தாத்துவித சைவசித்தாந்த சமயத்தை நாஸ்திகமதம் என்று எழுதித் தலைதடுமாறி இடர்ப்பட்டார். சுருதியையும் இவரது சூதசங்கிதாக் கபடலேகனத்தையுங் கண்டு இவரது துரகங்காரத்தை இப்போதே பொடிப்படுத்தி நிர்மூலப்படுத்தி வாரி வாயுவில் வீசி ஊதி விட்டேம். இனி இவர்தாம் எழுதிய பொய்யுரைப் பதினைந்து பதினாறு சிவத்துரோக தூஷணக் களஞ்சியச் சுவடிகளை யெல்லாம் தமது கீழ்ப்புறத்தாழியில் வீசிக் கரைத்து விடுவாராக, இன்றேல் தமது அடுப்புநெருப்பிலிட்டுப் பஸ்மீகரப்படுத்திவிடுவாராக. இனிமேல் இப்படிப்பட்ட துச்சப்பத்திரிகைகள் கொண்டு உலகைக்கெடுக்கா திருப்பாராக. இந்த ஆகாசம் ஆனந்தமாகாது போயின் என்று தைத்திரீயசுருதி நேரே பொருள்படக் கிடப்பதே யாகவும், தமது முன்னோராகிய நீலகண்ட சிவாசாரியர் அவ்வாறே பொருள் செய்திருப்பாராகவும், ஸ்ரீ அப்பய தீக்ஷிதயோகியார் அவ்வாறே சமானாதிகரணத்தில் வைத்துப் பொருள் செய்தாராகவும், (சிதம்பர சத்தியாம்) பரமாகாசத்தை அவ்வியாகிருதம் என்று தமது மாயாவாத பாஷ்யத்திலே வரைந்தமைக்குச் சான்று செய்யுமாறு, மேலே போந்த பிரமகீதை மூன்றாம் அத்தியாயத்து முப்பத்திரண்டாஞ் சுலோகமானது மாயை என்றும், அஞ்ஞானம் என்றும், அவ்வியாகிருதம் என்றும், சடசத்தி என்றும், சம்சார பந்தக்குகை என்றும், அவித்தை என்றும் சிதம்பரத்தைச் சொல்லுமாறு சங்கராசாரியர் பதுக்கிவிட்டமையால், இந்தச் சுருதிக்கருத்து (107-ம்) இலக்கச் சுருதியோடு மாறுபடுமே என்ற கபடத்தனமேற்கொண்டு "இந்த ஆனந்தம் பரமவியோமமாம் குகையில் இல்லையாயின்" என்று அநாவசியகமாய் அச்சுருதித் தப்புப்பொருளை ஈண்டு வலிந்து இழுத்து ஒவ்வாப்பொருள் கோடலாம். அறவிளைந்தான் உரை பண்ணினார் சங்கராசாரியர். ஆகவே, உயிர்களெல்லாம் இருந்து பிழைக்கவேண்டில், (சங்கராசாரியர் கருத்தின்படி) ஆகாயம் பரமாகாச மாயிருத்தல் வேண்டுமாம், அவ்வாகாசம் மாயையாயிருத்தல் வேண்டுமாம், அவ்வாகாசம் அஞ்ஞானமாயிருத்தல் வேண்டுமாம், அவ்வாகாசம் அவ்வியாகிருதமாயிருத்தல் வேண்டுமாம், அவ்வாகாசம் சடசத்தியாயிருத்தல் வேண்டுமாம், அவ்வாகாசம் குகையாயிருத்தல் வேண்டுமாம், அக்குகை சம்சாரபந்தமா யிருத்தல் வேண்டுமாம், (நீலகண்டசிவா

சாரியர் அப்பயதீக்ஷிதர் கருத்தின்படி அவ்வாகாசம் பரமசத்தியாம் சிதம்பரானந்த பராசத்தியாயிருக்க வொண்ணாதாம்) இப்படியெல்லாம் இருந்தால், மாயாசடசத்தி வியோமக்குகையில் ஆனந்தம் இருக்குமாம், அதனால் தற்சொரூபமாயிருந்து விடலாமாம்! மிகுநன்று! நன்று!! சிதம்பரேசர் நடனம் பண்ணும் இடத்தில் சங்கராசாரியரும் அவர் சீடரும் தாம்பிரமம் தாம்பிரமம் என்று நடித்தாராம்! இப்போது பின்னுள்ளாரும் தாம் தாம் பிரமம் என்று தாளம்போட்டு நடிக்கின்றார்கள்! பின் என் செய்யார்கள்! இப்படியன்றோ பொருள் செய்யவேண்டும்! லோககுரு என்னுந் தொனிப்பெயருடையராம் சங்கராசாரியர் சிதம்பரத்தைச் சடம்பரமாக்கி, அதனால் சுருதி சொல்லிய "ஆகாசம் ஆனந்தமாகாதொழியின்" என்பதை, "சடம்பரம் ஆனந்தம் ஆகாதொழியில்" என்று பொருள்படுத்த வழிகாட்டியேனும், மாயாசடம்பரத்தில் ஆனந்தம் வைக்கப்பட்டிருக்குமென்று பொருள்படுத்த வழிகாட்டியேனும் தூர்த்தஞ் செய்து கெடுத்தமை மிகுதியும் வெட்கம்! வெட்கம்!! பொய்ச் சாக்ஷிக்குத் தாழம்பூவைப் பிரமாபற்றினாற் போலச் சூதசங்கிதையைச் சங்கராசாரியர் பற்றிப் பிழைபடுத்தியது முழுமையும் தவறேயாம். இதினுந் தமது பாஷ்யத்தையும் சூதசங்கிதையையும் இரண்டாயிரம் வருஷமாக நம்பி வந்தவர்களைத் தலைதடுமாறிப் பேசுதற்கும் எழுதுதற்கும் வேதசார சைவசித்தாந்தத்தைத் தூஷித்தற்கும் காரணரானமை மிகு கொடுமையேயாம்! இவருக்கு இச்செய்கை அடுக்குமா! இது பொறுக்குமா! இங்ஙனம் பராசத்தியைக் கொன்றுவிட்டா தாம் லோககுரு என மேலாடவேண்டும்! அந்தமின் மறையெல்லாம் அடிதலை தடுமாறிப் போயவே! நமது சிதம்பர பரமானந்தாமிர்த உபநிஷததடாகத்தை மாயாவாதப் பொருட் சொற்களென்னும் சற்களாலும் மண்ணினாலும் நிறைத்து நன்றாய் உரமிட்டிறுக்கி அவ்வுபநிடத உண்மைகளைக் காணவொட்டாது கெடுத்துவைத்தபாபம் எளிதிலே தீருவதன்றோ! கீழ் மேலாயும் மேல் கீழாயும் நின்றாற்போல மாயாம்பரோபநிஷதங்கள் கீழ்நிற்கும் நெறியை விட்டுமேலாடவும், சிதம்பரோபநிஷதங்கள் மாயாவாதியால் தூர்த்தஞ் செய்து கெடுக்கப்பட்டு மேனிலையை ஒழிந்து கீழ்நிலைக்கண்ணவாம் மாயாவாதோபநிடதங்களோடு சமமாகப் பொருள்கொள்ளப்படவும் நேர்ந்தமை பாபக் கலியுகமான்மியத்தினாலேயாம்.

(௯௧) வைதிக சைவோபநிடதங்களிலே பிரமம் ஆகாசம் ஆன்மா என்பன அதிட்டவசத்தால் பிரமம் என்றேனும், ஆகாசம் என்றேனும், ஆன்மா என்றேனும் ஒவ்வொன்றாய்க்காணப்பட்டால் அத்தைக்கொல்லாது சங்கராசாரியர் தமதுபாஷ்யத்திலே தப்பவிடுகின்றார். அதுவன்றி ஓரிடத்திலே இரண்டாய் மூன்றாய் அவை சேர்ந்து அவ்வுபநிஷத மூலங்களிலே காணப்படுமாயில், அவற்றுள் ஒன்றைமாத்திரம் நிற்கவிட்டுமற்றவைகளை எவ்வாறாயினும் உபாயஞ் செய்து கொன்று விடுகின்றார். ஈசோபநிடத முதல் அதர்வசிகை இறுதியாம் சிதம்பர வாதோபநிடதங்களிலேனும், இவற்றின் பொருளை அங்கங்கே சுருக்கியேனும் விரித்தேனுங் கூறும் கைலாயசங்கிதை வாயுசங்கிதை முதலியவைகளிலேனும் சிவமாகிய பிரமம், சத்தி, ஆன்மா என்பவற்றின் ஒன்றையேனும் பொய்யென்று கூறுந் துணுக்கை மந்திரமேனும் துணுக்கைச் சுலோகமேனுங் காணப்படாமையினாற்றான், அச்சிதம்பரோபநிடதங்களை மாயாவாதோபநிடதப் பொருள்படப் பாஷ்யஞ் செய்து, அப்பாஷ்யத்திலே ஒவ்வோரிடத்திலே வெளிப்படவும் வெளிப்படாமலும் சொல்லியும் சொல்லாதும் விடப்பட்ட மாயாவாதப்பொருள்களை அறிந்து கொள்ளும் பொருட்டுக் கற்பனாசுலோகங்களைப் பிரமகீதை முதலியவைகளிலே புகட்டி மாயாவாதிகளுக்குச் சகாயஞ் செய்துவிட்டார். சங்கரபகவத் பாதாசாரியர் சூதசங்கிதையைப் பதினெட்டுத்தரம் ஊன்றிப் பார்த்துச் சாரீரகபாஷ்யஞ் செய்தார் என்னும் புளுகு பெரும் புளுகாம் என்றும், அவர் பாஷ்யத்துக்கியையச் சுலோகங்களைப் புகட்டிப் பதினெட்டுத்தரம் முன்பின் விரோதமறும்படி பார்வையிட்டு மாற்றினமையையே உலகினர் மாறுபடப் பேசினார் என்றும், இவ்வாறு கபடத்தனஞ் செய்தமை நீலகண்டசிவாசாரியர் பாஷ்யத்தையும், அதற்கு ஆதாரமாய் நின்ற அப்பயதீக்ஷித யோகியார் சைவக்கிரந்தங்களையும் சூதசங்கிதையையும், அதற்கு மூலமாய்நின்ற சுருதிகளையும், உபப்பிருமமணங்களையும் மிகு சாவதானத்தோடு ஆராயும் அறிஞர்க்குப்பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும் பட்டப்பகலை இரவென்று சொல்லிய வாய்மை வெளிப்படும் என்றும் உணரக்கடவர். சீவான்மா பரமான்மா எனப் பொருள்பட இரு ஆன்மசப்தங்கள் சிதம்பரவாதோபநிடதங்களிலே நேரின், அவற்றுள் ஒன்றைப் புத்தி என்று பொருள்படுத்திக் கெடுத்துவிடுகின்றார். பரமாகாசம் (சிதம்பர சத்தி) பிரமம் என இரண்டு நேரில், பரமாகாசத்தைச் சடசத்தியாக்கிப் பிரமத்தை எஞ்சவிடுகின்றார். செயற்கரிய செய்கலாதார் குழுவினர் வகுப்பார்க்குச் செயற்கெளியதும் ஒன்றுண்டாமோ!!! தைத்திரீயத்துக்குப் பொருள் கூறிய விடத்து மேலே போந்தவாறு "பரமாகாசம்" "பிரமம்" என இரண்டு ஒருங்கு நேர்ந்தபோது, பரமாகாசத்தைச் சடசத்தியாக்கினவர் சாந்தோக்கியோபநிடதத்து அவ்விரண்டும் நேராது ஆகாசம் என ஒன்று மாத்திரம் நேர்ந்தபோது, அதனை (நிர்க்குண) சிவம் எனச் சூதசங்கிதையிலே பொருள்படுத்தித் தமது மாயாவாத சாந்தோக்கியோபநிடதபாஷ்யத்து ஆகாயம் ஒன்றாக்கியைய நிறுத்திக் கொண்டார். இந்த ஆகாசத்தைத் தைத்திரீயத்திற் போலச் சடசத்தி எனப்பொருள்படுத்தில் ஏகான்மவாதியாருக்கு மற்றோர் கதி ஈண்டு இன்றாய் விடும். தைத்திரீயத்திலே ஆகாசத்தைச் சாந்தோக்கியத்திற போல நிறுத்திக்கொண்டால், இவர் ஏகான்மவாதம் நிலைக்கமாட்டாது போக வைதிகசைவம் வந்து குடிகொண்டுவிடும் என்று கொண்டு பாஷ்யமும்பிரமகீதையும் தாளமும் மேளமும்போல இசையச் சங்கராசாரியர் இசைத்தமையுமாமென்க.

(தொடரும்).

## பூர்வீக சமய நிலை.

(முன்தொடர்ச்சி)

இதுதான் எகிப்து தேசத்திய மதாசார விர்த்தாந்தம். சால்டியர், இந்தியா, பாரசிகம், கிரீஸ், ரோம், சீனம், ஆகிய தேசங்களின் மதாசார வரலாறுகளு மிப்படித்தான். இதுகாறுங் கூறியவற்றால், ஒரு தெய்வ வுபாசனையும், பலதெய்வ வுபாசனையும் கலந்து எல்லாருடைய மதாசாரங்களிலும் பிரபலித்திருப்பதற்குக் காரணமறிந்து கொள்ளலாம். ஆதியி லிருந்த ஆசாரம் ஒருதெய்வ வுபாசனைதான். தான் சுயம்பு, இரண்டாவதற்றவொருபொருள், சர்வஜன பிதா, சிஷ்டபரிபாலனன், துஷ்டநிக்ரகன், என்றும், எல்லார்க்கும் உய்யுநெறி யொன்றே யமைத்திருப்பது என்றும், ஆதியில் மனுஷனுக்குக் கருணைகூர்ந்து உணர்த்தியது அக்கடவுளே. ஆனால், நாளாவர்த்தியில் ஆதி ஐதிகங்களெல்லாம் கற்பனை கதைகளால் மாறுபட்டு, மெய்த்தெய்வ ஞானம் பெரும்பான்மையும் மலினமடைந்துவிட்டது. காமாதிகளுக்கு மூலமாகிய விக்கிரகாராதனம் தலையெடுத் தோங்கிற்று.

கடவுளொன்றே யென்பதைப்பற்றி ஆதியிலிருந்த ஞானமானது யூபிரட்டீஸ் நதிதீரங்களில் பரவியிருந்தது. அசிரிய ராஜ்யத்துச் சிறுவர்கள் ஆகாயத்தை நோக்கி இரண்டு கைகளையு முயரத்தூக்கிக் கொண்டு தங்கள் வேலைமுடிவில் அபராத மன்னிப்புக்காக வழக்கமாகச் செய்யும் தேவபிரார்த்தனை வருமாறு:—

ஓ கடவுளே! "என்விஷயமாகத் தேவரீர் திருவுளத்திற் கோபங்கொள்ளாது தணிக."

"அடியேன் சம்சார பயமென்னு முணவையுண்டு, துக்க மென்னு நீரைக்குடித்து ஜீவிக்கிறேன்."

"என் தெய்வத்துக்கு அபசாரங்கள் செய்யத் துணிகின்றேன்."

"என் கடவுளுக்கு அபசாரங்களைக் கவனியாமற் செய்து வளர்கின்றேன். பாபமென்றுதெரிந்தும் அவ்வழியே செல்கின்றேன்."

"ஓ ஐயனே! என்குற்றம் மிகப்பல; நான்செய்யும் பாபம் மிகக்கொடிது; என்னைப்போல் அபராதியும் பாபியு முண்டோ"!

"மனிதரியல்பு தெரிந்த கடவுளே! என்னைப்போலபராதி யில்லை."

"பாவக்குழியில் வீழ்ந்திருக்கிறேன்; அதைக் கவனிப்பதில்லை; பாவஞ் செய்திருக்கிறேன்; அதையுங் கவனிப்பதில்லை."

"கடவுளென்மீது வெறுப்புற்றுக்கோபமுதிர்ந்திருக்கிறார்; அவர் கோபாக்கினியில் வெதும்புகின்றேன்."

"நான் முழந்தாளில் நிற்கின்றேன்; என்னைக் கைதூக்கு வாரில்லை."

"தோத்திரஞ் சொல்லிப் புலம்புகின்றேன்; செவிகொடுப்பாரில்லை; கருணாமூர்த்தியாகிய அவனையணுகிக் கழிவிரக்கப்படத் தொடங்குகின்றேன்."

"நான் செய்துள்ள பிழைகளனந்தம்; அவற்றைக் காற்று அடித்துக்கொண்டு போகட்டுமே; நான் செய்துள்ள ஈசுவராபராதங்களும் அநந்தம்; ஏபகவானே! அப்படலத்தைப் பீறியெறியுமே! என்னாண்டவனே! என் பாவங்கள் ஏழுமடங்கேழு. அவற்றினின்றும் என்னை விமுக்தனுக்குமே! பிறரறியாதவற்றை யெல்லா மறியவல்ல பெருமானே! என்பாவங்கள் ஏழுமடங்கேழு. அவற்றினின்றும் என்னை விமுக்தனுக்குமே! ஈன்றணிய தாயின் இளகிய நெஞ்சமும், தனயனைப் பெற்றெடுத்த தந்தையின், நெஞ்சமும் போல்வதன்றோ உமது திருவுள்ளம்; என் மீது திருவருள் சுரப்பீராக."

"ஆண்டவனே! என்துன்பக் கண்ணீரைத் துடைத்தருளும்; நான்நினைவாலும், சொல்லாலும், செயலாலும், செய்கின்ற தவறுகளைப் பொறுத்தருளும்; என் துக்கங்களை யடித்துக்கொண்டு போகும்படி சப்த மாருதங்களை யுண்டுபண்ணும்; பறவைகளவற்றைக் காற்றிலே தூற்றிவிடட்டும்; மீன்பிடிக்கும் வலைகள் அவற்றையும் பிடிக்கட்டும்; நதியாவது ஜலத்திலவற்றை யுருட்டிக்கொண்டு போகட்டுமே!"

இவ்வாறு, தான் செய்த பாவங்களைப்பற்றி வருந்தி வேண்டிக்கொள்ளும் ஆன்மாவானது, பக்தியில்லாதவனுடைய ஆன்மாவாக மாட்டாது; அன்றியும், அநாசாரமான விக்கிரகாராதனையால் இழிவடைந்திருக்கு மோருள்ளத்தினின்று வெளிவந்த ஸ்தோத்திரங்களோ; அல்ல. மானுஷிக ஆரம்ப தசையிலும், இதிகாச காலத்துக்கு முற்பட்ட குழப்பகாலத்திலும், உண்மையாகிய கடவுளொருவரே யென்பதை நன்றாகக் கொண்டிருந்தார்கள்.

### பூர்வீக இந்து மதம்.

இந்தியாவின் வடமேற்றிசையிலிருந்து, உங்கள் முன்னோர்கள் போர்க்கோலம் பூண்டவர்களாய், சப்தசிந்து தீரமாகிய பூமியில் செல்லும் போது, பழமையாகிய வேதகானங்களால் திசையெல்லாஞ் செவிடுபடுத்தினார்கள். அப்பாடல்களும், ஸ்தோத்திரங்களுந் தெய்வமொன்றே யென்னும் பூர்வ நம்பிக்கையைக்குறிப்பனவாம். தற்காலத்திய இந்துவாலயங்களில் நிறைந்திருக்குந் தெய்வங்களை யக்காலத்திய வேதப்பாடல்களிற் காணமுடியாது. சிவன்,

விஷ்ணு என்னும் பெயர்கள் கிடையாது. ஒரே கடவுளென்னுங் கொள்கையும், பக்தியும், பூர்வீக வாரியர்களுடைய மனத்திலிருந்து நீங்கும்படியாக, புராணங்களில்தெய்வமாகக்கொண்டாடப்படும் வீரர்கள் அதுவரையிலுண்டானதில்லை. கோல் புருக் என்பவர் நெடுநாள் வேதக்கருத்தையாராய்ந்து கண்டமுடிபுமிது. அவர் சொல்வது:—"வேதங்களைப்பெரும்படியாய்ப் பார்க்கும்போது, பிரார்த்திக்கப்படுகின்ற தெய்வங்கள், தங்களைநோக்கிப் பிரார்த்திக்கின்றவர்களைப்போலப் பலவகையாகத் தோன்றுகின்றன. ஆயினும், இந்துவேதத்தின் மிகப்பழைய வியாக்கியானங்களின்படி யந்தப்பலவகையான புருஷர்கள், பொருள்கள், இவற்றின் பெயர்களெல்லாம் மூன்று தெய்வப் பிரிவாக வேறப்பட்டு, தீர்ப்பா யொரே கடவுளிடத்தில்முடிவுபெறும். வேதங்களின் அரும்பதவகராதியானது மூன்று தெய்வநாமாவளிகளோடு முடிகின்றது. அவற்றுள், முதலாவதில் அக்கினி யென்றும், இரண்டாவதிற் காற்றென்றும், மூன்றாவதிற் சூரியனென்றும், பொருள்படும் படியான பெயர்கள் அடங்கியுள்ளன. தெய்வங்களைப்பற்றிப் பிரதிபாதிக்கின்ற நிருக்தத்தின் கடைசிபாகத்தில் ("திஸ்ர ஏவதேவதா") மூன்று கடவுளர்களே யுண்டென்று இருமுறை விளக்கியிருக்கிறது. இவ்வாக்கியங்கள் முடிவிலொரு தெய்வத்தைக்குறிக்கு மென்பது, வேதங்களின் அநேக வாக்கியங்களாற் கொள்ளக்கிடப்பது மன்றி, நிருக்தம், வேதம், இவற்றின் பிரமாணத்தைப்பற்றி இருக்கு வேதத்தின் விஷய சூசிகையாரம்பத்திலும், சுருக்கமாயுந் தெளிவாயுங் கூறப்பட்டுள்ளது................ஆகவே, இந்து வேதங்களினாலே ஸ்தாபிக்கப்பட்ட பூர்வீக இந்து சமயமானது, படைப்போன், படைக்கப்படுபொருள், ஆகிய இவற்றுக்குள்ள தாரதம்மியங்களைத் தக்கவாறு விளக்காவிட்டாலும், ஒரு கடவுளையே அங்கீகரிப்பதென்று அவ்விந்து வேதங்களாற் போதருகின்றது" என்பதாம்.

இந்து வேதங்களைப்பற்றி ஜோன்ஸ் என்பவரும் இதே யபிப்பிராயங்கொண்டிருக்கிறார். அவர் சொல்வது:—கற்றுணர்ந்த இந்தியர்கள், தங்கள் நூற் கருத்தின்படி, உண்மையில் ஒரு பரவஸ்துவையே ஒப்புக்கொண்டு, அப்பொருளைப் பிர்மம் அல்லது பெரிய பொருள் என்று கூறுகிறார்கள். அதன் தத்துவமானது அதனுடைய மனசுக்கன்றி மற்றெந்த மனசாலுமறிவதற் கெட்டாததென்று துணிகின்றார்கள்; அது தன்சக்தியைத் தன்னிச்சாமூர்த்தங்களின் கிர்த்தியங்களால் வெளிப்படுத்துவதாக நினைக்கின்றார்கள். 'இரக்ஷித்தலாகிய தொழிலைச்செய்வதாகக் கொள்ளும்போது, அப்பொருளை, வியாபகனும், புருஷோத்தமனுமாகிய விஷ்ணு வென்கிறார்கள். படைத்தல் அல்லது முன்னில்லாததொன்றை யுண்டாக்குதலை யந்தப்பிர்மம் செய்வதாகக் கொள்ளும்போது அதைப் பிரமன் என்கிறார்கள். அழித்தல் அல்லது உருவங்களை மாற்றுதலை யந்தப் பிர்மம் செய்வதாகக் கொள்ளும்போது அதை அநேக நாமங்களா லழைக்கின்றார்கள். அவற்றுள், சிவ, ஈச அல்லது ஈஸ்வர, ருத்ர, ஹர, மஹாதேவ, என்பவை பெருவழக்காயுள்ளவை' என்பது.

சப்தநதிதீரத்தில், ஆதியாரியர்கள் மூவாயிரம் வருஷங்களுக்குமுன் குடியேறிய தேசத்திற்கு நான் போயிருப்பதாக வைத்துக்கொள்ளுகிறேன். அங்கே பரமண்டலாதிபதியும், பரவஸ்துவும், மண்ணையும் விண்ணையும் தானே படைத்தவருமாகிய இரண்ய கர்ப்பருக்கு வைதிகர்கள் தங்கள் கால சந்திஸ்தோத்திரத்தை அடியில் வருமாறு பாடுவதை நான் கேட்பேன்:—

"எந்தக் கடவுளை நாம் போற்றித்துதிப்போம்? எவன் ஆதியில் இரண்ய கர்ப்பனாகத் தோன்றினவன்; எவன் தோன்றும் போதே ஈசுவரவிலக்ஷணங்களமைந்தவன்; எவன் பிரபஞ்சத்திற்குத் தனிமுதலாயுள்ளவன்; எவன் மண்ணைப் படைத்து விண்ணையமைத்து உயிரையுஞ் சக்தியையுங் கொடுத்தவன்; எவனுடைய ஆணையைத் தேவர்கள் சிரசாய் வகிப்பது; எவன் நித்தியத்துவத்தில் மறைந்துள்ளவன் எவனுடைய அருளைப் பெறுதிருப்பது மிருத்துவாகும்; எவன் சுவசக்தியால் ஜாக்கிரசொப்பன சுழுத்தியுலகத்துக்கு அதிபதியானவன்; எவன், ஓடுமியல்புள்ள மகாப் பிரவாகமானது வித்துகளைச் சேர்த்துப் பலனுண்டாக்கி, அக்கினியைச் சுவாலிக்கச் செய்கிறவொவ்வொரு இடத்திலுந்தோன்றிநிற்பவன்; எவன் தேவர்களுக் கெல்லாம் பிராணவாய்வும் ஜீவனுமாயுள்ளவன்; எவன் இந்த பிர்ம்மாண்டமுழுமையும் ஒரே நோக்காய்ப் பார்க்கவல்லவன்; எவன் எவ்வகைச்சத்திக்கு மூலமானவன்; எவன் பூஜ்யன்; துரியமூர்த்தியாகிய அவனையே போற்றித் துதிப்போமாக."

இந்தப் பழையஸ்தோத்திரப் பாடலிலுள்ள சூற்றங்கள் எனக்குத் தெரிந்தவைகளே. ஆயினும், அவற்றிலுள்ள குணங்களு மெனக்குத்தோன்றுமற் போகவில்லை. பிற்காலத்திற் புராணங்களில் பிரபலப்ப

ட்ட பல தெய்வ வழிபாட்டுக் கூட்டத்துக்குக் காரணத்தை யிந்தஸ்தோத்திரப் பாடலிற் காண்பதோடு, ஆரியர் ஆதிக்கருத்து எப்போது மொரே யுண்மைக் கடவுளைப்பற்றிய தென்பதுந் தெரிகின்றது. அடால்பி என்னுமறிஞன் 'வேதங்களிற் கூறும்பல தெய்வோபாசனைக்கு முந்தியே ஒரு தெய்வோபாசனை யிருந்தேயுள்ளது; அநேகதேவதைகளைத்துதிக்கும் பாடல்களினிடையிலே (ஏகராயும், அந்த மற்றவரா யுமுள்ள கடவுளுடைய ஞாபகம்) ஓடுகின்ற மேக ஜாலங்களால் மறைக்கப்பட்டாலும், ஆகாயத்தின் நீலவர்ணம் அவற்றை யூருவித்தோன்றுதல்போல வெளிப்பட்டு நிற்கின்றது' என்று கூறுவதே யென்னுடைய துணிபும். இந்த ஏக தெய்வோபாசனை ஞானமானது நிலைபெறுவதற்கே பூர்வத்தில் பிராமணுசாரியர்கள் கீழ்வரும் பிரமாணயுக்தமான ஸ்தோத்திரங்களைச்செய்து வந்தார்கள்.

"நிர்விகாரியாயும், அசஞ்சலராயும், அகண்டிதராயும், தத்துவாதீதராயும், எவற்றுக்கும் ஆதிமூலப் பொருளாயும், பரவஸ்துவாயும், பிரபஞ்சாதார பூதராயும் உள்ள அவரை நான் நமஸ்கரிக்கின்றேன்."

### பூர்வீகசீன மதம்.

சீனதேசத்தார் மதானுசாரமாக விசாரித்தாலும் வேறுவகையாகக் கொள்ளவிடமில்லை. சீனதேசத்துப் பழம்பாடல்களில் கடவுளை டீன் என்னும் பெயர் கொண்டு வணங்கியிருக்கிறார்கள். டீன் என்பதற்கு அவர்களகராதியின்படி 'பெரியவன்' 'மேலே வசிப்பவன்' 'பரமண்டலபிதா' 'எவற்றையு மொழுங்குபடுத்துவோன்' என்பது பொருள். கன்பியூஷியஸ் என்னும் தத்துவஞானி டீன் என்னுந் தெய்வத்தையே முக்கியமாகக்கொண்டும் ஜனங்கள் கொண்டாடின மற்றையதெய்வங்களையும, காற்றையும், மலைகளையும், நதிகளையும், இறந்தோராவிகளையும், எத்தன்மையாகக் கொண்டிருக்கிறாரென்றால், கிரீஸ்தேசத்துப் புராணதெய்வங்களை ஸாக்கிரட்டிஸ் பாவித்ததுபோலவே யாமென்பது அநேகபிரமாணங்களால் வெளியாகின்றது. லாவோஸ் என்னுந் தத்துவ ஞானி கீழ்வருமாறு கூறுகிறார். "விண்ணுக்கு மண்ணுக்கு முந்தியிருந்த வொரு அநாதிவஸ்து ஒன்றுண்டு. அது பரமசாந்தமாயுள்ளது; பாசபந்தமற்றது; தனித்துவாழ்வது; விகாரமற்றது; எங்குஞ் சஞ்சரிப்பது; இன்பவடிவானது; அதைப் பிரபஞ்சத்துக்கு மாதாவென்னலாம். அதன்பெயர் தெரியாது. அதற்கொரு பட்டப்பெயரிடவேண்டியதனை 'ஜேவோ' (வழி) என்பேன்; அதற்கொரு பெயரிட முயன்று அதனைப் 'பெரிது' என்பேன்; பின்பு 'அகோசரம்' என்பேன்; பிறகு 'தூரம்' என்பேன்; பின்னர்ச் 'சமீபம்' என்பேன்".

இவ்வண்ணமாய்க் கடவுளுடைய வுண்மை யுணர்ச்சி கைவந்தவர்கள் மேற்கூறிய தத்துவஞானிகள் மாத்திரமன்று. கி—மு. 2225-வது வருஷத்தில் சீனசக்கிரவர்த்தி, பரமண்டலாதிபதியாகிய டீன் என்னுங் கடவுளுக்குப் பூசை செய்ததாகவும், 1600-வது வருஷத்தில் அப்போதைய சக்கிரவர்த்தி 'சீனதேசத்தார் தொழுவது ஜடாகாசத்தையல்ல; ஆகாசாதிபதியையே' என்று ஆக்ஞாபத்திரமூலமாக வெளியிட்டதாகவுந் தெரியவருகிறது. காங்கி நாட்டுச் சக்கிரவர்த்தி பிக்கின் நகரத்திலுள்ள வோர் கிறிஸ்தவக் கோயிலின் முகப்பிற் கீழ்வருமாறு எழுதுவித்தார். "எவற்றுக்கும் மூலகாரணமாயுள்ள பொருளுக்கு. அவர் எல்லார்க்கு நல்லவர்; முழு நீதியாளர்; எவற்றையும் விளக்கி யாதரிப்பவர்; தனக்குமேலாவார் இல்லாமல் நீதியோடு ஆளுகின்றவர்; ஆதியந்தமற்றவர்; ஆதிதொட்டு எப்பொருளையும் படைத்துள்ளவர் அவரே; அவற்றை யாள்பவரும் அவற்றுக்குண்மையான கர்த்தாவு மவரே."

### பூர்வீக பாரசீக மதம்.

பாரசீகதேசத்தில், சொராஸ்திரியர்களுடையவேத புத்தகத்தைப் பார்ப்போமானால், அதிலும் கடவுளைப் பற்றி மேற்கூறிய கருத்தையே காணலாம். "ஓ தெய்வமே! நான் உன்னைக் கேட்பதற்கு உண்மையாக விடையளிக்கவேண்டும். ஆதியிலிருந்து சுத்தபுவன பிதாவாயிருந்தவரார்? சூரியனுக்கும், நட்சத்திரங்களுக்கும், வழி யமைத்தவர்யார்? ஓதேவா! இதுவும் பிறவும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இப்பூமியும், மேகங்களும் விழாதபடி தாங்குவோர்யார்? கடல்கரைபுரளாமலும், மரங்கள் விழாமலும், அமைப்பவர் யார்? காற்றுக்கும, மேகங்களுக்கும் வேகத்தைக் கொடுத்தவர் யார்? சுத்தாத்மாக்களைப்படைத்தவருன்னை யன்றியார்"?

### ஐரோப்பா வடபாகத்திலுந் தென்பாகத்திலும் பூர்வீகத்தி லனுசரித்த மதம்.

மேற்கே நெடுந்தூரத்தில் பலகாலங்களில் வசித்த பலஜாதியார்களைப்பற்றி விசாரிக்கவேண்டிய தவசியமில்லை. ருஷியா, நார்வேஸ்வீடன், ஜர்மனி, பிரான்சு, இற்றலி, ஸ்பேயின், கிரீஸ், ஆகிய இத்தேசங்களில், முதலில் குடியேறின ஜனங்களுக்கு ஒரே

உண்மைக் கடவுள் விஷயமான சாதாரண பக்தியிருந்ததென்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் நிறைந்து கிடக்கின்றன. இந்தக் கொள்கையானது கர்னபரம்பரையாகவும், லிகிதமூலமாகவும், உள்ள ஐதிகங்களால் நாளதுவரைக்குந் தொடர்ந்து வந்துள்ளது. கிரீஸ், இற்றலி, ஜர்மனிமுதலிய தேசத்துப் பழைய வித்துவான்களிடத்தில் இதற்கு வேண்டிய ஆதாரமேற்படுகிறது. கிரீஸ்தேசத்து தத்துவஞானிகளிடத்திலும், ரோமாபுரியிலிருந்த இராச்சியபரிபாலன சட்டநிரூபண நிபுணர்களிடத்திலுங் கிடைக்கிறது. ஆனால், ஐரோப்பாவில் மற்ற விடங்களைப்போல இந்தப் பழைய ஏகதெய்வோபாசனைக் கொள்கையானது, கற்பனைகளோடுங் கட்டுக்கதைகளோடுங் கலந்து, மனிதர்கள் துற்குணங்களுக் கேற்றதாகக் கற்பித்துக்கொண்ட விகார தெய்வக் கூட்டங்களை வணங்குதல் மும்முரமாய்த்தலையெடுத்தலால், பலவீனப்பட்டு, காலஞ்செல்லச்செல்ல உருக்குலைந்து போயிற்று. இந்த விபரீதக்காட்சியானது, கிரீஸ்தேசத்திய தத்துவஞானிகளுக்கு அதிக கோபத்தையுண்டுபண்ணிற்று. ஜினாபெயின் என்பவர் ஒரே பொருளாயும், அநாதியாயும், அந்தமில்லாதவராயுமுள்ள கடவுளுக்கு மனுஷவியல்புக்குரிய வடிவம், செயல், குணம், இவற்றை யாரோபிப்பது தவறென்று கண்டிக்கிறார். அவர், "மனிதர்களே கடவுளைச் சிருஷ்டிக்கின்றவர்கள் போலும். எருதுகளுக்கும், சிங்கங்களுக்கும், மனிதர்களைப் போலச் சித்திரவேலை செய்யத்தெரிந்திருக்கும் பக்ஷத்தில், அவைகளும் தங்களிஷ்டப்படி எருதுக்கடவுளையும், சிங்கக்கடவுளையும், உருவாக்கி யலங்கரித்துவைக்கும் என்பது நிச்சயமே" என்று சொல்லுகிறார். இப்பெரியோர் கடவுளொருவரே என்றும், மனுஷதேவகணங்களுக்குள் பெரியோரென்றும், உருவத்திலுஞ் செய்கையிலும், ஒருவாற்றானு மனிதர்களுக் கொப்பாகாரென்றும் வேறிடங்களிலும் வெளியிட்டிருக்கிறார்.

### ப்ளேட்டோ என்பவருடைய மதம்.

தெய்வவிலக்ஷணத்தைப்பற்றி ப்ளேட்டோ வென்பவருடைய கருத்து என்னவெனில்:—அது எவற்றுக்கு மேலாய் எவ்வகையிலு நிறைவுள்ளது. எப்படிப்பட்ட இலக்ஷணங்களுக்கு மிடமானது. அதற்கொருகுறையுமில்லை. ஆதலால் கடவுள் நன்மையே வடிவமானவர். நன்மைக்கெல்லாங் காரணபூதர். நன்மைக்கு மாத்திரமே; தீமைக்கவரைக் காரணமாகக் கற்பித்தல் கூடாது. நன்மைக்கு மாத்திரமே யவரதிகாரி. கடவுள் தீச்செயலைச் செய்வதாக வித்துவான்கள் வர்ணிப்பதனால், அக்கடவுள் பெருமைக்குப் பங்கம் வருகிறது. இன்னும், கடவுளுண்மையே வடிவமானவர். மனிதர்களை வஞ்சிப்பதும், மயக்கவழியிற் செலுத்துவது மவர்க்குமுடியாது. கடவுள் மனிதர்களை வஞ்சித்தாரென்னுங் கற்பனாகதைகளெல்லாம் அசப்பியமானவைகள். கடவுள் பூரணப் பொருளாகையால, நிர்விகாரியாவர். வித்துவான்கள் சொல்லுகிறபடி யவரொருசமயமொருவடிவமும், மற்றொருசமயம் வேறுவடிவமுங் கொள்பவரல்லா. அவரெக்காலமு மொரேசுத்த நிர்விகார வடிவமுடையவர். கடவுள் சைதன்னியமூர்த்தி. ஆதலால் பிரகிருதியாகிய வுலகத்திற் கப்பாற் பட்டவர். அவர் சைதன்னிய மூர்த்தியாயிருந்தே யெல்லாவற்றையுமாண்டும், நியாயத்தற்கும், பூர்வதிருஷ்டிக்குந் தக்கபடி எவற்றையும் நடத்தியும் வருகிறார். கடவுள் அப்பிராகிருத வஸ்துவாகையால் லௌகிக முறையைக் கடந்தவராவர். இவ்வுலகத்துப்பொருள்கள் காலவசத்தால் பீடிக்கப்படும்; கடவுள் காலத்தைக் கடந்தவர். ஆதியும், மத்தியும், அந்தமுமாய் எப்போது முள்ளவர்.

### அரிஸ்டாட்டில் என்பவருடைய் மதம்.

அரிஸ்டாட்டி லென்பவரும் கடவுளியல்பைப் பற்றி ப்ளேட்டோ வென்பவரைப் போலவே கூறுகிறார்:—கடவுள் ஜடவஸ்துக்களா லாகிய பரிணாமத்தையும், ரூபத்தையுங் கடந்தவர். அவர் சுத்தசத்து, சுத்தஞானம், சுத்தரூபம், சுத்தகுணம், சுத்தசத்தியாயுள்ளவர். கடவுள் உண்மையில் அவயவ பேதமற்றவராதலால் சுத்தகேவலப் (நிர்அவயவப்)பொருளாய் விகாரமில்லாதவர். முடிவில் கடவுள் நிரவயவப்பொருளேயாவர்; ஏனெனில், அவயவபேததர்மம் ஜடபதார்த்தத்திற்கே யுண்டு; ஜடத்துவத்துக்கும் கடவுளியல்புக்கும் வெகுதூரம்.

இவ்விதமாக, கிரீக்தேசத்து மகாதத்துவ ஞானிகளாகிய, ப்ளேட்டோ, அரிஸ்டாட்டில், என்பவர்கள் கடவுளியல்பைப் பற்றி சித்தாந்தம் பண்ணி யிருக்கிறார்கள். இப்படியாக அவர்களெண்ணி விவகரித்து வருகையில், அவர்களுடைய நாட்டாரிற் பெரும்பாலார், ஆதன்ஸ் முதலிய நகரங்களில் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்ட ஆலயங்களிற் பிரதிஷ்டை செய்துள்ள அழகிய விக்கிரகங்களுக் கெதிரில் சுகந்த தூபங்களை வளர்த்திக் கொண்டு முழந்தாளில் நின்றுகொண்டு வணங்கி வந்தார்கள்.

(இன்னும்வரும்)

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநமஃ

## மெய்கண்ட சாத்திரம்.

அபுத்திபூருவம், புத்திபூருவம், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை; உண்மையோகம், உண்மைஞானம் என்னும் பத்தும் சிவபுண்ணியங்களாம். அபுத்திபூருவ புத்திபூருவமாகச் செய்யப்படும் சிவபுண்ணியங்களின் பயன் சிவபுராணத்துட்பட்ட ஸ்காந்தபுராண சங்கரசங்கிதையைச் சார்ந்த உபதேசகாண்டமுதலியவைகளால் உணரற்பாற்றும். இந்தப்பத்துவகைப்புண்ணியங்களுள்ளே இறுதிக்கண்ணின்ற உண்மைஞானம் பதிபசுபாச லக்ஷண முணர்த்தி ஞானத்திற்சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ன நான்கு பாதமுற்று நிற்பதாகும். மாயாவாதிகளுடைய சொத்தாகிய நிராலம்பம், சுகரகசியம், ஸ்கந்தம், சாபாலி, யோகதத்துவம், திரிசிகி, யோகசிகை (நான்காம் அத்தியாயம்) யாஞ்ஞவல்க்கியம், அன்னபூரணி, ருத்திரகிருதயம், தரிசனம், பைங்கலம், வராகம், அத்துவயதாரகம், அமிர்தவிந்து, சர்வசாரம், சரசுவதிரகசியமுதலிய தாழ்ந்த படிக்கண்ணவாம். மாயாவாதோபநிடதங்களாகாத ஈச, கேந, கட, பிரசின, முண்டக, மாண்டேக்கிய, ஐதரேய, தைத்திரிய, சாந்தோக்கிய, பிருகதாரணிய, காலாக்கினிருத்திர, கைவல்லிய, பிருகச்சாபால, தைத்திரீய, மகாநாராயண, சுவேதாசுவதர, அதர்வசிகை முதலிய சிவாத்துவித உபநிஷதங்களிலே உண்மை ஞானத்தின் பாற்பட்ட பதிபசுபாசவுண்மை அநந்த வேதசாகை யுடையோரால் பற்பல பரிபாஷா நாமங்களினாலே பேசப்பட்டிருக்கின்றது. இந்த வைதிக சைவோபநிடதங்களில் போந்த பதிபசுபாசஉண்மை திருவள்ளுவநாயனார் குறள், தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், வேதாந்தசூத்திரம், திருமந்திரம் என்பவைகளிலே பேசப்பட்டமைக்கிசையப் பிரதிபாதிக்கப்பட்டுளதாம் என்ற கருத்தினாலன்றோ, ஔவை பெருமாட்டியார் "தேவர் குறளுந் திருநான்மறைமுடிவும், மூவர் தமிழு முனிமொழியும்—கோவை, திருவா சகமுந் திருமூலர் சொல்லு, மொருவா சகமென் றுணர்" என்று கூறியருளினர். ஈசகேநாதி உபநிடதங்களிலே பேசப்பட்ட பதிபசு பாசவிளக்கம், மாயாவாதாசாரியராகிய சங்கராசாரியரால் சொரூபம் தெரியாது மலினமாக்கப்பட்டுப்போயிற்று. அந்த வைதீக சைவோபநிஷதங்களின் பதிபசுபாசவுண்மையானது பராசத்தியும், சிதம்பரமும், ஆன்மா சிவகுணங்கள் விளங்கப்பெற்று சிவசாமியமடைதலும், பதிபசுக்களாகிய சுவர்ணபட்சிகள் இரண்டும், பிரமலோகமாகிய சிவலோகமும், பிறவும் மித்தையாமெனச் சங்கராசாரியரால் எண்ணி பதினெட்டுத்தரம் படித்துப்படித்து மாற்றி மாற்றிப் புதச்சுலோகங்கள் புகட்டிக் கற்பிக்கப்பட்ட (ஸ்காந்தபுராணத்தைச்சார்ந்த) சூதசங்கிதை ஒழிந்த மற்றை வியாசரருளிய சைவபுராண வுபப்பிரும்மணங்களாலும், ஸ்ரீநீலகண்ட சிவாசாரியருளிய வேதாந்த சூத்திர சைவபாஷ்யத்திலும் வெள்ளிடைமலைபோலவிளங்கக்கிடக்கின்றது. சைவபுராணங்களுக்குள் ஒன்றாகிய சிவபுராணம் பன்னிரண்டு சங்கிதையுடையது. இந்தப்பன்னிரண்டு சங்கிதைகளுக்குள்ளே அச்சிடப்பட்டு நிலவும் வித்தியேசுவர சங்கிதை, கைலாய சங்கிதை, வாயுசங்கிதை, தருமசங்கிதை என்னும் நான்கும் ஒழித்து எஞ்சிநின்ற சனற்குமார சங்கிதை ஞானசங்கிதைகளின் பெயர் அப்பன்னிரண்டு சங்கிதைகளிலே காணப்படாமையால் இந்த இரண்டும் சைவபுராணத்தின் பாலனவாகச் சேர்க்கப்படுதற்கு அருகமுடையனவன்றாம். சிவாகமங்களிலே பேசப்பட்ட சரியை, கிரியை, யோகம் என்னும் நான்கு பாதங்களுள்ளே மூன்றாவதாகிய யோகபாதம் வரையிலே பேசுவன ஈசகேநாதி வைதிக பாசுபதோபநிடதங்களாம். இந்த உபநிஷதங்களாலே முடித்துப் பேசப்பட்ட ஞானயோகநிலையும் சிவாகமங்களாலே போதிக்கப்பட்ட ஞானயோகநிலையும் ஒரு முடிவினவாமென்பது "நிலவுல காயதாதி நிகழ் சிவாத்துவி தாந்தம்" என்னும் உமாபதி சிவாசாரியர் முதலாயினோரருளிய திருவாக்கு முதலியவைகளால் உணரப்படும். வைதிக ஞானபாதத்த துவிஜஞானிக்கு யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்னும் மூன்றும் உண்மையால் ஞானபாதம் யோகபாதமுதலிய பேசும் வைதிக காமிகாதி சிவாகமங்களோடு அந்த வைதிக பாசுபதயோக சிவாத்துவதோபநிஷதங்கள் அந்த வைதிக சைவ துவிஜ ஞானியினதும் யோகியினதும் சொத்துக்களாமன்றி சிவாத்துவிதிகளென வாளா பெயர் தரித்துத் தாம் பிரமமென நிற்கும் ஏகான்மவாதிகளுடைய சொத்துக்களன்றாமென்க. இந்த ஈசகேநாதி யுபநிஷதங்கள் ஏகான்மவாதிகளுடைய ஆட்சி சொத்தாமாயின், அவர்கள் சொந்த ஆட்சி சொத்தாக முன்னர்க்கூறிய நிராலம்பம், யோகசிகைமுதலிய மாயாவாதோபநிடதங்களிலே பேசப்பட்ட கானற்சலம், மலடிமகன், தாணுபுருஷன், சொப்பனவுலகு, பிராந்தி, மித்தை, கற்பனை அத்தியாசமுதலியபதத்தொடர்ச்சி ஒன்றேனும் யாதுகாரணத்தினால்தான் அந்த ஈசகேநாதி சிவாத்துவிதோபநிடதங்களிலே காணப்பட்டில! இதுவொன்றே அவ்வுபநிடதங்கள் சிவாத்துவிதிகளுடைய உடைமையென்று திருடிகாரஞ் செய்தற்குத்தொடுக்கப்படும் பலவலியசான்றுகளுள்ளே மிகலேசானே புலப்படுத்தற்பாலதாய வெளிச்சான்றாமென்க. இந்த ஞானயோகோபநிடதங்களின் சாரமாய் சைவ சித்தாந்த சிவயோக அன்புநிலை சிவாகமங்களுட் பேசப்படும் ஞானபாதத்தினால் உணரற்பாற்றாம். இவ்வன்புநிலையை உணர்த்தற்கு சிவபிரானால் ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகளுக்குபதேசிக்கப்பட்டது ரௌரவாகமத்துப் பாசவிமோசன படலத்துப் பன்னிருசூத்திரமுடைய சிவஞானபோதமாமென்ப. இந்த சிவஞானபோதம் சர்வஞானோத்தரமுதலிய ஆகமங்களினாற் பொருள்படுத்துவதாகும். ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் ஸ்கந்தபுராணத்தைச்சேர்ந்த அகஸ்திய சங்கிதைமுதலியவைகளால் உணரற்பாற்று. இந்த ஆகமாந்தத்தின் உத்தமோத்தமநிலை இங்ஙனம் உணரற்பாற்றென ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி சனகாதிருஷிகளுக்கு இருந்து விளக்கிக்காட்டினாரென்பது போதர, ஸ்ரீகாந்தபுராணம் "ஏதஸ்மிந் நந்தரே தேவஃ கைலாசே ரஜ

தாசலே | ஸநகாதி முநீந்தரேப்யஸ் திரிபதார்த்தார்த்த ஸம்மிதம், ரகஸ்யமாகமாந்தாக்ய சித்தாந்தம் கதயநஸ்தித: | "இந்த எல்லையில் சிவபிரான் வெள்ளியம் கைலாசமலையிலே சனகாதி முனீந்திரர்களுக்குத் திரிபதார்த்த சம்மிதமும் ரகசியமாகிய ஆகமாந்தம் என்னும் பெயரையுடைய சித்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டு இருந்தார்" என்று உரைத்திற்று. ஸ்ரீமெய்கண்டார் காலத்துக்கு முன்னே இந்த வடமொழிச் சிவஞானபோதம் சிரவண மனனஞ் செய்யப்பட்டுவந்தது. இது தமிழ்மொழி மாத்திரமறிந்த பக்குவர்களுக்குப் பெரிதும் பயன்படாமை நோக்கிச் சிவபிரான் திருவருளால் மெய்கண்டதேவர் அவ்வடமொழிச் சிவஞானபோதத்தை தென்மொழியில் இயற்றியருளினார். இதனை முதனூலாகக்கொண்டு முன்னூறு பண்டிகளிலே வேதசிவாகமங்களை ஏற்றியவராகப் புகழப்படும் சகலாகமபண்டிதராகிய அருணந்தி சிவாசாரியார் அதனை விரித்து சிவஞானசித்தியார் எனப்பெயர்கொடுத்து வழிநூல் இயற்றியருளினார். இவர் இருபாவிருபஃது என்னும் மற்றோர் சாஸ்திரமும் அருளினார். இவர்மாணாக்கராகிய மறைஞான சம்பந்த சிவாசாரியார் சீஷராயும் தில்லை தீக்ஷிதருள் ஒருவராயும் பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தவராகிய உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாசத்தை, அச்சிவஞானபோதம், சிவஞானசித்தியார்என்னும் இரண்டுக்கும் சார்புநூலாக அருளி, அம்மூன்றின் பொருளையே பின்னரும் திருவருட்பயன, வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் சாஸ்திரங்கள் எழினும் உபதேசித்தருளினார். உண்மைவிளக்கம் அருளிச்செய்தவர் மெய்கண்டதேவருடைய சீஷராகிய திருவதிகை மனவாசகங்கடந்தார். திருவுந்தியார் அருளிசசெய்தவர் உய்யவந்ததேவநாயனார். திருக்களிற்றுப்படியார் அருளிச்செய்தவர் உய்யவந்ததேவநாயனார். இவர், திருவுந்தியார் அருளிச்செய்த உய்யவந்ததேவநாயனார் சீஷருடைய சீஷர். திருவுந்தியாருக்கு உபபிருமமணமாயுள்ளது திருக்களிற்றுப்படியார். இந்த சிவஞானபோதமுதலிய பதினான்கு சைவசித்தாந்தசாஸ்திரங்களும்,திராவிடோபநிஷத்ரத்நங்களாம் என்ப. வடமொழிச்சிவஞானபோதத்திலே போதிக்கப்பட்ட உண்மைகள் இவை என்பது உணர காமிகாகமம் "பிரதமம் தத்வரூபந் துவிதீயந் தத்வ தர்சனம் | த்ருதீயந் தத்வசுத்திஞ்ச சதுர்த்தன் சாத்ம ரூபகம் | பஞ்சகமாத்ம தர்சபந்து ஷஷ்டமஞ்சாத்ம சோதநம் | சப்தஞ் சிவரூபந்து அஷ்டமம் சிவதர்சநம் | நவமஞ் சிவயோகஞ்ச தசமஞ் சிவபோகச்ச |" என்று கூறிய சுலோகத்தினால் அறியப்படும். அவ்வடமொழிச் சிவஞானபோதத்தினுமாமென உணர "இரண்டினி லைந்திலாறி லேழினி லெட்டுத் தன்னிற், கிரண் டிரண் டொன்றதர்கத் திகமொன்பான் பத்துத் தன்னி, லிரண்டிலாப் பேறு தன்னி லிருதிய பத்தோ டொன்றிற், றிரண் டெழு முபதேசங்கள் சிவஞான போதஞ் சித்தி." என்று பெரியோர் விளக்கினார். இவ்வுண்மைகள் திருக்கோவையாருண்மையில் அகப்பொருட்பால் பட உபதேசிக்கப்பட்ட குறிஞ்சிமுதலிய ஐந்து நிலங்களில் வைத்துணரப்படும். இவ்வுண்மைகள் ஞானசாரியர்வாயிலாக அறியற்பாலவன்றி ஏகான்ம வாதம்போல அச்சைவசித்தாந்தரகசியம் விள்ளப்படுவதன்றும்; விளக்கப்படுவதன்றும். சிவாநுபவச்செல்வர்களாகிய சிவஞானசம்பந்தர் முதலாயினோருளிய தேவாரம் திருவாசகமாகிய திராவிடச்சுருதிகள் சிவாநுபவலக்கியங்களாய் அமைய, அச்சிவாநுபவத்தை அடையுமாற்றை விளக்குவன திராவிடசித்தாந்தசாஸ்திரங்களாகிய சிவஞானபோதமுதலிய பதினான்கும் சிவாநுபவலக்கணங்களாம் என்ப. ஆதலால் எள்ளினென்றி எண்ணெய் எடுப்பதுபோல இலக்கியத்தினின்று எடுப்பது இலக்கணம் என்றவாறு, தேவாரதிருவாசக சிவாநுபவ ரகசியத்தின் சாரமாயுள்ளது திராவிட சிவஞானபோத முதலிய சிவாநுபவலக்கணமுமா மாதலினன்றே பெரியோர் "நால்வரோதுந் தமிழதனினுள் ளுறுநெய், போதமிரு; நெய்யினுறு சுவையாநீள் வெண்ணெய் மெய்கண்டான்,செய்த தமிழ்நூலின்றிறம் என்று கூறினார். ஆதலால் நெய்யும் சுவையும்போல விளங்கும் தேவார திராவிடவேதத்தோடு சிவஞானபோத முதலிய திராவிட ஆகமத்தையும் ஒருங்கு சேர்த்து வைதிகசைவசித்தாந்தச் செல்வர்கள் மெய்யன்போடு, மெய்யுபதேசம்வேண்டிப்பிரார்த்தித்து பத்திர புஷ்பங்களால் அருச்சித்து வழிபட்டோதி வருவாராயின் அவர்களுக்குச் சிவபிரான் ஞானாசாரியரை, அதிஷ்டித்து நின்று; ஞானோபதேசஞ்செய்து சிவாநுபவத்துக்கு இலக்காக்கிவிடுவார். தேவாரத்தோடு வைத்துப் பூசித்தற்கு இசைந்தகட்டட முடையனவாகாவாய்ச் சைவசித்தாந்த சாஸ்திரபுஸ்தகங்கள் குறள்வடிவினவும் பெருவடிவினவுமாக ஒவ்வாவியல்பு பூண்டு தனித்தனியே வேறுகக்கிடப்பனவாக அவற்றை நோக்கி வருந்தி ஒரு பிரகாரம் பிரயாசையுற்று பிழையறப்பரிசோதித்து, சிரமம் நோக்காது, பொருட்செலவும் நோக்காது தூய எழுத்தில், தூய அச்சில், தூய கடிதத்தில், தூய கட்டடத்தில், தூய் சைவசித்தாந்த சாஸ்திரங்களைப் பொதிந்து, தூய அறிவுடைய வைதிகச்செல்வர் தூய்மையுற நோக்கி வாசித்து, தூயவின்பந் துய்க்குமாறு, தூய நாகரத்ந தில்லியமாக தூய்மை காட்டி தந்ததூய சிவஞானச்செல்வராகிய ஸ்ரீநாகலிங்கமுதலியாரவர்கட்கு வைதிக சைவ உலகம் செய்யக்கிடந்த கைம்மாறுவது அத்தூய நாகரத்நத்தின் திராவிடோபநிஷத சைவசித்தாந்தசாஸ்திரம்பதினான்கையும் நேசித்து வாங்கிப்பூசித்து வாசித்து அவர்கள் இப்படிப்பட்ட கிரந்தங்களை. மேன்மேலும் லோகோபகாரமாக அச்சிடுமாறு உஞற்றி விடுவதேயாம்.

காசி. செந்திநாதய்யர்.

---

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:.

## கம்பநாடரும் அவர் கவிப்புலமையும்.

(166-வது பக்கத்தொடர்ச்சி.)

தண்ணிருங் காவிரியே தார்வேந்த னுஞ்சோழன்
மண்ணாவதுஞ் சோழ மண்டலமே—பெண்ணாவாள்

என்றுபாடி 500 பொன் வாங்கிக்கொண்டு கம்பர் போய்விட, ஒள்வையார் சிறிது கூழிற்காக

அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
செம்பெற் சிலம்பே சிலம்பு.

என்ற இரண்டடிகளைச் சேர்த்து வெண்பாவை முடித்து விட்டதனாலே, இதைக்கேட்ட கம்பர் சினங்கொண்டு "கூழிற்குப்பாடிக் குடியைக் கெடுத்தாள்" எனக் கூறியது இன்றளவும் தென்னாட்டில் பழமொழியாக வழங்குகின்றதென்று பாவலர் சரித்திர தீபகத்தில் காட்டியிருக்கிறது. கம்பரைச் சற்று அவமரியாதையாகவும் புகழேந்தியை மரியாதையாகவும் நடத்தினதாகச் சிலதனிப்பாடல்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அதனால் இவர் கம்பர் காலத்தவர் என்பது ஏற்படுகின்றது. ஆகவே ஔவையார் 1,000 வருஷகாலம் வசித்திருந்தவர் என நம்புதல் வேண்டும். இதனால், திருவள்ளுவருடன் பிறந்து சங்கத்தார் காலத்திருந்த ஔவை வேறு கம்பர்காலத்தில் கூழுக்குப்பாடிய ஔவை வேறு என்கிற வேறுன்றி வருகின்றது. தமிழ் வித்துவாமிசர்கள் இவர் இரு நூற்றைம்பதுவருஷம்பிழைத்திருந்தவர்எனக்கன்ன பரம்பரையாகக் கூறிவருகின்றார்கள். இவர் இங்ஙனங்கூறுவது இவர்கள் கொள்கைப்படி எந்த ஔவையை என்று தெளிவாகத் தெரிதலில்லை. புறநானூற்றில் 91-வது பாடல், அதியமானஞ்சி என்னும் வள்ளலிடத்தில் ஆயுளை வளர்விப்பதான ஒரு நெல்லிக்கனியைப்பெற்று ஔவையார் மனமகிழ்ச்சியால் பாடினதென்றும், பந்தனென்கிற வணிகவள்ளலைப் பாடி (பந்தனந்தாதி) அவன் கொடுக்கப்பெற்ற பொற்பாடாமானது நரை திரை நீக்குவ தொன்றென்றும் கூறப்படுதலாலும், ஔவைக் குறளால் அவர் யோக மறிந்தவராகக் காணப்படுதலாலும், இவர் நெடுங்காலம் பிழைத்திருந்திருக்கக் கூடும். காயாதிகற்பமுண்டு காயசுத்தி செய்துகொண்டு பன்னெடுங்காலம்உயிர்த்திருக்கும் சித்தர்கள்வாழ்வதாய் நம்பப்படுகின்ற இந்நாட்டில் ஔவையார் பலகாலம் சீவித்திருந்தார், என்பது குற்றமாகாது பொய்யுமாகாது. ஔவை என்ற பெயருக்கு வயது சென்ற கிழவி என்பதுபொருள். இவர் நெடுங்காலம் வயோதிய தப் புருவத்தராகவே இருந்தமையால் இவருக்கு ஔவை என்பது காரண இடுகுறியாய் வழங்கலாயிற்று.

ஔவையார், இங்ஙனம் நெடுங்காலம் இருந்தவராதலாலும், மிக்க அநுபவசித்தி எய்தியிலிருந்தவராதலாலும், மிகச்சிறந்த ஆசுகவியாதலாலும், உலகியலுக்கு மிகவமைந்த நீதிகளைப்பாடி வந்தனராதலாலும், கவிராயர் புவிராயர்முதலான எல்லோராலும் பூசிக்கப்பட்டுவந்தார். ஔவை-கம்பர் என்னும் இருவரையும்வணங்கி நடப்பர் புகழேந்திப்புலவர். அரசனுக்கு உவாத்திமை நடத்தினவராதலாலும், இயற்கையில் கல்விக்காய்ச்சலும் மாச்சரியமு முடையவராதலாலும்ஒட்டக்கூத்தர், எவரையும் தம்மிற்றாழ்ந்தவராக எண்ணி, ஏனையருடைய கவிதா சாமர்த்தியத்தைப் பொருட்டு செய்யாமல் இறுமாப்படைந்திருந்தார் கம்பர், புகழேந்தியிடத்தில் விசுவாசங் காட்டி ஒட்டரை இலக்குசெய்யாமல் அரசனுக்குத் தானும் அடங்காராய் இருந்தனர். கவிதா சாமர்த்தியத்தில் ஒட்டர்தாம் ஏனையருக்குச் சிறிது தாழ்ந்தவர் எனி உள்ளத்தினூடே நன்கறிந்தமையால்,மாற்சரியத்தால் பட்டினியாய்ப் படுத்துக்கொண்ட ஒரு நாளிரவில் பாலும் பழமுமாகிலும் உட்கொள்ளும் படி வேண்டிய தம்மனைவியிடத்தில் நளவெண்பாவைப் பிழிந்த சாற்றைத்தானும் விரும்புவதில்லை எனக் கூறினரென்றும், கம்பர் இறந்த செய்தியைக் கேட்டவுடனே.

இன்றைக்கோ கம்பனிறந்தநா ளிப்புவியில்
இன்றைக்கோ என்கவிதை ஏற்குநாள்—இன்றைக்கோ
பூமடந்தை வாழ்ப் பொறைமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூலிழந்த நாள்.

என்றொரு கண்ணால் புலம்பி ஒரு கண்ணால் மகிழ்ந்தனரென்றும் கூறப்படுகின்றது. புகழேந்தியானவர் இங்கிலீஷில் கௌபர் (Cowper) - கோல்ட்ஸ்மித் (Goldsmith) என்பார்களைப்போலச் செம்பாகமான கவி. கம்பரோ கற்பனைசக்தியிலும் வருணனையாற்றலிலும் மில்ட (Milton) னுக்குக்குறைந்தவரல்லர். பிரபஞ்ச விலாசப்புலமையில் ஒருவாறு ஷேக்ஸ்பியரோடொத்தவர். யூரோப்பியர்களுடைய ஆதிகவியான ஹோம (Homer) ருக்கு எவ்விதத்திலும் இளைப்பவரல்லர் ஒட்டரோ ஸௌதே (Soulthey) முதலானவர்களைப்போல இரண்டாந்தரம் மூன்றாந்தரமான கவியென்று கொள்ளலாம். ஒட்டரும் கேவலம் அல்பமான கவி அல்லராயினும், கம்பராகிய கதிரவன்முன்னே மின்மினியாகத் தோன்றினர். புகழேந்தியான சந்திரன் முன்னே தாராகணங்களில் ஒன்றாகக்காணப்பட்டனர். இவர்கள் மூவரும் ஒவ்வொரு துறைப்பாடலில் மிகக்கைபோனவர்கள். வெண்பாவில் புகழேந்தியும், விருத்தப்பாவில் கம்பரும், கோவை - உலா - அந்தாதிபாடுவதில் ஒட்டக் கூத்தரும் இணையற்றவர்கள்.

**இவர்க்கு ஓதலானநூல்கள்.**—கம்பர் 11-வது நூற்றாண்டில் இருந்தவரென முன்னர்த்துணிந்தோமன்

ரே. ஆகவே அதுகாறும் வழங்கிவந்த நூல்களில் பற்பல இவர்கைக்கு எட்டியிருக்கக்கூடும். ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கிழ்க்கணக்கு, பாரதவெண்பா, தகடூர்யாத்திரை, கல்லாடம், முத்தொள்ளாயிரம், முதலான சங்கச்செய்யுள்களும், மூவர்தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருத்தொண்டர்புராணம், கந்தபுராணம் முதலான சைவநூல்களும், நாலாயிரப்பிரபந்தமான வைணவத்திருமொழிகளும், தொல்காப்பியம், வீரசோழியம், யாப்பருங்கலம், காரிகை, இறையனாரகப்பொருள் முதலான இலக்கணங்களும் இவர் ஓதியிருக்கலான நூலகளாம். பாஷியகாரர் காலக்கிரமத்தில் இவர்க்குச்சற்றுப்பிற்பட்டவராதலாலே, இவர் காலத்திலே நாலாயிரப்பிரபந்தத்தின் வியாக்கியானங்கள் உண்டாகவில்லை. தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், பேராசிரியர், கல்லாடர் என்பவர்களுடைய உரை கிடைத்திருக்கக்கூடும், சேனாவரையருடைய உரையைக் குறித்துத் துணிந்து சொல்ல இயல்கின்றிலது. பத்துப்பாட்டில் மலைபடு கடாத்தின் உரையில் ஆளவந்த பிள்ளையாசிரியரைச் சுட்டி இருத்தலான் நச்சினார்க்கினியர் கம்பருக்குச் சிலகாலம் பிற்பட்டவராகின்றனர். ஆளவந்த பிள்ளையாசிரியரை ஆளுடையபிள்ளையாராகிற திருஞானசம்பந்த ரேன்பாருமுளர்.

ஸ்ரீ. செல்வகேசவராய முதலியார்.
(இன்னும் வரும்).

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:

## பதார்த்ததீபிகை மூலமும் அதன் உரையும்.

### நூல் வரலாறு.

உலகின்கண்வாழும் மக்களுயிர்க்குச் சத்தநூலும் அத்தநூலுமிருகண்களை யொக்கும். (சத்தநூல் - வியாகரணம், அத்தநூல்-தருக்கம்) அத்தநூல் உணர்ச்சி இல்வழிச்சத்தநூல் ஒரு சாஸ்திரமாகமுடிவுறுதல் எத்துணையானும் அமையாதாதலின், சத்தநூலினும் அத்தநூலேமிகச்சிறந்தது. அங்ஙனமாயின்; ஒழிவிலொடுக்கத்திலே "சலமின்றிச் சந்தைப்பர் தர்க்கர்," என இகழ்ந்து கூறியதற்கு நியாயம் என்ன? என்பையேல்; காரியத்தை யொப்புக்கொண்டு, அதன் நியதகாரணத்தை யொப்புக்கொள்ளாமல் மறுக்கின்ற பொய்வாதிகளை நோக்கி, இல்லையென்றகாரணாபாவத்தை வியாப்பியமாகவும், உண்டென்றகாரியத்தை அபாவமாகவைத்து அதனை வியாபகமாகவும் கொண்டு, "நெருப்பில்லையாயிற் புகையுமில்லை" என்று பொய்யனுபவத்தின்ஒன்றாகக் கூறியதர்க்கத்தை அநுசரித்துப்பேசுவாரையே ஒழிவிலொடுக்க நூலார் கூறினாரேயாவர், அஃதன்றித் தர்க்க நூலையே இகழ்ந்து கூறினாரெனக் கொள்ளின்; அவர் தந்நூலிலே யுத்திகொண்டு கூறினவெல்லாம் வியர்த்தமாய்விடுமாதலினாலும், தர்க்கநூல் வல்லுநரைத் தார்க்கிகரென்று வழங்குவதன்றித் தர்க்கரென வழங்குவதின்மையானும் அது பொருந்தாதென மறுக்க. இவ்வாறே எந்நூல் அமைப்பிற்கும் ஏதுவாக நிற்கும் தர்க்கநூல் தமிழ்மொழியில் சிலவேயன்றிப் பலவில்லையாதலினாலும், அச்சிலவும் மனனம் செய்வார்க்கு எளிதிற் பயன்படுவன வல்லவாதலாலும், தருக்கசங்கிரகங் கற்று அதன் பொருளாய்வார்க்கு மூலத்தை மனனம் செய்ய இது நன்கு துணையாமெனக்கருதி அத்தருக்க சங்கிரகத்தின் பொருளே பெரும்பாலுமமையப் பதார்த்ததீபிகையென்னும் பெயரிய இச்சிறு புத்தகத்தைசெய்தனம். அதுவும் உரையோடு வழங்குமேல் எவர்க்கும் பயன்படுமென அறிஞர் சிலர் கூறிய இடித்துரைகொண்டு அதனுரையும் வரையுமாறு கருதினேம்.

நூல் வரலாறு முற்றிற்று.

---

### மங்கலம்.

தந்திமாமுகத் தெந்தைதாளிணைச்
சிந்தையாலருந் தொந்தநீங்குமே.

(இதன்பொருள்.) தந்தி-யானையினது முகம்போலும், மாமுகத்து-பெருமைபெற்ற முகத்தையுடைய, எந்தை-நங்கடவுளாகிய விநாயகப்பெருமானுடைய, தாளிணை-இருதிருவடிகளினும்பதித்த,சிந்தையால்-தியானத்தால்,அருதொந்தம்-நீங்குதலரியவினைத்தொடர், நீங்கும்-விலகும், என்றவாறு, ஏ-ஈற்றசை, துவந்துவம் என்னும் வடமொழி தொந்தமெனச் சிதைந்து நின்றது. அஃதம் மொழிக்கண் ஐயமென்னும் பொருளுமுடையதாதலின் எடுத்துக்கொண்ட நூல் முடியுமாறுசெய்யுமாராய்ச்சிக்கட்டோற்றும் ஐயமெல்லாம் விலகுமென்றுரைப்பினுமமையும். அற்றாக;

நூல்முகத்து மங்கலங்கூற லெற்றுக்கு?

"ஒன்றை நினைக்கி னஃதொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்."

என்று ஔவையாருடைய தெய்வத் திருவாக்கிருத்தலினாலும் அதனால் எடுத்துக்கொண்ட கருமம் முடிவுறுதலும் முடிவுறாமையும் எல்லார்க்கும் பொதுவாகுமெனக் கொள்ள வருதலாலும் இதனாலிது முடிக்குதுமென ஒருவருந் துணிதற்கிடமின்மையால் மங்கலம் நூல் முடிபுபெறுதலுக்குக் காரணமாதல் எங்ஙனமெனின்; அங்ஙனமாதல் இல்லையெனினும்,

"எண்ணியகரும் முடியினு முடியாதொழியினு மீசனைத்தொழுதல்—புண்ணியம்" என்று மகாபாரதத்தில் கூறினமையாலும் பெரும்பாலுமான்றோரொழுக்க மங்ஙன மிருத்தலாலும் யாமு மங்கலங் கூறினுமென்க. மங்கலங் கூறலாமென்பது

ற்குப் பிரமாணமுண்டோவெனின், ஆன்றோ ரொழுக்கத்தான் உண்டென்றநுமிக்கப்படும் சுருதியே பிரமாணமென்க. எங்ஙனமெனின்; மங்கலஞ் செயற்பாலதென வேதத்தில் விதிக்கப்பட்டது, உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்றோ ரொழுக்கமாதலின், எது எது உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்றோ ரொழுக்கமாயுள்ளது அது அது வேதத்தில் விதிக்கப்பட்டது, எங்ஙனம்? வேள்வி முதலியனபோல, இம் மங்கலம் கூறலும் உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்றோரொழுக்கமாயுள்ளது, ஆதலின் மங்கலம் செயற்பாலதென வேதத்தின் விதிக்கப்பட்டது. எனவரும் பிறர் பொருட் டனுமானத்தால் அஃதாமாறு காண்க.

மங்கலம் முற்றிற்று.

பூ. முருகேச பண்டிதர்.

(இன்னும்வரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுரவேநம:

## சிவபுண்ணிய மகிமை.

90-வது பக்கத்தொடர்ச்சி.

இது காறும் யாமெடுத்து விவகரித்த வாய்மையால் வெளியான விஷயங்களைச் சுருக்கிக்கூறின், சிவாலயத்திருப்பணி - கும்பாபிஷேகம் - நித்தியநைமித்திகம் - ஆதிசைவரையாதரித்தல் - தேவார திருவாசகபடனம் - வேதாகமபாடசாலை - குருபூசை மடாலயஸ்தாபனம் - பஸ்மருத்ராக்ஷபிரகாசம் - புறச்சமயநிராகரணம் - சைவசித்தாந்த பரிபாலனம் - என்பனவாதிகளை அநுஷ்டித்துச்சைவசமயிகளாவார் உய்யவேண்டுமென்பதே முடிவாம். இவற்றுள், சிவாலயத்திருப்பணியிலொரு முக்கிய விஷய மீண்டு மீணடுங்கூறுகின்றோம். இத்திருப்பணியில் முதல் செய்யத்தக்கது அந்தராலயத் திருப்பணி. உள்ளே கும்பாபிஷேகஞ் செய்யவேண்டியது. அநந்தரம் ஏனையதிருப்பணிகளைச் சௌகரியம் போலச்செய்து கொள்ளலாம். சிவாலயங்களில் பன்னிரண்டு வருஷத்துக்கொரு தடவை கும்பாபிஷேகஞ் செய்ய விதியேற்பட்டிருக்கின்றது. அஷ்டபந்தனங் குறைந்தால் மூர்த்திகரங் குறையு மென்கிற நிச்சய முணர்ந்தே அதைநிவிர்த்திக்குமாறு பன்னிரண்டு வருஷத்துக்கொருமுறை கும்பாபிஷேகம் விதிக்கப்பட்டது. இதனையுணராத இரண்டு - மூன்று - நான்கு பன்னிரண்டு வருஷம்வரையில் கும்பாபிஷேகஞ் செய்யாமலும், திருப்பணியைப்பூர்த்தி செய்யாமலும் காலதாமசஞ்செய்து கைதவம் பேணிக்கலங்குகின்றனர் நம்மனோர், விருந்து சமைக்கிறோமென்று இருபத்தெட்டுநாழிகை வரையிலும் தாமசப்படுத்தி, அப்புறம் அன்னம்படைத்தால் பசிதீபனம்போய், புசித்த அன்னமுஞ் சீர்ணப்படாமற் போவதுபோலன்றோ நம்மனோர் செய்யுங் கும்பாபிஷேகம் பயன்படத்தக்கதாயிருக்கின்றது? இவ்வுண்மையுணர்ந்து "செய்வனதிருந்தச்செய்" என்பதைக்கடைப்பிடித்து நம்மவ ரின்புறக்கடவர் - நிற்க - வேறுவிஷயமொன்று ஈண்டுக் கூறுகின்றோம்.

### சம்பிரதாயத்திரயம்.

உலகில் மூன்றுவித சம்பிரதாயங்களுள, அவை புண்ணிய சம்பிரதாயம் - பாபசம்பிரதாயம் - மிச்சிரசம்பிரதாயம் என்பனவாம். இவற்றுள், புண்ணிய சம்பிரதாய மொன்றினையே சிஷ்டர்கள் கையாளுவார்கள். சிலர் பாபசம்பிரதாய மிச்சிர சம்பிரதாயங்களையும் புண்ணிய சம்பிரதாய மென்றே கொண்டு தெரியாமையா லாசரிக்கின்றார்கள். இனி அவற்றின் பேதங்களை அநுபவவழக்கா லெடுத்துக்காட்டிப் பிரகாசப்படுத்துவாம்.

### புண்ணிய சம்பிரதாயம்.

திருவண்ணாமலையில் ஸ்ரீ சிவபெருமான சோதிவடிவமாயெழுந்தருளியிருத்தலை உலகிற்கு விளக்குதற் பொருட்டுக் கார்த்திகைமீ கார்த்திகை நட்சத்திரத்தில் அத்திருமலையினுச்சியில் சுடர்விளக்கு வைக்கின்றார்கள். இதனையநுசரித்து அந்த ஊரிலும், அடுத்தவூர்களிலும், ஆலயங்களிலும், மலைகளிலும் எம்மருங்குந் தீபங்களையேற்றிக் கற்பூரக்கட்டிகளைக் கொளுத்திவைத்து அவைகளைச்சிவபெருமானது சோதி சொரூபமாகத்தரிசித்து உலக முழுதும் வழிபடுகின்றது. இது சர்வஸம்பிரதிபந்நமாய புண்ணிய சம்பிரதாயம்.

### பாபசம்பிரதாயம்.

ஸ்ரீ ஜகத்குரு மூர்த்திகளாகிய திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்புகலூரில் ஸ்ரீ சிவலிங்கப் பெருமானிடம் ஐக்கியமாயினர். இதனை விளக்கிக்காட்ட வேண்டியவர்கள் சித்திரைமீ சதயநட்சத்திரத்தில், திருப்புகலூர்ச் சிவசந்நிதானத்தில் ஏற்றிவைத்திருக்குஞ் சுடர்விளக்குகளையெல்லா மொருங்கேயவித்து இருள்பரவச் செய்கின்றார்கள். இது சிஷ்டஜந சம்மதமாகாத பாபசம்பிரதாயம்.

### மிச்சிர சம்பிரதாயம்.

ஸ்ரீமுருகக்கடவுள் மயில்வாகனத்தின்மேலிருந்து சூரனைச் சங்கரித் தருளினர். இந்த மயிலாக வந்தவன் இந்திரன். சூரனைச்சங்கரித்தபின்னர் அவனும் எம்பெருமானை மயிலாக வந்து தாங்கினன். இந்திரமயின்மேலேறிச் சூரனைத்தடிந்த தறியாமல் சூரசங்கார மகோத்ஸவகாலத்தில் (ஸ்கந்தஷஷ்டி மஹோத்ஸவத்தில்) செம்மறிக்கடாவாகனத்தின்மீது சுவாமியை யெழுந்தருளப்பண்ணிச் சூரசங்காரஞ் செய்வதாமென்க. இவ்விடத்தில் யாம்பிரஸ்தாபித்த மூன்று சம்பிரதாயங்களிலும் புண்ணிய சம்பிரதாயமொன்றை யநுசந்தித்து மற்றவைகளை ஒதுக்கிவாழுதலே விவேகிகளுக்குக் கடமையாமென்க.

திருச்சிற்றம்பலம்.

சூ. சோமசுந்தரநாயகர்,

வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்.

---

MADRAS :—Printed by P. C. KALLIANA SUNDARA NADAR, at the C. N. PRESS, 4, Guruvappan Street, Black Town, and Published by J. M. NAGARATHNAM PILLAI.

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஞு மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க. } 1898ஞு பிப்ரவரிமீ. { இலக்கம்-கூ.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:

## அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த சித்தியார் உரை.

---

(முன்தொடர்ச்சி.)

### பௌத்தரிற் சௌத்திராந்திகன் மதம்.

குற்றவீ டராகமாதிக் குணங்களைக்
    குறைத்த லாகும்
மற்றவீ டுருவமாதி லையந்தையு
    மாய்த்த லாகுஞ்
சொற்றருந் தொகைதொடர்ச்சி மிகுத்துரை
    யென்று மூன்றாய்
உற்றிடும் வழக்கிரண்டு மொன்று மூன்
    றாகி யாறும்.

(பொ-ரை.) அராகமுதலிய குணங்கள்கெட்டு முத்தியின்ப மடையாது சேட்டைகெட முத்தியின்ப மடையுமென்றது குற்றவீடாம்; உருவமுதலிய ஐந்து கந்தங்களுஞ் சந்தானத் துப்போன்றக் கெட்டடைவது கந்தவீடாம். முற்கூறிய உள் வழக்கு இல்வழக்கென்னுமிரண்டும் தொகை, தொடர்ச்சி, மிகுத்துரையென ஒன்று மூன்றாய் ஆறாகும். எ-று.

எனவேதொகையுண்மை வழக்கு, தொடர்ச்சியுண்மை வழக்கு, மிகுத்துரையுண்மை வழக்கு எனவும், தொகையின்மை வழக்கு, தொடர்ச்சியின்மை வழக்கு, மிகுத்துரையின்மை வழக்கெனவும் ஆறுதல் காண்க. தொகை-கூட்டம்; தொடர்ச்சி-சந்தானத் தொடர்ச்சி; மிகுத்துரை-தோற்ற நாசம். (கூ)

ஒருவனென் றோதப்பட்டா னுருவாதி
    யைந்துங் கூடி
வருபவ னென்றுரைத்த றொகையுண்மை
    வழக்க தாகும்
உருவமங் காதியாய வைந்தையு
    மொருவ னின்று
தருவது தொகையினின்மை வழக்கதாஞ்
    சாற்றுங் காலே.

(பொ-ரை.) ஒருகர்த்தா என்பவன் உருவமுதலிய ஐந்து கந்தங்களோடுங்கூடி வருபவனென்று கூறுதல் தொகையுண்மை வழக்காம்; உருவமுதலிய ஐந்தோடுங் கூடாமல் ஒரு கர்த்தா நீங்கிநின்று அவற்றை யுண்டாக்குவனென்பது தொகையின்மை வழக்காம்; சொல்லு மிடத்து. எ-று.

சுவரும், மரமும் முதலிய கூடின் சமுதாயத்தை வீடென் பதுபோலப் பஞ்சகந்தகூட்டத்தை யான்மாவென்பது கற்பனாம மென்பதாம். (எ)

காரண காரியத்தின் றொடர்ச்சியாய்க்
 கால மூன்றின்
சோர்வறத் தோன்றுங்கெட்டு வழியென்கை
 தொடர்ச்சி யுண்மை
ஓர்தரி னொருவனேயெக் காலத்து
 முள்ளா னென்று
தேர்வது தொடர்ச்சியின்மை வழக்கதாஞ்
 செப்புங் காலே.

(பொ-ள்.) காரண காரிய மென்னுந் தொடர்ச்சியுடைய வாய்க் காலமூன்றென்னும் மயக்கமறக் கெட்டுத்தோன்று மென்னும்வழி தொடர்ச்சியுண்மை வழக்காம்; உணர்ந்து சொல்லுமிடத்து ஒரு கர்த்தாவே காரணகாரியத்தின் றொடர்ச்சியாயெக்காலத்தும் உள்ளானென்பது தொடர்ச்சியின் மை வழக்காம். எ-று.

பொருளின் திரிபேயன்றிக் காலமென்றது சற்பனாமம்.()

தோற்றிய பொருள்களெல்லா நாசமா
 மென்று சொல்லு
மாற்றமுன் னுரைத்தன்மற்றை மிகுத்துரை
 வழக்கி னுண்மை
போற்றிய பொருள்கண்கட்குப் போனது
 போன் முதிர்ந்து
வேற்றுமைப் பட்டதென்கை மிகுத்துரை
 யில் வழக்கே.

(பொ-ள்.) தோன்றிய பொருளெல்லாங் கெடுமென்னு முத்தரத்தை முன்னர்ச்சொல்வது மிகுத்துரையுண்மை வழக்காம்; காக்கப்பட்ட பொருள்கள் கண்களுக்கு நசித்தன போல முதிர்ந்து வேற்றுமைப்பட்டதென்று சொல்வது மிகுத்துரையின்மை வழக்காம்.

கண்கட்குப் போனதுபோல் முதிர்ந்துவேற்றுமைப்படுகை- காரிய மழிந்து காரணங் கிடக்கை. (கூ)

உள்வழக் கில்வழக்குள் ளதுசார்ந்த
 வுள்வ ழக்கோ
டுள்ளது சார்ந்தவின்மை வழக்குட்
 னின்மை சார்ந்த
வுள்வழக் கின்மைசார்ந்த வில்வழக்
 கென்றே ராறும்
உள்வழக் குணர்வுண்டென்கை முயற்கோடின்
 றில்வ ழக்கே.

(பொ-ள்.) முற்கூறிய உள்வழக்கும், இல்வழக்கும், உள்ளது சார்ந்த வுள்வழக்கும், உள்ளது சார்ந்த இல்வழக்கும், இல்லது சார்ந்த வுள்வழக்கும், இல்லது சார்ந்த இல்வழக்கும் என்று நான்கோடேங்கூடி ஆறுவகையாம்; அவற்றுள் உள்ளதை யுண்டென்பதாகிய உள்வழக்காவது அறிவுண்டு என்பதாம்; இல்லதை உண்டென்பதாகிய இல்வழக்காவது முயற்கொம்புண்டு என்பதாம். எ-று.

'உள்வழக்குளதுண்டென்கை' என்னும் பாடத்தில் இலக்கணமாத்திரமமைந்து இலக்கியம் அமையாமை காண்க. உள்வழக்கு-இல்வழக்கு என்பது வெளிப்படையாகலான் இலக்கணம் கூறவேண்டாமென்பது, 'முயற்கோடின் றில்வழக்கே' என்பதற்கு முயற்கொம்பு இல்லை, ஆதலால் 'முயற்கொம்புண்டு' என்பது இல்வழக்காம் என்று விரித்துரைக்க. (கo)

உணர்வுசார்ந் துணர்வுதிக்கை யுள்ளது
 சார்ந்த வுண்மை
உணர்வுபி னின்றுமென்கை யுள்ளது
 சார்ந்த வின்மை
உணர்வுமுன் பின்றித்தோன்ற லில்லது
 சார்ந்த வுண்மை
உணரினில் லதுசாரின்மை யுள்ளங்கை
 யுரோம நாளே.

(பொ-ள்.) அறிவைச்சார்ந்து அறிவுண்டாமென்பது உள்ளது சார்ந்த வுள்வழக்காம்; அறிவு கெட்டாற் பின்னரஃதுண்டாகாதென்பது உள்ளது சார்ந்த இல்வழக்காம்; அறிவு முன்பு இலதாய்ப் பின்னருண்டாமென்பது இல்லது சார்ந்த வுள்வழக்காம்; உணருமிடத்து, உள்ளங்கை மயிர்க்கயிறென்பது இல்லது சார்ந்த இல்வழக்காம். எ-று.

ஆமைமயிர்க்கம்பலம் என்பதும் இல்லது சார்ந்த வில்வழக்காம். நாண்-கயிறு. (கக)

சொன்னநால் வகையுமின்றிச் சொல்லிடும்
 பொருள்க ளெல்லா
என்னையோ வறிகிலேம்பித் தேறியோ
 வானி மான்மா
மன்னுகா லங்கடிக்கு மனமுடன்
 வாக்கி றந்திட்
டுன்னுமோ ரிறையுமுண்டென் றுரைப்பது
 நித்த மன்றே.

(பொ-ள்.) முன்னே கூறிய உரு, அரு, வீடு,வழக்கென்னு நான்கும் அதன் விரிவுமன்றி வானம், ஆன்மா, நிலைபெற்ற காலம், திக்குகளென்றும், மனவாக்கிறந்ததியுமொரு கர்த்தா வென்றும் சொல்லும் பொருள்களெல்லாம் நிலையுடையன வல்ல; ஆதலால் அவற்றையுண்டென்பது பித்தந்தலைக்கேறியோ? வேறியாது காரணமோ அறிகிலேம்.

இது முதலாகப் பிறர்மதங் கூறி மறுக்கின்றது. (கஉ)

ஈங்குவான் செயற்குவாரா வியம்பிய
 பொருள்க ளெல்லாந்
தாங்குவா னுளதேயென்னிற் றரித்திடா
 தருவ மாதல்
ஓங்குவா னேசைக்சாதி யெனிலதங்
 குருவின் கூட்டம்
நீங்குவா னின்றியெங்கு நின்றதே
 லெங்கு மின்றே.

(பொ-ரை.) இங்கே கூறிய வரினென்னும் பொருள் தொழிவிற்கூடாது. 'மண்ணாதி பூதமுதலிய பொருள்களெல்லாவற்றையும் தாங்குதற்கு அவ்வாகாசமுளது' என்றுகூறில் அஃது அருவமாதலால் தாங்கமாட்டாது. அன்றியும், 'அது சத்தத்துக்கு முதல்'லென்று கூறில் அச்சத்தமும் உருக்கூட்டத்தன்றித் தோன்றாது; 'அவ்வாகாயம் நீங்குதலின்றி யெங்கும் நின்றது' என்று கூறின், அஃதெங்கு மில்லையாம். எ-று.

ஆதலால் ஆகாயமென்றொரு பொருளில்லை யென்பதாம். ஆகாயம் ஏனையபொருள்களுக்கு இடங்கொடுக்கு மென்பதை தாங்குதலென்று திரிபுணர்ச்சிகொண்டு மறுத்திருக்குந்தன்மை காண்க. (கரு)

போதமுண் டுயிர்கட்கென்னில் வாயிலைம்
புலனு நூலும்
ஆய்தலின் றொட்டுத்திட்டுக் கலப்பினி
லறியு மென்னில்
ஏவமுண் டிரவிற்பச்சை சிவப்புட
னேய்ந்த போது
கேதநின் றென்னேவென்னு மையமுன்
கிடத்த லாலே.

(பொ-ரை.) உயிர்கட்கு அறிவுண்டென்று சொல்லின் இந்திரியங்களும் விடயங்களும் சாத்திரங்களுங் கொண்டறிய வேண்டுவதின்று; அன்றி இந்திரியங்களைக் கலந்தும் புலன்களைப் பரிசித்தும் சாத்திரங்களைப் பொருந்திநின்றும் அறியுமெனில், இருளிற் பச்சை சிவப்பென்னும் வர்ணங்கிடக்க அதனைத் தொட்டுங்கலந்து மறியாமற் கிலேசமுற்று இது யாதோ என மயங்குதலால் அவ்வாறு கூறுவதும் பழுதாம். எ-று.

ஒட்டுத்திட்டுக் கலப்பென்பதைக் கலப்புத் திட்டொட்டெனக் கொள்ளவேண்டுதலால் எதிர் நிரனிறை. இவற்றினிலக்கணத்தை 'இந்தியமென்னு மைந்தின் இயல்வது கலப்பென்றாகும்; வந்திவை புலனைச்சார்ந்து மருவுதலதுவாந்திட்டு; முந்திய பனுவலாலே மொழிவதை யறிதலொட்டு' என்பதாலறிக. (கச)

அறிந்திடா வாயிலின்றே லறிவின்று
மைந்தும் பற்றி
அறிந்திடு மறிவுண்டென்னி லைந்தினு
மறிவொன் றாக
அறிந்திட வேண்டுஞ்சார்பி னறிந்திடு
மென்னி லுன்னை
அறிந்திலோம் புத்தனென்றிங் கழகிது
சொன்ன வாறே.

(பொ-ரை.) இந்திரியங்க ளில்லையாயின் உயிரொன்றையுமறியமாட்டாது. 'அறிவில்லாத அவ்விந்திரியங்களைந்தையும் பற்றி நின்று அறிந்திடுமறிவு உயிர்க்குண்'டென்று கூறில் அவவைந்தானு மறியுமறிவு ஒன்றாயிருத்தல் வேண்டும். 'அற்றன்று; பொறிகளின் வழிகளிலே நின்று மவ்வவற்றின்புலன்களாகிய குணங்களை யறியு'மெனக்கூறின், உன்னை யான்மவாதியென்றறிந்தோம்; நீசார்பிற்றோன்று மென்கையாற் புத்தனாய்; இஃதறிந்திலோம்; நீ யுயிரறியுமென்றது அழகிது! (கரு)

(தொடரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுரவேநம:.

## ஸ்ரீதாயுமானசுவாமிகள் பாடலுரை.

---

### கருணாகரக்கடவுள்.

(முன்தொடர்ச்சி.)

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனில்
நாணுமென் னுளநிற்றி நீ
நான்கும் பிடும்போ தரைக்கும் பிடாதலால்
நான் பூசை செய்யன் முறையோ
விண்ணேவி ணாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந் தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேய வித்தின் முளையே
கண்ணே கருத்தேயெ னெண்ணே யெழுத்தே
கதிக்கான மோன வடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

(இ-ள்.) பரமாகாசமே! ஆகாசமுதலிய பூதமே! நாததத்துவமே! வேதவடிவே! வேதமுடிவே! சிறந்த கேள்விக்குரியபொருளே! கேள்வியாகிய நிலத்தில் இடுகின்ற வித்தே! அவ்வித்தின் முளையே! என் கண்ணே! மனமே! தருக்கமே! இலக்கணமே! மோக்ஷத்திற் கேதுவாகிய மௌனரூபமே! கருதரிய..............கடவுளே! உனக்குப் பிரியமானதொரு பூசனையைச் செய்யேன். ஏனெனில், ஒருருவத்திலுன்னை பாவனை செய்து வணங்கும்படி பறிக்கப்பார்க்கின்ற மலரிடத்தும் நீயேயிருக்கின்றாய். ஆதலாலக்குளிர்ந்த மலரைப்பறிக்கவுமனம் பொருந்தேன். அல்லது இரண்டுகைகளையுங் குவித்துவணங்கவென்றாலோ அதற்கு நாணுகின்ற என்மனத்தினுமிருக்கிறாய்; ஆதலால் நான் கும்பிடும்போது, அது முழுக்கும்பிடாகாமல் அரைக்கும்பிடே யாதலால் நான்பூசை செய்வது முறையாமோ? எ-று.

எங்கு நிறைந்திருக்கு முன்னை யொருவடிவத்திலே ஆவாகனம் பண்ணுதலும், மலரினிடத்தும் நீ யிருப்பதால் அதனைக் கொண்டுன்னை யருச்சித்தலும், செய்ய என்மனமொப்பவில்லை; ஆயின் உன்னை நோக்கிக் கைகூப்பி வணங்கவென்றாலும் அதுவும் நின்செயலாதலினால் முறையாகாது என்பதாம். யானொன்றைச் செய்வது நீ செய்வித்தாலாவது; செய்தல் பாதியுஞ் செய்வித்தல் பாதியுமாக ஒருதொழில் முற்றுப்பெறுதலால் இங்கே அரைக்கும்பிடென்றார். உண்மை யன்புடையார் புறச்செயல்களாகிய வணங்குதலும் வாழ்த்துதலுஞ் செய்யவேண்டியதின்று; அவற்றைக் செய்யக் கூசுவதும் அநுபவத்திலறியக்கிடந்த தொன்றாகலின் கைகுவிக்க நாணுமென்னுளமென்றது. சிவபரிபூரண வியல்பை யறிவார்க்கு

அவ்வறிதலே பூசனை யென்பதாம். "செப்புவதெல்லாம் செபநான் சிந்திப்பதெல்லா நின், ஞெப்பில் தியானமென வோர்ந்தேன் பராபரமே" என்பதனாலுங் காண்க. "உண்ப தன்முன்மலர் பறித்திட்டுண்ணாராயின்" எனீபதனால் பூசை பண்ணேனென்னும், இறைவன், "பொக்கமிக்கவர் பூவுநீருங் கண்டு, நக்குநிற்பன்வர் தமை நாணியே" ஆதலால் 'ஆன பூசை' யென்றுங் கூறினர். (சு)

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்று மெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதா நிஷ்டர் நினைவ தில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க் கமாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்ய ரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுளர்
இருக்காதி வேத முனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்கள்
இரவிமதி யாதி யோர்கள்
கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்க ளியாவருங்
கைகுவித் திடுதெய் வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக் கடவுளே.

(இ-ள்) இந்திரன் முதலாகிய தேவர்களும், பிரமன்முத லிய கடவுளரும், இருக்குமுதலிய வேதங்களை யுணர்ந்த முனிவர்களும், அளவற்ற கணநாதர்களும், சூரிய சந்திரர் மு தலானோரும், கந்தருவரும், கின்னரரும்பிறரும், கைகூப்பித் தொழுகின்ற தெய்வமே! கருதரிய..............கடவுளே! வேதவாக்கியமானது, சதாகாலமும் யாதொன்றையாயினு மனத்திற் பற்றினால் அதுவாகவே வந்து முடிவுபெறுமென்று சொல்லுதலால், சதாநிஷ்டையுடையார், உலகத்திலிருந்தா லும் மரண முண்டென்பதை நினையார். சிந்தையாலிதனை யறியமாட்டார்க்கு இது போதிக்கத்தக்கதன்று. சொன்ன லுமநேக தர்க்கம் வரும். தெய்வீகத்தன்மையுடைய மார்க் கண்டேயர், சுகர் முதலிய முனிவர்கள் உண்மையான நித்தி யான்மாக்களல்லவோ? எ-று.

சதாநிஷ்டையுடையார், தமது திருமேனி உருவச்சித்தி, அருவச்சித்தி, உருவருவச்சித்தி, யென்னு மூன்றிலொன்றை ப்பெற, ஜீவன்முக்தராகையால் மரணமுண்டென்பதை நி னையார். இச்சித்தி பேதங்களை, பராபரக்கண்ணியில் விளங்க க்கூறியிருப்பதனாலுணர்க. (எ)

துள்ளுமறிவாமனது பலிகொடுத்தேன்கன்ம
துட்டதேவதைகளில்லை
துரியநிறைசாந்ததே வதையாமுனக்கே
தொழும்பனன்பபிஷேகநீ
ருள்ளுறையிலென்னுவி நைவேத்தியம்ப்ராண
னேங்குமதிதூபதீப
மொருகாலமன்றிது சதாகாலபூசையா
வொப்புவித்தேன்கருணைகூர்
தெள்ளிமறைவடியிட்ட வமுதப்பிழம்பே
தெளிந்ததேனேசினியே
திவ்யரசமியாவுந் திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவானந்தமே
கள்ளனறிவூடுமே மெள்ளமெளவெளியாய்க்
கலக்கவருநல்லவுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணுகரக்கடவுளே.

(இ-ள்.) வேதங்கள் தெளிய வடித்தெடுத்த அமிர்தத்திர ளே! தெளிந்ததேனே! சீனியே! திவ்யமான இரசமெல் லாங் கலந்துள்ள பாகே! தெவிட்டாத வானந்தமே! கள்ளத் தனமுடைய என்னறிவினிடத்தும், மெல்ல மெல்ல வெளிப் படக்கலக்கவருகின்ற நல்ல சுற்றமே! கருதரிய............... கடவுளே! துள்ளிக்குதிக்கின்ற மனமாகிய ஆட்டைப் பலி யிட்டேன்; ஆதலால், கன்மமாகிய துஷ்டதேவதைகள் இனி யென்னை வருத்தமாட்டா. துரியபதத்தில் விளங்குகின்ற சாந்ததெய்வமாகிய வுனக்கே அடியேனுடைய அன்பை யபி ஷேக ஜலமாகவும், உள்ளத்தை யாலயமாகவும், ஆவி நைவே த்தியமாகவும் பிராண வாயுவைத் தூபமாகவும், உயர்ந்த வறி வைத் தீபமாகவுங்கொண்டு இத்தகைய பூசையை யொருகா லத்திலல்லாமல் சதாகால பூசையாயுனக் கொப்புவித்தேன்; ஆதலால் கருணை செய்வாயாக. எ-று.

வேதம் ஆன்மாக்களுடைய அதிகாராநுகுணமாக பலபொ ருள்களுக்குப் பரத்வங் கூறினபோதிலும், உபக்கிரம வுப சம்மார முறையால் சிவபெருமானே பரம்பொருளென்று நாட்டுதலால் 'தெள்ளிமறை வடியிட்ட வமுதப்பிழம்பே' என்றது. இத்திருப்பாடல், காயிகம், வாசிகம், மானசம் என்னும் மூவகையுள் மானசபூஜை முறைமை கூறிற்று. (அ)

உடல்குழையவென்பெலா நெக்குருகவிழிநீர்க
ளூற்றெனவெதும்பியூற்ற
ஆசிகாந்தத்தினைக் கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுணவிப்
படபடெனநெஞ்சம் பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
பனிமதிமுகத்திலே நிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானேய வானிவின்ப
மழையேமழைத்தாரை வெள்ளமேநீடுழி
வாழியெனவாழ்த்தியேத்துங்
கடன்மடைதிறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்சனுக்கெளியையோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணுகரக்கடவுளே.

(இ-ள்.) கருதரிய..............கடவுளே! சரீரம் வாட வும், எலும்புகளெல்லாம் நெகிழ்ந்துருகவும், கண்ணீர் மண ற்கேணியென்னும்படி வெதும்பிச் சுரக்கவும், இருப்பூசியா னது காந்தக்கல்லினைக்கண்டு பொருந்துதல்போல வொப் பற்ற வுறவை நினைந்து நினைந்து, நெஞ்சம் படபடெனத்துடி த்து உள்ளே நடுக்கங்கொள்ளவும், பாடியாடிக்குதித்து,குளி

ர்ந்த சந்திரன்போன்ற முகத்திலே அதன் சந்திரிகையை யொத்த புன்சிரிப்பைக்காட்டி, பலமுறை யார்வாரித்தெழுந்து, இதழ் விரியுந்தாமரை மலர்போன்ற கைகளை விரித்தும், குவித்தும் "ஏ சிதாகாசமே! அவ்வாகாசத்தினின்று பொழியுமானந்தமழையே! அம்மழைத்தாரைப்பெருக்கே! பல்லாண்டு வாழ்க" என்று வாழ்த்தித் துதிக்கும் கடலில் மடைதிறந்தாற் போன்ற (இடையறாது வருகின்ற) அன்பினையுடையார் அன்பினுக்கு நீ எளிவருகின்றவனே யல்லாது கல்லையொத்த நெஞ்சையுடைய வெனக்கெளியனோ? எ-று.

இது "பத்திவலையிற் படுவோன்" என்னும் உண்மையும், அப்பத்தியுடையார் தன்மையும் விளக்கிற்று. (௯)

இங்கற்றபடியங்கு மெனவறியுநல்லதிரு
　　ரெக்காலமும்முதவுவா
ரின்சொறவருர்பொய்மை யாமிழுக்குரையா
　　ரிரங்குவார்கொலைகள்பயிலார்
சங்கற்பசித்தரவ ருள்ளக்கருத்திலுறை
　　சாக்ஷிநீயிகபரத்துஞ்
சந்தானகற்பகத் தேவாயிருந்தே
　　சமஸ்தவின்பமுமுதவுவாய்
சிங்கத்தையொத்தெனைப் பாயவருவினையினைச்
　　சேதிக்கவருசிம்புளே
சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே
　　தீனனேன்கரையேறவே
கங்கற்றபேராசை வெள்ளத்தின்வளருட்
　　ககனவட்டக்கப்பலே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
　　கருணாகரக்கடவுளே.

(இ-ள்.) என்மீது பாய்ந்து வருத்தவருகின்றவினையாகிய சிங்கத்தை யழிக்க வருகின்ற சரபமே! மனத்துயராகிய அந்தகாரம் ஒழியும்படி எழுகின்ற சூரியனே! எளியேன்பிறவிப் பெருங்கடல் கடந்து முத்திக்கரையிலேறும்படி கரையற்றபேரன்பாகிய வெள்ளத்தில் மிதந்து அருளாகிய ஆகாய வட்டத்தில் உலாவுகின்ற மரக்கலமே! கருதரிய............. கடவுளே! இம்மையில் முடிந்தவண்ணமே மறுமையிலுமாகுமென்றறிகின்ற பேறிவுடையார், எக்காலத்தும் பிறர்க்குதவி செய்வார்; இன்சொற் சொல்லத்தவறார்; குற்றமாகிய பொய்யுரையாடார்; எவ்வுயிரிடத்தும் இரங்குவார்; கொலைத்தொழில்களைப்பழகார்; இத்தகைய அறங்களை வழுவாது காக்குங் கோட்பாடு நிலைத்த சித்தமுடையார் கருத்திலே சாக்ஷிபூதனாக விளங்குகிற நீ இம்மையிலு மறுமையிலும் சந்தானம், கற்பகமென்னுந் தருக்களைப்போன்ற தெய்வமாக இருந்து எல்லாச் சுகங்களையுங் கொடுப்பாய். எ-று.

இங்கற்றபடியங்குமென்பதற்குத் தமக்கொத்தபடியே பிறர்க்கும் என்பது மொன்று. எக்காலமுமுதவுதல் 'உறுபுனல் தந்துலகூட்டி யறுமிடத்துங்—கல்லூற்றுழியூறு மாறு'போலுதவல். சங்கற்பசித்தர் உயிர்க்கிறுதிவந்தாலும் தாமேற்கொண்ட விரதத்தை விடாது காப்பவர். இத்திருப்பாடலில் பொதுத்தருமங்களை யெடுத்தோதியிருத்தல் காண்க. (௰)

கருணாகரக்கடவுள் முற்றிற்று.

# உண்மை விளக்கம்

## எனும்

# சித்தாந்த தீபிகை.

1898௵ பிப்ரவரிமீ

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:.

## சிதம்பர இரகசியம்.

(முன்தொடர்ச்சி.)

(௬௨) மந்திரோபநிடதத்திலே

(108) யதாதமஸ் தந்நதிவாந ராத்ரிர்நசந்ந சாசநசிவஏவ கேவல:—ப்ரஞ்ஞாச தஸ்மாத் ப்ரச்ருதாபுராணீ |

என்னும் மந்திரத்துக்கு உபப்பிரும்மணமாக வாயுசங்கிதை

(109) யதாதமஸ் தந்நதிவாந ராத்ரிர்நச தப்யசத் | கேவல: சிவ ஏவைகோ யஸ்மாத் ப்ரஞ்ஞாவிநி: ச்ருதா |

அல்லும் பகலும் இலவாய், சத்தும்அசத்தும் (பசுவும்பாசமும் நாமரூப விபாகார்க துலத்துவம்) இலவாயிருந்துள்ள (மகாப்பிரளயத்திலே) அவசரத்திலே ஏகராகிய சிவன் ஒருவரேயிருந்தார்; இவரிலிருந்தே வித்திலிருந்து முளைபோல சடமாயாசத்தியாகாத பழைய பிரஞ்ஞை (பராசத்தி) தோன்றினர் என்று கூறிற்று. இந்தப் பிரஞ்ஞையைப் பராசத்தியார் என்று நேரேகாட்டும் பொருட்டு, வாயுசங்கிதைமேலே போந்த சுலோகத்தைத் தொடர

(110) யஸ்யபும்ச: பராசக்திர் பாவகம் யாமகேயசீ |

சிவபெருமானுடைய சத்தி பாவகம்பரும், சிரேஷ்டமுடையருமாகிய பராசத்தியாமென்று கூறிற்று. இந்தப் பராசத்தி என்னும பெயர் சம்வித்தாகிய அறிவுரூப பிரமத்துக்குப் பெயராய்ச் செல்லாது குணமாய்ச் செல்லுமாம் என்ற கருத்தினாலன்றோ வாயுசங்கிதை

(111) நிர்க்குண ஸ்வகு ணைரேவநிகூடா நிஷ்களாசிவா |

(இழிந்த சடமாயா அமங்கல குணங்களிலாமையால்) நிர்க்குணையாயும், (சர்வஞ்ஞத் துவாதி சர்வைசுவரிய மங்கல கல்யாண) சுவகுணங்களினாலே தானே ஆவரிக்கப்பட்டுச் சிவையாய் நிஷ்களையாய் இருந்துள்ளார் அப்பராசத்தி என்று விளக்கிற்று. இவ்வுண்மை கடைப்பிடித்தே கைலாசசங்கிதை

(112) யஸ்மிந்நபாசதே வித்யுந்ந சூர்யோ நசசந்த்ரமா: | யஸ்யபும்ச: பராசக்திர் பாவகம்யா மனோகரா | நிர்க்குண ஸ்வகு ணைரேவநி கூடா நிஷ்களாசிவா |

எவர் சந்நிதியிலே மின்னலும் சூரியனும்சந்திரனும் பிரகாசிக்க மாட்டாவாய்ப் போகின்றனவோ, அப்படிப்பட்ட சிவபெருமானார்க்குச் சத்தியாயுள்ளார் நிர்க்குணையும் நிஷ்கலையும் சிவையும் சர்வஞ்ஞதாதி குணங்களினால் நிகூடமாயுமுள்ள பராசத்தியேயாமென்று கூறிற்று. இதனால் பராசத்தி சிவபெருமானுக்குக் குணமாய் அமைந்தார் என்றும், சூதசங்கிதை யஞ்ஞவைபவ கண்டத்துப் பதின்மூன்ரும் அத்தியாயத்திலே ஜகதங்குர ரூபிணியாகிய சடமாயாசத்தியோடு அவச்சின்னமாயுள்ள அறிவுருவானது சம்வித்தாகிய "பராசத்தி" அன்ரும் என்றும், அதுவன்றி அப்பிரஞ்ஞை சங்கராசாரியரால் மந்திரோபநிடதத்துக்குச் செய்த அனர்த்த மாயாவாத பாஷ்யத்தினலே சொல்லப்பட்ட (மாயாவாத) தத்துவாதிவீாக்கிய வாயிலாகப்பிறந்த புத்தியின் பெயரன்ருமெனவும், அதுவன்றி அந்தக்கரண விருத்தியின் பெயரன்ருமெனவும் உணர்க. ஐதரேயோபநிடதத்து ஐந்தாங்கண்டத்திலே இரண்டாம் மந்திரத்திலே (சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவ சைதன்னிய பராசத்தியாம் விஞ்ஞானத்தின் பெயர்களாகச் சொல்லப்பட்ட) இதயமுதல் வசம் இறுதியாம் பதினேழு பெயர்களுக்கிசையவே இது அச்சிவையாம் சிவசத்திக்குப் பெயராமென்பது போதரவாயுசங்கிதை

(113) ஏகாநேக ரூபேண பாதிபாநோ ரிவப்ரப² | சக்திமாநுச்யதே தேவ: சிவ: சிதாம்சு பூஷண: | வேத்யஃ சிவ: சிவா வித்யா ப்ரஞ்ஞாசைவ ச்ருதி: ஸ்மிருதி; | த்ருதிரேஷா ஸ்திர்நிஷ்டா ஞாநேச்சா கர்மசக்தய: | ஆஞ்ஞாசைவ...... |

சூரியனுடைய பிரபைபோலுற்று ஏகாநேகரூபம் கொள்வார் பராசத்தியார் என்றும், இதனால் சிவபிரான் சத்திமான் எனப்பட அம்மையார் சத்தி எனப்படுவார் என்றும், சிவபிரான் வேத்தியர் (ஞேயம்) எனப்படுங்கால், சிவையாம் பராசத்தியார் வித்தியா(ஞானம்) எனப்படுவார் என்றும், இப்பராசத்தியார் பிரஞ்ஞை எனவும், சுருதி எனவும், மிருதி எனவும், திருதி எனவும், திதி எனவும், நிஷ்டை எனவும், ஞானக்கிரியா சத்தி எனவும், ஆஞ்ஞை எனவும் விளக்கிக் காட்டிற்று. நிஷ்டை என்னும் பதமும் பிரதிஷ்டை என்னும் பதமும் ஒரு "ஸ்தா" என்னும் தாதுவையே மூலமாகக் கொண்டுறுதலால், இப்பிரதிஷ்டை என்னும் பதமும் பராசத்தியின் பெயராய்ச் செல்லற்பாற்ருமென்க. இது முன்னர்க்கூறிய கூர்மபுராணத்தினும் பிரமாண்ட புராணத்தினும் வலியுறுத்தப்பட்டது. மேலுங் கைலாயசங்கிதையானது பிரஞ்ஞானம் பிரமம் என்று (தைத்திரீயோபநிடதம்) கூறினமையும், "சைதன்னியம் ஆத்மா" என்று கூறிய முதலீஞ் சிவசூத்திரமும் ஒரு பொருளனவாம் என்றுங் கூறி,

(114) சைதந்ய மிதிவிச்வஸ்ய சர்வஞாநக்ரியாத்மகம் | ஸ்வாதந்திரியந் தத்சுவபாவோய: ஸஆத்மா பரிகீர்த்தித: |

முற்றறிவு முற்றுத்தொழிலையுடைய சைதன்னியத்தைச் சுவாதந்திரியமாகவும் சுவபாவமாகவுங் கொண்டுள்ளது ஆன்மா (பரமான்மாவாகிய சிவப்பிரமம்) என்று கூறியவாற்ருல், பிரஞ்ஞானம் என்றது பராசத்திக்குப் பெயராய்ப் போந்தது. இதையுற்றே சர்வைசுவரிய சம்பன்னர் என்று அதர்வசிகை கூறியதாமெனப் பல உபப்பிரும்மணங்கள் முழங்கியவுமாமென்க. இதனால் பிரஞ்ஞா, பிரதிஷ்டா, பிரஞ்ஞானம் என்பன பராசத்தியாம் சிவைக்குப் போந்தவாறு தெளியப்படும். ஸ்ரீஅப்பயதீக்ஷிதயோகியார் சிவசத்தியைக் குணமாக (தருமமாக) கொள்ளவேண்டும் என்ற கருத்தினலன்ரே எதிரிகளாகிய மாயாவாதிகள் நூலிலேயிருந்து .

(115) சிச்சக்தி: பரமேச்வரஸ்ய விமலம் சைதந்யமேவோச்யதே | சத்யேவாச்ய சடாபராபகவத: சக்திஸ்த்வவித்யோச்யதே |

பரமேசுவரனுடைய சிற்சத்தி விமலசைதன்னியம் என்று சொல்லப்படும் எனவும், அவருடைய சடசத்தி அவித்தை என்று சொல்லப்படும் எனவும் பிரமாணங்காட்டி,

(116) அம்பிகாகி தேவஸ்ய சந்த்ரமௌளே ராத்மபூதா சக்தி: | ஆசக்ஷ தேதாயார் பேதஞ் சாஞ்ஞாநாத் பரமார்த்தத: | அபேத: சிவயோ: சித்தோவந்நிதாக கயோரிவ |

சிவபெருமானுடைய சத்தியாராகிய அம்பிகையாருக்கும் சிவபிரானார்க்கும் அஞ்ஞானத்திலே பேதம் சொல்லப்படுமாமன்றிப் பரமார்த்தத்தில் இல்லை என்றும், தீயும் சூடும்போல (குணகுணியினால்) அபேதஞ் சாற்றப்படுமோம் என்றும் வாயுசங்கிதை முதலியவைகளுக்கு உடன்பட உதகரித்தார். இதனால்,

(117) ப்ரஞ்ஞா ப்ரதிஷ்டா ப்ரஞ்ஞாநம் ப்ரம்ம |

பிரஞ்ஞை பிரதிஷ்டை பிரஞ்ஞானம் என்பன பராசத்தியின்பெயர்களாயுற இந்தப்பராசத்தியை அக்கினியில் உஷ்ணம்போல (மைத்திராயணோபநிடதத்திலே சொல்லப்பட்டமைபோல) நீங்காதுற்றவர் பிரமமாகிய சிவமாம் என்க. இதனால் நமதுபரமான்மா சிவசத்தி குணங்களால் விசேஷிக்கப்பட்ட சவிசேஷப் பரப்பிரம சிவமாமன்றி, சிவசத்தி குணங்களால் விசேஷிக்கப்படாது அறிவு மாத்திரமாயுள்ள நிர்க்குணப்பிரத்தியக்கான்ம நிர்விசேஷ கூடஸ்தபிரமம் (சீவப்பிரமம்) அன்ருமென்க. இவ்வாறு வியாசர், சூதர், உபமன்னியு, வாயு, பிரமா, சுவேதர் முதலிய நூற்று நாற்பது வைதிக பாசுபதர் நீலகண்டசிவாசாரியர், அப்பயதீக்ஷிதர் என்னும் மகான்களுடைய கருத்தெல்லாம் மேலே கூறியவாறு ஒரு புறமேயாக, மற்றைச் சங்கிராசாரியர் மாயாவாத பாஷ்யமும் பிரமகீதையும் மற்ருேர்புறமாகவும் நின்று போதருதலைப் பின்வருமாறு காட்டுதும்.

(கூகூ) சங்கராசாரியர் மேலேகூறியவாறு ஐதரேயோபநிடதத்து ஐந்தாங்கண்டத்து இரண்டாம் மந்திரத்திலே இருதயம், மனம், சம்ஞானம், ஆஞ்ஞானம், பிரஞ்ஞானம், மேதா, திருஷ்டி, திருதி, மதி, மநீஷா, சூதி; மிருதி, சங்கற்பம், கிரது, ஆசு, காமம், வசம் என்னும் பெயர்களைப்பிரஞ்ஞானரூபமாகிய பிரமத்தின் நாமரூபப்பிரம உபாதி பூதங்களாகியஅந்தக்கரணவிருத்திகள் என்று எழுதி, அவ்வாறே சூதசங்கிதையையும் திருப்பிவிட்டார்.இதயம் மனசுஎன்பவற்றைஎடுத்து உடனேபிரமத்தின் பெயர்களென்று எழுதினல் அதமுதற்கண்ணே உலகினர்க்குப்பொருளை வெளிப்படையாகவும்கொண்டு செவ்விதாகவும் காட்டாதென்று போலும்,, வெளிப்படையாம் விஞ்ஞானம் என்னும் ஐந்தாவது பெயரை முதற்

கண்ணே (மூலத்தின்படிதொடராது(தொடங்கிச்"சங்கரன்" எனப் பெயரிய விஞ்ஞானம் என்று பொருள்படப்பிரமகீதை மூன்றும் அத்தியாயத்துப் பத்தொன்பதாம் சுலோகவாயிலாகக்கூறி, சிலர் இதயம் என்றும், சிலர் மனம் என்றும் அப்பெயர்களையெல்லாம் எடுத்துரைத்துக்கொண்டு இருபத்தைந்தாம் சுலோகம் வரையும் கூறிப்போய், உபநிடதத்திலே"பிரஞ்ஞானரூபம்பிரமம்" என்று தாம் கூறியதைமெய்மைப்படுத்தவேண்டி, இருபத்தைந்தாம் சுலோகத்தொடக்கத்திலே இவையெல்லாம் பிரஞ்ஞானமாகிய சிவனுடைய(பிரமத்தினுடைய) பெயர்களாம் என்று முடித்துவிட்டார்.இப்படிப்பட்டஉபாதி அந்தக்கரண விருத்திப் பெயர்கள் நிருபாதிகபிரமத்துக்குப் பெயர்களாய்ச் சொல்லுதல் தோஷமாகாதோ வெனில் இன்றும் அது சாதாரணமாம் என்று சங்கராசாரியர் காட்ட வேண்டி

(118) ப்ரஞ்ஞாநமேவதத்ப்ரம்ம சிவருத்ராதி சம்ஞிதம் |

"எதினின்றும் உலகனைத்துந் தோன்றி நின்று ஒடுங்குகின்றதோ அது சிவருத்திராதி (உபாதிப்) பெயரையுடைய (நிருபாதிக) காரணப்பிரமமாம்" எனப் பொருள்படும் சுலோகப் பாதி தொனிப்பித்தவாறும் வெளிப்படையேயாம். உபாதி பூதர்களாகிய சிவருத்ராதிநாமங்கள்(ஏகான்மவாதிகள் கொள்கையின்படி) நிருபாதிக பிரமத்துக்குப் பெயர்களாய் நின்றவாறுபோல, உபாதி பூதங்களாகிய விஞ்ஞானமுதலிய பதினேழு பெயர்களும் பிரஞ்ஞானரூப பிரமத்துக்குப் பெயர்களாய்ப் போதற்குத் தடை என்னையோ என்பதாம். இதயம் மனமுதலிய ஐதரேயத்து மந்திரப்பெயர்களையும், பிரஞ்ஞா பிரதிஷ்டா பிரஞ்ஞானம் என்பவைகளையும் பராசத்திக்குப் போகவொட்டாது வேறு பொருள்படுத்திக் கெடுத்தற்குச் சங்கராசாரியரும், அவர் சிஷர் வித்தியாரணியரும், தமிழிலே போந்த பிரமகீதையில் சுந்தரசுவாமியும், தம்பக்கம் வலிந்து பொருள்படுத்துதற்கு எத்துணைப்பாடுபட்டு அறவளைந்தவுரை செய்திருக்கின்றார் என்பதை நமது அன்பர்கள் படித்து ஒத்துப்பார்த்து உணர்ந்து தெளிவார்களாக. கைலாயசங்கிதை வாயுசங்கிதை முதலிய சைவபுராணங்கள் சங்கராசாரியர் கையில் கிட்டவில்லையோ? அவை தமது கட்டுச்சுலோகச்சூதசங்கிதைக்கு இடந்தராமையினாற்போலும், 'நரி' ஒன்று திராக்ஷப்பழத்துக்கு ஆசைப்பட்டு எட்டி எட்டிக்குதித்தும் கைக்குக்கிட்டாமையால் இப்பழம் புளிக்கும் என்றுசொல்லி நிந்தித்துப் போனவாறுபோல, அச்சைவபுராணங்களை யெல்லாந் தந்திரம் தந்திரம் என்று தமதுகும்புகளுக்குக் கிளிபோலப்பயிற்றிவிட்டு அடைந்து போக, இக்காலத்துக்கிளிகளெல்லாம் அத்துவிதம் அத்துவிதம் என்று அதனை உயர்வுபோலப் பேசியும், அன்பு நிலை அத்துவிதமாய் முடியும் சைவசித்தாந்தத்தைத் துவிதம் என்றும், தந்திரம் என்றும், சைவசித்தாந்தம் இருநூறு முந்நூறு வருஷத்துக்கு முன்னே அவதரித்த மெய்கண்டாராலும் அருணந்தி சிவாசாரியராலும் புதிதாக நாட்டப்பட்டதன்றிப்புராணத்திலேனும் பிறவடமொழிநூல்களிலேனும் வைதிக சைவ சித்தாந்தக் கருத்தில்லை என்றும் பேசிப் பேசிப் பறந்து திரிகின்றன. கிளிகளுக்குப் "பெற்றி பெற்றி" என்று சொல்லிக் கொடுக்க உண்ண அறியுமன்றி மற்றென்னறியும்! அப்படியேவாயுசங்கிதைமுதலியவைகளிலே பிரஞ்ஞை பிரஞ்ஞானம் திருதி மிருதி முதலிய பெயர்கள் மிக லேசானே நேரே பராசத்திக்குப் பெயராமாறு சென்றமைக்குச் ஆரியனார் யாது கதிவிடுவார்! பராசத்தியாருடைய மான்மியம் சூதசங்கிதை பதின்மூன்றும் அத்தியாயத்துக் (கட்டுச்) சுலோகங்களுட் காணப்படுகின்றதென்பாரேல், நமது அன்பர்கள் வாயுசங்கிதை உத்தரபாகத்து ஐந்தாம் அத்தியாயத்தை, அதனோடு ஒத்துப்பார்த்து அப்பராசத்தி சிவபிரானுக்குச் சத்தியாயும், சிவபிரான் சத்திமானாயும், சிவபிரானுஞ் சிவசத்தியாரும் சூரியனும் கிரணமும், சந்திரனும் சந்திரிகையும் போலச் சமவாய சம்பந்தமாய் நிற்றல் அச்சூதசங்கிதையிலோ பேசப்பட்டிருக்கின்றதோ என்னும் வினாவினால் ஏகான்மவாதியாரை அடக்கி விடலாம். இப்பராசத்தியார் மாயோபாதிப்பட்ட ஈசனுடையசத்தி என்பாரேல், அவர் சொல்லும் ஈசுவரனுக்கு இப்பராசத்தியாகாத மற்றோர் சத்தி சத்தியாக அமைந்தவாற்றைப் புராணவாயிலாக நிரூபித்து அடக்கிவிடுவாராக. கைலாசசங்கிதைவாயுசங்கிதை என்பவற்றால் சிவப்பிரமமாகக் குறிக்கப்பட்டு அநிர்வசனீயமாயா சத்தியுறப்பெற்ற சிவப்பிரமத்தை ஆராய்ச்சிக் குறைவினால் பிரமம் என்றுபேசி பிருதிவி முதல் சிவதத்துவாந்தமாகிய தத்துவங்களையும் பிரம விஷ்ணு ருத்திர மகேசுர சதாசிவரையும் படைத்துக்காத்து அழித்து மறைத்து அநுக்கிரகிக்கும் அருட்சத்தியாராகிய பராசத்தியாரைச் "சம்வித்து" என்று பெயரிட்டு, ஜகதங்குர மாயாசகித (சிவப்)பிரமத்துக்கு நேரேபெயராக்கிச் சொல்லுமாறு சூதசங்கிதையைச் செலுத்தி விடுவாராயில் பராசத்தி என்னும் ஓர் சத்தியிருப்பதாகச் சுவேதாசுவதரோபநிடதத்து ஆறும் அத்தியாய எட்டாம் மந்திரங் கூறியதற்கும் இம்மந்திரத்துக்கு உபப்பிருமணமாகப் போந்த மற்றைய புராண சுலோகங்களுக்குங் கதி என்னையோ? சிரோவிரதம் என்பது பாசுபதவிரதத்துக்குப் பெயராமெனச்சூதசங்கிதை சொல்லியதை அலக்ஷியஞ் செய்துமுண்டகோபநிடதத்தின் தலையிலே தீயைவைத்து, அதனால் அதைப் படிப்பவர்கண்மீது தீயை வைத்து அனர்த்தஞ்செய்த ஆசாரியர் உபநிடதங்களின் ஒவ்வோரிடத்திலே நேர்ந்த பராசத்தியாரின் பெயரைச் சடமாயை, அவித்தை என்பனவாமென்றேனும், உபதேசம் என்றேனும் அந்தக்கரணவிருத்தி என்றேனும் (சிவப்பிரம)அறிவுருவத்துக்குப் பெயர்என்றேனும்ஆக்கி அருட்டாயார் சொரூபத்தைக் காணவொட்டாது அவ்வருட்பராசத்தியின் நிலைக்களமாய் அவர்க்கு இராஜதானியாயுள்ள வைதிக சைவ பாசுபதோப நிடதங்களினின்று அவரைத் துரத்தி ஓட்டிவிட்டு இரண்டாயிர வருஷகாலமாக அவ்வுபநிடதங்களிலே ஏகான்மவாதக் கும்புகள் ஏறித் தாமேபிரமம், தாமே பிரமம், தாமே சச்சிதானந்தம் என்று பின்று பரிபாலனஞ்செய்ய இடங்கொடுத்துப் பாஷ்யங்களையும் சூதசங்கிதையையும் இவைபோன்ற வேறு சிறுநூல்களையும் கெடுத்தும் அம்மட்டோ! எவர்களும் எடுத்து மிகுதியும் வழங்காதனவும் படியாதனவும், பயிலாதனவுமாகிய கீழ்நிலையுபநிடதங்களிலே பலவற்றிலே சைவத்துக்கு விரோதமாகப் பலவற்றைப் புகட்டியும், திருப்பியும் விட்டமைக்கு உத்தரஞ்சொல்ல வேண்டியவர் யாரோ? சிலகாலத்துக்குமுன் காஞ்சிபுரத்தி

விருந்த உபநிஷதப்பிரமம் என்னும் சந்நியாசி ஒன்று பிருகச்சாபாலோபநிடதத்தி இறுதிமூன்று பிராம்மணங்களையும்நீக்கி நாசஞ்செய்துவிட்டதாம். இவ்வாறு அநேக உபநிடதங்களை மாயாவாதப்பொருளுற மாற்றியும்விட்டதாம். ஆலாசியமான்மியத்து வேதார்த்தம் உரைத்த அத்தியாயத்திலே சொல்லப்பட்ட தத்துவங்கள் பிருகச்சாபாலத்திலே சொல்லப்பட்டனவாக அப்பழைய ஆலாசியமான்மியம் அச்சிட்டவராலே குறிக்கப்பட்டவை இப்போது அச்சிடப்பட்ட பிருகச்சாபாலத்திலே காணப்படா தொழிந்தமைக்குக் காரணம் அந்தக்காஞ்சிபுரத்து மாயாவாதோபநிஷதப் பிரமம்செய்து வைத்த தீச்செயலேயாமென்ப. சிவதத்துவ விவேக விருத்தியிலே தீக்ஷிதயோகியாரால் உதகரிக்கப்பட்ட சுருதி வாக்கியங்கள் இப்போது காணுதொழிந்தமைக்கும் காரணம் மாயாவாதப் பிரமங்களேயா மென்க. அவற்றை இப்போது விரித்தல்மற்றொன்றை விரித்தலாய் முடியுமென்றஞ்சி விடுத்தேம்.

(கூச) வேறு சமயிகள் வேதாகமம் வேதம் என்னும்பெயர்களைத் தமது நூலுக்குப் பெயராகச்சூட்டி நம்மவர்களை அப்பெயர் மாத்திரையினாலே வலித்துத் தம் மிலேச்சசமயத்திலே வீழ்த்தத் துணிந்தாற்போலப் பிரமம் சிவம் என்னும் பெயர்களை நிர்க்குணப் பிரமத்துக்குப் பெயராகப் பிரமகீதையிலே சாதித்துச் சைவத்திற் பெரிதும் பழுத்தமைபோலக்காட்டி, அப்பெயர்களைப் பிரத்தியக்கான்ம ஏகான்ம மாயாவாத முடிவிலே விடுத்து, நமது அன்பர்களையெல்லாம் அச்சிவம் என்னும் பெயர் வேஷத்தினால் மயக்கி ஏய்த்து, அம்மாயாவாதக்குழியில் வீழ்த்த முயன்றமையா லன்றோ, சூதசங்கிதை பிரமகீதை இரண்டாம் அத்தியாயம் வாயிலாக "பரமார்த்தமானது, தேவர்களே! இரு பிரகாரமாகச் சொல்லப்படும், அவற்றுள் ஒன்று உண்மையாகிய ஞானானந்தச் சிவப் பொருளாம், மற்றது அத்தியாசத்தாற் றோன்றிய மாயையினாற் கற்பிக்கப்பட்ட பொருளாம்" என்று இருவிதத்தையுஞ் சாற்றியதாகக் கட்டுச்சுலோகம் புகட்டி.

(119) பரமார்த்தோ த்விதாப்ரோக்தோமயாஹே ஸ்வர்க்கவாசிந: | ஏக: ஸ்வபாவத: சாக்ஷாத் பரமார்த்த: சதைவது | ச்வசி: சத்யசைதந்ய சுகாநந்த ஸ்வலக்ஷண, | அபர:கலப்பித சாக்ஷாத் ப்ரம்மண்யத் யஸ்தமாயயா |

என்று முடித்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. பிரமமும் சிவமும் துரிய வஸ்துவாய் ஆன்மாவாய் நிர்க்குணப்பிரத்தியக்கான்மாவாய்க் கொள்ளப்படுமேல், அச்சூதசங்கிதையானது பரதுரிய மூர்த்தியோடு (சகுணத்துட்பட்ட)ருத்திரமூர்த்தியானவர் தப்தமாகிய அயபிண்டம்போலவடிவத்தினாலும் பெயரினாலும் சமத்துவமுடையர் என்ற கருத்துப்போதர.

(120) தப்தாய பிண்டவத் விப்ரோருத்ரமூர்த்தி: பரஸ்யது | மூர்த்யாதுல்யாந்ய மூர்த்திப் யோலக்ஷணோர்முநி சத்தமா: |

என்று கூறினமையால், துரியமூர்த்தியார் சங்கராசாரியர் கருத்தின்படி நிர்க்குணப் பிரமமாகாது விருபாக்ஷம் நீலகண்டம் உமாசகாயமாயிருப்பதாகக் கூறிய சுலோகங்களுக்கு ஆரியனார் யாதுவிடைபகர்வாரோ? ஸ்ரீதீக்ஷிதயோகியார் சிவதத்துவவிவேகம் வாயிலாகத் துரியமூர்த்தியைச் சகுணமூர்த்தியாமெனப் பல்சுருதி ஸ்மிருதி புராணங்களைக் கொண்டு நிரூபணஞ் செய்யுமிடத்து, மேலே சொல்லிய சூதசங்கிதாப் பிரமாணத்தையும் உதகரித்திருக்கின்றாராதலினால், சங்கராசாரியர் பரமார்த்தம் இருவிதமாக ஏகான்மாவில் (நிர்க்குணப் பெயரினாலே பிரமத்திலே) முடியுமாறு பேசப்படும் என்று பொருள்பட எழுதிவைத்தது இடறுண்டுபோய்,இவர் பதினெட்டுத்தரம் சூதசங்கிதையைப்படித்தும் தங்கருத்தின்படி பிழையின்றிமாறுபடாது மாறறி வைக்க மறந்த சூக்குமவிவேகியார் என்பதும் பெறப்படுகின்றது.

---

## பதார்த்ததீபிகை மூலமும் அதன் உரையும்.

---

### பதார்த்தோத்தேசம்.

பொருள்பண்பு கன்மம் பொதுமை விசேடம்
பொருந்துகின்ற
ஒருசம வாய மபாவமெனப் பதத்துப்
பொருள்கள்
உரைதரி னேழவை யெல்லா முறைமுறை
யோதிடுவன்
வரைவள ருந்தமி ழைப்பயி லுந்திரு
மாமயிலே.

(இதன்பொருள்.) உரைதரின் - ஆராய்ந்து சொல்லுமிடத்து,பதத்துப் பொருள்கள் - பதார்த்தங்கள், பொருள் என - திரவியமெனவும்,பண்புஎன - குணமெனவும், கன்மம்என- தொழிலெனவும், பொதுமை என - சாமானிய மெனவும், விசேடம் என - சிறப்பெனவும், பொருந்துகின்ற - அயுதசித்த விருத்தியாயுள்ள, ஒரு - ஒன்றெனப்படுவதாகிய, சமவாயம் என - ஒற்றுமை யெனவும், அபாவம் என - இன்மையெனவும்,ஏழ்-ஏழாகும் அவையெல்லாம் - அவ்வேழையும், முறைமுறை - உத்தேசக்கிரமப்படி, ஓதிடுவன் - முன்னோர் சொல்லியவாறே சொல்லுவேன். மாமயிலந்த மாயுள்ளனமகடூஉமுன்னிலையும், அதன் அடையும்—ஒன்றற்குச் சாமானிய விலக்கணஞ் சொல்லிய பின்னர் அதன் சிறப்பிலக்கணஞ் சொல்லப்புகுவதுமாட; அதற்கு மாறாகச் சிறப்பிலக்கணஞ் சொல்லப்புகுந்தது மாபுவிரோதமன்றோவெனில்:—பதார்த்த தீபிகையென்பதனிலே மொழியை விரிக்குமிடத்துப் பதத்துக்குப் பொருளென விரிதலின், பதத்தாற்பெயரிட்டு வழங்கற்பாலதாந்தன்மை பதார்த்தத்துக்கு பொதுவிலக்கண மாகுமென்பது கூறுபட்டதென்றறிக. இவ்வாறே நன்னூலாரும் "முகவுரை பதிகமணிந்துரை நூன்முகம் புறவுரை தந்துரை புனைந்துரைபாயிரம்"என்றார். அபிதேயமெனினும் பதார்த்தமெனினுமொக்கும். அபிதைக்கு விஷயம் அபிதேயமாவது போலப் பதத்துக்கு விஷயமாவது பதார்த்தமெனக்கொள்க. அபிதை என்பதுசொல், விஷயமென்பது கவரப்படுவது. எங்ஙனமெனில்;—நடந்தான் என்னும் பதத்திற்கு விஷயமாவது ஒரு

வன் தன் கால்களை மாறி மாறித் தூக்கிவைத்து இருந்தவிடம் விட்டுப் பெயர்தலையுடையவனாதல். இதில் நடந்தானென்னுஞ் சொல் அப்பொருளைக் கவர்ந்து நின்றவாறு காண்க. இவ்வாறுரை செய்யாவிடின் பொருளினதின்மையும் பொருளென்றுகி மாறுபடு மென்க. இவ்வாறே கம்பராமாயணத்திலும் பாலகாண்டத்தில் "மேனிகழ் பொருள்களெல்லாம் விளம்பினன்" எனப் பொருளென்பதற்கு விஷயமென்பது பொருளாகி வருதல்காண்க. ஈண்டுப் பொருளென்பதற்குச் செய்தி நிகழ்ச்சியெனினும், அப்பொருட்டேயாம். ஆகவே பதார்த்தமென்பது பதத்தாற்பெயரிட்டு வழங்கற்பாலது என்பது பெறப்பட்டது, இஃதிங்ஙனமாகுக. "அ, இ, உம் முதற்றனிவரிற் சுட்டே" என்பதுபோல "பொருள் பண்பு கன்மம் பொதுமை விசேடம்பொருந்துகின்ற, ஒருசமவாய மபாவ மெனவிவை, யொண்சொற் பொருள் என்றாற்படுமிழுக்கென்னை? ஏழெனனுந் தொகைதானே பெறப்படாதா?" உரைதரினேழவை யென்றது பயனில்கூற்றன்றோவெனின், பதார்த்தங்களேழிற் குறைந்தும் மிகுந்தும் வருந்தொகையுடையன வல்லவெனக் காட்டற்கது வேண்டுமென்க அங்ஙனமாயின் ஏழென்னுந் தொகையால் விலக்கப்பட்ட எட்டாவது முதலியன பிரத்தியக்ஷ முதலியபிரமாணங்களுக் கெட்டியனவா? எட்டாதனவா? எட்டியனவாயின்விலக்குதல் கூடாது; எட்டாதனவாயின் விலக்கியதனாற்பயனென்னை? பிரதியோகியுணர்ச்சியின்றி யபாவவுணர்ச்சி பெறுவதெப்படி! என்பையாயின் "முயலுக்குக்கொம்பில்லை" "கடவுளொருவரில்லை" "எழுத்துமுதலியபதங்களில் விகுதிபுணர்ந்துகெட்டது" என்றுசொல்லவருவாருடைய அபாவவுணர்ச்சிக்குப் பிரதியோகியுணர்ச்சி யேனைய விடங்களிலிருந்து எப்படிப் பெறப்பட்டதோ அப்படியே இதுவும் பெறுமென்க. எங்ஙனமெனின் திரவியமுதலிய ஏழனுள் ஒவ்வொன்றுந் தன்னையொழிந்த ஆறினிடத்துள்ள அபாவத்திரட்குப் பிரதியோகியாகி வருதல் போல ஏழனிடத்துள்ள அபாவத்திரட்கும் ஒரு பிரதியோகியிருத்தல்வேண்டுமென யோசிக்குமிடத்து எட்டாவதை யவாவியவோருணர்ச்சி பிறந்து தனக்கென்றொரு விஷயங்காணப் படுவதின்றாய் ஏழன்மேற் பதார்த்தமில்லையென்னும் அபாவ வுணர்ச்சியைப் பிறப்பிக்கும்; பிறப்பிக்கவே. பிரதியோகி யுணர்சியும் அபாவவுணர்ச்சியும் போதருமென்க. இக்கருத்துப் பற்றியே, "தத்தமபாவத்திற்குத் தாந்தாம் பிரதியோகியாகிய தத்தமுணர்ச்சி பெற்றாலன்றித் தத்த மபாவவுணர்ச்சிபெறப்படாதென்பது தருக்க நூற்றுணிவு" என்றார் தருக்கசங்கிரக தீபிகையாரும். உரைதரின் என்றதனால் ஆற்றலை மீமாஞ்சகரும், ஒப்புமையை ஆலங்காரிகரும், வேறு பதார்த்தமெனக்கூறுதல் பொருந்தாதெனத் தன்மதநிறுத்தியவாறு. இவைகளெல்லாம் முடிந்தது முடித்தல்செய்யுமிடத்துக் காட்டுதும். ஆண்டுக் காண்க.

ஆ. முருகேசபண்டிதர்.

பதார்த்தோத்தேசம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞாநசம்பந்தகுரவேநமஃ

## தியானத்தில் அசைவின்மை.

'மண்டல பிராஹ்மணோபநிஷத்'தில் ஒருவகைத் தியானம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன்படி மனது பூர்த்தியாய் லயப்படுகின்றது, அல்லது, அதைவிட உயர்ந்த வஸ்துவாய் மாறுகின்றது. இப்படியாவதனால், பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்கு அநுகூலமுள்ள ஸ்திரமான நிலையை யடையப் பிரயத்னம் செய்யக்கூடும்.

శబ్దకాల లయేన దివా రాత్ర్యతీతో భూత్వా సర్వపరిపూర్ణజ్ఞానే నోన్మన్యవస్థా వశేన బ్రహ్మైక్యం భవతి. ఉన్మన్యా అమనస్కం భవతి. తస్యనిశ్చింతా ధ్యానం.

"இரவுபகல் கடந்து, சப்தமும் காலமும் லயமானால், ஸர்வபரிபூர்ண ஞானத்தினாலுண்டாகும் உன்மனி அவஸ்தையால் பரமாத்மாவுடன் ஐக்கியமமையும். உன்மனி அவஸ்தையால் மனதின்மை நேருகின்றது, அஃதாவது, மனோலயமாகின்றது. இவ்வாறு சித்தவிருத்தி யில்லாதிருப்பதே தியானமாகும்."

தியானமென்றால், "உபாஸநா மூர்த்தியைக் குறித்து, இதர விஷயங்களில் மனதைச் செலுத்தாமல், பாவிக்கப்படும் எண்ணங்களின் தொகுதி, அல்லது, ஸமூகம்" என்று ஸ்ரீசங்கராசாரியர் சொல்லியிருப்பதனால், அவர் சொல்வது அசைவற்ற தியானமன்றென்று ஏற்படுகின்றது. மேற்கூறிய உபநிஷத்திற் சொல்லப்பட்ட தியானத்தில் அசைவின்மையுண்டாகலாம். ஆனால், இவ்விதத் தியானம், அசைவின்மை நிச்சயமாய்ஏற்படுகின்ற ஸமாதியினின்றும் வேறு ஆகாது. இந்த நிலைமையில் நிவாத தீபம் போல, அசைவற்றசோதியின் சுத்த ஸ்வரூபமானது அலையற்ற சமுத்திரத்தைப்போல்தோற்றுகின்றது." மேலே எடுத்துக்காட்டப்பட்ட வரிக்குமுன் விவரிக்கப்பட்டிருக்கும் ஸமாதி, அல்லது, ஞானரூபமான பூஜையில், நிச்சலத்துவமே பிரதக்ஷிணம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அஃதாவது, ஸ்தூல பூஜையில் (வெளிப்பூஜையில்), தொழப்பட்ட தெய்வத்தைச்சுற்றி வலம் வருவதுபோல, மானஸபூஜையில் மனது சலனமில்லாமல (அசைவற்று) இருப்பதே பிரதக்ஷிணம் என்னப்படும். 'மண்டலபிராஹ்ம

ணோபநிஷத்'திற் குறிக்கப்பட்டதியானமீனது ஸமாதிதானென்று அதேஉபநிஷத்தில் பின்னால் ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது:

ఏవంచిరం సమాధి జనిత బ్రహ్మామృతపాన పరాయణో సౌసన్యాసి.

'மண்டல ப்ராஹ்மணோபநிஷத்து' முதலிய பல உபநிஷத்துக்களில் ஸமாதியென்றால் "ధ్యానవిస్మృతిః" (தியானத்தை மறத்தல், அல்லது, தியானமின்மை) என்று சொல்லப்பட்டிருக்கின்றது. தியானம் ஒய்ந்தால், மனதின் விருத்திரூபமான அசைவு (சலனம்), அஃதாவது, அதன்சம்பந்தமாய்ப்'பிராணன்' இல்லாமற்போம். பிறகு, நமது ஆசார்ய மஹாஸ்வாமிகள் சொல்லியதுபோல, அசைவின்மையேற்படும். 'அத்யாத்மோபநிஷத்'தின்படி "தியானஞ் செய்பவனும், தியானமும், ஆகிய இரண்டும் லயமானால் (இல்லாமற்போனால்), சித்தமானது தியானிக்கப்பட்ட வஸ்து, அல்லது, மூர்த்தியைக் கிரமேண அணுகி, சலனமில்லாத ஆகாயத்தின்கண் சுடர்போல அசைவற்று நிற்கின்றது. சித்தத்தின் அசைவற்ற இந்த நிலைமைக்கு (விருத்தி சூன்ய ஸ்திதிக்கு) ஸமாதியென்று பெயர்." இந்தப் பிரமாணரீதியாக, அசைவு, அல்லது, சலனவிருத்திக்கு ஏறககுறைய அவகாசமிருப்பதாய்த்தோற்றுகின்ற "நினைப்பவன், நினைக்கப்பட்டது, நினைவு" என்னும் வேற்றுமைகளடங்கிய, முக்கிய லட்சணமான துவைதபாவந்தவிர்ந்த சித்தத்தின்நிலைமையே ஸமாதியின் லக்ஷணமாகின்றது. அப்பொழுது அது தன் இயற்கைச் சுபாவத்தை யதிக்கிரமித்து, பரமாத்மோன்முகமான சாந்தவஸ்துவாய் மாறுகின்றது. சித்தமானது தியானநிலைமையைக் கடந்தால் தன் இயல்பைவிட ஸூக்ஷ்மமான பிறிதொரு வஸ்துவாகின்றது. மனது, அல்லது, சித்தமானது பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்கான லயக்கிரமத்தில் நாதம், அல்லது, ஜோதிஸ்வரூபமாக மாறுகின்றது; அப்படியில்லாவிடினும், அது மாறிநிற்கும்ஸ்திதிக்கு நாதம், அல்லது, ஜோதி ஓர் அங்கமாய்த் தோற்றுகின்றது:

మనోయుక్తా న్తర దృష్టిస్తారక ప్రకాశాయభవతి.

"மனதினாலாய ஆந்தர திருஷ்டியானது தாரகமென்னப்பட்ட ஒளியின்நிமித்தமே"(மண்டலப்பிராஹ்மணோபநிஷத்து). இந்தச் சுருதியினால், மனது ஸமாதி ஸ்திதியில் ஜோதிரூபமாகின்றது என்று அர்த்தமாகும். நாதம், பிந்து, கலை என்று சொல்லப்படுவதும் மனதேயென்று 'யோகசிகோபநிஷத்து' கூறுகின்றது. இவைகளுக்கும் மனதுக்கும் அபேதம் சொல்லவேண்டுமாயின், மனதானது நாதம், பிந்து, கலை (ஞானம்) ரூபமாக மாறும் என்று அனுவாதித்தாற்றான் ஆகும். நாதம் ஜோதியாகுமென்று பின்னால் விவரமாய் எடுத்துக்காட்டுவோம். மனதை நாதமாக மாற்றக்கூடுமானால், அதைச்சோதியாகவும் மாற்றலாகும்.

---

## தாரகவொளி.

---

யோகாப்பியாஸஞ்செய்பவன் காணும்சோதி இருவகைப்படும்.—

భ్రూయుగ మధ్యబిలే తేజస ఆవిర్భావః। ఏతత్ పూర్వతారకం ఉత్తరంతు అమనస్కం.

"இரண்டு புருவங்களின் மத்தியிலுள்ள குகையின் உள்ளூரச்சோதி தோற்றுகின்றது. இது பிரதம (முதலாவது) தாரகவொளி யெனப்படும். இரண்டாவது, அல்லது, பிந்திய வொளியானது அமனஸ்கம்—மனதற்றது" (மண்டலப்பிராஹ்மணோபநிஷத்து). இவ்விதமாய் வகுத்தலினால், முதலாவது தாரகவொளியில் மனதானது கொஞ்சமட்டிலும் சோதியாகமாறிற்றென்றுவது, கொஞ்சங்கூட மாறவேயில்லை யென்றுவது கொள்ளலாம். மனது உள்ளபடியேயிருக்கின்றதென்று கொண்டால், காணப்பட்ட சோதியானது இதர சக்திகளின் ஒற்றுமையால் உண்டாயிருக்கவேண்டும்.

இவ்விருவகை யனுமானங்களில் முதற்சொல்லியதே கொள்ளத் தகுந்ததாகும். ஏனெனின், மனோமயமல்லாத இதரசக்திகள் ஞானவொளியாய்த் திரியாவென்பது நமது உபநிஷத்துக்களின் அபிப்பிராயம். ஒரே காரியத்திற்குப் பலகாரணங்களிருக்கக் கூடும். ஆயினும், பரமாத்மாவுடன் ஐக்கியமாய் முக்திபெறுவதற்கு மனோமயமாகாமல்வேறே நேரான மார்க்க மொன்று மில்லை.

இரண்டாவது தாரகவொளியில், மனது பூர்த்தியாய் மாறி சோதியாக விளங்குகின்றது. "மனம், புத்தி, அகங்காரம், சித்தம்" எனும் உட்கரணங்கள் நான்கினுக்கும் மேலானது "மஹத் பூதம்" (பெரிய பூதங்கள்). இந்த "மஹத்பூத"த்திற்கு மேலானது "அவ்யக்தம்." லயக்கிரமத்தில் மனது பரமாத்மாவை நோக்கிச் செல்லுகையில், சோதிரூபமாகுமுன்னர், "அவ்யக்த"த்தின்வழியே போகவேண்டும். இந்தப்படி 'மண்டலப்பிராஹ்மணோபநிஷத்'தில் ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது:—

తద్వ్రపూర్ణో భవతి. సోతి గూఢ మవ్యక్తశ్చ.

மனது நாதமாக மாறுகின்றது என்பது திண்ணம்:

ప్రణవ ధ్వనిం నిశమ్య మన స్తత్ర లీనం భవతి.

"ப்ரணவத்வனி" என்று சொல்லப்பட்ட நாதம், அல்லது, சப்தத்தில் மனது லீனமாகின்றது. மனது எதனுடன் லீனமாகவேண்டுமோ அந்தவஸ்துவாய்த் திரிய வேண்டியது ஆவசியகம். சர்க்கரையைத் தண்ணீரிற் கரைத்தால், அஃது அந்தத் தண்ணீரில் லயம், அல்லது, லீனமானதுபோல் தோற்றினும், அப்படிச் சர்க்கரை தண்ணீருடன் கலந்து நிற்பது லீனமாகாது. இதைப்பற்றிப் பின்னால் விவரமாய் வரைவோம். மனது நாதத்தில் லயமாகின்றதென்றும், நாதம் சோதியில் லயமாகின்றதென்றும், அதே உபநிஷத்து முறையிடுகின்றது. ஸமாதி ஸ்திதியில் அசைவின்மை நேர்வது உண்மையேயாயினும், அஃதாவது, மனது, நாதம் அல்லது சோதியாகத் திரியினும், அது கொஞ்சங்கூட அசைவில்லாத ஸ்திதியன்று. ஏனெனின், நாதமானாலும், சோதியானாலும், அஃது ஒருவகை யசைவாகவே இருக்கின்றது. கீழ் வரும் பிரமாணங்களால் இதனுண்மைவிளங்கும். பிராணன் தலையிற் புகுந்து நாதவடிவமாயிற்றென்று ஸ்ரீ வேதவியாஸ மஹருஷி உரைத்திருக்கின்றனர். பிராணன் உஷ்ணரூபமாகவே பிரம்மநாடியின் வழியாகச் சிரசில் பிரவேசிக்கின்றதென்று 'யோக குண்டலின்யூபநிஷத்'தின் பிரமாணமிருக்கின்றது. அன்றியும், உஷ்ணமென்பது ஒருவகை அசைவு, அல்லது, "கம்பனம்" என்று சொல்வதற்கு 'பிருஹதாரண்யோபநிஷத்து' துணைநிற்கின்றது. நாதம் குண்டலினியிலிருந்து பிரம்மரந்திரம்வரை போகும்பொழுது சுஷும்நா (சுழிமுனை) நாடியின் வழியாய்ச் செல்லுகின்றது. இந்த நாடியினூடே செல்லுகையில், நாதமானது அளவையிலும் ஸ்வரத்திலும் மிகுவதுமல்லாமல், மூலாதாரத்தினின்று மேனோக்கி இந்நாடியின்வழியாய், அலை அசைந்து செல்வதுபோல், (இந்நாடியின்) ஒவ்வொருபாகத்திலும் குறுகுறுப்பு (ஏதோ ஊர்வதுபோன்ற உணர்ச்சி) தோன்றுகின்றது. அன்றியும் அந்தப்பாகத்திற் கிச்சுக் கிச்சுக்காட்டியதுபோல் காண்கின்றது. பிராணனனது ஸுஷும்னா நாடியிலுள்ள தைலம்போன்ற கசிவை (ஊறலை)க் கடந்து வழுக்கிச் செல்லவேண்டியிருத்தலினால் இந்தக் கிசுக்கிச்சு உண்டாகக்கூடுமென்று ஊகிக்கலாம். மேலே சொன்ன குறுகுறுப்பானது தேகத்தில் எறும்பு ஊரினாலுண்டாகு முணர்ச்சியை ஒத்திருக்குமென்று 'யோகசிகோபநிஷத்'திற் சொல்லப்பட்டிருக்கின்றது: "இரும்புமுதலிய லோகக்கட்டைகள் சிவக்கக்காய்ந்த மூங்கிலின் ஊடுருவிச் செல்வதுபோல, நடுவெலும்பின்கண் அமைந்திருக்கப்பட்ட ஸுஷும்னா நாடியின் வழியாய்ப் பிராணன் பாய்ந்தோடுகின்றது. அப்பொழுது எறும்பு ஊர்வதுபோன்ற ஒரு குறுகுறுப்பு உண்டாகின்றது. யோகாப்பியாஸபலத்தினால், பிராணனனது வழியிலிராநின்ற இடையூறுகளைக்கடந்து ஸுஷும்னையிற் புகுங்கால் அந்நாடியின்கண் உண்டாகும் உணர்ச்சி இப்பான்மையதேயாகும்." இந்த நிலைமையில், ஸுஷும்னையின் மத்தியபாகத்தில் நாதம் ஒலிமிகுந்து, மேகத்தின்கண் இடியைப்போல் முழங்குகின்றது. மேலே விவரிக்கப்பட்ட குறுகுறுப்பானது கர்ணமூலம் (காதின் அடிவாரம்) வரை எட்டி, முதுகெலும்பின் உச்சியினின்று வலப்புறம் இடப்புறமாய்க்கிளைத்தோடி, கடைசியில் பிரம்மரந்திரத்திலடங்குகின்றது. மேற்கூறிய விஷயங்களின் உண்மை **போகமுனிவரது** அநுபவத்தால் விளங்குகின்றது. அவர் சொல்லியது யாதெனின்:—

மாச்சென்ற வாசியைநீ தவறொட் டாதே
மனந்தன்னை மூலத்தில் மருவிச் சேர்க்கும்
* * * * *
பேரான சுழிமுனை தன்னில் மெட்டிட்டேறும்
..........................(7-ம் அத்தியாயம், 4-ம் பக்கம்).

தாரையாம் விந்துவிலே திரமதியோ கோடி
தனுக்காகக் கண்கூசி மயக்க மாகும்
நாதத்திற் செவிடுபட்டு ..................(46-ம் பக்கம்).

"பிராணப்பியாஸத்தை (பிராணயாமஞ்செய்தலை)க் கைவிடாதே. அது மூலாதாரத்தில் மனதை நிறுத்தும்; அது ஸுஷும்னையின் உட்புகுந்து மேலே ஊறும். அப்பொழுது கோடிசந்திரன் உதித்தாற் போல் வெளிச்சம் தோன்றும்; அதைப்பார்க்கக்கண் கூசும்..................அன்றியும் நாதத்தின் ஒலியோ வெனின், அது காது செவிடுபடுமெவ்வளவு பலத்ததாயிருக்கும்."

இன்னும் "நாதமென்று வாசிக்கே பேர்" என்று **போகமுனிவர்** சொல்லியிருக்கின்றார். அஃதாவது, பிராணனே நாதம் எனப்பொருளாம். இதனால், பிராணன் நாதமாகத் திரியுமெனக் கொள்ளலாயிற்று.

---

## தியானத்திற் சோர்வு.

---

நாதமென்பது ஒருவகைச் சலனமாயிருப்பதுமன்றி, நாடிகளிலுள்ள சலனத்திற்கு உடனிகழ்ந்தது

மாயிருக்கின்றது. பாஹ்ய (வெளி) விஷயங்களில் மனது அலையாதிருக்குமாறு தேகத்திலுள்ள நாடிச் சக்கிரங்களில் மனதை நிறுத்துவதற்கு அப்பியாஸம் செய்வதுண்டு. அப்படி, யாதேனுமொரு சக்கிரத்திலாவது, முறையே ஒவ்வொரு சக்கிரத்திலுமாவது கவனத்தை நிலையாய் நிறுத்துவதனால், பிராண சக்தியானது (அன்னபூர்ணோபநிஷத்து) பிரம்மரந்திரத்தில் திரண்டுநின்று, அங்கிருந்து வலப்புறத்திலும் இடப்புறத்திலுமுள்ள நாடிகளின் வழியாய்த் திரும்பவும் விபாகிக்கப்படுகின்றது. இவ்வாறு விபாகிக்கப் படும்பொழுது நாதத்தின் அளவையும் (காத்திரமும்) தொனியும் அதிகரிக்கின்றது. உடனே அற்புதமான ஒரு சோதி தோற்றுகின்றது. நாதத்துடன்கூடவே இச்சோதி தோன்றுவதில்லையாயினும், இது நாதத்தைப் பின்றொடர்ந்தே இருக்கும். இந்தச்சோதி சில சமயங்களிற் சிவப்பாயும், சிலவேளை பச்சையாயும், சிலவேளை நீலமாயும், சிலவேளை பலவர்ணங்கள் கலந்ததாயுமிருக்கும்; சோதி அகன்று அதன்காந்தி ஏற ஏற, நாதத்தின் தொனி ஆழ்ந்து உள்ளடங்குகின்றது. இதனால் முதன் முதலில் நாதமாக விளங்கினதே சோதியாகத் திரிந்ததென்று தெரியவருகின்றது. சகள சாஸ்திரத்தில் இதற்கு நேரான திருஷ்டாந்தம் உண்டு. வித்யுத் பிரவாகத்தை ஏககாலத்தில் உஷ்ணமாகவும் வெளிச்சமாகவும் மாற்றினால், உஷ்ணம் அதிகமாகும்பொழுது வெளிச்சம் குறைவதும், வெளிச்சம் அதிகமாகும்பொழுது உஷ்ணம் குறைவதும் காணலாகும். அஃதாவது, அவைகள் தராசினது இரண்டுதட்டுகளையும் போல வர்த்திக்கின்றன—ஒரு தட்டு மேலே ஏறினால், மற்றது கீழே தணியும். இன்னும் விவரமாய்ச் சொல்லுவோம்—ஒரு குறித்த அளவு சக்தி இருப்பதாய்க் கொண்டால், அதில் பெரும்பான்மை உஷ்ணமாகமாறும்பக்ஷத்தில் சிறுபான்மையே வெளிச்சமாக மாறக்கூடும். அப்படியே சிறுபான்மை உஷ்ணமாய் மாறினால், பெரும்பான்மை வெளிச்சமாகும். பிரம்மரந்திரத்திலிருந்து சக்தியானது மறுபடியும் விபாகிக்கப் படும்பொழுது, முதுகு எலும்பின்வழியாய் நாதம் மேனோக்கிச் செல்லும்பொழுது உண்டாவதுபோல, ஸ்தூலநாடிகளிற் சலனமுண்டாகின்றது. சக்தியின் புனர்விபாகத்தினிமித்தம் சோதிகாணும்பொழுது, அதன் நிறம் முதன் முதலில் ஒருவிதமாயிருப்பதும், விபாகிக்கப்பட்ட சக்தி தணிவதற்குத்தக்கபடி நிறம் மாறுவதும் விசேஷ சங்கதிகளெனக் குறிக்கத்தகும். இப்படி விபாகிக்கப்பட்ட சக்தியானது பூர்த்தியாய் அடங்கிப்போனால் சோதியும் அடங்கிப்போகின்றது. பிரம்மரந்திரத்தினின்று சக்தி விபாகிக்கப்பட்டுநாடிகளின வழியாய்ப் புனர்வியாப்தியடைந்து, இவ்வாறு வியாபித்த சக்தியும் பூர்த்தியாய் அடங்கின், தியான அப்பியாஸத்தினிமித்தம் உண்டாயிருந்த சோர்வு தணிந்துவிடுகின்றது, புதிதாய் தேகத்திற் பலமும்காண்கின்றது. சோதி தோற்றுவதும், அதன் பரிமாண பரிச்சேதமும், அதன் நிறமும் பிரம்மரந்திரத்தினின்று வியாபிக்கும் சக்தியையும் அதன் அளவையும் பொருத்திருக்கின்றதென்றும், அதை மறுபடியும் பிராணசக்தியாய் மாற்றுதல் கூடுமென்றும் மேலே விவரிக்கப்பட்ட அம்சங்களால் வெளியாகின்றது. 'யோகசிகோபநிஷத்'தின்படி, பிரயத்னமின்றி, அஃதாவது, மூளையின் நரம்புகளுக்குச் சிரமமின்றி, தியானம் செய்யவெண்டும்; இப்படிச் செய்வதனால் மிகுந்த பிரயோஜனமுண்டு. யோகாப்பியாஸி கற்றுக் குட்டியாயிருந்தாலும், அல்லது, எழுதுவது படிப்பது முதலிய வாடிக்கைகளால் அவனுடைய மனது எளிதில் குவியாத்தன்மையதானாலும், அவன் தியானம்செய்யவேண்டுமாயின் பெரும்பிரயத்தினம் செய்யவேண்டும், சிரமப்படவேண்டும். முக்கியமாய் இப்படிப்பட்டவனுக்கு, பிரம்மரந்திரத்தினின்று சக்தியானது மறுபடியும் வியாபிப்பது மிகுந்த அநுகூலமாயிருக்கும். படிப்பது, எழுதுவது, வியாக்கியானஞ் செய்வது முதலிய வழக்கங்கள், அந்நிய நினைவுகளற்று ஏகத்தியானமாயிருப்பதற்குப் பிரதிகூலமானவைகளென்று கருதிச் சந்நியாசிகள் இந்தக் காரியங்களுக்குப் பிரவர்த்திக்கக் கூடாதென்று 'நாரத பரிவிராஜோபநிஷத்'தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. பிராணாயாமாதி சாதனங்களாற் சோதிகாணும்பொழுது சிலவேளை அது வியாபித்துப் பிரிந்தோடும் கிரணங்களைப்போல் தோற்றுகின்றது. அந்தக் கிரணங்களின் அசைவு நமக்குப் புலப்படக்கூடியதாயிருக்கும். அவற்றின் நீளம், உருவம், நிறம் ஆகிய இவைகளை நிதானிப்பதும் சாத்தியமாகும்.

தீ. அ. சுவாமிநாதய்யர்.

(தொடரும்.)

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்..
ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:.

# திருவானைக்காவுலா.

முன்முறையிற் பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 168 | 29 | அம்மல | அம்பல |
| ,, | 30 | சத்தள | சததள |
| ,, | 36 | மென்று | மென்றனை |
| ,, | ,, | நின்றோர்பானைத் | நின்றோர்பார்த் |

சீதளக் காவிற் சிறுதென்ற லூடாடு
மாதவி நீழலிலே வந்திருந்து—தாதியரும்
பாங்கியரு மன்னையரும் பார்க்கவொரு பாவையுடன்
யாங்கழங் காடுது மென்றமைந்து—வாங்கினாள்
ஒன்பான் மணியதனி லோரேழ் மணிதிரட்டி
யின்பான கோளை மெனத்திகழத்—தன்பாணிப்
பல்லவத்து ளெல்லாம் பவளமாணிக்க மொழிந்
தில்லை யெனவிளங்க வேற்றெறிந்து—தொல்லோன்
படர்கயிலை வெற்பெடுத்த பத்திருதோள் வீரன்
உடல்சரிய வூன்றியதா ளொன்றும்—மடலவிழ்பூந்
தேங்காவி சூழுந் திருவானைக் காவிலுறை
ஓங்கார மூர்த்தி யுருவிரண்டும்—ஓங்கற்
கொடிக்சன்பு கொண்டபிரான் கோலமூன்றாகி
முடிக்குந் திருக்கரும மூன்றும்—அடைக்கலமென்
றேத்தெடுக்கு மெம்மை யெழுபிறப்பில் வீழாமற்
காத்தெடுக்கு நாதன் கரநான்கும்—பூத்தொடுக்குந்
தார்காக்குஞ் செஞ்சடையான் சங்கரிக்கு நாள்வரைமால்
பார்காக்கத் தந்த படையைந்தும்—போர்காக்குந்
திண்பிணு கப்படையான் சேவடிசே ரத்தவஞ்செய்
பண்பினார் வெல்லும் பகையாறும்—ஒண்பேர்
திருந்த * விடங்கரெனத் தீத்தவர்க ளேத்த
இருந்த விடங்கடா னேழும்—மருந்தனையாள்
பாடிவினை யாடும் பருவத் துருவத்துக்
கூடிவிளை யாடுமலர்க் கொம்பனாள்—நீடு
வலியைக் கருதாமல் மாதவத்தோர் விட்ட
புலியைக் கலையாப் புனைந்தோன்—உலகனைத்தும்
ஆண்டவன் காகோத ராபரண னனந்தத்
தாண்டவன்சிந் தூர சரணத்தான்—நீண்டவனுக்
கெட்டாத நீளத்தா னெள்ளெண்ணெய் போலுடலி
னுட்டா னுயிரா யுறைகின்றோன்—புட்டாவு
விண்டடவு கோடரத்து வெண்ணாவல் வாய்ச்சிலந்தி
கண்ட நிழலிலுறை கங்காளன்—அண்டர்
அடிபரவு மாதிப் பெருஞ்செல்வ னத்தன்
வடிவழகுக் காருமொவ்வா வள்ளல்—சுடருருளைச்
செம்பொற் றிருத்தேரிற் றோன்றுதலுஞ் சேயிழையு
மம்பொற் கழங்காட லாங்கொழிந்து—தம்பிரான்
சேருந் திருவீதி சென்றா டிரண்மாதர்
யாரு மிறைஞ்ச விறைஞ்சினாள்—தாருந்
திரண்ட சதுர்ப்புயமுஞ் செம்முகங் கண்டா
ளிரண்டு விழிக்கடங்கா தென்றாள்—மருண்டுதொழு
தாதரித்துத் தாயரைப்பார்த் தன்னைமீ ரென்னையிவர்
மாதரித்த திண்டேரின் வைம்மினென—நாதனார்
தாமேறுந் தேரிற் சதுமுகவற் கல்லாது
யாமேறப் பேதா யெளிதன்றே—யாமெல்லாந்
தீண்டற் கரியதுகாண் டெய்வத் திரச்சிகாண்
காண்டற்கு வாய்த்ததுசங் கற்பகா—ணண்டவர்கைத்
தீயுளது காண்சடையிற் செங்க ணரவுளகாண்
பாயு மெருதுளகாண் பைந்தொடியே—நீயிடர்க
ளேகத் தொழாயென்றா ரென்சொன்னீர் தேரிவர்
பாகத் திருப்பாளைப் பாருமென—மோகங்
குடிபுகுந்த தென்றெண்ணக் கோதையர்கொண் டாடி
வடிவுடைய மங்கைக்கு மாறாய்—அடியிட்டாள்
ஆகா வெனநகைக்கு மவ்வளவி லாடகத்தேர்
ஏகா வயல்வீதி யெய்திற்றால்—மாகாம
னிப்பா வையைபெய்ய வெண்ணுவ னென்னாகி
ஒப்பா ரிலாதா னுடன்சென்றான்—தப்பியே
நிற்கின்ற மானை நிரைவளைவார் நில்லாம
லிற்கொண்டு புக்கா ரெதிரொழுத்தி—பொற்குன்

### மங்கை.

றனசம்பு நாத னயன்மேவும் பொய்கை
*வனசம் பொருமங்கை மங்கை—தனதிடப்
பங்குமைக் கீந்தோன் பதியைத் தனதாக்குங்
†குங்குமக் கொங்கையாள் கொங்கையாள்—பைங்கயிலை
ஆதியான் காவேரி யாற்றி லறல்போலும்
‡ ஓதியாள் காமகலை யோதியாள்—பாதியாள்
பெண்ணானா னாதிப்பெருஞ்செல்வ § னானைக்காக்
கண்ணினாள் வேல்போலுங் கண்ணினாள்-எண்ணியசீர்த்

* விடங்கர் - சுயம்பு மூர்த்தி. (டங்கம் - உளி ; விடங்கம் உளியாற் செதுக்கப்படாத வுருவம்) விடங்கக்ஷேத்திரமேழாவன:—திருவாரூர், திருநாகைக்காரோணம், திருமறைக்காடு, திருநள்ளாறு, திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர் என்பன.

* தாமரைநிகரும் அழகிய கைகளையுடைய மங்கை.

† குங்குமமணத்தையாளுகின்ற கொங்கையாள்.

‡ கூந்தலாள்; காமநூலை யோதினவள்.

§ ஆனைக்காவினிடத்துள்ளவள் ; ஆனைக்காவின்கண் உள்ள இனாள் (இன்னாள்=இவள்) வேல் போலுங் கண்ணினாள் எனினும் பொருந்தும்.

* தந்தியா ராமத்தான் ருமச் † சடாடவியி
லுந்தியா ளச்சுழிபோ லுந்தியாள்—எந்தை
இணங்கிய வெற்பின்கீ ழேகியோர் காலின்
வணங்கியன்ன ரோம வலியாள்—அணங்கனைய
தன்பருவ வல்லியருந் தானுமணிச் சாளரத்துப்
பொன்புனையு மாடரங்கிற் புக்கிருந்து—மென்புந்து
மின்னிழை தாங்குவன வித்தார மெத்துவன
மன்னிய முத்து மணியுமாய்த்—தன்னிரு
கொங்கை யுடன்மாறு கொண்ட பிழைக்கவற்றை
அங்கையால் வாங்கி யறைந்தெறிந்து—சங்கரனைச்
சொல்லா ரெழுபிறப்புஞ் சுற்றிவரு மாறுபோ
லெல்லா வவயத்து மெய்துவித்து—நில்லா
தெழுவித்தும் ‡ வெள்ளி வினக்கனிகா லால்வீழ்
பொழுதொக்க நிற்குமயில் போன்றும்—செழுமை
திருந்திய கொம்பிற் செறிகனிக்குப் புட்கள்
பொருந்தி யெழுந்தணைவ போன்றும்—விரும்பும்
மருமுளரிக் காட்டிணங்கு மாபோன்று மாரன்
பொருள்புரிந்து சூழ்ந்ததண்டு போன்று—மொருதன்
மிருகனவிற் கண்டோர் விழிக்குலமு நெஞ்சும்
புகுவன போவன போன்று—மகிழ்தர
நின்றும் ஞானை நிரைவளையரர் தாம்§பூரை
யென்றுகம் புல்வி யிலங்கிழாய்—நின்றெழிலை
யாமோகொண் டாடுவோ மானைக்கா வீசனார்
தாமே யறியத் தருமென்ன—ஆமே
அவரறிவா ராகி லவரே யெனக்கா
னவர்வருவைக் கென்று நவின்றாள்—சிவனுருவங்
காண்டற்கு வேண்டிக் கவின்றிருத்திக் சாரிகையா
ரீண்டிப் புடைசூழ வின்னின்று—நீண்ட
கனகநிலை ரதத்துக் கதவைக் கடைநீத்
தினிது தெருமருவு மெல்லை—புனிதன்
திருந்துசெழு நீர்த்திரளாந் தெய்வீக னெங்கள்
பெருந்திருவெண் ணாவற் பெருமான்—அருங்கொல்லி
நேரி மலையுடையர் || னீலநெடுங் கோலவுடற்
சோரி முடைநாறுஞ் சூலத்தான்—பேரிமைய
மாதுக லாதுறையும் வாமபா கத்தினன்
சீதக லாசந்த்ர சேகரத்தான்—போதன்
* சுரபேத வேதத் துரகத்தேர் தூண்டி
வரவே புவனி வரலும்—புரிகுழலாள்
சென்றுட வெய்தாச் செழுநீர்த் திரள்வந்தா
ரென்றுடிப் பாடி யிறைஞ்சினள்—கொன்றை
யலங்க லழகா வடியேற் கிரங்கி
யிலங்கு புயமளித்தா லென்னும்—கலங்கினேன்
என்னையிடப் பாகத் திருத்தினல் யானவள்போ
லுன்னை யிரந்துழல வொட்டேனே—கன்னியைப்போல்
மேதக்க முப்பத் திரண்டறத்தை வீசியுனக்
கோதுக் கடனஞ்சை யூட்டேனே—கீதவிதஞ்
சிராகப் பாடித் திருக்கூத்தி லுந்துணையாய்ப்
பேராது நிற்கப் பெறுவேனே—பாராயென்
றோது மளவி லுமையாள் முகநோக்கி
யாதி முறுவ லரும்பினன்—மாதை
எவருநகை செய்தா ரிரதிபதி யெய்தான்
அவிர்மணித்தேர் வீதிசென்ற தப்பா—லிவளொருத்தி



### மடந்தை.

அந்நா ளுததிதரு மாரமுதுக் காரமுதம்
பொன்னு பாணத்தின் பூணாரம்—அன்னாள்
விழிவேலைத் தந்தானை வெல்வேலை மெய்யே
வழிவேலை யாளு மடந்தை—எழின்மேனிக்
கன்றணிந்த நன்கலங்க ளந்திதொறு மாதுலருக்
கென்றுங் கொடுக்கு மியல்பானைச்—சென்றொருநாட்
கீத விறலி யொருத்தி கிளர்சீர்த்தி
யோத வமைந்தெதிர்நின் றோதிமமே—மாதர்க்
கரசே மணியே யமுதே யநங்கன்
† சிரசே கரமே திருவே—கருணைக்கு
நீயே யுமையென்று ணேரிழையு நானுமையேற்
றாயோனைச் சேர்ரேன்கொல் சொல்லென்றாள்-ஆயவருட்
கங்கைநீ யென்று ளவளாகிற் கண்ணுதன்மேற்
றங்குவே னேயென்று சாற்றினள்—கொங்கை
பொருப்போவெள் ளுளப் பொருப்பாகி லீமத்
திருப்போ னிருக்குமே யென்றாள்—திருப்புருவம்
பொற்றறுவோ வென்றுள தாகிற் புராரிகரம்
பற்றிவளை யாதோ பகரென்றாள்—நெற்றி
பிறையோவென் றோதினள் பெய்வளையு மப்போ
திறையோன் முடிக்குமே யென்றாள்-நறைமலர்க்கண்
மானோ விடமோ வெனவுரைத்தாண் மன்றுடி
யானோன் றரிக்குமே யாங்கென்றாள்—தானேதும்
ஆராமா றன்னை யறிந்துசிவ னாகத்துக்
கேரா தவளோநீ யென்றேத்தப்—பேராசை

* சுரபேதம் - உதாத்தம் - அநுதாத்தம் - சுவரிதம்.

† சிர சேகரம் - தலையிலணியுமுடி.

வல்லி யுகந்து மணிப்பூ டணமெறிந்து
புல்லி விடவவளும் போந்தோறுஞ்—சொல்லுதலும்
தன்காத ருனே தனக்குத் துணையாக
மின்காம னம்பினல் வெம்பினள்—நன்காவிப்
பாய லதனைப் பணியென்றுள் பாவைநோய்
தாய ரறிந்தணுகித் தையலே—நீயஞ்ச
வேணுமோ வுன்னை விரும்பியே வெண்ணுவற்
றுணுமோ கங்கொண்டு தானுளைக்—காண
எழுந்தருள்வர் நின்வாச லென்று மதவேளு
முழுந்தன் சமீரணனு வோனுஞ்—செழுஞ்சடையிற்
றுங்கிய சந்திரனுந் தாமூர் மழவிடையு
மீங்குவரக் காட்டின ரென்றுற்ற—வாங்கவளுங்
கங்குற் கடனீந்திக் காலை யவன்வருமென்
றங்கத்தைப் பூண லலங்கரித்துத்—தொகை
லளக முடித்திடையி லாடை யிறுக்கி
வளைக மருத்திவிழி மையிட்—டொளிர்திலக
நெற்றிக் கெழுதி நெறிமேல் விழிவைத்து
மற்றொருப்பி லான்மேல் மனம்வைத்து—முற்றத்
தினத்தாயர் சூழ வெதிர்கொண்டு நின்றுள்
அனத்தின ஞருந்தே ரானும்—தனத்தினனு
மாலு மகவானும் வந்திப்பத் துந்துமியெப்
பாலு மதிரப் பவனிவர—* வாலித்தாள்
அன்னையர் சொன்ன தறுதி யெனவியந்தாள்
கைந்நிறைபொன் னலத்தி காட்டினள்—சன்னிதியின்
றெண்ணார் புரமெரித்த வென்னுனைக் காவாரே
வெண்ணுவ னீங்கா விமலரே—தண்ணறுந்தார்ச்
சென்னியுடன் முற்றுஞ் செழுநீர்த் திரளாரே
பொன்னி வருமாரம் பூண்டாரே—யென்னிதயத்
தும்மை நினைந்தளவே † யுண்டிகடு வாயினேன்
அம்மழுப்போன் மெய்பாதி யாயினேன்—வெம்மதன
வேளும் பகையாகி விட்டேன் விட்டேனுடை
நாளுந்துஞ் சாத நலம்பெற்றே—னுளநீ
ரென்னைநினைந் தெய்தின லேதோ வெனக்கரிதென்
றன்ன முளப்பா டறிவிப்பப்—பின்னிரக்கஞ்
செய்திலன் வேள்பூச தீர்த்திலன் செங்கணருள்
பெய்தில னுகிப் பெருஞ்செல்வன்—கொய்த
தொடைவழங்கி னுனுபொற் றேளளித்தா னுமின்
கொடைவிரும்பித் தூசுவனை கொண்டான்—கடைவழி

திண்டேருந் தானுந் தெருவகன்றுன் சேராக [போய்த்
வண்டே னிதழியான் மற்றொருத்தி—பண்டர்

அரிவை.

விபரஞ் செறிமடவார் வெற்றிரும்பாத் தோன்று
மபரஞ்சி யன்ன ளரிவை—* தபனசசி
பொற்றரளத் தோடாகிப் பொங்குபூ ணாரத்தி
னுற்ற வொளியா யுடன்மேவ—நற்றுளவோன்
ஓதியில் வண்டா யுறையவொளி ரோதிமமா
யாகி யயனு ரடிதொடரச்—சோதி
மயிலாய் வலாரி மகிழுநடங் காட்டப்
பயில்வாயுச் சாமரையிற் பாயத்—தயிலா
அளசாபு ரேச னடிச்சிலம்பாய் நிற்க
இளகாத மாறந் திடுவாள்—கிளர்காவிற்
பத்திமர மத்தனையோ பட்டமர முங்கிரியுஞ்
சித்திரமு மாவிபெறுஞ் செஞ்சொலாள்—† அத்திகிரி
வெற்பாந் தனியுலையில் மேகத் துருத்திகளிற்
கற்பா மனிலன் கனலூதப்—பொற்பான
எண்டிக்கு மூடு யிருட்கரியி லீசனார்
கண்டக் கடுவிரும்பு காய்ந்ததனை—யண்டம்
பரிக்கு மராக்குறட்டிற் பற்றிவட வற்பென்
திருக்கு மடைகல்லி விட்டு—மருத்துவான்
ஏனையிடிக் கூடமெடுத் தெற்ற யமக்கொல்லன் [ன்
தானமைத்த வேல்போற் றடங்கண்ணாள்-வானவர்கோ
மேவாரி லந்த விருத்தா சுரனுடல் போற்
பூவான முட்டப் புடைத்தோங்கக்—கோவாத

(தொடரும்.)

---

* ஆலித்தல் - களித்தல்

† உண்டிகடுவாயினேன்—உணவுவிடமாதல்; உணவுவிடம் போலாதல். மெய்பாதி யாயினேன், வேளும்பகையாகிவிட்டேன், ஆடைவிட்டேன், நாளுந்துஞ்சாதநலம் பெற்றேன்—இவைவெளி. இவற்றுள் மழுப்போல்மெய் - என்றது - தனக்குவிரகத்தீயாற் கொதிக்கின்றமெய் - சிவபிரானுக்குத் தீவண்ணமாகியமெய். நாளுந்துஞ்சாதநலம் - சிவபெருமானுக்குலயமில்லாமை.

* தபனசசி - சூரிய சந்திரர், சசிதரளத் (முத்துத்) தோடாகவும், தபனன் பூணாரவொளியாகவுங் கொள்க. எதிர்நிரனிறைப் பொருள்கோள்.

† இதுமுதல் 'தடங்கண்ணாள்.' வரையும் ஒரு தொடர் - இதன்றாற்பரியம்:—சக்ரவாளகிரியாகிய உலைக்களத்தில் இருளாகிய கரியையிட்டு, மேகமாகிய துருத்திகொண்டு வாயுதேவன் நெருப்பூத, சிவபிரானுடைய திருக்கண்டத்திலுள்ள ஆலாலவிஷமாகிய இரும்பைக்காய்ச்சி, ஆதிசேடனாகிய குறட்டாற்பிடித்தெடுத்து, மேருமலையாகிய பட்டடையில்வைத்து, இந்திரன் இடியாகிய சம்மட்டிகொண்டு அடிக்க, யமனாகிய கொல்லன் செய்த வேல்போலுங் கண்ணாளென்பது. இதிலுள்ள பொருள்நயஞ் சொல்நயம் மிகவருமை. மருத்துளவோன் (விஷ்ணு) என்னும் பாடம் 'இடிக்கூட மெடுத்தெற்ற' என்பதோடு பொருந்தாமை காண்க, 'இருட்கரி' யென்பதை முன்பின் னோக்காது இருட்கிரி யென்று பாடங்கொண்டதுமன்றி 'இருட்கிரி யென்பது நீலகிரிமலையினை' யென்று குறிப்புரையுமெழுதி வெளியிட்டாருடைய கருத்தெமக்குப் புலப்படவில்லை.

## குறிப்புகள்.

நமது பத்திரிகையில் வெளியாகும் பார்ட்டோலி சுவாமியாருடைய 'பூர்வீக சமயநிலை'யிலடங்கிய சிலவிஷயங்களை ஆட்சேபித்து 'ஒரு சைவர்' எழுதுகிறார். அவர் ஆட்சேபிக்கும் சங்கதிகள் ஆதியில் விக்ரக ஆராதனை இல்லை யென்பதும், விக்ரக ஆராதனை அநாசாரமென்பதும், ஆதிவேதத்தில், சிவன் விஷ்ணு புராணங்களில் கொண்டாடப்படும் வீரர்கள் நாமங்கள் இல்லையென்பதுமே. இவ்விஷயங்களைக்குறித்து, நம் சைவர் தலைப்படுமுன்னரே, நாமே பாதிரியாரிடம் ஆக்ஷேபித்திருக்கின்றோம். அவரும் விடைதந்திருக்கிறார்கள். பிரபல ஆக்ஷேபங்களுக்கு இன்னும் விடைதரத்தயாராயிருக்கிறார்கள். நம்முடையவர்களினும், விக்ரக ஆராதனை நிந்திக்கப்பட்டிருக்கின்றதன்றோ. பேராசிரியர் பாவனையே அஸத்தாகுங்கால், மற்றையர் ஸ்தூல ஆராதனை என்னவாய் மதிக்கவும் வேண்டும். அப்பெரியோர்களே, பாவனைசெய்து வழிபட்டுவந்தார்களெனின், அதன் மாட்சிமையும் எத்தன்மைத்து. இதுவே நம்முடைய அபிப்பிராயம், இதனை வேண்டியமட்டும் அங்கிலேய பத்திரிகையிலும் காட்டியிருக்கின்றோம். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகர் அவர்களும், 'திருக்கோயில் வழிபாடு' என்னும் தலைப்பின்கீழ் ஏராளமாய்க்காட்டியிருக்கின்றார்கள். நம்மபிப்பிராயத்தை யறிந்தே பாதிரியாரவர்களும், நமக்கும் தமக்கும் அவ்விஷயத்தில் அவ்வளவாக வித்யாசமில்லையென்றும் விடையளித்திருக்கின்றார்கள். மேல் நமது வேதாகம புராண இதிகாசாதிகளில், யாவரும் எதையும் கைக்கொள்வதுமில்லை. அநேக ஆகம புராணங்களை பாஷ்யமென்றுந்தள்ளுகிறார்கள். கொள்ளுவதில், பின்னையது முன்னையதென ஒன்றுண்டோ இல்லை. உண்மையோடும், இதில் மாறான அபிப்பிராயங்கள் கொள்வதில் என்ன விரோதம். அப்படிக்கொள்வதில், சில ஆசாரங்கள் முன்னைய நூல்களிற் கிடக்கக்காணவில்லை யென்பதில் என்ன விரோதம். நவீனமானதினாலே ஒரு ஆசாரம் கெட்டுப்போய் விடுமோ? இதன் உண்மைகளை 'பழமையும் புதுமையும்' என்னும் தலைப்பின்கீழ் நன்கு விளக்கியிருக்கின்றோமல்லவா? மேல், ஐரோப்பியர்கள், ஆதிவேதமென்றால், இருக்குவேத மென்றே நம்புகின்றார்கள். அதற் கவர்கள் பிரபல நியாயங்களைக் காட்டுகின்றார்கள். இதனை இதுவரையும் யாவரும் மறுத்திலர். ஐரோப்பியர்களுக்கென்ன தெரியும், அவர்கள் எந்தமூலையைக் கண்டார்களென்று வீணே சொல்வது வீணே அப்படியிருக்கவும், அதில், விக்ரக ஆராதனை படிக்கப்படுகின்றனவோ இல்லவோ எனக் கேட்பது உசிதமோ. அநுசிதமோ? சில தேவநாமங்கள் அதில் பிரஸ்தாபிக்கப்படுகின்றனவோ கேட்கலாமோ கூடாதோ. சில நாமங்கள் படிக்கப்படினும், அதன் சொரூபம் மற்றைய நூல்களில் விவரித்து உணர்த்தியபடி, இருக்கில் விளங்குகின்றதோ? உதாரணமாக விஷ்ணு என்னும் நாமம், ஒவ்வொரு மந்திரத்திலும், சூரியன் என்னும் தேவதையின்பிரதிபாதமாகவேதானிருக்கின்றது என ஐரோப்பிய நிபுணர்கள் அபிப்பிராயம். நாமும் அதனை இங்கிலீஷில் படித்து அறிந்தமட்டில், இங்கிலீஷில் இருப்பதனால் தான் அதனைப் படிக்க சாத்தியபட்டது. அல்லாவிடில், இருக்கு இருக்கென்றுவெறு வாயை தான் மெல்ல வேண்டும். அல்லவென நம்மவர் ஞாயங்காட்டில் நாமடங்கி நிற்பதிற் றடைகிடையாது. அதே விதமாக 'சிவ' என்னும் பதம், ருத்ரனைக் குறிக்கும் அடையீரா இருக்கில் ஆங்காங்கு உபயோகப்படுவதாகச் சொல்லுகிறார்கள். 'சிவன்' என்னும் அர்த்தப்படி, ஆண்பாலிலாவது, 'சிவம்' என்னும் அர்த்தம் படும்படி, அஃறிணையிலாவது உபயோகமில்லையென்கிறார்கள். இது உண்மையோ இல்லையோ. இதனால், பதிப்பொருளுக்கு ஏதாவது குறையுண்டாவ தெவ்விதம். சில சில காலத்தில், சிற்சில பதம் அதிகமாய் வழக்கத்தில் வரலாம். இற்றை நாளிலும், பரதக்கண்டத்தின் பல பாகங்களிலேயே, இவ்வித வழக்கம் காணக்கிடந்ததெனின், அநாதிதொட்டும் வரும் ஆசாரங்களுக்கு நாம் வரையறுக்க முடியுமோ. இன்னைய கேள்விகள் இன்னும் பலவுளவாமாகவில், அதனை நம் சைவர் எய்த்துணருவாரென, வரையாது விடுத்தாம். மேல், "எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு," என்ற சொல், மாண்புடைத்தாயின், யாம் என் பிறர்சொல் வாங்குவதினும் பின்னிடவேணும். மேல், விவகாரத்தில், தன் சாட்சியைக் காட்டிலும், எதிர் சாட்சியின் வாக்கினின்றும் பிறக்கும் அநுகூலமொழி மிகவும் முக்யமன்றோ, மேலும் எதிரிகள் (நாம் அவர்களை எதிரிகளாகப் பாவிக்கவேயில்லை. உண்மையை உண்மையாக விசாரிக்கப்புகுங்கால், உட்பற்று அகப்பற்று, குரோதம் முதலிய துர்க்குற்றங்களை நீக்கியே பார்க்கவேண்டுமாதலின் அஸங்கம், அவைக்களத்தில் புகுவோரை, நம் சகோதரரினும் இனியாராக மதிக்கவேண்டுமேயொழிய, எதிரிகளாக மதிப்பது அஸங்கம்) நம்மேல் எவ்வளவுதான் குற்றம் குறைகூறக்கூடுமென்று அறிவதில் நமக்கு நன்மையுண்டு. குற்றமிலதேல், அவர் குறைகூறினும், அதனால், ஒரு கெடுதியும் உண்டாகாது. குற்றம் உண்மையாயின், அதனைச்சீர்ப்படுத்தித் திருத்துவதே குணம். மேல், பாதிரியார் அவர்களின் பிரசங்கத்தில் குணங்கள் ஏராளமாயுளதாகலின், அதனை ஈண்டெடுத்து வரையாது விடுத்தாம்.

MADRAS:—Printed by P. C. KALLIANA SUNDARA NADAR, at the C. N. PRESS, 4, Guruvappan Street, Black Town, and Published by J. M. NAGARATHNAM PILLAI.

திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம்.
இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897வரு மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில்
ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க. | 1898வரு மார்ச்சுமீ. | இலக்கம்-கo.

உ
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:

## திருமூலநாயனர் அருளிச்செய்த
## திருமந்திரம்.

(152-வது பக்கத்தின் தொடர்ச்சி).

சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடைப் போற்ற வல்லார்க்
கனஞ்செய்த வாணுதற் பாகனு மங்கே [குக்
யினஞ்செய்த மான்போ லிணங்கிநின் றானே. ()

(பொழிப்புரை.) கோரமாகிய விஷத்தை உண்ட தேவநாயகராகிய சிவபிரானை நெஞ்சப்புனத்தின்கண்ணே நினைந்து துதிக்கவல்ல மெய்யடியார்க்கு, பெருமை வாய்ந்த ஒள்ளிய நெற்றியினையுடைய உமையம்மை பாகராகிய அச்சிவபிரானர், தன் இனத்தைக் கூடிய மான்போல, அனன்னியராய் இசைந்து நின்றோராவர்.

(குறிப்புரை.) தேவர்களும் அசுரர்களும் சமுத்திரமதனஞ் செய்தபோது திரிலோகங்களையும் அழிக்குமாறு ஊழித்தீ போற் கிளர்ந்த காளகூடவிஷத்தை உண்டு கண்டத்திலேதரிக்கும் வன்மை, படைத்தற் கர்த்தாவும் காத்தற் கர்த்தாவுமாகிய பிரமாவையும் விஷ்ணுவையும் மகாசங்கார காலத்திலே அழிக்கும் மகாசங்காரகர்த்தாவாகிய சிவபிரானுக்கே உளதாய் மற்றையர்க்கிலதாய், அதனால் சிவபிரானே பசுபதியாகி யமுழுமுதற் கடவுளாவார் என்பது போதரச் "சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர்பிரான்" என்று கூறப்பட்டது. சமுத்திரத்திலே ஊழித்தீ போன்ற கோரமாகிய விஷம் தோற்றியதென்றும், இது தூமத்தோடு சுவாலித்து உலகத்தை உடனே முடிக்கவல்லதாம் என்றும், அவ்விஷத்தின் மணமாத்திரையினாலே, மூவுலகமும் மயங்கிப் போயிற்றென்றும், அதுகண்ட பிரமவிஷ்ணுவாதி தேவர்களுள்ளே, பிரமதேவர் தாம்படைத்த உலகத்தைக் காத்தருளல் வேண்டுமென்று ஸ்ரீகைலாசபதியைத் துதித்தபோது, அம்மந்திரரூபியாகிய சிவபிரானர் அந்நஞ்சை உண்டு கண்டத்திற் கொண்டு நீலகண்டரெனப் பெயர் படைத்தார் என்னுங் கருத்தினல்,

ప్రాదుర్భూతంవిషంఘోరం సంవర్తాగ్నిసమప్రభం ।
జగదావృత్యసహసాస ధూమోగ్నిరివజ్వలన్ ।
త్రైలోక్యంమోహితంయస్య జిఘ్రాణాద్యతద్విషం ।
ప్రాగ్రేసల్లోకరక్షార్థే బ్రహ్మణోవచనాచ్ఛివః ।
దధారభగవాన్కంఠే మంత్రమూర్తిర్మహేశ్వరః ।
తదాప్రభృతిదేవస్తు నీలకంఠఇతిశ్రుతిః ॥

என்று புராணோதிகாசங் கூறுதலானும், இவற்றின் பொருளை வாங்கி

மாலாயவனும் மறைவல்ல நான் முகனும்
பாலாயதேவர் பகரில்லமு தூட்டிப் பேணிக்
காலாயமுந் நீர்கடைந் தார்க்கரிதா யெழுந்த
வாலால முண்டங் கமரார்க்கருள் செய்ததாமே.

என்று ஸ்ரீஞானசம்பந்த சுருதி கூறுதலானும்,

மாலா யவனென்ன வருந்திருப் பாட்டின்மாலும்
தோலா மறைநான் முகனுந் தொடர்வாமமர
ரேலா வகைசுட்ட நஞ்சுண்டிறவாமைக் காத்த
மேலாங் கருணைத்திறம் வெங்குரு வேந்தர்வைத்தார்.

என்று அத்திராவிட சுருதியை விளக்கித் திருத்தொண்டர் புராணங் கூறுதலானும், அவ்வாய்மை உணரப்படும் பிரமாமுதல் தாவரம் இறுதியாகிய சமுசாரவர்த்திகளெல்லாம் தேவதேவராகிய சிவபிரானுடைய பசுக்களென்று சொல்லப்படுவர் இந்தப் பிரமாதி தேவர்கட்கெல்லாம் பதியாயிருத்தலினால், தேவநாயகராகிய சிவபிரான் பசுபதியெனப் படுவர்” என்பது கொண்டு சிவபுராணம்.

బ్రహ్మాద్యాః స్థావరాంతాశ్చ దేవదేవస్య శూలినః ।
పశవః పరికీర్త్యంతే సంసారవశవర్తినః ।
తేషాం పతిత్వాద్దేవేశః శివః పశుపతిః స్మృతః ।

என்று கூறுதலால், சிவபிரான் பசுக்களாகிய பிரமவிஷ்ணுவாதி தேவர்களுக்குப் பதியாவார் என்பது கொண்டே “பசுபதி” என்பது தொனிக்க ஈண்டுத் “தேவர்பிரான்” எனப்பட்டார். உலகின்கணுள்ள பலரெல்லாம் தமது நெஞ்சப்புனமானது வறிய பாழாக, அதிலே காமக்காடு மூட, அதிலே தீய ஐம்புலவேடர்கள் வழிபறிகள்ளராய் ஒழுக, சிற்றின்பப் பேய்த்தேர் கிட்டுவது போனின்று எட்டாது ஓட, ஆங்கேமூடஅறிவாகிய மான் சுற்றியலமர, ஆசை என்னும் வித்தைவிதைத்தழி, “நான்” என்னும் விஷவிருக்ஷம் மிகுதியும் முளைத்து ஓங்கி வளர்ந்து, பொய் என்னும் பெருங்கிளைகள் போக்கி, பாபம் என்னும் பலதழைகள் பரப்பி, கொடுமை அரும்பி, கடுமை மலர்ந்து, துன்பப் பல்காய் தூக்கி, பின்னர் மரணம்பழுத்து, நரகிடை வீழ்ந்து, தமக்கும் பிறர்க்கும் உதவாது க்ஷணப்போதிலே கழிந்துபோகும் இயற்கையிலே வல்லுநராகின்றாரன்றி நெஞ்சப்புனத்திலே (நெஞ்சகத்திலே) சிவபிரானைத்துதிக்க வல்லார் அருமையினும் அரியராதல் நோக்கிப் “போற்றவல்லார்” என்றும், அப்படிப் போற்றிவல்லா ருளராயின், தன் இனத்தைப் பிரிந்த மான் திகைத்துப் பின்னர்த் தன் இனத்தைக் கண்டிணங்கி இசைந்து நின்றாற்போல, ஆன்மா பிரபஞ்சவியாபாரமுற்றுச் சிவபிரான் இறைவராதலை மறந்து, எண்பத்துநான்கு நூறாயிரயோனி பேதமாம் சமுத்திரத்திலேஅலமரலுறும்போது, அவ்வான்மாவுக்குப் புலப்படாது பெத்தகால முழுமையும் பாலில் நெய்போல மறைந்து நின்ற சூக்குமசித்தாகிய உமாபதியார், பின்னர் அவ்வான்மா பிரபஞ்சமெல்லாம் அநித்திய மென்றோர்ந்து தம்மைத் தலைவராகக்கொண்டு முத்தியடையும் பக்குவம் எய்தப்பெற்றுச் சிவாநுபவம் அநுபவிக்கப் பெறும் காலவெல்லையைத் தலைப்படுதலாகிய முத்திதசையிலே ஸ்தூலசித்தாகிய அவ்வான்மாவிலே வேறறக் கலந்து அத்துவித நெறியானே இணங்கி தயிரில்நெய் போல விளங்கிநின்றார் என்பது பெறப்படவே, “போற்றவல்லார்க்கு இனஞ்செய்த மான்போல் இணங்கிநின்றானே” என்று உரைக்கப்பட்டது, ஸ்தூல சித்தாகிய ஆன்மாவும் சூக்குமசித்தாகிய பரமான்மாவும் “சித்” என்னும் சாதி (இன) ஒருமையை யுடையனவாம் என்பதுகொண்டே சைவபாஷ்யகாரர் பிரமத்தினுடைய அம்சம் ஆன்மா என்பது பொருள்பட

బ్రహ్మాంశో జీవః ।

என்று கூற, அருணந்திசிவாசாரியர் “சிவன் சீவனென்றிரண்டுஞ் சித்தொன்றும்” என்று திருவாய் மலர்ந்தருளினார்.

போயரன் றன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னுன்முடி செய்தது வேநல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே. ()

(பொ-ள.) சிவபிரானைப் புகலடைந்து அவனைத் துதிப்பார் பெறுவதாக, அச்சிவபிரான் இறவாத பேரானந்தச்செல்வத்தினை அவர்க்குச் சொடுத்தருள்வார்; (இவ்வாறு தோத்திரத்தினாலன்றி) பூப்பிரதக்ஷிணஞ் செய்ய வல்லராயவிடத்தும் அவர்க்கு உமாதேவி நாயகராகிய சிவபிரான் எய்துவராமோ, எய்தார் என்றவாறும்.

(கு-ள.) “பசுக்களுக்குப் பாசத்தை அரித்தலால் அரன் என்னும் திருப்பெயரையுடைய சிவபிரான் மன்னவராகவும், அம்மன்னவராம் சிவபிரான் திருவருளால் அச்சிவபிரானுடைய பேரானந்திப் பெருஞ் செல்வம் முழுதுந் தனதாகக் கொண்டநுபவிக்கும் சுவதந்திரமுடைமையும் “சித்” என்னும் சாதி ஒருமையும் பற்றி ஆன்மா மன்னவகு மாரனாகவும்” உருவகஞ் செய்யப்படுதல் உண்மையால், அப்பேரானந்தம் பேறிவெனப்படும் முற்றுணர்வு முதலிய எண்குணங்களும் படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவிதவியைபானே அவ்வான்மாவின்கண்ணே விளங்குதலாம் என்பதுசைவபாஷ்ய காரருக்குஞ் சிவாகமங்களுக்கும் சம்மதமாமாதலில்; அம்முற்றுணர்வாகிய பேறிவை விளக்குதற்கே திராவிட மகாபாஷ்யகாரர் “எவற்றையும் ஒருங்கே ஓரியல்பானறியும் பேரறிவை முடி” என்று உரைத்தருளினார். ஈண்டு பேரறிவு எனப்படும் முற்றறிவு பெறப்படவே, மற்றைய எழு குணங்கள் உபலக்ஷணையினாலே தழுவப்படும், இதனால் தோத்திரஞ் செய்வார்க்குச் சிவபிரான் இறவாத பேரானந்தச் செல்வத்தைக் கொடுத்தருள்வார் என்பது போதரவே, அவர் (மாலே) தூங்கா நின்றமுடியைச் செய்து அதனை அவர்க்கு நல்குவார் என்பது பொருள்பட “நாயகனுன்முடி செய்ததுவே நல்கும்” என்று உரைக்கப்பட்டதாமென்க. சிவபிரானைத் தோத்திரஞ் செய்யுந்தோறும் மனசு அழலிடைப்பட்ட மெழுகுபோல உருகுவதாக, அவ்வுருகிய அன்புநிலையே துவாரமாகப் பரமானந்தப்பெருஞ்செல்வமே திருமேனியாய்க் கொண்ட பரம்பொருள் பொறுப்பரிய பேரன்பை யருளி அதன்வழியே புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்திடுதற்காமாதலில், இப்படிப்பட்ட முடிவாகிய உயர்ந்த நெறியை எண்ணில்லாத சிவாலயங்களும் சிவமூர்த்தங்களும் சிவதீர்த்தங்களும் ஒருங்கே அமைந்துள்ள பூமியைப் பிரதக்ஷிணஞ் செய்தலால் அவற்றையெல்லாம் தனித்தனி பிரதக்ஷிணஞ் செய்த புண்ணியமெய்துமாமெனஅங்ஙனஞ் செய்தார்க்குச் சோபான நெறியானே பயன்றருவ

தாகிய பூப்பிரதக்ஷிண சரியாபாத நெறி கொடுக்க வன்மையிலதாம் என்பதை உணர்த்தும்பொருட்டே "மாயகஞ் சூழ்ந்து வரவல்லராகிலும் வேயன தோளிக்கு வேந்தொன்றுந் தானே" என்று கூறப்பட்டது: "மஹாஜகம்" என்றது "மாஜகம்" என்றாகி, பின்னூர் "அஜன்" என்பது "அயன்" என நின்றாற்போல, "மாயகம்" என்றாகிப் "பெரிய பூமி" எனப் பொருளுற்றது. விஷ்ணு, பிரமா, இந்திரன் முதலிய தேவரெல்லாம் வணங்குமாறு, தம்மைப் புகழும் மெய்யடியாருக்கு முடியாக்கிச் சூட்டிப் பெரும்போகந் துய்க்குமாறு புநராவர்த்தி கொடாத மகாசிவலோகத்தின்கண்ணே சிவபிரான் இருத்துவார் என்பது சொண்டே, "புகழ்வார்பெறுவது நாயக னுன்முடி செய்ததுவே நல்கும்" என்றுரைக்கப்பட்டது என்று கூறுதலும் இழுக்காது. ஸ்ரீஞானசம்பந்த திராவிடசுருதி "ஞானசம்பந்தன் சீர்செய்த பத்தும் மிவைசெப்ப வல்லார் சிவலோகத்திலெய்தி நல்ல விமையோர்களேத்த விருப்பார்களே" என்றும், சிவஞானசித்தியார் "ஒருக்கால் வணக்குறிரானையென்றும் வானவர் வணங்க வைப்பன்" என்றும் கூறியவாற்றால் இவ்வுண்மை புலப்படும்.

(தொடரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுரவேநம:.

அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த

## சித்தியார் உரை.

---

(195-வது பக்கத்தின் தொடர்ச்சி).

### பௌத்தரிற் சௌத்திராந்திகன் மதம்.

ஞானஞே யங்களன்றி ஞாதுரு
வென்று சொல்ல
ஆனதிங் கறிவோவன்றே வன்றெனி
லவனி போலுந்
தானதிங் கறிவேயென்னிற் சமைந்திடு
நன்ப ருப்புப்
போனக மதற்குத்தானே கறியெனப்
புகன்ற தாமே.

(பொ-ரை.) அறிவும் அறியப்படும் பொருளுமன்றி அறியும் பொருளுண்டென்று கூறில் அதற்குண்டாயது அறிவோ? அறியாமையோ? அறியாமையெனில் மண்போல அசேதநமாம். அறியும் பொருள்தா னறிவென்று கூறில் பருப்புக் கூட்டிச்சமைத்த சோற்றுக்கு அப்பருப்புச் சோறுதானே கறியென்று கூறிய தன்மைத்தாகும். எ-று.

காட்சியுங் காட்சிப்பொருளு மொழியக் காண்பானில்லை யென்பதாம். (கரு)

உயிரினை யருவதென்னி லுருவுட
னுற்று நிலலா
உயிரினை யுருவதென்னி லுடலினி
லுடல டங்கா
துயிரினை யணுவதென்னி லுடல்பல
துவார மோடும்
உயிரினை நித்தமென்னி லுணர்வுத
யாந்த மின்றே.

(பொ-ரை.) ஆன்மாவை யருவமென்று சொல்லின் உருவமாகிய வுடலோடு பொருந்தியில்லாது; அதனை யுருவமென்னில் ஒருருவில் மற்றோருரு அடங்காது; அதனை அணுவென்னில் உடலில் நில்லாது பல துவாரத்தாற் போகவேண்டும்; அதனை நித்தமெனனில் அறிவானது தோற்றமுங் கேடுமில்லையாகவேண்டும். எ-று.

ஆன்மா அரு, உரு, அணு, நித்தம் என்பவற்றி லொன்றினும் அமையாமையால் இல்லையென மறுத்தது. (கஎ)

எங்குமாய் நின்ற தான்மா வென்றிடி
னெங்கு மின்றாந்
தங்கிடு நிறைவுதத்தஞ் சரீரங்க
டோறு மென்னின்
மங்கிடு முடலத்தோடே வடிவினி
லோரி டத்தே
அங்கது நின்றதென்னி லடிமுடி
யறிவின் றாமே.

(பொ-ரை.) ஓரான்மா எங்கு நிறைந்து நின்றதெனில் உடல்தோறும் பலபேதப் படுகையால் அது எங்கு முளதாகாது; ஆன்மாக்கள் தத்த முடல்கள் தோறு நிறைந்து நிற்குமென்று கூறில் உடல்கள் கெடும்போது தாமுங் கூடக்கெடவேண்டும்; அல்லது, ஆன்மா வுறுப்புக்களி லோரிடத்தே நின்றறியுமெனில் அவ்விடமன்றிப் பாதாதி கேசமளவாக அறிய மாட்டாது. எ-று.

ஆன்மா சம்பூரணனல்ல, சரீரவியாபியல்ல, ஏகதேசியல்ல ஆதலால் அஃதில்லையென்பதாம். (கஅ)

சாற்றிய காலமிங்குத் தங்கிய
வாறி தென்னை
தோற்றுவித் தளித்துப்போக்குந் தொழிலவை
கால மென்னிற்
போற்றிய பொருளிற்புக்குப் பிணங்கிடும்
பொருட்பி னின்றாம்
தேற்றிய வில்வழக்குத் திரவியத்
தியல்பி னுமே.

(பொ-ரை.) முற்கூறிய கால மிங்குநின்றபடி எப்படி? பதார்த்தங்களைத்தோற்றுவித்தும் நிறுத்தியும் போக்கியு நிற்பது கால மென்னில், அம்மூவகைப்பொருளுடன் காலங்கூடி

மயங்கும்; அப்பொருட்குக் கேடுவந்தாற் காலமுமில்லையாய் விடும்; பொருளியல்பு வேறுபாட்டைக் கால மென்றும் அது மூவகைப்படுமென்றுங் கூறுவது தெளிவையுடைய இல்வழக் கேயாம். எ-று.

பொருளியல்பாய வழக்கப்பெயரே கால மெனக்கற்பனை யாக வழங்குதலால் அஃதில்லையென மறுத்தது. (கக)

எனக்குக் கிழக்கிருந்தா யாகின்மேற்
கென்று யென்பால்
எனக்குமேற் கிருந்தானென்பாற் கிழக்கென
வியம்புந் திசுகுத்
தனக்குநாங் கொள்வதெப்பாற் சாற்றிடா
யில்வ ழக்குத்
தனக்குள தாகுமுண்மை தானில
தாகு மன்றே.

(பொ-ரை.) எனக்குக் கிழக்கில் நீ யிருந்தால் நானிருக்கு மிடத்தை மேற்கென்பாய்; எனக்கு மேற்கிலிருக்குமொரு வன் நானிருக்குமிடத்தைக் கிழக்கென்பான்; ஆதலால் திக்குக்கு எப்பகுதியை நாங் கொள்வது சொல்லாய்; தனக் குள்ளதாவதும் இல்லதாய் முடிதலால் திக்குண்டென்பது இல் வழக்காம். எ-று.

முற்கூறிய காலம், நிகழ்வு இறப்பாயும், எதிர்வு நிகழ்வாயு மிறப்பாயு மாறிக்கற்பனையாதல் போலத் திக்கும், கற்பனை யாகிய இல்வழக்காமென்று அதனை மறுத்தது, (உ0)

உலகினைப் படைத்தானென்று யொருவனிங்
குள்ள தாயின்
உலகினைப் படைக்கவேண்டா வில்லையேற்
படைக்க வொண்ணு
துலகினுக் குபாதானந்தா னுள்ளதாய்க்
காரி யத்தா
முலகினைப் படைக்கிலங்கு முளதில
தாவ தின்றே.

(பொ-ரை.) உலகத்தைப்படைத்தா னொருகர்த்தா வென் றாய்; இவ்வுலக முன்புள்ளதானல் இதனை ஒருவன் படைக்க வேண்டுவதில்லை. இவ்வுலக முன்பில்லதானல் படைக்க முடி யாது. உலகினுக்குக் காரணமுள்ள தாய்க் காரியங் கெடுமா தலால் காரியப்படு முலகினைப் படைத்தானென்று கூறில் உள்ளது மில்லதுமாக ஒருபொருளுண்டோ. எ-று.

உளதிலதாவதின்றே என்பது சமணம்போல அத்திநாத்தி வாத முண்டாக வேண்டு மென்றும் ஆகும். (உக)

உள்ளது கடாதிபோல வுதிப்பித்தா
னென்றுரைக்கின்
மெள்ளவே யெங்குநின்று விதித்தன
னுலகின் மீது
வள்ளரு னின்றுனென்னில் வந்ததா
முலக முன்னே
தள்ளிடா தெங்குநிற்கி லெங்குமுன்
றநீத தாமே.

(பொ-ரை.) குலாலன் மண்ணினின்று கடமுதலியவற் றைத் தோற்றுவிப்பதுபோல உள்ளதாகிய காரணத்தினின் றும் இவ்வுலகத்தை யொருவனுண்டாக்கினனென்று சொ ல்லினல், மெள்ள எவ்விடத்து நின்று கொண்டு உண்டாக்கி னன்; பிரபஞ்சத்திலே நின்று கொண்டு உண்டாக்கினனெ னில், பிரபஞ்ச முன்பாகவே யுள்ளதாகும். நீங்காம லெங் கும்நின்று உண்டாக்கினனென்று கூறில் எங்குமென்பதொரு முதலாய்க் கர்த்தாவைப்பின்பு தந்ததாம்.

பிரபஞ்சம் படைப்பவன் அதனை நீங்கி வேறே நிற்குமிட மில்லாமையால் கர்த்தாவில்லை யென்று னென்க. (உஉ)

இல்லது கருணையாலே யியற்றின
னிறைவ னென்னிற்
கொல்லரி புழுவைநாகங் கூற்றமுங்
கொண்டு தோற்ற
வல்லவன் கருணையென்னே வலியினல்
வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தானயிற் பித்தரைப்
பணிந்தி டாயே.

(பொ-ரை.) கர்த்தாவானவன் இல்லாத தொன்றைக் கரு ணையாலே படைத்தானென்று கூறின், கொல்லுந்தொழி லுள்ள சிங்கம், புலி, யானை, கூற்றம் முதலியவற்றையும் படைத்துக்கொண்டு தோற்றவல்லவனுக்கு என்ன கருணை யோ? தன்வல்லமையினல் வேண்டியதெல்லாம் ஆன்மாக் கள் வர்த்திக்கும்படி படைத்தானயில், அது பித்தர் செய்கை யோ டொப்பதாதலால் இனிப்பித்தரையே கர்த்தாவாக வண ங்குவாயாக. எ-று.

கருணையாற் படைத்தானென்பதும் பொருந்தாமையாற் கர்த்தாவில்லை யென்றுனென்பதாம். (உங)

மெறுவதிங் கென்படைத்துப் பெற்றது
விளையாட் டென்னிற்
சிறுமழ விறையதாகுஞ் செய்திடுங்
கன்மத் தென்னின்
உறுபெருங் கன்மஞ்செய்வோர் முன்புள
ராவ ருண்மை
அறிவுறின் ஞாலமெல்லா மநாதியென்
றறிந்தி டாயே.

(பொ-ரை.) இங்குச் சர்வான்மாக்களையும் படைத்துப் பெ றும்பயன் யாது? என்று கேட்டவிடத்து, படைத்தது விளை யாட்டென்று கூறில், கர்த்தா சிறுபிள்ளைத் தன்மையுடைய னுதல் வேண்டும். கன்மத்துக்கீடாகப் படைத்தானெனில்

கன்மஞ் செய்வோர் அநாதியாவர். இதனுண்மை யறியப் புகுந்தால் பிரபஞ்சமெல்லா மநாதியாகவுள்ள தென்றறிவாயாக. எ-று.

ஆன்மாக்களை யொருவன் விளையாட்டாகப் படைத்தானென்பதும், கன்மத்துக் கேற்கப்படைத்தானென்பதும்பொருந்தாமையால் கர்த்தாவில்லை யென்று மெனன்பதாம். (உச)

உருவொடு நின்றுனென்னி னுருவமுன்
படைத்தார வேண்டும்
உருவவ னிச்சையென்னி னுலகெலா
மிச்சை யாகும்
உருவுல கத்துளோர்கட் குறுவது
கன்மா லென்னின்
உருவுடை யோர்கட்கெல்லா முற்றது
கன்மத் தாமே.

(பொ-ள.) கர்த்தா உருபியென்று சொல்லின், அவ்வுருவத்தை முன்புண்டாக்கினோர் வேண்டும்; அற்றன்று, தன்னிச்சாமாத்திரத்தால் உருக்கொண்டானென்னில், உலகத்துள்ளோருந் தமதிச்சையாலே யுருக்கொண்டவராவர்; உலகத்தார்க்கு உருவம் வருவது கன்மத்தாலென்னில் உருவமுடையாரெல்லார்க்கும் அவ்வுருவம் வருவது கன்மத்தாலேயாம். எ-று. கன்மத்தாலென்பது கன்மாலெனத் தொகுத்தல் பெற்றது.

இது கர்த்தா அரு வென்பதை மறுத்துக் கூறிற்று. (உரு)

(தொடரும்.)

---

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞ்ஞானஸம்பந்தகுரவேநம:

## ஸ்ரீதாயுமான்சுவாமிகள் பாடலுரை.

---

(197-வது பக்கத்தொடர்ச்சி).

**சித்தர்கணம்.**

திக்கொடுதிகந்தமும் மனவேகமென்னவே
சென்றோடியாடி வருவீர்
செம்பொன்மகமேருவொடு குணமேருவென்னவே
திகழ்துருவமளவளாவி
யுக்ரமிகுசக்ரதர னென்னநிற்பீர்கையி
லுழுந்தமிழுமாசமனமா
வோரேழுகடலையும் பருகவல்லீரிந்த்ர
னுலகுமயிராவதமுமே
கைக்செளியபந்தா வெடுத்துவிளையாடுவீர்
ககனவட்டத்தையெல்லாங்
கடுகிடையிருத்தியே யட்டகுலவெற்பையுங்
காட்டுவீர்மேலுமேலு
மிக்கசித்திகளெலாம் வல்லநீரடிமைமுன்
விளங்கவருசித்தயிலிரோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

(இ-ள்) வேதாந்த சித்தாந்தங்களுக்குள்ள சமரச ஞான சித்தி பெற்ற சித்தர்கணமே! திக்குகளிலும், அவற்றின்முடிவிலும் மனோவேகம்போல விரைந்துசென்று, ஓடியும் விளையாடியும், வரவல்லீர்; செம்பொன்மயமான மேருமலையோடு ஈதொரு நற்குண மலையென்னும்படி யோங்கி, விளங்குகின்ற துருவ மண்டலவரையும் பரந்து, வேகமிக்க சக்கரத்தையேந்திய திரிவிக்கிரமன்போல நிற்கவல்லீர்; ஓரேழுசமுத்திர ஜலத்தையும், கையிலோருழுந்தமிழுமள வினதாகிய ஆசமன நீராகக்குடிக்கவல்லீர்; இந்திரலோகத்தையு மதிலுள்ள ஐராவதமென்னும் வெள்ளையானையையும் கைக்கெளிதானபந்துபோல விளையாட எடுக்கவல்லீர்; ஆகாயத்துள்ள எல்லா மண்டலங்களையுமொருகடுகிற புகட்டி, அஷ்டகுலபருவதங்களையுமதிற் காட்டவல்லீர்; மேலும் இவற்றினு மிக்கபல்சித்துகளையுஞ்செய்து காட்டவல்லீர்: (இத்துணைப்பெருஞ்சித்து வல்லபமுடைய நீர்) உம்மடிமையாகிய என்முன்கண்கூடாக எழுந்தருளுதற்கு மாத்திரம் வல்லமையில்லீரோ! எ-று.

இச்செய லுமக்குமிக எளிதேயாகலான் எழுந்தருளி வந்தருள் புரியவேண்டுமென்பது கருத்து. இவ்வாசிரியருக்கு ஆசிரியராகிய மௌனகுருமூர்த்தி 'மூலன்மரபில்வரு மௌனகுருவே' என்றபடி, திருமூலர் மரபினராதலாலும், அத்திருமூலதேவர் அணிமாதி சித்திகள் கைவந்தவராதலாலும் இங்கே சித்தர்கணத்தைத் துதிப்பாராயினர். வல்லீர் என்பதை முன்னும் பின்னுங்கூட்டுக. குணமேருமென்பதைக் 'குணமென்னுங் குன்றேறிநின்றார்' என்னுந் திருக்குறளாற்காண்க. துருவம்-அசையாதநிலை-ஆசமனம்-குடிநீர்; மும்முறைகுடித்தலால் முக்குடி நீரென்பர். வலக்கையிற்கோகன்ன (பசுவின் காது) முத்திரைகொண்டு ஒருழுந்தமிழுமளவு நீர் எடுத்துச் குடிக்க வென்பது விதி. எழு கடல்-எழு தீவையுஞ் சூழ்ந்த வேழுகடல். அவை சம்புத்தீவைச்சூழ்ந்த உவர்நீர்க்கடலும், சாகத்தீவைச்சூழ்ந்தபாற்கடலும், குசைத்தீவைச்சூழ்ந்த தயிர்க்கடலும், கிரவுஞ்சத்தீவைச்சூழ்ந்த நெய்க்கடலும், சான்மலித்தீவைச்சூழ்ந்த கருப்பஞ்சாற்றுக்கடலும், கோமேதகத்தீவைச்சூழ்ந்த தேன்கடலும், புட்கரத்தீவைச்சூழ்ந்த சுத்தநீர்க்கடலுமாம். அஷ்டகுல வெற்பின் விவரணத்தை சின்மயானந்தகுரு கக-வது செய்யுளுரையிற் காண்க. (க)

பாட்டளிதுதைந்தவளர் கற்பகநிழலைப்
பாரினிடைவரவழைப்பீர்
பதுமநிதிசங்கநிதி யிருபாரிசத்திலும்
பணிசெயுந்தொழிலாளர்போற்
கேட்டதுகொடுத்துவர நிற்கவைப்பீர்பிச்சை
கேட்டுப்பிழைப்போரையுங்
கோடீபதியாக்குவீர் கற்பாந்தவெள்ளமொரு
கேணியிடைகுறுகவைப்பீ
ரோட்டினையெடுத்தா யிரத்தெட்டுமாற்றுக்
கொளிவிடும்பொன்னாக்குவீ
ருரகனுமிளைப்பாற யோகதண்டத்திலே
யுலகுசுமையாகவருளான்
மீட்டிடவும்வல்லநீ ரென்மனக்கல்லையனன்
மெழுகாக்கிவைப்பதரிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே.

(இ-ள்) வேதாந்த..................சித்தர்கணமே! இசைபாடும்வண்டுகள் நெருங்கிவளர்கின்ற கற்பகவிருக்ஷத்தின்

நல்ல நிழலை யிவ்வுலகத்தில் வரவழைப்பீர்; பதுமநிதியும், சங்கநிதியுமிரண்டு பக்கத்திலும் ஏவல் செய்யுமடிமையாட்கள்போல நின்று கேட்டபொருளைக் கொடுத்துக்கொண்டு வரவழைப்பீர்; பிச்சைகேட்டு வாங்கி யுயிர்வாழ் வோரையு முடிமன்னராக்குவீர்; பிரளயகால வெள்ளத்தையொரு சிறிய குளத்திற் சுருங்கி நிற்கவைப்பீர்; மண்ணோட்டையெடுத்து ஆயிரத்தெட்டு மாற்றுப்பிரகாசமுள்ள பொன்னாக்குவீர்; ஆதிசேஷனு மிளைப்பாறும்படி யுலகத்தையோக தண்டத்தில் சுமையாய் நிற்கும்படி கிருபையினால் மீட்கவும் வல்லீர்; இத்தகைய பேராற்றலுடைய நீர் என்மனமாகிய கல்லை நெருப்பிவிட்ட மெழுகைப்போலுருகச் செய்து வைப்பது அரிதோ! எ-று.

இச்செயல் மிகவெளிதேயாதலால் அவ்வாறு செய்தருளல் வேண்டுமென்பது கருத்து. பதுமநிதி - தாமரையுருவாய்க் கிடக்கும்பொன்; சங்கநிதி - சங்குருவாய்க்கிடக்கும்பொன். இவையே (வேண்டியவற்றைக் கொடுக்கவல்ல) இருநிதிகளாம். சிறுகுளத்தைக் கேணியென்பது திசைச்சொல். (௨)

பாரொடுநன்னீராதி யொன்றொடொன்றாகவே
    பற்றிலயமாகுபோது
பரவெளியின்மருவுவீர் சற்பாந்தவெள்ளம்
    பரந்திடினதற்குமீதே
நீரினுறைவண்டாய்த் துவண்டுசிவயோகநிலை
    நிற்பீர்விகற்பமாகி
நெடியமுகிலேழும் பரந்துவருஷிக்கிலோ
    நிலவுமதிமண்டலமதே
யூரெனவிளங்குவீர் பிரமாதிமுடிவில்விடை
    யூர்தியருளாலுலவுவீ
ருலகங்கள்கீழ்மேல தாகப்பெருங்காற்
    றலாவினற்றாரணையினன்
மேருவெனவசையாம னிற்கவல்லீருமது
    மேதக்கசித்தியெளிதோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே.

(இ-ள்) வேதாந்த..................சித்தர்கணமே! நிலம், நீர், முதலிய பூதங்கள் ஒன்றிலொன்றாகத் தொடர்ந்து ஒடுங்குங் காலத்தில் பரமாகாசத்திலிருப்பீர்; பிரளயவெள்ளம் பெருகினால் அதற்குமேல் நீரில் வசிக்கும் வண்டுபோல் மென்மையாகிச்சிவயோக நிலையில் நிற்பீர்; பெரிய சப்த மேகங்களு மாறுபட்டு மிகுதியாகப் பெய்தால் அவற்றுக்கு மேல் விளங்குஞ் சந்திரமண்டலத்தை யிடமாகக்கொண்டு விளங்குவீர்; பிரமன் முதலானோர் முடியும்போது சிவபெருமானுடைய திருவருளாவழியாதுலாவுவீர். உலகங்களெல்லாங் கீழ்மேலாகும்படி பிரசண்ட மாருதம் வீசினால் நல்ல தாரணை யோகத்தால் மேருமலை போலச்சலிக்காமல் நிற்கவல்லீர்; உங்களுடைய சிறந்த சித்தித்திறங்களை யெடுத்துச்சொல்ல எம்மால் முடியுமோ! முடியாது. எ-று.

விசும்பிற் காற்றும், காற்றில் நெருப்பும், நெருப்பில் நீரும், நீரில் நிலமுமாகத்தோன்றிய பஞ்சபூதங்கள், தோன்றிய முறையேயொடுங்குமாதலால் "ஒன்றோடொன்றாகவே பற்றிலயமாம்" என்றது, "பிரமாதி முடிவில் விடையூர் தியருளாலுலவுவீர்" என்றதனால் "நூறுகோடி பிரமர்களுநுங்கினார் ஆறுகோடி நாராயணரங்கனே - ஏறுகங்கை மணலெண்ணிலிந்திரர் - ஈறிலாத னீசனொருவனே." என்னுமுண்மையும், "மாலயனுமிந்திரனும் வாழுவதாய் மாளுவதாஞ் - சாலமயல் பார்த்துந்தலையசைப்பர்." என்னுமுண்மையும் விளங்குதல்காண்க. உலகங்கள் தட்டழியுங் காலத்திலும் அசையாமனிற்கவல்லீர் என்பதை, "வானந்துளங்கிலென் மண்கம்பமாகிலென்..................ஒருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே." என்னும் ஆளுடையவரசுகள் திருவிருத்தத்தாற் காண்க. (௩)

எண்ணரியபிறவிதனின் மானிடப்பிறவிதா
    னியாதினும்மரிதரிதுகா
ணிப்பிறவிதப்பினு லெப்பிறவிவாய்க்குமோ
    வேதுவருமோவறிகிலேன்
கண்ணகனிலத்துநா னுள்ளபொழுதேயருட்
    ககனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழி யானந்தமுகிலொடு
    கலந்துமதியவசமுறவே
பண்ணுவதுநன்மையிந் நிலைபதியுமட்டுமே
    பதியாயிருந்ததேகப்
பவுரிகுலையாமலே கௌரிகுண்டலியாயி
    பண்ணவிதனருளினாலே
விண்ணிலவுமதியமுத மொழியாதுபொழியவே
    வேண்டுவேனுமதடிமைநான்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
    வித்தகச்சித்தர்கணமே.

(இ-ள்) வேதாந்த..............சித்தர்கணமே! அளவற்ற பிறப்புகளிலே மனிதப்பிறப்பு எதினுமிகவரியது; இப்பிறவி தவறினால் எப்பிறவிவந்து நேருமோ! அதில் என்னதுன்பமுண்டாமோ! அறியமாட்டேன். ஆதலால் இடமகன்ற இப்பூமியில் நானிருக்கும்போதே திருவருளாகிய ஆகாச மண்டலத்தினின்றுங் காலிறங்கி யின்பமழையைப் பொழிகின்ற சிவமாகிய மேகத்தோடு கலந்து, என்னறிவு பரவசப்படும்படி செய்வது நன்மையாகும்; இந்நிலையிலழுந்துகிற வரையும் எனக்கிடமாயிருந்த தேகத்தினது கட்டுக்குலையாமல் கௌரியாகிய குண்டலி சத்தியென்னுந் தேவியருளால், மேலேவிளங்குஞ் சந்திரனிடத்திலுள்ள அமுததாரையானது இடையறாது பெய்யும்படி யுமது அடிமையாகிய நான் வேண்டுகின்றேன்- (அவ்வாறு அருள்புரிவீராக.) எ-று.

"உண்டுபல் யோனியெல்லா மொழித்து மானிடத்துதித்தல் கண்டிடிற்கடலைக்கையா னீந்தினன் காரியங்காண்." என்பதனால் 'மானிடப்பிறவி யரிதரிது'என்றார். வேறுபிறவிகளிற் சிவத்தோடு அத்துவிதமாகக்கலக்கின்ற ஞானத்துக்கும், அதற்கேதுவாகிய யோகத்துக்கும் ஏற்றகருவிகளமைந்திலவாதலின் 'உள்ள பொழுதே' என்றார். பவுரி - ஓர்வகைக்கூத்து; கூத்துபலவங்கங்களின் சேர்க்கையுள்ளதாதலால் இங்கே கட்டென்று பொருள் கொள்ளப்பட்டது. 'தேகப்பவுரி குலையாமல்' என்றதனால் தேகத்திலோரங்கங் குறையினும் யோகப்பயன் முற்றுப்பெறு வென்பதாயிற்று. குண்டலிசக்தி - மூலாதாரத்தில் பாம்புருவமாயிருப்பதாகிய வோர்சத்தி. (௪)

(தொடரும்.)

# உண்மை விளக்கம்

எனும்

## சித்தாந்த தீபிகை.

1898ளு மார்கழி


உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநசம்பந்தகுரவேநம:.

## திருக்கோயில் வழிபாடு.

(118-வது பக்கத்தொடர்ச்சி).

இன்னும், "అణోరణీయాన్ మహతో మహీయాన్" என்று ஆரம்பித்தபத்தாவது அநுவாகத்தில், "మహోమహీయాం" என்று பிரஹ்மத்தை ஈசஸப்தத்தால் விளக்கி, அது முடிந்தவிடத்தில் "యఃపరస్స మహేశ్వరః" என்று விசிதப்படுத்தி யிருக்கின்றது. இதனல், ஈஸமஹேஸஸப்தங்களால் பிரதி பாதிக்கப்படும் பரம்பொருள் அணுவாகவும், மஹத்தாவும் ரூபபரிமாணங்களைக் கொண்டு விளங்குந்தன்மை பிரஸித்தமாயிற்று. இவ்வுண்மையையே (அருமறையினகத்தானையணுவை) எனவும், (கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற பெரியானை) எனவும்போந்த திரவிடஸூக்தியில் (அணுவை, பெரியானை) என்னும் பிரயோகங்கள் வெளியாக்கின. அன்றியும, (அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெல்லா-மண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினனும்) என்றமேலோரநுபவவுரையுஞ் சான்றும. இதனல், பரனுக்குச் சிறியவுருவும், பெரியவுருவும் பிரஸித்தமாயின.

பஞ்சபிரஹ்மோபநிஷத்தில், "అకారాదిస్వరాద్యఙ్గ మాకాశమయ విగ్రహం" என்று பிரஹ்மங் கேட்கப்படுகின்றமையால், ஆகாசமயமான தேகமுள்ளது அதுவென்று நிச்சயிக்கப்படுகின்றது. இதனல், பரனை விக்கிரமாக அறிவது கூடாது என்பவர்மதம் அவைதிகமாயிற்று.

அன்றியும், பிரஹ்மவல்லியில் "తస్యయజురేవశిరః, ఋగ్దక్షిణఃపక్షః, సామోత్తరఃపక్షః, అథర్వాఙ్గిరసఃపుచ్ఛంప్రతిష్ఠా" என்று கூறினமையால், வேதங்கள் சிவனுடைய அவயவங்களெனவும், அவை சிரஸ்ஸு முதலாயினவெனவும் ஏற்படுகின்றது. சிரஸ்ஸு - பக்கங்கள் - புச்சம் இவைகளைக்கொண்ட தொருபொருளை அங்கவிஹீனமானது என்று எங்ஙனங்கூறலாம்? அன்றியும், சுருதியில் "రుద్రత్తేదక్షిణముఖం తేనమాంపాహినిత్యం" என்று கூறப்பட்டமையால், பிரஹ்மத்துக்குத் தக்ஷிணமுகங் கேட்கப்படுகின்றது. தெற்குமுகம என்று வியவஸ்தையுண்டாயினபிறகு அதற்கு உருவமில்லையென்று சொல்ல யாவரால் முடியும்? இது காறும் எடுத்துக்காட்டிய பிரமாணங்களால் பிரஹ்மத்துக்கு உமாஸ்ஹாயத்வமுதலிய ரூபங்களும், விசுவரூபம் - ஹிரண்மயரூபம் - அங்குஷ்டரூபம- அணுரூபம் - விபுரூபம். -ஆகாசமயரூபம் - அரூபம் - இத்யாதிகள் வெளியாயினமையால், இத்தகைய எல்லா வடிவங்களும் அப்பரனது ஸ்திரமான அருள்வடிவங்களென்று அறியவேண்டியது. இதற்கு "స్థిరేభిరంగైః పురురూపఉగ్రః" என்னுஞ் சுருதியே சான்றும். உக்கிரநாமத்தையுடைய சிவன் ஸ்திரமான அவயவங்களும், அநேகமான ரூபங்களுங் கொண்டிருக்கின்றாரென்று வெளிப்பட்ட சுருத்யர்த்தத்தை யுணர்ந்தபேர்களுக்கு வீண் ஸந்தேஹவிபரீதங்களுண்டாகமாட்டா. நஸ்வரமில்லாத அவயவங்களும், எண்ணிறந்த திருமேனிகளும் உடையது பிரஹ்மம் என்று சுருதிகள் கோஷிக்கின்றமையால், பரனுக்கு உருவமில்லை அருவமேயுளது என்று சாதிப்பாருரை சழக்குரையாக முடிந்தது.

இனி, அந்தப்பரனை அர்ச்சாபிம்பங்களில் ஆராதிப்பதற்கு வேதத்தில் ஆதரவு கிடையாது என்று பிணங்கிக்கூறும் பெரும்பித்தையும் பெயர்த்தெறிவாம்.

"తవశ్రియే మరుతో మర్జ- యన్తరుద్రయత్తేజ నిమచారుచిత్రం, పదంయద్విష్ణోరుపమన్యధాయితే నపాసిగుహ్యం నామగోనాం" என்னும் ருக்ஸம்ஹிதா வாக்கியத்தால் ஸமஸ்த தேவர்களும் சிவலிங்காராதனத்தால் தங்கள் ஐசுவரியங்களை அடைந்தார்களெனவும், லட்சுமீஸமேதராகிய விஷ்ணுவானவர் சிவலிங்கபூசைசெய்து பரமபதத்தை அடைந்தார் எனவும் பெறப்படுகின்றது. இதனுண்மையை விளக்கும் உபப்பிரஹ்மணமாகிய பிரஹ்மகைவர்த்தத்தில் "రౌద్రంసమభ్యర్చ్యహిలిఙ్గమాదౌ, శిలామయంచారు హరిస్తుభక్త్యా, సుదుర్లభం వైష్ణవమాద్యమర్త్య మవాప్తవానేష పరంపదంతత్" என்னும் வசனத்தால் இந்தவிஷ்ணுவானவர் ஆதியில் சுந்தரமாகவும், சிலா

மயமாகவு மிருக்கின்ற சிவலிங்கத்தைப் பூசித்து ஸர்வோத்கர்ஷமாகிய பரமபதத்தை அடைந்தாரென்று வெளிப்படுகின்றது. மூலமும், அர்த்தமுமாக வெளிப்பட்ட வேதவாக்கியமும், புராணவசனமும் ஸப்பிரமாணமாயின். இவற்றால் சிவலிங்கார்ச்சனை பசுமரத்தாணியறைந்தாற்போல நாட்டப்பட்டது. தேவர்கள் சிவபூசைசெய்தார்கள், விஷ்ணு சிவபூசை செய்தார் என்று வேதத்திற்றானே முழங்கப்படுகின்றமையால், அர்ச்சைக்கு வேதத்தில் ஆதரவு கிடையாது என்பவர்துணிவு துணிக்கப்பட்டது.

வைப்பலாதசுருதியில், "సోవామపార్శ్వాద్భుత విష్ణుర్నేత్ర, తస్మైదదౌ చక్రమతీవహృష్టః, తస్మైరుద్రాయ నమోఅస్తు" என்னும் வசனத்தால் விஷ்ணுவால் சிவார்ச்சனை செய்யப்பட்டதாக ஏற்படுகின்றது. இந்தச் சுருதியாலும் அர்ச்சாராதனம் விசிட்டபுருடராகிய விஷ்ணுவினிடங் கேட்கப்படுகின்றது. விஷ்ணுவுக்கே அது கௌரவயோக்யமாகுமெனின், ஏனைப்பசுக்களுககுக் கௌரவத்தை யுண்டுபண்ணுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இதனால், சிவார்ச்சனையில்லாதவர் கௌரவஹீனரென்பது தானேபோதரும்.

பஸ்மஜாபாலத்தில், "లింగరూపిణం మాంసం పూజ్యచింతయంతి, యోగినస్సిద్ధాసిద్ధింగతాయజంతి, యజ్వానోమామేవస్తువంతి, వేదాస్సాంగాః స్సవోపనిషదస్తేతి హాసాసహితోస్యదహమేవ సర్వంమ్మయి సర్వంప్రతిష్ఠితం, తతఃకాశ్యాంప్రయాత్తె రేహమన్వహం పూజ్యస్తత్రగణారుద్రానానాః, నానానఖానానాశస్త్రిధారిణో నానా రూపధరా నానాచిహ్నితాస్తే సర్వేభస్మదిగ్ధాంగా రుద్రాక్షాభరణాః కృతాంజలయోనిశ్య మభిధ్యాయంతి, తత్రపూర్వస్యాందిశి బ్రహ్మాకృతాంజలిహనిశముపాస్తే, దక్షిణాయాం దిశివిష్ణుః క్రత్తై పమూర్ధం జలిముపాస్తే, ప్రతీచ్యామిన్ద్రస్సన్నతాంగ ఉపాస్తే, ఉదీచ్యామగ్నికాయ్యామాముపాస్యతే" என்னும் வசனங்களால் இலிங்கவடிவமாகிய என்னை நன்குபூசித்து யோகிகளுஞ் சித்தர்களுஞ் சிந்திக்கின்றார்கள். சித்தியை அடைகின்றார்கள். தீக்ஷிதர்களும் என்னையே யஜனஞ்செய்கின்றார்கள். ஸாங்கங்களான வேதங்களும், ஸர்வோபநிஷத்துக்களும், இதிஹாஸத்துடன் என்னையே துதிக்கின்றன. என்னைத்தவிர வேறொரு பதார்த்தமுமில்லை. நானே சகலமுமாயிருக்கின்றேன். என்னிடத்திலேதானே சகலமுமிருக்கின்றன. அதனால், காசியில் மரணவிச்சை யுடையவரால் இரவும் பகலும் நானே பூசிக்கவுரியவனாகின்றேன். அவ்விடத்தில் பயங்கரமான முகங்களுள்ள கணங்கள் நாநாவிதமான நகங்களுள்ளனவும், நாநாவிதமான சஸ்திரங்களைத் தாங்கினவும், நாநாவிதமான ரூபங்களைத் தரித்தனவும், நாநாவிதமான அடையாளங்களைப் பெற்றனவுமாக இருக்கின்றன. அந்தக்கணங்கள் யாவும் விபூதிதாரணஞ் செய்து கொண்டிருப்பனவும், ருத்ராக்ஷமாலிகாபரணம் பூண்டனவும், அஞ்சலி கூப்பினவுமாகி நித்தியம் அபித்தியானஞ் செய்துகொண்டிருக்கின்றன. அவ்விடத்தில் பூர்வதிக்கில் பிரஹ்மாவானவர் அஞ்சலி செய்துகொண்டு இரவும்பகலும் என்னையே உபாசித்துக்கொண்டிருக்கின்றார், தென்றிசையில் விஷ்ணுவானவர் சிரசில் அஞ்சலி கூப்பினவராகி உபாசித்துக்கொண்டிருக்கின்றார். மேற்குத்திக்கில் இந்திரன் வணக்கத்துடன் உபாசித்துக்கொண்டிருக்கின்றான். வடதிசையில் அக்னிவடிவத்தையுடைய உருத்திரர் என்னை உபாசித்துக்கொண்டிருக்கின்றார்கள் என்று சிவபெருமான் அருளிச்செய்தவுண்மை வெளியாயிற்று. இந்த வுபநிஷத் பிரமாணத்தால் சிவலிங்கோபாஸனையும், காசிக்ஷேத்திர வைபவமும், அங்கே உபாசித்துக்கொண்டிருக்கும் உபாஸகர் இவரென்பதும், அவர்கள் யோக்கியதையும், அங்கு உபாஸ்யராயுள்ளவர் சிவனென்பதும் வியக்தமாயின. அர்ச்சாபிம்பம் வைதிகமோ? அவைதிகமோ? இனியேனுங் கூர்ந்து யோசிக்கட்டும். அர்ச்சையை மாத்திரமேயன்றி அது பிரதிஷ்டிக்கப்படும் இடத்தையுங் கூட வேதஞ்சொன்னமையால், அர்ச்சையையும், திவ்ய க்ஷேத்ரங்களையும் நிந்திப்பவர்கள் வேதபாஹ்யரென்னத்தட்டில்லை.

பஸ்மஜாபாலத்தில், "అహరహరభ్యర్చ్య విశ్వేశ్వరలింగం తత్రరుద్రసూక్తైరభిషిచ్యతి దేవస్య స్నపనంపయస్త్రిః పీత్వా మహాపాతకేభ్యోముచ్యతే, నశోకమాప్నోతిముచ్యతే. సంసారబంధనాత్ తదనభ్యర్చ్యనాశ్నీయాత్. ఫలమ్మన్న మన్యద్వాయద్నశ్నీయాద్రేతోభక్షీ భవేత్" என்னும் வசனத்தால் பிரதிதினமும் விசவேசலிங்கத்தைப் பூசித்து, அதில் ஸ்ரீருத்ரஸூக்தங்களால் அபிஷேகஞ்செய்து, அந்த அபிஷேகஜலத்தை மூன்றுதரம் பானஞ்செய்தவன் மஹாபாதகங்களினின்றும் விடுபடுகிறான். அவன் சோகத்தை அடையமாட்டான். அன்றியும், ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுகிறான். யாரும் அந்த இலிங்கத்தைப் பூசியாமல் புஜிக்கக்கூடாது. சிவநிவேதிதமன்றியில் அவைகளை ஒருவன் புஜிப்பானாகில், ரேதஸ்ஸையே புஜித்தவனாகிறான் என்று வெளியாகின்றது. இதில் சிவலிங்கார்ச்சனையும், அர்ச்சிக்கவேண்டிய விதியும், சிவநிர்மாலிய ஸ்வீகாரமும், இவைகளைக் கொள்ளாத

போது பிரத்யவாயமுஞ் சொல்லியிருக்கின்றது. அன்றியும், முன்சுருதியிற் கூறியபடிக்கா சிக்ஷேத்திரமும், அங்குள்ள ஸ்வாமிதிருநாமமும்வியக்தம். இவ்வளவு பிரஸித்தியை வேதமூலகத்தால் அடைந்திருக்கின்ற அர்ச்சாமார்க்கத்தை எங்ஙனே கைவிடுவது? இதனால், கைவிடுவது கீழ்மக்களுக்கே சிறக்கும்.

பிருஹஜ்ஜாபாலத்தில், "ధిగ్భస్మరహితం ఫాలం, ధిగ్గ్రామమశివాలయం, ధిగనీశార్చనంజన్మ, ధిగ్విద్యామశివాశ్రయాం" என்னும் வசனத்தால் பஸ்மமில்லாத நெற்றியைச்சுடு. சிவாலயமில்லாத கிராமத்தைக் கொளுத்து. சிவபூசையில்லாத ஜன்மத்தைச்சுடு. சிவஸ்வரூபமில்லாத வித்தையைச்சுடு என்று பெறப்படுகின்றது. இந்த வுபநிஷத்தினது அர்த்த வைபவமாகத் "திருக்கோயிலில்லாத திருவிலூருந் - திருவெண்ணீறணியாத திருவிலூரும் - பருக்கோடிப் பத்திமையாற் பாடாவூரும் பாங்கினொடு பலதளிகளில்லாவூரும் - விருப்போடு வெண்சங்க மூதாவூரும் - விதானமும் வெண்கொடியு மில்லாவூரும் - அருப்போடு மலர்பறித்திட்டுண்ணாவூரும் - அவையெல்லா மூரல்ல வடவிகாடே" என்று கைவத்தலைவருங் கூறியிருக்கின்றனர். சிவபூசையில்லாத ஜன்மத்தையும், சிவாலயமில்லாத கிராமத்தையுஞ்சுட வேதம்விதிக்குமானால், அவற்றை நிந்திக்கின்ற பேரடையுங்கதியை யாம் சொல்லவும் வேண்டுமோ? எமக்கும் வேதம்பிரமாணம் என்று அதை அநுஸரித்துவருவோர் அதற்கு அஞ்சிவாழவேண்டியது.

ருக்ஸம்ஹிதையில் "తముష్టుహియస్స్విషుస్సుధన్వాయో విశ్వస్యక్షయతిభేషజస్యయక్ష్వామహే సౌమనసాయరుద్రం నమోభిర్దేవమసురందువస్య" என்னும் மந்திரத்தால் அந்த வுருத்திரமூர்த்தியை ஸ்தோத்திரஞ்செய்க வெனவும், யாவன் விஷ்ணுவாகிய பாணத்தைத் தரித்தவனோ? யாவன் மேருவாகிய கோதண்டத்தை ஏந்தினவனோ? யாவன் ஸகல பிரபஞ்சத்தினுடைய ஜீவநௌஷதமாக ஆசரிக்கத்தக்கவனோ? அந்தவுருத்திரபகவானைக்குறித்து உத்ஸவகாலத்தில் திரவியத் தியாகஞ்செய்கவெனவும், பிராணதாதாவாகிய அவ்வமலநாயகன்பொருட்டுஸாஷ்டாங்காதி மோக்ஷஸித்யர்த்தமாக நமஸ்காரங்களால் வழிபடுகவெனவும் விதிக்கப்பட்டிருக்கின்றது. இதில், பரனது கையில் பாணமும், வில்லும், அவனது ஸ்தோத்திரமும், உத்ஸவமும், நமஸ்காராதிபூசைகளுங் கேட்கப்படுகின்றன. இதனால், அப்பெரியோனுக்கு மங்கலவடிவமும், அவனது அர்ச்சனையாதி விபவமும் ஸித்திக்கின்றன.

இத்தகைய வுண்மைகளை நம்மனோர் இதுகாறுங்கேட்டறிந்திலர். என்செய்வார்பாவம்!

எஜுஸ்ஸாகையில், "నిధనపతయేనమః నిధనపతాన్తికాయనమః ఊర్ధ్వాయనమః ఊర్ధ్వలింగాయనమః హిరణ్యాయనమః హిరణ్యలింగాయనమః, సువర్ణాయనమః సువర్ణలింగాయనమః, దివ్యాయనమః దివ్యలింగాయనమః, భవాయనమః భవలింగాయనమః, శర్వాయనమః శర్వలింగాయనమః, శివాయనమః శివలింగాయనమః, జ్వలాయనమః జ్వలలింగాయనమః, ఆత్మాయనమః ఆత్మలింగాయనమః, పరమాయనమః పరమలింగాయనమః, ఏతత్సోమస్యసూర్యస్య సర్వలింగంస్థాపయతి పాణిమంత్రంపవిత్రం" என்னும்வசனங்களைப் பரியாலோசிக்கையில், சிவலிங்காராதனமானது பரபிரஹ்மத்தினது ஸ்வரூபவிஷயமெனவும், அது சுருதிநிஷ்டமான நமஸ்காரபூர்வகமானதெனவும் வெளியாகின்றது. பவித்திரமாகிய பாணிமந்திரத்தால் ஸ்தாபிக்கத் தக்கதெனவும் அது சிறத்தலால், பூர்வபட்சிகள் சிவலிங்கோபாஸனை வேதத்திற் கேட்கப்படவில்லை யென்று செய்யும் பிரஸ்தாபம் வெறுங்கோஷமாயிற்று.

ஜாபாலசுருதியில் "రుద్రభుక్తంభుంజీతం రుద్రపీతంపిబేత్, రుద్రాఘ్రాతం జిఘ్రేత్, రుద్రేణాత్తమశ్నంతి, రుద్రేణ పీతంపిబంతి, రుద్రాఘ్రాతం జిఘ్రంతి, తస్మాద్బ్రాహ్మణాః ప్రశాంతమనసో నిర్మాల్యమేవ భక్షయంతి" என்னும் வசனத்தால் ருத்ரபுக்தமாகிய பிரஸாதத்தையே புஜிக்கவேண்டுமெனவும், ருத்ரபீதமாகிய ஜலக்ஷீராதிகளையே பானம்பண்ணவேண்டுமெனவும், ருத்ராக்ராதமாகிய கந்தபுஷ்பாதியே ஆக்ராணிக்க வேண்டுமெனவும் பெறப்படுகின்றது. இது லிங்கார்ச்சனமேயன்றி வேறில்லை. சிவார்ப்பிதமாகாத வொன்றினையுங் கிரகிக்கக்கூடாது என்று இதனாற்றுணியப்படுதலால், நம்மவர் பேசிவரும் வீண்விபரீதம் தலைக்காட்டாதொழிந்தது. இதனை வற்புறுத்திக்கூறும் வேறு சுருதியையுங் காட்டுகின்றேம்.

ருக்ஸம்ஹிதையில், "అంతరిక్షంతిష్ఠంతంజనేరుద్రం పరోమనీషయాఘ్నంతిజిహ్వయాగృహ్ణంతివసం॥" என்னும் வாக்கியத்தில் ஜநங்களிடத்து அந்தரியாமியாக நிற்கும் பரனாகிய அந்த வுருத்திரனைப் புத்தியினால் உள்ளே பற்றுபவர்கள் ஸஸ்யத்தை நாவினால் கிரகிப்பர்கள் என்று கூறப்படுகின்றது. இதனால் அந்தவுருத்திரனை உள்ளே பற்றாதவர்கள் மலத்தையே நாவினாற் கிரகிப்பர்கள் என்று அப்பிரஸ்துத பிரஸம்ஸாலங்காரத்தாற் பெறப்படுகின்றது. இதனால், உருத்திரமூர்த்தியை அர்ச்சிக்கின்றவர்களே உருத்திர நிவேதிதமாகிய

அன்னத்தையுண்பவர்களெனவும், உருத்திரமூர்த்தியை அர்ச்சியாதவர்கள் பகவதர்ப்பிதமாகாத அன்னத்தையுண்ணுகையால், மலத்தையே நாவினல் கிரகிப்பவர்களெனவும் நிச்சயிக்கப்படுகின்றது. இதற்கு உபப்பிரஹ்மணமாக "అంత్ర్ణచ్ఛంతిమేరుద్రం భవాన్సహితం శివం, పురీశమేవగృష్ణంతిజిహ్వయాతేనసంశయః" என்று பராசரஸ்மிருதியிற் போந்தமையுங் கண்டுதெளிக. இந்தவுண்மையால் சிவபூசையில்லாதவர்கள் மல போஜனஞ்செய்பவர்கள் என்றுகொண்டவேதத்தின்றுணிபு வெளிப்பட்டது. வேதத்தால் தாங்கள் நிந்தித்தொதுக்கப்படுதலறியாது பூர்வபட்சிகள் பிறரை நிந்திப்பது குருட்டரிப்பாளன் குபேரனைப்பழிப்பது போலாம்.

ஈசாவாஸ்யத்தில், "ఈశావాస్యమిదంసర్వం యత్కించజగత్యాంజగత్; తేనత్యక్తేనభుంజీథా మాగృధఃకస్యస్విద్ధనం" என்னும் வாக்கியத்தால் ஈசனது பூசையில் அர்ப்பிக்கப்பட்டு, அவருண்டருளிய சேஷத்தையேதுய்க்கவேண்டியது என்று வெளியாகின்றது. இந்தமந்திரம் நமது பூர்வபட்சிகள் பிரமாணமாகத்தேடிய பகுதியிலடங்கினதேயன்றி வேறில்லை. அவர்கள் அதனை முற்றும் பார்த்திருந்தால் விண்விவகாரத்தில் தலையிட்டுக்கொள்ளார்கள். அஃதின்மையே அவர்க்கு வீண் பிரவர்த்தகம் உசிதமாயிற்று.

(தொடரும்.)

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்..

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுரவேநம:.

## ஸ்ரீஹரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரம்.

(172-வது பக்கத்தின் தொடர்ச்சி)

இவ்வாறு இருக்குங்கால் சிவபிரானுரது வாயிற்காவலாளரும் கபிமுகத்துக்குச் சமானமாகிய பிரகாசத்தை யுடையரும், அயோநிசரும், தபசிலே சித்தியுடையரும், சாலங்காயன கோத்திரருமாகிய நந்திபெருமான் கொடுந்தபசு செய்பவராகிய விஷ்ணுவைப் பார்த்து வந்து, சிவபிரானுரை நமஸ்கரித்து, சுவாமீ! உமது ஸ்தானத்திலே விஷ்ணுவானவர் "நான் என்செய்வேன்! என்று மனசிலே மெலிவுகொண்டு எப்பொழுதும் கவற்சியோடு அநேக கோடி வருஷங்களாக உக்கிரமாகிய தபசுசெய்து கொண்டிருக்கின்ருர்" என்று விஞ்ஞாபனஞ் செய்தார். இதனைச் சிவபெருமான் கேட்டு முகமலர்ச்சிகொண்டு உமாசமேதராய், ரிஷபாரூடராய், பிரமதகணங்கள் புடைசூழப் பெற்ருேராய், பிரமாதி தேவர்கள் துதிப்ப, தேவர்களெல்லாம் வந்திப்ப, விஷ்ணு தபசு செய்யும் ஸ்தானத்திக்கு எழுந்தருளி, அவ்விஷ்ணுவை நோக்கி, "குழந்தையே! உனது தபசுகண்டு பிரீதிகொண்டு உனக்கு வரங்கொடுக்குமாறு வந்தேம், எமது பக்தருக்குத் துரோகஞ் செய்தவை சந்தேகமில்லாது எமக்குச் செய்தது போலாயிற்று. இப்போது நீ செய்த தபசினுலே எமக்குச் செய்த துரோகம் நீங்கிப்போயிற்று. எமது அன்பராகிய பிருகுவுக்குச்செய்த துரோகம் இருந்தபடியே இருப்பதாயிற்று. நீதபஞ்செய்து அத்துரோகத்தை நீக்குதற் குரியஸ்தலத்தை இப்போது சொல்கின்றேம் கேள்: பூலோகத்திலே காவேரிக்கு வடகரையிலே கஞ்சாபுரம் எனப் பெயரியபரமபாவனமாகிய க்ஷேத்திரம்ஒன்றுளது. நீஅங்கேயுள்ளகஞ்சாபுரீசுவரரை உத்தேசித்து நெடுங்காலந்தபசு செய்வாயேல் உன் சாபம் நீங்கிவிடும் என்று திருவாய் மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினுர்.

(எ) விஷ்ணு கஞ்சாபுரத்தை அடைந்து தவஞ்செய்தமையும் பிறவும் வருமாறு:— விஷ்ணுவானவர் உடனே சிவபிரானை வணங்கிக்கொண்டு கஞ்சாபுரத்தை மகிழ்வினேடு அடைந்து அப்பிருகு முனிவரிட்ட சாபம் நிவாரணமாகும் பொருட்டு, திரிகாலமும் கஞ்சாபுரீசுவரரைப்பூசை செய்து, பஞ்சயஞ்ஞங்களையுஞ் செய்து கொண்டிருந்தார். (அதுவன்றி) திரிகாலமும் ஸ்நானஞ் செய்து வற்கலையை உடுத்தவராயும் சடாதாரராயும், விபூதியை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவுந் தரித்தவராயும், ருத்திராக்ஷமாலை அணிந்தவராயும், பஞ்சாக்ஷரசெபஞ் செய்பவராயும், கந்தமூலபலங்களையும், ஜீர்ணபர்ணத்தையும்,சாகைகளையும், சலத்தையும்,வாயுமுதலியவற்றையும் பக்ஷணஞ் செய்பவராயும், ஜிதேந்திரியராயும், போசனஞ் செய்யாதவராயும் சூரியனைப் பார்த்த பார்வையுடையராய்க் கிரீஷ்மகாலத்திலே பஞ்சாக்கினிமத்தியிலே நிற்பவராயும், வர்ஷகாலத்திலே மைதானத்திலே நிற்பவராயும், ஏமந்தகாலத்திலே காவேரி நதியிலே கழுத்தளவினதாகிய சலத்திலே நிற்பவராயுங் கொண்டு, கைகள் இரண்டையும் நிராலம்பமாக உயர்த்தி, உச்சுவாசமின்றிக் கஞ்சாபுரீசுவரருடைய திருவருளைப் பெறுமாறு யகா தபசு செய்வாராயினுர். இவ்வாறு இவர் உக்கிர தபசு செய்யுங்கால் நெடுங்காலஞ் சென்று போய்விட்டது. அவருடைய பிரமாந்திரத்தினின்றும் உண்டாகிய அக்கினியானது மூன்று லோகத்தையுந் தகிக்கத்தொடங்கிவிட்டது. தொடங்கவே, மூவுலகத்து முள்ள தேவர் அசுரர் மனிதராயினேரெல்லாம் அவ்வக்கினிச் சுவாலையினுலே வருந்திக் கவலை யுற்ருர். அப்போது தேவர்களெல்லாம் ஒருங்குகூடி பிரமாவை அடைந்து பூசித்துத் துதித்து வணங்கித்தங்கள்விருத்தாந்தத்தை விஞ்ஞாபித்தார்கள் அப்போது பிரமா தேவர்களை அழைத்துக்கொண்டு ஸ்ரீகைலாசத்தை அடைந்து, சிவபிரானைப் பன்முறையும் நமஸ்கரித்து,விஷ்ணுவுடைய தபாக்கினிச் சுவாலையினுலே உலகம் அனைத்தும் வருந்துகின்றது. "சுவாமீ! எங்களை ரக்ஷிக்க" என்று வேண்டினுர்கள். அதனைக்கேட்டுக் கொண்டு அக்கினி துல்லியராகிய சிவபிரான் இஷபாரூடராய்ப் பிரமாதி தேவர்கள் சூழ்ந்து செல்ல விஷ்ணுதவஞ் செய்யுந் தானத்தை அடைந்து "விஷ்ணுவே! எழுந்திரு, உன் தபசினுலே பிரீதி கொண்டேம், உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று கம்பீரமாகிய திருவாக்கினுலே உரைத்தருளினுர். அது கேட்டு விஷ்ணு எழுந்து நின்று, சிவபிரானை நம

ஸ்கரித்து, சிரேஷ்டப் பிரமாணமாயுள்ள சுருதிகளை மூலமாயுடைய வாக்கியங்களினலே ஸ்தோத்திரஞ் செய்து, உரோமாஞ்சங் கொண்டு, ஆனந்தக் கண்ணீர் வார, வாக்குத் தழுதழுப்ப, பூமியிலே விழுந்து, சுவாமீ! யான் இந்திரனுடைய சொல்லுக் கிசைந்து பிருகுமுனிவருடைய பத்தினியாரை வதைத்து விட்டேன். அப்பத்தினியார் வதை செய்யப்பட்டமையை அறிந்த பிருகுமுனிவரானவர் கோபங்கொண்டு மற்ச, வராக, கூர்ம முதலிய அநேக கீழ் யோனிகளிலே நான் போய்ப் பிறக்குமாறும் அநேக சென்மங்களிலே ஸ்திரீவியோகம் எய்து மாறும் என்னைச் சபித்துவிட்டார்சுவாமீ! அந்தப் பிருகுமுனிவரிட்ட சாபத்தினலே மிகவும் கஷ்டம்அடைந்து விட்டேன். இதுவன்றி, பிரபுவே! என்னை உபாசிக்கும் ஏகதண்டியுந் திரிதண்டியுமாம் இரு சந்நியாசிகளைத்தரிசித்தவர்களும் பாஷண்டிகளாய்ப் போமாறு சபித்துவிட்டார். அந்தச் சந்நியாசிகளுக்குச் சயனம் ஆசனம் வஸ்திரமுதலிய உதவி ஆதரிக்கின்றவர்களையும் மகாரௌரவாதி நரகங்களிலே போமாறு சபித்தார். பஞ்சபூதங்கள் அழியுங்காலவரையும் நான் பத்து வகைப்படும் கொடிய நரகயாதனை அடையுமாறு கோபாவேசத்தோடு அதட்டிச் சபித்து விட்டார். ஆதலால் எனக்கு வேறுகதி ஒன்றும் காணேன். உமது பாதார விந்தங்களையே சரணென்று அடைந்தேன். ஆதலால் என்னை இந்தத்துன்பசாகரத்தினின்று கரையேற்றி யருளல் வேண்டும் என்று விஞ்ஞாபிக்கும் போது, சிவபிரான் அவரை அணைத்து மீட்டும் மீட்டும் உச்சிமோந்து அஞ்சற்க! அஞ்சற்க!! என்று பத்தனுடைய சாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிது. எம்மாலும் மாற்றுதல் அரிது, அங்ஙனமாயினும்; எமது அருளினல் உனக்கு அநேக சென்மம் எய்தாதொழிக. மற்சம், கூர்மம், வராகம், நிருசிம்மம், தன்வந்திரி, மோகினி, நாரதர், பிருது, சனற்குமாரர், விராட்டு என்னும் இப்பத்து அவதாரமும் உனக்கு ஆவிர்ப்பாவமாகுக. பார்க்கவர், ராமர், பரசுராமர், கிருஷ்ணர், வியாசர், பலபத்திரர், கபிலர், நரநாராயணர், யஞ்ஞர், வாமனர், தத்தாத்திரேயர், விருஷபர், புத்தர், கற்கி, சுதர்சனர் என்னும் இப்பதினைந்து அவதாரமும் உனக்கு யோனிசமாகுக. அம்முனிவரிட்ட சாபம் உனக்குத் தடையின்றி நிகழும் என்று கூறிப் பின்னரும் சொல்லுகிருர். எமது ஆச்சிரமத்துள்ள சாதுக்களை வெறுப்பவர்கள் கீழோராவர். எமது பக்தர்களைப் பாதுகாப்பவர்கள் உனக்கும் விஷ்களங்கமாக அன்பர்களாவார்கள். அப்படிப்பட்டவர்களுடனே பேசுந் தோஷமும் மனிதருக்குக்கொடிய பாபத்தை விளைப்பதாகும். சிவாகமங்களையுணர்ந்த பிரமசாரி, கிருகஸ்தன்; வானப்பிரஸ்தன், சந்நியாசிஎன்னும் நான்கு ஆச்சிரமத்தாரையும் பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திரர்என்னும் நான்குவருணததாரையும் துவேஷிக்கின்றவர்கள் நிச்சயமாகவே பாஷண்டராவார்கள். அப்படிப்பட்டவர்கள் பொருட்டுக் கொடுக்கும் கொடையும், செய்யும் ஓமமும், செபமும், தியானமும், ஸ்நானமும், பூசையுமாகிய வெல்லாம் சாம்பலிலே இட்ட ஆகுதிபோல நிஷ்பலமாய்ப்போம். எமது ஆச்சிரமத்துள்ளவர்களை நிந்திப்பவர் எம்மையே நிந்திப்பவராகின்ருர். நம்முடைய ஆச்சிரமத்துள்ளவர்களைத் தோத்திரஞ் செய்பவர்கள் நம்மையே சுத்தர்களாய்த் தோத்திரஞ் செய்பவராவார்கள் என்ருர்.

இவற்றைக் கேட்ட விஷ்ணு சுவாமீ! நால்வகை ஆச்சிரமங்களிலும் உமது பக்தர்கள் உளர் என்று திருவாய் மலர்ந்தருளினிரன்ரே, அவர்கள் இலக்ஷணம் என்னை? பெருமை என்னை. அவை இவை என்று எனது பக்தர்கள் அறிந்து கோடற் பொருட்டு எனது பரமநாதரும், பரமாசாரியருமாகிய நீவிரே சொல்லியருளல்வேண்டுமென்று வேண்டினர். அப்போது சிவபிரான் நான்கு ஆச்சிரமத்துக்குந் தனித்தனி இலக்ஷணம் வெவ்வேரும். இந்நான்கு ஆச்சிரமத்துக்கும் தனித்தனி பிரவர்த்தகர்கள் ததீசி, கௌதமர், அகஸ்தியர், துருவாசர் என்னும் நான்கு இருஷிகளேயாவர். பிரமசரியத்தை நிறுத்தினர் ததீசி முனிவர். கிருகஸ்தாச்சிரமத்தை நிறுத்தினர் கௌதமமுனிவர். வானப்பிரஸ்தாச்சிரமத்தை நிறுத்தினர் அகஸ்தியமுனிவர். சந்நியாச ஆச்சிமத்தை நிறுத்தினர் துர்வாசமுனிவர். மலமாயை கன்மம் என்னும் முப்பாசத்தை நீக்குவதும், சிவசம்பந்தமுள்ளதும், மேலானதுமாகிய தீக்ஷையைத் தவிரமனிதர்களுக்கு எந்த ஆச்சிரமத்தினலும் உத்கிருஷ்டம் எய்துவதில்லை. எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் சிவதீக்ஷையினலே தான் பாசவிமோசனம் எய்துவதாகும். எவ்வெவருந் தாந்தாம் விரும்பியபடி அந்தந்த ஆச்சிரமத்தைப் பூர்வோத்தரமாக அநுஷ்டிக்கலாம். அங்ஙனம் அநுஷ்டிக்குமிடத்து தீக்ஷையினற்ருன் மோக்ஷம் எய்தும். ஆச்சிரமங்களினலும் மற்றைக் கருமங்களினலும் மோக்ஷம் இன்ரும். திரிகாலமும் ஸ்நானஞ் செய்து, பிக்ஷாகாரஞ் செய்து, கௌபீனந் தரித்து, கிருஷ்ணசினந் தண்டம் என்பவற்றைத் தாங்கி, சிவாக்கினிபூசை செய்து, வேதாத்தியயனம் பண்ணி, குடுமியோடு இருப்பவன் பிரமசாரி எனப்படுவான். பருவகாலத்திலே மனைவியைப் புலந்து, ஒழிந்த காலங்களிலே கலந்து, தெய்வம், விருந்து, யாசகர் என்போரை உபசரித்து எவர்க்கும் கருணைபாலிப்பவன் கிரகஸ்தன் எனப்படுவான். சடாதாரியாய் வனவாசஞ் செய்து, பாரியோடு கூடி அத்தியயனஞ் செய்து பலமூல ஆகாரம் பண்ணி, திரிகாலமும் ஸ்நானஞ் செய்து, வற்கலை உடுத்து உறைபவன் வானப்பிரஸ்தன் எனப்படுவான். திரிகாலமும் ஸ்நானஞ் செய்து கௌபீனதாரியாய், நிஷ்களசிவத்தியானஞ் செய்து, தண்டம் பஸ்மம் சடை என்பவைகளையுடையனுய், அக்கினியையும் பாரியையும் விடுத்து, பிக்ஷாகாரஞ் செய்து, கோத்திரம் சந்தானம் எனபவற்றை விடுத்து, அவ்வாறே சர்வ சாமங்கலையும் விடுத்து, அபோச்சிய அன்னம் தவிர்த்து, சிவயோகஞ் செய்து, தேகாவசானத்திலே சிவசாயுச்சியம் அடைபவன் சந்நியாசியாவான். நான்கு ஆச்சிரமத்துள்ளாரும் சர்வாநுக் கிரகிகளாயேயிருப்பார்கள். ஓ கேசவ! அதிகஞ் சொல்லியாவதென்! சம்சாரசாகரத்தைக் கடத்தற்கு வாய்ந்த ஓர் புணையைச் சொல்கின்றேன் கேள். பைத்தியத்திலேனும், மோகத்திலேனும், நித்திரையிலேனும் எத்துவஷ்டனுயினும் "சிவ" என்னும் இரண்டெழுத்தைச் சிந்தை செய்வானுயின் அவனை எம்மைப்போலக் குருவாக அறிகுதி அதனல் நாம் அதிக மகிழ்வை அடைவேம். இதினும் மேலாயது என்! பைத்தியத்தினலேனும் ஒருவன் பிரணவத்தோடிசைந்த ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஒருமுறை உச்சரிப்பானுயின், அவன் எந்நிலையிலிருந்தாலும் எக்காலமும் பூசிக்கற்பாலனே

யாவான். ருத்திர், சம்பு, மகாதேவ, சர்வஞ்ஞ, சங்கர, ஸ்ரீவாமதேவ, ஸ்ரீகண்ட, ஸ்ரீநீலகண்ட என்னும் நாமங்களைச் சொல்லி நம்மைத் தியானிக்கின்றவனை எமது ஆஞ்ஞையினால் என்னை என்று மதிக்குதி. பிருகு என்பார் எமது பக்தருள்ளே சிரேஷ்டர். அவரிட்ட சாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிதாகும். ஆதலினால் உனக்கு அந்த இருபத்தைந்து அவதாரமும் எய்தும். இந்த அவதாரம் லோகோபகாரமாயிருக்கும். கவுதமர், ததீசி, கண்ணுவர், சியவனர், பிரமா, நந்தி என்னும் ஷண்முனிவர்களும் ஒவ்வோர் ஏதுவினால் துரோகஞ் செய்த பிராமணர்களை வைதிகநெறி பிறழ்ந்தவர்களாயும், சிவநிந்தாபராயணர்களாயும், நெற்றியிலே யோனிமுத்திரையுடையர்களாயும் போமாறு சபித்தார்கள். கமலக்கண்ணா! இப்படிச் சபிக்கப்பட்ட பிராமணருள்ளே காசியப கோத்திரத்திலே எக்காலமும வேதநிந்தை செய்பவரும், விபூதிருத்திராக்ஷங்களை நிந்திப்பவரும் நம்மை நிந்திப்பவரும், வைதிகர்களையும் நமது பக்தர்களையும் நிந்தை செய்பவரும், எப்போதுந் தப்தமுத்திரையுடையரும், பாஞ்சராத்திரபராயணருமாகிய வாசுதேவர் என்னும் பெயரோடு இக்கலியுகத்திலே ஒருவர் பிறப்பார். இவர் பாஞ்சராத்திரிகளெல்லோர்க்கும் தேசிகராவர். அவர் உன்னைப் புதல்வனாகப் பெறும் பொருட்டு நெடுங்காலம் தவஞ் செய்யப் போகின்றார். அப்போது நமது ஆஞ்ஞையின் படியே நீ அவருக்குப் புதல்வனாய்ப் பிறக்குதி. மூன்று வயசு தொடுத்து நீ எம்மைச் சிறுபிள்ளை விளையாட்டாய்ப் பூசித்துக்கொண்டு வருங்கால், ஐந்தாம் வயசிலே உனக்கு நாம் சமஸ்த வித்தைகளையும் மனோரதபோகங்களையுந் தந்து, இறுதியிலே எமது சாயுச்சிய பதவியையும் அருளுவேம். இருபத்தைந்து அவதாரங்களுள்ளே ஐந்து அவதாரங்களில் உனது கருவத்தை நாசஞ் செய்து, மற்றைய இருபது அவதாரங்களினும் நீ நம்மைப் பூசிப்ப நாம் உனக்கு விரும்பியது கொடுப்பேம்; அதனால் நீ திருப்தி பூணக்கடவை; உன்னுடைய அவதாரங்களைச் சனங்களெல்லாம் வழிபடுவார்கள். அப்படி வழிபடுவோர் உனது பதத்தை அடைவார். இன்னும் ஒரு ரகசியம் சொல்கின்றேம் கேள். அஃதாவது உனது சென்மம் ஒன்றிலே நீ உன்பாரியைப் பிரியப் பெறுவாய் என்றார். நம்மைலிங்க ரூபமாக வைத்துப் பூசித்தும், துதித்தும், புகழ்ந்தும், நமஸ்கரித்தும் வருபவர்களுக்குப் போக மோக்ஷங்களைச் சந்தேகமின்றியருள்வேம். இந்தக் கஞ்சாபுரத்திலே மூன்று தினம் வாசஞ் செய்து, சிவபக்தர்களாகிய பிராமணர்களைப் பூசை தர்ப்பணங்களால் வழிபட்டு மகாமந்திர ரகசியமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபிக்கின்றவர்கள் கோடி சென்மங்களிலே செய்த பாபங்களும் நாசமாக, தேகாந்தத்திலே சாயுச்சியத்தை அடைகின்றார்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார். விஷ்ணு இவற்றைக் கேட்டு தேவதேவரே! மகாதேவரே! சந்திரார்த்த சேகரரே! உமது திருவடியை அடைந்தேன். கஞ்சாபுரத்திலே நான் உம்மைப் பூசைசெய்து கொண்டிருக்குங்கால், எனது மனோபீஷ்டமெல்லாம் முற்றுமாறு வரந்தந்தருளல் வேண்டுமென்று வேண்ட, அதற்குச் சிவபெருமான் அங்ஙனமாகுக என்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினார். ஸ்ரீபதிநாயகராகிய விஷ்ணுவும் தமது தானத்தை அடைந்தார்.

இந்தப் புண்ணிய க்ஷேத்திரமாகிய கஞ்சாபுரத்திலே எழுந்தருளியிருக்கின்ற அக்கினீச்வரப் பெருமான்மீது அன்புடைமையால் வைதிக சைவப் பிராமணர்கள் அவர் கருணைக்குப் பாத்திரராயினர். இவர்களை நினைக்கும நினைவே மகாபாதகங்களையும் நாசஞ் செய்யும். இவர்கள் சாபாலோபநிஷதங்களை உச்சாரணஞ் செய்து, வைதிகசைவ விபூதிகொண்டு திரிகாலமும் உத்தூளன திரிபுண்டரஞ் செய்பவர்கள், திரிகாலங்களினும் பக்தியோடு சிவார்ச்சனை செய்பவர்கள். சிவ விரதங்களையும் நக்த விரதங்களையும் அநுஷ்டிப்பவர்கள். வேதாத்தியயனஞ் செய்பவர்கள். சிரௌதாக்கினி வளர்ப்பவர்கள். ஒவ்வோர் கிரகத்திலும் புரோடாச அவ்ய சம்பந்தமாகிய தூமத்தினாலே தூய்மை வாய்ந்தவர்கள். ருத்திராக்ஷதாரணர்களாயும், ஸ்ரீபஞ்சாக்ஷரசெபஞ் செய்பவர்களாயும், சிவபூசாபராயணர்களாயும் சிவபுராணார்த்தங்களை ஆராய்பவராயும், சிவநாமத்தையே உச்சரிப்பவர்களாயும், சிவபக்தர்கண்மீது எக்காலமும் அன்புடையராயும், சிவதரிசனம், சிவநமஸ்காரம், சிவபூசை முதலியவைகளிலே ஓர்காலும் வழுவாதவராயும்; சிவபூசாவிஷயம் பற்றிச் சிவாகமங்களை நன்றாக ஆராய்ந்தறிந்தவர்களாயும், பிரதக்ஷிண நமஸ்காரங்களையும் மற்றைய திருத்தொண்டுகளையும் எக்காலமும் செய்பவராயுள்ளார்கள். அவர்கள் மனைவியரும் அவர்களைப்போற் திருத்தொண்டு செய்பவர்கள். தமது நாயகர்களுக்குத் தொண்டு செய்தும், சிவபூசை செய்தும், பஞ்சாக்ஷரசெபஞ் செய்தும், சிவ கைங்கரியங்கள் செய்தும் வருவார். இவர்கள் அருந்ததியினும் சிறந்த கற்பினையுடையார். அங்கே எக்காலமும் வேதசிரசுகளை நன்கு உணர்ந்து, சிவபூசாபராயணராய், பஸ்மருத்திராக்ஷதாரிகளாயுள்ள பரமகம்ச சந்நியாசிகள் அக்கினீசுவரப்பெருமானைத் தலையன்பினாலே எக்காலமும் சேவிக்குமாறு வாசஞ்செய்கின்றார்கள்.

பின்னர் அந்தக்கஞ்சாபுரத்திலே விஷ்ணுவானவர் கற்பங்கடோறும் தமது சாபநிவாரணத்தின்பொருட்டு அக்கினீசுவரப் பெருமானைப் பூசித்துக்கொண்டு வந்தார். இந்தத்தல விசேஷத்தை நோக்கியே அயன் அரி இந்திரன் அக்கினி என்போர் தத்தம் நாமங்களினாலே தனித்தனியே அங்கே தீர்த்தங்கள் அமைத்துச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்கள். இப்பொழுதும் தேவர்கள் மகாதேவருக்குத் தொண்டு செய்து கொண்டு வருகின்றார்கள்.

(அ) அரதத்தாசாரியரின் சென்னனாதி விருத்தாந்தம் வருமாறு:—கௌதம முனிவராலும் நந்திகேசுரராலும் சபிக்கப்பட்ட வைஷ்ணவப் பிராமணர்களிற் சிலர் கஞ்சாபுரத்து விஷ்ணுவாலயத்துக்குச் சமீபத்திலே வாசஞ்செய்கின்றார்கள் அவர்கள் வெள்ளை மண் பூசுபவர்கள். வெளளை வஸ்திரம் உடுப்பவர். யஞ்ஞோபவீத தாரணர்கள். தப்தமுத்திரை தரிப்பவர்கள். வேதசார விமுகர்கள். பாஞ்சராத்திர பராயணர்கள். சிவநிந்தை எக்காலமுஞ் செய்பவர்கள். வைதிகப் பிராமணரைத் தூஷிப்பவர்கள். விபூதி ருத்திராக்ஷம் தரித்தவர்களைக் குரூர திருஷ்டிகொண்டு பார்ப்பவர்கள், இவர்களுள்ளே வாசுதேவர் என்பவர் ஒருவர் இருந்தார். இந்தப் பிராமணர் ஓர் புத்திரனை வாஞ்சித்து விஷ்ணுவை நோக்கி

மெய்யன்போடு உபாசித்தார். சுப்பிரதீகர் என்பவர் ஒருவர் ஓர் புத்திரியை வாஞ்சித்துத் தீவஞ்செய்தார். அப்போது விஷ்ணுவானவர் அவ்விருவர்மீதும் பிரீதிகொண்டு இலக்குமியைவிழித்து, பிராணநாயகியே! நீ பூமியின்கண்ணேசென்று சுப்பிரதீகருக்குப் புத்திரியாகப் பிறக்குதியாக, நான் வாசுதேவருக்குப் புதல்வனுக்ச் செனிப்பேன் என்று இந்தப் பிரகாரஞ் சொல்லிவிட்டு, பாஷண்டமதமாகிய வைஷ்ணவத்தை அநுசரித்திருக்கும் இந்த வைஷ்ணவர்களைச் சர்ப்பசயனரும் உலகரக்ஷகருமாகிய தாம் அருள்நோக்கஞ் செய்து, வைதிகநெறிக்கண்ணே நிறுத்த நினைந்து, கம்சாகரப்பெருமானிடத்திலே அருள்பெற்றுக்கொண்ட சிருங்கி வாசுதேவருடைய மனைவி வயிற்றிலே உற்பத்தியாயினர். ஐந்து கிரகங்கள் தத்தம் வீடுகளிலே உச்சத்தானத்தை அடைந்தபோது,உமாதேவியார் கந்தசுவாமியைப் பெற்றாற்போல சிவபிரானார் திருவடித்தாமரையை மறவாத அப்புதல்வனை அவள் பெற்றாள். அப்போது, புஷ்பமழை பொழிந்தது. துந்துபிகள் ஒலித்தன. தேவரம்பையர் நடித்தனர். சிவபக்தர்களுக்கு, வலத்தோளும் வலக்காலும் வலக்கண்ணும் துடித்தன. வைஷ்ணவர்களுக்கு இடப்புயங்களும் இடக்கால்களும் இடக்கணகளும் துடித்தன. இனிமையோடு தென்றல்வீசிற்று. அக்கினி களங்கமின்றிச் சொலித்தது. திக்குகளெல்லாஞ் சந்தோஷம் மலிந்தது. இங்ஙனம் புதல்வனுடைய சனனத்தைக் கேட்ட பிதாவானவர் மனமகிழ்ந்து சுருதிசாஸ்திரமறிந்தவர்களையும் வேதபாரகர்களையும் அழைத்து அவர்களுக்குக் கோதானம் பூதானம் இரண்ணியதானம் என்பவைகளைச் செய்தார். பின்னர் ஜாதகர்மஞ் செய்தார். பதினோராம் நாள் ஸ்நானஞ்செய்து பிள்ளைக்கு வாய்ப்பாக சுதர்சனர் என்னும் நாமகரணஞ் செய்தார். பாலரும் வளர்பிறைச் சந்திரன்போல மெல்ல வளர்வாராயினர். தமது இரண்டுகைகளினாலும் தம்மிரண்டு பாதாங்குஷ்டங்களையும் வாயிலே வைத்துச் சுவை பார்ப்பார். பின்னர்த் தொட்டிலின்கண்ணே ஆடியும், தாயின்பாலைப் பருகியும் முதிர்வார். ஆறும் மாசத்திலே அவர் பந்து மித்திரர்கள் அவருக்கு அன்னப்பிராசனஞ் செய்தார்கள். அவருக்கு அநேக ஆபரணங்களுஞ் சூட்டினார்கள். பாலரும் தமது இனிமையாகிய வார்த்தையினாலே தந்தையாரைப் பிரீதிசெய்தார். சிவபக்தர் வழியிலே போம்பொழுது அவர் கொடுத்த விபூதியைவாங்கி அப்பாலர் நெற்றியிலே இட்டார். அதைக்கண்ட தாயார் புதல்வனுக்கு ஸ்நானஞ்செய்து தக்க தக்க தானங்களிலே ஆபரணம் அணிந்து, அரி சூர்ணத்தையும் வெள்ளைமண்ணையும் பூசினள். அப்போது அப்புதல்வனார் வீதியிற் போந்து கஞ்சாபுரத்துப் பிராமணரும் சிவபக்தருமாகிய பசுபதி என்பாரை விபூதி ருத்திராக்ஷம் பிரசாதிக்கும்படி அன்பினோடும் வேண்டி, அவற்றை அவர் கொடுக்கப்பெற்று அவ்வெள்ளைமண் மஞ்சட்பொடிகளை அழித்துவிட்டு, சர்வாங்கமும் விபூதி உத்தூளனஞ்செய்து திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராக்ஷம் பூண்டு, சிவாலயத்தினுள்ளே போந்து, சிவபெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து சிவபிரானுக்கு உவப்பாகிய திருத்தொண்டுகளைச் செய்தார். இவற்றைச் சனங்களெல்லாம் நோக்கி முனிவர்களும் செயற்கரிய செய்கையை இப்பாலவைஷ்ணவர் செய்கின்றாரே முன்னே மகாதேவரை நேத்திரகமலத்தினாலே பூசித்த மாதவரே இப்போது சனங்களை இரக்ஷிக்கும்பொருட்டும், வைதிக மார்க்கத்தை நிறுத்தும்பொருட்டும், சிவபக்தியை வளர்க்கும்பொருட்டும் இங்ஙனம் திருவவதாரஞ் செய்தனரோ என்பார். மூன்றும் வயசிலே இவருக்குச் சௌளகருமமும் ஐந்தாம் வயசிலே உபநயனமுஞ் செய்யப்பட்டன. இதுவரையும் அப்பாலர் விபூதி தாரண முதலியன செய்தமையைப் பாலக்கிரீடை என்று நினைந்து கொண்டிருந்த பிதாவாகிய வாசுதேவர் அக்குழந்தையை அழைத்து, "குழந்தையே! நீ சிவன் கோயிலுக்கு ஓர்காலும் போகாதே, ஓர்காலும் விபூதிகொண்டு உத்தூளன திரிபுண்டரதாரணஞ் செய்யாதே, சிவபக்தர்களோடிணங்காதே. அவர்களோடு பேசாதே; உருத்திராக்ஷதாரணஞ் செய்யாதே, ஸ்ரீவிஷ்ணுவின் சுத்தமாகிய பாதத்தையே சிந்தைசெய்" என்று புதல்வனுக்கு உபதேசித்தார். இப்படிச்சொல்லியும் பாலனானவர் விபூதியையும் ருத்திராக்ஷத்தையும் விடாதவராய் சிவபக்தரை வணங்கி அவர் பாததூளியைச் சிரசிலே தரித்து சிவநாமங்களை உச்சரித்து, அக்கினீசுவரராலயத்தை அடைந்து, அதனைப் பன்முறையும் வலம்வந்து வணங்கி, அங்கே திருத்தொண்டு செய்துவருவாராயினர். இவ்வொழுக்கத்தைக்கண்ட பிதாவானவர் அடிக்கடி யான் புத்தி புகட்டியும் என்வார்த்தையைப் பாலன் கேட்கின்றானில்லையே என்று அப்பாலனைக் கயிற்றினாலே கட்டி, கசையினாலே பின்னும் அடித்துத் தம் மதாசாரத்தை உபதேசித்தார். கட்டினின்று விடுபட்டவுடனே புறத்தேபோய்ச் சிவாலயத்தை அடைந்து, மனோவாக்குக் காயங்களினாலே சிவபெருமானுக்குப் பிரீதியாகிய திருத்தொண்டுகளைச் செய்தார். பிதாவானவன் தன் மனைவியை நோக்கி "என் புதல்வன் என் வார்த்தையைக் கேட்கும் வரையும் நீ அவனுக்கு அன்னமிடாதே" என்று சொல்லிப்போயினன், அவன் போனபின்னர்ச் சிவபக்தசிரோமணியாராகிய பாலர் விபூதி ருத்திராக்ஷதாரணஞ்செய்து, சிவபெருமானைச் சேவித்துக்கொண்டு போசனம் செய்யுமாறு வீட்டுக்கு மீண்டுவந்து தமதுதாயாரைநோக்கி "என் இனிய அன்னையே, என்னைப் பசி அதிகம் வாட்டுகின்றது, எனக்கு அன்னமிடுவாயாக என்று கேட்டுத் தன் தாயின் கையைப் பலமாகப்பற்றி இழுத்து நெருக்கினார். அப்போது தாயானவள் பாலனைப் பார்த்து, ஐயோ பாலா! நீ தம்முடைய வார்த்தைக்கமைந்து நடக்கும் வரையும் அன்னமிடல் வேண்டாம்" என்று உன் பிதா சொல்லிப்போயினர். ஆதலால், நீ உன்பிதாவின் சொல்லைக்கேள். உன் பிதாவின் வார்த்தையை ஏன் கேட்கின்றாயில்லை; உன் பிதாவே உனக்கும் எனக்கும் தெய்வம். இப்போது நான் என் செய்வேன்" என்று தன் பாலனோடு அநுதாபமுற்றுக் கண்ணீர்வார்ந்தாள்.

(தொடரும்.)

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்தவசனபூஷணம்.

## பதியிலக்கணம்.

### தெய்வவணக்கம்.

சுத்தாந்தத் தினிதோங்குந் தூயனருட் டுணைவாய்ந்து
பித்தாந்தப் புறச்சமயப் பிணக்கொரீஇ யத்துவித
முத்தாந்தத் தரமிதென முடிபொருங்கு காட்டிடற்குச்
சித்தாந்த வசனபூ ஷணப்பனுவற் செப்புவமால்.

சித்தாந்தம்.*

அவனவளதென்னுமுயர்திணையுமஃறிணையுமாயகாரிய ரூபப்பிரபஞ்ச மெல்லா முபாதானத்தினின்றுந் தோன்றுமுறையிற்றோன்றி நிற்குமுறையினின் றொடுங்குமுறையிலொடுங்கிவரக் காண்கையா லிவ்வுலகத்திற்கு நிமித்தகாரணமாகிய † பதியொருவனுளன்.

உலகாயதன் மதம்.

பிரகஸ்பதி பகவான் முதலியோ ரிப்பிரபஞ்ச மநாதியே நிலைபெற்றுள்ள தென்று சொல்லுகையா லொரு பதியாற் றோன்றி நின்றொடுங்கு மென்பதடாது.

மறுப்பு.

நித்திய மென்கிற பிரபஞ்ச மநித்தியமென்று காட்டிடற் கனுமான முதலிய பிரமாணங்களாற் ரூபிக்கவேண்டுவதில்லை. பூதகாரியமா யிவ்வுலகிற் பொருந்திய பொருள்களெல்லாம் பூமியின் கண்ணே கன்மமுறையின் முதல்வன் சங்கற்பத்தி னுற்பத்திநாசமாகப் பிரத்தியட்சப் பிரமாணமாகிய சிறு சத்தி பொருந்திய நேத்திரங்களாற் காணலாம்.

உலகாயதன் மதம்.

பிரபஞ்சந் தானேதோன்றி நின்றழித லதற்கியல்பாகலி னோர் பதி வேண்டுவதில்லை.

மறுப்பு.

இயல்பா யிருக்கும் பொரு ளொருபோதுண்டாகி யொருபோதின்றாகிக் காரியப்படுந் தன்மையில்லை.

உலாகாயதன் மதம்.

அங்ஙனந் தோன்றிநின் றழிதலே யியற்கை.

மறுப்பு.

காரியப்படுமாகி லப்பொழு தஃதியல்பல்லவாம்.

உலகாயதன் மதம்.

பூதகாரியமே தொழில், பூதங்களியல்பாகையா லெப்பொழுது மொரு சுபாவமாயிருக்கத்தக்க பூதங்கள் தாமே தொழில்களையெல்லா முண்டாக்கா நிற்கும்.

மறுப்பு.

அப்பூதங்கள் சடமாகையாற் றாமே தொழிற்படா வத்தொழிலை யுண்டாக்குவா னொருபதிவேண்டும்.

உலகாயதன் மதம்.

பிருதிவி அப்புத் தேயு வாயுவெனு நான்கு பூதங்களுங் கூடின சமவாயத்திற் சகலமுந் தோன்றி நிறகு மழியுமாகலா னவைகட் கந்நியமாக வோர் பதிவேண்டாம்.

மறுப்பு.*

நான்கு பூதங்களுமொப்ப முத்தொழிற் படுதலி னிவையொன்றினைக் காரியப்படுத்து மாற்றலில்லை, யிவைபோன்று முத்தொழிற் படுதலின்றி மேம்பாடுடைய வொருவனே யிவற்றைத் தொழிற்படுத்தவேண்டும்.

சௌத்திராந்திகன் மதம்.

† பஞ்சகந்தங்களுங் கூடின சமவாயத்தில் ‡ உருவம் அருவம் வீடு வழக்கென்று சொல்லு நான்கின் சார்பிற் பிரபஞ்சந் தோன்றும்.

மறுப்பு.

தோற்ற மில்பொருட்கோ வுள்பொருட்கோ? முயலிற் கோடுபோல் வில்லாத தொருக்காலு முண்டாகாது, எப்போது முண்டாயிருப்ப தொன்று புதிதாகத் தோன்றவேண்டுவதில்லை. வியத்திருப மென்கிற காரியரூபத்தினுளது

---

* சித்தாந்தம் - முடிந்த முடிவு.

† பதி - 'காக்கிறவன்' பா - காத்தல், தி வினைமுதற்பொருள் விகுதி.

* இதனான் மீமாஞ்சகரு மறுக்கப்பட்டனர்.

† பஞ்சகந்தமாவன:—உருவகந்தம் பூதநான்கும் உபாதாய நான்குமாம், குறிப்புகந்தம் சோத்திராதியைந்தும் சித்தமொன்றுமாம், விஞ்ஞானகந்தம் அந்தக் கருவிகளாலறியு மாறறிவுமாம், வேதனாகந்தம் குசலாவேதனை, அகுசலாவேதனை, குசலாகுசலவேதனை யென மூன்றும், அவற்றுள் குசலாவேதனை சுகவறிவு, அகுசலாவேதனை துக்கவறிவு, குசலாகுசல வேதனை சுக்கதுக்கவறிவு, பாவனாகந்தம் புண்ணியம் பத்தும் பாவம் பத்துமாம், புண்ணியம் பத்தாவன அருள், அவாவின்மை, தவம், விருப்பமென மனத்தானிகழ்வனவும், இனியவைகூறல், மெய்ம்மைகூறல், பயனுளகூறல், அறமுறைத்தலென வாக்கானிகழ்வனவும், வணக்கம், ஈகை, தவஞ்செய்தலெனக் காயத்தானிகழ்வனவுமாம், பாவம் பத்தாவன தீயன சிந்தித்தல், ஆசை, கோபமென மனத்தானிகழ்வனவும், கடுஞ்சொல், பொய்கூறல், பயனில்சொல், கோட்சொல்லுதலென வாக்கானிகழ்வனவும், களவு, கொல்லுதல், வீண்செய் [illegible] யெனக் காயத்தானிகழ்வனவுமாய் ஆகப்பஞ்சகந்தவிரிவு பதினெட்டு.

‡ உருவமாவது பிருதிவி, அப்பு, தேயு, வாயுவெனப் பூதவுருநான்காயும்; வலி, கந்தம், இரதம், வன்னமென உபாதாயவுரு நான்காயு மிருவகைப்படும். அருவமாவது புலன்கள் பொறிவழியே[illegible] யறிய வதனைக்கண்டறி சித்தவருவென்றும், அங்ஙனங்க[illegible] பொருளை நன்றென்றுந் தீதென்றுங் காண்டல் கன்மவருவென்று மிருவிதமாம், வீடாவது இராகாதி குணங்கள் பொன்றக்கெட்டு முத்தியின்ப மடையாது சேட்டைகெட முத்தியடையு மென்றது குற்றவீடென்றும், பஞ்சகந்தங்களுஞ் சந்தானத்துப் பொன்றக் கெட்டடைவது கந்தவீடென்று மிருவகைப்படும், வழக்கென்பது உள்வழக்கில்வழக்கென் றிருவகைப்பட்டுத் தொகையுண்மை வழக்கு தொகையின்மைவழக்கு, தொடர்ச்சியுண்மைவழக்கு, தொடர்ச்சியின்மைவழக்கு, மிகுத்துரையுண்மைவழக்கு, மிகுத்துரையின்மைவழக்கென வாறும்.

மின்றிச் சத்திருப மென்கிற காரணரூபத்தினலில்லது மின்றி யிருப்பதொரு பதார்த்தமுண்டாகி லச்சித்தாயுள்ள காரணத்தை யுபாதானமாக்கொண்டு காரியரூபமாகிற பிரபஞ்சமுண்டாம். உவர்ப்பூமியில் வித்துண்டா யிருந்ததாயினு மதனிடத்தங்குரோர்ப்பத்திக்குக் காரணமின்மையினில்லை, பசுவின்கொம்பி லங்குரோர்ப்பத்திக்குக் காரணமுண்மையிற் காரியமாகிய நாணலவ்விடத்துண்டாம். என்போலெனின்? பூமியிற் படத்திற்குங் கடத்திற்குங் காரணமான தந்துவு மிருத்துவு.முண்டாயிருக்கவுந் தானே படமுங் கடமுமாகாமல் முறையே தந்துவாயனாலுங் குலாலனாலு முண்டாக்கப்படுமாறு உபாதான காரணமாயையினின்றும் பிரபஞ்சம் பதியாலுண்டாம்.

மாத்திமிகன் மதம்.

ஒரு காரணத்தினின்றும் பிரபஞ்சகாரியந் தோன்றுமிடத்துத் தானேதோன்றித் தானேயழியும்.

மறுப்பு.

என்று முள்ள பதார்த்தத்தினுக்கு நாசமில்லை, நாசத்தையடையின் மீளவு முண்டாகாது.

சமணன் மதம்.

காரிய மழிந்துபோம்; காரணமழியாமற்கிடக்கும்.

மறுப்பு.

காரண முள்பொருளாகக் காரியமு மதன்கண் சூக்குமரூபமாயுள்ளதாய்ப் பின்னர் தூலரூபமாய் விளங்கித் தோன்றும். இவையொரு பதியாலாம்.

பட்டாசாரியன் மதம்.

தேகங்களின் றோற்றமுநாசமுங் கண்டோமன்றி யுலகிற்குத்தோற்றநாசங் கண்டோமில்லை.

மறுப்பு.

பிரபஞ்சமானது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமாதியாயிருக்கும். பஞ்சபூத பரிணாமமாகிய தேகாதிகளொன்றிலே யொன்று தோன்றி யழிகையாற் பிரபஞ்சத்தினுக் கழிவுண்டாமெனத் தேகாதிகளே யறிவிக்கும்.

பட்டாசாரியன் மதம்.

பிரபஞ்சத்தி லொருதேசமழிய வொருதேசமழியாமனிற்கு முற்றுமழியக் கண்டதில்லை.

மறுப்பு.

பூமியிற் சொரியும் விதைகள் கார்காலத்தில் முற்றுந்தோன்றி வேனிற்காலத்தில் முற்றுமழியு மதுபோற் சிருட்டிகாலத்திற் பிரபஞ்சமுற்றுந் தோன்றிச் சங்காரகாலத்தில் முற்றுமழிந்து காலத்தான் மாறும்.

கால்வாதி மதம்.

காலமே பிரபஞ்சத்தை யுண்டாக்கித் திதித்துச் சங்காரத்தைச் செய்யும் பின் னித்தியமாவிருக்குமாகலின் காலமே பதி.

மறுப்பு.

காலஞ் சடமாகையினற் பிரபஞ்ச காரியங்களை யுண்டாக்குவதற்கோர் பிரஞ்ஞையில்லை. நிமித்த காரணமாகிய பதியினேவலாற்காலந் துணைக்காரணமேயாம்.

தார்க்கிகர்.*

அணுப்பரிணாமமான பிரபஞ்ச மழிந்தபின்னரும் பரமாணுக்களாய்ச் சூக்குமத்தினின்றுங் கன்மங்களுக் கீடாக வொவ்வொரு காலங்களிற் பிரபஞ்சமாகத் தோன்றி நின்று ஒவ்வொரு காலங்களிலழியாநிற்கும்.

மறுப்பு.

கன்மமும் பரமாணுவுஞ் சடமாகலின் விதியையறிந்து பிரபஞ்சகாரியத்தைத் தாமாகத் தோற்றுவியாது, அன்றியும் பரமாணுக்கள் சங்காரகாலத்துச் சேரவழியும்.

நியாயவைசேடிகன் மதம்.

காரணமான பரமாணுக்கள் பிரளயகாலத்து நாசமடையிற் காரியப்பிரபஞ்ச முண்டாவதற் கேதுவில்லை.

மறுப்பு.

காரணமாகிய மாயை நித்தியமாகலிற் காரியமாகிய பிரபஞ்ச மூண்டாகக்காணலாம்.

நியாயவைசேடிகன் மதம்.

பிரபஞ்சத்திற்குக் காரணம் மாயையன்று பரமாணுவேயாம்.

மறுப்பு.

காரியமாகிய வுருவமும் ஏகதேசமும் பரமாணுவிற் காண்டலா லிவை யல்லாதமாயையே காரணமாம்.

நியாயவைசேடிகன் மதம்.

பரமாணுக்களைக் காரியமென்று சொல்லவேண்டுவதில்லை.

மறுப்பு.

காரியவுருவமான வெல்லா மண்குட முதலியபோல வழியுமென்னு மேதுவினாற் பரமாணுக்க ளவயவத்தாகக் காணப்படுகையால் பிரளயகாலத்து நாசமாம். தனக்கொருகாரணமின்றியவயவப்படாத மாயையே பிரபஞ்ச காரியங்களையுண்டாக்கும். என்போல வெனிற் சூக்கும வுருவமாகிய வித்தினின்றுந் தூலமாகிய சாகோபசாகைகள் பத்திரபுட்பங்கள் அதிரிசியமாகவுந் திரிசியமாகவுங் காணப்படுதல் அணுக்களிடத்துக் காணப்பெறுது திரிசியமொன்றே காணப்படுகையா லணுவிலுண்டாகா, சத்திருபமாய் முன் சூக்குமத்திருந்த பிரபஞ்சம் வியத்திருபமாய் மீண்டுஞ் சத்திருபமாய் மாயையிற்றோன்றி யொடுங்கும்.

நியாயவைசேடிகன் மதம்.

மரங்களினின்று முதிர்ந்த விலைகள் மீண்டு மரங்களிலேயே சென்றொடுங்குமேல் மாயையிற் பிரபஞ்சம் வருவது மொடுங்குவதாகும்.

மறுப்பு.

காரியரூபமானவையெல்லாஞ் சூக்கும ரூபமாகக் காரணத்தினின்று மீளவுண்டாம், மரங்களினுதிர்ந்த விலைகள் சத்திரூப காரணமாய மரத்திற்றானே நிலைபே றுடைமையிற்றும் காரியப்பட்ட மரங்களுக்குக் காரணமாக விருக்கிற பிருதிவியிலொடுங்கித் தாமீளத் தோன்றுதற்குரிய பிறகாரணங்களாகிய கன்மங்காலமுதலிய கூடியவழி யனந்த பத்திரசத்திரூபமாகிய மரத்தில் வேறு வேறிலையாகத் தோன்றும், அன்றி

* இவ்வணுகாரண வாதஞ் சௌத்திராந்திகர், வைபாடிகர், ஆசிவகர் முதலியவர்க்கு மொக்குமேனுந் தலைமைபற்றித் தார்க்கிகர்மேல்வைத்துக் கூறியது.

யுங் கடலின்கண் வாயுவினற்றோன்றும் அலை திரை குமிழிமுதலியன மீண்டு மக்கடலினிடத்தே லயித்தவருவதுபோல முதல்வன் சத்தியான் மாயையினின்றுந் தோன்றி லயித்துவருதலே யுண்மை.

பிரபாகரன்வினா.

மாயையிற் றோன்றுமென்ற பிரபஞ்ச மாதியோ? அநாதியோ?

விடை.

காலத்திரயத்துமுள்ள மாயையின் காரியஞ் சத்திருபத்தினலும் வியத்தி ரூபத்தினலு நிலைபெற்றுச் சத்திரூபந் திரிந்து வியத்தி ரூபமாக வருதலாற் பிரவாகவநாதி, சடமாகியமாயை முதல்வனாற் சத்திரூபம் வியத்திரூபமாக வொருகாலத்திற் கிரியப்படுகையா லாதியாம்.

நிரீச்சுரசாங்கியன் மதம்.

உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையி னொடுங்குவதன்றி நிமித்தகாரண னொருவனுண்டென்று மவன்மாட்டொடுங்குமென்றுங் கூறுதலடாது, யாது யாண்டொடுங்குமஃததனி னுற்பத்தியாமென்னு மவிநாபாவத்தான் மாலையினொடுங்கிய வுலகத்தை மாயையே தோற்றுவிக்கும்.

மறுப்பு.

மாயையு முலகமும் வித்துமங்குரமும்போலு மாகலின் வித்துக்காதாரமாகிய நிலங்குளிர்ந்தவழி யதன்கண் வித்துள்ளதாக வதினின்று மங்குரந் தோன்றியவாறுபோல மாயை தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கு முதல்வனது சத்தியின் கண்ணுள்ளதாய் நிற்றலா லச்சத்தி சங்கற்பித்தவழி யவரவர் வினைக்கீடாக வவ்வக்காரியங்களை யவ்வவ்வியல் பிற்பிறழாமற் பயக்குஞ் சதுர்ப்பாடுடைத்தாம். அல்லுழியுடைத்தன்று, நிலங்குளிர்ந்தவழி யதன்கண்கிடந்தன்றி வித்து முளையைத் தோற்றுதவாறுபோலும். ஆகலின் மாயையி னொடுங்கித் தோன்றிய வுலக மதற்காதாரமாய் நின்ற முதல்வன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயாம்.

நிரீச்சுரசாங்கியன் வினா.

முதல்வன் பிரபஞ்சகாரியத்தை யுண்டாக்குமிடத்துத் தானே யுண்டாக்குவானே? ஒருகாரணத்தி லுண்டாக்குவானே?

விடை.

பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துமிடத்து முதல்வன் காரணத்தினின்றுங் காரியங்களை யுண்டாக்குவன். அக்காரணம் முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரண மெனமூவகைப்படும், ஒருகுடத்தினுக்கு மண் முதற்காரணம், திரிகை துணைக்காரணம், குலால னிமித்தகாரணம் அதுபோற் பிரபஞ்சத்திற்கு மாயை முதற்காரணம், சத்தி துணைக்காரணம், முதல்வ னிமித்தகாரணம்.

பாஸ்கரியன் மதம்.

அருவத்தி லுருவம் வராது, அவிகாரத்தில் விகாரம் வராது ஆகலின் மாயையிற் பிரபஞ்சம் வராது.

மறுப்பு.

அருவமான வாகாயத்தில் வாயுமுதலிய பேதங்களும், மேகங்களும், மின்னல்களும், இடிகளுந் தோன்றுமாறுபோற் றோன்றும்.

புத்தன்வினா.

மாயையினின்றும் பிரபஞ்சமுண்டாம் வகையெவ்வாறு?

விடை.

பூமியின்கண் மண்ணின் விகாரமாகிய கடாதி காரியங்கள் *குலாலனலுண்டாக்கப்படுமாறுபோல தான் கருதிய சகத்தி லுண்டாய காரியமெல்லாந் தத்தங்காரணங்களிலே யுதிப்பிப்பன்.

புத்தன்வினா.

அருவமாய பதியொருதொழிலை யெவ்வாறியற்றுவன்?

விடை.

அமூர்த்தமாய் அப்பிரத்தியட்சமாய் நிராதாரமாய் நிற்குங் காலமானது தாத்துவிக சகல பிரபஞ்சங்களையுந் தோற்றுவித்து நிற்பித்துப்போக்குவிக்குமாறுபோல பதியியற்றுவன்.

ஆசீவகன் வினா.

நிர்விகாரியாய பதிமுத்தொழிலைப் புரியுமிடத்தவனுக்கவை பாரமாகாதோ?

விடை.

யாதாமொருவன் கற்கப்பட்ட வேதாகமங்களின் சத்தமத்தமாகிய விரண்டுங் கற்றவனறிவிலேயிருந்து வருத்தமற வவனிடத்திற்றோன்றி யொடுங்கு முறைமைபோலவும், சாக்கிர முதலியவவத்தைகளைந்து மான்மாவினிடத்துப் பிரயாசமற வொடுங்கித்தோன்று முறைமைபோலவு முதல்வனிடத்துப் பாரமின்றித்தோன்றும்.

புத்தன்வினா.

சங்காரகாலத்துப் பதியினிடத்தொடுங்கின வான்மா மீளவுந் தோன்றுவானேன்?

விடை.

மலநீங்காது தநுமுதலிய வுபசம்மாரப்படுகையாற் புனருற்பத்தியாகவேண்டியதாயிற்று.

புத்தன்வினா.

ஆன்மாக்களுக்கு மலங்களுக்கு மழிவில்லையாயின் சங்காரகாலத்திற் சங்காரப்பட்டவை யாவை?

விடை.

ஆன்மாக்களுக் கநாதியிலே மறைப்பையுண்டாக்கி மயக்கிக்கொண்டு நிற்கிற ஆணவமலத்தின் சத்திகளை நீக்குகிற மாயையிற் காரியமாய முப்பத்தொரு தத்துவங்களுமழியும்.

பாஞ்சராத்திரிவினா.

சிருட்டிக்குப் † பிரமனுந் திதிக்கு விண்டுவுஞ் சங்காரத்திற்கு ருத்திரனுமாக, முக்காலத்திற்கு முத்தொழிற்குஞ் சங்காரகர்த்தாவே யுளனெனலெவ்வாறு? பிரமவிண்டுக்கள் தங்கள் பலத்தின னிலைபெற்றிரார?

விடை.

சிருட்டி திதி நிமித்த முண்டானவர் நிலைபெற்று நிற்கிற் பிரபஞ்சஞ்சங்காரப்படாது ஆகலினவர்க ளுபசம்மாரப்படுவர்.

* முதல்வன் பிரயோசக (ஏவுகிற) கர்த்தா, குலாலன் பிரயோச்சிய (ஏவப்படுகிற) கர்த்தா ஆகலிற் பிரதிஞ்ஞாவிரோதமின்று.

† இரணிய கருப்பமதத்தையு மறுத்தற்பொருட்டுப் படைப்புக் கடவுளையு முடன்கூறப்பட்டது.

பாஞ்சராத்திரி வினா.

சிருட்டி திதிக்கர்த்தர்க ளுபசங்காரப்படின் சிருட்டியா திகிருத்திய மொழிந்து பிரபஞ்சஞ் சூன்யமாய்விடாதோ?

விடை.

தனக் கேறில்லாத முதல்வனே சிருட்டி திதி கர்த்தர்களையும் பிரபஞ்சத்தினையுஞ் சங்கரித்து நிற்கையாலும், புனருற்பவ முண்டென்று கேட்கப் படுகையாலும், பாரிசேடப் பிரமாணத்தால் அம்முதல்வனே சூக்கும சிருட்டி யுண்டாக்கித் தூல கிருத்தியங்களைப் பண்ணுவர், ஆசையாற் றடையற்ற இச்சா ஞானக்கிரியைகளை யுடைய முதல்வனு லான்மாக்களியாரு முற்பத்தியாதி தருமங்களைப்பெறுவர். அல்லதூஉம் சங்கார காலத்திலேனை யிருவருந் தங்களாற்றலுட னிலைபெற்றிருப்பாரே லுலகஞ் சங்காரப்படுதலில்லையாம். சங்காரக்கடவு ளெனப்படுவோன் சிலவற்றை நீக்கிச் சங்கரிப்பானல்லன். அத்தன்மையனான சங்காரக்கடவுளை வேறு சங்கரிப்பாருமில்லை ஆகலின் முழுதுஞ் சங்கரித்த பின்னரவனொருவனே யெஞ்சி நிற்றலா லொடுங்கிய வுலகங்கட்கு அச்சங்கரனே பெரிய வாதரவாம், அவனே யொடுங்கிய வுலகத்தை மீளத் தோற்றுவிப் பதற்கும் நிறுத்து விப்பதற்கு முரியனும்.

பாஞ்சராத்திரி மதம்.

உலகிற்கு முதற்காரணமாய மூலப்பகுதி வாசுதேவ னுருவாகலா னுலகுமவன்மாட் டொடுங்குமென்னலே யமைவுடைத்து, முதற்காரணத்தின் வேறாய் நின்ற நிமித்தகாரணமெனக்கொண்ட சங்காரக் கருத்தாவின்மாட்டொடுங்கு மென்றல் பொருந்தாது.

மறுப்பு.

அங்ஙனங் கொள்ளின் மூலப்பகுதிக்கு மேலுளதாய புவனங்க ளதனால் வியாபிக்கப்படாமையிற் கீழுள்ள வேகதேச மாத்திரையே யாண்டொடுங்குவதன்றி மாயாக் காரியத்தொகுதி முழுவது மாண்டொடுங்காது.

பாஞ்சராத்திரி வினா.

பிரபஞ்சத்தைச் சிருட்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும் வருகிற கிருத்தியங்கள் மூன்று முதல்வனுக்கனுதியே யுண்டாயிருக்கின் ஆன்மாக்களைப்போல வவனும் விகாரமடையானோ?

விடை.

ஆதித்தன் சந்நிதியிற் றுமரையானிதலரும், சூரிய காந்தக்கல்லக்கினியை யுமிழும், சலஞ்சுவறும் இவையாதித்தனாற் செய்யப்பட்டு மவனுக்கு விகார மில்லாததுபோல முதல்வன் விகாரமற்று நிற்பன்.

பாஞ்சராத்திரி வினா.

சூரியன் சங்கற்ப மில்லாமற் றானே யுலக சேட்டை நடப்பதுபோலச் சிவசங்கற்ப மில்லாமற்றானே பஞ்சகிருத்திய நடக்குமெனின் முதல்வனுக்குச் சர்வஞத்துவ பங்கம் வாராதோ?

மறுப்பு.

பிரயத்தின மில்லாமலு மாயாச மில்லாமலுஞ் சங்கற்பசகிதமரசன் சந்நிதான மாத்திரத்து ஆஞ்ஞாசக்கர மந்திரியாதிகளிடத்திலடக்கின்றாற்போல முதல்வன் சங்கற்ப மாத்திரத்தாற் பஞ்சகிருத்திய நடக்கும்.

அனேகேசுரவாதி மதம்.

தேர்முதலாயின பலர்கூடிச் செய்யக்காண்டலி னவற்றினு மதிக விசித்தரமான வுலகத்திற்கு முதற்கடவுளர் பலருண்டு.

மறுப்பு.

தேர்முதலாயின பலராற் செய்யப்படினு மப்பலரு மொருவ னேவல்வழிநின்றே செய்பவராகலானும், வேதத்துட் காரணவாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அக்கினி சூரியன் முதலியோரைக் காரணமென்றது குயவன்போல வவாந்தரகாரணம்பற்றியேயாகலி னவையெல்லா மாகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்கு மாகலானுஞ் செய்துஞ் செய்வித்து மெல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கு முதற்கடவுள் சங்காரகர்த்தா வொருவனேயாம்.

புத்தன் வினா.

சிருட்டியாதி கிருத்தியங்களை யென்ன பயன் கருதி பதி செய்கின்றனன்?

விடை.

பதியினுடைய * திருவிளையாட்டென்று சொல்லலாம்.

புத்தன்வினா.

திருவிளையாட்டென்னின் பதி பாலரைப்போற் பயனற்ற காரியஞ் செய்பவனாகானோ?

விடை.

ஆன்மாக்களுக்கு நிலைபெற்ற போக மோட்சங்களைக் கொடுப்பதற்கும், அனாதியே சகசமாயிருக்கிற மலங்களைப் போக்குதற்கும் காரணமாகச் செய்தானென்றும் அனுக்கிரகத்தின் பொருட்டென்றுஞ் சொல்லலாம்.

புத்தன் வினா.

பதி யனுக்கிரகமுடையரேல் சங்கரிப்பானேன்?

விடை.

ஆன்மாக்களுக்கு இருவினை நுகர்ச்சியாலுற்ற விளைப்பை யொழித்தற்பொருட்டுக் காரியங்களை முதற்காரணத்தில் மறைத்துத் தேகங்களைப் பிரித்து அறிவு இச்சை தொழில்களை மறைத்தலாம்.

புத்தன் வினா.

அவ்வாறிளைப்பாற்றிவிடாம லான்மாக்கள் துக்கத்தினை யனுபவிக்க மீளவுஞ் சிருட்டிப்பானேன்?

விடை.

மலநீங்குகைக்குக் காரணமாக ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகங்களைக் கொடுத்துக் கன்மத்தைத் தொலைப்பித்தல் அதாவது முதற்காரணத்திலிருந்து காரியத்தை வெளிப்படுத்தலுந் தேகங்களைக்கூட்டி மறைத்திருந்த அறிவு இச்சை தொழில்களை வெளிப்படுத்தலுமாம்.

அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தரமுதலியார்.

(தொடரும்)

* பத்துப்பாரஞ் சுமக்குஞ் சாத்தனுக்கு ஐங்கலபாரஞ் சுமத்தல் விளையாட்டென்பதுபோலும்.

## பிராணலயம்.

(204-ம் பக்கத்தொடர்ச்சி.)

சிலசமயங்களில் பாயும் கிரணங்களற்று வட்டமாய்த்திரண்ட வெண்ணிறச் சோதிவடிவங்கள் தோற்றுகின்றன. அப்பொழுது, விழியை அசைக்காமற் கொஞ்சநேரங்கூட அவைகளின்மீது கவனமாய்த் தாரணைசெய்வது எளிதன்று. ஆகையால், இப்படிப்பட்ட சோதியில் "சலனதிருஷ்டி" (அசையும் பார்வை) யுடன் தாரணைப்பியாசஞ் செய்யவேண்டுமென்று "மண்டலப்பிராஹ்மணோப நிஷத்"திற் சொல்லப்பட்டிருக்கின்றது: చలనదృష్ట్యా వ్యోమభాగవర్తినః పురుషస్యదృష్ట్యగ్రే జ్యోతిర్మయూఖా వర్తంతే. இந்த சோதிப் பகுதில் திருஷ்டியை நிலையாய் நிறுத்தலாமென்றும் அதே உபநிஷத்து சொல்லுகின்றது. அஃது அப்படி இருந்த போதிலும், சலனமில்லாமல் தியானஞ் செய்ய முடியுமென்று விளங்கவில்லை. நாதமாகவும் சோதியாகவும் பிராணன் திரியும்பொழுது, அவைஇரண்டும் இல்லாத இடங்களிற் பிராணன் சோஷித்துப்போகின்றது. அவ்வாறு பிராணன் சோஷித்த பாகங்கள் அசைவற்று உயிரற்றவைகளைப்போல் தோற்றுகின்றன. அந்தப் பாகங்கள் இருக்கின்றன வென்னும் நினைவுகூட இருப்பதில்லை. இஃது உண்மையென்று வேதம் சொல்லுகின்றது:—స్వాత్మన్యేవావస్థితోహం తురీయాఖ్యోపదేశం, అనన్తరేవశక్తానామస్య క్రమేణప్రాణసన్తతిః. జ్వాలాజాలపరిత్యక్తం ధూమదగ్ధేంధన ఇవానలః, ప్రబుద్ధోపిసుషుప్తిస్థః సుషుప్తః ప్రబుద్ధవాన్. తుర్యమాలంబ్యకాయాంత స్థితో మిస్తంభితస్థితిః. "நான் என்னுடைய சொந்த ஆத்மாவினிடத்தித் துரியமென்னும் நிலையில் எப்பொழுது மிருக்கின்றேன். சுவாலையாய் எரிந்துகொண்டிருந்த தணலில் நெருப்பு தணிந்து இல்லாமற் போவதுபோல, பிராண சந்ததிகள் (பிராணசக்தியும் அதன் வேற்றுமையினுலு திக்கும் சோதி முதலியனவும்) லயமாகின்றன. (தன்து) ஆத்மாவின்கண் பிரஜ்ஞை பூர்த்தியாய் இருந்தபோதிலும், ஸுஷுப்தி, அல்லது, அயர்ந்த நித்திரையில் பிரஜ்ஞை யற்றிருப்பதுபோல் இருக்கின்றான். நல்ல தூக்கத்திற்போல பிரஜ்ஞை இல்லாதவனைத் தோற்றியபோதிலும், பாரமார்த்திக தசையில் (ஆத்மநிலையில்) அவனுக்குப் பிரஜ்ஞை இருக்கின்றது. தேகத்திற்குள் துரியமென்னும் (நாலாவது அவஸ்தை) ஸ்திதியைப்பற்றிக்கொண்டு ஸ்தம்பத்தைப்போல் இருக்கின்றேன்"— 'அந்ந பூர்ணோபநிஷத்து.'

## ஈற்றயல் இருளும் ஒளியும்.

பிராணன் எவ்வாறு லயமாகின்றது? அது மனது, நாதம், சோதி, ஆகிய இவைகளாய்த் திரிவதனுற்றான். ஸமாதிஸ்திதியிலும் பின்வரும் வரியிற் சொல்லிய அநுபவம் உண்டாகின்றது:—

సహప్రణవపర్యన్తం సూత్రదీర్ఘేణనిస్సృతశ్వసేన.

அஃதாவது, "பிரணவம்வரைக்கும், நூல்போன்ற நாடியின் வழியாய்த்தீர்க்க (நீண்ட) சுவாஸத்தோடு" என்று அர்த்தம். இதன்படி பார்த்தால், ஸமாதி காலத்தில் தீர்க்க சுவாஸம் விடப்படுகின்றது என்று ஆகும். இதனால், பிராணதத்துவத்தில் அசைவு இருக்கின்றதென்றும், பிராணதத்துவத்தின் மூலமாய்த் தேகத்தின் இதர பாகங்களிலும் அசைவு இருக்கின்றதென்றும் தோற்றுகின்றது.

மனது பூர்த்தியாய்ப் பரஞ்சோதியாகத் திரியுமென்று **போக முனிவர்** சொல்லுகின்றார்:—

> தெச்சென்ற வெழுத்தடங்கில் ஜோதிகாணும்
> தேகமுமோ விளக்கொளியாம் சிந்தையில்லை.
>
> [காண்டம் 1, பாட்டு 147.]

இதன்படி பார்த்தால், பரஞ்சோதி காண்பது மனதின் தன்மையினுலன்று. இந்த நிலைமையிலும் அசைவு இல்லாததாகத் தெரியவில்லை. 'யோக குண்டலின் யூபநிஷத்' தின் பிரகாரம்

పరమాత్మని లీనం తత్పరం బ్రహ్మైవజాయతే.

తత స్తిమిత గంభీరం న తేజో న తమ స్తతం.

"பரமாத்மாவினிடத்து லீன்மானபிறகு அவன் பிரம்மமே ஆய்விடுகின்றான். ஆகையால் அவன் இருளுமல்லன், ஒளியுமல்லன், தமஸுமல்லன், சோதியுமல்லன்."

அவ்யக்தம்-அக்ஷரம் என்னும் படிக்கு அப்பால், பரமபதமாகிய (முடிவுபொருளாகிய) பரமாத்மாவினிடத்துப்போய்ச் சேருமுன்னர் தமஸும், சோதியும் கலந்த படி யொன்றிருக்கின்றது. ஈற்றயலிற் காணப்பட்ட (கடைசியாய்ப் பரமபதத்தில் லீனமாவதற்கு முன்னுற் காணப்பட்ட) இருளும் ஒளியுமா

கிய பதம் பரமாத்மாவின் நிலைமையென்றென்பது மேலே உதகரித்த வேதவாக்கியத்தினால் விளங்கும். பரமாத்மாவின் பதம், அல்லது, பிரம்மபதமென்பது இருளும் ஒளியுமாகிய படியைக்கடந்து சேஷித்து நில்லாநின்ற 'ஸத்து' என்றும் ஞானுகாரமென்றும் சோதிமயமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது :

అనాఖ్యమనభివ్యక్తం సత్ కించిత్ అవశిష్యతే........విజ్ఞానాత్మా.....:...అథామజ్యోతిరూపకం.

"பரமாத்மாவுக்குப் பெயரில்லை. அஃது இன்னதென்று சொல்லமுடியாதது. எல்லாம் லீனமான பிறகு சேஷித்து நிற்கும் ஸத்து அதுவே. அவர் ஞானஸ்வரூபி, புகையற்ற சோதிமயமானவர்."

'பஞ்சப் பிரம்மோப நிஷத்' தின் பிரகாரம்

వణాంశుక్లం తమోమిశ్రం పూర్ణాబోధకరం స్వయం.

"கடைசியாய்ப் பரமாத்மாவினிடத்து லயமாவதற்கு முன்னுற் காணுஞ் சோதியானது இருளும் ஒளியுங்கலந்து விளங்கும் நிலையாம்." இவ்வுபநிஷத்தின்படியே, மூன்று விதமான இருளுடன்கூடிய தாமத்ரயம் (தாமத்ரயம்) என்னப்பட்ட மூன்று விதமான, அல்லது, மூன்று அந்தஸ்துள்ள சோதியிருக்கின்றது ; ஒவ்வோர் அந்தஸ்திலும் சோதியும் இருளும் ஒன்றேடொன்று கலந்து நிற்கின்றன. முதலாவதாகிய ஸ்தூலமான அந்தஸ்திற் சோதியுமிருளும் கலந்திருக்கின்றனவென்று ஐரோப்பிய பௌதிகசாஸ்திரத்திலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றது. டிண்டல் (Professor Tyndall) என்னும் சாஸ்திரி பின்வருமாறு சொல்லுகின்றார் :—

"வெளிச்சந்தருகின்ற அலைகளைமாத்திரமேயன்றி வெளிச்சந்தராத அனேக அலைகளையும் சூரியன் ஓயாமல் எழுப்பி விடுகின்றான்...........'வித்யுத்' சோதியிலும் இருண்ட கிரணங்கள் சூரியனது வெளிச்சமற்ற உஷ்ணத்தைவிட அதிகமாகவே இருக்கின்றன. வாஸ்தவத்தில், 'வித்யுத்' சோதியின் இருண்ட அலைகளினது பலம், அல்லது, சக்தியானது வெளிச்சந்தரும் அலைகளின் சக்தியைவிட எழுமடங்கு அதிகமாயிருக்கின்றது............இருள் அலைகள் வெளிச்ச அலைகள் ஆகிய இவ்விரண்டின் மிஸ்ரமத்தினாலன்றி (கலப்பினாலன்றி) க்காரியம் ஆகாதெனச் சொல்லலாம்." சூரியனது உஷ்ணகிரணங்களே இருட்கிரணங்களென மற்றோரிடத்தில் 'டிண்டல்' சொல்லுகின்றார். சூரியவெளிச்சம் இருண்ட கிரணங்கள், அல்லது, தமஸுடன் கலந்திருப்பதுமன்றி, 'வித்யுத்' வெளிச்சமும் தாமஸம், அல்லது, இருளுடன் கலந்திருக்கின்றது. பிராணனுக்கும் வித்யுத் சக்திக்கு முள்ள சம்பந்தமும், பிராணன் வித்யுத்சக்தி ஆகிய இரண்டில் ஒன்றை மற்றொன்றாக மாற்றலாமென்பதும் இதுவரை நாம் எடுத்துச் சொல்லிய விஷயங்களினால் தெளிவாகும். இன்னும் விசாரித்தால் அது மேலும் விசதமாகின்றது.

லயஸ்தானத்திற்கு ஈற்றயலில் தாமஸமும் இருளும் காண்பது மிகுந்த சூக்ஷ்மதசையிற் பிராணனும் உட்காரணங்களும் ஏனையவஸ்துக்களாய்த்திரிவதன் பயனாகும். இப்படி இருக்கக்கூடுமென்று ஊகிக்கற்பாலது. சூரிய கிரணத்தொகுதியிற் பிரகாச கிரணங்களைவிட இருட்கிரணங்கள் அதிகமாயிருக்கின்றன. வித்யுத் வெளிச்சத்தின் விஷயத்திலும் பெரும்பான்மை இப்படியே ஒன்றைவிட மற்றொன்று அதிகமாய் இருக்கின்றது. ஈற்றயல் தமஸிலும் இருளிலும் இவ்வாறே ஒன்றுக்கொன்று வித்தியாசமாய்க் கலந்து நின்றாலும் நிற்குமென ஊகிக்கலாம். இதையிட்டே நமது உபநிஷத்துக்கள் முதலில் தமஸைச்சொல்லி, பிறகு சோதியைச் சொல்லுகின்றன.

தி. அ. ஸ்வாமிநாதஐயர்.

(தொடரும்.)

---

## முல்லைப்பாட்டு.

பாண்டிவளநாட்டு மதுரைப்பதியில், கடவுளருளிய சங்கப் பலகையில் வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்த நல்லிசைப்புலவர்களில் நக்கீரனார் முதலியவர்களால் இயற்றப்பட்டு, அச்சங்கப் புலவர்களால் தொகுக்கப்பட்ட 'பத்துப்பாட்டில்' ஐந்தாவதாய் விளங்குவது 'முல்லைப்பாட்டு' என்பது.

ஒவ்வொன்றும் நூறடிச்சிறுமையும், நூற்றுப்பத்தடிப் பெருமையுமுடைத்தாய் அகவற்பாவாற் பத்துப்பாட்டு பாடுவது பத்துப்பாட்டாம். இது, முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலை என்னும் நால்வகைச் செய்யுளில் தொகைநிலைச்செய்யுளின் பாற்படும். தொகைநிலைச்செய்யுள் 'ஒருவருரைத்தவும் பல்லோர்பகர்ந்தவும்' என்றவாறு ஒருவராலுரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவும், பலராலுரைக்கப்பட்டுப் பல பாட்டால் வருவனவுமாம். அவற்றுள், இப்பத்துப்பாட்டுப் பல்லோர் பகர்ந்ததென்க.

பத்துப்பாட்டாவன:—நக்கீரனாரியற்றிய (1) திருமுருகாற்றுப்படை (2) நெடுநல்வாடை, முடத்தாமக்கண்ணியார்மொழிந்த (3) பொருநராற்றுப்படை, நத்தத்தனார் நவின்ற (4)

சிறுபாணாற்றுப்படை உருத்திரங்கண்ணனருரைத்த (5) பெரும்பாணாற்றுப்படை, (6) பட்டினப்பாலை, நப்பூதனார்பாடிய (7) முல்லைப்பாட்டு, மாங்குடிமருதனார் வகுத்த (8) மதுரைக் காஞ்சி, கபிலர் கழறிய (9) குறிஞ்சிப்பாட்டு, பெருங்கௌசிகனார்செய்த (10) மலைபடுகடாம் அல்லது கூத்தராற்றுப்படை, என்பனவாம். இவற்றுள் திருமுருகாற்றுப்படை ஒன்றுமே சைவத்திருமுறைகளில் பதினோராந் திருமுறையிற் சேர்ந்து யார்க்குந் தெரியநின்றது. ஏனைய ஒன்பதும் வழங்குதலருகி மறைந்துகிடந்தன. இவற்றை மிகவு முயன்று, பிரதிகள் சேர்த்து, வழுக்களைந்து அச்சியற்றி உபகரித்த பெருந்தகைமைக்காக நமது பிரமஸ்ரீ சாமிநாதய்யரவர்களுக்குத் தமிழுலகஞ் செயற்பாலதாகிய கைம்மாறு மொன்றுண்டோ?

இப்பத்துப்பாட்டில் ஒவ்வொன்றும் முற்றும் ஆராய்ந்து பொருணிலை யுணர்வார்க்கே யின்பம் பயப்பது. மோனை யெதுகை, முதலிய நிர்ப்பந்தங்கொள்ளாது பெரும்பாலும் செந்தொடை செறித்தாய், அகவற்பாவாலமைந்துள்ள தாகலான், மூலத்தாற் பொருளமைதி எளிதிற் புலப்படுவதன்று; உரையை நோக்குங்கால், பெருமலைவாகவே தோன்றும். ஆகலான்பொறுமையோடு முற்றுங்கூர்ந்து ஆராயவேண்டும். அவ்வாராய்ச்சி வருத்தம் ஒருபோதும் வீணாகாதின்பம் பயக்குமென்க: இவற்றில் வேறுவகையாலறிய முடியாத பூர்வகாலாத்தரசர்களிற் சிலர் சரித்திரங்களும், அக்காலத்து மாந்தரொழுக்கமுதலியவைகளும் வெளிப்படும். இவற்றிலுள்ள கற்பனைகளும், வருணனைகளும் மிகப்பொருத்தமான சுவையுடையனவாம். இக்காலத்து நூல்களிலுள்ளவைபோலப் படாடோபமான கற்பனைமுதலியன கிடையா. இப்பத்துநூலுள்ளும், ஐந்துநூல் 'ஆற்றுப்படை' என்னும் பிரபந்தவகையிற் சேர்ந்தன. அவை திருமுருகாற்றுப்படை முதலாயின. ஆற்றுப்படையாவது:—வறுமை மேலிட்டுப் பரிசுபெறக்கருதி வரும் புலவர், பாணர் (இசைபாடுவோர்), பொருநர் (களம்பாடுவோர்), விறலியர் (பாடன்மகளிர்), கூத்தர், இவர்களை ஓர் தலைவனிடத்துப் பரிசுபெற்று வருவார் ஆற்றிடைக்(வழியிற்) கண்டு, அத்தலைவனது நாடு, ஊர், பெயர், கொடையிவற்றைப் புகழ்ந்துகூறி, அவன்பாற் செல்கவென விடுப்பதாக அகவற்பாவாற் கூறுவது. (ஆற்றுப்படை - வழிப்படுத்துதல்)ஏனைய ஐந்து நூலினுள்ளும் மதுரைக்காஞ்சி யென்பது உலக நிலையாமை யறிவுறுத்துவது: காஞ்சியாவது, வீட்டின்பம் ஏதுவாக அறம், பொருள், இன்பம், முதலியவற்றால், நிலைபேறில்லா வுலகியற்கையைச் சான்றோர் சாற்றுங் குறிப்புளது; ஆதலால் மதுரையிடத்தரசர்க்குக்கூறிய காஞ்சிமதுரைக்காஞ்சியென்றாயிற்று. காஞ்சித்திணைக்கிலக்கணங் கூறிய தொல்காப்பியத்துக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர்செய்த வுரையில் 'வீடுபேறு நிமித்தமாகச் சான்றோர் பல வேறு நிலையாமையை அறைந்த மதுரைக்காஞ்சி இதற்குதாரணமாம்' என இந்நூலையே காட்டியிருக்கின்றார். ஈதொழிந்த முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலையாகிய நான்கும் காமப்பொருளாகிய அகத்திணையமைதி யுடையனவாம். அவற்றுள் இங்கெடுத்துக்கொண்ட முல்லைப்பாட்டைப் பற்றிக் கூறுவாம்:—

இதிற்கூறும் விஷயமாவது, போர்மேற பிரியுந் தலைவன் தான் வருமளவும் ஆற்றியிருவென்றகூறிய சொல்லைப்பிழையாமல் தலைவி யவன் பிரிவையாற்றி இருத்தல். இனி யிவ்விஷயத்துக்கும் முல்லைப்பாட்டென்னும் பெயர்க்குமுள்ள உரிமையை விளக்குவாம்:—இந்நபத்துறையாகிய அகத்திணையானது, முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருளென்னும் மூன்றுறுப்புடையது. நிலம், குறிஞ்சி (மலையும் மலைசார்ந்த இடமும்), பாலை (சுரமும் சுரஞ்சார்ந்த இடமும்), முல்லை (காடுங்காடுசார்ந்த இடமும்), மருதம் (வயலும்வயல் சார்ந்த இடமும்), நெய்தல் (கடலுங் கடல் சார்ந்த இடமும்) என ஐந்தாம். பொழுது, பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுமென விரண்டாம்; பெரும்பொழுது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறும்: இவை முறையே ஆவணி முதலிரண்டுமாத அளவினதாகிய ஆறு பருவமுமே. சிறுபொழுது மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு (சூரியாஸ்தமனம்) என ஆறும். இவை ஒவ்வொன்றும் சூரியாஸ்தமனந் தொடங்கி முறையே பப்பத்துநாழிகை யளவினதாம்.

கருப்பொருளாவன:—தெய்வம், உயர்ந்தோர், இழிந்தோர். பறவை, விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில், என்னும் பதினான்குமாம்,

உரிப்பொருளாவன:—புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய இவையும் இவற்றினிமித்தமுமாம்.

இவ்வுரிப்பொருளுக்கு ஏனைய முதற்பொருளும், கருப்பொருளுந் துணையாய் நிற்பனவாம்: புணர்தலுக்குக் குறிஞ்சியும், யாமமும், கூதிரும், முன்பனியும், பிரிதலுக்குப் பாலையும், நண்பகலும், வேனிலும் பின்பனியும், இருத்தலுக்கு முல்லையும், மாலையும், காரும், ஊடலுக்கு மருதமும். வைகறையுங் காலையும், பெரும்பொழுதாறும், இரங்கலுக்குநெய்தலும், எற்பாடும், பெரும்பொழுதாறும் சிறந்து நிற்பனவாம்.

இவ்வுரிப் பொருளின் பொருளையும், முறையையும், 'அகப் பொருளாவது புணர்ச்சியாகலானும், அஃது இருவர்க்கும் ஒப்பநிகழ்தலானும் முன்னர்ப்புணர்ச்சியும், புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும், அது தலைவன்கண்ணதாகியசிறப்பானும், அதன் பின்னர்ப் பிரிவும், பிரிந்துழிக் கற்பாற்றலைவியாற்றியிருத்தல் வேண்டுதலின் அதன்பின்னர் இருத்தலும், பிரிவின்திறனாகிய பரத்தையிற் பிரிந்துழித்தலைவன்தவறு நோக்கித் தலைவிகலாய்த்தல் இயல்பாதலானும், காமத்திற்குச்சிறத்தலானும், அதன்பின்னர் ஊடலும், ஏனைப்பிரிவு நீட்டித்துழிக்காமங்கைம்மிக்கு அழுங்கலியல்பாகலின் அதன்பின்னர் இரங்கலும்வைக்கப்பட்டன' என்பதனாற் காண்க.

இவற்றுள் தலைவன் பிரிந்த விடத்துக்கற்பாற் றலைவியாற்றியிருத்தல் முல்லைக்குரியதாதலின் அவ்விஷய வுரிமைபற்றி இப்பாட்டு முல்லைப் பாட்டெனப்பட்டது. இது தோழி முதலிய வாயில்கள் தம்முட்கூறியதாகச் செய்யப்பட்டுள்ளது.

(தொடரும்)

ௐ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுரவே நம:.

## கம்பநாடரும் அவர் கவிப்புலமையும்.

(191-வது பக்கத்தொடர்ச்சி).

ஞானசம்பந்தரை ஆளவந்தபிள்ளை யாசிரியரென வழங்குவது எவ்விடத்தும் மரபன்மையால், ஆளவந்தபிள்ளை யாசிரியா எனப்படுவார் ஸ்ரீஆள்வந்தார் என்னும் யமுனைத் துறைவரே ஆகற்பாலர். கந்தபுராணம்-கம்பராமாயணம் முதலான பாரகாவியங்களில் நின்றும் யாதொரு உதாரணமும் எடுத்துக்காட்டாமையால் நச்சினார்க்கினியர் கம்பருக்கும் கச்சியப்ப சிவாசாரியருக்கும் முற்பட்டவர்; ஏறக்குறைய 1,200 ஆண்டுகளுக்குமுன்னே சமணர் காலத்திருந்தவர் எனச் சில கல்விமான்கள் கட்டுரைக்கின்றனர். சங்கச்செய்யுள்களும் தொல்காப்பியமும் தக்க உரையின்றி அருகிக்கருகுவதைக்கண்ட நச்சர் இலக்கியங்களுக்குத் தொல்காப்பிய விதிகளைக் காட்டியும் தொல்காப்பியத்தைச் சங்கச்செய்யுள்கள்முதலான தொல்லைநாளிலக்கியங்காளன் விளக்கியும் பண்டை நூல்களைப் பலர்க்கும் பயன்படுமாறு செய்வதே இவருடைய நோக்கம். அதனால் தமது காலத்தில் நவீன நூல்களான இராமாயணம் ஸ்காந்தமுதலியவற்றில் நின்றும் யாதொன்றும் இவ்வுரையாசிரியர் எடுத்துக்காட்டிற்றிலர் என்பது தேற்றம். சிலப்பதிகார உரையரில் அந்நூலின் உரையாசிரியர் நச்சினார்க்கினியருக்குப் பிற்பட்டவர் என்பது அறியப்படும். நச்சரும் பரிமேலழகரும் ஏக காலத்தினரென்பது பலருந்துணிந்தபடியாதலின் கம்பர் பரிமேலழகரது திருக்குறளுரையைக் கண்டிலரென்பது தெளிவு.

மேற்கூறிய நூல்களையும் உரைகளையும் கம்பராமாயணத்தையும் பற்பலகால் ஓதி முன்னவைகளைப் பின்னதோடும் பின்னதை முன்னவற்றோடும் ஒப்பிட்டு நோக்குவோமாயின் சற்றேறக்குறைய கம்பர் இன்னின்ன நூல்களை நன்கு பயின்றவர் எனத் துணிதல் கூடும். இன்னின்ன நூல்களின் சாராமிசங்கள் இராமாயணத்தில் ஏறியிருக்கின்றன என்பதும் வெளியாகும். இது கல்விச்சுவை யறிந்தவர்க்கு இன்பமானபொழுது போக்காக இருக்கும். தமிழ் நூற்பயிற்சி குன்றி ஒருவாறு இங்கிலீஷ்பயின்று வயிறு வளர்ப்பதே பெரிதாக இருக்கின்ற இக்காலத்தில் இது செய்வது எம்போலியர்க்கு இலகுவானகாரியமன்று. சிந்தாமணி-ஸ்காந்தம்-பெரியபுராணம் என்பனவற்றில் இவர் இன்புடன் நன்கு பயின்றனரென்பதும், திருக்குறளினை ஏனையவற்றினும் சிறந்த அருமருந்தாகப்பருகினவர் என்பதும், பின் காட்டப்படுகின்றவைகளால் ஒரு சிறிது விளங்கும்.

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன

என்ற பெரியபுராண அடிகள்.

நென்மலை யல்லன நிரைவரு தாளம்
சொன்மலை யல்லன தொடுகட லமுதம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்

என்ற இராமாயணச் செய்யுளுக்கு ஆதாரவாகியிருக்கலாம்.

வரம்பெலா முத்தந்தத்து மடையெலாம் பணிலமாநீர்க்[குன்ளை
குரம்பெலாஞ் செம்பொன்மேதிக் குழியெலாங் கழுநீர்க்கொ
பரம்பெலா பவளஞ்சாலிப் பரப்பெலா மன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன் சந்தக்காவெலாங் களிவண்டீட்டம்.

என்ற இராமாயணப் பாடலுக்கு

காடெல்லாங் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை வயலெல்லா நெருங்குவளை

என்ற பெரியபுராண அடிகள் அடியாயிருக்கலாம்.

முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கிப்
புல்லிய நெய்தல்தன்னைப் பொருவரு மருதமாக்கி
எல்லையிற் பொருள்களெல்லா மிடைதடு மாறுநீரால்
செல்லுறு கதியிற்செல்லும் வினையெனச் சென்றதன்றே

என்ற இராமாயணச் செய்யுளைப் படிக்கும்போது

பாரிடை யினையபண்பிற் படர்ந்திடு பாலியந்தத்
தாருயி ரனைத்துந்தத்தம் அருவினைக் கமைந்தநீரால்
சேருறு கதிகளென்ன மரபினிற் றிறமேயென்னத்
தாருவின் கிளைகளென்னத் தனித்தனி பிறிந்ததன்றே.

என்ற கந்தபுராணச் செய்யுள் நினைவு வருகின்றது.

கார்கிளர் கின்றநீத்தம் கவிரிதழ்க் கலசக்கொங்கை
* * * * *
மால்கிளர் கணிகைமாதர் மனமெனப் போயிற்றுமால்

என்ற கந்தபுராணக்கருத்தே

தலையு மாகமுந் தாளுந் தழீஇயதன்
நிலை நிலாதிறை நின்றது போலவே
மலையி னுள்ளவெலாங் கொண்டு மண்டலால்
விலையின் மாதரை ஒத்ததவ் வெள்ளமே.

என்ற இராமாயணப்பாடலில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது.

தி. செல்வகேசவராய முதலியார், M. A.

(தொடரும்)

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஞானசம்பந்தகுரவே நம:.

## திருவானைக்காவுலா.

(207-வது பக்கத்தொடர்ச்சி).

தாரா கணந்தரளத் தாராகிப் பேரண்டம்
வாராகி யிற்றைக்கு மற்றைநாட்—சேராது
போகப் பொழுதிற் புடைத்துப் பொருமிமிக
மோகத்தை நல்கு முலையினள்—மேகத்துக்
கப்பாலு நீண்ட * வதிரேக மேனிலத்தி
லெப்பா வையரோடு மெய்தியிருந்—தொப்பிலா
மாணிக்க வம்மனையேழ் வாங்கியெறிந் தேற்பளவிற்
சேணிற் புயலிலவை சென்றெளிப்பக்—காணுள்
திகைத்துமட வீரினிநாந் தேடுவமெங் கென்றுள்
வகைக்குடக வெற்பின் மழையோ—டுகுப்புண்டு
காவிரியிற் போதுங்காண் காவையர னூர்க்கென்று
நீவிளம்பி லாரம்போ னேருங்காண்—நாவலர்கோன்
† அன்றாற்றி லிட்டபொரு ளாரூர்க் குளத்துவர
என்றூர்க் கிதுவோ வெளிதென்ன—நன்றென்
றுவந்து பரவி யுடனே சோதிப்பான்
நவங்கொ டளநின்று நண்ணிச்—சிவன்கோயி
லெய்த வமைந்தாளவ் வெல்லைக்கட் டில்லைக்குட்
செய்த நிருத்தத் திருத்தாளன்—மெய்தனைப்போல்
நந்திக் கினிய பிரா‡ னாரணரு நாகருமுன்
சந்திக்க வாங்கியபொற் சாபத்தான்—வெந்த
சுடலைதனி லாடியுந்தான் சுத்தனு கைக்கோர்
சடிலமிசைக் கங்கை தரித்தோன்—உடலில்
நிறைந்த பணியழக னிலைக் கிரீபன்
சிறந்த செழு நீர்த் திரளான்—பிறங்கற்
குமரிக் கொருபாகன் கோடுகுழல் காளந்
தமரிக்க வேதந் தழங்க—நிமிர் சிகரப்
பாரமணித் தேரிற் பவனிவரக் கண்டளவே
ஒருநினை வொன்றுசெய லொன்றாகி—யாரத்
தழுவுவாள் போற்செல்லுந் தன்றனபா ரத்தைக்
கழுவுவாள் போற் கண்ணீர் காலும்—நழுவுங்

குருகுங் கலையுங் குவலயத்தார் சொள்ள
வுருகூந் தளரு முயிர்க்குஞ்—சருகுபடு
நெஞ்சோ டயருமிவ ணோர்கண்டுங் காணு*வம்
பஞ்சோ னுடன்சென் றூதியான்—செஞ்சோதிச்
சித்ர மணிமகுடத் தெய்வத்தே ரிற்பவனி
யத்தெருவிற் கண்ட வணங்கொருத்தி—சுத்தத்

### தெரிவை.

தெரிவை புவனத் திலோத்தமை வெள்ளிக்
கிரியின் மருவாத கேகை—கரிவனத்தில்
அத்தற்கு நஞ்சை யளித்தபிழைக்†கம்போதி
மெத்தப் பயந்து பயன் வேறுதவிச்—சித்தத்தை
இன்புறுத்த வேண்டி யிரண்டாவ தோர்பிறையு
‡முன்படைத்த தொவ்வாத முண்டகமு—மின்பரப்பும்
§வித்துருமு மொப்பிலா வெண்முத்தும் வேறான
புத்தமுதஞ் ||சஞ்சரிகப் புஞ்சமுங்—கைத்தலத்து
முன்னிரக்கஞ் செய்யு முதல்வனைப் போலப்
பின்னிரக்கஞ் செய்யும் பெருவிடமும்-இன்னிசையைத்
தானே முரலுமணிச் சங்குங் ¶கிளைத்தருவும்
வானோர் பெருதேங்கும் **வாரணமும்—மானத்
தனிமை யெழில்வல்லி ††சாதகமும் போத
இனிய வரம்பை யினமும்—புனிதமாம்
மல்லலணி ஞெண்டும் வராலுங் கமடமு
நல்லனமுஞ் சேர்த்துமலர் நாரிநிகர்—ல்லவெனப்
பெண்ணுருவ மாக்கிப் பிறங்குமணி பாரித்துக்
கண்ணுதன் முன் விட்டனைய காட்சியாள்—வண்ணமலை
யீசனையே வேண்டி யிருந்தவஞ்செ யாநின்ற
ஆசி யனைய வுரோமத்தாள்—ஆசைப்
பகலுமிரு ளாகாமற் பாதுகாத் தோதி
முகிலின் விதுவை முடிப்பாள்—மகரம்
உகளுநதி சூழ்ந்த வுலோகரையோ லோக
மகளிரையு மாலாக்க வல்லாள்—சகல
வனிதையர்கள் சூழ மதனு லயத்தி
லினிதுமலர்ப் பீடத் திருந்து—தனதுரு
சேவித்து நிற்குஞ் சிலைவேளைப் பார்த்துன்னை
யேவிப் பணிகொண்டோ மின்றளவும்—நீவிரும்ப
யாஞ்செய்யுங் கைம்மா றியம்புவா யென்பாளைப் [மக்
பூஞ்செய்ய தாள்பணிந்து போர்மாரன்—‡‡ஈஞ்சையெ

* அதிரேகம் - மேற்பட்டது.

† 'ஆற்றினில் விழ்த்திக் குளத்தினிலெடுத்துப் பரவையில ன்று புக்களித்த' என்றார் 'திருவாப்பனூர்ப் புராணசிரியர்.

‡ திருமால் அம்பும், ஆதிசேடன் நாணும், மேருமலை வில்லு மாதலின் நாரணரு நாகருஞ் சந்திக்க வாங்கிய பொற்சாப மென்றது. நாகரு மந்நாகரு மெனவும்பாடம்; நாக (சேவ) லோகத்தாரும், நாக (சுவர்க்க) லோகத்தாரும் சந்திக்க வளைத் தவில் என்றும், மேருத்தாணுவாயுல கினைத்தாங்கி நிற்பதாத லால் இருதலையும் வளைந்தபோது இருநாகமும் சந்திக்க நேர்ந்த தென்றும் கொள்க.

* அம்பஞ்சோன - பஞ்சபாணன்.
† அம்போதி - கடல்.
‡ பதும நிதி.
§ வித்துருமம் - பவளம் (கடைக்குறை).
|| சஞ்சரிகபுஞ்சம் - வண்டின்கூட்டம்.
¶ கிளை - மூங்கில்.
** வாரணம் - இங்கே கொங்கையாகிய யானை.
†† வல்லிசாதகம் - கற்பக்கத்திற்படர் கொடி.
‡‡ இஞ்சை - ஈகழ்ச்சி.

கேந்தா னிபக்கா விறைவனவ னேச்செயிக்க
ஆய்ந்தாய்ந்து பார்ப்பே னறிகிலேன்—வாய்ந்த
படைத்துணையா நீவந்தாற் பஞ்சசரத் தாலே[புயத்தில்
விடைத்துணையா னைப்பொருது வெல்வேன்-தொடைப்
வாகை யெனக்காம் வலப்பாக மக்கணமே
தோகை யுனக்காந் தொடங்கென்ன—ஓகையுட
வீதோ வரிதென் றெழுந்தான் * மெய் யில்லானை
நீதேரில் வாவெனப்பின் னேர்கொண்டு—வீதிதனிற்
சென்றாள் † விழிவே றிருப்புருவ விற்கோலி
நின்றாளல் குற்றேர் நிறுத்தினாள்—குன்றை
முறிக்கு முலையானை முன்னணியாய் மொய்கார் [வளைத்
நெறிக்குழன்மாப் பின்னணியாய் நின்றாள்—குறிக்கை
தானை மருங்கு தலைழப்ப வணிவகுத்தாள்
யானைவனத் தானு மெளியனே—‡ சேனைக்
கணந்தொடர வன்னியார் கைவளர்ந்து போத
அணங்கு மயில்வடிவா ளத்தத்—திணங்கமுடி
§ யெம்புருவ விற்சிகர மெவசிராவிர
விம்பா பாசுகைச கொண்டே—யும்பர்
கரபத் திரம்பொழியக் கல்லார வாகு
வளையிற் பணிவலய மன்ன—அரியின்
முடுகு சினத்துரக முன்கைச் செறிய
வடுதிறற்கைம் மானுநின் றூர்ப்பக்—கொடிய
துடியதிர நெற்றிக்கண் சோதிதர வேத
வடிவிவுளித் தேரேறி வந்தான்—பிடிநடையாள்
கண்டா ணினைந்த கருமமறந் தாள்காதல்
கொண்டா ளுடல்புளகங் கூடினாள்—* புண்டரிக
அம்பரா வாதிப் பெருஞ்செல்வா வானைக்காச்
சம்புநா தாசுந்த்ர சேகரா—பைம்பவள
வண்ணா வசந்த வழகா மதனையடு
நண்ணா வடியேனைக் காவென்றா—ளொண்ணுதலாள்
போற்றுவதுகேட்டுப் பொருணுகியென்னையலர்[தோன்
தூற்றுவளோ வென்றலைந் தூற்றினான்—கூற்றுதைத்
தன்னையடைந் தார்க்குத் தவறுவர வொட்டுவனோ
மின்னை யுவந்தி விழிவைத்தான்—பின்னை
யுருவிலியாங் கென்செய்வா னுத்தவூ றுருத்துச்
செருவிலியா யீசன்பின் சென்றான்—வருதெருவிற

## பேரிளம் பெண்,

பொற்புற் றவளொருத்திப் பொன்னுட்டின் மின்னார்க்
பிற்பட்டு முற்பட்ட பேரிளம்பெண்—வெற்புமதிற்[குப்
காவைச் சிவனரைப் போலே கரடதட
மாவைப் பணிவிக்கும் வார்த்தையாள்—ஆவிவதை
பண்ணுதலாற் பேணுதலாற் பாகீ ரதிமுடித்த [வழ
கண்ணுதலா னின்னருள்போற் கண்ணினாள்—வண்ண
கெல்லாஞ் சுமந்துகனத் தேயோ வினியதலத்
தல்லாது மாறில்லை யாகியோ—நில்லாக
கிளரத் திசையிலிடங் கிட்டாத வாறோ
தளர்சிற் றிடைக்கிரங்கித் தானோ—தளர்சிற்
றிடையரிகண் டானை யெதிர்ப்பதோ விர்த்மன்
படையிலடி சாய்பர்பீ பதமோ—விடையோன்
அழுந்துவனை யாகத் தணையப் பெருதெ
யெழுந்துவளர்ந் தென்னபய னென்றோ-செழுங்கடலி
லாங்கால காலங்கண் டஞ்சியநா ளண்டரெல்லாம்
வாங்காது கைவிட்ட மந்தரமோ—நீங்கான்

(தொடரும்.)

---

* மெய்யில்லான் - அநங்கன்.

† இயற்கையான அலங்காரத்தைப் போர்க்கோலமாக வர்ணித்திருப்பது காண்க; இதில் தானை - துகில், சேனை ; அணிவகுத்தல் - ஆபரணம் பூட்டுதல், படைவகுத்தல்.

‡ சேனைக்கணந் தொடர என்பது முதல் தேரேறிவந்தான் என்பது வரையுமொரு தொடர். இதிற் சிவபிரானுடையப வனிக் கோலத்தைப் போர்க்கோலமாகச்சிலேடை முகத்தால் மிகஅருமையாக வர்ணித்திருக்கிறது.

§ இவ்வடிவும், அடுத்ததும். பொருள்விளங்கவில்லை. முன்னரிந்நூலை யச்சிட்டவர் 'யம்புருவஞ்சீகரனே யாகச்சிர மேரு - வின்பச்சிலையாயெதிரேந்த - வும்பர்' என்று பதித்திருக்கிறார். அதற்கு மிதற்கும் வெகுதூரம ; இங்கே சிலேடையாதலால் பாடநிச்சயம்பண்ணுவது கஷ்டமாயிருக்கிறது ; எட்டிவிருந்த வாறுகாட்டி யிருக்கின்றோம் அப்பிரகடனசிரியர் - 'அணங்குமயில் வடிவாளத்தத் - திணங்க' என்பது - தெய்வத்தன்மை பொருந்திய மயில் வடிவினள் (உமை) அர்த்தபாகத்திலிணங்க, என்றும், போர்க்கோல வர்ணனைக்கு, அணங்கும அயில் வடி வாள் அத்தத்து இணங்க, எனறுபிரிநது, வருந்துதற்கேதுவாகிய வேலும் வடித்தவாளும் கையிற் பொருந்த என்றும் பொருள்படுமருமை யறியமாட்டாது 'வணஙகுமயில் வடிவர் வாழ்த்த - விணங்குமுடி' என்று கண்ணைமூடிக்கொண்டு படித்தும், மேலும் 'அரியின் முடுகு சினத்துரகம்' என்பது தீப்போல முடுகுஞ் சினத்தையுடைய உரகம் (பாம்பு) என்றும், காற்றைப்போல் விரைந்தோடுகின்ற சினத்தையுடைய துரகம் (குதிரை) என்றும் பொருள் படுந்தொடரை 'முடுகுசினத்துரகன' என்றும், அதன்மேலும், 'கைம்மானு நின்றூர்ப்ப' என்பது கையிலுள்ளமான் என்றும், கைஙயுடையமான் (யானை) என்றும் பொருள் படுவதை 'கைமாமணி நின்றூர்ப்ப' என்றும் பதித்துக் குதிரைப்படை, யானைப்படை, இவற்றினணியைக்கெடுத்து 'வேதவடிவிவுளித்தேர்' எனபதை 'வேதவமவமுறுந்தேர்' என்று தேரிலுங்கைவைத்து அஞ்சாது விபரீதம் பண்ணியிருப்பது போல யாமுஞ்செய்வதற்குக் கூசுகின்றோம் - இத்தகையார், மேலிரண்டடிக்குங் கொண்டபாடத்தை யெப்படி நம்புவது? அந்தோ! நமது காளமேகப்புலவர் பெருமான் திருவாக்கிலிருந்த இவ்விரண்டடியும் பிறந்த சொரூபமயாதோ ! பாயசத்துக்குப் பெருங்காய மிழைக்கும் பண்டிதர் கையிலகப் பட்டுப் பாடழிந்து கிடக்கின்றதே ! ஓ ! தமிழணங்கே ! யார் முகமாகவாகிலும் இதன் சொரூபத்தை யெமக்குணர்த்தியருளாயோ !

* புண்டரிக அம்பரம் - புலித்தோலாடை.

## பதார்த்ததீபிகை மூலமும் அதன் உரையும்.

முன்முறையில் பிழை திருத்தம்

| பிழை. | திருத்தம். |
|---|---|
| மாபு | மரபு |
| சொல்லவருவாருடைய | சொல்லுவாருடைய |
| எழன்மேல் | எழின்மேல் |

திரவியங்களின் வகை.

மண்புனறீவளி வான்போழ்து திக்காத்து
மாமனமென்
றொன்பது முற்பொருண் மூவேண் குணங்க
ளுருவஞ்சுவை
பின்பகர் நாற்ற முறலெண் ணளவு
பிரிதியைபு
கண்பெறு நீக்கம் பிரத்துவம் பின்மை
கடுந்திண்மையே

(இதன்பொருள்):— முற்பொருள்- எழனுள் முன்னின்ற திரவியம் மண் என்று- பிருதிவியும்; புனல் என்று- அப்புவும், தீஎன்று- தேயுவும், வளி என்று- வாயுவும், வான் என்று-ஆகாயமும், போழ்து என்று-காலமும், திக்கு என்று- திக்கும், ஆத்துமா என்று-ஆன்மாவும், மனம் என்று- மனமும் என, ஒன்பது-ஒன்பது வகைத்து ,அங்ஙன மாயின்,

மொழி பெயர்ப்பு வெண்பா

"முன்மையொடு பின்மை முயங்கிக் கறுத்தியங்குந்
தன்மையினு லாதாரந் தானின்றி—என்னவிதம்
இக்குணங்க ணிற்கு மெனவெண்ண லாலிருடான்
எப்பொருட்கும் வேறென் றியம்பு"

(இதன்பொருள்):— முன்மையொடு பின்மைமுயங்கி-முன்னேக்காருவாவிலுமிற்றைக்காரு வாவிலு மிருவொரு தன்மைத்து எனக்கால பரத்துவா புரத்துவமும் இருளவ்விடத்துள்ளது இருளிவ்விடத்துள்ளது எனத்திக்கின் பரத்துவாபரத்துவமும் பொருந்தி. கறுத்தியங்குந்தன்மையினல்- கருவடிவுடையதாகி ஆண்டு இயக்குகின்றது எனக்கருமைப் பண்பும் இயங்குதற் றொழிலும் காணப்படுங் காரணத்தால், இக்குணங்கள்- முன்மை முதலிய இந்தக்குணங்கள். ஆதாரமின்றி- தமக்கொரு பற்றுக் கோடின்றி, என்னவிதம் நிற்கும்-எப்படி நிலைபெறும், எனவெண்ணலால்- என்று கருதவேண்டி வருதலால், இருள்தான்- இருளானது, எப்பொருட்கும்- ஒன்பது திரவியத்தினும், வேறென்று-வேறொரு பொருளென்றீ, இயம்பு, கருதிக்கொள் என்பதே: என்னும் இதனாற் பெறப்படுங் கண்கூடும் அதன் வழித்தோன்றுங் கருத்தும் இருளையொன்பதின் வேறெனக் காட்டாநிற்கவும் திரவியமொன்பதெனவரையறுத்தும் போந்ததென்னை? அது வேறுதல் வடிவுடைமையின், ஆகாயமுதலிய ஐந்தனுள்ளும், உருவுடைமையானும் இடையறுதியங்காமையானும் வாயுவினும் ஒளிவடிவிற்றன்மையானும் வெம்மையின்மையானும் தேயுவினும், குளிர்ச்சி யின்மையானும்; கருவடிவிற்றுகலானும் நீரினும் நாற்றமுடைய தன்மையானும் பரிசமின்மையானும் நிலத்தினும் அடங்குவதன்று எனவரும் கேவல வியதிரேகியனுமானங்களால் பெறப்படும்: இதனைப் பத்தாந்திரவிய மன்றென விலக்குவதெப்படி; என்பையேல்;—இருள் வடிவுடைப் பொருளன்று, ஒளியோடுங் கூடாதவிழியாற் கவரப்படுதலின்,* ஆலோகத்தினபாவம் போலும் வடிவுடைய பொருள் விழியாற்கவர்தற்கு ஒளியே காரணமெனக் கருதப்படுதலின். பேரொளியுடைய தேயுப் பொதுமையினபாவமே இருள் என்பது பெறப்படுதலின் காலதேச பரத்துவா பரத்துவம் முதலியவற்றினுணர்ச்சி மயக்கத்தாற் றோன்றியதேயாம் எனக் கொள்ள வருதலின் இருள் அபாவ பதார்த்தம் என்பது சித்தித்ததென்றறக— அஃதங்ஙனமாகுக;

(எஞ்சியன மறுமுறை வெளிவரும்)

பூ. முருகேச பண்டிதர்.

## விசேஷக்குறிப்புகள்.

ஸ்ரீசிதம்பரம் ஆனந்த நடராஜமூர்த்தியின் திவ்விய சந்நிதானத்தில் விளம்பிஞூ சித்திரைமீ° 1௨ விஷுபுண்ணிய காலத்தில் சூரிய அஸ்தமயன தருணத்திலே இலக்ஷதீப மகோற்சவம் நடத்தவுத்தேசித்து அதற்கு முதல் நாளாகிய சோமவாரதினம் இராத்திரியில் துலாலக்கினமும் மூலநக்ஷத்திரமுங்கூடிய சுபகாலத்திலே பூஜையாக ஆரம்பமும் சித்திரைமீ° முதற்றேதியாகிய மறுநாள் மூலநக்ஷத்திரமும் கடகலக்கினமுங்கூடிய சுபவேளையில் உற்சவமூர்த்திகளுக்கு அபிஷேகம் தீபாராதனை முதலிய உபசாரங்களும், சூரியாஸ்தமயனம் துலாலக்கினத்தில் இலக்ஷ தீபஸ்தாபனமும் உடனே பஞ்சமூர்த்திகள் மகோற்சவமும் நடத்த நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

* ஆலோகத்தினபாவம், என்பதற்குப் பார்வையினது இன்மையை ஒக்குமென்பது பொருள். என்னையெனின் - பகலிலே கூகையின் கண்ணுக்கும் குருட்டுக் கண்ணுக்கும் தோன்றுமிருள் அபாவமாதல் போலுமென்க. பட்டணத்துப் பிள்ளை அடிகளும்.

" பொல்லா விருளகற்றுங் கதிர்கூகையென்புட் கண்ணினுக்
கல்லாயிருந்திடும் "

என்றார். இதனால் இருளைப் பொருளென்பார்மதம் மறுக்கப் பட்டமை காண்க.

MADRAS:—Printed by P. C. KALLIANA SUNDARA NADAR, at the C. N. PRESS, 4, Guruvappan Street, Black Town, and Published by J. M. NAGARATHNAM.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம்,
இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897ஆ மகாராணியாரின் வைர ஜுபிலி தினத்தில்
ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் க } 1898ஆ எப்ரல்மீ. { இலக்கம்-கக.

## திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரம்.

---

அரனடி சொல்லி யரற்றி யழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளு
முரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. (சரு)

(பொ-ரை.) சிவபிரான் திருவடிப் பெருமையையே சொல்லி அரற்றி அழுது, அச்சிவபெருமானுடைய திருவடியை நாடி எப்போதும் சிவோகம் பாவனைசெய்து, அவருடைய வலிய திருவடியை அரணாகநாடி அத்திருவடியின் கண்ணே புகலடைந்து ஒதுங்க வல்லார்க்குச் சிவபோக முறச்செய்து யாண்டும் நிறைந்து நின்றார் சிவபிரான்.

(கு-ரை.) இச்செய்யுளின்கண்ணே நான்கடியினும் போந்த "அரனடி," "பரனடி," "உரனடி," "நிரனடி," என்னும் நான்கு அடிகளும் முறையே சிவஞானபோதத்தின் வழி நூலாகிய சிவஞானசித்தியாரிலே போந்த "மலரடிக்கீழ் வைப்பன்," "பாதநிழற்கீழ் நிற்க," "ஏகனாகி நின்றிட," "அரன் மலரடிக்கீழிருப்பன்" என்னும் நான்கையும் முறையே உணர்த்திச் சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் நான்கையும் விளக்கிய வாறுமென்க. ஆன்மாவிலே சிவசத்தியானது பதியுங்கால், அவ்வான்மாவைச் சிருஷ்டியாதிகளிலே உந்தாநின்ற மலசத்தியானது நிவாரணமாகும், அந்த மலம் நிவாரணமாகுங்கால் அவ்வான்மாவுக்குத் துக்கசாகரமாகிய சம்சாரத்திலே நின்றும் நீங்குதற்குரிய விரத்தியுண்டாகாநின்றது; அதனால் சிவபிரானுடைய திருவடித்தாமரையைப் பார்த்தற்கு இச்சை பிறக்கும், பின்னரும் எக்காலத்திலோ சிவபிரானைத் தரிசிக்கப்போகின்றேன், எப்போது யான் பாசத்தினின்றும் வீடுறுவேன், சிவபிரானைக் காட்டும் ஆசாரியர் யாவரோ என்னும் மதியானது உண்டாகும் என்னும் கருத்தினால், பவுஷ்கராகமம்

తస్యాంపతితమాత్రాయాం మలస్యావోనియామికా ।
శక్తిర్నివర్తతేతస్యాం నివృత్తాయాంమహాత్మనః ।
వైరాగ్యంజాయతేక్షిప్రం సంసారాదుఃఖసాగరాత్ ।
దిదృక్షాజాయతేశంభోః పాదపంకజయోరపి ।
కదాద్రక్ష్యామిదేవేశం మోక్షేహంబంధతఃకదా ।
కోవాదర్శయితాశంభో ఇతిసంజాయతేమతిః ॥

என்று கூறிற்று. சிவபுண்ணியத்தால் வருவது இருவினையொப்பென்றும், அதுவரவே முதன்மையும் போகப்பற்றும் கழியும் என்றும், மலபரி பாகத்தால் வருவது சத்திநிபாதம் என்றும், அதுவரவே போகபோக்கிய கருவிகளிற் செறிதல் கழியும் என்றும் இவை நான்கும் வந்து அவை நாலுங் கழிந்தால் உணர்வாய் நின்ற ஞானக்கூத்த னொரு மூர்த்தி கொடு குறுகும் என்றும், அந்தக் குருவருளால் உருக்கழியும் என்றும், அது நீங்கினால் கேவல சகலம் நீங்கும் என்றும்,

அது நீங்கினால் அறிதற்றொழில் உண்டாதல் ஒடுங்கிக் கழியும் என்றும் போந்த உண்மைகள் "அரனடி சொல்லி யரற்றி யழுது" என்பதனால் தழுவப்படும். இங்ஙனம் அறிதற்றொழிலுண்டாகிக் கழியுங்கால், சிவோகம்பாவனையினால் ஞானப்பெருக்கம் உளதாம் என்று போந்த உண்மை "பரனடிநாடியே பாவிப்ப நாளும்" என்றதனால் தழுவப்படும். ஞானப்பெருக்க மூளதாயின் இச்சை, ஞானம், கிரியை மூன்றும் கழியும் என்றும், அது கழிந்தால் மல நீக்கம் வாசனாமலநீக்கம் வரும் என்றும் போந்த உண்மை "உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு" என்பதனால் தழுவப்படும். மலநீக்கம் வாசனாமலநீக்கம் வரவே வியாபக அறிவு விளங்கி ஏகதேசப்படும் சுட்டுணர்வு கழிந்து சிவானந்த போகம் துய்க்கும் என்றும் போந்த உண்மை "நிரனடி செய்து நிறைந்து நின்றானே" என்பதனால் தழுவப்படும். சிவபிரான் திருவடிப் பெருமையைச்சொல்லி அரற்றி அழுங்கால், அச்சிவபிரான் குருமூர்த்தியை அதிஷ்டித்து நின்று "உடம்பே நான் என்றும், அது நீங்கியவழி பிரமம் (ஆன்மா) நான் என்றும், இங்ஙனம் விபரீதமாக உணர்கின்ற உயிரானது, சுட்டுணர்வுட்பட்ட அப்பாசமு மன்று, சுட்டுணர்வு இறந்து நின்ற சிவமாகிய பதிப்பொருளுமன்று, அவ்விரண்டற்கும் வேறாக ஏகான்மவாதிகளால் பிரமம் என்று அழைக்கப்படும் ஆன்மாவாம் எனக்கொண்டு, வேறாகிய பாசத்தை மேற்கூறியவாற்றால் நீங்கி, ஏனைச் சிவபதிப்பொருள் வேறாயினும், வியாப்பிய வியாபக பாவகத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றின் ஒளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினையும் சிவபிரான் கலப்பினையும் நோக்கி நின்று கருடோகம் பாவனைபோலச் சிவோகம்பாவனை" செய்யுமியல்பு "அரனடி சொல்லி யரற்றி யழுது, பரனடி நாடியே பாவிப்ப நாளும்" என்றதனால் கொள்ளப்படும் எனவும், "சிவபிரான் தான் உடனாய் நின்றறியவும் வேறு காணப்படுமாறின்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர்தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழிநின்ற அப்பெத்தநிலைபோல, ஈண்டு உயிர் அச்சிவபிரானோடு நின்றறியினும் தானென வேறு காணப்படுமாறின்றி அவனோடொற்றுமைப்பட்டு அச்சிவபணியின் வழுவாது நிற்பின் மலமாயை கன்மங்கள் இலையாய் ஒழியும்" என்னும் உண்மை "உரனடி செய்தங் கொதுங்கவல்லார்க்கு" என்பதனால் கொள்ளப்படும் என்றும், இங்ஙனம் சிவபிரான் திருவடியிலே ஒதுங்கி ஏகனாகியிறைபணி நிற்கும் உயிர் "இறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு ஒருவாற்றானும் குறைவின்றி இம்மையே சீவன் முத்தராகிப் பரமுத்தி நிலையிலே தமது வியாபகம் எங்கணும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோடொத்து நிற்கும்" இயல்பு "நிரனடி செய்து நிறைந்து நின்றானே" என்பதனாலே கொள்ளப்படும் என்றும் பொருள்கோடலுமாம்.

> போற்றியென் பாரம ரர்புனி தன்னடி
> போற்றியென் பாரசு ரர்புனி தன்னடி
> போற்றியென் பார்மனி தர்புனி தன்னடி
> போற்றியென் னன்புள் விளங்கவைத் தேனே.

(பொ-ரை.) தேவர்கள் அநாதிமல முத்தராகிய சிவபிரானுடைய திருவடியையுற்றுப் போற்றுவதாக என்பார், அவ்வாறே அசுரர்களும் போற்றுவதாக என்பார், அவ்வாறே மனிதர்களும் போற்றுவதாக என்பார், ஆதலால் (இம்மனிதருள்ளே ஒருவனாகிய) நானும் போற்றுவதாக என்று உரைத்து அவர் திருவடியை என் அன்பகத்தே விளங்கவைத்தேன்.

(கு-ரை.) அடி, கால், பாதம் என்பன ஒருபொருட்கிளவிகளாய்த் தென்மொழியிலே இலக்கம் நோக்கி வகாரத்தினாலே பெரியோர் குறித்துக் காட்டுவர். இந்த வகாரமானது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின் இரண்டாம் எழுத்தாகி அருட்சத்தியைக் குறித்து, அக்கினியில் உஷ்ணம் போன்றும் சூரியனிற் கிரணம் போன்றும் "சி" யைப் (சிவத்தை) பிரியாது நிற்பதாமாதலில், சிவபிரான் திருவடி "வசி" என்று நிற்கும் இயல்பினதாம். இச்சையாகிய காந்தி எனப் பொருள்படும் "வச" (வஶ) என்னும் தாதுவுக்கு "இ" பிரத்தியயஞ் செய்தலால் "வசி" என்பதும், பின்னர் அதனை வர்ண விபர்யயஞ் செய்தலால் "சிவ" என்பதும் சித்திப்பனவாம். இது இம்சித்தல்எனப் பொருள்படும் "இசி" (హింసి) தாதுவிலிருந்து சிம்மசப்தமுதலியன பிறந்தனபோலாம். இதனால் "சிவ" சப்தத்துக்கு இச்சிப்பவர் (விரும்புபவர்) என்னும் பொருள் எய்திற்று. மகாபாரதம்,

> సమేధయతియన్నిత్యం సర్వార్థానాముపక్రమం ।
> శివమిచ్ఛన్మనుష్యాణాం తస్మాద్దేవశ్శివస్స్మృతః ।
> సమాభవపతిమేసర్వే దానవాశ్చామరాశ్చయే ।
> శివోऽస్మిసర్వభూతానాం శివత్వంతేనమేసురాః ॥

"மனிதர்களுக்கு இன்பங் கொடுக்க இச்சித்து (விரும்பி) பொருள்கள் அனைத்துக்கும் ஆகற்பாலனவாகிய உபகரணங்களை விருத்திசெய்கின்றவர் சிவபெருமானும் என்றும், தேவர்களும் அசுரர்களும் சிவத்திலே உற்பத்தியாகின்றார் என்றும், சர்வசேதனப் பிரபஞ்சங்களுக்கும் சிவத்துவம் கொடுக்க இச்சித்தலால் சிவனாகின்றார் என்றும் பொருள்படக் கூறுதலால், தேவர் அசுரர் மனிதராகிய எல்லோர்க்கும் சிவத்துவம் கொடுப்பவர் சிவபிரானாக, அச்சிவனாரைத் தேவர்களும், அசுரர்களும், மனிதர்களும் தலைவராகக்கொண்டு அவரைப் போற்றினாராதலின், ஸ்ரீமூலர் அம்முத்திறத்தாரும் முறையே "புனிதன்னடி போற்றி என்பார்," "அசுரர் போற்றி என்பார்," "மனிதர் போற்றி என்பார்" என்று கூறி, அம்மனிதருட் பாற்பட்ட தமக்குஞ் சிவபிரான் சிவத்துவம் கொடுத்தல் முறையாமாதலின் அவரைப் போற்றி, ஸ்ரீஞானசம்பந்தர் "மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்" என்றதற்குப் பொருளாக

> மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்று மென்பு
> தாதிச் சுடர்ச்சோ தியையன்பி னகத்துள்ளாக்கி
> போதித்த நோக்குற் றொழியாமற் பொருந்தி வாழ்ந்து
> பேதித்த பந்தப் பிறப்பின்னெறி பேர்மி னென்றும்.

என்று அருண்மொழித்தேவர் கூறினமைக் கியையவே, "போற்றியென் னன்புள் விளங்கவைத் தேனே" என்று

கூறினர். இதனல் தேவர்க்கும் அசுரர்க்கும் மனிதர்க்கும் விரும்பிச் சிவத்துவம் பாலிக்கும் அத்திருவடி அம்முனிதருள் ஒருவனுகிய தமக்கும் அத்திருவடி சிவத்துவம் பாலிக்குமாம் என்பது கொண்டு அந்தத் திருவடியாகிய மருந்தைத் தமது அன்பாகிய பாலிலே போற்றிவைத்தார் என்பதாம். அத்திருவடி ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின் பொருளேயாமாதலில் நக்கீரதேவநாயனுர் "வாயிலே வைக்கு மளவின் மருந்தாகித் தீய பிறவிநோய் தீர்க்குமே" என்று கூற, ஸ்ரீஞானசம்பந்தர் "அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற் றைம்புலனு மடக்கி ஞானப், புகலுடையார் தம்முள்ளப் புண்டரிகத்துள் ளிருக்கும் புராணர்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

விதிவழி யல்லதிவ் வேலை யுலகம்
விதிவழி யின்பம் விருத்தமு மில்லை
துதிவழி நிற்றலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னுமே. (சடு)

(பொ-ரை.) ஊழ் (தெய்வம்) வகுத்த வழியினல்லாது இந்தச் சமுத்திரம் சூழ்ந்த வையகம் இல்லையேயாக, நல்வினை வினையும் நல்லூழின் வழியே எய்தும் இன்பம் பிறழ்ச்சியாதல் இல்லையாமாதலில், அந்நல்லூழ் உளுற்றிய நெறியானே சிவபிரானைத் தோத்திரஞ்செய் தொழுதுங்கால், சோதி சொருபராகிய அச்சிவபிரான் சிவலோக வீட்டுக்கு வழிகாட்டும் சூரியனேயாவர்.

(கு-ரை.) ஊழ் வகுத்தவகையினல்லாது இன்பம் நுகர்தல் அரிதாமென்பது

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

என்னுந் திருக்குறளாலும், நல்லூழ் நடை பெறுங்கால் அதனல் எய்தும் இன்பத்தை தூற்றுதல் ஓர்போதும் கூடாதாமென்பது

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

என்னுந் திருக்குறளாலும், நல்லூழினலே (அதிவழியே) நிற்கும் முயற்சியுண்டாமென்பது "ஆ கூழாற்றேன்று மசைவின்மை கைப்பொருள்" என்னுந் திருக்குறளானும் உணரப்படும். "தழற் கொள்ளியினைப் பிடித்திருக்கும் அழகிய கையினையுடையார் தாம் வேண்டிய பொருளைக் காணுமளவும் அதனை முன்னிட்டுப் பின்னிற்கு மாறுபோல, நேயமாகிய சிவப்பொருள் வெளிப்படுமளவும் அருளைத் தமக்கு முன்னுக்கித் தாம் அதன்பின் நிற்றலே அருளோடு பொருந்தி நிற்கும்" நிலையாமென்பது பொருள்படப்போந்த

உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பி
னிற்க வருளார் நிலை.

என்னும் திருக்குறளுக்கிசையவே, சிவலோகத்துக்கு வழிகாட்டுவது சிவசூரியனும் என்பது பொருள்பட "பதிவழி காட்டும் பகலவனுமே" என்று உரைக்கப்பட்டது.

அந்திவண் ணுவரனே சிவனே யென்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணுமுதல் வாபர னேயென்று
வந்திவ் வண்ணனெம் மனம்புகுந் தானே. (சசு)

(பொ-ரை.) அந்திவண்ணரே, அரனே, சிவனே என்று சிந்தை செய்யும் நெறியறிந்து மெய்யடியார் வணங்க முன்னரே, அண்ணு முதல்வா பரனே என்று கூறும் திருநாமங்களால் உவந்து சிவபதியார் எம்மனத்தின்கண்ணே புகுந்து நின்றார்.

(கு-ரை.) சிவபிரான் "சிவன்" என்னுந் திருநாமத்தை யுடையார் என்பது.

சிவனெனுநாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மா
னவனெனை யாட்கொண் டளித்திடுமாகி லவன்றனையான்
பவனெனுநாமம் பிடித்துத் திரிந்துபன் னுளழைத்தா[மே.
லிவனெனைப்பன் னுளழைப் பொழியானென் றெதிர்ப்படு

என்னும் ஸ்ரீவாசக திராவிட சுருதியால் உணரப்படும். இங்ஙனம் அந்திவண்ணன், அரன், முதல்வன், பரன் என்னுந் திருநாமங்கள் சிவபிரானுக்குப் போந்தமை திராவிட சுருதிகளிலே மிருதியும் காணப்படுதலில் அவற்றைத் தனித்தனியே எடுத்து உத்கரியாது விடுத்தேம்.

மனையி லிருந்தவர் மாதவ ரொப்பர்
நினைவு ளிருந்தவர் நேசத்து ணிற்பர்
பனையு ளிருந்து பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின்னின்பந் தானே.

(பொ-ரை.) இல்லின்கணுள்ளார் மெய்த்துறவிகள் போலச் சிவபிரானை மறவாதவராய்ச் சிவானந்தத்தினின்றேராவர்; பொய்த்துறவிகள் பனையிலிருந்த பருந்துபோலச் சிவபிரானை மறந்து சிவானந்தத்தை இழந்தோராவர்.

(கு-ரை.) பனைநுனியிலே யுள்ள ஓலைகள் கொண்டு பரப்பிவேயப்பட்ட மனையின்கண்ணேயுள்ளோர் அம்மனை நிழலின் பத்தை யடைந்து பனையாலாய பயனையும் அடைந்தவாறுபோல, "அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே" எனவும், "இறைவனே யுன்னை யல்லாலியாது நான் நினைவிலேனே" எனவும், "நாகைக் காரோணங்கருதியேத்தப் பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்திலாரே" என்வும், "பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவர்நாளே" எனவும் போந்த திருவாக்குகளுக்கிசையச் சிவபிரான் திருநாமங்கள் கொண்டு அவரைத் துதிசெய்து எக்காலமும் மறவாத மனையின்கணுள்ளார் சிவானந்தத்தை இழந்தோராகார். (பனையினடிப்புறத்தேயுள்ள) மனைகளாகாத பனை நுனியிலே போயிருந்த பருந்தானது அப்பனையின் நிழலை அடைந்து இன்பம் அடையமாட்டாதவாறு போல, (கிரகஸ்தாச்சிரமத்தினுயர்ந்த துறவறத்திலே நிற்பவராம், வேடக்காரர் உச்சப்படியிலே நின்றுராயினும்,

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி யிருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலெ
னென்று மீசனென் பார்க்கன்றி யில்லையே.

என்ற திராவிடசுருதிக்கிசையச் சிவபிரானை மறந்தவராய்ச் சிவான்ந்தத்தை இழந்தோராவர். பக்குவமில்லாத தாமரை

சூரியமண்டலம் வரையிற்கொண்டுய்க்கப்பெற்றாலும் அது மலருமாறின்றாம். பக்குவமாகிய தாமரை மலர் சூரியனி லிருந்து வெகுதூரத்தினதாகிய பூமியிலிருந்தும் மலர்ந்து விடுவதாகும். இவ்வாறே அபக்குவர் நேரே கைலையிற் போய்ச் சிவபிரானைத் தரிசித்தாராயினும் சிவானந்தத்தை அடைந்தோராகார். பக்குவர் சிவபிரானைக் கைலையிற் போய்த் தரிசியாராயினும் எக்காலமும் அவரை மறவாமையால் சிவானந்தத்தை இழந்தோராகார். இவ்வுண்மை நோக்கியே ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள் "அது பழச்சுவையென வமுதென வறிதற் கரிதென வெளிதென வமரரு மறியார்" என்றும், அருணந்திசிவாசாரியர்

"நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்து
நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்து
நீடுபல காலஞ்சீ ணித்தராயிருந்து நின்மல
ஞானத்தை யில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பி
னேடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
யெறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்."

என்றும் கூறியவற்றால் உணரப்படும். மனையிலிருந்தார் கிரகஸ்தாச்சிரம நெறியினராம் எனவும், மனையுளிருந்தார் போன்றார் பொய்த்துறவுவேடம் பூண்டவராம் எனவும் உணர்க. "நினையாதவர்க்கில்லை நின்னின்பம்" (சிவானந்தம்) என்றமையால், "நினைவுளிருந்தவர் நேசத்தணிற்பவர்" என்றதிலேபோந்த "நேசத்தணிற்பவர்" என்றதற்குச் சிவானந்த முற்று நின்றவர் என்று பொருள்கோடற்பாற்றாம். மனையிலிருந்தவர் மாதவரொப்பர் என்னும் வாய்மை

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன் பழிப்ப தில்லாயி னன்று."

என்னுந் திருக்குறளால் உணரப்படும்.

அடியார் பரவு மமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியா ரருளும் பிரம்பர னெந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றானே. (௪அ)

(பொ-ரை) அடியார்கள் புகழாநின்ற தேவர்பிரானாகிய சிவபிரானைத் தலையினாலே வணங்கி, அம்முதல்வரை இதயத்தின்கண்ணே தியானிப்ப, தம்மை நினையாதவர்க்கும் அருளும் பரம்பரராகிய எமது பிதாவானவர் அவ்விதயத்தின் கண்ணே தூண்டாவிளக்கென்று சொல்லுமாறு பொருந்தி நின்றார்.

(கு-ரை.) "அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின் கண்ணே அவர் நினைந்தவடிவோடு விரைந்து சேறலில்" திருவள்ளுவ நாயனார் "மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்" என்று கூறினமைக் கிசையவே, "முதல்வனை முன்னி விடியாவிளக்கென்று மேவிநின்றானே" என்று உரைக்கப்பட்டது. "அங்குஷ்ட மாத்திரமாயுள்ள புருஷர் ஆத்துமாவின் மத்தியின்கண்ணே நிற்கின்றார், அவர் இறந்தகால எதிர்காலத்துள்ள ஈசானராம்" என்பதுகொண்டு கடவல்லியுபநிடதம்,

అంగుష్ఠమాత్రఃపురుషో మధ్యఆత్మనితిష్ఠతి ।
ఈశానోభూతభవ్యస్య నతతోవిజుగుప్సతే ॥

என்று கூற, இக்கடவல்லி மந்திரத்தைக்கொண்டே "(அங்குஷ்டத்தினாலே) அளக்கப்படுகின்ற என்னும் சப்தம் (கடவல்லியுபநிடதத்து) உண்மையால்" எனப் பொருள்படும்.

:శబ్దాదేవప్రమితః ।

என்னும் வியாசர் வேதாந்த சூத்திரம் கிளர்ந்ததாம் எனவும், இந்த "ஈசான" சப்தத்தினாலே குறிக்கப்பட்டவர் சிதம்பரபரமாகாசமத்தியத்திலேயுள்ள சர்வைசுவரிய சம்பன்னரும் சர்வேசுரரும் சம்புவேயாம்" என்பதுகொண்டு வேதங்களுக்கெல்லாம் சிகையாய் நின்ற அதர்வசிகை

సర్వైశ్వర్యసంపన్నస్సర్వేశ్వర శ్శంభురాకాశమధ్యగః ।

என்று கூறியதாமெனச் சைவபாஷ்யகாரர் விளக்கினார். ஸ்ரீஞானசம்பந்தர் அவ்வுண்மை நோக்கி,

"கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலுஞ்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே."

என்று கூற, அப்பொருளை அருண்மொழித்தேவர்

ஒன்றுவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோல
மன்றினுன் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி
நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகு
மென்றுபூம் புகலி மன்ன நின்றமிழ்ப் பதிகம் பாட.

என்று விளக்கியருளினார். திருநாவுக்கரசுசுவாமிகள்.

"நாடி நாரண னான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே."

என்று அருள, சுந்தரமூர்த்திநாயனார்

"மடித்தாடு மடிமைக்க ணன்றியே மனனே
நீ வாழுநாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு மெரியகலுங்
கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றே."

என்று அருளிச்செய்தார். ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள்

"உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னக
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
யருத்தியினா னயடியே னணிகொடில்லை கண்டேனே."

என்று திருவாசகத்தினும்,

"காகத்திரு கண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ
ராகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமா
மேகத் தொருவ னிரும்பொழி லம்பலவன் மலையிற்[களே.
றேகைக்குந்தோன்றற்கு மொன்றாய்வரு மின்பத் துன்பங்

என்று திருக்கோவையாரினும் அருளிச்செய்தார். இவ்வுண்மை உளப்படவே சிவதத்துவ விவேகமுடையார்.

నిబంధ స్సూత్రోణాం నిగమశిరసోర్థం ప్రథయతామపి స్పష్టో
భావ స్తవ శివపరత్వేవిప్రకతాం। పుమాంసంమోంగుష్ఠ ప్రమితమస
పేక్ష్య పరనయంతవేశాసశ్రుత్యా వరదనిరద్వైష్టిత్వరఇతి॥

என்று கூற, திராவிட மகாபாஷ்யகாரர்

"பிறநய மாகும் புருடனங் குட்டப் பிரமிதி
தனை விரும்பாம்
லறவனே யுனதீ சானநற் சுருதி யாற்பர
மென்று நிச்சயித்தோன்
செறியும் வேதாந்தப் பொருளினைத் தெரிக்குஞ்
சூத்திரஞ் செய்தவன் கருத்து
மிறைவ நின் பெருமை கண்டதே யாகு
மென்பரா லாயவல்லவரே."

என்று அதன்பொருளை விளக்கினர். அங்குஷ்டமாத்திராய் இதயத்தின்கண்ணே அமர்ந்தவர் இரவிதுல்லிய ரூபராம் என்பது கொண்டு சுவேதாசுவதரோபநிடதம்,

అంగుష్ఠ మాత్రోరవితుల్య రూపస్సంకల్పాహంకార సమన్వితోయః।

என்று கூறிற்று. இரவி இரண்ணியம் என்பன செந்நிறமுடைமையாலன்றே அச்சிவபிரானுரைச் சாந்தோக்கியம் மகாநாராயணமுதலிய உபநிடதங்கள் இரண்ணிய ரூபமுடையர் என்று கூறியவாம். அவற்றை ஈண்டு விரிக்கிற் பெருகுமென்று விடுத்தேம். இதனுல் திருமூலர் திருமந்திரம், திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், (மாயாவாதோபநிடதமாகாத) சிவாத்துவிதோபநிடதங்கள் வேதாந்த சூத்திர முதலியவெல்லாம் ஒரு கருத்துடையனவாய் "பரமாகாய மத்திய சிவபிரானுகிய ஈசானரிலே" முடிவு பெறுகின்றன என்ற கருத்தினுலன்றே எமபெருமாட்டியாரும்.

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்.

என்று கூறினர். "விடியா விளக்கு" என்றது அக்கடவல்லி மந்திரத்திலே சொல்லப்பட்ட "சோதி"யேயாமென்க. இதனையே திருநாவுக்கரசு சுவாமிகள் "மெய்கிளரு ஞான விளக்குக் கண்டாய், மெய்யடியா ருள்ளத்து வித்தக் கண்டாய்" என்று அருளிச் செய்தார். சிவபிரான் தம்மை நினையாதவர்களுக்கும் அருளிச்செய்யுமுண்மை "எண்ணலாரையு நினைத்தருள் செய்திரு நிமலன்" எண்பதனுல் உணரப்படும்.

பரைபசு பாசத்து தாதனை யுள்ளி
வரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாசச் செழுங்கட னீந்திக்
கரைபசு பாகங் கடந்தெய்த லாமே. (சகூ)

(பொ-ரை.) அருட்பராசத்தி, பசு பாசங்களுக்குமேலாக வியாபித்து நிற்பவராய சிவபிரானைப் பசுவானது (ஆன்மாவானது) நினைந்து பாசத்தினின்று நீங்க அச்சிவபிரானிலே ஒடுங்கவல்லார்களுக்கு, அப்பசுவானது அலைபொருந்திய பாசமாகிய செழிய கடலைநீந்தி, (பின்னர்) அது பராசத்தி சமேதசிவபிரானுராம் கரையை அணையப்பெறலாகும்.

(கு-ரை.) சிவபிரான் பாசம், பசு, பரை என்பவற்றுக்கு வியாபகராய் நின்றுரென்பது.

"அமலைக்கு வியாபகனே யரனவற்கு வியாப்பியமே
விமலைவியாபகி யுயிர்கட்கு யிரவட்கு வியாப்பியமே
சமலைக்கு வியாபகியே சமலையுயிர் வியாப்பியமே
சமலைசக வியாபகியே சகஞ்சமலை வியாப்பியமே."

என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளினும்,

நிறைசிவத் தடக்கஞ்சத்தி நிருமலிக் கடக்க மான்மா
மறைமல மவற்றடக்க மன்னிய வவற்றின் சத்தி
யறையுயிர்ச் சத்திதன்பா லடக்கமே மாயை மாயை
பொறையுயிர் காரியங்க ளதனிடை யடக்கம் பூணும்.

என்னுந் தணிகைப்புராணச் செய்யுளாலும் உணரப்படும். சிவபிரானை அடைந்தே பிறவியாகிய பாசசாகரத்தை நீந்தல் வேண்டுமென்பது கொண்டு திருவள்ளுவநாயனர்.

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்."

என்றும், ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அக்கருத்துப்பற்றியே

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே."

எனறு கூறியருளினர். திருவெண்காட்டடிகள்.

"அறிவி லொழுக்கமும் பிறிதுபடு பொய்யுங்
கடும்பிணித் தொகையு மிடும்பை யீட்டமு
மினையன பலசரக் கேற்றி வினையெனுந்
தொன்மீ காம னுய்ப்ப வந்நிலைக்
கருவெனு நெடுநக ரொருதுறை நீத்தத்துப்
புலனெனுங் கோண்மீ னலமந்து தொடரப்
பிறப்பெனும் பெருங்கட லுறப்புகுந் தலைக்குந்
துயர்த்திரை யுவட்டிற் பெயர்ப்பிட மயர்த்துக்
குடும்ப மென்னு நெடுங்கல் வீழ்த்து
நிறையெனுங் கூம்பு முரிந்து குறையா
வுணர்வெனு நெடும்பாய் கீறிப் புணரு
மாயப் பெயர்ப்படு காயச் சிறைக்கலங்
கலங்கு புகவிழா முன்ன மலங்கன்
மதியுட னணிந்த பொதியவிழ் சடிலத்துப்
பையர வணிந்த தெய்வ நாயக
தொல்லெயி லுடுத்த தில்லை காவல

வம்பலர் தம்பை யம்பல வாணநின்
னரு ளெனு நலத்தார் பூட்டித்
திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே.

என்று கூறினர். மேலே போந்த திருமந்திரச்செய்யுளிலே பாசமானது சமுத்திரமாகவும், பசுவானது அதனைநீந்திக் கடப்பவனாகவும், பதியாகிய அருட்பராசத்திச் சிவனார் கரையாகவும் உருவகஞ் செய்யப்பட்டவாறு காண்க.

சூடுவே னெஞ்சிடை வைப்பன் பிரானென்று
பாடுவேன் பன்மலர் தூவித் தொழுதுநின்
றாடுவே னடி யமரர் பிரானென்று
நாடுவ னுனின நறிவது தானே. (௫0)

(பொ-ரை.) சிவபிரான் திருவடியைச் சிரசின்மேற் சூட்டுவேன், அவர் பாதத்தை நெஞ்சிலே இருத்துவேன், அவரைப் பிரானென்று பாடுவேன், அவர் மீது பல புஷ்பங்களைத் தூவி வணங்கி நின்று கூத்தாடுவேன், அவ்வாறு கூத்தாடித் தேவர்பிரான் என்று நாடுவேன் எனபதே நான் இன்று அறிந்தவாறும்.

(கு-ரை) "பரமே பார்த்திருந்து பராவு சிவராவாரும்" குரு ரூப சிவத்தியானத்தை விடாராதலின் அவர் இதயத்தினுள்ளும், "யானென தென்றற நின்றவிடமே திருவடி" யாமாதலில் அவர் முதன்மையாகிய முடிக் கணிகலமாய் அந்தத் திருவடியைத் தரித்திருப்பாராதலின் அவர் சென்னியிலும், பொருந்துமாறு திருவருளே திருமேனி கொண்டு ஆசாரியராக எழுந்தருளி வந்த அவருடைய காருண்ணியத்தைக் குறித்து அவ்வுதவியை மறவாது அன்புசெய்துகொண்டிருப்பதே அவர்கள் அநுஷ்டிப்பதாம்" என்பது கொண்டு திருவுந்தியார்.

சிந்தையி னுள்ளுமென் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்திபற
மட்டவா ளுடனேயென் றுந்திபற.

என்று கூறினமைக்கிசையவே, சென்னியில் "சூடுவனெஞ்சிடை வைப்பன்" என்று கூறினர். பரமானந்த மேலீட்டினால் சிவஞானிகள் பாடலாடல் செய்வாரென்று கொண்டு சிவஞானசித்தியார் "பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப் பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்" எனக் கூறினமைக்கிசைவே, ஸ்ரீமூலர் "பாடுவன் ஆடுவன் ஆடி அமரர் பிரான் என்று நாடுவன்" என்றற்றொடக்கத்தனவாக அருளிச்செய்தார்.

சிறப்புப்பாயிரம் முற்றியது.

---

## பெரியபுராண நவநீதம்.

---

இத்தலைப்பின் கீழ் எழுதக்கருதிய தியாதெனின், திருத்தொண்டர் சரித்திரங்களில் ஒவ்வொன்றிலுமுள்ள சாராம்சங்களைத் திரட்டிக்காட்டவேண்டு மென்பதே. இவ்விஷயத்தைத் தக்கவர் மேற்கொண்டு செய்வது மிக வுசிதமாகும். ஆயினும், இதிற்காணப்படுங் குறைகளைப் பெரியோர் நிரப்பித்தருமாறு அவர்கள் திருவடிகளை வணங்கிக்கொண்டு விஷயத்தைக் கூறுகின்றோம்.

ஒரு நூலின் பெருமை யுணர்ந்தாலே அந்நூல் கேட்டற்கண் மனஞ்செல்லு மாதலால், இங்கே எடுத்துக்கொண்ட விஷயத்தைத்தொடங்குமுன் பெரியபுராண வரலாற்று மகிமையைச்சிறிது கூறுவாம்.

இப்பெரியபுராணத்தை யருளிச்செய்தவர் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள். தொண்டமண்டலத்திற் குன்றத்தூரிலே அவதரித்தவர். இவருக்குப் பிள்ளைத்திருநாமம் அருண்மொழித்தேவர் என்பது. இவர் தாம் அவதரித்த சேக்கிழார் குடியை விளக்கிய காரணத்தாற் சேக்கிழாரென்றே பிரசித்திபெற்றார். பல்லவர் என்னும் அரசவமிசத்தார் அரசாண்டகாலத்தில் இவர் பிதா அவ்வரசர்க்கு மந்திரியும் சபைத்தமிழ்த்தலைமைப் புலவருமாயிருந்தார். நமது சேக்கிழார் பெருமான் தாமும் தந்தம்பியாராகிய பாலறுவாயரும் அறிவு ஒழுக்கம் சிவநேசம் முதலிய பெருங்குணங்களோடு வளர்ந்து கல்வி பயின்று வந்தனர்.

அக்காலத்தில், ஒருக்கால் சேரசோழ பாண்டியரென்னும் மூவேந்தரும் ஒன்று கூடியதோர் சபையில் "வேழமுடைத்து" என்று ஔவையார் கூறிய வெண்பாவைப்பற்றி ஆராய்ச்சி வந்தபோது, அதில் தொண்டநன்னாடு சான்றோருடைத்து என்னும் பகுதியினுண்மையை யளந்தறியவேண்டி 'மண்ணினும் பெரிதுயாது? கடலினும் பெரிதுயாது? மலையினும் பெரிதுயாது? இவற்றுக்கு விடை கூறுவாரே பெரியர்' என்று துணிந்து, அவ்வினாக்களை வரைந்து தமிழ்நாடெங்கும் போக்கினர். அப்பத்திரம் தமிழெல்லை முற்றுஞ்சென்று விடைப்பாரின்றித் தொண்டமண்டலத்தில் வர, அங்கிருந்த பல்லவராஜன் அத்திருமுகத்தை நமது சேக்கிழார் தந்தையாரிடங் கொடுத்து விரைவில் விடை கூறுக வென்று நியமித்தனுப்பினன். அவரும் மற்றைய புலவரோடு தம்மனைக்கு வந்து ஏழுநாளளவும் ஆராய்ந்தும் விடை புலப்படாமையால் எட்டாநாட் காலையில் அதிக ஆற்றத்தோடு நெடுநேரம் சிந்தித்துக் கொண்டிருந்தனர். பள்ளியிலிருந்து வந்த இளைஞராகிய நமது சேக்கிழார் வழக்கப்படி தம[illegible]ந்தையாருடன் அன்று திருவமுது கொள்ளத்தடைப்பட்டதால், அவரைப் போயழைத்தனர். தந்தையார் தாம் அரசகாரியத்திருப்ப[illegible] முடியாதெனக் கேட்ட மைந்தனாரும் ஐயா! அக்காரியம் என்னென, அங்கிருந்தா ரொருவர் நிகழ்ந்தது கூறக்கேட்ட சேக்கிழார் இதற்காகவோ காலவுண்டிவிட்டு அப்பர் இருந்தருளுவது. அதுநிற்க. சிவபூஜைக்குத் தேவரெழுந்தருளில், அடியேன் அவ்வினாக்களுக்கு விடை கூறுகின்றே

னென, அவர் திருவார்த்தைக்கி யாவரும் வியப்புற்று நல்ல தென எழுந்து சென்றார்கள். பின்பு சேக்கிழார் தந்தையாரோடு திருவமுது செய்துவந்து பள்ளிக்குச் செல்பவர் தாம் அப்போது ஓதிவரும் திருக்குறளிலே யுள்ள,

(க) காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது.

(உ) பயன் றூக்கார் செய்தவுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

(ங) நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

என்னும் மூன்று திருக்குறளையும் ஓரேட்டில் வரைந்து தந்தையார் முன்னர்வைக்க, கண்டபுலவர்கள் யாவரும் அற்புதமும் ஆநந்தமுமுடையராய் அப்பிள்ளைப் பெருந்தகையைப் பலவாறு வாழ்த்திப் பெருவிழாக்கொண்டாடித் தம்மரசருக்குத்தெரிவிப்ப, அவரும், உவந்து வியந்து சேக்கிழார் பெருமானுக்குப் பல சிறப்புச்செய்து நடந்த வரலாற்றோடு அத்திருக்குறளினையும் வேறோர் முடங்கலிலெழுதி யம்மூவேந்தருக்கும் போக்கினர். இக்கருத்தினை மகாகவியாகிய கம்பரும் 'திருக்கைவழக்கம்' என்னும் பிரபந்தத்தில்,

"—காவலவன்
மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென
எண்ணி யெழுதிக் கொடுத்த வேற்றக்கை." என்றெடுத்துத்துதித்தனர். ஆகவே இவர் காலம் கம்பருக்கு முற்பட்ட தென்க-

தமிழ்நாடு முழுமைக்கும் புலப்படாததோர் விடை நமது சேக்கிழார் பெருமானுக்குப் புலப்பட்டமையில் ஒருவிசேடநயமுளது. என்னெனில் 'சேக்கிழான்' என்னும் பெயர் 'இடபத்துக்குரியன்' என்னும் பொருட்டாய்ச் சிவபெருமானையுணர்த்தும். 'விடைக்குரியான்' எனினும் அப்பொருளேபடும். விடைக்குரியவன் என்னும் பொருளமைந்த சேக்கிழானென்னும் நாமம் பூண்ட நமது பெருந்தகையாரே மேற்கூறிய வினுக்களுக்குத்தக்க விடைக்குரியவராயினு ரென்பதே. விடை=விருஷபம்; மறுமொழி.

பல்லவராஜன் விடுத்த திருமுகத்தைக் கண்ட அம்மூவேந்தரும் அடங்காத பெருவியப்படைந்து ஔவையார் திருவாக்கும் பொய்க்குமோ! என்று கொண்டாடி, அத்தொண்டநாட்டுப் பெரும்புகழ்ச் செல்வமைந்தனுரை வரவழைத்துக் கண்பெற்ற பேறடைந்தார்கள். பின்பு சோழமண்டலத்திலே அரசாண்டிருந்த அநபாய மகாராஜாவானவர், இவரது கல்வியறிவொழுக்க முதலியவற்றினை நன்காராய்ந்து 'உத்தமச்சோழப்பல்லவராயன்' என்னும் பட்டமும், அமைச்சுரிமையுங்கொடுத்து, சிறப்புச்செய்து வைத்திருந்தார்.

அப்போது சோழராஜனது சபையிலே நாள்தோறும் ஜீவக சிந்தாமணியையே பிரசங்கிப்பதையும், அதனை யரசன் முதலியோர் வியந்து, பாராட்டி வருவதையுங் கண்ட சேக்கிழார், அரசனுக்கு ஆருகதக் கோட்பாடுடைய அக்கட்டுக்கதை இம்மைக்கு மறுமைக்கு மாகாது வீண்போது போக்காம். ஆதலால், அறம்பொருளின்பம் வீடாகிய புருடார்த்தங்களைத் தரவல்ல சிவக்தையே கேட்கத்தக்கதென்று கூறக்கேட்ட அவ்வரசர் பெருமான் அந்நூல் யாது? எத்தன்மையது? அதற்கு முதனூல் யாது? அதனைச் செய்தவர் யாவர்? என்று வினவினர். அதற்கு சேச்கிழார் பெருமான் திருநாரையூரில் பொல்லாப் பிள்ளையார் அருள்பெற்ற நம்பியாண்டார் நம்பிகள், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகைக்கு அப்பொல்லாப் பிள்ளையார் தமக்குபதேசித்த உரையின்படித் தாமியற்றியருளிய திருவந்தாதியை யெடுத்துக்கூற, அவ்விறைமகன் அவரை நோக்கி இதனைப் பெருங்காப்பியமாகச்செய்து தரவேண்டுமென்று, வேண்டும் பொருளுங்கொடுத்தனுப்பினர். சேக்கிழாரும் விடைபெற்று, சிதம்பரத்தை யடைந்து, சிற்சபையில் பெருமான் முன்னின்று தமது கருத்தை விண்ணப்பித்தனர். அப்போது "உலகெலாம்" என்றோர் அசரீரிவாக்கு சிவாநுக்கிரகத்தால் உண்டாயது. உடனே அத்திருவாக்கைக் கொண்டு இராஜ சபையாகிய ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து, நம்பி யாண்டார் நம்பி திருவந்தாதியை முதனூலாகக் கொண்டு இரண்டு காண்டம் பதின்மூன்று சருக்கமாகப் பிரித்து நாலாயிரத்திருநூற்றைம்பத்துமூன்று திருவிருத்தமாகவிரித்து, "திருத்தொண்டர்புராணம்" எனத் திருப்பெயர்சாத்திப் பாடி முடித்தனர் - அதனை அவ்வநபாய சோழமகாராஜன் உலகறிய அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவாணைப்படி அரங்கேற்றுவித்து, இதுவுமோர் தமிழ் வேதமென்று (பெரியபுராணம் சைவத்திருமுறைகளிற் பன்னிரண்டாவது) செப்பேடுசெய்து பொற்சபையேற்றி சேக்கிழார் பெருமானுக்கு 'தொண்டர் சீர்பரவுவார்' என்னும் பட்டம் முதலிய பலவகைச்சிறப்புஞ் செய்து அவர் தம்பியாராகிய பாலறுவாயரை அழைத்து மந்திரியாக்கி உரிமை வகுத்துப்பாராட்டி வந்தனர். அருண்மொழித்தேவராகிய சேக்கிழார் சிவத்தியானத்திலிருந்து குஞ்சிதபாத நீழலடைந்தருளினர்.

இத்திருத்தொண்டர்புராணம் பெரியபுராணம் என்றுபிரசித்தமாக வழங்கலாயிற்று; பெரியரைப்பற்றிக்கூறும் புராணம் பெரியபுராணமென்பது பொருள். 'பெரியது கேட்கினெரிதவழ்வேலோய்' என்று தொடங்கி 'இறைவரோ தொண்டருள்ளத்தொடுக்கம், தொண்டர்தம், பெருமைசொல்லவும்பெரிதே' என்று சித்தாந்தஞ்செய்த ஔவையார் திருவாக்கின்படி சிவனடியவரே பெரியராதலால் திருத்தொண்டர் புராணமென்பதும் பெரியபுராணமென்பதும் ஒரே பொருளிலமைந்தனவென்க. பெரியர் புராணம் பெரிய புராணமெனப் புணருமாலோ வெனின், திருத்தொண்டர் தொகை திருத்தொண்டத்தொகையாகிய தன்றோவெனக் கூறிவிடுக்க.

இனி ஏனைய புராணங்களினும் தனக்குவாய்ந்துள்ள பலவகைப் பெருமையாலும் பெரிய புராணமென வழங்கலாயிற்றென்பதும் பொருத்தமுடையதே - அப்பெருமைகளெல்லாவற்றையும் எடுத்துரைக்கின் வரம்பின்றிப் பெருகுமாதலால், முக்கியமானவற்றிற் சிலகூறுவாம்:—

(தொடரும்)

---

## கம்பராமாயண சாரம்

இதிகாசங்களி லொன்றாகிய இராமாயணத்தை வடமொழியிலியற்றியவர் வால்மீகிமுநிவர். ஸ்ரீராமர் காலத்தே அவர் அதனைச் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதனைமறுப்பவர் பலர். அதுநிற்க, அவ்விராம சரித்திரத்தைத்தமிழிலியற்றியவர் கம்பர். இவர் இராமாயணத்தை யரங்கேற்றிய காலம் "எண்ணிய சகரத்த மெண்ணூற்றேழின்மேல்" என்னும் பாடலால், இற்றைக்கு 1014-வருட மாகின்றது. இவர் கல்விப்புலமை, இவரை மகாகவி எனவும், கவிச்சக்கிரவர்த்தி எனவும் வழங்கி வருதலாலும், இவர்கவிப்புலமை, கம்பசித்திரம், கம்பசூத்திரம் என வழங்கிவரும் பழமொழியாலும் வெளியாகும். ஆயினும் இதனருமையைப் பரர்ப்பாரும் கேட்பாருமிகச்சிலரே. வால்மீகரர்மாயணத்திற் பழகுவோர், இக்கம்பராமாயணத்தைக் கேளாமையாலோ, கேட்டும் அபிமானத்தாலோ, 'தமிழ்தானே' என்று புறக்கணிக்கிறார்கள். தமிழபிமானிகள் இதனைப்படியிலவும். கேட்கவும் மேற்கொள்வாராகில், அப்போது இதனருமை யாவருமநுபவிக்க ஏதுவாகும். இதனை யபிமானிப்பார் தொகை குறையவே, இதனைப் பிரசங்கிக்கும் வித்வான்கள் தொகையும் வரவர மிகவுங் குறைந்து யாரேனுமுண்டோ என்னும் படியாய் விட்டது. கம்பராமாயணம் சிலவிடங்களில் வால்மீகத்தை விரோதித்தலால் பிரமாண மாகாதென்று ரொருவர். பலபெரியோர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டு அங்கீகாரம் பெற்றதாக வழங்கிவருகிறதே யென்றேம். நெடுங்கால மாயினமையால் மாறுதலடைந்திருக்குமென்றார். காலக்கழிவால் மாறுதலடையுமாயின் அந்தத்தோஷம் இதனினும் மிகப்பழையதாகிய வால்மீகத்தை மாத்திரம் விட்டதென்பது பொருந்துமா? ஆனால் பழைய நூல்களிற் பிற்காலத்தார் கைவைத்தவிடங்கள் பலவுண்டு. கம்பராமாயணத்தில் சிலவற்றைச் சைவர் மாற்றிவிட்டதாக வைணவரும், வைணவர் மாற்றியுங் கூட்டியும் விட்டதாகச் சைவருங் கூறுவதுண்டு. அவற்றையிங்கு நாம் விவரிக்கப் போந்ததில்லை. கம்பராமாயண சாரமென்று யாமிங் கெழுதப்புகுந்தது கம்பராமாயணத்திற் சிலவிடங்களில் மிகவும் அர்த்தபுஷ்டியும் அருமைபொருளும் அடங்கியுள்ள சிலபாடல்களையும் வால்மீகத்தோடு மாறுபடு மிடங்களில் கம்பர் சொற்போக்கிலுள்ள நயத்தையும் விளக்கிக்காட்டவேயாம்.

ஒரு காரியத்தைப் பல அறிஞர் ஒருவர் பின்னொருவராகத் தொடங்கிச் செய்தால், அக்காரியம் வரவரத் திருத்தமாகுமென்பது சர்வத்திர சம்மதமானது. ஆதலால் வால்மீகர் கொண்டகதைப் போக்கைப் பின்றொடர்ந்த கம்பர் பல விடங்களில் அமைத்திருக்கும் விஷய விகாரங்கள் அவ்வால்மீகத்தினுமிகச்சுவை தருவனவாயுள்ளன. இரண்டு இராமாயணத்திலுமுள்ள விவகாரசங்களை யொன்று மாத்திரங் கற்றவர் அறிய முடியாமையாற் றந்தம்மிராமாயண விவகாரங்களைச் சிலாகித்தே யவ்வவர் ஒழுகுவாராயினர். இப்போது வால்மீகராமாயணம் தமிழிலும், அங்கிலேய மொழியிலும் வழங்கிவருதலால் இரண்டு ராமாயணத்திலுமுள்ள பேதங்களை யறிந்து கொள்வது சுலபமாயிருக்கின்றது. கம்பராமாயணக் கதைப்போக்கு வால்மீகத்தினுஞ் சுவையும் அமைதியுமுடைய தென்று கூறுவதால், வால்மீகத்துக்குத் தாழ்வு கூறுவதாகக்கொள்ளலாகாது. பலவிடங்களில் விவகாரச் சுவைக்காக வால்மீகப் போக்கைவிட்டு, வேறு வடமொழி யிராமாயணங்களின் போக்கைப் பின்பற்றினவராயினும், வால்மீகி முநிவரிடத்துக் கம்பருக்குள்ள அன்பு மதிப்பு மளவற்றதெனக.

அவையடக்கத்திலே :—

"நொய்தி னெய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை"

செய்தீ செய்தவன் சொன்னின்ற தேயத்தே, என்று கூறியிருக்கின்றார்.

இனி யிப்பாடலிலுள்ள அருமையை ஆராய்வோம் :—மராமரங்களேழும் துளைபெறும்படி நிறைமொழி மாந்தர் சபித்த சாபம்போல அம்பெய்த ஸ்ரீராமபிரானுக்குரிய பெரிய கதையை அமைதி பெறச்செய்த வான்மீகி முனிவருடைய காவியமானது பிரபலமாக நிலைபெற்றுள்ள இந்தத்தேசத்திலேயே நானும் மிகவும் அற்பமாகிய சொற்களைக்கொண்டு அக்கதையைக் காவியமாகச் சொல்லத்தொடங்கினேன். இதனால் என்னபயன்?

என்பதனால் வான்மீகம் வழங்காத இடத்தில் என்னூலுக்குச் சிறிது மகிமையுண்டாயினு முண்டாகுமே யன்றி, அது வழங்கு மிடத்தில் என்னூல் சூரியன் முன் மின்மினிபோலுமென்றாரென்பதாம். எனவே வான்மீகத்தினது அருமையும், அது கொண்டாடப்படும் பெருமையும் வெளிப்படுத்தியவாறாயிற்று. இனி ஒரு காரியஞ் செய்யப்புகுந்த வொருவன் இடமுங்காலமுங் கருவியும் பயனுமறிந்து செய்வது நன்மையாகும். அங்ஙனமாக நான், புண்யகண்டமாகிய இடத்தையும், வான்மீகம் பிரபலமாகப்படித்துங் கேட்டுங் கொண்டாடப் படுங்காலத்தையும், என்னிடத்துள்ள அற்பச் சொற்களாகிய கருவியையும், இக்கருவியாலாகிய காரியமாகிய என்னிராமாயணத்தை யாவரு மதியா ரென்பதையுமறியாமற் சொல்லத்தொடங்கினமை பேதைமையென்று கூறவந்தவர் 'நூற்கலுற்றேன் எனை.'(ஈதென்னபேதைமை)என்றாரெனினும் பொருந்தும். அன்றியும் ஈதென்னதைரியம்என்றாலும் அமையும். அல்லது ஈதென்ன நாணமின்மை! என்றாலும் ஆகும். 'எனைவைத வைவில்' என்று கொண்டு என்னை யொன்றுந் தெரியாதவனென்று திட்டிக்கொண்ட திட்டைப்போல நூல்செய்தேன் என்பதுமாம். எனவே பலவாற்றானுமெனது அறியாமையைப் புலப்படுத்துவதன்றி இராமாயணம் பாடியதின்று என்றபடி. அன்றியும் 'வைத வைவில் மராமரமேழ்துளை - யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை - செய்த செய்தவன், என்பது வேறொரு முக்கிய விஷயத்தை யுட்கொண்டு நிற்பது. என்னெனில் :—வான்மீக முநிவர் ஒருநாள் உச்சிப்போதில் தமசாநதிக்கு நீராடப்போகையில், ஆணும் பெண்ணுமாகக் கூடிக்களித்துக் கொண்டிருந்த கிரௌஞ்சமென்னும் பட்சிகளில் ஆணை ஒருவேடன்

# உண்மை விளக்கம்

## எனும்

## சித்தாந்த தீபிகை.

1898ளு ஏப்ரல்மீ

அதர்வசிரசின்

### துரியப்பொருள் விலாசம்.

பிரமா, விஷ்ணு, ருத்திரரென மும்மூர்த்திகள் உளராயினர் என்பது எவரும் அறிந்துகொண்ட விஷயமா மன்றோ. பிரமாவுக்குச் சிருட்டித்தொழில் முக்கியமாயினும் அப்பிரமாவும் பிரமா விஷ்ணு ருத்திரரெனப் பெயர்பெறும் விராட்டு காலர் புருஷர் என்னும் மூவரை வியூகராகவுடையார். ஆகவே, விராட்டு காலர் புருஷர் என்னும் மூவர்க்குந் துரியராயுள்ளார் சிருட்டி கர்த்தாவாகிய பிரமாவாமெனக.

விஷ்ணுவுக்குக் காத்தற்றொழில் முக்கியமாயினும் அவ்விஷ்ணுவும் பிரமா விஷ்ணு ருத்திரர் எனப் பெயர் பெறும் சங்கர்ஷணர் பிரத்தியும்நர் அநிருத்தர் என்னும் மூவரை வியூகராகவுடையார். ஆகவே, சங்கர்ஷணர் பிரத்தியும்நர் அநிருத்தர் என்னும் மூவர்க்குந் துரியராயுள்ளார் ஸ்திதி கர்த்தாவாகிய வாசுதேவராம் (விஷ்ணுவாம்) என்க.

ருத்திரருக்கு அழித்தற்றொழில் முக்கியமாயினும் அவ்வுருத்திரரும் பிரமா விஷ்ணு ருத்திரர் எனப் பெயர் பெறும் பவர் மிருடர் அரர் என்னும் மூவரை வியூகராகவுடையர். ஆகவே, பவர் மிருடர் அரர் என்னும் மூவர்க்குந் துரியராயுள்ளார் சங்காரகர்த்தாவாகிய ருத்திரராமென்க.

சிருட்டிகர்த்தாவாகிய பிரமா, ஸ்திதி கர்த்தாவாகிய விஷ்ணு, சங்காரகர்த்தாவாகிய ருத்திரர் என்னும் மூவர்க்கும் துரியராயுள்ளார் அருளாம்பிகாசமேத சிவபதியாமென்பது முக்கிய சிவாத்துவிதோபநிஷதங்களினாலும், அவற்றின் உபப்பிருமணங்களினாலும், சைவபாஷ்யத்தினாலும் அறியப்படுகின்றது. விராட்டு, காலர், புருஷர் என்னும் மூவர்க்குந் துரியராய் விளங்கிய பிரமாவானவர் திரிமூர்த்திதலைவராய சிவபதியினுடைய முடியைக் கண்டதாகப் பொய் கூறினமைபற்றித் தமக்குக் கோயிலும் பூசையும் இலவாயொழியப் பெற்றாராக, பவர் மிருடர் அரர் என்னும் மூவர்க்குந் துரியராய் நின்ற சங்காரகர்த்தாவாகிய ருத்திரர் காரியருத்திரராமன்றிக் காரணருத்திரரல்லர் என்பது வைதிகசைவர்கள் யாவரும் ஒப்புக்கொண்ட விஷயமாய் விட, எஞ்சிநின்ற ஸ்திதிகர்த்தாவாகிய விஷ்ணுவோ படைத்தற்கர்த்தா காத்தற்கர்த்தா அழித்தற்கர்த்தாவாம் பிரமா விஷ்ணு ருத்திரர் என்னும் மூவர்க்குந் துரியராய் நின்ற வைதிகசைவருடைய சிவனாரோ உள்ளபடி துரியரும் உத்கிருஷ்டருமாமென்பது முதற்கண்ணே ஆராயவேண்டியதாயிற்று.

ஸ்திதி கர்த்தாவாகிய வாசுதேவர் (விஷ்ணு) பிருதிவியாதி பூதமைந்து, சப்தாதி தன்மாத்திரை ஐந்து, வாக்காதி கன்மேந்திரியமைந்து, சோத்திராதி ஞானேந்திரியமைந்து, மனமாதி அந்தக்கரணம் நான்கு என்னும் இருபத்துநான்கு தத்துவங்களுக்குத் தலையாய குணதத்துவத்தின் மேலுள்ள இருபத்தைந்தாந் தத்துவமே விஷ்ணுவுக்குத் தானமாம் என்றும், இவரே வைஷ்ணவர் கொள்கையின்படி பரம்பொருளாம் என்றும் அறியப்படுகின்றது. ஆதலால், அவ்விஷ்ணுவுக்கிருப்பிடமாகிய இந்த இருபத்தைந்தாந் தத்துவத்துக்கப்பாற்பட்ட வித்தியாதத்துவம் எழுக்கும் அப்பாற்பட்ட சிவதத்துவமைந்துக்கும் அப்பாற்பட்ட வருமாய் (எனவே), பிருதிவியாதி சத்தியந்தமாகிய முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவரும் உமாசமேதருமாய் சிவபிரானாரே வைஷ்ணவருடைய துரிய சாவதி வியாபக விஷ்ணுவுக்கு நிரவதி வியாபகராய்த் தலைவராய் உத்கிருஷ்டராய் நின்றாரென்பது பெறப்படுகின்றது.

வைஷ்ணவர்களுடைய நாராயணோபநிஷதம் நாராயணரிலிருந்து பிரமா பிறக்கின்றார் என்பது பொருள்பட.

(౧) నారాయణాద్బ్రహ్మా జాయతే।

என்று கூறுகின்றமையாலும், பிரமாவுடைய லலாடத்திலிருந்து ருத்திரர் பிறந்தாரென்ற கருத்தினால் மகாபாரதம்.

(౨) అథప్రాదుస్తస్య చతుర్వక్త్రస్యధీమతః। లలాటప్రభవపుత్ర శ్శివఆగాద్యదృచ్ఛయా॥

நான்முகனுடைய (பிரமாவுடைய) லலாடத்திலிருந்து சிவன் பிறந்தாரென்று சொன்னமையாலும், அவ்வாறே வைஷ்ணவர் நாலாயிரப்பிரபந்தம்.

> "நாராயணன் படைத்தான் நான் முகனை [தான்
> நான்முகனுந் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்
> னந்தாதி மேலிட் டறிவித்தேனு பொருளைச்
> சிந்தாமற் கொள்ளு நீ தேர்ந்து."

என்று கூறுதலானும், ருத்திரரினும் பிரமா சிறந்தவராய்ப் பிரமாவினும் நாராயணர் சிறந்தவராய்ப் போற்றப்படுவாரோ வெனில் அன்றாம். வாயுசங்கிதை.

(౩) బ్రహ్మనారాయణౌపూర్వం రుద్రకల్పాంతరేఽసృజత్। కల్పాంతరేపునర్బ్రహ్మా రుద్రవిష్ణూజగన్మయః। విష్ణుశ్చభగవాన్ రుద్రం బ్రహ్మాణమసృజత్ పునః। నారాయణంపునర్బ్రహ్మా బ్రహ్మాణంచపునర్భవః। ఏవం కల్పేషుకల్పేషు బ్రహ్మవిష్ణుమహేశ్వరాః। పరస్పరేణజాయంతే పరస్పరజయైషిణః। తత్తత్కల్పాంతవృత్తాంత మధికృత్యమహర్షిభిః। ప్రభావఃకథ్యతేతేషాం పరస్పరసముద్భవాత్॥

கற்பாந்தம் ஒன்றிலே (காரணதுரியருத்திரர் அல்லாத காரியமூர்த்தியாகிய) ருத்திரர் பிரமாவையும் நாராயணரையும் சிருட்டித்தார். மற்றோர் கற்பத்திலே விஷ்ணுவானவர் ருத்திரரையும் பிரமாவையும் படைத்தார். பின்னர் மற்றோர்

கற்பத்திலே பிரமன் நாராயணரைப் படைக்க, ருத்திரர் பிரமாவைப் படைத்தார். இவ்வாறு கற்பங்கடோறும் ஒருவரை ஒருவர் செயிக்கும் ஆசையுற்றுப் பிரமா விஷ்ணு ருத்திரர் என்னும் மூவரும் பரஸ்பரமாக உற்பத்தியாகின்றார்! அந்த அந்தக் கற்பாந்த விருத்தாந்தத்தை ஆதாரமாகக்கொண்டே இருஷிகளாயினோர் பிரமவிஷ்ணுக்களுக்குப் புராணாதிகளிலே ஆதிக்கியஞ் சாற்றினார்கள் என்று கூறிற்று. அதனால் பிரமாவுக்குச் சிருட்டித்தொழில் செய்து உபகரிக்குமாறு (ஷடாதாரஸ்தானங்களுள் ஒன்றாகிய ஆஞ்ஞாஸ்தானமாகிய பிரமாவின் லலாடஸ்தானத்திலே நின்றும்) புத்திரபாவனையோடு தோற்றிய ருத்திரர் துரிய ருத்திரரன்றாமென்க். இதுபற்றியே பாரத தாற்பரியசங்கிரகம்.

(௪) యథాసంహారరుద్రో లోకసృష్ట్యర్థం లోకరక్షార్థంచబ్రహ్మణశ్చాత్ స్వేచ్ఛయా ప్రాదుర్భూతః। దదవతారరూపః భవాంతరకల్పేషు సంహారార్థం హరిక్రోధాత్ స్వేచ్ఛయా ప్రాదుర్భూతశ్చ ।తదావతారరూపోరుద్రః అన్యేచనీలలోహితో లోకపాలత్వాదయోరుద్రాః అత్రబ్రహ్మాంగసంభూతో రుద్రోమహాభారతేదర్శితః॥

உலகத்தைப் படைக்கும் பொருட்டும், காக்கும் பொருட்டும் ருத்திரரானவர் பிரமாவிலிருந்து சுவேச்சையாகத் தோற்றினார்; வேறு கற்பங்களினும் விஷ்ணுவுடைய கோபத்தினாலே சங்காரார்த்தமாக ருத்திரர் தோற்றினார்; நீலலோகிதர் லோகபாலர் முதலாயினோராக அவ்வவ்வுருத்திரர்கள் பிரமாவுடைய அங்கத்திலே நின்றுந் தோற்றினாராக மகாபாரதத்திலே காணப்படுகின்றது. இதனால் இங்கே சொல்லப்பட்ட ருத்திரர் துரியருத்திரரன்றாம் எனவும், ஸ்தாணு விசாலாக்ஷ ருத்திரராம் எனவும் உணரற்பாற்றாம். அவ்வாறாயின் மகாபாரதாதிகளே நாராயணர் சாக்ஷாத்பிரமமாகவே பற்பல இடங்களிலே துதிக்கப்படுவாராக, சிவபிரான் பரப்பிரமமாகச் சாற்றப்படுவது எவ்வாறுமென ஆக்ஷேபிப்பது தக்கதன்றாம். பழையரிற் பழையோராகிய ஸ்ரீ நாராயணர் இமாசலத்தை அடைந்து கைகளை உயர்த்திக்கொண்டு நின்று ஆதித்தியனுடைய ஒளிபோல மகாதேசசுவுடையராய் வாயுபக்ஷணஞ் செய்துகொண்டு அறுபத்தாறாயிரம் வருஷம் தபஞ் செய்தார். பின்னரும் அதன் இரட்டியாம் ஒருலக்ஷத்து முப்பத்திராயிரம் வருஷம் தமது தேசசினால் பூமியையும் ஆகாசத்தையும் நிறைத்து நின்று கொடுந்தபம் புரிந்தார். அங்ஙனம் செய்தலால் (சிவோகம்பாவனை செய்தலால்) அவர் பிரமமாயினார். அதனால் விசுவேசரும், விசுவகாரணரும், விசுவாதீதரும், காண்டற்கரியரும், சர்வதேவேசரும், ஈசுவரரும், அணுவுக்கு அணுவும், மகத்துக்கு மகத்தும், ருத்திரரும், ஈசானரும், இருஷபரும், அரரும், சம்புவும், பினாகருமாகிய சிவபிரானைத் தரிசித்தார் என்ற கருத்தினால் மகாபாரதம்.

(௫) ఏషనారాయణోనామ పూర్వేషామపిపూర్వజః। సతపస్తీవ్రమాతస్థే హిమవంతంగిరిమాశ్రితః। ఊర్ధ్వబాహుర్మహాతేజా జ్వలనాదిత్యసన్నిభః। షష్టింవర్షసహస్రాణి తావంత్యేవశతానిచ। అశోషయత్తదాత్మానం వాయుభక్షోంబుజేక్షణః। తథాపరంతప స్తప్త్వాద్విస్తతోన్యత్పునర్మహత్। ద్యావాపృథివ్యోర్వివరం తేజసా సమపూరయత్। సతేనతపసాతాత బ్రహ్మభూతో యదాభవత్। తతోవిశ్వేశ్వరంయోనిం విశ్వస్యజగతఃపతిం। దదర్శభృశదుర్దర్శం సర్వదేవేశమీశ్వరం। అణీయాంసమణుభ్యశ్చ బృహద్భ్యశ్చమహత్తరం। రుద్రమీశానమృషభం హరంశంభుంకపర్దినం॥

என்று கூறுகின்றமையால், கிருஷ்ணர் சிவோகம் பாவனையினாலே முற்றியவராதலினால் அவர் பிரமம் எனப்படுதற்கு யோக்கியராயினார் என்பது பெறப்பட்டது. இக்கருத்துக் கொண்டே சைவபாஷ்யகாரர் "உபயலிங்காதி கரணத்திலே" கிருஷ்ணர் முதலாயினோர்க்கு அந்தச் சிவைக்கியபாவனையினாலே அந்தச் சிவைசுவரிய விளக்கம் காணப்படுகின்றது என்னுங் கருத்தினால்.

(௬) కృష్ణాదీనాంతదైక్య భావనయాతదైశ్వర్యప్రకాశసందృశ్యతే।

என்று கூறினார். இதனால் பசுபதியாகிய சிவபிரான் ஒருவரே முழுமுதற்கடவுள் என்பதும், மற்றை நாராயணராதியோர் அவரது காரிய மூர்த்தியராமன்றித் துரியமூர்த்தியரான்றாம் என்பதும் உணரற்பாலனவாம். ஈண்டுக் கூறியவாற்றால் சகுணோபாசனை பற்றியுள்ள மகாலட்சுமிசமேத நாராயணரினும் பராசத்திசமேத சிவபிரானே உத்கிருஷ்டராவார் எனவும் கொள்ளற் பாற்றாம். இனி மாயாவாதிகளுடைய ஆதி சத்தியாகிய அத்தியாசசத்திக் கூடஸ்த நிர்க்குணப் பிரமமோ அக்கினியிற் சூடுபோல அபின்னபூதையாகிய பராசத்திசமேதருத்திரசிவபதியோ உத்கிருஷ்டராவார் என்னும் உண்மை பரியாலோசிக்கற்பாற்றாம்.

மாயாவாதோபநிடதங்களாகிய ருத்திர கிருதயோபநிடதம், சாசுவதிரகசியோபநிடதம், அமிர்த விந்துபநிடதம் மைத்திரேயோபநிடதம், ஸ்கந்தோபநிடதம், சுகரகசியோபநிடதம்; அத்துவய தாரகோபநிடதம், வராகோபநிடதம், யோகசிகோபநிடதம் (நான்காம் அத்தியாயம்) அத்தியாத்மோபநிடதம், யாஞ்ஞ வல்க்கியோபநிடதம், சர்வசாரோபநிடதமுதலியவைகளிலே சீவனும் (பசுவும்), ஈசரும் (பதியும்) கற்பிதராய மித்தியராய் ஒழிக்கப்படுகின்றமையினாலே, வைதிக சிவாத்துவிதோபநிடதங்களிலே பசுவும் (ஆன்மாவும்), பதியும் (சிவபிரானும்) கற்பிதராய் மித்தியராக, அதனால் வைதிகசைவசமயம் கற்பிதசமயமாய், மித்தியாசமயமாய், நாஸ்திகசமயமாய்ப் போயொழியுமோவெனில் அன்றுமென்று நிரூபிப்பேம்.

சாபாலோபநிஷதத்திலே,

(௭) శివంశక్తించసాదాఖ్యమీశం విద్యాఖ్యమేవచ।

என்று போந்த மந்திரத்தினாலே சிவபுராணங்களினும் சிவாகமங்களினும் பேசப்படும் சிவம், சத்தி, [illegible] தாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்னும் சிவதத்துவம் ஐந்தும் சுருதியுக்தமாம் என்பது பெறப்பட்டது. சுவேதாசுவதரோ[illegible] தத்திலே,

(௮) కాలస్వభావోనియతిర్యదృచ్ఛా భూతానియోనిః పురుషఇతి చింత్యం।

என்று போந்த மந்திரத்தினாலே, சிவபுராணோபப்பிரும்ம

ணங்களினும் சிவாகமங்களினும் பேசப்படும் காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருஷன், மாயை என்னும் வித்தியாதத்துவங்கள் ஏழும் பெறப்பட்டன. இவ்வுண்மையைப் பின் வரும் (௬௩) அறுபத்துமூன்றும் இலக்க உபப்பிரும்மணத்திற் காண்க. பிரசிநோபநிடதத்திலே,

(௯) పృథివీపృథివీమాత్రాచా పశ్చాపోమాత్రాచ తేజశ్చతేజో మాత్రాచ వాయుశ్చవాయుమాత్రాచ కాశశ్చాకాశమాత్రాచ చక్షుశ్చద్రష్టవ్యంచ శ్రోత్రంచశ్రోతవ్యంచ ఘ్రాణంచ ఘ్రాతవ్యంచ రసశ్చరసితవ్యంచ త్వక్చస్పర్శయితవ్యంచ వాక్చవక్తవ్యంచ హస్తౌచాదాతవ్యంచోపస్థశ్చా నందయితవ్యంచ పాయుశ్చవిసర్జయితవ్యంచ పాదౌచ గంతవ్యంచ మనశ్చమంతవ్యంచ బుద్ధిశ్చ బోద్ధవ్యంచాహంకారశ్చాహంకర్తవ్యంచ చిత్తంచ చేతయితవ్యంచ తేజంచ విద్యోతయితవ్యంచ ప్రాణశ్చ విధారయితవ్యంచ ।

என்று போந்த மந்திரத்தினாலே சிவபுராணங்களினும் சிவாகமங்களினும் பேசப்படும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பூதாதி ஐந்தும், சப்த பரிச ரூப ரச கந்தம் என்னும் தன்மாத்திரை ஐந்தும், வாக்குப் பாதம் பாணி பாயுரு உபஸ்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தும், சோத்திரம் துவக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியம் ஐந்தும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்குமாகச் சேர்ந்த ஆன்மதத்துவம் இருபத்தினான்கும் பெறப்பட்டன. படவே, சிவதத்துவம் வித்தியாதத்துவம் ஆன்மதத்துவம் என்னும் மூன்றும் சுருதியுக்தங்களாம் என்ப. இவற்றுள்ளே ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் அடிப்புறத்தும், வித்தியாதத்துவங்கள் ஏழும் நடுப்புறத்தும், சிவதத்துவங்கள் ஐந்தும் தலைப்புறத்துமாக நின்ற சுருத்தினாலன்றோ பிருகச்சாபாலம்.

(௧௦) ఆత్మతత్వమధోభాగే విద్యాతత్వంచమధ్యమే । తదగ్రేశివతత్వంతు క్రమాత్తత్వానిసంతిహి ।

என்று கூறிற்று. இதற்கு மூலமாயுள்ள மந்திரம் மாயாவாதிகளால் சிலகாலத்திற்கு முன்னே பெயர்த்தொழிக்கப்படுதற்கு முன்னர்ப் பிருகச்சாபாலோபநிடதத்ததாமென உணரக்கிடந்ததென்னும் வாய்மையைப்பழைய ஆலாசியமான்மியப் பதிப்பின் இருநூற்று முப்பத்தினான்காம் பக்கத்திற் காண்க.

பிரசிநோபநிடதம் சுவேதாசுவதரோபநிடதம் பிருகச்சாபாலோபநிடதம் என்பவைகளிலே பிரதிபாதிக்கப்பட்ட மூவகைத் தத்துவங்களின் பிரிவுக்கு உபப்பிரும்மணமாகப் பிரமாண்ட புராணத்து முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

(௧௧) భూమి... పోనలోవాయు రాకాశ గంధమేవచ । రసో ...పస్పర్శశబ్దో పస్థపాయుర్పదానిచ। పాణివాగాఘ్రాణజిహ్వత్వక్ చక్షుశ్శ్రోత్రమేవచ । అహంకారశ్చబుద్ధిశ్చ మనఃప్రకృతి పూరుషౌ। నియతిఃకాలరాగౌచ కలావిద్యేచమాయయా। శుద్ధవిద్యేశ్వరసదాశివశ్శక్తిశివావుభౌ । ఏతాషట్త్రింశదాఖ్యాతా స్తత్వసోపానసంజ్ఞయః॥

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், கந்தம், ரசம், ரூபம், பரிசம், சப்தம், உபஸ்தம், பாயுரு, பாணி, பாதம், வாக்கு, ஆக்கிராணம், சிங்நுவை, துவக்கு, சட்சு, சோத்திரம், அகங்காரம், புத்தி, மனம், பிரகிருதி, புருஷன், நியதி, காலம், ராகம், கலை, வித்தை, மாயை, சுத்தவித்தை, ஈசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் முப்பத்தாறும் தத்துவ சோபானங்களாம் என்று கூறிற்று. இந்த முப்பத்தாறு தத்துவங்களும் சிவபிரானை அறிதற்குரிய படிகளாதலினாலன்றோ ஸ்ரீ மூலர் "முப்பதுமாறும் படிமுத்தியேணியாய்" என்றும், அருண்மொழித்தேவர் "பேணுதத்துவங்களென்னும் பெருகு சோபானமேறி யாணையாஞ் சிவத்தைச் சாரவணைபவர்" என்றும் கூறியருளினார்கள். வாயுசங்கிதை.

(௧௨) పంచభూతానితన్మాత్రాః పంచకర్మేంద్రియాణిచ । జ్ఞానకర్మవిభేదేన పంచపంచవిభాగశః । మనోబుద్ధిరహంఖ్యాతి గుణాః ప్రకృతిపూరుషౌ। రాగోవిద్యాకలాచైవ నియతిఃకాలఏవచ । మాయాచశుద్ధవిద్యాచ మహేశ్వరసదాశివౌ। శక్తిశ్చశివతత్వంచ తత్వానిక్రమశోవిదుః ॥

பூதாதி, ஐந்து (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்), தன்மாத்திரை ஐந்து (சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்), கன்மேந்திரியம் ஐந்து (வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம்), ஞானேந்திரியம் ஐந்து (சோத்திரம், துவக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம்), மனாதி நான்கு (மனம், புத்தி, அகங்காரம், பிரகிருதி) என்னும் இருபத்தினான்கும் ஆன்மதத்துவமாம். வித்தியாதத்துவம் ஏழு (புருஷன், ராகம், வித்தை, கலை, நியதி, காலம், மாயை), சிவதத்துவம் ஐந்து (சுத்த வித்தை, மகேசுரம், சதாசிவம், சத்தி, சிவம்) என இங்ஙனம் முப்பத்தாறு தத்துவங் கூறிற்று. பின்னரும், வாயு சங்கிதை,

(௧௩) తస్యాంవిక్షోభ్య మాణాయా మాదౌనాదస్సముద్బభౌ ॥ నాదాద్వినిస్సృతోబిందు ర్బిందోర్దేవస్సదాశివః । తస్మాన్మహేశ్వరో జాత శ్శుద్ధావిద్యామహేశ్వరాత్ । సావాచామీశ్వరీశక్తి ర్వాగీశాఖ్యాహిశూలినః । యాశావర్ణస్వరూపేణ మాతృకేతివిజృంభతే । అథానంతసమావేశా న్మాయాకాలమవాసృజత్ । నియతించకలాంవిద్యాం కలాతోరాగపూరుషౌ । మాయాతఃపునరేవాభూదవ్యక్తం త్రిగుణాత్మకం । త్రిగుణా

இதன் திராவிட மொழிபெயர்ப்பு வருமாறு:—வாயுசங்கிதை.

இறைவனோ டொன்றாயுறை பராசத்தி யெள்ளினிலெண்ணெய் தோன்றுதல்போ, னெறியினிற் சிருட்டி காலத்தில் வந்து தோன்றிடு நிகழ்த்தியவதன்பின், முறையினிற் கிரியாசத்தி தோன்றிடு மான்முளைத்த வச்சத்திதான் பொருந்தி, யுறைதரு மூலப்பகுதியையேவ நாதம் வந்துற்றிடு மன்றே.

(தொடரும்.)

சி. செந்திநாதய்யர்.

பிழை திருத்தம்.

அ-ம் இலக்கப்பத்திரிகை.

189-பக்கம் இடப்பக்கத்து 141-ம் வரியிலே போந்த "அவ் வடமொழிச்" என்றதின் பின் "சிவஞான போதப்பொருளே தென்மொழிச்" என்றதைச் சேர்த்து வாசிக்கவும்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மெய்கண்டசாத்திர மான்மிய விளக்கம்.

---

"மெய்கண்ட சாத்திரம்" என்பது மூவொரு மொழிகள் ஓரிரு சந்தியாய் மாறுபாடின்றித் தம்முட்டொடர்ந்து முடிந்து நிற்பதோர் மங்கல வாக்கியம். அதனுள் முன்னையது இரண்டாவதன் றொகைநிலைத் தொடரும் பின்னையது இறந்தகாலப் பெயரெச்சத் தொடருமாய் மெய்ப் பொருளைக்கண்டசாத்திரம் எனச் சைவசித்தாந்த சாத்திரத்திற்குக் காரணச் சிறப்புப் பெயராயிற்று. என்னை? அசத்திய போதவியாபாரமலைவுறு பொருள்களின் முட்டுப்பாடறுத்து யதார்த்தாநுபவ நிலையைக்காட்ட வல்லது அதுவேயாகலின்.

ஈண்டு மெய் என்றது பிருதிவியாதி நாதமீறுயுள்ள தத்துவங்களை யெல்லாங் கடந்து நின்று தோற்றக் கேடுகளின்மையின் நித்தமாயும் நோன்மையாற்றன்னை யொன்றுங் கலத்தலின்மையிற் றூயதாயும் தானெல்லாவற்றையுங் கலந்துநிற்றலின் வியாபகமாயும் விகாரமின்றி ஒன்றேயாய் விளங்காநின்ற முதற்பொருளாகிய சிவத்தோடு இரண்டறக்கலந்தநுபவிக்கும் மோக்ஷாநுபவப்பேற்றையே யாமென்க. "மெய்ப்பொருள்" "செம்பொருள்" என்று அதுகுறித்தே மேலோர் கூறியதூஉங் காண்க. இனி அதனைக்காண்டலாவது அதற்கு வேறுயுள்ள பொய்ப்பொருளனைத்தையு நியாய முகத்தானிராகரித்துச்சென்று உள்ளவாறே பிரத்தியக்கமாயறிதல்; எனவே, அவ்வநுபவப்பேற்றைக் கரதலாமலக மெனச் சந்தேக விபரீதங்களொழித்துக்காட்டாநின்ற சாத்திரம் இதுவே யென்பது பெற்றும்.

அல்லதூஉம் "கண்கண்டதெய்வம்" "கைகண்டபலன்" என்றற்றொடக்கத்து உலகவாய் பாடுகள்போல மெய்கண்ட சாத்திரம் எனப்பிரத்தியக்க உறுதிப் பொருட்டாய் வழங்கப்படுவதுமாமென்க. என்னை? உலகத்தின்கட் பல்வேறு வகைப்படவிரிந்து கிடக்குஞ் சாத்திரத்தொகுதியுள் மக்களுயிர்க்கு இன்றியமையாத வீடுபேற்றுறுதி பயத்தற் சிறப்புடை உண்மைநூலாகக்கண்டு சான்றோராற் றெரிந்தெடுக்கப்பட்டதூஉம் அதுவே யாகலின். அதுபற்றியன்றே அம்மெய்ந்நிலைகண்டு தெரித்தருளிய சந்தான சாரிய அடிகளை "மெய்கண்டதேவர்" எனக்காரணக்குறியான் உலகம் போற்றி வழிபட்டொழுகுவதுமாமென்க. "பொய்கண்டார் காணாப்புனிதமெனு மத்துவித - மெய்கண்ட நாதனருண் மேவு நாளெந்நாளோ" என்பதே அதுவாம். ஈண்டுப் பொய்கண்டார் என்றது வேதத்திலே பூருவபக்கமாகக் கூறப்பட்ட ஆன்மா இந்திரியம் பூதம் முதலிய ஒவ்வொன்றனையே மெய்ப்பொருளெனக் கொண்டு மயங்கும் ஏகான்மவாதி உலகாயதன் பாஞ்சராத்திரி முதலாயினோரை அன்னோர்தத்தம் நூற்பிரமாண நெறியையே மற்சடமுட்டியாகப் பற்றிவிடாது மயங்குபவாகலின் மெய்ப்பொருள் காண்டல் அவர்க்கு அரிதாயிற்றென்க. இனிப் "புனிதமெனு மத்துவித மெய்" என்றது சுத்தாத்துவித சைவசித்தாந்த உண்மை நிலையினை. "சுத்த சத்தை" "விசிட்டசத்தை" எனத்தார்க்கிகர் வழங்கு மாற்றானுமறிக. எனவே, இதற்கு மறுதலையாய சாத்திரங்களெல்லாம் பசுபாச ஞானப் பொய்ப் பொருள் போதிக்கும் பொய்ந்நூல்களென்பதூஉம் இதுவே பதிஞானமாகிய மெய்ப்பொருள் போதிக்கும் மெய்ந்நூலென்பதூஉம் தெள்ளிதிற்றுணியப்படு மென்க.

இனி மெய்கண்ட சாத்திரம் என இறந்தகாலவாய்பாட்டான் வழங்கப்படு மேனும் மெய்ப்பொருளைக் காண்டற்குக் கருவியாகிய சாத்திரம் என எதிர்காலப் பொருட்டாய் அது தன்னைக் கடைப்பிடித்துணரு நெறிப்படு மாந்தர் உண்மைப் பொருளை ஒருதலை யாகக்கண்டே விடுவராகலின் அத்துணிவு பற்றி இறந்த கால வாய்பாட்டான் வழங்கப்படுவதாமெனக் கோடலு மொன்று.

அல்லதூஉம் பொய்ந்நெறி காட்டுவானொருவன் பிறநெறிகளை யெல்லாமறைத்துத் தன்னெறி யொன்றே மெய்ந்நெறியெனச்சாதிக்குமாறு போலாது மெய்ந்நெறி காட்டுவானொருவன் பிறநெறிகளை யெல்லா மெடுத்து அவ்வவற்றின் றாரதம்மிய வேறுபாடுகளைச் சந்தேக விபரீதங்களறக் காட்டி நியாயமுகத்தானிராகரித்துச் சென்று இதுவே மெய்ந்நெறியாமென நிறுத்துமாறு போலப் பிறநூற் பொருள்களை யெல்லாம் முறையானே ஒவ்வொன்றாகத் தன்னிடத்து எடுத்துக்காட்டி அவ்வவற்றின் றாரதம்மிய வேறுபாட்டு வழூஉப்படு கோள்களை ஐயந்திரிபற நியாய முகத்தானிராகரித்துப் பூருவபக்கப்படுத்தி இதுவே மெய்ப்பொருள் என உண்மையநுபவநிலையை உள்ளவாறே காட்டுதலானும் இது "மெய்கண்ட சாத்திரம்" என வழங்கப்படுவதாமென்றுணர்க.

அது பற்றியன்றே இதனைச் சித்தாந்த சாத்திரம் எனவும் இந்நூனுதலிய பொருளையே சித்தாந்தம் எனவும் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் ஆதிக்கண்ணே ஆணைதந்து நிறுத்தியருளியதுமாமென்பது. என்னை? சித்தாந்தம்-முடிந்தமுடிபு. அதாவது தனக்கு மேற்பட்டதொரு கொள்கையுமிலதாய் முடிந்து நிற்பது சித்தாந்தம். அல்லதூஉம் வாதிக்கப்படுவது பூருவபக்கமும் வாதிப்பது சித்தாந்தமுமாம். எனவே சைவசமயநூல் மற்றெல்லாச் சமயநூல்களையும் பூருவபக்கம்பண்ணி நிற்றலானும் அதனைப் பூருவபக்கம் பண்ணற்குப் பிறிதோர் நூலும் இன்மையானும் அதுவே சித்தாந்த மாமென்ப வாகலினென்க.

அற்றேல் இச்சித்தாந்தம் யாண்டுப் பெறப்பட்டதெனின்? முழுமுதற் கடவுள் மேன்முகத்துதித்த காமிகம் முதல்

வாதுள பீருய சைவாகமத்திற் பெறப்பட்டதென்பது. எனவே, ஆகமாந்தம் என்னும் ஞானபாதப் பொருளே யோகரூடி நாமமாகிய சித்தாந்தம் என்னும் பெயரையுடையதாமென்க. அது "சித்தாந்தமே சித்தாந்தம் அவைக்கு வேறானவை பூருவபக்ஷங்கள்" என இரத்தினத்திரயத்திலும் "இந்த எல்லையில் சிவன் வெள்ளிமலையாகிய கைலாசத்திலே சனகர் முதலிய முனீந்திரர்களுக்குத் திரிபதார்த்தப் பொருள்களினாலே சம்மிதமாகியும் இரகசியமாகியும் ஆகமாந்தம் என்னும் பெயர்த்தாகியும் உள்ள சித்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்" எனக்காந்தத்திலும், "இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்பவை சிவனது மற்றை முகங்களிற் பிறந்தன? காமிகம் முதலிய சிவஞானம் ஊர்த்துவச்சுரோதோற்பவங்களாகி மேன்முகத்திற பிறந்தன. முன்கூறிய சகலநூல்களையும் பரமசிவன் பூருவபக்கமாகச் சொன்னார். அவற்றையெல்லாங் கீழ்ப்படுத்திப் பரமார்த்தமாகத் தவிரற்பாலனவுங் கொள்ளற் பாலனவும் ஆகியபொருள்களை நிச்சயிக்கும் சிவசித்தாந்தங்களைச் சொன்னார். சித்தாந்தமாவது காமிகம் முதலியனவாம். இதில் உயர்ந்தது பிறிதொன்றுமில்லை. இந்தச் சைவநூலே மூலமாம். சதுர்வேதங்களும் இதினின்றும் பிறந்தனவாம். சைவமே வைதிகமெனப்படும். வைதிகமே சைவமெனவும்படும். சைவம் வைதிகத்தில் அடங்கியும் அடங்காமலும் இருக்கும். வைதிகமும் சைவத்திற்சூழ்ந்தது. முனிவரரே? அற்றாயினும் சைவம் வேதப்பொருளோடு ஒற்றுமையாய் இருத்தலால் வைதிகம் என்றும் வேதசாரம் என்றும் கூறப்படும். சிவப்பிரகாசமாகிய சிவஞானம் பரஞானமாம். பசுபாசபதார்த்த போதகமாகிய வேதம் முதலியன அபரஞானமாம். இராத்திரியில் மனிதரது கண்ணும் பூனையின் கண்ணும் விலக்ஷணமாய் இருப்பதுபோல இந்தப் பரஞானமும் அபரஞானமும் விலக்ஷணமாய் இருக்கும்" எனக் காமிகத்தினும் கூறுமாற்றான் அறிக. இதனால் வேதோபநிடத சாரசிவாகமாந்த உண்மைப்பொருளே சித்தாந்தமாமென்பதூஉம் அதுவே மெய்கண்டசாத்திர போதகமாகிய மெய்ப்பொருளாமென்பதூஉம் பெறப்படுமாறு காண்க.

இனிச் சனகாதி இருடிகள் நால்வரும் வேதோபநிடதங்களை அனேககாலம் பயின்றோதியும் ஞானம் நிலைக்கப்பெற்று உண்மை நெறிகாண மாட்டாராய்ப் பின்னர் ஆகமாந்தம் என்னும் பெயர்த்தாகிய சித்தாந்தத்தையோதி ஞானநிலைபெற்று உண்மை கண்டவராயினர் என்று சங்கர சங்கிதை கூறுமாற்றான் அதுபற்றியே அஞ்ஞான்று தொட்டிஞ்ஞான்று காறும் அவ்வேதசார சித்தாந்த சிவாகமாந்தம் "மெய்கண்டசாத்திரம்" என யாண்டும் வழங்கப்படுவதாமென்பதூஉமுணர்க.

இனி ஆகமம் என்புழி ஆ - பாசம் எனவும், க - பசு எனவும், ம - பதி எனவும் பெறப்பட்டுத் திரிபதார்த்தலக்ஷணங்களை உணர்த்துவது எனப்பொருடந்து நிற்குமாறு போலவே இதுவும் அவ்வாகமத்திற்கு மாறுபடாவண்ணம் "மெய்கண்டசாத்திரம்" என மும்மைச்சொற்களான் முடிந்து நிற்றலின் அம்மும்மைச்சொற்களும் முறையே பதி பசு பாசம் என்னும் மும்மைப் பொருள்களாகிய ஞாதுரு ஞானஞேய திரிபுடிலக்ஷணங்களே இந்நூனுதலுறு பொருளாமென்பதையும், அவற்றுள் இடையாய் பதம் மூவெழுத்துக்களை உடைத்தாய் நிற்றலின் ஆன்மாக்கள் மூவகைப்படுவர் என்பதையும் கடையாய் பதம் ஐந்தெழுத்துக்களை உடைத்தாய் நிற்றலிற் பாசம் ஐவகைப்படும் என்பதையும் குறிப்பானுணர்த்தியவாறுமென்க.

அற்றேல் பதிப்பொருட்டாகிய மெய் என்பது ஏனைச்சொற்கள் போன்று அப்பதியிலக்கணந் தோன்ற ஒன்றேயாய் நில்லாது ஈரெழுத்துக்களாய் நின்றதென்னையெனின்? அறியாது வினாயினாய் "ஒருருவாயினை மானாங்காரத்-தீரியல்பாய்" என ஆளுடைய பிள்ளையார் திராவிட வேதத்தில் அணையிட்டருளியவாற்றான் அது தெளியப்படுமென்க. என்னை? பதிப்பொருள் ஒன்றே சிவம் சத்தி என்னும் இருகூற்றதாயும் விளங்குவதாம் என்றாராகலினென்பது. ஈண்டுச் சத்தியென்றது அருள். அது அக்கினியிற் சூடுபோலச் சிவத்தினிடத்து அனாதியே அபின்னமாயிருக்கும் ஓர் வல்லமை.

இனி மெய்கண்ட சாத்திரம் என்பது ஈரைந்தெழுத்துக்களான் இயைந்து மெய்ம்முதன் மெய்யீறாக முன்னும் பின்னும் மோனாக்ஷரத்தையே கொண்டு நிற்றலின் ஆன்மாவுக்கு அந்தர் முகத்தும் பகிர் முகத்தும் மோனானந்தமேயாகும் அதீதாநுபவ (வீட்டின்ப) த்தைப் பயப்பதாகிய சாத்திரம் இதுவே என்றுணர்த்தியவாறுமென்பதூஉம் பெறுதும். ஈண்டு ஈரைந்தாய எண் ஆன்மாவைக்குறித்து நின்றவாறும் அது "எட்டினோ டிரண்டும் மறியேனையே" "எட்டுமிரண்டுமறிவித்தானென்னத்தி" என்றற்றொடக்கத்துச் சுருதிகளானுந் தெளிக.

இனி இப்பெற்றித்தாய சித்தாந்தசாத்திரம் சமஷ்டி வியஷ்டிகளின் பாற்பட்டுச் சமஷ்டியில் மெய்கண்ட சாத்திரம் எனவும் வியஷ்டியில் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபா விருபது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம் எனவும் நிலையுதல்பெற்று விளங்கும். இவற்றுள் பரமகருணாநிதியாகிய சிவபிரானால் ஆன்மா நுக்கிரக நிமித்தம் நந்திகேசுவரருக்கு ஆதிக்கண்ணே அறிவுறுத்தருளப்பட்டதாகலிற் சிவஞான போதம் முதனூலும் அதன்வழித்தாய் முடி பொருங் கொப்பப் பிற்காலத்து வேண்டுவன புணர்த்து விரித்தல் யாப்புற அருணந்திதேவரால் அருளிச் செய்யப்பட்டதாகலிற் சிவஞான சித்தியார் வழிநூலும் அவ்விருநூற்கும் ஒருசிறை தொடங்கித் திரிபுவேறுடைய வாய்க் கொற்றங் குடியார் முதலிய குரவரால் அருளிச் செய்யப்பட்டவாகலின் இருபாவிருபது முதலியன புடைநூலாமென்றுணர்க.

இனி இதுகாறுங் கூறிப்போந்த வாற்றான் இச்சாத்திரம் மாநிலத்துதித்த மக்கட் பிறப்புடை மாந்தரெல்லோர்க்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாய மெய்ப்பொருள் பொதிந்த பொக்கசமாக ஒப்பு வேறிலதாய் விளங்குவ தொன்றாமென

வெள்ளிடைமலைபோற்றெள்ளிதிற் புலப்படா நிற்கவும் நம்மனோர் சிலர்தாம் அன்னதை உணராது பண்டைநாண் முதல் இன்றுநாள்காறும் அந்நெறிதழீஇய சைவாசிரியர்தம் உண்மைப் பேற்றையும் இற்றெனக் கருதாது "பாரிலுள்ள நூலெல்லாம் பார்ப்பானேன் சித்தியிலே - யோர்விருத்தப் பாதிபோதும்." எனக்கூறிய சந்தியவாக்கையும் உய்த்துணர்ந்து நோக்காது "பாதிவிருத்தத்தாலிப் பார்விருத்தமாக வுண்மை-சாதித்தார் பொன்னடியைத் தான் பணிவ தெந்நாளோ." எனப்போற்றிசைத் தருளியதிருவருட்சீரியர் பெருமையுந்தெளியாது சொன்னே பசுபாச போதக வேற்றுநூல் விழைந்து வாணாள் முழுதும் வீணாளாக்குப வென்சொலோ அறியேம். அவர் அப்பெற்றியராதல் பாற்கடற்பிறந்து அத்திற்றினந்தாடும் மச்ச சாலங்கள் பாலினை அருந்தாது அதற்கு வேறாய அசுத்த உணவுகள் தேடிவருந்துமாறுபோல அவரது ஊழ்வலியிருந்த வாறேயா மாகலின் அதுபற்றி இகழாது அன்னோர் தவக்குறைக்கிரங்கி மற்றேனையோர் பலரும் இந்நூல் தன்னையே ஒருவருமுணராப் பரமவீட்டுப் பேரின்பம் அளிக்குங் கழிபெருங் சாமக்கிழத்தி யெனத்தழீஇ ஒருதலையானே அல்லும் பகலும் அயர்வறப் பயின்று சன்மார்க்கநெறிகடைப்பிடித்தொழுகுவாராக.

இனியாம் இதுபற்றி ஈண்டுக் கூறப் புகுந்த தெற்றிற்கெனின். இம்மெய்கண்ட சாத்திரம் இற்றை நாட்குப் பன்னூறுண்டுகண் முற்படவே நந்தம் சைவப்பெரியோர் திருவாணையாற் சர்வசிவோபகாரார்த்தம் சைவபுண்ணிய பரிபாலாநுசந்தானசத் புருஷோத்தம சீலர்பலராற்போற்றி வெளியிடப்பட்டு நாளது காறும்யாண்டும் வழங்கப் படுவதாயினும்அது தன்னுட்சிதைவு கொண்டு ஒரோ வொன்றுகத் தனித்தனியே அங்கும் இங்கும் பலவாறாய்ப் பரந்து கிடத்தலின் அது தன்னைமுறையே ஆய்தலுறுவான்றொடங்கிய அதிகாரிகட்கு அவ்வாராய்ச்சிக்கட்படும் ஆசங்கையாகிய தடைகளைந்து சேறற்கு இடையூறு நிகழுமாகலான் அது நிகழாவண்ணம் மற்றஃது முற்றும் ஒன்றாயிருத்தல் இன்றியமையாததொன்றுமெனநன்காராய்ந்து அலக்கம் பெரிதுற ஒன்றுபடுத்துச் சுத்தபாடமாய் முத்திரீகரிக்கப் பட்டுள்ள புத்தகம் ஒன்று நிகழும் (எவிளம்பிஞு பங்குனிமீ 1உயில் நிகழ்ந்த) எம் உபந்நியாத காலத்தில் நந்தமக்குக் காஞ்சி - நாகலிங்கமுதலியார் என்பவர் மனமுவந்து பரிவினீந்திடப்பெற்று நோக்குழிக் கழிபேருவகை யெய்தினேமாகலின் நம்சிவநேயச் செல்வர் யாவரும் மற்றுதன்பெருமை நன்குணர்ந்து கடைப்பிடித்தொழுகுமாறே கூறப்புகுந்தா மென்க.

ஞானனந்த சுவாமிகள்
ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகளாதீனம்.

---

## திருவானைக்காவுலா.

---

அடிமுடியுங் காணா தரியயன்று னஞ்சிப்'
மடியில் விழுந்திறைஞ்சும் பனிபோ—விடையரன்மேற்

பைஞ்சிலந்தி நூலைப் பறித்தகற்றி யேபணியுங்
குஞ்சரமோ வென்னவிழுங் கொங்கையாள்-வஞ்சியுமை

காணா தரன்கலந்தாற் காயத் திவையழுந்தில்
வீணா வாரமா மேயென்றே—சேணுடர்

வீடார மானதனி வில்லா ளனையொருநாட்
கூடாத காதற் கொடுமையோ—நீடறிவால்

மாணிக்க முன்னு மணியொன் பதுமகத்தி
லூணிப் *பசுவுறுப்பென் றன்னியோ—காணும்

அவையவத்தின் றொல்லை யபிராம மெல்லாம்
இவைகரக்க லாகாதென் றென்றோ—கவினிசைத்த

நாணுதி யாபரண நான்கெய்தி யோநவமாம்
பூணா மத்தனையும் பூணுதாள்—பாணியுழைக்

கன்றேந்தி யைத்தழுவக் கண்டகன வைப்பிரிந்த
வன்றே விழிக்கெழுதா வஞ்சனத்தாள்—தென்றிசையி

லோடாத காற்றே றொழிந்தா லுருவிலிக்கு
நீடாழித் தேரா நிதம்பத்தாள்—வாடாத

கங்குற் களிறு கருப்புச் சிலைமலர்க்கோல்
திங்கட் கவிகைகுயிற் சின்னமீன்—தங்குகொடி

கட்டாண்மை வேள்குறும்பு காலமலாக் காலத்து
முட்டா துதவிவினை மூட்டுவாள்—எட்டான

தோளானை யாறு பருவத்தி லுந்தொழுது
நீளா தரங்கூரு நெஞ்சினாள்—கேளார்சொற்

கேளா தனவரதங் கேதத் திருப்பாளை
வாளார் தடங்கண் மயிலொருத்தி—வேளாடற்

பாண முதவுபொழில் பார்க்கவா வென்றழைப்ப
வாணுதல் போதகற்று வான்சென்றாள்—நீணிலம்

ஐந்தின் மாமு மடர்ந்து கிளர்காவில்
வந்தவளர் தேமாவை மாமகிழை—முந்தியகல்

லாலை வடத்தை யருச்சுனத்தை யாததிதனைப்
பாலையை வேயைப் பலாத்தன்னை—நீவியைப்

புன்னையைக் கூவிளையைப் புன்கைப் புனக்கடம்பை
வன்னியைக் கொன்றையை மாதுளை—[illegible]னைச்

---

* வலனென்னு மசுரன் யாகப்பசுவாக வந்தபோது, தன தேக வுறுப்புகளெல்லாம் நவமணிகளாக வேண்டுமென்று தேவர்களை வேண்ட, அவர்களவ்வாறே செய்தனரென்பது கதை. "தானவனுகம் பெருமாசிலா மணிச்சம்பந்தனே" என்னும் பண்டார மும்மணிக்கோவையாலு மிதனையுணர்க.

சினைதரு பாதிரியைத் தில்லையைச் சாயாப்
பனையை யிலந்தையைப்ப ராயைப்—* புனைகுருந்தை
நெல்லியை நோக்கினா ணித்தருறை நீழலெனச்
சொல்லி யவற்றைத் தொழுதிட்டாள்—எல்லை

யறிந்தாள்போ யப்பதிக டோறு மங்கங்கே
செறிந்தா ளெனக்களித்தாள் சித்தம்—புறந்தழைத்த

நன்னாவல் கண்டாள்வெண் ணாவலரனைக் கொண்டு
தன்னாவ நீரத் தழுவினள்—என்† னாயன்

தானன்றோ நீயென்னுஞ் சம்புவே யென்றோதும்
ஆனந்த மாகும் மவசமுறும்—ஏனென்னும்

பங்கிற் பசுங்கொடியைப் பாலிக்கும் பாகரே
செங்கைச் செழுநீர்த் திரடிரட்டுஞ்—சங்கரே

யென்னுஞ் சிவமருள்கொண் டிப்பாவை நிற்பாளை
யன்ன நடையா ரரவணைத்—தன்னறிவு

பேர்ந்ததோமின்னேரம்பெம்மான்வெண்ணாவலிடஞ்[ன்
சோந்ததோவாங்கவ்வரைச்சென்றுதொழ-நேர்ந்தெழுகெ

ழுற்றி யணைத்துவரு மவ்வளவி லண்டரெலாம்
போற்றி சயசய போற்றியென—நாற்றிசையுஞ்

சேணாடர் மண்மேற் றிரண்டுவரக் கல்லாரப்
பூணான் கயிலைப் பொருப்பினான்—வாணன்

குடமுழவு நாரதனார் கோதிலி யாழும்
இடமுடைய மூவ ரியலும்—படரும்

திருச் செவியி னாயேன் றெளிவிலாப் புன்சொ
லிருத்தி யருள விசைவோன்—வரத்திற்

சிறக்கும் பயனாற் செருக்கியே செத்துப்
பிறக்குந் தெய் வங்கள் பெருமான்—நிறக்குமரட்

சேவினான் கூடற் றிருவீ தியில்விறகு
‡ காவினான் றென்னனைக் காவினான்—பூவினான்

சம்பு முனிகௌரி தந்தி சிலந்திகனல்
வெம்பு பரிதிமதி விண்ணவர் கோன்—கும்பமுனி

தீர்த்த மகளிர் திருமால் பரவவருள்
மூர்த்தி யவனி முழுதாள் வோன்—மாத்தேரின்

வந்தான் மற் றவ்வளவின் மாதரார் வீதியிற் கண்
டிந்தா தொழுபவனி யென்றுரைப்பச்—* சந்தாபம்

ஆறினாள் பேரழகுக் காருமொவ்வார் தீரென்று
கூறினாள் கைதலைமேற் கூப்பினான்—தேறினாள்

பித்தரே யாதிப் பெருஞ்செல்வ ரேமடவார்க்
கெத்தரோ வெண்ணாவ லீசரே—நித்தம்

புதியரே பேராரம் பூண்டபெரு மானே
அதிவிரக மானே னணையீர்—மதனனென

தாருயிரைக் காய்ந்தா லனைத்துலகு மாள்வரெனும்
பேருமக்குண் டாமோ பெருமானே—நீருருவால்

உம்மை வகுத்த முறையா லுமக்குமையாள்
அம்மை† கிடீ ரெம்மையிடத் தாளுவீர்—இம்மையில்யான்

றானு மவள்போற் றவத்திகிடீர் தாழ்ந்தசடை
காணுமிமை யாதகண் ணாங்கிடீர்—யானு‡ நெடு

மாலுடனே வந்தேன் மலைவேளைப் பெற்றேனத்
தாலு மவளாகுந் தப்பாதே—எனுமவட்

கொற்றைப்பா கந்தா னுதவியது வாங்கரிதேல்
மற்றைப்பா கந்தரினும் வாழேனே—கொற்றவரே

என்று மதியா திசைத்தா ளிறையோனு
மன்ற லணிதார் வழங்குமோ—குன்றளித்த

வல்லிக்காத் தானஞ்சி மாரனைவாட் டேலென்று
சொல்லிக்காத் தானவளுஞ் சோர்வற்றா—ளொல்லையிலர

மாதர் பலரு மயங்கி §மடலேற
மேதகு திண்டேரில் வீதிதொறும்—பூதரமாம்

வில்லைக் குனித்தான்வெண் ணாவனிழல் வீற்றிருந்த
தொல்லைச் சிலந்திமுடி சூட்டினோன்—தில்லைச்

---

* முன்னர் அச்சிட்ட பதிப்பில் 'புனைகுருந்தை' என்பதன்பின். ௯௯-ம் பக்கமுதலில் ௯௫-ம் பக்கமுதலிலிருக்கவேண்டிய தொடைமாறி வந்தும், ௯௯-ம் பக்கத்து இரண்டாந்தொடை ௯௪-ம் பக்கத்து முற்றொடையாக மாறிப்போயும், பொருள் விபரீதப்பட்டுக்கிடக்கின்றது. இத்தடுமாற்றம் ஈயத்தகடிட்டு இடைவெளி ஒப்பனை செய்தபோது அச்சுக்கூடத்திலுண்டானதே - பரிசோதனை செய்தவர் இதனைத்திருத்தாதது கொடிது! இதனிடையில் 'கும்பமுனி' என்னுந் தனிச்சீரொன்று, மாறிவந்த அடுத்த அடியோடு தளைபொருந்தாமை கண்டு அதனைக் 'கும்ப[illegible]' என்று குறைத்துப் பிழைதிருத்தத்திற் காட்டியிருப்பது கொடிது! கொடிது! இவ்வநியாயத்தை வி[illegible]ப்பாரில்லையே!!

† நாயன் - தலைவன்; நாயனுமடிமையு நாட்டியதாகு மென்றார்பிறரும். இதன் பெண்பால் நாய்ச்சி என்பது.

‡ காவினான் - சுமந்தவன்.

* சந்தாபம் - என்பது மன்மதன் பாவபாணம் ஐந்திலொன்று. இதனைச் சிந்தாமணி. காந்தருவதத்தை - ௨௧௪-ம் பாடலுளாயிற் காண்க.

† கிடீர் - அறிவீரென்னும் பொருளது. ஒழிவிலொடுக்கத்தில் 'மாயோகவாசகத்தைக்கிட்டில் நரகங் கிடீர்' என்பதனுரையாற் காண்க.

‡ நெடுமாலுடனே வந்தேன்; மலைவேளைப் பெற்றேன், இவை தனக்கும் பார்வதிக்குஞ் சிலேடை: நெடிய திருமாலுடன்பிறத்தல், பெருமயக்கத்துடன் வருதல், எனவும், குன்றுதோறாடுங் குமரக் கடவுளைப் பெற்றேன், பொருகின்ற மன்மதன் வந்து வருத்தப் பேற்றேன், எனவும் பொருள்.

§ மடலேறல் என்பது தலைவிகாமங் கைம்மிகுந்து தான் விரும்பிய தலைவனிணங்காதபோது பனைமடலாற் செய்த குதிரை யேறி வீதிவலம்வந்து தன்னையுங் குதிரையையுங் கொளுத்திக்கொண்டுயிர் விடுத்து அப்பழியை அவன்மீது சுமத்துதல்.

சிவாலயத்தரு னெங்கள் செழுநீர்த் திரளான்
* உவாவனத்தான் போந்தா னுலா.

மெய்த்திறலோன் வில்லடியு மீனவன்கைம் மாறடியும்
புத்தரெறி கல்லும் பொருத்ததென—முத்தலைவர்

செஞ்சொற் றனைவிரும்புஞ் சீர்ச்சம்பு நாதர்வென்
புன்சொற் றனையும் பொறு.

திருவானைக்காவுலா முற்றிற்று.

---

## பதார்த்த தீபிகை மூலமும் அதன் உரையும்.

---

அஃதங்ஙன மாகுக; தொகை கூறல் பொருட்டிலக்கணமாகுமா? அப்பொருளின் பொதுவிலக்கணமுஞ் சிறப்பிலக்கணமுமென்ன? கூறுக என்பையேல்; பொருண்மைச்சாதி யுடைமையாதல் குணமுடைமையாதல் சமவாயி காரணத்தன்மையாகிய சாதியுடைமையாகுதல் பொருட்குப் பொது விலக்கணமெனவும் அவ்வியாத்தி முதலிய முக்குற்ற நீங்கியதன்மை அதற்குச் சிறப்பிலக்கண மெனவுங் கொள்க. நவத்திரவியத்தையும் அடக்கி நிற்றலால் திரவியத் தன்மையென்பதும் பார்த்திவப் பொருளெல்லாவற்றையும் அடக்கிநிற்றலால் பிருதிவீத்துவம் என்பதும் பொது. பிந்திய சிறப்பிலக்கணமென்பது இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வதனோடு நியதமாய் ஒப்ப நிற்பது. இலக்கியத்தன்மையை வரைந்து கொள்வதாகிய "பிருதிவீத்துவ சாதியோடு" அதன் சிறப்பிலக்கணமாகிய நாற்றமுடைமை நியதமாய் ஒப்ப நிற்பதை யநுபவத்திற்காண்க. ஆவிற்கலைதாடியுடைமையு மதற்குதாரணமாகும். நியதமாய் ஒப்பநிற்பது, நாற்றமுள்ளவிடத்தே பிருதிவித்தன்மையுளதாதலும், பிருதிவீத்தன்மையுள்ளவிடத்தே நாற்றமுளதாதலுங் காணப்படுதல். இங்ஙனங் கூறியது வியாவர்த்தக நோக்கிய விலக்கணமா? வியாவகாரிக நோக்கிய விலக்கணமா? எனவினவில்; வியாவர்த்தக நோக்கியதென்னில் எங்கே - யெங்கே வியாவிருத்தியுண்டோ அங்கேயங்கே வியாவர்த்தக முண்டு எனவியாவிருத்தியிலும்; எங்கேயெங்கே "அபிதேயத்தன்மையுண்டோ அங்கேயங்கே. பிரமேயத்தன்மையுண்டு என அபிதேயத்தன்மை முதலியவற்றிலும் அதி வியாத்தி நேரிடும்: என்க அங்ஙன முண்டாகாமைப் பொருட்டு வியாவிருத்திக்கும் அபிதேயத்தன்மை முதலியவற்றிற்கும் வேறாகிய வியாவர்த்தகம் என அடைகொடுத்து வாசித்தல் வேண்டும்: வியாவகாரிக நோக்கிய விலக்கணமெனில் அவ்வடை வேண்டா வென்றுணர்க. ஏனெனில் அவ்விலக்கணத்திற்குப்பயன் அதுவே ஆதலின் என்க. வியாவகாரிகம்=சொல்வழக்குடையது, வியாவர்த்தகம்=வேறுபடுப்பது, வியாவிருத்தி=வேறுபடுத்தல். அவ்வியாத்தியென்பது கூறிய சிறப்பிலக்கணம் தன்னுடைய இலக்கியத் தன்மையாகிய ஜாதி முழுதிற்கும் வியாப்பிய மாகாமல் சில விடங்களில் குறைந்திருப்பது. அதிவியாத்தி யென்பது சிறப்பிலக்கணம் தன்னுடைய இலக்கியத் தன்மையாகிய ஜாதி முழுதிற்கும் வியாப்பியமாகி நியதமாய் ஒப்பநிற்பதுபோலப் பிறிதோரிலக்கியத் தன்மையாகிய ஜாதிமுழுதிற்கும் வியாப்பியமாகி நியதயாய் ஒப்ப நிற்பது. அசம்பவமாவது கூறியசிறப்பிலக்கணம் இலக்கிய முழுதிலும் இல்லாமலிருப்பது. பிராமணன் பூணு நூலும் சிகையு முடையன் என்பதும் சூத்திரன் பூணு நூலும் சிகையு முடையன் என்பதும் அம்முக்குற்றத்துக்கும் உதாரணமாகும். எங்ஙனமெனின், முன்னையது பூணு நூலும் சிகையு மில்லாத பிராமண சந்நியாசியை நோக்குமிடத்து அவ்வியாத்தியாதலும், க்ஷத்திரியரையும் வைசியரையும் நோக்குமிடத்து அதி வியாத்தியாதலும், பின்னையது, சூத்திரனிடத்தே அசம்பவமாதலு மறிக. சைவ சித்தாந்திகளை சைவ விசிஷ்டாத்துவைதிகள் என்பதும், துவைதிகள் என்பதும்அசம்பாவம். அங்ஙனமாகுக: குணமுடைமை பொருட்கிலக்கண மென்றீர் அது பொருந்தாது: திரவியத் தோற்றத்தின் பின் இரண்டாங்கணத்தே அதனிடத்துக் குணந்தோன்றுமென்பது சித்தமாதலின்; முதற்கணத்திற்றோன்றி யழிவுபடுங் குடத்தே அவ்வியாத்திக் குற்றந் தங்குமெனின், அங்ஙன மாகாது நாற்றமுதலிய குணங்களோடு ஒருங்கு நிற்பதாய்ச்சத்தா சாதியின் வேறாய பிருதிவீத் தன்மை முதலிய அபரசாதியுடைமை யென்பது கருத்தாகலின் என்க. "செந்நிறத்தினுங்கருநிறமழகு" என்புழிக் கருமைநிறமுதலியவற்றின் அதிவியாத்தி வருமேயெனின்; கருமை, தன் சமவாயி காரணமாகிய குணியோடு ஒற்றித்து நிற்றலால் அதனைக் காரணமாகக்கொண்டு அவ்வழக்கு வந்த தல்லது பண்பிற்குப்பண்பு கோடல் பொருந்தாதென்க. "யாரே யழகுக் கழகு செய்வார்" என்பதினுமிதனையறிக. இதனால் ஏகான்மவாதிகள் பிரமங் குணமில்லதென்று சொல்வது; ஒரு சமவாயி காரணத்தின் குணமாகுமே யன்றிக்காள் சமவாயி காரணமாகாதுஎன்பதை நிலை நிறுத்தும், எஞ்சியவற்றினுரை மேல்வருஞ் செய்யுளோடு சோத்துரைக்கப்படும்.

பூ. முருகேசபண்டிதர்.

திரவியங்களின் வகை முற்றிற்று.

---

* உவா - யானை; உவாவனம் - திருவானைக்கா.

Madras:—Printed by P. C. Kalliana Sundara Nadar, at the C. N. Press, and Published by J. M. Nagarathnam.

உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

சமயஞானம், தத்துவஞானம், கலைஞானம், பூதபௌதிக முதலிய சாஸ்திரஞானம், இவற்றைப்பற்றி விவகரிக்கும் மாதாந்தப் பத்திரிகை.

1897௵ மகாராணியாரின் வைர ஜூபிலி தினத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

புத்தகம் ௧ } 1898௵ மேமீ. { இலக்கம்-௧௨.

அதர்வசிரசின்

## துரியப்பொருள் விலாசம்.

(243-வது பக்கத்தொடர்ச்சி).

நாதத்தில் விந்துத்தோன்றிடு மதனிற்
சதாசிவ னன்குறத் தோற்று
மோதிய வவன்பான் மகேச்சுர
னுதிக்கு முற்றவம் மகேச்சுரனிடத்தி
லேதமில் சுத்தவித்தை நன்குண்டா
மதனை வாகீச்சுரற் கின்பக்
காதல்கூர் வாகீச் சுரியெனுஞ்
சத்தியாமெனக் கழறுவ ரன்றே.

சுத்ததத் துவமோரைந்து மிவ்வாறே
முறையினிற் றோன்றிய பின்னர்
வித்தியேச் சுரனு மனந்தனங்
தேவ மாயைதான் விளம்பிடுகால
முத்தமநியதி கலையொடு வித்தை
தம்மை யுண்டாக்கு மாலுரைத்த
சித்திரக்கலையி லிராகமோ டந்தப்
புருடனுஞ் சிறந்திடத் தோன்றும்.

மாயையினின்று முக்குணப் பகுதி
வந்திடும் வந்தமற் றதனி
லேய்வுறக் குணங்கண் மூன்றும்
வந்திடுமாலவற் றினிலிறைவர் மூவர்களோ
டாயிரு பத்துமூன்று தத்துவமு
மெய்திடு மவற்றினு லலகி
றாயபேரண்ட முடம்புகள் வந்து
தொடர்ந்துறத் தோன்றிடுமன்றே.

என்று கூறிற்று. இந்த முப்பத்தாறு தத்துவங்களுள்ளே (பிருதிவியாதி பிரகிருதிவரையும்) இருபத்திநான்கும் ஆன்ம தத்துவமாகவும், (புருஷன்முதல் மாயை ஈறுகிய) ஏழும் வித்தியாதத்துவமாகவும், (சுத்தவித்தைமுதல் சிவ நாததத் தவமீறுக) ஐந்தும் சிவதத்துவமாகவும் மூன்றாய் வகுக்கப் படுமென்று கொண்டன்றோ சைவபுராணம்

(౧౪) శివవిద్యాత్మతత్త్వాఖ్యం తత్త్వత్రయముదాహృతం ।

"சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவமெனத் தத்துவத்திரயஞ் சொல்லப்பட்டது, என்று கூறிற்று. இந்த மூவகைத் தத்துவங்களுள்ளே ஆன்மதத்துவம் இருபத்திநான்கிற்கும் காரணமாயுள்ளது மூலப்பிரகிருதி என்றும், வித்தியாதத்துவங்களுக்குக் காரணமாயுள்ளது (அசுத்த) மாயை என்றும், சிவதத்துவம் ஐந்திற்கும் காரணமாயுள்ளது மகாமாயை (சுத்தமாயை) என்றுங்கொண்ட கருத்தினுல், சைவபுராணம்

(౧౫) మహామాయాచమాయాచ ప్రకృతిస్త్రిగుణాత్మికా । త్రివిధా కార్యభేదేన సాప్రసూతేఽధ్వనః ॥

மலினத்துவா, மிச்சிராத்துவா, சுத்தாத்துவா என்னும் மூவகையாம் ஷடத்துவாக்களுக்குங் காரணமாயின் மகாமாயை, மாயை, பிருகிருதி என்பனவாம் என்று கூறிற்று. "அவித்தி

யாப்பிரபஞ்சமெல்லாம் சுருக்குவதும் விரிவதும் மகாமாயையின் விளையாட்டே" என்ற பொருளினால்

(௧௨) సంకోచవికాసాత్మక మహామాయావిలాస ఏవసర్వోప్య విద్యాప్రపంచః।

என்று மகாநாராயணோபநிடதம் எனப்படும் மாயாவாதோபநிடதத்திலே சொல்லப்பட்ட "மகாமாயை"யானது மூலப்பிரகிருதிக்குப் பெயராகப் பொருந்தமையில், அது மூலப்பிரகிருதி, சூக்குமப்பிரகிருதி பரப்பிரகிருதி என்னும் மூவகைப் பிரகிருதியுட்டலேயாய பரப்பிரகிருதியாகிய "மகாமாயை" அன்றாமெனக. ஸ்ரீ அப்பயதீக்ஷிதயோகியார் இரத்தினத்திரய பரீக்ஷைவாயிலாகப் பிரகிருதி (மூலப்பிரகிருதி),மாயை (சூக்குமப்பிரகிருதி, மகாமாயை (பரப்பிரகிருதி) என்பவற்றின் விகாரமாய் (முறையே அமைந்தமையை) மலினப்பிரபஞ்சம், மிச்சிரப்பிரபஞ்சம், சுத்தப்பிரபஞ்சம் என்று கூறி, இம்மூவகைப்பிரபஞ்சத்திற்கும் அதீதப்பட்டது சர்வஞ்ஞாதி குணங்களினின்று வேறுறாத (சிதம்பரபரமாகாச) பராசத்தி சமேத பரப்பிரம சிவபிரானும் என்று கூறினர். இப்படிப்பட்ட சிவதத்துவங்களை விரிவிலா அறிவினராம் மாயாவாதி ஒருவர் "சிவதத்துவம் ஐந்தாக விரியும் என்று சொல்வதில் ஒருபொருள் ஐந்து பொருளாகின்றதாய் ஆகின்றது; ஒன்று ஐந்தாகுமாகில் ஒன்று கெட்டு ஐந்தாகின்றதா; ஒன்று கெடாது ஐந்தாகின்றதா, ஒன்று கெட்டு ஐந்தாகின்றதெனில் அப்போது ஒன்றென்பது இல்லாமற் போகின்றது. ஒரு வாழைக்காயை ஐந்தாகத் துண்டிப்போமானால் அப்போது ஒன்றென்பது இல்லாமற் போகின்றதன்றோ; அதுபோலச் சிவம் கெட்டு ஐந்து தத்துவங்களாக ஆகுமாயில் அப்போது சிவமென்பது இல்லாமற் போமே" என்றற்றொடக்கத்தனவாக வினவிய குருட்டு வினாக்கள் குருடன் ஒருவன் தன் பிள்ளை பால் புரைக்கேறி இறந்த கதையைக் கேட்டு அவன் விபரீதப்பொருள்படுத்திப் புலம்பிக்கதறி அழுத கதைபோலாகி, சுருதிபுராணப் பிரதிபாதிதமாய தத்துவங்களை ஆக்ஷேபித்து அம்மாயாவாதியார் வேதநிந்தகருமாயினர் வேதபாகியருமாயினர். பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்கு பூதங்களையும் அங்கீகாரஞ்செய்து அதற்கு மேலுள்ள தத்துவங்களையும், ஆன்மா பரமான்மா என்பவற்றையும் அங்கீகரியாத நிரீச்சுரவாதிகள் பெரும்பான்மையும் யுக்தியையே ஆதாரமாகக்கொண்டு குதர்க்கஞ் செய்து இடர்ப்படுமாறு போல, மனசும் வாக்குஞ் சென்று சாதிக்க இயலாத அருட் பராசத்தி சமேத சிவபிரானை வைதிகசைவ பாசுபதோபநிடதப்பிரகாரம் தலைவராகக் கொள்ளாது மாயாவாதிகள் மாயாவாதச் சுருதிகளையும் யுக்திகளையுமே ஆதாரமாகக்கொண்டு பிருதிவியாதி மூலப்பிரகிருதி வரையுமுள்ள தத்துவங்களை மாத்திரம் அங்கீகாரஞ் செய்து, அவற்றுக்கு மேலுள்ள வித்தியாதத்துவம் சிவதத்துவம் என்பவை சுருதிபுராணப் பிரதிபாதிதமாமென்பதறியாது அவற்றை ஆக்ஷேபித்துக் குதர்க்கஞ் செய்ததுமாமெனக. அக்கினிபுராணத்திலே

(௧௩) పార్థివంమండలంపీతం వజ్రాంకంచతురస్రకం। అప్తేజో వాయురాకాశం తన్మాత్రేంద్రియబుద్ధయః। గుణత్రయమహంకారశ్చ తుర్వింశః పుమానితి। రాగశ్చ శుద్ధవిద్యాచనియతిః కలయాసహ। కాలామాయోతథావిద్యా తత్వానామితిసప్తకం। శాంతోతత్వద్వయంలీనం భావేశ్వరసదాశివా। ఉత్తోశక్తిశివౌతత్వే భువనాష్టకసిద్ధికం॥

என்று கூறப்பட்ட சுலோகங்களால், பிருதிவி, அப்பு, தேயு வாயு, ஆகாயம், தன் மாத்திரை ஐந்து, ஞான கர்மேந்திரியம் தனித்தனி ஐந்து, மனம், அகங்காரம், புத்தி (குணத்திரய) பிரகிருதி, புருஷன், ராகம், வித்தை, நியதி, கலை, காலம், மாயை, சுத்தவித்தை, மகேசுவரம், சதாசிவம், சத்தி, சிவம்என்னும் முப்பத்தாறு தத்துவங்கள் சொல்லப்பட்டன பின்னர்த் தேவிபாகவதம்

(௧௪) పంచభూతానితన్మాత్రాః పంచకర్మేంద్రియాణిచ। జ్ఞానకర్మవిభేదేన పంచపంచవిభాగశః। త్వగాదిధాతవః సప్తపంచప్రాణావిభాయః। మనోబుద్ధిరహంకారో గుణాః ప్రకృతిపూరుషౌ। రాగో విద్యాకలాచైవ నియతిఃకాలఏవచ। మాయాచశుద్ధవిద్యాచ మహేశ్వరసదాశివౌ। శక్తిశ్చశివతత్వంచ తత్వానిక్రమశోవిదుః।

பிருதிவியாதி பஞ்சபூதங்கள், சப்தாதி தன்மாத்திரைகள்,வாக்காதி கன்மேந்திரியங்கள், சோத்திராதி ஞானேந்திரியங்கள், மனம், புத்தி, அகங்காரம், பிரகிருதி (ஈறும் ஆன்மதத்துவம் இருபத்தினான்கு); புருஷன், ராகம், வித்தை, கலை, நியதி, காலம், மாயை, (என்னும் வித்தியாதத்துவம் ஏழு) சுத்தவித்தை, ஈசுரம், ஈசாதாக்கியம், சத்தி, சிவம் (என்னும் சிவதத்துவம் ஐந்து) என்னும் முப்பத்தாறு தத்துவங்களையும் எடுத்து விதந்தது. சங்கரசங்கிதை சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம என்னும் மூன்றையுந் தொகுத்து

(௧௫) శివతత్వంతథావిద్యాతత్వం పంచాక్షరోపినః। ఆత్మతత్వం తథాత్వస్య సహమాయాసవిగ్రహవాన్॥

என்று கூறிற்று. ஸ்காந்தபுராணத்தைச் சார்ந்த அகஸ்திய சங்கிதை

(௨௦) ఆత్మతత్వమధోభాగేవిద్యా తత్వంచమధ్యమే। తదగ్రే శివతత్వంచ క్రమాత్తత్వానిసంస్థితా॥

அடிப்புறத்திலே ஆன்மதத்துவமும், நடுப்புறத்திலே வித்தியா தத்துவமும், தலைப்புறத்திலே சிவதத்துவமும் கிரமமாயுள்ளனவாமென்று கூறிற்று. ஸ்காந்தசம்பவ சிதம்பரமான்மியம்

(௨௧) నాదాదిపంచతత్వాని ససర్జజగతాంప్రభుః। తదన్యస్యాశ్చమాయాస్తు త్వజాతంససర్జహ। కాలాద్యవనితత్వంతం చరాచరసమన్వితం॥

சிவபதியானவர் "நாதம் (சிவம்), விந்து (சத்தி), சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்னும் தத்துவங்களையும் மாயையிலேயிருந்து காலமுதல் பிருதிவியீறும் முப்பது தத்துவங்களையும் படைத்தார்" என்று கூறிற்று. இந்த முப்பத்தாறு தத்துவங்களாகிய படியினால் எய்தப்பெறும் பிராசாத மத்தியிலே சிவபதியாருடைய பஞ்சகிருத்திய ஆனந்ததாண்டவ விலாசம் விளங்கப்பெறுமாம் என்பதுகொண்டு ஸ்காந்த புராண அகஸ்திய சங்கிதை

(௨௨) షట్త్రింశత్తత్వ సోపానమహాప్రాసాదమధ్యగం। భజామసుందరేశానం మహదద్భుతతాండవం॥

என்று கூறிற்று. பிருதிவிமுதல் சிவதத்துவாந்தமாகிய தத்

துவங்களைச் சிவபிரான் வியாபித்து நின்முராதலினலன்றே சிவபிரானுக்குரிய அஷ்டநாமங்களுள்ளே "வியாபகர்" எனப் பொருள்படும் "விஷ்ணு" என்னும் நாமம் படிக்கப்பட்டது என்ற கருத்தினுல் வாயுசங்கிதையும் கைலாயசங்கிதையும்

(௨௩) శివతత్త్వాదిభూమ్యంతం శరీరాదిఘటాదిచ । వ్యాప్యాధిష్ఠ శివస్తస్మాద్విష్ణురుదాహృతః ॥

என்று கூறிற்று. இந்த முப்பத்தாறு தத்துவங்களுள்ளே பிருதிவிதத்துவம் நிவிர்த்தி கலையினும், அப்புமுதல் பிரகிருதி அந்தமாகிய இருபத்துமூன்று தத்துவங்களும் பிரதிஷ்டாகலையிலும், புருஷன் முதல் மாயை ஈருாம் வித்தியாதத்துவம் ஏழும் வித்தியாகலையிலும், சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவங்களும் சாந்திகலையிலும், சிவம் சத்தி என்னும் இரு தத்துவங்களும் சாந்தியாதீத கலையினுமாக அடங்குவனவாம். ஆகவே, மந்திரம், பதம், வர்ணம், புவனம் என்னும் எஞ்சிய நான்கு அத்துவாக்களும் பஞ்சகலா தத்துவங்களடங்கிய இந்த முப்பத்தாறு தத்துவாத்துவாவின் பாலனவாய் அடங்கிநிற்பனவாம். இந்த முப்பத்தாறு தத்துவங்களின் உண்மையை அறிந்து சிவத்தை அடைதலே சிவபதஞ் சேர்தல் எனப்படும். இதுபற்றி யன்றே கடவல்லியுபநிஷதம்

(௨௪) సోఽధ్వనః పారమాప్నోతి తద్విష్ణోః పరమం పదం ।

அவன் (பக்குவான்மாவாம் அறிஞன்) மந்திர பதவர்ண புவன தத்துவ கலை என்னும் ஷடத்துவகரையின் பாலதாம் பரமமாகிய சிவபதத்தை அடைகின்முன் என்று கூற, இருக்குவேதம்

(௨௫) తద్విష్ణోః పరమం పదం సదా పశ్యంతి సూరయః ।

அந்தப் பரமாகாச சுத்தசத்திருபமாகிய சிவபதத்தைப் பெரியோர் எக்காலமும் யோகத்தினுலே பார்ப்பவராகின்முர் என்று கூறிற்று. ஈண்டு "விஷ்ணு" என்னும் பதம் ஆன்ம தத்துவத்தின் பாலதாகிய குணதத்துவத்துக்கு மேலாய்ப் பிரகிருதிப்பாற்பட்ட இருபத்தைந்தாந் தத்துவத்தினராகிய சாவதிவியாபகராம் நாராயணர் எனப்படும் வாசுதேவப் பிரமத்துக்குப் பெயராகச் செல்லாது சிவபதிக்கே பெயராகச் செல்லுமாமென்பது மேலே உதகரித்த வாயுசங்கிதை கைலாயசங்கிதை எனனும் வலிய புராணுேபப்பிரும்மணங்களினுலே திருடீகாரஞ் செய்யப்பட்டது ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் வேதாந்த சூத்திரத்து முதலாம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்துச் "சர்வத்திரபிரசித்தியாதி அதிகரணத்திலே" விந்துவாகிய சத்திதத்துவமுதல் பிருதிவி அந்தமாகிய முப்பத்தைந்து தத்துவங்களும் குடிலையினின்று பேதமுருத நாததத்துவம் எனப்படும் சிவதத்துவத்திலேயிருந்து உற்பவித்தன குடமுதலியன மண்ணினுல் வியாபிக்கப்பட்டவாறு போல, அந்தச் சிவதத்துவம் ஒன்றினுலே தானே அத்தத்துவங்கள் வியாபிக்கப்பட்டன. குடிலைப் பொருள் சிவபெருமானுமாதலில், சிவதத்துவமும் சிவபிரானையே பொருளாகக்குறித்ததாயிற்று. இந்தச் சிவபிரான் அருட்பராசத்தியை நீங்காதவரென்று சைவபாஷ்யகாரர் செப்புகின்முர். இங்ஙனமாக யோகசிகோபநிடதத்து நான்காம் அத்தியாயம் மாயாவாதநெறியானே "மண்ணிலே குடம் என்னும் பிராந்தியும், கிளிஞ்சிலில் வெள்ளி என்னும் இருப்பும் எவவாறே அவ்வாறே பிரமத்திலே (சூதசங்கிதைச் சூதகீதை சொல்லியவாறு பூதாதி ஐந்தும், சப்தாதி ஐந்தும், வாக்காதி ஐந்தும், சோத்திராதி ஐந்தும், பிராணுதிபத்தும், மனுதி நான்கும், அவித்தை ஒன்றுமாகச் சேர்ந்த முப்பத்தைந்து தத்துவங்களாற் கட்டுண்ட) சீவத்துவம், அதனை அறிந்தால், சீவத்துவம் (சீவபாவம்) நசித்துப் போகின்றது" (பின்னர்ப் போதரும் இருநூற்று முப்பத்தொன்பதாம் இலக்க மாயாவாத சுருதியையடுத்து உதகரிக்கப்படும் சூதகீதைப் பாட்டுக்களுக் கியைய) என்ற கருத்தினுல்

(௨௬) ఆకాశాదీని భూతాని పంచ తేషాం ప్రకీర్తితా । గుణాః శబ్దాదయః పంచ పంచ కర్మేంద్రియాణి చ । జ్ఞానేంద్రియాణి పంచైవ ప్రాణా ద్వాదశ వాయవః । మనో బుద్ధిరహంకార శ్చిత్తంచేతి చతుష్టయం । తేషాం కారణభూతైకా విద్యా షట్త్రింశకః పశుః । విశ్వస్య జగతః కర్తా పశోరస్య పరశ్శివః ॥

యద్వన్మృదిఘటభ్రాంతి శ్శుక్తౌహిరజతస్థితిః । తద్వద్బ్రహ్మణి జీవత్వం వీక్ష్యమాణే వినశ్యతి ॥

என்றும், அத்துவித (ஏகமாம்) பிரமத்திலே (ஆன்மாவிலே) முடியுமாறு கூறிய அம்மாயாவாதச் சுருதிப் பொருளானது-பூதாதி ஐந்து, சப்தாதி ஐந்து, வாக்காதி ஐந்து, சோத்திராதி ஐந்து, (பிராணுதி பத்து), மனமாதி நான்குமாம் ஆன்ம தத்துவம் இருபத்தினன்கு, புருஷன், ராகம், வித்தை, காலம், கலை, நியதி, அசுத்தமாயை என்னும் வித்தியாதத்துவம் ஏழு, சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி என்னும் நான்கு சிவதத்துவமாகச் சேர்ந்த முப்பத்தைந்து தத்துவங்கள் தோற்றுதற்குக்காரணமாய சிவதத்துவத்தினின்று வேறுருத குடிலையாம் பிரணவப் பொருளாய (அத்தியாச சத்தியாகாத) அருட்பராசத்தியினின்று பேதமுருத சிவபிரானுல் சத்தியாதி பிருதிவியந்தமாகத் தத்துவங்கள் மண்ணினுற் குடம் வியாபிக்கப்பட்டாற் போல வியாபிக்கப்பட்டன என்று (மாயாவாத அத்துவிதத்தின் உயர்ந்த சிவாத்துவித சாந்தோக்கியோபநிடதத்து ஆரும் பிரபாடகத்து முதலாம் கண்டத்திற் கண்டவாய்மை உணர்த்த) சிவபுராணப் பிரமாணங்கொண்டு சைவபாஷ்யகாரர் உதகரித்த பொருளிலேபோய்ச் சிறிதாயினும் எதித் தாக்குமென்பது மலடிமகன் வார்த்தையேயாம் என்றும் உணர்க. பொருள் ஒற்றுமை நோக்காது பெயர் ஒருமை நோக்கி நமது அன்பர்கள் மாயாவாதியின் துார்த்தத்தினுலே மயங்காதிருப்பார்களாக.

(தொடரும்.)

ஸ்ரீகாசி. சி. செந்திநாதயீயர்.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீஞ்ஞாநசம்பந்தகுரவேநம:.

## ஸ்ரீஹரதத்தாசாரியசுவாமிகள் சரித்திரம்.

(221-வது பக்கத்தொடர்ச்சி)

(௯) அரதத்தாசாரியர் சிவபெருமானிடத்தில் சிவஞான தீக்ஷை பெற்றமை வருமாறு:—இங்ஙனம் தாயார் சொல்லிய வார்த்தையைக் கேட்டவுடனே பாலர் வீட்டினின்றும் புறப்பட்டு வெளியே போந்து அக்கினீசுவரப் பெருமானையும் நந்திகேசுரரையும் சந்தியாகாலத்திலே போய் நமஸ்கரித்து நின்று "சம்புவே, நீவிரே என்பிதா; உமாதேவியாரே என்தாயார்; உமது புதல்வர்களாகிய விநாயகர் சுப்பிரமணியர் என்னும் இருவரே என் சகோதரர்கள்; உமது ஆப்தர்களே எனது பரிசாரகர்கள்; அங்ஙனமாயினும் உமது தரிசனங் கிடையாமையால் இவ்விடத்தே அடியேன் நாயையும் புழுவையும் ஒத்துத்திரிகின்றேன்; சுவாமீ! உம்மை அடியேன் நினையாமலும், உமது பூசையிலே நான் வழுவினவனாயிருந்தாலும் தீனபந்துவாகிய நீவிர் உமது திருவருளினால் அடியேனைக் காத்தருளல் வேண்டும். விஷ்ணு மூர்த்தியினாலே உமது திருவடிகளும், பிரமாவினாலே உமது சிரசும் காணப்பட்டிலவாயின் அடியேன் சுவாமியை எவ்வாறு பூசிக்கவல்லேன்! அடியேனாகிய என்னை விசாரித்துக் காத்தருளல் வேண்டும். மழையில்லாது வாடிப்போன பயிர் போல உமது தரிசனங்கிட்டாது வாடிப் போயினேன். கிருபாநிதியே! அடியேனுக்குப் பிரசன்னராகுதிர். இன்று கொசுகுபோலிருக்கும் அடியேனிடத்துக் கிருபாவசத்தினாலே எழுந்தருளி பாலா எம்மிடம் வருகவென்று அடியேனை எப்போது அழைப்பீர். தாயில்லாப் பிள்ளைபோல அடியேனை இகழ்ந்து கைவிடாதீர். அடியார்க்கடியனாகிய பாலன் மீது மிகுதியும் வன்கண்மை செய்யாதீர். அடியேன் அநாதனாகிய தீனன், உமது பாதங்களையே சிந்தை செய்தேன். உம்மைக் காண்டற்கு இச்சைப்பட்டேன். அடியேனுக்கு இப்போது பிரசன்னராவீர், அடியேன் பூமியிலேனும் கைலாசத்திலேனும் இருந்தாலும் என்? உம்மையின்றி ஓர் முகூர்த்தமாயினும் அடியேனுக்கு வாழ்வில்லை. மிகுதியுந் தீனனாகிய அடியேனுக்கு நீவிர் பிரசன்னராகாதொழியில் அஃது அநீதியாமன்றோ. பின் எதுதான் உமக்கு நியாயமாய் முடியுமென்று இந்தப்பிரகாரம் அன்பினோடு தோத்திரஞ்செய்தார். அப்போது கிருபாநிதியாகிய சிவபிரான் உமாதேவியாரோடு இருஷபாரூடராய் அவருக்குப் பிரசன்னராய் "குழந்தையே! இனி நீ அஞ்சற்க" என்று தமது திருவுருவத்தைத் தரிசிப்பித்தருளினர். உடனே சுதர்சனர் மிக்க விம்மிதமடைந்தும் அநேக ஸ்தோத்திரஞ் செய்தும் பேரானந்தக் கண்ணீர்வார நின்றார். அப்போது சிவபெருமான் அவரைத் தழுவித் தம்மடித்தலத்திலேற்றி, உச்சிமோந்து, நீ நம்மிடத்து அருத பேரன்புடையை. உனக்கு இப்பாதற்ற வருத்தத்தைச் சொல்லு என்று திருவாய்மலர்ந்தருளினர். அதற்குப் பாலர் சிவபிரானை நோக்கி சுவாமீ! பிரமவிஷ்ணுக்களாலும் காண்டற்கரிய உமது அருமைத் திருமேனியானது ஈண்டு பிரசன்னமாங்கால் முடிக்கக் கூடியதாயும் முடிக்கக் கூடாததாயுமுள்ளது யாது! என்றார். உனக்கும் உன் தந்தைக்கும் இடையே நேர்ந்த மனவருத்தத்துக்குக் காரணம் யாது? என்று சிவனார் கேட்ட, அதற்குப் பாலர் அண்டமோரணுவாம் பெருமைகொண்ட நீவிரே ஆன்மாக்களுக்கு அருள் புரியுமாறு அணுவோரண்டமாஞ் சிறுமை கொண்டீராதலின், எம்மிருவர் வினைவெலாம உமக்கே தெரியுமென்று தலையினாலே அவர் ஆஞ்ஞையை வகித்துச் சொன்னார். சொல்லவே, சிவபிரான் ஸ்மிருதி இதிகாசாதிகளைப் படிப்பாயாக என்றார். அதற்குப் பாலர் படிக்கற் பாலனவாகிய சாஸ்திரங்கள் எண்ணில்லாதனவன்றே! அவற்றைப் படித்தற்குள்ள காலம் அற்பமன்றோ. படித்தற்கு எய்தும் இடையூறுகளோ எண்ணிறந்தனவன்றே. பாலும் நீரும் கலந்தவிடத்து அன்னமானது பாலை மாத்திரங் கொள்ளுதல் போல, சுவாமீ! சாரமாயுள்ளதையே அடியேற்கு உபதேசியும். சகல வேதபுராணங்களினாலும் அறியற்பாலர் நீவிரேயாம். ஆதலினால், உம்மை ஒருநெறியாகச் சிந்தை செய்தல் ஒன்றையன்றி மற்றொன்றும் வேண்டேன் என்றார். அதற்குச் சிவபிரான் சுருதி ஸ்மிருதி முதலியவைகளினன்றி எனது சொரூபத்தை அறியவும் அறிந்தபடி அன்பு செய்யவுமியலாய் என்றார். அதற்கு அவர் "சுவாமீ! என்னைப்பாலனென்று ஏய்க்கப் பார்க்கின்றீர்" ஒருவன் தனக்குச் சிந்தாமணி கிடைத்தபின்னர் *சௌடிக்கு ஆசைப்படுவானா என்றார். அப்போது சிவபெருமான் தமது திருக்கரகமலத்திலே ஓர் யந்திரத்தை எழுதி அப்பாலருடைய சிரசிலே அமைத்து, எல்லாம் அறிந்தவனாகுதி என்று தடவினர். அவ்வேளையில் அச்சிவபிரான் திருவருளால் வேதமுதலிய கலைகளெல்லாம், அப்பாலனுக்கு உதித்தன. அதன் பின்னர்த் தாம் தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து கொண்டு, வைதிக சைவ விபூதியை சாபாலோபநிஷத மந்திரங்களினாலே பாலர் மேனியிலே பூசி, அதன் பின்னர்த் திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராக்ஷமாலை அணிந்து, பஞ்சாக்ஷரோபதேசம் பண்ணி, உத்தமமாகிய ஸ்படிகலிங்கத்தை அவர் கையிற் கொடுத்து, வேதசிவாகமப்படி பூசாவிதியும் உபதேசித்து, சுதர்சனாசாரியர் என்ற பெயரை மாற்றி, அரதத்தாசாரியர் என்றபெயரும் இட்டருளினர். அருளவே; அரதத்தாசாரியர் சிவபிரான் திருவடித்தாமரைகளைத் தமது கண்களினின்று சொரிந்த ஆனந்த பாஷ்பங்களினாலாட்டி மயிர்ப்புளகத்தோடு நமஸ்கரித்தார். சிவபெருமான் தமது அருமைத் திருக்கரத்தினாலே அப்பாலரை எடுத்து யாமப்போதிலே தானே ஆசீர்வதித்து, நீ போசனஞ் செய்யும் பொருட்டுப் போவாயாக என்று சொல்லி ஆஞ்ஞை செய்து தாம் சிவலிங்கத்திலே அந்தர்த்தானமாயினர்.

(௰) அரதத்தாசாரியர் பிதாமுதலாயினோர் சமுகத்திலே சிவோத்கர்ஷம் பேசியமை வருமாறு:—அரதத்தாசாரியர் இங்ஙனம் சிவபெருமானிடத்திலே மகா மந்திரமாகிய ஸ்ரீபஞ்

* பலகறை.

சாக்ஷரோபதேசம் பெற்று அவைதிகர்களாகிய வைஷ்ணவர்களை உத்தாரணஞ் செய்யும் பொருட்டு எழுந்தருளிய சிவபிரானை ஒத்தார். குருமூர்த்தியாய்ப்போந்த சிவபிரானை நமஸ்கரித்து, அவரைத் தமது இதய கமலத்தின்கண்ணே இருத்திக் கொண்டு வீட்டுக்குப் போயினர். அவ்வேளையிலே பிதாவானவன் வீட்டினுள்ளே கபாடபந்தனஞ் செய்து சயனித்திருந்தான், தாயானவள் பாலனுடைய பசிவாதையை நினைந்து வருந்திக் கொண்டிருந்தாள். சிவபக்த சிரோமணியாகிய அரதத்தாசாரியர் கதவிலே தட்டிப் பசியினால் நொந்தேன் அன்னமிடுதி என்று உரத்து அழுதார். உள்ளே நித்திரை செய்த பிதாவானவன் சிவபாதாப்ஜஸ்மரணராகிய அரதத்தாசாரியர் இயல்பை அறியாது, அவர் வார்த்தை கேட்ட போது கண்ணிணை சிவப்பேறக் கோபத்தோடு விளித்து இவ்வாறு சொல்வான். நான் சொல்லும் சொல்லுக்கு அமைவையேல் உனக்கு அன்னமிடுவேன் நீ எப்போதாயினும் சிவனுக்குத் தொண்டு செய்தால், பாஞ்சராத்திர ஆகமங்களைப் படியாதிருந்தால், வெள்ளேறு ஏறுவோன் கோயிலுக்கு நீ போனால் உன்னை நான் தண்டிப்பேன். இங்ஙனம் அமையாது போவையாகில் உன் கால்களைச் சேதிப்பேன் என்று சொன்னான். இதைக்கேட்ட பாலர் சிவநிந்தையில் விருப்புற்ற திரிசூல பாலராகிய தந்தையாரைப் புன்சிரிப்போடு நோக்கி, கௌதமமுனிவராலும், ததீசிமுனிவராலும், கணுவமுனிவராலும், உபமன்னியுமுனிவராலும், பிரமாவினாலும், நந்திகேசுரராலும் சபிக்கப்பட்ட பிராமணருள்ளே நீயும் அகப்பட்டனையன்றோ வாதலின, அந்தத் தத்துவப் பொருளாகிய சிவபிரானை விஷ்ணுவானவர் நேத்திரகமலங்களினாலே பூசித்து வழிபட்டமையால் சிவபிரான் அவருக்குச் சர்வஞ்ஞத்துவத்தைக் கொடுத்தார் என்றறிகுதி. நீ என்னை வேதமுதலிய வித்தைகளிலே பரீக்ஷித்துப் பார்க்குதி பின்னரும் சிவபிரானை விஷ்ணுவானவர் நேத்திரத்தினாலே அர்ச்சித்தாரோ; அன்றோ? சொல் என்று கேட்டார். அதற்குத் தந்தையானவன் உலகத்தை வஞ்சிக்குமாறு பூசித்தாராதலில், இப்பூசை யதார்த்தபூசை யாகாது என்றார். அது கேட்ட சிவபக்த சிரோமணியார் இங்ஙனம் ஒருவாறு உத்தரஞ் சொல்லிய பிதாவை விழித்து, விஷ்ணுவுடைய சர்வேசுரத்துவத்தை வேதாகம முறைப்படி பேசுதி என்று வாதித்தார். பிதாவும் பாலரும் இவ்வாறு வாதிக்கும் போது அக்கிராமத்திலேயுள்ள வைஷ்ணவர்களும் சிவனடியார்களும் ஒருங்கு கூடினார்கள்.

(கக) அப்போது பிதாமுதலாயினோர் சமூகத்திலே நாராயணரிலும் சிவபிரானே உத்கிருஷ்டர் எனப் பொருள்பட அரதத்தாசாரியர் அருளிய சுலோகம வருமாறு:—

ஏகஸ்ஸமு த்ரஸலிலே வடபத்ரசாயீ த்வந்யஸ்ஸ முத்ரசரஜிஸ்த்ரி புரப்ரபேத்தா | கோவாநயோ ரதிக இதயநு சிந்த்ய வ்ருத்தாஸ் ஸத்யம் ப்ருவந்துத மிமம் வய மாச்ரயமே: (க) ஜூநஞ்சுகார சதுராநந மேவ சாந்ய: | கோ—ம: (உ) ஏக: புநர்புவி ததௌ நவநீதகண்டம் மந்யோ ததௌ நவசுதாமய சந்த்ர கண்டம் | கோ—ம: (ரு) ஏகோஸ்தி நந்தகுடில வ்ரஜ மந்திரேசு சாந்யோஸ்தி மேருசிகர ஸ்தித கந்தரேசு | கோ—ம: (ச) ஏகஸ்ஸஹஸ்ரகமலேர்யமு பார்ச்ய தஸ்தா வ்ந்யஸ்து நைருப சிரஸ்ஸமுமோத தஸ்மாத் | கோம—ம: (ரு) காடாந்தகார கநீல சரீர ஏகோஜ்யோத் ஸ்நார்த்நிர்மல விசுத்த சரீர ஏக: | கோ—ம: (சு) ஏக: குமாரமபஜத் சுதராம நங்கமந்ய: ப்ரயாதிகில சக்தி தரங்குமாரம் | கோ—ம: (எ) ஸ்திரீ ரூபமாபகில பூர்வமபீஷ்ட மேகஸ் த்வந்யஸ்த மேவபஜதே புருஷ: ஸ்வரத்யை | கோ—ம: (அ) முஷ்ணாதி வல்லவ ந்ரகே நவநீதமேக அந்யோ ததாதி சுதியாம் பரமாம்கு தந்தத்— கோ—ம: (கூ) ஏக: ப்ரயாதிஹி ஸகாம இதி ப்ரசித்தி மந்யோக மந்நிகதகாம இதி ப்ரசித்திம் | கோ—ம: (கo) ஏகோ விபாதி ரவிசந்த்ர சமந்வி நேத்ரஸ்த்வந்யோ ரவீந்தஸக சோம சிகிதரிணேத்ர: | கோ—ம: (கக) கோபாலகவச்வ மபி கம்ய விபாதி சைகஸ் த்வந்யோ வ்ருஷாதி பதிநாயக இத்யபாணி | கோ—ம: (கஉ) ஏகோஹ்ய காசதா துக்தநிதௌ நிமக்ந: கைலாச சைலசிக ரேகஜு வர்த்த தேந்ய: | கோ—ம: (கரு) ஏகஸ்து நைல்யமுபயாதி சரீர மாதரே ஹ்யந்யஸ்து நைல்யமுபயச்சதி கண்ட மாத்ரே | கோ—ம: (கச) ஏக: ஸதாஷ்டமஹிசீ ரூபயாதி சீக்ரமந்யோபி பர்த்திகிதார மிதி சாஷ்டமூர்த்தி: | கோ—ம: (கரு) ஏகோஜுடத்யநு திநம் யமுநா ஜலௌகேஷ்வந்யோ ததாதி சிரசாமரஸிந்ச கங்காம | கோ—ம: (கசு) ஏக: சுவர்ண வஸ்நந்தி ததாதிகட்யா கட்யாமந்யஸ் சுவாணகிரி சாபமதாத் கராக்ரே | கோ—ம: (கஎ) ஏகோ ததௌ சிரசி பர்கிணபிஞ்ச யாத்ர மந்யோ மயூர வரவாஹந புத்ரத்ருஷ்டி: | கோ—ம: (கஅ) ஏகோ ததாதி ச்ருதி கௌஸ்து பரத்ந மேகமந்ய ஸ்ஸஹஸ்ர சுபணமணி ரதநஹாரம் | கோ—ம: (ககூ) ஏக: கரேண த்ருதவாநிஹ பாஞ்சஜந்ய மந்யஸ் த்வதத்த பகுவிச்வச்ருஜாம் கபாலாந் | கோ—ம: (உo) ஏகோ வ்ரஜேசு குருதே ம்ருதுவேணு நாதமந்யோ லயேசு குருதே விகடாட்டகாசம் | கோ—ம: (உக) பக்ஷீந்தவாஹந இதிப்ரதிதோய மேகஸத் வந்யோ மகோக்ஷ வரவாஹந இத்யபிக்ய: | கோ—ம: (உஉ) ஏகஸ்து யோநிஜ இதி வ்ரஜதி ப்ரசித்தி மந்யஸ் தவஜாத இதி சர்வ ஜகத் ப்ரசித்தம் | கோ—ம: (உரு) ஏகோ ஹ்யயுலுகலநிபத்த இதி ப்ரசித்த ஸ்த்வந்யோ பூவ பவபாச விமுக்தி தக்ஷ: | கோ—ம: (உச) ஏகஸ் த்வநித்ய இதி சுப்ரதி தோஜக த்யா மந்யஸ்து நித்ய இதி ச்ருதிலோக சித்தி: | கோ—ம: (உரு) ஏகஸ்து பார்த்த ரத வாஜிக்ருதோபசாரஸ் த்வந்யஸ்து பார்த்த ஸ்மர ப்ரஜுத ப்ரபாவ: கோ—ம: (உசு) வ்யாப்தச்சா விஷ்ணு ரயமிதய விபாவ்ய ஏகோந்யோ விஷ்ணு வல்லப இதி சப்ரதித ஸ்திரிலோக்யாம் | கோ—ம: (உஎ) ஏகோ ஜநார்த்தந இதி ப்ரகட க்ருதோய மந்யஸ்து சங்கர இதி ஸ்புட மீர்யதேதி | கோ—ம: (உஅ) பக்தம் பலிம்பு நரத: க்ருதவாநிகை கோபக்தம் குபேரமகரோததிக ஸ்ரீயாந்ய: | கோ—ம: (உகூ) வ்யா தாதிதீ சக்ருத நைஜ வதூக ஏசோ வ்யாதா யிதோ பிநி கமச்வபிரா ஸ்ரீதோந்ய: | கோ—ம: (ருo) ஏகஸ்ய சேவக ஜநா ப்ருசதக்தகாத்ரா அந்யஸ்ய சுப்ரம்ருது பூத விபூதி ரேகா: | கோ—ம: (ருக) ஏகோநி தாந்தம பவத்வடபத்ர சாயீ ஹ்யந்யோ ஹிதாத்ருச மஹா வடமூல வாசீ | கோ—ம: (ருஉ) ஏகோ ததௌ சிதம்ருதந் திலகம் லலாடே ஹ்யந்யோ ததௌ குதவகம் திலகம் லலாடே | கோ—ம: (ருரு) ஏகோ ததாதி துளசீதள மாலிகாம் க்ருத்யந்யோ ததாதி ஹிவிதாத்ரு கபால மாலாம் |

கோ—ம: (ரூச) ஏகோ ம்ருக க்ரகண சோககநே சசாரத்வந்
யோ ம்ருகம் கரதலே நிவஹந்த்ஸதாஸ்தே | கோ—ம. (ரூரு)
ஏகோ தசாஸ்ய க்ருதலைஜவதூக ஆசீதந்யோ வதூவில சிதா
ர்த்த சரீர ஆசீத் | கோ—ம: (ரூசா) ஏகஸ்து மர்க்கட படேந
ததாகலங்கா மந்யஸ்து மந்தஹஸிதேந புரத்ரயஞ்ச | கோ—ம:
(ரூஎ) ஏகஸ்து மர்க்கட படைர் நிஜகார்ய காரீக்யந்யஸ்து சுரே
ந்த்ர நி வஹைர்நிஜ கார்ய காரீ | கோ—ம: (ரூஅ) ஏகஸ்து மத்
ஸ்ய தநுமேத்ய கதோப்தி தோயமந்யோ விநிர்மதித த்வஜாந்
ப்ரசித்த: | சோ—ம: (ரூகூ) இந்தாநு ஜத்வ மகமத் புவிசர்வ
தைக இந்த்ராதிபி: சுரகணை: பரிபூஜ்ய தேந்ய: | கோ—ம:
(சO ஏகோ ந்ருசிம்ம தநுமேத்ய ஜகாந தைத்மந்யஸ்த மேவ
ஹதவா ந்சர பாவதாரீ | கோ—ம: (சக) ஏகோ வடு: கபட
இத்ய கிலேரபாஷி வித்யா குரு: பரம இத்யபிதீயதேந்ய:—கோ
—ம: (சஉ) ஏகஸ்ய ராவண வதேஹி த்ரு டாஹி சக்திநந்
யஸ்ம சர்வ விலயேச த்ருடாஹி சக்தி: | கோ—ம: (சரு)
ஏக: பதேந சகடம் சகஸாநு நோத சாந்ய: பதாங்குலி நகேந
கிரிந்நு நோத | கோ—ம: (சச) ஏக: ப்ரசித்ததர ஏவஹி வா
சுதேவோ தேவோம்காகிதி பரஸ்து தத: ப்ரசித்த: | கோ—
ம: (சரு) ஏக: பதத்ரயமிதந்த்ரி ஜகச்சகா ரஹயந்ய: பதாங்
குளி கதஞ்ச ஜகசசகார | கோ—ம: (சசா) ஏகஸ்ய சூகரஜ
நிஸ்சுலபாஸ்தி கோஹ்ய ந்யஸ்து சேத்சாரபி ரூப இதி ப்ரசித்
த: | கோ—ம: (சஎ) ஏகோ விபாதி ப்ருசமேக முகாம் புஜே
நக்ய ந்யோ விபாதிகல பஞ்ச முகை: ப்ரசித்த: | கோ—ம:
(சஅ) ஏகோ க்ருகீத மதிவாஞ்சதி வித்தகேநம் வித்தேச மேவ
குருதே நிஜபக்த மந்ய: | சோ—ம: (சகூ) ஏகஸ்து சதுர்புஜ
இதி ப்ரதித ஸ்திரி லோக்யா மந்யோ புஜைஸ்து தசபி: ப்ர
தித ஸ்திரி லோக்யாம் | கோ—ம: (ருO) பஞ்சாயுத: ப்ரபல
சக்தி முபைதி சைகஸ் ஸர்வாயுத: ப்ரபல சக்தி முபைதி
சாந்ய: | கோ—ம: (ருக) ஏக: ப்ரசித்த இகதேநு வதம்
பிநாய வ்யாக்ரம்நி ஹத்ய நிதரா மிதர: ப்ரசித்த: |
கோ—ம: (ருஉ) ஏகோ முமூர்ச்ச ககநேகி லோத பாணத்
தாசேந மூர்ச்சபதி தத் த்ரிபுரம் ஹிசாந்ய: | கோ—ம:
(ருரு) ஏகஸ்து சக்ர மதிகம்ய ரரக்ஷ லோகாந ந்யஸ்து சக்
ர ஜநக: ஸ்வபதாங்குளீபி: | கோ—ம: (ருச) ஏகச்சகார புவி
சங்கர சாப பங்கமந்யச் சகார ஹரிகூநு சிரோவி பங்கம் |
கோ—ம: (ருரு) ஏகஸ் த்ரிபாதிதி தாம்ஜகதி ப்ரசித்தோக்
ய ந்யஸ்ய சேவக ஜநோபி ததா ப்ரசித்த: | கோ—ம: (ருசா)
ஏகஸ்ய சாது ஹய வக்த்ர இதி ப்ரசித்தி ரந்யஸ்ய புத்ர
இக வக்த்ர இதி ப்ரசித்தி: | கோ—ம: (ருஎ) ஏகஸ்ய பாதி சது
ராநந ஏவசூநு ரந்யஸ்ய பாதி கிஷடாநந ஏவசூது: | கோ—
ம: (ருஅ) ஆதாய வேத மதிச த்விதயே புரை கோஹ்ய ந்ய
ஸ்து வேதநிசயம் விததே த்ரிலோக்யாம் | கோ—ம: (ருகூ)
ஏகோ ஜகௌ நரகம் சுதராமிகை கோஹ்ய ந்யோ ஜகாந நரகா
ந்த் சுதராம கோரந் | கோ—ம: (சாO) ஏகோகியாஜக பலிம்
கிபுராயி யாசேஹ்ய ந்யோததாவிக பாத்ர சர்வ சௌக்யம் |
கோ—ம: (சாக) ஏகோ ததௌ ஜலஜமேக கராம் புஜேநக்ய
ந்யோ ததௌ ஜ்வலந மேக கராம் புஜேந | கோ—ம: (சாஉ)
ஏகோ த்விஜோ பிநிஜமாத்ர சிரச்சிதா சீதந்யோ விபாதி நித
ராம த்விஜராஜ மௌளி: | கோ—ம: (சாரு) சங்காத்த நோதி
நிதராம் த்வநி மாத்ரமேக ஓங்கார மேவ க்ருதயாத் சகலார்த்த

மந்ய: | கோ—ம: (சாச) ஏகஸ்து சக்ர சகிதோபி தநோதி ரக்ஷா
மந்யஸ்து கண்ட பரசுர்விதநோதி சிக்ஷாம் | கோ—ம: (சாரு)
ஏகோ தசாக்ருதி விபிந்ந இதீக்யபாஷி சாந்யஸ் த்வபிந்ந தம
மூர்த்தி ரிதிப்ரு பாஷி | கோ—ம: (சாசா) க்ரா ஹம்நி சத்யக
ஜராஜம ரக்ஷ தேகோ ம்ருத்யு ம்நிக த்யமு நிபுத்ரம ரக்ஷதந்
ய: | கோ—ம: (சாஎ) ஏக: பபௌ புவந பீகரகாளகூட மந்ய:
பபௌ ஸ்தநவிஷம் கலுபூத நாயா: | கோ—ம: (சாஅ) ஏகஸ்
ய சப்த ஜலதிக் பிபதி சமபக்தஸ் தஸ்யைகதேச மிதரஸ்த பப
நத யத்நாத் | கோ—ம: (சாகூ) கோவர்த்த நாத்ரிக நகாசல
தோலநா. ப்யாம்கோபீ ஜநஸ்ய ஜகதாம்பி ரக்ஷணப்யாம் |
கோ—ம: (எO) விச்வாத் மகத்வ மயதேகலுதத்ர சைகோ
விச்வேச்வர த்வபதவீ மயதே ததாந்ய: | கோ—ம: (எக)
ஏகோ புஜங்க சயநேதநுதே திசுப்தி மந்ய: கரோதி புஜகேந்த்ர
விபூஷணஞ்சி | சோ—ம: (எஉ) ஏகோர்சுநஸ்ய ஜயத: கலு
சூத பாவாத ந்யோசுந ஸ்யஜய்தோ பவத ஸ்த்ரதாநாத் |
கோ—ம: (எரு) ஏகோ ததாத் கிரிணவ தத்ரிவரம் சுமேரும்
கோவர்த்தநம் த்ரிமிதர ஸ்துகரேததார | சோ—ம: (எச)
ஏக: புமாநிதி பரோதயிதே திபுத்ரச்சா ஸ்தாதயோ ரிதிச்
சர்வ ஜகத் ப்ரசித்தி: | சோ—ம: (எரு) ஏகச் சகபுர சாணௌ
ஜநகாஞ்சலே நபௌல ஸ்த்ய பங்கமிதரஸ்து ரணே திக்ருச்
ராத் | கோ—ம: (எசா) ஏகம்த்விஜாதி மகிலேசு சுரேசுமத்யே
க்ஷாத்ரம் பரந்து பரமார்த்த கிரோக்ருணந்தி | கோ—ம:
(எஎ) ஏகோ ஜகாந ரிபுமீக்ஷணத: க்ஷணேநயத்நாத் ரிபுஞ்ச
நிஜகாந நகேந சாந்ய: | கோ—ம: (எஅ) ப்ருந்தாவநே சரதி
கோ பிருவேத்ய சைகஸ் வந்யே ப்ருசம்பி தருவநே சரதீக
பூதை: | கோ—ம: (எகூ) ஏகோ புஜங்க சயநேஸ்வ பதீஹ
நித்ய மந்யோ புஜங்க கடகோ நடதிக நித்யம் | கோ—ம:
(அO) ஏகஸ்ய ஜாத இதி சந்தத லோக வார்த்தா நாந்யஸ்ய
தாத்ருச விதூஷித லோக வார்த்தா | கோ—ம: (அக) ஏசஸ்ய
வார்த்யுஷிக சிவ நவருத்திராசீதந்யஸ்ய பாக்ய பகுள ப்ரதக்
ருத்திராசீத் | கோ—ம: (அஉ) ஏகஸ் சுரைருபகிரம்கித பச்
சகார தஸ்மை ததௌ சுதமதிக்ஷிதி சாம்ப மந்ய: | கோ—ம:
(அரு) ஏகஸ்து பாணகதி மேத்ய கரம் வ்ருணோதி சாந்யோக்ஷி
பத்புர ஜயாயத மேவ பாணம்: கோ—ம: (அச) ஏகஸ் ஸ
தாசவி த்ருமண்டல வர்த்தி சாந்யஸ் ஸதாசவி த்ருசந்த பிதா
வரீயாந் | கோ—ம: (அரு) ஏகஸ்து மாதவ இதி ப்ரதித:
ஸ்வ நாம்நாத் வந்யோக்யு மாதவ இதி ப்ரதித: ஸ்வ நாம்நா |
கோ—ம: (அசா) கோபாலு கைஸ்தவ நுச்ருதஸ்சு தராமிகை
கோதிக்பாலகை ஸ்த்வநு ச்ருத ஸ்துதிகம்பராந்ய: | கோ—
ம: (அஎ) ஏகோ களத்யநுதிநம் நவநீத மேவமந்யோ களத்ய
தி பயங்கர காளகூடம் | கோ—ம: (அஅ) ஏகஸ்து சைலநி
சயை ஜலதிம்ப பந்த த்வந்யஸ்த மேவ ஜலதிம் சரதிஞ்ச
கார | கோ—ம: (அசா) ஏகோ விவேச சரபூச விலாந்தராளே
க்யந்யோ ததௌ த்ரிபதகாம் கடவச்ச டாயாம் | கோ—ம:
(கூO) ஏகஸ்ஸ மர்ச்சந விதிம் குருதேஸ்ம சேதௌ மேராச்
வரோத்ய சுஜநை: பரித்ருச்ய தேந்ய: | கோ—ம: (கூக) ஏக
ஸ்ய ரூப மதிகச்சதி தாமசத்வம ந்யஸ்ய ரூப மதிகச்சதி சாத்
விகத்வம் | சோ—ம: (கூஉ) நீலோபி நீல யமுநாஜல மக்நகாத்
ரச் சுப்ரோபி சுப்ரதர திவ்யதி நீதரோந்ய: | கோ—ம:
(கூரு) ஏகஸ்ய சூநுரபி நேத்ர க்ருசாநுதக்தஸ் த்வந்யஸ்ய

வத்ஸ உதித: கலு சாச்வதோப: | கோ—ம: (௯௪) ஏகோவ ராக தநுமேத்ய புவம் விலேக த்ருங்யோ புவம் புரஜயத யர தஞ் சகார | கோ—ம: (௯௫) ஏக சலாந்நிஜ வநுந்நச சாக ரோத்து மந்யுச் சகார வநிதாம ஸ்புட்மர்த்த காத்ரே | கோ—ம: (௯௬) ஏகச் சதுர்தசச மவ்ருத மாஞ்ஞயாகா தந்யச்ச பஞ்சதச வர்ஷமகா வ்ரதஞ்ச | கோ—ம: (௯௭) ஸ்தம்போ த்பவந் நரக ரித்வமவாப சைரோகிஸ்தம்ப மூர்த்தி ரதகோந் நதிரீச்வ ரோந்ய: | கோ—ம: (௯௮) ஏகம் வதந்தி நிகமாநத சாம்ஸ்யதிசம் விச்வஸ்ய விச்வ மித்ராந்து வதந்தி நாதி | கோ—ம: (௯௯) ஏகம் யசுச்சுதிரசேஷ பலாவளீநாந் தாதாரமாக பலகோடி நிவிஷ்ட மந்யம் | கோ—ம: (௧௦௦) ஏகஸ்ய ச்ருத சரம் ஜநநம் ஜகத்யாந் திர்யங்நராதிசு பரஸ்ய ஜநி: ப்ரசித்தா | கோ—ம: (௧௦௧) க்ராகாசிதம் சிசுமசீ வயதேக தாசோகத்வா பர: புரவரம் ஸ்வய மந்தகஸ்ய | கோ—ம: (௧௦௨) ஏகோ பபூவர திகஸ்திஸ்ருணும் புராணும் ஸம்கார சர்மணா பர: ப்ருத நாங்க மாசீத் | கோ—ம: (௧௦௩) ஏகஸ்து தீந கஜரக்ஷண தத்த புத்திர ந்யஸ்து மத்தஜக சிக்ஷண தத்த புத்தி: | கோ—ம: (௧௦௪) ப்ரம்மாண மாபதி ஜ்நாபிஜ ஞுநுமே கோந்யே ப்ரம் மணோ நசமுகே நசிரச்சகர்த்த | கோ—ம: (௧௦௫) ஏசஸ்து சபக்த் யுதசரந் நிஜமாக்ஷிபுஷ்ப மந்யோம் புஜம் நயந மஸ்ய ததௌ ஸ்சக்ரம் | கோ—ம: (௧௦௬) ஏகஸ்து கேசவ இதி ப்ரதிதஸ்து லோகேந்யோ வ்யோமகேச இதியாதி ஜகத்ப்ர சித்தம் | கோ—ம: (௧௦௭) ஏகஸ்து கைட பவதே நிபுணோப பூவக்ய ந்யஸ்து ம்ருத்யு கநநே நிபுணோ பபூவ | கோ—ம. (௧௦௮)

(இதன் பொழிப்புரை). சிவபிரானார் திரிலோகத்தையும் அச்சுறுத்திக்கிளர்ந்த ஆலாகல விஷத்தைப் பானம் பண்ணினார்; விஷ்ணு பூதனை என்னும் பிசாசின் பாலைப் பருகினார். சிவபிரானார் இராவணன் கருவத்தைக் கட்டை விரலினால் அடக்கிவிட்டார்; விஷ்ணு அநேக சைன்னியங்களோடு சென்று அவன் சருவம் அடக்கினார். ஒருவர் சமுத்திரசலத்திலே ஆலிலையிலே நித்திரை செய்தார்; மற்றவர் திரிபுரதகன சமயத்திலே அந்தச் சமுத்திரத்தை அம்பறாத் தூணியாய்க் கொண்டார். ஒருவர் பிரமாவைப் பிள்ளையாகக்கொண்டார்; மற்றவர் அவரைத் தேர்ப்பாகனாகக்கொண்டார். ஒருவர் இடைக்குடிகளிலே வாசஞ்செய்தார்; மற்றவர் மேரு சிகரத்திலே விளையாடினார். ஒருவர் நவநீதகண்டத்தைக் கையிலே வைத்திருந்தார்; மற்றவர் அமிர்தகண்டமாகிய சந்திரனைத் தலையிலே வைத்தார். ஒருவர் ஆயிரங் கமலங்களினாலே சிவனாரைப் பூசித்தார்; மற்றவர் அதுகண்டு சந்தோஷித்தார். ஒருவர் அங்கமில்லாத அனங்கனைப் புதல்வராய்க் கொண்டார். மற்றவர் அகில சக்திதரராகிய முருகரைப் புதல்வராய்க் கொண்டார். ஒருவர் காமனையுடையார் என்று பிரசித்தி பெற்றார்; மற்றவர் காமரிபு என்று பிரசித்தி பெற்றார். ஒருவர் சூரியசந்திரர் இருவரையுங் கண்ணாகக்கொண்டார்; மற்றவர் சூரியன் சந்திரன் அக்கினி என்னும் மூவரையும் கண்களாகக்கொண்டார். ஒருவர் தீனமான கஜத்தை ரக்ஷித்தார்; மற்றவர் மத்தகஜத்தை (கஜாசுரனை) அடக்கினார். ஒருவர் கேசவர் என்னும் பெயருடையார்; மற்றவர் வியோமகேசர் என்னும் பெயருடையர். ஒருவர் நீலவர்ணத்தைக் கொண்டார்; மற்றவர் நீலவர்ணத்தைக் கண்டத்திலே கொண்டார். ஒருவர் எட்டு ஸ்திரிகளோடு விளையாடினார்; மற்றவர் அஷ்டமூர்த்தியாயிருந்தார். ஒருவர் யமுனாஜலத்திலே விளையாடினார்; மற்றவர் ஆகாயகங்கையைச் சிரசிலே தரித்தார். ஒருவர் மயிற்றோகையைத் தரித்தார்; மற்றவர் தோகையையுடைய மயிலைவாகனமாய்க்கொண்ட சுப்பிரமணியரைப் புதல்வராய்க் கொண்டார். ஒருவர் சுவர்ண பீதாம்பரத்தைத் தரித்தார்; மற்றவர் நகாக்கிரத்தினாலே சுவர்ண மகாமேருவை வில்லாக வளைத்தார். ஒருவர் பாஞ்சஜன்னியத்தைக் கையிலேந்தினார்; மற்றவர் உலகசிருஷ்டி செய்யும் அநேக பிரமாக்களுடைய கபாலங்களைத் தரித்தார். ஒருவர் மாதவரென்று பெயர்படைத்தார்; மற்றவர் உமாதவர் என்று பெயர் படைத்தார். ஒருவர் கைடபாசுரனைக் கொன்றார்; மற்றவர் யமனைக்கொன்றார். ஒருவர் கோகுலங்களுள்ளே வேணுகானம் பண்ணினார். மற்றவர் பிரளயகாலத்திலே அண்டகோசம் வெடிபடும்படி அட்டகாசம் பண்ணினார். ஒருவர் அநித்தியரென்று கூறப்பட்டார்; மற்றவர் நித்தியரென்று சொல்லப்பட்டார். ஒருவர் உரலோடு கட்டுண்டார்; மற்றவர் விமுக்தபாசர் எனப்பட்டார். ஒருவர் அர்ச்சுனனுடைய இரதத்தை உபசரித்தார்; மற்றவர் அர்ச்சுனனோடு யுத்தஞ்செய்தார். ஒருவர் மண்ணைத் திலமாய்க்கொண்டார்; மற்றவர் அக்கினியை நேத்திர திலதமாகக்கொண்டார். ஒருவர் துளசியை மாலையாய்க்கொண்டார்; மற்றவர் பிரமகபாலங்களை மாலையாய்க்கொண்டார். ஒருவர் மர்க்கடசகாயத்தால் இலங்கையை செயித்தார்; மற்றவர் புன்சிரிப்பினால் முப்புரத்தை எரித்தார். ஒருவர் மர்க்கட கூட்டத்தைச் சகாயமாய்க் கொண்டு தன் காரியமுடித்தார்; இந்திர மேற்வார்ததிறவர்களுக்குத் தான் சகாயமாய்ப் பவித்தார். ஒருவர் ராமன் என்னும் பெயர் தரித்தார்; மற்றவர் அவராற் பூசிக்கப்பட்டு ராமேசன் என்னும் பெயர் பெற்றார். ஒருவர் நிருசிம்மனாய் இரணியகசிப்பைக் கொன்றார்; மற்றவர் அந்நிருசிம்மத்தைச் சரபரூபமுற்றுக் கொன்றார். ஒருவர் சகடத்தைக் காலால் உருட்டினார்; மற்றவர் பருவதத்தைப் பாதாங்குட்டத்தால் உருட்டினார். ஒருவர் தசமுகனால் அபகரிக்கப்பட்ட ஸ்திரியைக் கூடினார்; மற்றவர் உமாநாரியோடு கூடி அர்த்தநாரீசுவரர் எனப்பட்டார். ஒருவர் ஏகமுகத்தோடு கூடினார்; மற்றவர் பஞ்சமுகத்தோடு கூடினார். ஒருவர் நாலு கையோடு கூடினார்; மற்றவர் பத்துக்கையோடு கூடினார். ஒருவர் திரவியமில்லாதவனாகிய குசலன் என்பவனைப் பக்தராக்கினார்; மற்றவர் தமது சிநேகிதனைத் திரவியமுடையனாகச் செய்தார். ஒருவர் சக்கரங்கொண்டு உலகெலாம் இரக்ஷித்தார்; மற்றவர் தமது பாதவிரலாற் கீறிய சக்கரத்தை அவருக்குக் கொடுத்தார். ஒருவர் ருத்திருடைய வில்லைப்பங்கம் பண்ணினார்; மற்றவர் விஷ்ணுவின் புத்திரனாகிய பிரமாவின் சிரசைக் கிள்ளினார். ஒருவர் மகாமேருகிரியைத் திருணமாகக் கொண்டார்; மற்றவர் கோவர்த்தனகிரியை வருத்தத்தோடு தரித்தார். ஒருவர் நிகமாந்தங்களில் விசுவேசுரன் எனப்பட்டார்; மற்றவர் விசுவரூபி எனப்பட்டார். ஒருவரது பக்தர் ஏழு சமுத்திரத்தையும் பானம் பண்ணினார்; மற்றவர் பலர்

சகாயங்கொண்டு சமுத்திரத்துக்கு அணையிட்டார். ஒருவர் பிறந்தாரெனப்பட்டார்; மற்றவர் பிறவாதவர் எனப்பட்டார் ஒருவருடைய சேவகர்கள் தேகமெல்லாஞ் சூடுபட்டு வெளி வந்தார் மற்றவருடைய பக்தரெல்லாம் மிருதுவாகிய பஸ்மந் தாங்கி வெளிவந்தார். ஒருவருக்கு இராவணனைச் சங்காரஞ் செய்யத் திடமிருந்தது; மற்றவருக்குச் சர்வப் பிரபஞ்சத் தையும் லயம் பண்ணத் திடமிருந்தது: ஒருவர் புதல்வர் ஹயக்கிரீவர்; மற்றவர் புதல்வர் கஜமுகர். ஒருவர் சக்கரத் தினாலே சிக்ஷைசெய்தார்; மற்றவர் கண்டபரசினாலே சங் காரஞ் செய்தார். ஒருவர் முதலையைக்கொன்று கஜத்தை ரக்ஷித்தார்; மற்றவர் மிருத்தியுவை (யமனை)க்கொன்று முனி புத்திரரை (மார்க்கண்டரை) இரக்ஷித்தார். ஒருவருடைய தாசர் (ஸ்ரீசுந்தரமூர்த்தி) முதலை விழுங்கிய பிள்ளையை யெழுப்பினார்; மற்றவர் முதலையினாலே இறந்த பிள்ளையயமலோகத்திலே போய்ச் சிரமத்தோடு கொண்டுவந்தார். ஒருவர் காடாந்தகாரமாகிய கறுப்பு நிறத்தைக்கொண்டார்; மற்றவர் சந்திரமலை போன்ற சுவேதவர்ணத்தைக் கொண்டார். ஒருவர் கோபாலர் என்னும் பெயரோடு விளங்கினார். மற்றவர் விருஷபதிபதியாய் விளங்கினார். ஒருவர் இடைக்குடிகளிலே தான் சாப்பிடுதற்கு வெண்ணெய் திருடினார்; மற்றவர் விவேகிகளுக்கு ஞானத்தைக் கொடுத்தார். ஒருவர் பாணரூபமாயிருந்தார்; மற்றவர் அப்பாணத்தைப் பிரயோகித்தார். ஒருவர் தமது நாபியிலிருந்து தோற்றிய பிரமாவைப் புதல்வராயக்கொண்டார்; மற்றவர் அப்பிரமாவின் சிரசைக்கிள்ளிவிட்டார். ஒருவர் விசுவத்தின் (உலகத்தின்) ஏகதேசத்திலிருந்தார்; மற்றவர் விசுவாதிகராயிருந்தார். ஒருவர் தம்முடைய நயனத்தைப் புஷ்பமாய்க்கொண்டு அர்ச்சித்தார்; மற்றவர் அம்புயநயனத்தையுஞ் சக்கரத்தையும் அவருக்குக் கொடுத்தார். ஒருவர் அகாதசமுத்திரத்திலே தூங்கினார்; மற்றவர் கைலாசத்திலே விழித்துக்கொண்டிருக்கின்றார். ஒருவர் மைனாகிரியில் தபசுபண்ணினார்; மற்றவர் அவருக்குச் சாம்பவா என்னும் புத்திரனை அநுக்கிரகித்தார். ஒருவர் இந்திரனுக்குத் தம்பியாய் உபேந்திரராயினார்; மற்றவர் இந்திராதிகணங்களாலே சேவிக்கப்பட்டார். ஒருவர் சமுத்திரத்தை மரத்தாலும் கல்லாலும் அணைத்தார்; மற்றவர் அதனை அம்புக்கூடாகக்கொண்டார். ஒருவர் மச்ச சரீரமெடுத்துச் சமுத்திரம் அடைந்தார்; மற்றவர் மச்சக்கொடியுடையானைத் தகித்தார். ஒருவர் ஆமையாய்ப் பூமியைத் தாங்கினார்; மற்றவர் அவ்வாமையின் ஓட்டைப் பிடுங்கித் தரித்தார். ஒருவர் மூன்று லோகத்தையும் மூன்று அடியால் அளந்தார்; மற்றவர் அவருடைய கண்ணுக்குக் காணப்படாத திருவடியையுடையராயினார். ஒருவர் லிங்கசொரூபத்தை அடைந்தார்; மற்றவர் அவ்விலிங்கத்துக்குப் பீடமாயினார் என்று இதிகாசபுராண வாயிலாகச் சிவோத்கர்ஷ ஸ்தாபனஞ் செய்து, அக்கிராமத்து வைஷ்ணவர்களெல்லாம் விஷ்ணுபரத்துவமுடையரென்று சாதிக்க வன்மையிலராய்ப் போமாறு செய்தனர். அவர் பிதாவாகிய வாசுதேவனும் துக்கமுடையனாயினன். சிவபக்தர்கள் எல்லோரும் ஆனந்தமடைந்தார்கள். அரதத்தாசாரியர் அவ்விடத்தொருங்கு குழுமிய சைவவைஷ்ணவப் பிராமணர்களெல்லோரையும் நோக்கி சகல வேதங்களிலும்

வேதாந்தங்களிலும் ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும் பாரத
முதலிய இதிகாசங்களிலும் சிவாகமங்களிலுமாக எவ்வெவ்
விடங்களிலே சிவபரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கின்றன
வோ அவற்றை நான் அக்கினிசுரப்பெருமானுடைய சந்நி
தானத்திலே ஒழுகக் காய்ச்சிய அயாசனத்திருந்து எல்லோர்
சமுகத்திலும் ஸ்தாபிப்பேன். வைஷ்ணவர்களே! நீங்களும்
அவ்வாறு சாதியுங்களென்று கூறினார். சைவர்கள் இந்த
வாக்கியத்தைக்கேட்டு வைஷ்ணவர்களைப் பார்த்து நீங்களாயி
னும் நாங்களாயினும் அக்கினிசுவராலயத்துக்குப் போய் கா
வேரியிலே ஸ்நானஞ்செய்து நந்திகேசுரருக்கும் சுவாமிக்கும்
மத்தியிலிருந்து பேசக்கடவேம் என்றார்கள். இதைக்கேட்ட
வைஷ்ணவர்கள் குரூரபார்வையினாலே அவர்களை நோக்கி
எங்காயினும் எப்போதாயினும் சிவன்கோயிலை நாங்கள் பார்
ப்பதில்லையே. நீங்கள் வரதராசப்பெருமானுடைய ஆலயத்
துக்குப்போய கருடாள்வாருக்கும் விஷ்ணுவுக்தும் இடையி
லிருந்து சிவனுக்குப் பரத்துவமுண்டு என்றும் மற்றவருக்கு
இல்லை என்றுஞ் சாதியுங்கள் பார்ப்பேம் என்றார்கள். அத
ற்கு அரதத்தாசாரியர் உங்கள் கருத்தின்படியே ஒழுகக்காய்ச்
சிய இருப்புப்பீடத்திலிருந்து சிவனுடைய பரத்துவத்தைச்
சாதிப்பேம் என்றார்.

(கஉ) அரதத்தாசாரியர் ஒழுகக் காய்ச்சிய அயபீடத்திரு
ந்து சுருதி சூக்திமாலையும் சிவஸ்தோத்திரங்களும் அருளிச்
செய்தமை வருமாறு:—அதனைக் கேட்ட வைஷ்ணவர்கள்
லோகபீடத்தைக் கொண்டுவந்து அதிபயங்கரமுறம்படி அக்
கினி சுவாலிக்கும்படி காய்ச்சி எடுத்துக்கொண்டு வைஷ்ண
வர்கள் எல்லோரும் விஷ்ணு ஆலயத்தை நோக்கிப் போனார்
கள். அவர்களுக்கு முன்னே மகாஞானியாகிய அரதத்தாசா
ரியசுவாமிகள் போய் விஷ்ணுமூர்த்தியைப் பிரதக்ஷிணஞ்செ
ய்து மீட்டும் மீட்டும் நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்து தே
வதேவரே, ஜகந்நாதரே, சிவபெருமான் திருவடிகளைச் சிந்
திப்பவரே, சிவபக்த சிரோமணியே, சரணாகதவத்சலா, சகல
உபநிஷத்சாரம் சிவபரத்துவமாயிருக்குமாயின் உமது சந்நி
தியிலிடப்பட்ட இந்தத் தப்தலோக பீடமானது பனிநீர்போ
லக் குளிர்ந்து இருப்பதாக என்று அதனைப் பிரதக்ஷிணஞ்
செய்து, உமாதேவிசமேதராகிய சிவபெருமானைத்தியானித்து
அயபீடத்திருந்து, சைவவைஷ்ணவர்களுள்ளே சிவநிந்தகர்க
ளாகிய வைஷ்ணவர்களை நோக்கி தத்துவார்த்தமாகிய சதுர்
வேததாற்பரிய சங்கிரகம் என்னும் *சுருதி சூக்திமாலையினா
லே சிவபரத்துவஸ்தாபனஞ் செய்தார், சிவஸ்தோத்திரங்
கள் வருமாறு.

காயத்ரீவல்ல பத்வாத் தசரத தநயஸ்தா பிதாராதிதத்வாச்,
சௌரே: கைலாஸயாத்ரா வ்ரதமுதி ததயாபீஷ்ட ஸந்தாந
தாநாத் | நேதரோணஸ் வேநஸாகழ் தசசத கமலைர்-விஷ்ணு
நாபூசி தத்வாத்-தஸ்மை சக்ரப்ரதாநா மபிச் பசுபதிஷ் ஸர்வ
தேவ ப்ரக்ருஷ்ட: | (க)

---

* இது சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் எனப்படும். இது நூற்றுநாற்பது சுலோகமுடையது. இதற்குச் சிவலிங்கபூபதி செய்த வியாக்கியானமும் உள்ளது.

கந்தர்ப்பத் வம்ஸகத்வாத் காளகூபளநாத் காலகர்வாபுஹத்
வாத் | தைதேயாவாஸபூதத்திபுரவிதளநாத் தக்ஷயாதேஜயத
வாத் | பார்த்தீஸ்யஸ்வாஸ்த்ரதாநாந்நரீஹரிவிஜயாந்மாதவே
ஸ்த்ரீசரீரே சாஸ்தஸம்பாதக த்வாதமிச பசுபதிஸ்ஸர்வதேவ
ப்ரக்ருஷ்டஃ | (௨)

வாரணஸ்யாஞ்சபிராசரநியமபுஜஸ்தம்பநாத்ப்ராக்புராணு
ம் | ப்ரத்வம்ஸேகேசவே நாச்ரிதவ்ருஷவபுஷா தாரிதத்வார
தத்வாத் | அஸ்தோசைர்ப்ரம்ஹசிர்வைஷ்ர்நிச களகதாஸங்க்ரு
தாபூஷிதத்வாத் | தாநாத்ப்ரஜ்ஞாநமுக்த்யோரபிசபசுபதிஸ்ஸ
ர்வதேவப்ரக்ருஷ்ட: | (௩)

பூமோலோகைர்நே கைஸ்ஸததவிர்சி தாராதநத்வ்மீஷா |
மஷ்டைச்வர்ய ப்ரதாநாத்தச விதவபுஷாகேசவே நாச்ரிதத்
வாத் | ஹம்ஸக்ரோடாங்கதாரித்ருஹிணமுரஹரார்விஷ்டசிர்
ஷாங்க்ரிகத்வாஜ் | ஜந்மத்வம் ஸாத்யபாவா தபிசபசுபதிஸ்
ஸர்வதேவப்ரக்ருஷ்ட: | (௪)

வைசிஷ்ட்யேயோநிபீடாயித முராரிபுச்லிஷ்டபாவேநசம்
போஸ் | ஸஸ்த்ரீகார்த்தப்ராதிகாயித ஹரிவபுஷாலிங்கிதத்வே
நயத்வா | அப்ரதாந்யாத்விசிஷ்டா த்வயஸமதிகமேதாநவா
நாமராதேச் | சம்போருத்க்ருஷ்டபாவாதபிசப்சுபதிஸ்ஸர்வ
தேவப்ரச்ருஷ்ட: | (௫)

(௧௩) இச்சுலோகங்களுக்குத் திருவாவடுதுறை ஆதீன
த்துத் திராவிட மகாபாஷ்ய கர்த்தாவாகிய சிவஞானசுவாமி
கள் அருளிய மொழிபெயர்ப்பு வருமாறு:—

உயர் காயத்திரிக் குரிப்பொரு ளாகலிற்
றசாதன் மதலை தாபித் தேத்தலிற்
கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்
றனது விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலி
னங்கவர்க் கிரங்கி யாழியீந் தருடலி
னெங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலி
னமைப்பருங் கடுவிட மமுது செய்திடுதலிற்
றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலி
னவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்
றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்
றனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மானுட மடங்கலை வலிதபக் கோறலின்
மாயோன் மகவே வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலி
னாழ்கடல் வரைப்பி னன்றே ரநேக
ரன்பு மீதூர வருச்சனை யாற்றலி
னன்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலி
னையிரு பிறப்பினு மரியருச் சித்தலி
னிருவரு மன்னமு மேனமு மாகி
யடிமுடி தேட வழற்பிழம் பாகலிற்
பிறப்பிற பாதி யுயிர்க்குண மின்மையிற்
சங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மிறப்பழி முகுந்தப் புத்தேண்



மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலி
னயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணிநர்க் குதவலின்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந் தோ
னென்பது தெளிக வியல்புணர்ந் தோரே.

விஷ்ணவாத்யாச்சபுரத்ரயம்ஸுராசஞஜேதுந்நசக்தாஃஸ்வ
யம்சம்பும் ப்ரணதாவயர்துபசவோஸ்மாசந்த்வமேவேச்வர:
தேநாஸ்மிஞ்சரணகதாந்பசுபதே பாஹீத்யவோசந்த்ருதந்தஸ்
மிந்மேஹ்ருதயம்ஸுதேநரமதாம்ஸாம்பேபரப்ரஹ்மணி (௧)

யஸ்யேஷு:கமலேக்ஷண: பசுபதேறப்ஜோத்பவஸ்ஸாரதிர்
யஸ்யஜ்மகாபணிதாமிநோரதபதேயஸ்யேந்துஸூர்யாவுபௌ
மேருர்யஸ்ய சாஸ்ரம்ரதவரோ பூமிஸ்துயஸ்யாபவத்துஸ்மிந்
மேஹ்ருதயம்ஸுகெநரமதாம்ஸாம்பேபரப்ரஹ்மணி: | (௨)

யத்புக்தோம்ருகுரிந்த்ராபதி மஹோசாபஸ்யலக்ஷ்யம் ப்ருs
சம்க்ருத்வாஸ்வாந்தயித்வாம்மிருதாம்ஸ்வமநுபிச்சேவைரயுங்
க்தாஸுபி: | யந்தாராதிபசூடமாகம் சிரோவிச்வாதிகம் காய
தேதஸ்மிந் மேஹ்ருதயம்ஸுகேந ரமதாம்ஸாம்பே பரப்ரஹ்
மணி: | (௩)

கோவிந்தாததிகம்நதைவதமிதிப்ரோச்சார்யஹஸ்தாவுமாவு
த்ருத்யாதசிவஸ்ய சந்நிதிகதோவ்யாஸோ முநிநாம்புர: | யஸ்
யஸ்தம்பிதபாணிராநதிக்ருதாநந் தீச்வரேணுபவந்தஸ்மிந்மே
ஸ்ருதயம்ஸுகேநரமதாம்ஸாம்பே பரப்ரஹ்மணி. | (௪)

விஷ்ணுஸ்தாலரஜங்கமாத்மகஜகத்ஸ்வாமிவிரிஞ்சாதிகோய
த்பக்தேந ஸஹாஸுரேச்வராரி பூர்யூத்தம்த தீசேநய: | க்ருத்
வாசீக்ரமஹோத்விஜா தமஜயந்தஸ்மாத் கதோபூதப்ருசந்தஸ்
மிந்மெஹ்ருதயம்ஸுகேநர மதாம்ஸாம்பேபரப்ரஹ்மணிஃ | ()

காதிநாஞ்சபுயங்கர: ஸ்வபஹுஸாக்ரூரைச் சக்ருத்யைர்ப்ரு
டம்தோந்திததாநவோநரஹரிர்யஸ்யாம்ரபூதேநஸ: | லோகே
சச்சரபேணசிக்ஷித மதோபூல்லீலயார்த்த தக்ஷிணத்தஸ்மின்
மேஹ்ருதயம்ஸுகேநரமதாம்ஸாம்பேபரப்ரஹ்மணிஃ | (௬)

விஷ்வக்ஸேநமபீந்திராபதிஸமந்தம்ரக்தபிக்ஷாபீக்ஷார்சலா
த்ஸம்ஹ்ருத்யாதஸபைரவச்சசிதரோயஸ்யாம்சபூச்தோஜட
ப்ரஹ்மாத்யமரசிக்ஷகஸ்ய பலிநோவிஷ்ணுமதஞ்சாஹகரக்த
ஸ்மிந்மேஹ்ருதயம்சுகேநரமதாம்ஸாம்பேபரப்ரஹ்மணி: (௭)

யேநாபாத்தமங்கஜாங்கபசிதம் திவ்யாங்கராகைஸ்ஸமம்
யேநஸ்வீக்ருதமப் ஜஸம்பவ சிரஸ்ஸௌவர்ண பாத்ரஸ்ஸ
மம் | யேநாங்கீக்ருதமச்யுதஸ்ய நயநம்பூஜாரவிந்தைஸ்ஸமம்
தஸ்மிந்மேஹ்ருதயம்சுகேநரமதாமஸாம்பேபரப்ரஹ்மணி: ()

விஷ்ணுப்ரஹ்மஸுராதிபப்ரப்ருதயஸ்ஸர்வேபிதேவாப்ரு
உம்பூதோஜ்ஜ்லதேர்விஷாத்பரிபவம்ப்ராப்தாயமேச்வரம் |
ஸ்வஸ்வஸ்தார நியோஜிதாகதசு சஸ்வஸ்தாபபூவுர்த்ருடாஸ்
தஸ்மிந்மேஹ்ருதயஞ்சுகேநரமதாம்ஸாம்பேபரப்ரஹ்மணி ()

ஸ்ருஷ்டவாயஸ்த்ரிகுணாந்ஸ்வஜாஜமநுபிச்சூலாயுதேப்யச்
சிவோதத்வைதாந்ததாந்க்ருஹீதுமநயோச்சக்த்யாகிலாஹ்ரந்ந
யோ: | தாப்யாப்ஸாகமஹோகுணத்ரயப்ருதேருத்ராயஸாம்
யம்ததௌதஸ்மிந் மேஹ்ருதயம் சுகேநரமதாம்ஸாம்யே பர
ப்ரஹ்மணி: (௧௦)

(பொழிப்புரை.) விஷ்ணுவாதி தேவர்களெல்லாம் முப்புரத்தசுரரைச் செயிக்க வன்மையிலராய், சிவபிரானைச் சரணடைந்து வணங்கி சுவாமீ! நாமெல்லாம் பசுக்கள் எங்களுக்கெல்லாம் ஈசுரர் நீவிரே; அதனால் உம்மைச் சரணடைந்தேம், பசுபதியே முப்புரத்தசுரரினின்று விரைந்து காத்தருள்வீர் என்று துதிக்கப்பெற்ற அம்பிகாசமேதநாகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். முப்புரத்தை அழிக்கப்போந்த காலத்திலே பசுபதியாகிய சிவபிரானுக்கு விஷ்ணு பாணமாகவும், பிரமா சாரதியாகவும், மகாமேருவில்லாகவும், ஞாண் சர்ப்பராசனாகவும், சூரிய சந்திரர் சக்கரங்களாகவும், பூமி ரதமாகவும் அமையக் கொண்டருளிய அம்பிகாசமேதசிவபிரானிடத்திலே என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். ஓர் காலத்திலே நாராயணர் பிருகுமுனிவருடைய மனைவி மீது தமது சக்கரத்தைப் பிரயோகஞ்செய்து கொன்று விடும் போது அப்பிருகுமுனிவரானவர் சிவமந்திரங் கொண்டு தன் மனைவியை எழுப்பிவிட்டுத் தன் மனைவியைக்கொன்ற லட்சுமீசமேதராகிய அந்த நாராயணரை எந்தப் பெருமானுடைய அருளினால் தம் சாபத்துக்கு இலக்காக்கினரோ, சந்திர சேகரராகிய எந்தப்பெருமானை ஆகமாந்தங்களை உணர்ந்தவர் விசுவாதிகர் என்று புகழ்கின்றார்களோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். எண்ணில்லாத ஆரணங்களையும் புராணங்களையும் அருளிய வியாசமுனிவர் ஸ்ரீகாசியிலே ஸ்ரீ விசுவேசர் சந்நிதியிலே தமது கையை உயர்த்திச் சிவபிரானினும் கேசவரே உயர்ந்தாரென்று கூற, நந்திதேவர் இட்ட சாபத்தினால் அந்தக்கை நின்றபடியே நிற்குமாறு எந்தப்பெருமானுடைய அருளினாற் சபிக்கப்பட்டாரோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சிபூண்பதாகும். ஸ்தாவர சங்கமங்களையுடைய பூமியைப் படைத்தவராகிய பிரமாவுக்குத் தலைவராயுள்ள விஷ்ணுவானவர் ததீசி முனிவரோடு ஓர்கால் யுத்தஞ்செய்து, விரைவிலே (எந்தப்பெருமானுடைய பக்தராகிய) ததீசியினால் அபசயப்பட்டாரோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். காதி முதலிய அசுரர்களை அச்சுறுத்தினவரும், தூணினின்று தோன்றி இரணியனைக் கொல்லும் பொருட்டு ஸ்தம்பத்திலே நின்று தோன்றி இரணியனைக் கொன்றவருமாகிய நரசிம்மத்தின் கருவத்தை எந்தப்பெருமானுடைய அம்சரும் லோகேசுரருமாயுள்ள சரபமூர்த்தி சிக்ஷித்து அடக்கினரோ அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். வைகுண்டலோகத்தின் முதல்வாயிலிலே நின்ற விடுவேசன் என்பானுடைய பெரிய மார்பைத் திரிசூலத்தினாலே பிளந்து தாங்கித் தேவர்களிடத்திலே முன்னர் இரதப் பிக்ஷை வாங்கப்பெற்ற பிரமகபாலத்திலே அவன் இரத்தத்தை எந்தப் பெருமானுடைய அம்சராகிய பைரவமூர்த்தி நிறைக்கப் போந்தாரோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும், விஷ்ணுவுடைய புதல்வனாகிய மன்மதனை நெற்றிக்கண்ணினாற் பொடிசெய்து அவனது சாம்பரைத் தரித்தவரும், பிரமாவினது ஐந்து சிரசுகளில் ஒன்றைச் சிதைத்து அதனைக் கபாலமாகக் கொண்டவரும், விஷ்ணு மூர்த்தியுடைய கண் ஒன்றை மலராகக்கொண்டருளினவருமாகிய அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். ஓர் காலத்துச் சமுத்திரத்திலே ஆலகால விஷத்துக்கு அஞ்சி விஷ்ணு பிரமா முதலாயினோர் பெருங்கவலையோடு கைலாசபதியை அடைந்தபோது, அவர்களை எல்லாம் அஞ்சற்க என்று அபயஸ்தம் கூறி, அவர்களைத் தத்தம் இடம் சாரும்படி செய்து, நஞ்சைத் தமது கண்டத்திலே அடக்கி அருள் செய்தவராகிய சாம்ப சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். சிவபெருமான் ஓர்கால் சாத்துவிக ராசச தாமச குணம் என்பவற்றைச் சிருஷ்டித்து அவற்றை மூவர்க்கும் அருளிச்செய்ய, சாத்துவிககுணம் ராசச குணம் என்பவற்றை முறையேயுடைய விஷ்ணுவும் பிரமாவும் தாமசகுணத்திரரைத் தனித்தனி தூக்கியெடுக்க வலியிலராய்ப் போக, தாமச குணத்தினராகிய ருத்திரர் அந்தப் பிரம விஷ்ணு என்னும் இருவரையும் எந்தப் பெருமானுடைய அருளினாலே எடுத்து நடித்தாரோ, அப்படிப்பட்ட அந்த அம்பிகாசமேத சிவபிரானிடத்திலே என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்.

(கச) அரதத்தாசாரியர் வைஷ்ணவர்களைச் சைவர்களாக்கினமை வருமாறு:—ஸ்ரீசுருதி சூக்திமாலையினாலே மகாதீரராகிய அரதத்தாசாரியர் சிவபெருமானுடைய பாதத்துவஞ்சாதித்தபோது, அவருடைய திருவருளினாலே ஒழுகக் காய்ந்த அயபீடமானது சீதளமாகிய சந்தனச்சேற்றை ஒத்துக் குளிர்ந்தது. அவர் இவ்வாறு புராணப் பிரமாணங்கொண்டும் ஸ்மிருதிப் பிரமாணங்கொண்டும் சிவபிரானுடைய பரத்துவத்தை ஸ்தாபனஞ்செய்து, பண்டிதர் சபையிலே வைதிகாக்கிரராய்ப் பிரகாசித்தார். சபையிலுள்ள பெரியோரெல்லாம் வாசுதேவர் குமாரராகிய அரதத்தாசாரியரைச் சிவபெருமானே யாமென்று துதித்து, அவருடைய திருவடித்தாமரைகளிலே வீழ்ந்து நமஸ்கரித்துத் தத்தம் கிரகம் சார்ந்தார். வைகறைப் போது எய்தியபோது அரதத்தாசாரியர் காவேரியிலேபோய் ஸ்நானஞ் செய்து, வைதிக சந்தியாகருமங்களை முடித்து, சனங்கள் நாற்புடையிலுஞ் சூழ்ந்து நிற்ப, அன்பினோடுஞ் சிவார்ச்சனை செய்தார். அதன்பின்னர்த் தாயானவள் தனது புதல்வரைக் கிட்டித் தழுவி உச்சிமோந்து, துன்பத்தினாலும் இன்பத்தினாலும் சேர்ந்த கண்ணீரினாலே தன்குமாரரை அபிஷேகித்து, பாலனே! நீ மிகுதியும் பசியினாலே வாடினை! என் கண்மணியே! வீட்டுக்குப் போசனஞ் செய்யுமாறு வருதி என்றாள். இங்ஙனங் கூறிய தம்மினிய தாயாருடைய வசனத்தைக் கேட்டு, அவர் வீசொர்ந்து சிவபிரானைத் தியானித்துக்கொண்டு சிவ நிவேதனத்தை அயின்றார். அக்காலந் தொடுத்து எக்காலமுந் திரிகாலமுஞ் சிவபூசைசெய்து, சிவஸ்தோத்திரஞ் செய்து இன்பத்தோடு வசித்தார். அப்போது அவர் பிதாவாகிய வாசுதேவர் தமது புதல்வருடைய அருள் வாக்கின் வன்மையை வியந்து, அவரை நோக்கி யான் அறியாமையினாலே செய்தவைகளை க்ஷமிக்குதிர் என்றார். தப்த முத்திரைகளாகிய சங்கு சக்கரங்களை யுடையரும், ஊர்த்துவ

புண்டரமுடையருமாகிய வைஷ்ணவர்கள் அவரை நோக்கி, காருண்ணிய மூர்த்தியே! எங்களுக்குப் பிராயச்சித்தம் என்னை? எங்களுக்குப் பரலோகத்தி எங்ஙனமாகும்? என்று வேண்டினார்கள். அதற்குப் பாலர் ஸ்மிருதிகளும் பெரியோர்களுஞ் சொல்லிய பிராயச்சித்தமே உங்களுக்காகும். எங்ஙனமெனில், உங்கள் தேகத்தைச் சங்கு சக்கரமுத்திரைகளினாற் சுட்டமைக்குப் பிராயச்சித்தம் விபூதி உத்தூளன திரிபுண்டரமேயாம். எவ்வகைப்பட்ட பாவங்களையும் ஒழித்தற்கும், பிராமணர்முதல் சண்டாளர் இறுதியராம் எல்லோரையும் பாசத்தினின்று முத்தராக்குதற்கும் விபூதியே சிறந்தசாதனமென்று கொண்டு பெரியோர் தரித்தார் என்று திருவாய்மலர்ந்து, சிவபெருமானுடைய செவ்விய ஐந்துமுகங்களுள்ளே பாவத்தைப் போக்கும் அகோரமுகத்தைத்தியானித்து, முன்னை தமது பிதாவுக்கும், பின்னர் வைஷ்ணவப் பிராமணர்களுக்கும் சிவத்துவப்பேற்றிற்கு அறிகுறியாகிய விபூதியிட்டு, திருவருட்பேற்றிற்கு அறிகுறியாகிய உருத்திராக்ஷமுந் தரித்து, பஞ்சாக்ஷரோபதேசஞ்செய்து, சிவபூசை எழுந்தருளச்செய்து, சிவபூசா விதியும் உபதேசித்தருளினார். அங்ஙனம் உபதேசிக்கப்பட்ட வைஷ்ணவப்பிராமணர்களெல்லாம் அரதத்தாசாரிய சுவாமிகளால் திரிகாலங்களிலும் உத்தமோத்தம சிவபுண்ணியமாகிய சிவபூசை செய்யும் பெரும் பாக்கியம் படைத்துக் காலங்கழிப்பாராயினர்.

(௪௫) அரதத்தாசாரியருக்குச் சிவலிங்க பூபதி சிஷ்யராயினமை வருமாறு:—அரதத்தாசாரியர் பால்பருகி வரும் பாலியாவஸ்தையிலே தானே, சிவபெருமானிடத்திலே திருவருட் பிரசாதம் பெற்றமையையும், பிறரொருவரிடத்திலே போய் வித்தை கல்லாது சிவப் பிரசாதத்தினாலே சகல வேத சாஸ்திரங்களை உணர்ந்தமையையும் சிவலிங்கபூபதி என்னும் அரசர் கேள்வியுற்றார். கேட்ட போதே சிவபக்தரும் சிவபெருமானுடைய திருவடித் தாமரையே யன்றி மற்றொன்றனையும் மறந்தும் நினையாதவராகிய அவ்வரசர் விம்மிதமடைந்து அரதத்தாசாரிய சுவாமிகளை அடைந்து, அவரது திருவடித் தாமரைகளைத் தமது சிரசினாற்றாங்கி, எனது நாதரே! மதுராபுரிநாயகராகிய சுந்தரேசுவரப் பெருமான் பாண்டிநாதனாகிய என்னைக் காக்கும் பொருட்டு இந்த வடிவத்தோடு ஈண்டு எழுந்தருளினாரோ என்று சொல்லித் துதித்தார். அப்போது அங்கு நின்ற வித்துவப் பிராமணர்கள் அரசனை நோக்கி, அரசனே, நீவிர் சொல்லியது ஒக்கும். அங்ஙனமில்லையாயின் வேதாதிகளை யெல்லாம் ஓதாதுணர்ந்து எல்லோரையும் வாதிலே செயிக்க அரதத்தாசாரிய சுவாமிகளுக்கு வன்மை எங்ஙனம் உண்டாகும்! என்றார்கள் அந்த வித்துவான்கள் இங்ஙனம் சொல்லிய போது, "நேத்திர கமலத்தினாலே சிவபெருமானை முன்னரே பூசித்த மகா விஷ்ணுவே லோகத்தைக் காக்கும் பொருட்டும், சிவபக்தியை விளக்கும் பொருட்டும், வைதிக நெறியை நிறுத்தும் பொருட்டும் பின்னரும் பிராமணகுலத்திலே அரதத்தர் என்னும் நாமத்தோடு திருவவதாரஞ் செய்தார்" என்று சிவபெருமானுடைய திருவருளினாலே அசரீரிவாக்கு அங்கு எழுந்தது. சனங்கள் அந்த வார்த்தையைக் கேட்டு ஆச்சரியமும் மகிழ்ச்சியு மெய்தி வேத சொரூபியாகிய அவருடைய பாதயுகளங்களிலே வணங்கினார்கள், அக்கிரகாரத்துப் பிராமணர்களும் அவரைத் தன்னியரென்று வணங்கினார்கள். அதன் பின்னர் அரசனும் அவரைச் சிவபிரானே எனமதித்து வணங்கி மண் பொன் வஸ்திரம் என்பவற்றை உபகரித்து, சுவாமீ! உம்மையன்றி எனக்கு மற்றோர் தெய்வமில்லை; ஆதலில், அடியேன் மீது நாதராகிய நீவிர் திருவருள் பாலித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்போது ஆசாரியசுவாமிகள் அவரைநோக்கி, அரசரே! உம்மை ஒத்தார் திரிபுவனங்களினும் இல்லை. நீவிர் சிவகிருபை எய்தப்பெற்றீராதலில், சைவாசற்குரிய அருள் பூண்டீராயினீர் என்று திருவாய்மலர்ந்து, அவருக்கு ஸ்ரீபஞ்சாக்ஷரோபதேசஞ் செய்து, ஸ்படிகலிங்கபூசை யெழுந்தருளச் செய்து கொடுத்தார். அரசர் அதுகண்டு மகிழ்ந்து அவருடைய திருவடிகளிலே சுவர்ண புஷ்பங்களை வேண்டிய மட்டும் இறைத்தார். சிவபெருமான் குபேரனோடு சிநேகம் பெற்றாற்போல, ஆசாரியசுவாமிகளும் சிவலிங்கபூபதி என்னும் அரசரோடு சிநேக முற்றிருந்தார். ஆசாரியர் அரசருக்கு நெற்றியிலே விபூதிதரித்து, அரசரே! நீர் சிவபூசை செய்து, சிவ கைங்கரியஞ் செய்து கொண்டிருக்குதிரென்று ஆஞ்ஞை செய்தருளினார். அரசரும் அதற்கிசைந்து அன்பினோடு அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து அனுமதி பெற்றுக்கொண்டு தமது சேனையோடு அரண்மனை சார்ந்தார்.

(௪௬) அரதத்தாசாரியர் பிரமசரிய விரதம் அனுஷ்டித்தமை வருமாறு:—வெள்ளியபல்லும், வெள்ளியகோவணமும், வெள்ளிய பூணூலுமுடையராய், தண்டகமண்டலம் கிருஷ்ணாசினம் மௌஞ்சிமாலை உருத்திராக்ஷம் தர்ப்பை பவித்திரம் என்பவைகளைத் தரித்து அரதத்தாசாரியசுவாமிகள் பிரதமாச்சிரமமாகிய பிரமசரியத்தை அனுஷ்டிப்பாராயினார். காலை மாலைகளிலே சமிதாதானஞ் செய்வார். தமது லோககுருவாகிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதானத்திலே எப்பொழுதும் எழுந்தருளியிருந்து, வேதாத்தியயனத்தினாலே முனிவர்கடன் கழித்தார். பிதுர்கடன் தீர்க்கும் கிரகஸ்தாச்சிரம விரதப் தொடங்குதற்கு முன்னே கோதானஞ்செய்து பிரமசரிவிரதங்களைச் சமாப்திசெய்தார்.

(௪௭) சுப்பிரதீகர் கமலவல்லியைப் பெற்றமைவருமாறு:—அந்தக் கம்சாபுரத்திலே சதாசாரமுடையருஞ் சாந்தரும், பஞ்சயஞ்ஞஞ் செய்பவரும், அன்பினோடு திரிகாலமும் சிவபூசை செய்பவரும், வைதிக விபூதியினாலே உத்தூளனஞ்செய்பவரும், உருத்திராக்ஷதாரணஞ் செய்பவரும், பஞ்சாக்ஷரசெபஞ் செய்பவரும், சிவாலய சந்நிதியிலே பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்பவரும், சிவனடியார்க்குத் திருத்தொண்டு செய்பவருமாகிய சுப்பிரதீகர் என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். வாதூலகோத்திரம் என்னுஞ் சமுத்திரத்துக்குக் கமலாக்ஷி என்னுஞ் சந்திரன் அவருக்கு மனைவியாய் உதித்தது. இக்கமலாக்ஷி என்பார் தமது நாயகனை மிகுதியும் பிரீதிசெய்து, அருந்ததி அனசூயை என்போர் கற்பினிற் சிறந்த, அதிசௌந்தரிய முடையராய் நாயகருக்குத் திருத்தொண்டு செய்தலில் மிகு பற்றுடையராயொழுகினார். பூமிதேவியானவள் இரத்தினந் தரித்தாற்போல, இவ்வம்மையார் திருவயி

ற்றிலே ஓர் கர்ப்பம் எய்திற்று. இவருடைய லட்சுமீகரமாகிய உதாரமானது பெருக்கு மியல்பு பூண்டது, அவர் நாயகரும் சீமந்தாதி வைதிக கன்மங்களைச் செய்தார். மகாசௌந்தரியமான பெண்குழந்தை ஒன்று லட்சுமீகரத்தோடு பிறந்தது. அப்பெண்குழந்தை பிறந்தினத்திலே பிதாவாகிய சுப்பிரதிகர் மங்களோற்சவம் நடத்தினார். சிவபக்தர்களுக்கும் பிராமணர்களுக்கும் தனதான்னியங்களை வேண்டியவாறு அளித்தார். தமது புதல்வியாரை வளர்த்துச் சாதருகமம் நாமகருமம் முதலியன செய்தார். புதல்வியாருக்குக் கமலவல்லி என்று நாமகரணஞ் செய்தார். அக்கமலவல்லியும் பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டுத் தவழ்ந்து சென்றும், சிறு பெண்களோடு மண் விளையாட்டயர்ந்தும், மழலைவார்த்தை பேசியும் தமது தந்தை தாயரைப் பிரீதிசெய்து வந்தார். இரத்தின மாணிக்கமேகலையினாலும், பலவித சித்திரமாகிய பட்டுவெஸ்திரங்களினாலும், புஷ்பமாலைகளினாலும் சிறந்து, கண்டோர் யாரும் அதிசயமுறும்படி அக்குழந்தையார் விளங்கினார்.

(கஅ) அரதத்தாசாரியருடைய விவாகப்பிரயத்தினம் வருமாறு:—அக்காலத்திலே சிவலிங்கபூபதியானவர் கஞ்சாபுரத்துக்கு வந்த ஆசாரியசுவாமிகளை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ் செய்து அவர் தந்தையாராகிய வாசுதேவரை நோக்கி, எமது ஆசாரியருக்கு விவாகஞ் செய்தற்குரிய காலஞ் சமீபித்ததே என்று சொல்ல, சமீபத்திலே ஆங்கிருந்த சுப்பிரதிகர் அரசனை நோக்கி, தாம் தமது புத்திரியை விவாகஞ் செய்து கொடுப்பேம் என்றும், அதுநோக்கித் தாமசஞ் செய்யவொண்ணாதென்றும் அறிவித்தார். உடனே விவாகோற்சவஞ் செய்ய ஆரம்பித்து, சோதிடரை வருவித்து, முகூர்த்தஞ் நிச்சயித்து, பிதா முதலாயினோரோடு தமது பந்துக்கள் யாவரும் வரும்பொருட்டு விவாகபத்திரம் அனுப்பிவிட்டு விரதாதிகளையும் கோதானாதிகளையும் நடாத்தி, கஞ்சாபுரத்து வீதிகளெல்லாம் வாழை கமுகுகள் நாட்டி, தோரணங்களையும் கொடிகளையுந் தூக்கி அலங்கரித்தார். கம்சாபுரத்தார் தத்தம் கிரகங்களைச் சிறப்பித்து கோலங்களிட்டு சித்திரித்து அலங்கரித்தார்கள். பந்துக்களெல்லாம் பட்டுக்களையும் பீதாம்பரங்களையும் விலையுயர்ந்த மற்றைய் பரிசுகளையுங் கொண்டு கல்யாண வீட்டுக்கு வந்தார்கள். நானாதேசங்களினின்றும் போந்துவந்த சனங்களினாலே கல்யாணமண்டபம் நிறைந்து போயிற்று. மகாயாகங்களிலே எவ்வளவு சம்பாரங்கள் வேண்டப்படுமோ அவ்வளவு பொருள்களினாலும் கல்யாணமண்டபத்தைச் சிவலிங்கபூபதி நிறைப்பித்தார். கம்சாபுரத்திலுள்ள கிரகங்களெல்லாஞ் சிறப்பினால் வாய்ந்தன. பிராமணர்களெல்லாம் ஒருங்கு குழீஇயவிடத்திலே விவாகத்தின்பொருட்டுப் புத்திரர் அங்குரார்ப்பணஞ் செய்தார். அவர் தந்தையாராகிய வாசுதேவரும் பற்பல இடங்களினின்றும் போந்த பந்துக்கள் முதலாயினோரையெல்லாம் பற்பல உபசாரங்களினாலே மகிழ்வித்தார்.

(க௯) சுப்பிரதிகர் தமது கிரகத்தை அலங்கரித்தமைவருமாறு:—சுப்பிரதிகரும் புதல்வி விவாகத்தின் பொருட்டுத் தமது கிரகத்தை அலங்காரஞ் செய்து முத்துச் சரங்களினாலும், தீபஸ்தம்பங்களினாலும், பூரணகும்பங்களினாலும், சந்தன அகிற்புகைகளினாலும், விவாகசாலையை மேன்மை வாய்ப்பச் சிறப்பித்தார். இவருடைய பந்துக்களெல்லாம் நானாவித வஸ்திராபரணாதிகளால் அலங்கரித்துக்கொண்டு குழுமினார்கள். விவாகசாலையின்கண்ணே பல்வகை வாத்தியங்களும் வேதங்களும் கோஷிக்க, வேதோக்தமாகப் பிராமணர்கள் புண்ணியாகவாசனஞ் செய்தார்கள்.

(உ0) அரதத்தாசாரியர் விவாககோலங்கொடு சுப்பிரதிகர் கிரகத்துக்கு எழுந்தருளினமை வருமாறு:—விவாகத்துக்கு முதற்றினத்திலே ஆசாரிய சுவாமிகளுக்கு இரக்ஷாபந்தனமும் அங்குரார்ப்பணமும் சமாவர்த்தனமும் விதிப்பிரகாரஞ் செய்து பிராமணர்களுக்குத் திரவியங்களை இறைத்தார். விவாக சபை மிகுதியும் பிரகாசித்தது. அக்கினியை ஓம்ப, அது வளர்ந்து வலஞ் சுழித்து ஓங்கி வாய்ந்தது. புஷ்பதூளிகளெல்லாம் மலிந்தன. விபூதி ருத்திராக்ஷ தாரணர்களாகிய சிவபக்தர்கள் பிரகாசித்தார்கள். தென்றல் மந்தமாய் வீசிற்று. பிராமணர்கள் அறுசுவை யோடும் போசனஞ் செய்து வந்திருந்து இதற்கு முன்னர் இப்படிப்பட்ட இனியரசங்களை ருசித்தேமில்லை என்று புகழ்ந்து பாராட்டினார்கள். அவரெல்லாம் மிகு திருப்திகாமுடையராய் அர அர அர என்று முழங்கினார்கள். சிவபக்தர்களை உபசரித்தார்கள். வதூவரன் என்னும் இருவரும் அங்குரார்ப்பணஞ் செய்யப்பட்ட பாலிகையைச்சல முதலிய பிரயோகஞ் செய்து வளர்த்தார்கள். வாசுதேவரும் சுப்பிரதிகரும் முறையே தத்தம் புதல்வர் புதல்வியருடைய அங்குரார்ப்பண பாலிகையைக் கண்டு மகிழ்ந்தார்கள். வாசுதேவர் தமது புதல்வரை விவாகோற்சவத்திற்கு உசிதமாகிய உயர்ந்த வஸ்திரங்களினால் அலங்கரித்து, கல்யாண வேதி மத்தியிலிடப்பட்ட திவ்ய ஆசனத் திருத்தி, பரிமள திரவியங்கள் கலந்த சந்தனம் பூசி, சுகந்த ஜாதிபுஷ்பமாலைகள் சூட்டி, பாதரசம் கடிசூத்திரம் முத்தாரம் நக்ஷத்திராகார மாலை என்பவைகளால் அலங்கரித்து, சுவர்னமும் முத்தும் கலந்து அமைக்கப்பட்ட உருத்திராக்ஷமாலைகளைச் சிரசிலும் உரத்திலும் புயத்திலும் பொருந்த அணிந்து, விரல்களை மோதிரங்களினாலும், காதுகளை இரத்தின குண்டலங்களினாலும் அலங்கரித்து, நெற்றியை நல்ல வெள்ளிய விபூதியினாலே விளங்கச்செய்து, பொன்னாற்செய்து முத்துக்களால் நிருமித்து அமைக்கப்பட்ட கிரீடத்தைச் சிவபெருமானால் ஞானாபிஷேகஞ் செய்யப்பட்ட அரதத்தாசாரியசுவாமிகள் சிரசிலே சூட்டினார்கள். அவ்வாறு மணக்கோலஞ் செய்யப்பட்ட ஞானமூர்த்தி அழகுக்கு அழகு செய்தாலொப்ப விளங்கினமையைப் பந்துக்களாயினோரெல்லாங் கண்டு மகிழ்ந்தார்கள். சபையினரால் திருஷ்டிதோஷம் விளையாவண்ணம் விபூதியையே அவருக்குப்பின்னும் அணிந்தார்கள். குருமூர்த்திகளாகிய ஆசாரியருடைய திருமேனியை தரிசித்துப் பல்லோர் பணிந்தார்; பல்லோர் துதித்தார்; பல்லோர் சேவித்தார். இங்ஙனம் நிகழ; ஆசாரியர் அக்கினீசுவரப் பெருமானைத் தரிசிக்குமாறு பாதசாரியாய்ச்சென்று, ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, சுவாமியை நமஸ்கரித்துக்கொண்டு கிரகத்துக்கு மீண்டார். அப்போது அவரைப்

பின்னர் முத்துச்சிவிகையில் எழுந்தருளச்செய்து கிராமப் பிரதக்ஷிணஞ் செய்யத் தொடங்கினார்கள். அப்போது பந்துக்களாயினோரெல்லாம் தத்தம் வாகனங்களிலேறிச் சென்றார்கள். சங்கம் காகளம் பேரி மிருதங்கம் சின்னமுதலிய வாத்தியகோஷங்களால் திக்குகளெல்லாம் நிறைந்தன. பட்டுக்கொடிகள் ஆகாயத்திலே மலிந்தன. அநேக கோடி சாமரங்கள் யாண்டும் அசைந்தன. சோமயாசிகளெல்லாம் அக்கினி கோத்திர சகிதராய் மனைவியரோடு புறப்பட்டார்கள். அநேக கானங்கள் யாண்டுமெழுந்து செவிகளிற் புகுந்து சுவைத்தன. புருடரும் பெண்களும் சிவசோபையோடுவிளங்கினார்கள். சிவ கிங்கரர்களும் ஆண்டே குழுமினார்கள். சாமரங்களும் வீசணிகளும் சிறக்க, நரவாகனத்தின்மீது வெண்கொற்றக்குடை விளங்குவது சமுத்திரத்தில் சந்திரோதயம் விளங்கினமையை நிகர்த்தது. வெண்சாமரங்களும் முத்துமாலைகளும் பல்லக்குச் சாளரங்களும் வாயுவினாலே அசைந்து சமுத்திர அலைகளை ஒத்தன. ஆசாரிய சுவாமிகள் வீதியிலே எழுந்தருளும்போது நகரவாசிகள் தத்தம் வீடுகளிலிருந்து பழங்களும் நாளிகேரங்களுங் கொண்டு உபசரித்துச்சிறப்பித்தார்கள். ஆசாரியர் பந்துக்கள் சிவனடியார் முதலாயினாரோடு சுப்பிரதிகருடைய விவாகசாலையை நோக்கி எழுந்தருளினார். அப்போது சுப்பிரதிகரும் தமது பந்துசனங்களோடு அவரை எதிர்கொண்டு உபசரிக்க, அவர் கிருகத்தினுள்ளே பிரவேசித்து, பூஷணங்களுக்கெல்லாம் அழகை விளைக்கும் பிரகாசத்திருமேனியையுடைய அவ்வாசாரியர் முத்துப்பல்லக்கினின்றும் இழிந்தருளி, பட்டுநடைப் பாவாடையின்மீது நடந்து போந்து, விவாகமண்டபத்தை அடைந்து, வேதிகையிலிடப்பட்ட சுவர்ணாசனத்தின் மீது எழுந்தருளினார்.

(உக) அரதத்தாசாரிய சுவாமிகள் விவாகஞ் செய்தமை வருமாறு:—சுப்பிரதீகரும் தமது புத்திரியைச் சுவர்ணபூஷணாதிகளால் அலங்கரித்து ஊஞ்சல் மஞ்சத்திலிருத்தினார். வதுவரர் இருவரும் தம்முள் மாலை யாற்றிக்கொண்டார்கள். ஆசாரியரோடு அவர் மனைவியாரையும் உடன் அமரச்செய்து இருவர் வம்சாவளிநாமங்கள் சொல்லி ஊஞ்சல் ஆட்டினார்கள். மாமி முதலாயினோர் வதுவரர் பாதங்களைப் பால்கொண்டு பிரக்ஷாளனஞ் செய்து அவ்விருவருக்கும் நீராஞ்சனஞ் சமர்ப்பித்துப் பிரதக்ஷிணஞ் செய்தார். அதினின்றும் இறங்கிச் சபையின்கண்ணே நானாவித வாத்தியங்கள் கோஷிக்கக் கல்யாணமண்டபஞ் சார்ந்து நவரத்தின ஆசனத்தின்மீது வீற்றிருந்தார்கள். தமது மனைவியாரோடு அவ்விடத்தே சென்று சுப்பிரதிகர் தமது புத்திரியினுடைய வலக்கையைத் தமது கையினாலேபிடிப்ப, மனைவியார் கரகத்தினின்று தீர்த்தஞ்சொரிய, பழமுதலியவற்றோடு தமது புத்திரியைப்பரமசிவரூபமாய் எழுந்தருளிய உமக்குத் தந்தேம். என்று தமது கோத்திரத்தைச்சொல்லி ஆசாரியர் கையிலேகொடுத்து, அவர் வலப்புறத்திலே கமலவல்லியை இருத்தினார். பவளக்கொடிகளெல்லாம் நாட்டப்பட்ட கல்யாணமண்டபம் மிகுந்த சோபையுற வாத்தியகோஷங்களால் விளங்கிற்று. சங்குகள் எங்குந் தொனித்தன. வேதங்கள் கோஷித்தன. வரர் அக்கினியிலே ஓமஞ் செய்து அதனை வளர்த்தார். வதுவரர் இருவரும் தம்மிருகரங்களினால் பொரியை அக்கினியிலிட்டார்கள். வரர் தமது கையினால் வதுவின் கையைப்பற்றி அஷ்டமூர்த்தியாகிய சிவாக்கினியைப் பிரதக்ஷிணஞ்செய்து, பின்னரும் தமது பாரியாரோடு சிவபிரான் திருவடிகளை அடைவேன் என்னுந் தியானத்தோடு எஞ்சிய கன்மங்களையும் முடித்தார். இங்ஙனம் மகானாகிய அரதத்தாசாரியருடையவிவாகம் மிகு விமரிசையோடுமுற்றியது.

(உஉ) அரதத்தாசாரியர் விவாக கோலத்தோடு வீதிவலம் வருதல் வருமாறு:—கல்யாணத்துக்கு வந்தோர் அனைவரும் இந்தப் பெருமான் சமஸ்த லோகத்தையும் ரக்ஷிக்கும் பொருட்டே எழுந்தருளினாரென்று களிப்பினோடு ஆரவாரித்துப் புகழ்ந்தார்கள். பின்னர் வதுவரர் இருவரும் வீதிவலம் வருவாரெனக்கொண்டு நகரவாசிகள் தத்தம் கிரகங்களை அலங்கரித்தார்கள். கன்னியர் கர்ப்பூரம் பச்சைக் கர்ப்பூரம் பொரிமுதலியவற்றைக் கொண்டு புறப்பட்டார்கள். வீதிகளைத் தூய்மை செய்து சந்தனக் குழம்பு தெளித்த, சூரியகிரணங்கள் வீழாவண்ணம் விதானங்கள் அமைத்தார்கள். தேவர்கள் புஷ்பமழை வருவித்தார்கள். வாயு சந்தனப் புஷ்பசுகந்தம் கொண்டு யாண்டுஞ் சேவித்தான். பூருவபுண்ணியம் ஞானிகளை உபசரித்தல் போல, நகரத்தார் ஆசாரிய சுவாமிகளை மங்களத்தோடு உபசரித்தார்கள். அரதத்தாசாரியரும் அவர் மனைவியாரும் ஊஞ்சல் விட்டிறங்கி விவாகசாலைக்கு வெளிநீங்கி, வாகனத்திலிவர்ந்து கிராமப் பிரதக்ஷிணஞ் செய்து, பின்னர் அக்கினீசுவரர் ஆலயத்தை வலம்போந்து வணங்கி, உமாதேவியாருக்கும் சிவபெருமானுக்கும் புஷ்பாஞ்சலி எடுத்து, திருவருள் பெற்று ஆலயத்துக்குப் புறத்தே வந்து, வாகனமேற்கொண்டு வாத்திய கோஷங்களோடு தமது கல்யாணமண்டபம் நோக்கி வந்து, ஆராத்திரிகம் நீராஞ்சனமுதலியன பெற்று, ஔபாசனாக்கினியோடு கிரகப் பிரவேசஞ் செய்து, பிராமணர்களுக்கு விருந்து முதலாயின அயிலுவித்து, அவர் ஆசிர்வாதம் பெற்று, அவர்கள் இஷ்டப்படி சுவர்ணதானாதிகளைக் கொடுத்து மகிழ்வித் தனுப்பினார். இங்ஙனம் அரதத்தாசாரியர் கமலவல்லியாராகிய மனைவியோடமர்ந்து சிவாராதன முதலிய செய்து இல்லறம் நடாத்துவாராயினார்.

(உங) அரதத்தாசாரியர் கிரகஸ்தாச்சிரமம் நடாத்து முறைமை வருமாறு:—அரதத்தாசாரியர் உதயகாலத்தில் எழுந்து, சிவத்தியானஞ் செய்து, தந்த தாவன முதலியன செய்து, ஸ்நானஞ் செய்து, சந்தியாவுபாசித்து, காயத்திரி செபம் ஓமம் சிவபூசை முதலியன செய்து, கிரகஸ்தாச்சிரம விஷயத்தை விசாரித்துக்கொண்டு, மௌனத்தோடு போய் அக்கினீசுவரரை வணங்கி, பின்னர்த் திருக்கோடிகா, திருவாலங்காடு, திருவாவடுதுறை, ஆபத்சகாயேசுரம், பிராணேசுராலயம், ஆம்பிரவனேசுரம், அக்கினீசுரம் என்னும் ஏழு ஆலயங்களையும் வணங்கி, மாத்தியான்னிகம் பிரமயஞ்ஞம் முடித்து மத்தியான சிவபூசை செய்து, வைசுவதேவ கோமஞ்செய்து, துவாரத்து அதிதிகளை நோக்கி உபசரித்து, பிராணாகுதி வாயிலாகச் சிவநிவேதனம் அயின்று, பிராமணர்களுக்குத் தாம்பூலம் அளித்து, சாத்துவிக சில புராணங்களைப்படித்து, தியானத்தோடு மாலையிலிருந்து, அக்காலையில், சந்தியை உபாசித்து

காயத்திரிசெபம் ஓம முதலியன செய்து, சிவாலயதரிசனஞ் செய்துகொண்டு, கிரகத்துக்கு வந்து சிவபூசை வைசுவதேவ ஹோமஞ் செய்து, இராத்திரி அதிதிகளை உபசரித்து, தாமும் போசனஞ் செய்து, அவர்களுக்குத் தாம்பூலம் கொடுத்து, தாமும் தாம்பூலஞ் சுவீகரித்து, சிறிதுபோது பிராமணர்களோடு சிவகதைகளைச் சொல்லிச் சிந்தனை செலுத்தி, இதயத்திலே உமாதேவியாரோடு சிவபெருமானைத் தியானித்து, இராத்திரி சூக்தத்தையும் படித்துச் சயனஞ் செய்வார். இருதுகாலங்களிலே பத்தினி கமனஞ் செய்து, சிவ பாவனையோடு கிரகஸ்தாச்சிரமத்தை நடாத்துவாராயினார்.

(உச) தண்டனை யடைந்த கணிகையர் அரதத்தாசாரியராலே விடுதலையாக்கப்பட்டமை வருமாறு:—அக்கினீசுவரர் ஆலயத்துக்குத் திருத்தொண்டு செய்யும் சில கணிகையர் ஓர் நாள் இராத்திரி கேளிற் திருத்தொண்டுக்கு வாராமையால் கோயிலதிகாரிகள் அவர்களை மறுநாட்காலையில் வருத்திக்கோயில் மண்டபத்தின் மேலே வெய்யிலிலே நிறுத்தி மலசலமோசன மின்றிப் பசியோடு வருந்தும்படி பீடித்தார்கள். மத்தியானமாயும் வீடுபோகப் பெறாமல் இங்ஙனம் பீடிக்கப்பட்டு அவர்கள் அழும்போது, வழக்கமாய்த் தாம் வரும் காலந் தப்பி மத்தியானத்துக்குப்பின் அரதத்தாசாரியர் ஆலய சேவையின் பொருட்டு அங்கே எழுந்தருளினார், அந்தக் கணிகையர் ஆசாரியரைத் தரிசித்து அத்துன்பத்தினின்று தங்களை விடுவிக்கும் பொருட்டு அழுது பிரார்த்தித்தார்கள். அப்பொழுது அவர் பக்கத்தினின்றவர்கள் வாயிலாக அக்கணிகையர்க்கு நிகழ்ந்த சமாசாரத்தைக் கேட்டுத் தாம்பூமியிலே வீழ்ந்து, தம்முடைய வயிற்றிலே அடிக்கடிமோதி, சிரசிலும் மோதி அழுது மூர்ச்சையினாலே நிலத்திலே விரைவில் வீழ்ந்தார். சிலர் இவர் நிலைமை நோக்கிப் பரிகசித்தார் வேறுபலர் இவர் இங்ஙனம் செய்தலை நிச்சயித்தறிதற்கு நமக்குவன்மையில்லை என்பார்கள். அப்போது கோயிலதிகாரிகள். அங்குவந்து நீங்கள் ஏன் இப்படி வருந்துகின்றீர்களென்று அவரைப் பிரார்த்திப்ப, அதற்கு அவர் கோயிலுக்கு வந்து சேவிக்குமாறு தண்டிக்கப்பட்ட கணிகையருடைய பாக்கியமன்றோ பாக்கியம்! இந்தப்பிரகாரம் ஆலய சேவைக்கு என்னை வந்திலை என்று பீடித்து என்னைக் கண்டிக்க எனக்கு அதிகாரி ஒருவருமில்லையே என்று வருந்துகின்றேன் என்றார். இந்த வார்த்தையைக் கேட்டு அதிகாரிகள் அக்கணிகையரை விடுதலை செய்தார்கள். அக்கணிகையரெல்லாம் அரதத்தாசாரியரை மிக மகிழ்வினோடு வாழ்த்தினார்கள். ஆசாரியரும் சிவதரிசனஞ் செய்து கொண்டு கிரகஞ் சார்ந்து சிவபூசை செய்ய ஆரம்பித்தார்.

(உரு) அரதத்தாசாரியர் நாயின் நாவிலும் சிவலிங்கப் பெருமான் சிரசிலும் சங்காபிஷேக தீர்த்தம் சொரிந்தமை வருமாறு:—அப்போது இருஷிகள் முனிவரை நோக்கி அரதத்தாசாரிய சுவாமிகள் பிராதக் காலத்தில் சிவ சேவைக்கு எழுந்தருளி யிருப்பாரேல் கணிகையர் தம் விருத்தாந்தத்தை அவருக்கு விஞ்ஞாபனஞ் செய்திருப்பாரே. அங்ஙனம் அன்றைக்கு அவர் வாராமைக்குக் காரணம் என்னை என்று கேட்டார்கள். ஆசாரியரைக் கணிகையர் காலைப்போதிலே தரிசித்தும் தங்களை அதிகாரிகள் விரைவிலே விடுதலை செய்வார்களென்று எண்ணி அதைக்குறித்து அவருக்கு விண்ணப்பஞ் செய்திலர் என்று முனிவர் சொன்னார். அங்ஙனமாயின் திருவிடை மருதூரைத் தரிசித்துக்கொண்டு சீக்கிரத்திலே அக்கினீசுவரர் ஆலயத்துக்கு வாராது அவர் காலந் தாழ்த்து மத்தியானத்துக்குப் பின் வரவேண்டிய காரணம் என்னை என்று இருஷிகள் கேட்ப, முனிவர் சொல்வாராயினார். பௌர்ணமாசைகாலத்திலே அரதத்தாசாரியர் பிரமகத்தி நிவாரணஞ் செய்யும் காவேரி தீர்த்தத்திலே ஸ்நானஞ் செய்து, மத்தியார்ச்சுனேசுவரரையும் ஆஞ்ஞாகணேசரையும் சற்பநாயகியையும் பிறரையுந் தரிசித்துக் கொண்டு மத்தியானப் போதிலே தமது கிரகத்துக்கு வந்து, மாத்தியான்னிகஞ் செய்து சிவலிங்கப்பெருமானுக்குப் பூசை செய்யத் தொடங்கி, அவருக்கு அபிஷேகஞ் செய்யும்போது, நாயொன்று தாகமேலீட்டினாலே அந்தத் தாராபிஷேகசலத்தை ஏந்திச் சாப்பிடுமாறு நாக்கை நீட்டிற்று. அப்போது ஆசாரியர் அந்தச் சங்காபிஷேகசலத்தை அந்த நாயின் நாவிலே விட்டு எஞ்சிய சலத்தைச் சிவலிங்கப் பெருமானுடைய சிரசின் மீது அபிஷேகஞ் செய்தார். சமீபத்திலே நின்றோர் ஆச்சரியத்தோடு அதனைநோக்கி இங்ஙனஞ் செய்யலாமா? இங்ஙனஞ் செய்தற்குக் காரணம் யாது என்று கேட்டார்கள். அதற்கு ஆசாரியர் என்மாட்டுள்ள அன்பினாலே சிவபெருமானே இந்த நாயுருவத்தோடு எழுந்தருளினால் யான் என் செய்யத்தக்கது! என்று சொல்ல, அவர்கள் ஆசாரியருக்குச் சிவபெருமானிடத்திலே திடமான அன்பு இருந்தவாறு என்னை! என்னை!! என்று சொல்லி சிவபூசாதரிசனஞ் செய்துகொண்டு தத்தம் வீடுசார்ந்தார்கள்.

(உசு) அரதத்தாசாரியருக்குப் புதல்வர் புதல்விகள் பிறந்தமை வருமாறு:—அரணியில் அக்கினி அமைந்தாற் போல அவருடைய பத்தினியார் கர்ப்பமுடையராயினார். அக்கருப்பம் மாசந்தோறும் விருத்தியாக, ஆறும் மாசத்திலே சீமந்தாதிகருமங்கள் நடத்தப்பட்டன. உமாதேவியார் சுப்பிரமணியரைப் பெற்றாற்போல, அவர் பத்தினியார் ஓர் குழந்தையைப் பெற்றெடுப்ப, அக்குழந்தைக்கு அக்கினீசுரன் என்று நாமகரணஞ் செய்தார். அதன் பின்னர் அவருக்குப் பின்னரும் எழுபுத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு முறையே மகாதேவர், நீலகண்டர், சங்கரர், சந்திரசேகரர், சம்பு, மத்தியார்ச்சுனேசுவரர், கோவடு நாயகர் என்று நாமகரணஞ் செய்தார். அவர்களோடு சற்பகை மீனாக்ஷி என்னும் இருபுதல்விகளும் பிறந்தார்கள். அவர்களெல்லாஞ் சிவநேசச் செல்வர்களாய் விபூதி உருத்திராக்ஷ தாரணர்களாய், சிவலிங்கார்ச்சனர்களாய், சதாகாலமும் ருத்திரசெபஞ் செய்பவர்களாய் பஞ்சாக்ஷர செபப் பிரியராய், பிதாவுக்குத் தொண்டு செய்யுங் காதலுடையராய், சற்கன்ம நிரதராய், வேதசாஸ்திர பாடகர்களாய் ஒழுகினார்கள். இவர்களோடு ஆசாரியர் கிரகஸ்தாச்சிரமத்தில் ஒழுகிப் புத்திரர்களை வைதிக நெறியிலே சிவாஞ்ஞையினாலே செலுத்தி, இருகன்னியர்களையும் விவாகஞ் செய்து கொடுத்து அன்பினோடு மூன்று காலமுஞ் சிவார்ச்சனை செய்து கொண்டு வந்தார்,

(உஎ) அரதத்தாசாரியர் சிவாக்கினியிலிட்டுப் பஸ்மீகரமாய பீதாம்பரத்தை அக்கினீச்வரப்பெருமான் திருமேனியிலே விளங்கச் செய்தமை வருமாறு:—ஓர் நாள் சிவலிங்கபூபதியானவர் அக்கினீசுவரப் பெருமானுக்குச் சமர்ப்பிக்கும் பொருட்டு மிக விலையேறப்பெற்ற பீதாம்பரம் ஒன்றை ஆசாரியர் சமூகத்துக்கு ஓர் பிராமணர் வாயிலாக அனுப்பினார். பிராமணர் பீதாம்பரங் கொண்டுவந்த காலம் ஆசாரியர் அக்கினியிலே ஓமஞ் செய்யுஞ் சமயமாயிருந்தது, அப்பிராமணர் வந்து அவர் பாதயுகளங்களிலே வணங்க, ஆசாரியர் அவரை எழுந்திருக்குமாறு செய்து ஆசீர்வாதஞ்செய்து அவர் இருக்குமாறு ஆசனங் கொடுத்தார். அவர் ஆசனத்திருந்து கொண்டு பீதாம்பரத்தை எடுத்து ஆசாரியர் கையிலே கொடுத்து, அரசர் இதனை அக்கினீசுரருக்கு அர்ப்பணஞ் செய்யச்சொன்னார் என்றார். அப்போது ஆசாரியர் அக்கினீசுவரப்பெருமானை அவ்வக்கினியிலே தானே சிந்தித்துக்கொண்டு அதனை அவ்வக்கினியிலே ஆகுதி செய்துவிட்டார். அவ்வக்கினியிலே இட்ட க்ஷணப்போதிலே தானே பீதாம்பரம் பஸ்மீகரமாய்ப் போய்விட்டது. அதைக்கண்ட விப்பிரர் அவரிடத்தே ஆஞ்ஞை பெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டு நீங்கி, இராசாவை அடைந்து நடந்த சமாசாரத்தை அறிவித்தார். இதைக்கேட்ட அரசன் நமது ஆசாரியர் சர்வஞ்ஞரன்றே. யாது காரணத்தினால் தகித்தாரோ என்று சிந்தித்து, அதன் உண்மை அறியும்பொருட்டு ஆசாரியரிடத்தில் வந்து, அவருடைய திருவடிகளிலே சுவர்ணபுஷ்பங்களினால் அர்ச்சித்து ஆனந்தபாஷ்பம் வாராநிற்ப வீழ்ந்து நமஸ்கரித்தார். அவ்வரசரை ஆசாரியர் தம்முடைய திருக்கரத்தினால் எடுத்து அவர் தம்மைப் பூசித்த மகிழ்வினால் அவர் க்ஷேமத்தை விசாரிக்க, பூபாலர் ஆசாரியரை நோக்கி சுவாமி தங்களுடைய தர்மாதிகளுக்கெல்லாம் பயனும், பாவங்களாகிய வறுமையைத் தகிப்பதாயுமுள்ள தங்களுடைய கருணாசாகரத்தில் அமிழ்ந்தின எனக்குத் துக்கமென்னுளது! அடியேன் கொடுத்தனுப்பிய வஸ்திரம் பரமேசுரனுக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்டதா என்றார். அதற்கு ஆசாரியர் ஆம், பரமேசுரனுக்கு அர்ப்பணஞ் செய்தே மென்று அரசருக்குச் சொல்லி, அவரைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போய்ச் சிவலிங்கப்பெருமான் மீது அவர் வஸ்திரம் தரிக்கப்பட்டிருத்தலை அரசருக்குத் தரிசிப்பித்தார். அரசரும் அவ்வஸ்திரம் தாம் கொடுத்த வஸ்திரமே அங்ஙனம் அலங்கரிக்கப்பட்டிருத்தலை அரசருக்குத் தரிசிப்பித்தார். அரசரும் தான் கொடுத்த வஸ்திரமே அங்ஙனம் அலங்கரிக்கப்பட்டதென்று கண்டு ஆச்சரியமுற்று, ஆசாரியருடைய பாதங்களிலே வீழ்ந்து வணங்கி எனது அபராதத்தை க்ஷமித்தருள வேண்டுமென்று பன்முறை பிரார்த்தித்தார். பாலிய தசையிலே தங்களுடைய மகிமையைக் கண்டிருந்தும் மயங்கிப்போனேனே என்று ஆனந்தக் கண்ணீரோடு பாராட்டினார். அப்போது ஆசாரியர் அரசனை நோக்கி நமக்கு ஆசாரியர் மீதும் சிவபிரான் மீதும் அன்பானது சமமாய் உளதாக என்று ஆசி கூறி, அவர் நெற்றியிலே விபூதி தரித்து, நீவிர் நுமது பட்டணஞ் செல்வீராக என்று சொல்லி விடை கொடுத்தார். அப்போது அரசரும் மகிழ்வினோடு குருவினுடைய பாதாரவிந்தங்களிலே அநேக இரத்தினாபரணங்களையும் வஸ்திரங்களையும் சமர்ப்பித்து நமஸ்கரித்து விடை பெற்றுத் தன் நகரமடைந்தார். ஆசாரியர் கணபதி சுப்பிரமணியரோடு அம்பிகாபதியாகிய சிவபெருமானைச் சிவபூசாதி சற்கருமங்களினாலே வழிபட்டுக் கொண்டு வருவாராயினார்.

(உஅ) சிவநாமோச்சாரணத்தினாலே கோகத்திபாபம் நீங்கினமை வருமாறு:—ஓர் பிராமணன் அக்கிராமத்திலே பசுக்களைப் பரிபாலனஞ் செய்துக்கொண்டு வருவானாயினன். ஓர் நாள் அவன் வைக்கோற் கட்டொன்றைக் கொண்டுவந்து உட்புறத்திலே அதனைப்போடும்போது, அவ்விடபக்கம் அவனுக்குத் தெரியாமையால் அவ்வைக்கோற்கட்டு அபுத்திபூருவமாக இளங்கன்றொன்றின்மீது வீழ, அந்தக் கன்று இறந்துபோயிற்று. இறந்துபோன கன்றைக் கண்டு பிராமணன் துக்கித்தான். அதை அறிந்த அக்கிரகாரத்து மற்றப் பிராமணரும் வந்து பார்த்து, அவன் கோகத்தி செய்தானென்று அவனைத் தூஷித்து, அவன் முகாவலோகனஞ் செய்தல் கூடாதென்று தவிர்த்தார்கள். தான் செய்த தீச்செயலை நோக்கி வருந்துகின்ற பிராமணனுக்குச் சனங்கள் கூறும் நிந்தா வார்த்தைகள் புண்ணிலே உப்புநீர் சொரிந்தாற்போல வருத்தின. தனது பாபநிவாரணத்தின் பொருட்டுப் பிராமணர் ஒருங்கு கூடிச் சந்தியா செபஞ் செய்யும் மடத்துக்குப்போய் அபுத்திபூருவமாகப் பசுக்கன்றைக் கொன்ற பாபத்தை அடைந்தேனே! இதற்குப் பிராயச்சித்தஞ் செய்யவேண்டுமென்று அவர்களை நமஸ்கரித்துப் பிரார்த்தித்தான். இதைக்கேட்ட பிராமணர்கள் உதாசீனமாக அவனைப்பார்த்து உன்முகத்தை நாம் பார்க்கமாட்டோம்; இவ்விடம் விட்டுப் போய்விடு என்று அவனைப்போக்கி, அவனைப்பார்த்ததோஷம் நீங்குமாறு சூரியதரிசனஞ் செய்தார்கள். தன்னைப் பிராமணர்கள் குற்சிதமாக நிந்தித்தமையால் அவன் அதிக துக்கமடைந்து பிசாசுபிடித்தவன் போலாயினான். அவன் போகும் மார்க்கத்தில் அக்கினீசுவரர் ஆலயத்தைத் தரிசித்துப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்தான்; அப்பெருமானைத் தரிசித்த விசேடத்தினாலே கலக்குண்ட அவனது மனசு சிறிது தெளிவுகொண்டு அதனால் நிர்மலபுத்தியுடையனாய், அரதத்தாசாரியரைச் சரண்புகுவேனாயின் உறுதியாக அவர் தனது பாபநிவாரணத்திற்கு ஓர்வழி காட்டுவாரென்று கொண்டு சிவபிரானிடத்திலே பாலியாவஸ்தையிலே அவர் ஞானம் பெற்றமையும், ஒழுகக்காச்சிய அயாசனத்திலிருந்து பிரசங்கித்தமையும் எவர்களாலுஞ் செய்தற்கு எளியனவல்லவே என்று நிச்சயித்து, அவருடைய கிரகத்துக்குள்ளே வந்து பிரவேசித்தான்; பிரவேசித்தபோது துவாரத்து வாசற்படி அவன் தலையிலே இடிக்க, உடனே "சிவ சிவ" என்று சொல்லியிருந்தான். "சிவ சிவ" என்று சொல்லிய சப்தம் கிரகத்தினுள்ளே இருந்த அரதத்தாசாரியசுவாமிகள் திருச்செவியில் எய்திற்று. எய்தியவுடனே, தாம்செய்த காரியத்தை விடுத்து ஆனந்தசாகரத்தில் மூழ்கி, யாரோ பெரியவர் இவ்வேளையிலே சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டு வந்தாரென்று நினைந்து வாசலிலே வந்து அவனை எதிர்கொண்டார். அவர் எழுந்தருளிவந்தபோது அப்பிராமணன் ஆசாரியருடைய திருவடிகளிலே தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கினான். அப்போது ஆசா

ரியர் அவனைத்தமது திருக்கரத்தினால் எடுத்தணைத்து ஆலிங்கனஞ் செய்தார். "சிவபக்தசிரேட்டரே! நீவிர் நமது கிரகத்துக்கு எழுந்தருளினமையால், நான் தன்னியனாயினேன். எனது கிரகமும் தன்னியமாயிற்று" என்று இங்ஙனஞ் சொல்லி, அவரை ஆசனத்தின்மீதிருத்தி உபசரித்தார். ஆசாரியர் தமக்கு இத்துணை மரியாதை செய்தமையால் மிகுதியும் ஆனந்தமடைந்து, அப்பிராமணன் பின்னர் இங்ஙனம் ஆலோசிப்பானாயினன். ஐயோ! நான் இருமுறை "சிவ சிவ" என்று சொன்னமையால் இத்தமரியாதை கிடைத்ததே! என்னிடத்தில் மற்றோர் துக்கம் நிகழ்ந்துகொண்டிருக்கின்றதே! அதனை இவரிடம் விஞ்ஞாபனஞ் செய்யாதொழியில் தனக்குப் பிராயச்சித்தம் கிடையாதென்றெண்ணி, ஆசாரிய சுவாமிகளே! அடியேன் அபுத்திபூருவமாகக் கோகத்தி செய்துவிட்டேன் உமது பாதங்களையே சரண் என்று அடைந்தேன் அடியேனைப் பாதுகாத்தருளுந்திர் என்று வேண்டி, ஆனந்தபாஷ்பஞ் சொரிய அவர் திருவடிகளிலே வீழ்ந்து நமஸ்கரித்தான். இப்படிச் சொல்லிய பிராமணனைக்காருண்ணிய சாகரராகிய ஆசாரியர் நோக்கி, "நீர் செய்த கோகத்திக்குப் பிராயச்சித்தம் முடிந்து போய்விட்டது. உமக்கு மோக்ஷமும் எய்தியது" என்றார். சுவாமீ! அடியேனுக்குப் பிராயச்சித்தம் எப்படிப்போந்தது? மோக்ஷம் எப்படி எய்திற்று? திருவாய்மலர்ந்தருளல் வேண்டும் என்றான். அப்போது அவர் நீவிர் முதற்சொல்லிய "சிவ" சப்தத்தினால் கோகத்திக்குப் பிராயச்சித்தம் எய்திற்று, இரண்டாவது "சிவ" சப்தத்தால் முத்தியும் எய்திற்று என்றார். கிருபாமூர்த்தியுடைய அமிர்தவார்த்தையைக்கேட்டு, இருநிதியடைந்த வறியோன்போல ஆனந்தமடைந்து, அந்த அமிர்தவார்த்தையைக் கேட்ட ஆராமையினாலே மீட்டும் மீட்டும் ஆசாரியசுவாமிகளை நமஸ்கரித்து ஆனந்தக்கூத்தாடினான். இதயத்திலேயுள்ள தாபம் அவனுக்குச்சாந்தியாயிற்று. அவனது முகமும் பிரசன்னமாயிற்று. இங்கு நிகழ்ந்தவனைத்தையுங் கண்டுகொண்டிருந்த பார்ப்பான் ஒருவன் அப்பிராமணனை நோக்கி, தி குரூரமாகிய கோகத்திபாபம் சிவநாமத்தினாலே நிவாரணமாகுமா? இரும்பைத்தின்று சுக்குகஷாயஞ் சாப்பிட்டால் சீர்ணமாய் விடுமா? பாபஞ்செய்பரதவராலே சிவன் துதிக்கற்பாலர். பாபிகள் அந்த நாமத்தினாலே எப்படிப் பரிசுத்தராவர்! என்றான். அதைக் கேட்ட ஆசாரியர் தம்மோடிருந்த பிராமணரை நோக்கி, சிவபிரானுடைய மாயை பிரம விஷ்ணுக்களையும் மயக்கிவிடுமே, இவனையா அது தப்பவிடும் என்றார். சிவநாமத்தினாலே ஒழிக்கத்தக்க பாபத்தைச் செய்பவர் இவ்வுலகிலே இல்லையாமாதலின், ஸ்மிருதிகளிலே இந்தச்சிவநாமம் பிராயச்சித்தமாக எடுத்துச் சொல்லப்படாது, அவ்வப்பாபங்களுக்கு இலயந்த பிராயச்சித்தங்கள் ஆங்குச் சொல்லப்பட்டுள்ளன. பாசுபதாஸ்திரத்துக்குக் கொசுகுகள் இலக்கில்லையாமாறுபோல, சிவநாமத்துக்குச் சர்வபாபசமூகங்களும் இலக்கில்லையாமென்க. இவ்விஷயத்திலே எவனுக்குச் சந்தேகமுளதோ அவனுக்கு இன்பம் இல்லையாம் என்று இங்ஙனம் சொல்லிவிட்டு, இதைக்குறித்து விவாதஞ் செய்பவனைப் பார்த்தல் பாவமாய் முடிதலின், அதுபற்றி இவ்விடத்திலே யாதும் அறியாது குதர்க்கஞ் செய்கின்ற உன்னை நோக்குதல்

எமக்கு இகழ்ச்சியாமாதலின், இவ்விடம் விட்டுப்போய்விடு
என்று சொன்னார். சிவநாமத்திலே சந்தேகங்கொண்டமை
யால், ஆசாரியரால் உடனே திரஸ்கரிக்கப்பட்டு அவன் அதிக
பாபமும் பயமும் எய்தி தன் வீடுநோக்கிப்போயினான். சேர்
கத்திபாபத்தினின்று நீங்கிய பிராமணரை நோக்கி, நீர் எப்
போதும் சிவநாமகீர்த்தனம் செய்யும் என்று சொல்லி, அவ
ரைக் கிரகத்துக்குப் போகுதிர் என்று ஆஞ்ஞாபித்தார். இங்
ஙனம் சந்தோஷத்தோடு சிவநாமகீர்த்தனஞ்செய்து கொண்
டு போரும்பொழுது, அவன் பிராமணர்களைநோக்கி, சிவனு
ருடைய கிருபையினாலே சர்வஞ்ஞாதிகுணங்களையுடைய அர
தத்தாசாரியர் எனது பாபங்களெல்லாம் ஒழிந்துபோய் விட்
டன என்று சொன்னார் என்றான். அதைக்கேட்டுப் பிராம
ணர்கள் உனக்கு மகாபாதகமானது எப்படி விமோசனமாயி
ற்று? என்று கேட்டார்கள். அதற்கு அவர் அவர்களை நோ
க்கி, நான் அவர் வாயிலில் நுழைந்தபோது, இருதாஞ் சிவ
நாமஞ் சொன்னேன், அவர் என்னை உபசரித்து,பக்தருடைய
பீடையைப் போக்கும் சிவனுடையநாமம் இருமுறை உச்சரிக்
கப்பட்டபோதே,உமது கோகத்திசந்தேகமின்றி நாசமாயிற்று.
நீரும்சம்சாரத்தினின்று முத்தராயினீர் என்று சொன்னார் என்
றான். இதைக்கேட்ட பிராமணர்கள் நன்று! நன்று!! நீ சிவ
நாமத்தை உச்சரித்தமாத்திரத்திலே மகாகொடிய பாபம்
எப்படி நீங்கும்! என்று பரிகசித்தார்கள். உடனே அவர்கள்
சொல்லிய வார்த்தையைக் கேட்ட பிராமணன் ஆசாரியர் கிர
கத்துக்கு வந்து, அவர்கள் சொல்லிய வார்த்தையை அவருக்கு
விண்ணப்பஞ் செய்தார். அதைக்கேட்ட ஆசாரியர் அவரை
நோக்கி, ஓ பிராமணனே! நீவிர் அந்தப் பிராமணர்களிடத்தி
லே மீட்டும் போய் இன்னது செய்தால் உமது பாபம் நீங்கி
னமையையுற்று அவருக்குத் திருப்தியுண்டாகுமென்று கேட்
டுவந்து எனக்குத் தெரிவியும் என்றார். அப்போது அவர்
பின்னும் அங்கு நின்றும் போய்ப் பிராமணர்களை நோக்கி, தம
து ஆசாரியர் சொன்னமொழியைச் சொல்லி, உங்கள் மனசு
திருப்தியாதற்குத் தாம் யாது செய்தல் வேண்டும் என்று கே
ட்டார். அதற்கு அவர்கள் அக்கினீசுரர் சன்னிதானத்திலு
ள்ள சிலாவிடபதேவர் நீர்கொடுக்கும் அறுகம் புல்லைச் சாப்
பிடுமாயின், உமது சிவநாமத்தால் பிராயச்சித்தம் எய்தியது
நிச்சயந்தான் என்றார்கள். அப்போது அவர் விரைந்து ஆசா
ரியரிடத்தில் வந்து சிவசாரூபமாய் விளங்கும் ஆசாரியரை
நமஸ்கரித்து, அவர்கள் சொல்லிய வார்த்தையைச் சொன்
னார். ஆசாரியர் அவரை நோக்கி, நீவிர் சிவபிரானைத் தியா
னித்துக்கொண்டு அறுகிருக்குமிடஞ்சென்று, அதனை எடுத்து
நன்றாகத் தீர்த்தங்கொண்டு கழுவிக்கொண்டுபோய்க் கொடுக்
குதிர், சந்தேகிக்கவேண்டாம் என்று ஆஞ்ஞாபிப்ப, அவர் அப்
போது போய், அறுகெடுத்து அதனை நன்றாகக் கழுவிச்சுத்தி
செய்து அப்பிராமணர்களையும் அழைத்துக்கொண்டு அக்கினீ
சுவரர் ஆலயத்துக்குப்போந்து, அக்கினீசுவரப்பெருமானை
நமஸ்கரித்து, இடபதேவருக்கு வலப்புறத்திலே அறுகம்புல்
லைப் பிடித்துக்கொண்டு நின்று, அஷ்டமூர்த்தியாகிய சிவபி
ரானை வகிப்பவரே! தயாநிதியே! சிவநாமோச்சாரணத்தினால்
என்பாபம் விமோசனமானால் இந்தப் புல்லைச்சாப்பிட்டு என்
னை எப்போதும் ரக்ஷித்தருளுக என்று பிரார்த்திப்ப, அவ்வி

ஷபதேவர் தமது நாக்கை வலப்புறமாக நீட்டி, அவர் கையிலிருந்த புல்லைக் கிரகித்துச் சாப்பிட்டார். அப்போது அங்கு நின்ற பிராமணர் அனைவரும் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து, அவ்வானந்த மேலீட்டினாலே அரதத்தாசாரியரைத் தோத்திரஞ்செய்து, அவரை நோக்கி பிராமணரே! இப்படிப்பட்ட சமாசாரம் எவ்விடத்துண்டு என்று வாழ்த்தி, உமது பாபமெல்லாம் போய்விட்டன, நீர் கிருதார்த்தராயினீர் என்றார்கள். அந்தப் பிராமணரெல்லாம் பின்னர் ஆசாரியரிடத்திலே வந்து அவரைச் சங்கரசொரூபி என்றும், அவருக்கும் சிவனுக்கும் பேதம் இல்லை என்றும் துதித்து வணங்கினார்கள். சிவபெருமான் சித்தவடிவராகிப் பாண்டியன் காணக் கல்லானைக்குக் கரும்புகொடுத்துண்பித்தாரென்று சொல்லப்படுமாறுபோல, உமது ஆஞ்ஞையினாலே இந்த இடபமும் புல்லை வாங்கி உண்டுவிட்டது. உமக்குஞ் சிவபிரானுக்கும் பேதமில்லை; உமது பெருமையை யார் புகழ்ந்து முடித்தல் கூடுமென்று துதித்தார்கள். அப்போது சுவாமிகள் அவர்களைத் தத்தம் கிரகத்துக்குப்போமாறு ஆஞ்ஞை செய்ய, அவர்கள் சிவநாமத்துக்கு இத்துணைமகிமையுளதோ என்று வியந்துவீடு சார்ந்தார்கள். அறுகூட்டிய பிராமணர் நேத்திரங்களிலே நின்று ஆனந்தபாஷ்பஞ் சொரியச் சம்சார பந்தத்தினின்றும் விமோசனராகி ஆசாரியர் சந்நிதியிலே நமஸ்காரஞ் செய்து, சுவாமீ! மகாபாதகனாகிய நான் உமது கிருபைக்குப் பாத்திரனாயினேன் என்றார். அப்போது ஆசாரியர் அவரை நோக்கி, இன்றுமுதல் சிவநாமோச்சாரணஞ் செய்து சிவபூசைமுடித்துச் சிவாலயதரிசனஞ்செய்து வருதிரென்றுகூறி அவரைக் கிரகத்துக்கு அனுப்ப, அவர் சந்தோஷத்தோடு வீடுசார்ந்து சிவத்தியானாதி செய்துகொண்டு ஆசாரியர்நெறிபற்றி ஒழுகுவாராயினார்.

(௨௯) அரதத்தாசாரியராம் ஞானியர்க்குப் போசனம் அளித்து வறுமை தீர்ந்தமை வருமாறு :—அந்தக்கஞ்சாபுரக் கிராமத்திலே வேதங்களை அத்தியயனஞ் செய்தவரும், தனமில்லாமையினால் வறுமையுற்றுப் பீடிக்கப்பட்டவருமாகிய பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் பிராமணர்கள் பாராயணஞ் செய்யும் சந்தியாமண்டபத்திலே போய், நான் தரித்திரத்தினாலே வருந்துகின்றேன் என்றார். அதற்கு அவர்கள் சாஸ்திரங்களை ஆராய்ந்து சொல்வார்களாயினார் : தானப்பிரகரணத்திலே சொல்லப்பட்ட தானங்கள் அனைத்தையும் எவன் பிராமணர்களுக்குச் செய்கின்றானோ, அவனுக்குச்சகல சம்பத்துக்களும் எய்தும், அதற்குச் சத்தியில்லையாயின் இயன்றவாறு சிறிது கொடுத்தாலும் சம்பத்து உண்டாகும் என்றார்கள். இதைக்கேட்ட பிராமணர் இந்தத் தானத்தை எவரிடத்திற்கொடுப்பதென்று ஆலோசித்து, சிவபக்தாக்கிராகிய அரதத்தாசாரியருக்குத் தானசமர்ப்பணம் பண்ணுவதினாலே புண்ணியம் அக்ஷயமாய்ப் பலிக்குமென்று நினைந்து, இந்தச் சதாசிவர் என்னும் பிராமணர் அரதத்தாசாரியருடைய கிரகம் அடைந்து, அவரை வணங்கி, தமது கிரகத்துக்குப் போசனத்துக்கு எழுந்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்தார். அதற்கு ஆசாரியர் "ஓம் வருகின்றோம்" என்று உத்தரமளித்தார். அந்தச்சதாசிவர் தமது கிரகத்துக்கு வந்து பஞ்சமகாயஞ்ஞமுதலியனசெய்து,சிவார்ச்சனைசெய்து ஆசாரியரைத் தமது கிரகத்துக்கு அழைத்து வந்து, பாதப்பிரக்ஷாளனஞ்செய்து, அந்தத்தீர்த்தத்தை உள்ளும் பூரித்துப் புறத்தும் புரோக்ஷித்து, ஆசனங்கொடுத்து, அவர்முன்னே கதலிபத்திரத்தையிட்டு, அதிலே மிளகு சாலியன்னம், பருப்பு வியஞ்சனம் சாகபாகாதிகள், அபூபாதிகள்,க்ஷீரான்னம், பாயசம், பழமுதலியன படைத்துப் போசனம் பண்ணுவித்து, போசனம் முடிந்த பின்னர் நமஸ்காரஞ்செய்து, அவருக்குத் தமது அபிப்பிராயத்தைச் சொல்வாராயினார். அரதத்தரே! சிவபாதாப்ஜசிந்தகரே! அநேக புத்திரரோடுகூடத் தரித்திரத்தினாலே வருந்துகின்றேன். இப்படிப்பட்ட என்னைக் கிருபாதிருஷ்டிசெய்து ரக்ஷிக்க என்று வேண்டினார். இங்ஙனம் பிரார்த்தித்தபோது, ஆசாரியர் ஆசிகூறி, மங்களாக்ஷதையும் விபூதியுங்கொடுத்து அனுக்கிரகம்பண்ணி, தமது கிரகஞ் சார்ந்தார்.

அவ்வேளையிலே சிவலிங்கபூபதியானவர் அப்பிராமணரை அழைத்துவரும்படி ஒரு தூதனை அனுப்ப, அப்பிராமணர் தன்னை அரசர் யாதுகாரணத்தினால் அழைக்கின்றார்! யான் யாதாயினும் அபராதஞ் செய்தேனோவென்று திகிலடைந்து கொண்டுபோனார். அரசர் இப்பிராமணர் வரவை நோக்கி, இவர் சிவபிரானேயாமென விளங்கக்கண்டு எழுந்து வணங்கி பாதபிரக்ஷாளனஞ்செய்து, அத்தீர்த்தத்தைப் புரோக்ஷித்துக்கொண்டு அர்க்கியங்கொடுத்து, சுவர்ணமுங் குங்குமமுங்கொண்டு அவர் பாதங்களிலே அர்ச்சித்து, திவ்ய வஸ்திரங்கள், பீதாம்பரங்கள், தனங்கள், தானியபூமிகண்முதலியவைகளையும் பால் கறக்குங்கோக்களையும் கொடுத்துபசரிக்க, அவர் அவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டு வீடு சார்ந்தார்.

(௩௦) அரதத்தாசாரியர் பசுவுக்கு நெல்லைச்சோற்று உண்பித்தமை வருமாறு :—சிவலிங்கபூபதியானவர் நானூறு தானிய அரிசிப்பொதிகளை இருநூறுகாளைகளின் மேலிட்டுத் தமது குருவாகிய அரதத்தாசாரியருக்கு அனுப்பினார். இதற்குள்ளே பசுபதி என்னும் பிராமணச்சிவபக்த சிரேஷ்டர் ஒருவர் அரதத்தாசாரியருடைய தாயாரிடத்திலே பதக்கு நெல்லுத்தானியங் கொடுத்திருந்தார். அவ்வம்மையார் அதனை வாங்கி வெய்யிலிலே உலருமாறிட, ஓர் காளை புறப்பட்டு வழியிலே கிடந்த அந்த நெல்லைச்சாப்பிட்டது. அப்போது சமீபத்திலிருந்த அரதத்தாசாரியர் அந்தக்காளையின் சமீபத்திலே போய். நெல்லைக்கூட்டிக்கூட்டி அந்தக்காளைக்கு உபசாரமாகக்கொடுத்து உண்பித்தார். அதைக்கண்ட தாயார் ஓடி வந்து தண்டத்தினாலே காளையைப்புடைத்து அதனை வெருட்டியோட்டினாள். அவ்வாறு ஓட்டிய தாயாரை அரதத்தாசாரியர் பார்த்து, பசியோடு வந்த காளையை நீ யேன் அடித்து ஓட்டினை என்று கேட்க, அதற்கு அவள் சிவபூஜாநிவேதனத்துக்கு ஒன்றுமில்லையே இதைக்கொண்டே அது நடத்தல் வேண்டுமாதலில், அங்ஙனஞ் செய்தேன் என்று சொல்லி, வீட்டுக்குள்ளே போய் வாளாவிருந்தாள். இந்த வேளையிலே அரசனாலே அனுப்பப்பட்ட பிராமணதூதர்கள் ஓடிவந்து ஆசாரியரை நமஸ்கரித்து, அஞ்சலியஸ்தராய் நின்று, சுவாமீ! சிவலிங்கபூபதியானவர் ஈண்டுச் சமர்ப்பிக்கும்பொருட்டு அனுப்பிய அரிசிமூட்டைகள் நானூற்றிலே

இருநூறுமூட்டைகள் நதிப்பிரவாகத்திலே போய்விட்டன. இருநூறு மூட்டைகள்தான் வந்து சேர்ந்தன என்றார்கள். அதைக் கேட்டப்பின்னர்த் தமது தாயாரை அழைத்து, நீ காளையை உண்ணவொட்டாது அடித்து ஓட்டிய தீச்செய்கையினாலன்றோ நானூறு அரிசி மூட்டைகளுள்ளே பாதி மூட்டைகள் சேதமாயின என்றார். இதைக்கேட்ட தாயார் வியாகுலமுடையராயினர்.

(கக) அரதத்தாசாரியரால் நாய் ஒன்று கைலாயம் அடைந்தமை வருமாறு:—அரதத்தாசாரியருடைய மனைவியார் ஓர்நாள் அரிசிகழுவிச் சுத்திகரிக்கும் போது நெருப்பணைந்தது கண்டு அதனை எரிக்கப் போயிருந்தார். அந்த வேளையில் நாயொன்று வந்து அந்த அரிசியைத்தின்றது. இதைக்கண்ட மனைவியார் அரிவாளையெடுத்து எறிந்துவிட, அதுபோய் நாய்மீது வீழ்ந்து, அதன் கழுத்தை வெட்டிவிட, நாய் மூர்ச்சையாய் வீழ்ந்தது. இது தெரியாது நேர்ந்ததே என்று பஞ்சாக்ஷரத்தைச் செபித்தார். அப்போது மாத்தியான்னிகஞ்செய்து வந்த அரதத்தாசாரியர் இது மூர்ச்சையாய் கிடத்தலைக்கண்டு, தமது மனைவியை இஃதென்னை என்றுகேட்க, அவர் நடந்த சமாச்சாரஞ்சொல்ல, அதனால் சிறிது வருத்தமுற்று அவரை நோக்கி நீ வாயிலை அடைத்து வையாமையினால் இது நேர்ந்தது, அதனால் இது உன்மேற் றோஷமேயன்றி இந்நாயின்மேற் குற்றமில்லையென்று கண்டித்துச்சொல்லி, அந்நாயைத் தமது மடித்தலத்திலெடுத்து வைத்து, அதற்கு உருத்திராக்ஷம் தரித்து, விபூதியை அதன் சரீரமெங்கும் பூசி, பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்தார். அப்போது கோடி சூரியப்பிரகாசமுடைய இரதமொன்று கைலாசத்திலிருந்து வர, இதைக்கண்ட நாய் தனது பூதசரீரத்தையொழித்து, தேவசரீரத்தை யெடுத்துக்கொண்டு கைலாசத்தை அடைந்தது. அதற்குச்சிவபெருமான் காணபத்தியத்தைக் கொடுத்தார். அந்த நாய் கைலாசமடைந்தமை அறிந்து அரதத்தர் மிகவும் களிப்புடையராயினர்.

(கஉ) சர்வபாபவிமோசனஞ் செய்வது ஏகாந்த ஸ்தானத்துச் சிவநாமோச்சாரணம்:—நமது கிரகத்திலே நமது தாயாரும் பாரியாரும் காளையை அடித்து வெருட்டித் தண்டத்தாற் புடைத்தும், நாயை அரிவாளால் வெட்டியும் துஷ்டகாரியமிரண்டு செய்தார்களே. இவர்களை இப்பாபத்தினின்றும் விமோசனஞ் செய்தல்வேண்டுமென்று ஏகாந்தத்திலே யிருந்து சிந்தித்தார். அப்போது அவர் ஓர் பத்திரிகையைக்கையிலெடுத்துத் தெரிந்துந் தெரியாதுஞ்செய்த மகாபாபங்களுக்கு

జ్ఞానాజ్ఞానప్రయుక్తానాం పాపానాంయుహారకమపి।

என்னும் கருத்தையுடைய இப்பாதிச் சுலோகத்தை எழுதிக் கிரகத்திலே வைத்துவிட்டு, மனுடர்களுடைய பாபங்களை ஒழிப்பதும், மகா புண்ணியம் வாய்ந்ததும், இருஷீசுவரர்களாற் சேவிக்கப்பட்டதுமாகிய காவேரிக்கு ஸ்நானத்துக்குப் போயிருந்தார். அப்போது அக்கினிசுவரப்பெருமான் அரதத்தாசாரியர் வடிவு பூண்டு அவர் வீட்டுக்கு வந்து, அப்பத்திரத்தை அவர் மனைவியார் வாயிலாகப் பெற்று ஏகாந்தத்திலேயிருந்து சிவநாமத்தை உச்சரித்தலே பிராயச்சித்தமாம் என்னுங் கருத்தையுடைய

ఏకాంతనిష్ఠప్రశ్వంభో స్వస్య దేవహితోర్తనాత్।

என்றும் மற்றைப் பாதிச்சுலோகத்தை எழுதிப் பத்திரிகையை அவர் கையிலே கொடுத்துவிட்டு அந்தர்த்தானமாயினார். அரதத்தாசாரியர் ஸ்நானஞ்செய்து வந்து சிவாராதனம்பண்ணி, பஞ்சயஞ்ஞும் வைசுவதேவம் செய்து, அதிதி பிராமணர்களுக்குப்போசனங்கொடுத்து, தாமும் புத்திரர்களோடு போசனஞ்செய்து, ஆசனத்திருந்து பத்திரிகையை எடுத்துப்பார்த்தார், பார்த்தபோது உத்தரார்த்தம் எழுதப்பட்டிருப்பதுகண்டு தமது பாரியை அழைத்து, இப்பத்திரிகையை யார் கையிலெடுத்துக் கொடுத்தனை என்றார். அதற்கு அவர் ஸ்நானஞ்செய்யப்போந்த நீவிரே மீண்டுவந்து பத்திரிகையைக்கேட்டு எழுதித்தந்துவிட்டுப் போயினீர் என்றார். சிவநாமத்தின் மகிமையறிந்த அரதத்தாசாரியர் நாம் இருதயத்திலே சிந்தித்தபிரகாரம் சங்கரரே இங்ஙனஞ் செய்தாரென்று கண்களிலேநின்று ஆனந்தபாஷ்பம் பொழியப் பரவசராயினர். பிராமணர்களோடு ஒருங்கு காவேரிதீரத்திலே புராண சிரவணஞ்செய்து கொண்டு மடத்திலிருந்தார்.

(கங) அரதத்தாசாரியர் தமது சிவபோகவிளைவு கூறினமை வருமாறு:—ஓர்நாள் அவர் வைசுவதேவஞ்செய்து தமது கிரகத்துவாயிலிலே வந்து அதிதிகள் வருகின்றார்களாவென்று பார்க்குமிடத்து, ஒரு சிவபக்தர் ஆங்கு வந்தார். அவரை அழைத்துக்கொண்டுபோய் அறுசுவையோடு போசனஞ்செய்வித்து, தாமும் போசனஞ்செய்து அவரோடு தாமும் தாம்பூலஞ்செய்துகொண்டிருக்குங்கால், அந்த அதிதிப் பிராமணர் ஆசாரியரை நோக்கி சுவாமீ! தங்களுக்கு க்ஷேத்திரமிருக்கின்றதா? தாங்கள் செய்யும் உபசாரம் ராஜோபசாரமாயிருக்கின்றதே! என்று கேட்ப, அதைக்கேட்ட ஆசாரியர் எனக்குள்ள க்ஷேத்திரம் உழப்படாததும், சலம் பாய்ச்சப்படாததும், தீர்வை கொடுக்கப்பெறாததும், இருபோகமின்றி ஒரு போகமுடையதும், குளிர்ச்சியாகிய மூளையுடைய நதிப்பிரவாகமுடையதும், எப்பொழுதும் உபாதியின்றி போகமுடையதாயுமுள்ள க்ஷேத்திரமேயாம்.

అస్యేవనక్షేత్రమకృష్టపచ్య మనఘం భాగ ద్విత్వయోపపన్నం।
ఉష్ణోపధీశాంకురమన్నదీక మద్యాత్ సదాభోగముపాధిశూన్యం॥

என்று சொல்லக்கேட்ட பிராமணர் ஆச்சரியமடைந்து பின்னரும் அநேக சிவகதைகளை ஆசாரியர் வாயிலாகக் கேட்டு, தாம் கிருதார்த்தராயினேம் என்று சந்தோஷத்தோடு விடைபெற்றுக்கொண்டு தம் வீடு சார்ந்தார்.

(கச) சிவபக்தர் பாதரக்ஷையை ஆசாரியர் தாங்கி ஆனந்தக் கூத்தாடினமை வருமாறு:—அரதத்தாசாரியர் ஓர்நாள் சிவத்தியானபராயணராய்ப் பிரமயஞ்ஞத்தின் பொருட்டுக் காவேரி தீர்த்தத்துக்குப் போயிருந்தார். அப்போது ஆங்கு வந்த சண்டாளன் சண்டாளி என்னும் இருவருள்ளே சண்டாளியானவள் காவேரியைப் பரிசிக்கும் பொருட்டுப்போக, புருஷன் அவளை நோக்கிக் காவேரிசலத்தைத் தொடாதே என்றான். அதைக்கேட்ட நாயகி ஸ்நானஞ் செய்தலினாலும் தரிசித்தலினாலும் காவேரி மகாபாபங்களையெல்லாம்போக்குகின்றதென்று சொல்லப்படுகின்றதே, பிராணநாயகரே! இங்ஙனம் நீவிர் சொல்லி என்னைத் தடுக்கவேண்டியது என்னை

என்றாள். அதற்கு அவன் அவளை நோக்கிக் காவேரிதீரத்திலே எவ்வளவு மணலுண்டோ அவ்வளவுஞ் சிவலிங்கரூபமாம். நாம் கையினாலே பரிசிக்கப்படாது என்றான். இந்த வார்த்தையைக் கேட்ட ஆசாரியர் சமீபத்திலே நின்ற அச்சண்டாளனுடைய பாதத்திலே வீழ்ந்து வணங்கி, அவன் கழற்றிவிட்ட செருப்பைத் தமது தலையிலே வைத்து, ஆனந்தக்கூத்தாடி, உலகத்திலே சிலர் ஞானத்தை அவலம்பனஞ்செய்கின்றார், வேறுசிலர் கன்மத்தை அவலம்பிக்கின்றார், நாமோ சிவபக்தருடைய பாதரக்ஷையை அவலம்பிக்கின்றோம்

జ్ఞానావలంబనః కేచిత్ కేచిత్కర్మావలంబినః।
వయంతు శివభక్తానాం పాదరక్షావలంబినః॥

என்னுங் கருத்தையுடைய சுலோகஞ் சொல்லிச் சமஸ்தப் பிராணிகளையும் சிவசொரூபமாகப்பாவித்து வருவாராயினர்.

(௬௫) நாய் உச்சிட்டத்தைச் சிவ நிர்மாலியமாகக் கொண்டு ஆசாரியர் புசித்தமை வருமாறு:—ஓர்நாள் இவருக்குப் பாகஞ் செய்யப்பட்ட சாலையினுள்ளே நாயொன்று பிரவேசித்து அன்னத்தை உண்ண, இதைக் கண்ட அரதத்தாசாரியர் சிவபிரானே நாய் ரூபமாய் வந்துண்டாரென்று நினைந்து, அதனால் அதனைச் சிவ நின்மாலியமாய்க் கொண்டு சிவத்தியானத்தோடு பந்துக்களோடு அதனைப் புசித்தார்.

(௬௬) சண்டாள ரூபராய் வந்தவருக்கு ஆசாரியர் கஞ்சி அருத்தினமை வருமாறு:—மற்றோர்நாள் அரதத்தாசாரியர் அப்பியங்க ஸ்நானஞ் செய்து விட்டுக் காவேரிக்குப் போயினார். மடிசஞ்சி பாத்திர முதலியன எடுத்துக் கொண்டு போகும்போது சிவபிரான் ஓர் விருத்த சண்டாளனாய்க் கம்பை யூன்றிக்கொண்டு தீனவார்த்தை பேசி அவரைச் சமீபித்து, நாதரே! தாகத்துக்குச் சலமில்லை! பசிஎன்னை வாட்டுகின்றது அதற்கொரு வழிகாட்டல் வேண்டுமென்று கேட்ப, உடனே அவர் தமது கிரகத்துக்கு வந்து வடித்த கஞ்சி கொண்டு வந்து அவருக்கு வார்த்துவிட, அவரும் அதைக் குடித்துப் பசிதீர்ந்தார்.

(௬௭) அக்கினீசுவரப் பெருமான் தமக்குச்சோளராஜாச் செய்த உபசாரத்தினும் அரதத்தாசாரியர் உபசாரத்தை விசேஷமாகக் கொண்டமை வருமாறு:—சோழராஜாவானவர் தக்ஷிணாயன உத்தராயண புண்ணிய காலங்களிலே சிவபிரானைத் தயிலம் அன்னம் பால் தயிர் பழமுதலிய கொண்டு மிகுதியும் மகாபிஷேகஞ் செய்து வருவாராயினர். அப்போது சிவபிரானும் அவ்வரசருக்கு அபிஷேகஞ் செய்த அன்றிரவு சொப்பனத்திலே தோன்றி அன்பனே! நீசெய்தமகாபிஷேகத்தினால் மிகவும் உவந்தே மென்று திருவாய் மலர்ந்தருளுவாராயினர். ஓர் நாள் அக்கினீசுவரப் பெருமானுக்கு மிக விசேஷமாகப் பூசிக்க ஆரம்பித்து பஞ்சாமிர்தம், பஞ்சகவ்வியம், மாம்பழம், பலாப்பழம், இளநீர், கரும்பிரசம், சர்க்கரை, தேன், சந்தனம் எலுமிச்சம்பழம், ஏலம் இலாமிச்சை சேர்ந்த சுத்தோதகம் என்பவைகளால் வாசா மகோசரமாக அபிஷேகஞ் செய்து, பீதாம்பரம் தரித்து, ஆரங்கள் பதக்கங்கள் கொண்டு அலங்கரித்து, மல்லிகை நீலோற்பலம் சம்பகமுதலிய புஷ்பங்களினால் அர்ச்சித்து, கர்ப்பூராத்திரி தூபதீபாதிகளினால் ஆராதனை பண்ணி, சிறுபருப்புப் பொங்கல், சர்க்கரைப்பொங்கல், மாஷான்னம், கடுகன்னம், தேன் அன்னம், பாயசான்னம், சுத்தான்னம், திலோதனம், பாலன்ன முதலிய அன்னபேதங்களை நாநாவித வியஞ்சனங்களோடு படைத்து, தயிர், கட்டித்தயிர், புத்துருக்கு நெய், கதலிபலம் வாழைப்பழம், பேரீச்சம்பழம், வடகம், அதிரசம், இளநீர் முதலியனகொண்டு வாக்குக் கடங்காத பிரகாரம் உபசரித்தார். நீராஞ்சனம், தாம்பூலம், சத்திரசாமரம், நவரத்தினக் கண்ணாடி, பிரதக்ஷிண நமஸ்காரம, மந்திர புஷ்பம், ஸ்தோத்திர முதலியவற்றால் உவப்பித்து, பிராமணர்களுக்கும் அந்நைவேத்தியங்கொண் டுபசரித்தார். இராத்திரியிலே பின்னருஞ் சிவபிரானை வணங்கிப் போசனஞ் செய்து நித்திரைக்குப் போயினார். நித்திரையிலே அவருக்குச் சிவபிரான் ஒன்றுஞ் சாதிக் காமை கண்டு, சுவாமி வந்திலரே! என்று விசாரமும் துக்கமு முற்று, பின்னரும் நித்திரை செய்தார். அப்போது சிவபெருமான் சிவனடியாராக ஆங்குக்கனவில்வந்து, உனக்கு முதற்றினத்திலே ஒருவர் செய்த உபசாரத்துக்கு நீ செய்த உபசாரமெல்லா மீடாகா! திருப்தியு மின்றாம். பூருவதினத்திலே சண்டாளனாய்ப் போனபோது அரதத்தாசாரியர் எனக்கு எள்ளுப் புண்ணாக்கும் கஞ்சியுங் கொடுத்தமையினால் மிகத் திருப்திகரமாயினேன் என்று திருவாய்மலர்ந்தருளினார். உடனே சோழராஜா மிக வியந்து ஸ்தோத்திரஞ் செய்து, உதயகாலத்திலே நித்திய கருமமுடித்து, அரதத்தாசாரியர் வீட்டுக்கு வந்து, அவர் பாதத்திலே வீழ்ந்துவணங்கி, சொப்பன விருத்தாந்தத்தால் தங்கள் பெருமை அறிந்தேனென்று தோத்திரம் பண்ணினார். அக்கிராமத்தாரெல்லாம் இதனைக்கேட்டு, ஆசாரியருடைய பெருமையை அறிந்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள். இதைக்கேட்ட அரதத்தாசாரியர் சிவப்பிரசாத மிங்ஙனமா என்று சொல்லிப் பேரானந்தமுற்றார்.

(௬௮) அரதத்தாசாரியருடைய அருளினால் சோழராஜா கைலாசஞ் சார்ந்தமை வருமாறு:—துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலகராய்ச் சமஸ்த தருமங்களினாலும் உலக பரிபாலனஞ் செய்து வந்த சோழமகாராசா அநேக தீர்த்தயாத்திரை செய்து, பல சிவஸ்தலங்கள் பணிந்து கொண்டு (அக்கினியின் சாபந் தீர்த்தமையால் அக்கினீசுரரெனப் பெயர்கொண்ட) அக்கினீசுவரத்துக்கு வந்து, கங்கையின் பாபத்தைப் போக்குகின்றதும் நிர்மலமாயு மிருக்கிற காவேரியிலே ஸ்நானஞ் செய்து, கற்பக விநாயகரைத் தரிசித்து, சுவாமி தரிசனஞ் செய்து ஆலயத்தை வலம்வந்தார். அப்போது பஸ்மோத் தூளனதிரிபுண்டர தாரியாய் உருத்திராக்ஷதாரணராய் நாஸாக்கிர திருஷ்டியோடு நேரியசிரத்தோடு கூடியசரீரத்தினராய், சிவதேசிகனாலே சொலிக்கின்றவராய், பதுமாசனத்திருந்து சிவத்தியான பராயணராயிருக்கும் உலகப் பிரசித்திபெற்ற அரதத்தாசாரியரைச் சோழராசாவானவர் தரிசனஞ் செய்து, சாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்து அடியேனை ரக்ஷிக்க என்றார். அப்போது ஆசாரியரும் அவரை நோக்கி தமது ராச்சியம் தனகோசம் பந்துவர்க்கமெல்லாம் க்ஷேமமாவென்று வினவ, அதற்கு அரசர் சுவாமிகள் கிருபாதிருஷ்டியினால் எல்லாம் க்ஷேமமே என்றார். இங்ஙனஞ் சொல்லி, பின்னரும் அவரை நமஸ்கரித்து, சுவாமி! இந்தச் சரீரத்தோடு

நான் கைலாசத்துக்குப் போதல் வேண்டும், அதற்கு வேண்டிய உபாயத்தை உபதேசித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்போது அரதத்தாசாரியர் நீவிர் இவ்வக்கினீசுவராலயத்துக்குச் சமீபத்திலேயுள்ள ஏழு தலங்களையும் அரையாமத்தினுள்ளே தரிசித்து வருவீரேல் உமது மனோபீஷ்டம் சித்தியாகும் என்றார். அரசர் அதற்கிசைந்து சில பரிசாரகர்களுடனே சுவேதசசத்திரத்தோடு குதிரை மேற்கொண்டு அரை யாமத்துக்குள்ளே ஏழுதலங்களையுந் தரிசித்துக் கொண்டு வந்தார். குதிரையையும் சேவகர்களையும் வெளியே நிறுத்தி, அரசர் கோயிலினுள்ளே புகுந்தபோது, ஓடிவந்த வேகத்தினால் குடைபிடித்து வந்தவன் குதிரையோடு கீழே வீழுந்து மூர்ச்சையாயினன். குதிரையும் குடைபிடித்தவனும் தேகத்தோடு ஆங்குவந்த விமானத்திலேறி ஆகாய மார்க்கமாகக் கைலாசத்துக்குப் போகும்போது, ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து வந்த அரசரோடு ஆசாரியரும் கோபுரவாயிலுக்கு வந்தி, ஆச்சரியமுற்று அவ்விமானத்தின் மீது சென்ற குதிரையையும் குடைக்காரனையும் சோழராசாவுக்குக் காண்பிக்க, அரசர் தம்மை மிகவும் நொந்து கொண்டு, ஆசாரியரை விழித்து, தமக்கு விமானம் வாராமைக்குக் காரணத்தை வினவினார். அதற்கு ஆசாரியர் நீர் எப்படிப் பிரதக்ஷிணஞ் செய்து வந்தீர் என்று கேட்டார். நான் குதிரை மீதேறிவரக் குடைக்காரன் குடைபிடித்துக் கொண்டு வரப் போய்த் தரிசனஞ் செய்து கொண்டு வந்தேன் என்றார் சிரமமடைந்து வந்தபடியால் குதிரைக்கும் குடைபிடித்தவனுக்கும் விமானங் கிடைத்தது; நீரும் பாதசாரியாய் அரை யாமத்துக்குள்ளே வருவீராகில் தேகத்தோடு கைலாயம் வாய்ப்பதாகும் என்றார். அது கேட்ட அரசன் அந்தப் பிரகாரம் ஏழு தலங்களையும் தரிசித்துக் கொண்டு அக்கினீசுவரர் ஆலயத்தை வலம் வந்து புறத்தே போந்து ஆசாரியரைத் தரிசித்து வணங்கி, சுவாமீ! நீர் சொல்லிய பிரகாரம் செய்து முற்றியது என்று சொல்லி முடித்தற்கு முன்னே, கோடிசூரியப் பிரகாசத்தோடு நாநாரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதாய், அநேகவாத்திய கோஷங்களோடு பொருந்தினதாய், ஆகாயத்தினின்றும் போந்த விமானத்திலே விநாயகர் சுப்பிரமணியர் நந்தி முதலியோர் சேவிக்க பிரம விஷ்ணுக்கள் சயசப்தம் செய்ய, உமாதேவிசமேதராய் இடபவாகன மேற்கொண்ட சிவபெருமானைத் தரிசித்து, அரதத்தாசாரியரும் சோழராசாவும் அங்குள்ளாரும் மகிழ்ந்து துதிக்க, அரசரை மாத்திரம் சுவாமி! விமானத்தி லெடுத்து வைத்துக் கொண்டு போம்போது, அரசர் ஆசாரியரை நமஸ்கரித்து, கையிலாயத்துக்குப் போய்வருகின்றேன் என்று சொல்லி கைலாயம் அடைந்தார்.

(௩௯) அரதத்தாச்சாரியர் சிவானந்திகள் எனப்பட்டமை வருமாறு :—மற்றோர் நாள் சிவபிரான் ஓர் பிராமணவடிவம் பூண்டு, அரதத்தாசாரியார் வீட்டுக்குவந்து, ஓ சாத்திரிகளே! என்று உச்சசுவரத்தோடு அழைத்தபோது, ஆசாரியர் நாம் கவியுமல்லேம், சாஸ்திரியுமல்லேம், பௌராணிகநாடக சமர்த்தருமல்லேம்; பின்னைச் சிவநாமவாச்சியராகிய சிவபிதானந்தத்திலே அமிழ்ந்தினமை பற்றிக் சிவானந்திகளென்று அழைக்கற்பாலேம் என்னும் கருத்தினால்

నవయంకవయోనశాస్త్రిణో వా నచపౌరాణిక నాటకప్రవీణాః। శివ
నామనిదేవతావిశేషే పరమానందపయోనిధౌ నిమగ్నాః॥

என்று உத்தரமளித்தார்.

(௪0) ஓர்விலைமாதுக்குச் சிவார்ப்பணமாக ஆசாரியர் சுவர்ணாபரணம் அளித்தமை வருமாறு:—அந்தக்கஞ்சாபுரத்திலே மற்றோர தேசத்துப்பிராமணன் போந்து விலைமாதொருத்தியின் வீட்டினுள்ளே புகுந்து, தான் அவளைக்கூட நினைந்து, தான் அரதத்தாசாரியர் புத்திரன் என்றும், தான் அவளுக்குப்பொருள் உதவுவேன் என்றும் உரைக்க, அதனைக் கேட்ட அவ்விலைமாது அவனைத்தன் செயற்கையினால் பிரீதி செய்தாள். இப்படி நெடுநாட்கலந்திருந்துவிட்டு, அப்பிராமணன் அவளுக்கு யாதுங்கொடாது தன் கிராமத்துக்குப் போய்விட்டான். அவள் பின்னர் அரதத்தாசாரியர் வீட்டுக்கு வந்து, சுவாமீ! தங்கள் புத்திரர் நெடுநாளாக என்னோடு கலந்திருந்துவிட்டு, யாதுங்கொடாது போய்விட்டார் என்றாள், ஆசாரியர் சிவபிரானே அவளோடிருந்துபோயினார் என்றுகொண்டு, அவளுக்குத் தம்மிடத்துள்ள ஆயிரம் கழஞ்சுள்ள சுவர்ணாபரணத்தை அவளுக்குக்கொடுப்ப, அவளும் *மத்தியாவேசத்தோடு அதனை வாங்கிக்கொண்டு போயினள். இவருடைய எட்டுப்பிள்ளைகளும் சன்மார்க்க நெறிபூண்டவர்களென்று முன்னரே அறிந்த அக்கிராமத்தார் யாவரும் அவளிடத்திலே போய், "நீ ஆசாரியரிடத்தில் அவ்வாபரணத்தைக் கொண்டுபோய்க்கொடுத்துவிடு என்று கண்டித்தார்கள். அதை அவள் அறிந்து பயந்து, ஆசாரியரிடத்திலே வந்து பழயபடி அதனை வைத்து மீளவெடுத்துக்கொள்ளும் வண்ணம் பிரார்த்தித்தாள். அப்போது ஆசாரியர் ஏ மகளே! நான் உனக்குக் கொடுக்கும்போது சிவார்ப்பணமென்றே கொடுத்தேன். நீயே கொண்டுபோவாயாக நான் மீண்டு எடுக்கமாட்டேன் என்றார். அதனைக்கேட்டபோது, அவளுக்குச் சித்தசுத்தி பிறந்து, அவள் அவ்வாயிரம களஞ்சு சுவர்ணாபரணத்தையும் சிவார்ப்பணம்பண்ணி கோயில் மண்டபம் விமானமுதலியவைகளுக்குச் செலவுசெய்தாள்.

(௪௧) அரதத்தாசாரியர் தம்புதல்வியருக்குச் சிவத்தியானபலத்தினால் ஆபரணங்கள் அருளினமை வருமாறு :—ஓர்காலத்திலே அக்கினீசுவரர் ஆலயத்திலே சர்வசனங்களுக்குங் காட்சிகொடுக்கும்பொருட்டு இரதோற்சவம் நிகழ்ந்தது. சிவபிரான் இரதாரூடராய் எழுந்தருளினார். அப்போது பேரி முதலிய வாத்தியங்களும் முழங்க, நாநாவித கொடிகள் சலிப்ப, அநேகசனங்கள் குழும சுகந்ததூபம் நறுமணங்கால, வீதிகளிலே புரோக்ஷிக்கப்பட்ட சந்தனக்குழம்பு விளங்க, மாலைகளினாலே தெருக்களெல்லாம் பிரகாசிப்ப, தோரணங்கள் தூங்க, ஆச்சிரமிகளெல்லாம் நெருங்க, அம்மையாரும் சுப்பிரமணியரும் விநாயகரும் சண்டேசுரரும் மகாதேவரும் தத்தம் இரதங்களிலே இவர்ந்தருளினார்கள். கஞ்சாசுரத்தி லுள்ள பெண்கள் அனைவரும் உற்சவதரிசனத்தின்பொருட்டு நாநாவித ஆபரணங்கள் பூண்டு அலங்காரஞ்செய்துகொண்டு புறப்பட்டார்கள். அப்போது அரதத்தாசாரியருடைய புத்

* மத்திபம்=கள்ளு.

திரிகள் இருவர் உற்சவத்துக்குப் புறப்படுதற்கு மற்றைப் பெண்களுக்குப்போல ஆபரணம் தங்களுக்கு இன்மையால் பிதாவை அடைந்து எங்களுக்குத்தரித்தற்கு ஆபரணமின்மையால் நீவிர் ஆபரணங் கொடுத்தருளல் வேண்டுமென்று வேண்டினார்கள். துக்கத்தோடு இவ்வாறு ஆபரணம் வேண்டுமென்று பிரார்த்தித்தகுழந்தைகள் இருவரையும் ஆசாரியர் நோக்கி, நீங்கள் உங்கள் அவயவங்களிலே பூசும் விபூதியே பூஷணம், நீங்கள் சிரவணஞ்செய்யும் சிவநாமமே காதுக்கு அலங்காரம், நீவிர் எப்பொழுதும் செய்யும் சிவலிங்கார்ச்சனையே கரபூஷணம், நீங்கள் செய்யும் சிவலிங்கபிரதக்ஷிண நமஸ்காரமே பாதபூஷணமுமாம். ஆதலினால் நீங்களேன் கவலைப்படுகின்றீர்கள் என்றார். அவர்கள் பின்னரும் பிதாவே, தாங்கள் சொல்லிய ஆபரணங்கள் உள்ளபடியே இருக்கின்றன. இருந்தும் எங்களையொத்ததோழியர்கள் மிகுதியும் நிந்திக்கின்றார்கள். ஆதலினால் லௌகிகபூஷணமுங்கொடுக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அது கேட்ட பிதாவானவர் சிறிது வருத்தத்தோடு அவர்களை நோக்கி, முற்சென்னத்திலே இவை வேணுமென்று உபாசனை செய்தவர்களுக்கன்றி மற்றவர்களுக்கெப்படி வாய்க்குமென்று சொல்லக்கேட்ட புதல்விகள் பிதாவே உமக்கு அவை ஏன் கிட்டா; அவசியகம் கொடுத்தருளல் வேண்டுமென்று கேட்டார்கள் அப்போது அரதத்தாசாரியர் சிறிதுபோது தியானபராயணராயிக்க, எருதொன்று அவ்வழியே செல்லக்கண்டு அவர்களை நோக்கி, அந்த எருது வைத்துக்கொண்டுபோன பாதக்குழம்பினிடத்திலே வேண்டிய பூஷணங்களெல்லாம் அகப்படும். அவ்விடத்தே போய் எடுத்துக்கொள்ளுங்கள் என்றார். குழந்தைகள் இருவரும் விரைந்து போய் அது கால்வைத்துப்போன குளம்பிடங்கடோறும் விசித்திரமாகிய ஆபரணங்கள் இருக்கக்கண்டு அவற்றை எடுத்துக்கொண்டு தங்கள் பிதாவுக்குச்சமீபத்திலே வந்து, அவர் எவை எவை என்று கேட்க அவர்கள் மகிழ்ச்சியோடு பாதமோதிரம், பாதகடகம், சிறுகிங்கிணிமாலை, மேகலை, கடிசூத்திரம், கடிபந்தனம், ஆரம், பவளமாலை, அங்கதம், கங்கணம், பதக்கபேதம், பவளவலயம் விரல்மோதிரம், பாளிகை, சுவஸ்திகம், காதோலை, திலகாகாரமாகியபொட்டு, தலையாபரணமுதலாயின அகப்பட்டன என்று சொல்லிப்போய், அந்தத்தானங்களிலே இவ்வாபரணங்களினால் தங்களுக்கு அலங்காரஞ்செய்யவேணுமென்று தம் தாயாரை வேண்டினார்கள் தாயார் அவ்வாறு அலங்காரஞ் செய்து முடிந்தபின்னர். அவர்களுக்கு அணிந்து எஞ்சிய ஆபரணங்களை அக்கினீசுவரர் கற்பகநாயகி இருவருக்கும் அலங்கரிப்பிக்கும் பொருட்டுப் பழம் கர்ப்பூரம் தாம்பூலமுதலியகொண்டு சகிகளோடு கூட ஆலயத்துக்குப்போய், நிவேதிப்பனவற்றை நிவேதித்து, ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து, ஆசாரியருடைய மகிமையையும் சிவபிரானுடைய திருவருளையும் நினைந்து சந்தோஷமுடையராயினர். ஊரிலுள்ள சனங்கள் இவ்வாபரணங்களையெல்லாங்கண்டு யாவும்அறிந்து அரதத்தாசாரியருடைய மகிமையே மகிமையாம் என்று வாழ்த்தினார்கள்.

(சஅ). அரதத்தாசாரியர் கோபாலவேஷ கோவடு நாதருக்குப் பாகற்குழம்பும் அன்னமும் உதவினமை வருமாறு:— ஓர்நாள் இராத்திரிப் போதிலே கோவடு எனப்படும் திருவாவடுதுறையாலயத்திலே அரதத்தாசாரியர் சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு வழியே போம்போது, மழையும் காற்றும் உண்டாகி இருள் மிகுந்த போது, சிவபிரான் இவருக்குச் சகாயமாகக் கோபால வேஷம் தரித்துக் கொண்டு அவருடன் சென்றார். ஆசாரியர் அவரை நோக்கி நீ ஆர் என்றார். அவர் நான் கோவடு க்ஷேத்திரத்திலுள்ள கோக்களை மேய்க்கும் இடையன், உமக்குச் சகாயஞ் செய்யப் போந்தேன் என்றார். இவ்வார்த்தை அவருக்கு இனிமை பயந்தமையால், அங்ஙனமாயின் நீ வருவாயாக என்று கூட்டிக்கொண்டு வந்து, பின்னர்த் தமது கிரகத்திலே ஆகாரஞ் செய்துபோவாயோவென அவர் நீர் என் கையிலே ஆகாரத்தைக் கொடுத்துவிடின் நான் என் வீட்டுக்குக் கொணடுபோய்ச் சாப்பிடுகின்றேன் என்றார். அதற்கு ஆசாரியர் இயைந்து பாகற்காய்க் குழம்பும் அன்னமுங் கொடுப்ப அவர் அதை வாங்கிக்கொண்டு தமது வீடாகிய ஆலயத்தினுள்ளே பிரவேசித்து, இலிங்கத்துக்கும் இடபதேவருக்கும் இடையேயுள்ள அர்த்தமண்டபத்திலே அவற்றைச் சிதறிவிட்டு லிங்கத்திலே அந்தர்த்தானமாயினார். காலையிலே அர்ச்சகர்கள் வந்து சிந்துண்டுகிடந்த கறியையும் அன்னத்தையும் பார்த்து, இஃதென்னை! என்று ஆச்சரியமுற்று நின்றார்கள். பின்னர்க் கோயிலதிகாரியானவர் வந்து பார்த்து, பரிசாரக வேலைக்காரரையெல்லாம் தண்டிக்கத் தொடங்கினார். அவர்கள் நாங்கள் இந்தக் காரியம் செய்தேம் இல்லை என்றும், நாங்கள் வீட்டுக்குப்போம்போது உள்ளே எங்கும் நன்றாகப் பரிசோதித்து, திருக்காப்பிட்டுக் கொண்டு போனேம் என்றும் இதுசெய்தார் மற்றியாருமில்லை என்றும் சொல்லித் தலை குனிந்து சும்மாவிருந்தார்கள். அப்போது முதற்றினத்து இராத்திரியிலே அரதத்தாசாரியர் தரிசனத்துக்காக இங்கே வந்திருந்தார். போகும்போது வழியிலே மழை பெய்யத் தொடங்கிற்று; ஆதலினால் அவருக்குச் சகாயமாகக் கோவடுநாதர் கோபால வேஷத்தோடு போயினார். அவர் தமது கிரகஞ் சார்ந்தபோது ஆசாரியர் அவரைப் போசனத்தின் பொருட்டுத் தடுப்ப, அவர் அதற்கு உடன்படாமைகண்டு பாகற்காய்க் குழம்பும் அன்னமுங் கொடுப்ப பாலசந்திர சிகாமணியாகிய கோவடு நாதப்பெருமான் இடைய ரூபத்தோடு அவற்றை வாங்கிக் கொண்டு வந்து, இந்தப்பிரகாரஞ் செய்து விளையாடினார் என்று ஓர் அசரீரி வாக்கு ஆகாயத்திலே எழுந்தது. அதைக் கேட்ட யாவரும் ஆச்சரியமுற்று அரதத்தாசாரியருக்குச் சிவபெருமான் இத்துணைக் கிருபை செய்தாரோ என்று யாவரும் புகழ்ந்தார்கள். இங்ஙனம் அரதத்தாசாரியர் நெடுங்காலம் அதிதி பூசைமுதலிய அநேக தருமங்களைச்செய்து கொண்டுவந்தார். வயசு முதிர்வுறுந் தமது தள்ளாமைப் பருவத்திலே ஏழுதலத்துக்குந் தினந்தோறுஞ் செல்ல மாட்டாதவராய், தமது ஆன்மார்த்த பூசையிலே ஏழு தலத்துச் சிவலிங்கங்களையும் ஸ்தாபித்து பூசித்து தரிசித்து மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு ஒருமையோடும் வழிபட்டுவந்தார்.

(சகூ) அரதத்தாசாரியர் திரியம்பகர் என்னும் பிராமணருடைய பாபத்தை நிவாரணஞ் செய்வித்தமை வருமாறு:— திரியம்பகர் என்னும் பிராமணர் ஒருவர் யதீசுவரர் ஒருவரை

அடைந்து சேவை செய்து, அநேக வித்தியாப்பியாசம் பண்ணினார். ஓர்காலத்திலே தமதுகுரு ஏகாந்தத்திலிருந்தபோது, எல்லா வித்தைகளும் அப்பியசித்தேன். பஞ்சாக்ஷரோபதேசமும் பெற்றேன். இவற்றிற்கு மேலறியற்பாலது யாது? என்று தமது குருவைக் கேட்ப, அவர் யோசித்து உலகத்திலே சுருதிஸ்மிருதிகளுள்ளும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின் மேலானதும் ஒன்றுமில்லை. ஒப்பானதும் ஒன்றுமில்லை. இந்த இரகசியம் இவனுக்குத் தெரியவில்லையே! இவன் சந்தேக மில்லாமல் மூடனென்று நினைந்து சில இரகசியம் இன்னும் உண்டு காலாந்தரத்திலே சொல்லுகின்றேன் என்றார். இது நோக்கிக் காலம் பார்த்துக் கொண்டிருந்தான் இப்படி வெகு காலமாயபின்னர், ஓர்நாள் சீஷன் போசனத்தின், பொருட்டு வெளியே போயிருப்ப, யதீசுரருக்குத் தேகவியோக காலம் கிட்டிவிட, சீஷனுக்கு யாதோ சொல்லு வேண்டியிருந்த தென்பதை அவர் யோசித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினும் மேலாய் அறியற்பாலது மற்றொன்றில்லை என்று நிலத்தில் எழுதிச் சரீரத்தியாகம் பண்ணினார். அப்போது ஓர் தொட்டிச்சி வந்து அதனை ஓலையில் எழுதிக் காதோலையாயிட்டுக் கொண்டு வீடு சார்ந்தாள். சீஷன் வந்து பார்த்து, தனது ஆசாரியர் இறந்து கிடத்தலைக் கண்டு துக்கத்தோடிருப்ப, அங்கிருந்தவர்கள் உமது ஆசாரியர் எழுதிவைத்த இரகசியத்தை ஓர் தொட்டிச்சி எழுதிக் கொண்டு போய்விட்டாள் என்று சொல்ல, சீஷன் அவள் வீடு தேடிப்போய், அவளைப் பலவகையாலும் உபசரித்து காதோலையைத் தரல்வேண்டும் என்று கேட்டான், நீ என்னோடிருந்து சாப்பிட்டு என்னோடு கூட உண்பையாயின், நான் காதோலையைத் தருவேன் என்றாள். அதற்கு அவன் உடன்பட்டு, அவளுக்கு வேண்டிய தொழில்களெல்லாஞ் செய்து, அவளைப் பிரீதி செய்து காதோலையை வாங்கிக் கொண்டான். அவன் தன் குரு எழுதிய பத்திரிகையைப்பார்த்து, அதிலே எழுதப்பட்ட அக்ஷரங்களைக் கண்டு மகிழ்ந்து, பின்னரும் அவளை இதுகாறுங் கூடியிருந்த தோஷமற யாதுபிராயச்சித்தமாமோ என்று நினைந்து தைப்பூசத்திலே திருவிடைமருதூருக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, மத்தியார்ச்சுனரோடு காவேரிக்குப் போய் ஸ்நானஞ் செய்து, மகாலிங்க மூர்த்திதரிசனஞ் செய்து கொண்டு போகும்போது, அரதத்தாசாரியர் கிரகத்துக்கு வந்து அவரை நோக்கி சுவாமி! எனக்கு அன்னங் கொடுத்தருளல் வேண்டு மென்று பிரார்த்திப்ப, ஆசாரியர் அவரைத் தமது ஒரே பந்தியிலிருத்திப் போசனங் கொடுத்தார். போசன முடிந்தபின் அவர் வெளியிலே வர, அதைக் கண்டு கிராமத்தார் இவன் தொட்டிச்சி சகவாசம் பண்ணினவனென்று அரதத்தாசாரியருக்குப் பிரஸ்தாபித்தார்கள், பின்னர் அவர்கள் திரியம்பகரை நோக்கி நீ எந்தப் பந்தியிலிருந்து சாப்பிட்டாயென்று வினவ, அவர் உள்ளவாறு சொல்ல, அதைக் கேட்டு அவர்கள் ஆசாரியரிடத்திலே போய், மகாபாதகனாகிய இவனோடு நீர் சாப்பிட்டது நிந்தையாமன்றோ என்றார்கள்; அப்போது அவர் அவர்களை நோக்கி, தைப்பூசத்திலே மகாகாவேரியிலே ஸ்நானம் பண்ணி மகாலிங்கமூர்த்தி தரிசனம் பண்ணி யிருக்கின்றார். ஆதலினால் அவர் மகாபாதகங்களினின்று நீங்கினார். என்றார். கோடி சென்மங்களிலே செய்த பாபம் சிவதரிசனத்தினாலே அக்கினியிலிட்ட பஞ்சுபோலநசித்துப்போம் என்றார். இந்த வாக்கியத்தைக் கேட்டு அவர்கள் பின்னுஞ் சொல்வாராயினார். அவளோ தாசி, அகோராத்திரம் அவன் அவளோடு ஆகாரமுதலிய கொண்டமையால், அவை யெல்லாம் கேவலம் காவேரி ஸ்நானத்தால் எவ்வாறு நீங்கும் என்றார்கள். அப்போது அரதத்தாசாரியர் அந்தப் பிராமணரைத் திரியம்பகரே என்று அழைத்து, நீர் இவர்களோடு மத்தியார்ச்சுனர் சந்நிதானத்துக்குப் போய், நான் புஷ்யநக்ஷத்திரத்திலே காவேரியிலே ஸ்நானஞ் செய்து உம்மைத் தரிசனம் பண்ணினமையால் என் பாபம் போய்விட்டதோ சுவாமி! சொல்லும் என்று கேளும் என்றார். இங்ஙனம் அரதத்தாசாரியர் அறிவுறுத்தக் கேட்ட திரியம்பகர் அப்பிராமணர்களோடு மத்தியார்ச்சுனத்துக்குப் போயிருந்த சமயத்திலே, ஆலயம் சிவனடியாரால் நிறைந்திருந்தது. திரியம்பகர் சுவாமியைப் பார்த்து, தேவாதி தேவரே, தயாசமுத்திரரே, புஷ்ய நக்ஷத்திரத்திலே சாக்ஷாத் காவேரி ஸ்நானத்தினாலும், உமது தரிசனத்தினாலும் அவ்வேசியோடு யான் சங்கமஞ் செய்துண்டு வாழ்ந்த தோஷம் போய்விட்டதா சுவாமீ! அருளுதல் வேண்டும் என்று பிரார்த்தித்தார். அது கேட்ட பக்தரக்ஷகராகிய மருதப் பெருமான் அவரை நோக்கி, ஏ குழந்தாய்! நீ செய்த அந்தப் பாபம் தீர்ந்து போய்விட்டது என்றார். சரணாகதரக்ஷகராகிய சிவனுடைய வாக்கியத்தை அவர்கள் கேட்டு இது எதிரொலி வாக்கியமேயன்றி, ஈசுவரனுடைய வாக்கிய மன்று என்று மறுத்தார்கள். இதைக் கேட்டுத் திரியம்பகர் கண்ணீர் வார அழுது, மீட்டும் ஆசாரியரிடம் வந்து இவர்கள் அதனை ஒப்புக் கொண்டிலர் என்று விண்ணப்பஞ் செய்தார். அப்போது அரதத்தாசாரியர் அவரோடு தாமுங் கூட ஆலயத்துக்குப் புறப்பட்டுப் போய், அந்தச் சபையிலே சுவாமியைப் பார்த்துப் பின்னுங் கேளும் என்றார். அவரும் அப்படியே முன்போல வணங்கி வேண்டினார். சுவாமியும் மகாமேக கோஷம்போல, மகாலிங்க தரிசனத்தினாலும் காவேரிஸ்நானத்தினாலும் உன்பாபம் போனது போனது என்று அசரீரி வாக்கினால் அருளினார். உடனே எல்லாரும் ஆச்சரியப்பட்டு அரதத்தாசாரியரைப் புகழ்ந்து கொண்டு தத்தம் வீடு சார்ந்தார்.

(சச) அரதத்தாசாரியர் தமது முடமருமகனை ஸ்ரீகாசியை அடையுமாறு செய்தமை வருமாறு:—அரதத்தாசாரியருடைய சகோதரியாருக்கு ஓர் முடப்புதல்வர் அவதரித்திருந்தார். இவர் ஓர்நாள் தமது மாமனுருடைய பாதங்களிலே வீழ்ந்து வணங்கி சுவாமி உமது அருளினாலே காசி மகாக்ஷேத்திரத்து மணிகர்ணிகையிலே ஸ்நானஞ்செய்ய விரும்புகின்றேன் எனறு காதலோடு வேண்ட, ஆசாரியர் கிராமத்திலேயுள்ள சரசிலே ஸ்நானஞ்செய்யுமாறு ஆஞ்ஞாபித்தார். மேன்மை தங்கிய புத்தியையுடைய இவர் உடனே அதில் ஸ்நானஞ்செய்ய, அவர் மணிகர்ணிகையிலே தோன்றி, பின்னர் கங்கா ஸ்நானஞ்செய்து, விசுவேசுரர் தரிசனஞ்செய்து கொண்டிருந்தார். இங்ஙனம் சில வருஷம் கழித்தபின், ஓர் நாள் விசுவேசுவரர் ஆலயத்துக்குச்சமீபத்திலே ஒருவர் தமது பாரியாரோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார். அப்போது அவர் இவரை நோக்கி ஓ பிராமணோத்தமரே!

நுண்ணறிவுடையவரே! நுமது கிராமத்திலே காசிபகோத்திரரும் நல்லோரும் வைதிகமார்க்கருமாகிய அரதத்தர் என்பவர் ஒருவர் இருக்கின்றாரா? என்று கேட்டார். அதற்கு அவர் நான் வசிக்கும் கஞ்சாபுரத்திலே அரதத்தர் எனப்பெயரிய என் மாதுலர் வசிக்கின்றார். அவர் சைவேந்திரர் க்ஷேமத்தோடிருக்கின்றார் என்றார். அப்போது அவர் இவரது வார்த்தையைக் கேட்டுச் சந்தோஷமுற்று, காசியிலே ஒருவர் அவரது க்ஷேமம் விசாரித்தார் என்று சொல்லுதிர் என்றார். அவரோடு அங்கிருந்த பாரியும் புன்முறுவலோடு நானும் விசாரித்தேன் என்று சொல்லுதிர் என்றார். அதைக்கேட்ட மருகனார் நான் தாங்கள் இருவருங்கேட்ட வசனம் சொல்வேன் என்று சொல்லி, நான் இனி எப்படி அங்கே போகும் வன்மையுடையவனாவேன் என்றார். அதற்கு அவர் நீர் எப்படி இங்கு வந்தீரென்று கேட்க, அவர் என் கிராமத்திலே பிரமதீர்த்தம் என்று ஒன்றுளது. அதிலே ஸ்நானஞ் செய்யுமாறு என் மாமனார் ஆஞ்ஞாபிக்க, அப்படியே ஸ்நானஞ்செய்து இங்கே மணிகர்ணிகையிலே வந்து தோன்றினேன். இனி அவ்வாறு போகச் சக்தியுடையேனல்லேன்? என்றார். அதைக்கேட்ட பெரியவர் நீர் இப்பொழுதும் போய் மணிகர்ணிகையிலே ஸ்நானஞ்செய்யும் என்றார். அவர் அவ்வாறு மணிகர்ணிகையிலே ஸ்நானஞ்செய்து, உடனே பிரமதீர்த்தத்திலே தோன்றி, மகிழ்ச்சியோடும் மாமனாரை அடைந்து வணங்கி சுவாமீ உமது கிருபையினால் கங்காஸ்நானஞ்செய்து போந்தேன் என, ஆசாரியர் அவரை நோக்கி காசியிலே யாராயினும் என்னை அறிந்தார் உளரோ? என்று கேட்ப, அதற்கு மருகனார் ஆம், காசியிலே விடரூபத்தோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்த தம்பதிகள் தங்கள் க்ஷேமத்தை விசாரித்தார்கள் விசாரித்தார்சள் என்றார். அதைக்கேட்ட அரதத்தர் அவர்கள் கேட்டார்களா! கேட்டார்களா! என்று சொல்லிக்கண்ணீர்வார ஆனந்தபரவசராய் நிருத்தனஞ் செய்தார். இதைச்கேட்ட கிராமத்தாரெல்லாம் வந்து ஒருங்குகூடிச் சிவாஞ்ஞையினாலே மணிகர்ணிகையிலே ஸ்நானஞ்செய்து, பிரமதீர்த்தத்திலே வந்து தோன்றினமையால் இத்தீர்த்தத்துக்கும் மணிகர்ணிகைஎன்று பெயர் வழங்குக என்றும், இதிலே ஸ்நானஞ் செய்தவர்களுடைய பாபமெல்லாம் ஒழியும் எனறும் ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அரதத்தாசாரியர் முதலிய யாவரும் அற்புதமாகிய இவ்வசரீரி வாக்கைக்கேட்டு, இது அடியார்கள் பொருட்டுச்செய்யப்பட்ட சிவலீலை என்று அறிந்துகொண்டார்கள். அரதத்தாசாரியரிடத்திலிருந்து அவர் மருகனார் யாவும் அறிந்து சர்வஞ்ஞராயினார். இவர் தமது மாமனார் செய்த சுருதிசூக்திமாலைக்கு வியாக்கியானஞ்* செய்து மிகக்கீர்த்திபடைத்தார். சனங்கள் இவருடைய பக்தி விசேஷத்தை நோக்கி இவருக்கும் அரதத்தரென்று பெயர்கொடுத்தார்கள்.

(௪௫) அரதத்தாசாரியர் கள்ளன் ஒருவனைத் தப்புவித்தமை வருமாறு:—இப்படியிருக்குங் காலத்தில் ஓர்நாள் திருடன் ஒருவன் இராசாவின் கிரகத்திலே திருடிக்கொண்டு புறப்பட்டுப்போக, காவற்காரர்கள் அவனைத் தொடர்ந்து வர, அது கண்ட கள்வன் ஓடிவந்து அரதத்தாசாரியரை நமஸ்கரித்து, சுவாமீ! காவற்காரர்கள் தொடர்ந்து வருகின்றார்கள். என்னைக்கண்டால் கொன்றுபோடுவார்கள், காத்துக்கொள்ளல் வேண்டுமென்று வேண்ட, உடனே அவர் அந்தத் திருடனுக்கு விபூதிதாரணஞ் செய்து யஞ்ஞோபவீததாரணஞ் செய்து, தாலபாத்திரத்திலே போசனங்கொடுத்து உண்பித்தார். உண்டுகொண்டிருக்கும்போது, முன்னே ஓடி வந்த கள்வன் எங்கே என்று காவற்காரர்கள் அரதத்தாசாரியரைக்கேட்டார்கள். அதற்கு அவர் நமது பிள்ளை உள்ளே உண்டு கொண்டிருக்கின்றான், ஐயமுளதேல் உள்ளே பிரவேசித்துப்பார்த்துக்கொள்க என்றார். அவர்கள் எங்குஞ் சுற்றிப்பார்த்தும் மற்றொருவரையுங்காணாது தம்வழியே போய்விட்டார்கள்.

(௪௬) அரதத்தாசாரியர் கைலாயம் அடைந்தமை வருமாறு:—அரதத்தாசாரியர் சர்வகர்த்தாவாகிய சிவபெருமானையே பூரணபாவனை தியானஞ் செய்து கொண்டிருந்தார். அப்போது சிவபெருமான் அவருக்குச் சாயுச்சியங் கொடுக்க வேண்டி, தாம் பிருங்கி நந்தி மகாகாளர் பிரமா விஷ்ணு முதலாயினோரோடு வாத்திய கோஷங்கள் முழங்க, அட்டதிக்குகளெல்லாம் அளவிலாப் பிரகாசம் விளங்க, சடையிலே அமைந்த கங்கைப் பிரவாகத்திலே சந்திரன் விளங்க, காதிலே சர்ப்பங்கள் இரத்தின குண்டலங்களாய் விளங்க, தமது மடித்தலத்திலே உமாதேவியார் அமர, கபோலங்களிலே தமது குண்டலங்கள் பிரிதிவிம்பிப்ப, பவளக்கொடியின் மத்தியில் விளங்கும் முத்துக்கள் போல உதடுகளின் மத்தியிலே தந்தவரிசைகள் பிரகாசிப்ப, மந்தகாசத்தினாலே முகம் சோபிக்க, மான் மழு வரதம் அபயம் விளங்க, உருத்திராக்ஷமாலாதாரணராய், இடபாரூடராய், இடபத்தின ஏரியிலே சர்ப்பகங்கணமணிந்த கரம் அமைய, உருகும் நெய்க்கட்டி போல சச்சிதானந்த சொரூபியாகிய சிவபிரான் அரதத்தாசாரியருக்குச் சாயுச்சியம் கொடுக்குமாறு குருவடிவத்தோடு எழுந்தருளினார். இவ்வாறு தமக்கு முன் எழுந்தருளி மோக்ஷங் கொடுக்க விரும்பும் சுவாமியை ஆசாரியர் நோக்கி அவரை ஆராமையினாலே மீட்டும் மீட்டும் நமஸ்கரித்துத் தோத்திரம் பண்ணினார். பண்ணவே, ஆசாரியர் மீது சிவபிரான் பிரீதி செய்து, ஏ அரதத்த பக்த சிரோமணியே! உனது திரிகாலபூசை செபம் ஸ்தோத்திரம் தியானம் என்பனவற்றால் நம்மை வழிபட்டனை; உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் என்றார். அதற்கு ஆசாரியர் உமாசமேதராகிய கைலாசபதியைநோக்கி, சுவாமீ! நீர் இப்போது அடியேனுக்குப் பிரசன்னராய் வரங்கொடுப்பது மெய்யேயானால் எனக்கு இருபுறத்துமுள்ள பதினான்கு வீட்டுக்காரரையும் மீண்டு வாரா நெறியாகிய முத்தியிலே சேர்த்தருளும். லோகநாதரே! உமக்கு நமஸ்காரம் என்றார். இங்ஙனம் பிரார்த்திக்கச் சிவபிரான் அங்ஙனமாகுக என்று அங்கீகாரஞ் செய்ய, ஆயிரங் கிண்கிணி சாலங்களாலும் நவரத்தினக் கால்களாலும் அலங்கரிக்கப்பட்ட கோடி சூரியப்பிரகாசமாகிய விமானமொன்று வந்திறங்கிற்று. அதிலே பதின்மூன்று வீட்டுக்காரரும் அவர்கள் பந்துக்களும் சிநேகிதர்களும் வந்தேறினார்கள். சுவாமி அரதத்தரை நோக்கி பதின்மூன்று வீட்டுக்காரர்கள் வந்து ஏறினார்கள். மற்றோர் வீட்டுக்காரர் எங்கே என்று சிவபிரான் அரதத்தாசாரியரை வினவ, அவர் "பதினான்காம் வீட்டுக்காரி ஓர் கிழவி, அவள் சரீரமெல்லாந் திரைந்து வெளுத்து விரலெல்லாம் நடுங்கப்பெற்றவள். நெடுங்காலத்தாள், ஒவ்வோர் நாளும் விக்கினேசுரருக்கு மோதகம் நிவே

* சுருதி சூக்தி மாலைக்குச்சிவலிங்கபூபதி எழுதிய வியாக்கியானத்தினும் மருகனார் எழுதியது சிரந்தது என்பர். இது மாயாவாதிகளாற் றொலைக்கப்பட்டது போலும்!

திப்பவள் என்று கூறி, அவளை அழைத்துவருமாறு ஒருவரை அனுப்ப, அக்கிழவி அழைக்கவந்தவரை நோக்கி, நான விநாயகக்கடவுள் பொருட்டு அடுப்பிலே மோதகம் பாகமாறு வைத்தேன், அது நிவேதிக்கப்பட்டபின் வருவேன் போகின்றவர்கள் கைலைக்கு முந்திப்போகலாம், நான் விக்கினேசுவருக்கு நிவேதனம் பண்ணிவிட்டுப்பின்பு வருகின்றேன் என்று சொல்லியனுப்பினாள். அவர் அவள் வார்த்தையை வந்து ஆசாரியருக்குச்சொல்ல, அவர் நாங்கள் இப்போது பிரஸ்தானமாவோம் அக்கிழவி விக்கினேசுவரக்குப் பூசை செய்துக்கொண்டு வருகின்றாளாம்" என்றார். அப்போது சுவாமி புன்சிரிப்படைந்து பக்கத்திருந்த கணபதியை நோக்கி, அக்கிழவியுடைய பூசையை அங்கீகரித்துக்கொண்டு அவளைக்கைலைக்கு இட்டுக்கொண்டு வருக என்று அவரை ஆலயத்தின் புறத்திலே இருக்கச்செய்தார். அரதத்தாசாரியா விமானத்தில் ஏறும்பொழுது, அவருடைய வைவசுதான்னம் நாடோறும் புசித்துவந்த ஓர் சுவானமானது இரக்கத்தினாலே அழ, அதனையும் எடுத்து இரதத்தின் மேலேற்றி வைத்துத் தாமும் ஏறினார். சிவபிரான் அர்தத்தாசாரியர் முதலியபக்தர்களோடு கைலையைச்சாரச் செல்வாராயினர். இதற்குள்ளே மோதகம் பாகஞ்செய்துமுடித்து, அவற்றை மற்றைய உபகரணங்களோடு கொண்டுபோந்து, சாவகாசமாக விநாயகருக்குப் பூசை செய்து முடிப்ப, அவ்விநாயகர் அவளை நோக்கி, உன்து பூசை கொண்டு பிரீதியுற்றேம். உனக்கு வேண்டிய வரத்தைக் கேளென்ன, அவள் லோகோபகாரமாக ஓர் வார்த்தை கேட்கின்றாள். சுவாமீ! இப்படிப்பட்ட ஓர் கிழவி பூசித்து வந்தாளென்ற புகழ்நிலைக்குமாறு நீர் இவ்விடத்திலே சாந்நித்தியராயிருந்து உமக்கு மோதக முதலியன வைத்து நிவேதித்து உம்மைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்கின்றவர்களுக்குக் கைலாயத்தைக் கொடுத்தருளல் வேண்டு மென்று உரைத்து, தனக்குக் கைலாயப் பிராப்தியைத் தந்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தாள். அதற்கிசைந்து விநாயகர் அவள் கைலாசத்தை அடையத்தக்க சக்தியைக் கொடுத்து அவர் ஆங்கே எழுந்தருளியிருந்தார். இரதத்தின்மீதிவர்ந்து போந்தவர்கள் பாதித்தூரஞ் செல்லற்கு முன்னரே இவள்அவர்களைக் கண்டு சேர்ந்தாள். அங்குள்ளோர் நீ இவ்வளவு வேகமாய் வந்தாயோ என்று கேட்ப, அவள் "குதிரையும் காதம் கிழவியும் காதம்" என்பது அறியீர்களோ என்றாள். அந்த வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அவர்கள் எல்லோரும் ஸ்ரீகைலாசத்தை அடைந்தார்கள். பதினன்கு வீட்டுக்காரரும் சந்திரகலா சூடராகிய சம்புவுடைய சாரூப்பியத்தைப் பெற்றார்கள்.

அரதத்தாசாரியசுவாமியகள் சரித்திரம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்தவசனபூஷணம்.

## பதியிலக்கணம்.

(225-வது பக்கத்தொடர்ச்சி.)

புத்தன்வினா

சிருட்டித்தபின் மலத்தைப் பாகப்படுத்தித் தனது திருவடியிற் கூட்டிக் கொள்ளாது நெடுங்காலந் திதி யென்று நிறுத்துவானேன் ?

விடை.

ஆன்மாக்கள் செய்த கன்ம மிகுதியா யிருக்கையினாலந்தக் கன்மம் புசித்துத் தொலைப்பிக்கவேண்டியேயாம்.

புத்தன்வினா.

இங்ஙனஞ் செய்யின் முதல்வன் மறைப்பிப்பானேன் ?

விடை.

போகங்கள் வழுவாமற் புசித்துத் தொலைத்துக் கன்ம வொப்பில் மலங்களெல்லாம் போக.

புத்தன்வினா.

அனுக்கிரக மென்ற தென்னை ?

விடை.

குற்றத்தைப் பொருந்தியிருக்கிற பாசபந்தங்களைப் போக்கி முத்தி நெறியிற் சேர்க்குதல்.

புத்தன்வினா.

முன் சொன்ன நான்கு மனுக்கிரக மல்லவோ ?

விடை.

அந்நான்கு மனுக்கிரகமேயாம், அனுக்கிரக மொன்றே மோட்சத்திற்குக் காரணம். ஏனைய நான்கு மனுக்கிரக நிமித்தமாக மலபாகத்திற்குங் கன்ம நாசத்திற்கும் போகத்திற்குங் காரணம். இவற்றுள் சங்காரங் கருமபாகத்திற்கும் மாயா சாமர்த்திய வுற்பத்திக்கும் உயிர்களிளைப்பாறுதற்கும்; சிருட்டி போக சாதன சம்பத்துக்கும்; திதி பக்குவ போக கருமபோகத்திற்கும் கருமார்ச்சனத்திற்கும்; திரோபவம் போகத்திலமிழ்தற்குங் கருமநாசத்திற்கு மலபாகத்திற்குங் காரணமாம்.

மாணவகன்வினா.

இப்பஞ்ச கிருத்தியங்களிற் பேதமுண்டோ ?

விடை.

பஞ்ச கிருத்திய மிருபத்தைந்து வகைப்படும், பரனிடத்திற் பராசத்தி தோன்றி இதில் ஆதிசத்தி தோன்றி இதில் இச்சாசத்திதோன்றி இதில் ஞானசததிதோன்றி இதில் கிரியாசத்தி தோன்றி இவற்றிற் சத்தி விந்துசத்தி மனோன்மணி மகேசை உமை திருவாணி மனோன்மணி பேதங்கள் மகேசுவரி பேதங்கள் ஆகிய சத்திபேதங்களின் படைப்பொரு வகையாசவும், மூவகையுயிர்களு மவற்றின் பேதமாகிய வுயிர்த்தோற்ற மொருவகையாகவும், ஆணவ மாயை காமியம் வைந்தவம் திரோதாயி யென்னும் பாசங்களின் பேதங்கள் படைப்பொரு வகையாகவும், மந்திரம் பதம் வன்னம் புவனமாகிய விவற்றின் பேதங்களின் படைப்பொருவகையாகவும் நால்வகைத் தோற்றமும் எழ்வகைப் பிறப்பும் எண்பத்து நான்கு நூறுயிரம் யோனி பேதங்களுமாகிய நாடோறுஞ் செய்யும் படைப்பொரு பேதமாகவும் படைப்பைந்து வகையாம். திதியுஞ் சங்காரமு முன்சொன்ன வைவகையையும் வளர்ப்பது மொடுக்குவதுமாம். திரோதானம் பிரபஞ்சத்தை மெய்யாக்கல் பதியைப் பொய்யாக்கல் தத்துவங்களிற் செலுத்தல் அத்தத்துவங்களோடே கூடியறியச் செய்தே அறிவிக்கும் பொருளைக் காட்டாமல் மறைத்தல் கன்மத்தையே ருசிப்பித்தலாக வைந்து வகையாம். அனுக்கிரகம் விஞ்ஞானகலர் முதலாயினார்க்குப் பிராணனாய் நிற்கிற முறைமையிலே நின்று தன்னை யுணர்த்துதல், பிரளயாகலர் முதலாயினார்க்கு மானு மழுவும் சதுர்ப்புயமும் திரிநேத்திரமுமாகிய தன்வடிவு கொண்டு முன்னின் றிரட்சித்தல், சகலருக்குச் சித்த சித்தெங்கும் பூரணமானவ னனபடியால் தன் வடிவெல்லாங் கரந்து மானுடனாக வெளிப்பட வந்திரட்சித்தல், தேவர் மானுடர் முதலாயினார்க்குப் பக்குவ மிகுதியால் வேடமாறித் தோன்றி மெய்யறிவித்தல், மந்திரஞ் செபதவ மிகுதிகளினால் ஆங்குத் தோன்றி யனுக்கிரகித்தலென வைந்தாம்.

இவ்விருபத்தைந்தும் பதி *தன்மை முன்னிலை படர்க்கை யென்னு முறைமையிலே நடத்துவன்."

புத்தன்வினா.

முதல்வன் அருவமோ உருவமோ அருவுருவமோ?

விடை.

மூன்று முதல்வனுக்கனுதியே யுள்ளதாம்.

புத்தன்வினா.

பதியினுக் குருவமுளதெனி னமக்குண்டான வடிவுபோலவனுக் குருவத்தினை யொருவனுண்டாக்க வேண்டு மன்றோ?

விடை.

பதி சுவேச்சா விக்கிரகனாதலி னவனுக் கொருவர் வடிவு கொடுக்க வேண்டுவதில்லை. தன்னுடைய திருவுளத் தினுக்குப் பொருந்தின திருமேனி தானே கொள்ளுவன்.

புத்தன்வினா.

சர்வான்மாக்களு மங்ஙனமே தங்கள் தங்களிச்சையினால் வடிவங்களை யுண்டாக்கிக் கொள்ளாரா?

விடை.

ஆன்மாக்கள் தாங்கணினைத்த வடிவங்களை யுண்டாக்கிக் கொள்ளார்கள்.

புத்தன்வினா.

ஆனாற் பதிவடிவு கொள்வ தெங்ஙனம்?

விடை.

யோக சித்தர்கள் தங்கட்கு வேண்டிய வடிவு வொருவர் கொடாமலே தாங்களே யெடுத்துக் கொள்வது போலாம்?

புத்தன்வினா.

அங்ஙனமாயின் பதியவ்வியோக சித்தர்களி லொருவனாகி விடானோ?

விடை.

யோக சித்தர்கள் பதியினுடைய வருளினால் வேண்டின வடிவங் கொள்வ ரவை மாயையேயாம்.

புத்தன்வினா.

பதியின் றேகமு மாயாவடிவ மாகாதோ?

விடை.

யோகிக ணம்மனோரெல்லா மலத்தைப்பற்றிக் கிடக்கும் பசுக்கள் ஒன்றையே யறிதலு மொன்றையே செய்தலு மொன்றிலே முதன்மையாதலுமாகிய வற்ப ஞானத்தொழின் முதன்மை யுடையார் அதற்கேற்ப மலத்தைப் பற்றிய பசுக்களுக்கு அதனோ டியைபுடைத்தா யேகதேசவறிவைச் செய்யுமாயையுருவம். முதல்வன் மல நீங்கிய வறிவிற்றங்கி நின்றுணர்த்துவோனும் பசுபதி யெல்லா வறிவு மெல்லாத் தொழிலு மெல்லாமுதன்மையு முடையன் அதற்கேற்ப முதல்வனுக்கு மலநீங்கிய வுயிர்கட்கு வியாபகவறிவைச் செய்யுஞ் சத்தியுருவம்.

புத்தன்மதம்.

பதிக்குச் சத்திவடி வென்னில் பரிணம மென்னுங் குற்றமுண்டாகி நித்தியத்துவங்கெடும், அதனா லருவமெனி னத்துவா மூர்த்தி யென்பது பொய்யாகி விடும்.

மறுப்பு.

உலகிற் காணப்படும் பதார்த்தம யாவும் உருவம் அருவம் அருவுருவமாகிக் காணப்பட்டு நிற்கும், ஆகாயமுதலிய வருவப்பொருளுருவத்தி னியல்புடையதாகாது, நில முதலிய வுருவப்பொரு ளருவத்தி னியல்புடையதாகாது, சந்திரன் முதலிய வரு வுருவப்பொருளிரண்டியல்பு முடையதாகாது. இங்ஙனமாறத்துவாவிற் பட்ட பொருளனைத்து மொன்று பிறிதொன்றி னியல்பை யுடையதாகாது. ஆகலின் முதல்வனை யின்னனெனின் பிரபஞ்ச பதார்த்தங்களி லொன்றாவன்.

மாணவகன்வினா.

வியாபியாய் நின்று பிரேரிக்கு முதல்வ னறியப்படுவனோ வறியப்படாதவனோ?

விடை.

முதற் பொருளளவைகளா னறியப்படு மியல்பிற்றெனின் அங்ஙன மறியப்படும் பிரபஞ்சம்போ லழிபொருளாகிய அசத்தாம். எல்லாவற்றானு மறியப்படாத வியல்பிற்றெனின் அங்ஙன மறியப்படாத முயற்கோடுபோலச் சூனியப்பொருளாம். ஆகலா னிவ்விரு பகுதியுமின்றி *ஒருவாற்றானறியப்படாமையு மொருவாற்றா னறியப்படுதலுமாகிய விரண்டு வகையானுஞ் சிவசத்தாம்.

மாயாவாதிமதம்.

முதல்வ னான்மாவா லறியப்படி லசத்தாம், அறியப்படானாகில் சூனியமாம் அதனாற் சதசத்தென்னி லிரண்டு தருமமொன்றுக்குக் கூடாது.

மறுப்பு.

மனோவாக்குக் காயங்களை நீங்கி நின்றறியப் படுபவன் முதல்வனாகிய சத்தாம், மனமுதலான கரணங்களினா லறிவதெல்லாஞ் சடமு நித்தியமுமாம்.

மாயாவாதிமதம்.

ஆன்ம போதத்தாற் சுட்டி யிந்திரியங்களாற் கண்டதனைப் புத்தியினாலறியப்படு மவை யெல்லாஞ் சத்தென்றும் இவ்வான்மாவிற்கு வேறாய் அறியப்படாதபொரு ளசத்தென்றுஞ் சொல்லில், எல்லாவற்றையு மறிந்து பிரயோசனங் கொள்ளத்தக்க வான்மா சத்தாகியபொருளை யறியாதிருப்பானாகி லந்தப் பொருளென்பதொன்று மில்லையாய் அப்பொருளாற் கொள்ளும் பிரயோசனமு மில்லையாய்ப் போய்விடும்.

மறுப்பு.

அறியத்தக்க பகுதியையுடைய வான்மா முதல்வனுடைய வருளினாலே முதல்வனை வேறறக் காணுகிறபன். இவ்வாறறியத்தக்க பொருளானது இவனுக் கறிவுமாய் இவனுக்கு வேறுமாய் விடயங்களைக் காணுமிடத்து முதல்வனுடைய ஞானசத்தியினாலே யறிகையினா லந்த ஞானத்திற்கு வேறற வந்த ஞானமே வடிவாய் நிற்பன்.

பாதஞ்சலன்வினா.

முதல்வனது பாவனையாவது கருவிகளுடன் கூடி நின்று செய்வதெனிற சகலமாய்ப் போகலானும், கருவிகளை நீங்கி நின்று பாவிப்ப தென்னில் அப்பொழுது கேவலம் வந்து தலைப்படுமாகலானும், இரண்டு மின்றிப் பாவிப்ப தென்னில் நிர்வசனீயமெனப் பட்டுப் பாழாய் முடியுமாகலானும், அவ்வாறன்றிப் பாவனைக் கெய்தாத பொருளை யெய்தியதாக வைத்துப் பாவிக்கும் பொருள் யானென்று தன்மேல் வைத்துப் பாவிப்பதெனில் அதனாலவதோர் பயனில்லை யாகலானும் பாவனையாவது நாடக மாத்திரையாய் முடியுமன்றோ?

விடை.

முதல்வனுடைய வருளே தாரகமாய் நின்று சிவானுபூதியா லறிதலே பாவனை யென்னப்படும்.

* தன்மையாவது பஞ்ச மூர்த்திகளாயும், அக்கரங்களாயு நடத்துகை. முன்னிலையாவது அவனவளதுவென்னும் பிரபஞ்ச முன்னிலையாக நடத்துகை. படர்க்கையாவது பூரண வகையில் அசரீரியாய்த்திருமேனி வியாபித்து நடத்துகை.

* ஒருவாற்றா னறியப்படாமை பாச ஞானம் பசு ஞானங்களா லறியப்படாமை, ஒருவாற்றா னறியப்படுதல் பதிஞானமொன்றானே யறியப்படுதல், பாசஞான பசுஞானங்களாலறியப்படாமையிற் சிவமாதலும், பதிஞானத்தாலறியப்படுதலிற் சத்தாதலும் பெறப்பட்டுச் சிவசத்தாம். சிவசத்தென்பது சித்து சத்தென்னும்பொருட்டு.

சமவாத சைவர்மதம்.

அருளாற் பாவித்தல் வேண்டாம், உயிர் பசுத்துவ நீங்கிய காலத்துச் சிவனைப்போல முற்று முணர்தல் முதலிய வெண் குணங்களு முடையதென்றாக மங்களுட் கூறுதலின் ஆண்டான்மு ஞானஞ்சிவஞானத்தோ டொப்பதன்றிப் பசுஞான மெனப்படாமையால் அவ்வறிவா னறியப்படு மகோசரப் பொரு ளென்றலே யமைவுடைத்து.

மறுப்பு.

முதல்வ னான்மாவிற் கன்னிய மில்லாமையாலும், ஆன்மா ஞானவியாப்திக்குள்ளே வியாப்பியனாகி நிற்கையாலும், ஆன்மா நினைப்ப தெல்லாவற்றையும் முதல்வ னந்தரியாமியாய் நின்று நினைப்பிப்பனாகையாலும், முதல்வனுக் கன்னியமாக வொருபதார்த்தமு மில்லாதபடியால், எனது யானென்கிற மமகார வகங்கார ரகிதனாகையாலும், ஆன்மாவைமுதல்வன் பிரிவறக் கலந்திருக்கையினால் வேறாக ஆன்ம ஞானத்தினாற் றரிசிக்கப்படுவ னல்லன்.

சமவாத சைவர்வினா.

இங்ஙனங் கூறியவாற்றால் முதல்வனான்மாக்களுட னொன்றாகியும் வேறாகியு முடனாய் நிற்ப தெவ்வாறு.

முதல்வனு முயிரு மொன்றென்ன வங்ஙன மறிவதொரு பொருளுண்டென்பது பற்றி வேறாய், முதல்வனு முயிரும் வேறென்ன வறிவிற் கறிவு பிரிந்து தோன்றாமைபற்றி வேறென்னுமறிவிற்கெட்டாது உடனாய், அவ்வறிவினுள்ளாக நீர் நிழல் போல வொற்றித்து நிற்றல்பற்றி யுயிரே முதல்வனெனும்படி யொன்றாயிருப்பதை யறியலாம். அத்தகைய வத்துவித நிலையை யருளானு லந்நியமாக காண்டலே தக்கதாகும்.

புத்தன்வினா.

அங்ஙனமாயி னப்பதியினுண்மைதா னெங்ஙனம்?

விடை.

தனக்கொரு முதலு முடிவுமில்லாதவனாய், ஒருவராலு மின்னபடியென் றளந்தறியப் படாதவனா யிருக்கையின், முதல்வனின்னா னென்றும், இன்னா னாகானென்றும், இன்னதா மென்றும், இன்ன தாகாதென்றும், இன்னதாகி வருவனென்றும், இன்னதாகிவாரானென்றும் சொல்லுகைக் குண்மையாக யாதொரு வழக்குமில்லை. அன்றியும் விகாரப் படுதற்குக்காரணம் பரதந்திரம் ஏகதேசமாதற்குக் காரணஞ் சிற்றுணர்வுஞ் சிறு செயல்களும், தொடக்குறுதற்குக் காரணம் விருப்பு வெறுப்புக்களுமாம். அனாதி முத்த சித்தருவனாகிய முதல்வனிடத்திவ்வுபாதிக ளின்மையாலும், ஆன்ம போதத்தா லதுவென்று சுட்டியறியப்படாத குறைவற்று நிறைந்த ஞானமேதனக்குத் திருமேனியுடையவ னாகையாலும், எப்பொழுது மொரு தன்மையாயிருக்கிற சருவஞ்ஞத்துவத்தையும், சருவகிருத்தியத்தையுந் தனக்குள்ளவ னாகையாலும் பிரியாப் பிரியங்கள் தன்னிடத்துப் பொருந்தப் படாதவனாகையாலும், தனக்கு வேண்டின வடிவுதானே யெடுத்துக்கொள்ளுவன். சிவன் முத்தர்கள் தேகத்தைக் கிருபையினாலே தனது திருமேனியாக வதிட்டித்துக் கொண்டு கிருத்தியங்களைப் பண்ணுவன் ஆசாரிய மூர்த்திகளை யதிட்டித்துக்கொண்டு அனுக்கிரகம் பண்ணுவன்.

புத்தன்வினா.

பதி சகளீகரித்தே கிருத்தியங்களைச் செய்ய வேண்டுமோ; நிட்களமாய் நின்று செய்ய வொண்ணாதோ?

விடை.

பரம காரணனாகிய பதி கிருபையினாற் றிருமேனிகொண்டு தேவர்கட்கும், *தேவ விருடிகட்கும், மானிட விருடிகட்கும், பிரளயாகலர் சகலர்கட்கும், வேதாகமங்களையுபதேசியாதிருக்கிற் சொல்லுவாரு மறிவாருமின்றித் தர்மார்த்த காம மோட்சமென்னுஞ் சதுர்வித புருடார்த்தங்களை யடைதலற்றுப்போம்.

புத்தன்வினா.

பதியின் வடிவுதா னெத்தன்மை யானது.

பதியினுடைய *அங்கமு மான்மாக்களி னனுக்கிர கார்த்தமாகச் சிற்சத்தி சொரூபமானதே, காசாணுதியான பிரத்தியங்கமுங் கிருபையினாலான ஞானசொரூபமே, சாங்கமும் ஞானசொரூபமே, உபாங்கமும் ஞானசொரூபமே இங்ஙனமான திருமேனிக்கு மாயோபாதியு மில்லாமற் றனக்கொரு பிரயோசனமுமில்லாம லான்மாக்களின் போக மோட்சார்த்தமாகப்பண்ணுந் தியான பூசையின் பொருட்டுக்கிருபையினாலுண்டாகிய பாவனாரூப சைதன்ய விக்கிரகத்தையுடையவன்.

மாணவகன் வினா.

முதல்வனுக்கு மூன்று சரீரமென்பதென்னை?

விடை.

முதல்வன் சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுவதும், சத்தியுடனே கூடியிருந்து ஆன்மாக்களுக் கெப்போதும் விடய சுகங்களைச் சேர்ப்பதும், பத்திமுத்தியைக் கொடுக்கு மியோகமும், அஞ்ஞானத்தை யொழிக்கு மனுக்கிரகமாகிய கிருத்தியமும், இவை யாவுஞ் சீகண்டன் திருமேனியை யதிட்டியாதபோ திங்கொன்று நடவாது. முதல்வன் சகளத் திருமேனி யெடுத்துக்கொண்டானென்ற போதே நிட்களத் திருமேனி யுண்டெனப் பெறப்பட்டுச் †சகள நிட்கள மூர்த்தியென வேற்பட்டது இம்மூன்று திருமேனிகளு நமக்குள்ளதாய கருப்பாசயத்தின் றொந்தனையாகி யனாதியாய் வருந் தேகாதிகளைப் போக்குதற்கு வந்த காருண்ணிய திருமேனிவாம். சட்சுராதி தீக்கை பண்ணுதற்குச் சகளமான குருமூர்த்தித் திருமேனியும், தியான பூசார்த்தமாகச் சகள நிட்களத் திருமேனியும், அஞ்ஞானத்தைப் போக்க நிட்களத் திருமேனியுங் கொள்வன்.

மாணவகன் வினா.

முதல்வனுக்கு அத்துவாக்களே திருமேனியென்றதென்னை?

விடை.

முதல்வ னொருகாலத்து மழிவின்றி யிருப்பவனுமாய் எங்கும் பூரணனுமாய், சித்த சித்தாகிய விரண்டினையு மனாதியே யுள்ளபடி யறிந்ததனைச் சேட்டிப்பித்துக் கொண்டு நிற்கையானும், வேதாகமங்கள் முதல்வனுக்கு மந்திர பதவர்ண புவன தத்துவ கலை யென்னுமா றத்துவாக்களே தேகமென்று கூறும். எங்ஙனமெனின்? சாந்தியாதீதகலை திருமுடி, சாந்திகலை திருமுகம், வித்தைமார்பு, பிரதிட்டை குய்யம், நிவர்த்தி முழந்தாளும் பாதமும், புவனங்கள் ரோமம், வர்ணங்கள் தோல், மந்திரங்கள் சோரி, பதங்க-ணரம்பு, தத்துவங்களென்புந் தசையுமாம்.

* தேவவிருடிகள் சனற்குமாராதியர், மானிட விருடிகள் வசிட்டாதியர்.

* அங்கமாவன,—சிரசு, முகம், இருதயம்; பிரத்தியங்கமாவன,—வட்சசு, கண்டம், தனம், தோள், நாபி, உதரம், குக்யம், நேத்திரம், நாசி, சுரோத்திரம், மத்தகம், பாதம், அங்குலிகம், தொடை, முழந்தாள், கணைக்கால்; சாங்கமாவன,—திரிசூலம், சத்தியம், பரசு, பிரதாபம், கட்கம், தாரபேத்தியம், வச்சிரம், அனுக்கிரகம், லயமுத்திரை, ருத்யாதி சுத்தமாயை, நாசம், அதோமாயை, பாசம், அங்குசம், சுத்த நாதம், கண்டை, பாசங்கரம், அக்னி; உபாங்கமாவன,—வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆபரணம், ஆசனம், ஆவரணம்.

† ஒரு பொருட் கிரண்டு தன்மை யுண்டென்னும் அநைகாந்திகமென்னுங் குற்றமுண்டாமெனின் உருவமாயிருக்கிற புட்பத்து அருவமாயிருக்கிற கந்தமாசிரியமாயிருத்தல்போலுமாகலின் குற்றமில்லை.

மாணவகன்வினா.

முதல்வனுக்கு மந்திராத்துவாவினையே திருமேனியென்று வேதாகமங்கள் கூறுவதென்னை ?

விடை.

பிரபஞ்சோற்பத்திக்கு உபாதானகாரணங்கள் குண்டலியென்றும், அசுத்தமாயை யென்றும் பிரகிருதியென்றுமூன்றும் இம்மூன்றனுள் சுத்தமாயையைப் பராசத்தி யதிட்டித்து வாக்குண்டாக வதிற்றோன்றிய மந்திரங்களே திருமேனியாம். சுத்தமாயையினின்று சிவசங்கற்பத்தாற் றோன்றிய காரணத்தானும், அந்தச் சிவசத்தி தன்சங்கற்பத்திலுண்டாகச் சுத்தவித்தையாயிருக்கும் அந்த ஆதி தைவீக திவ்வியாக்கினி சமமந்திரங்களைப் பிரேரித்து மாந்திரிகனுச்சரிக்குங் கரிக்கொத்த ஆத்தியான்மிக மந்திரங்களாலே செலுத்திப் பற்றுவித்து அவைகளினாற் சானித்தியமாய் மந்திரங்களினாற் செபித்துப் பூசிக்க அதனாற் சித்திமோட்சங்களைக் கொடுத்தலான் முதல்வனுக்கு மந்திரங்களே சரீரமாம்.

மாணவகன்வினா.

மந்திராத்துவாவினும் பஞ்சமந்திரமே திருமேனியென்றதென்னை ?

விடை.

சிவசத்தியானது சுத்தமாயையிலே நின்று மந்திரங்களைத் தோற்றுவித்து அந்த மந்திரங்களை யதிட்டித்து அவை தானாவிருந்து அவற்றா லான்மாக்கட்குப் போக மோட்சங்களைக் கொடுத்து வருகையின் மந்திரங்களே திருமேனியாம், அன்றியும் பாரசத்தி முதலிய பஞ்சசத்திகளாற் சுத்தமாயையிற் பஞ்சமந்திரங்கள் தோன்றுகையானும், நின்ற சத்தகோடி மகாமந்திரங்கட் கெல்லாமைந்து மந்திரங்கள்காரணமாயிருத்தலினாலும், பஞ்ச சத்திகளின் விக்கிரகத்திற் காதியாய சதாசிவத்திற்குத் திருமேனியாகக் கூடிநிற்கையானும், பஞ்ச மந்திரங்களே முதல்வனுக்குத் தனுவாம், பஞ்சமந்திரங்கள் அனுக்கிரக திரோதான சங்கார திதி சிருட்டியார்த்தமாக, ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்யோசாதம், மூர்த்த வக்தர இருதய துரியமூர்த்திகளாகச் சொல்லப்பட்டது.

மாணவகன் வினா.

இவ்வாறு முதல்வனுக்கு மந்திரமே சரீரமாயின் சத்திருபனென்பானேன்.

விடை.

முதல்வன் சர்வோத்கிருஷ்டமாய்த் தத்பதத்தைஆன்மாக்கட்குக் கொடுக்கையின் ஈசான மூர்த்தி யென்றும், விந்துநாதவிருத்தியான சத்தசாலங்களைச் சகத்தினிற்பூரிக்கையின் தத்புருட வக்தர மென்றும், அகோரமாகிய வஞ்ஞான மிருதய பரியாய மாகையின் அகோரவிருதயமென்றும், சர்வான்மாக்களுக்கும் பிந்து விருத்தியாகிய விஞ்ஞானங்களை யுற்பவிக்கையினாலும் இது சூக்கும கிருத்திய மாகையினாலும்வாமதேவ குய்யமென்றும், விஞ்ஞானந்த கோசமாகிய காரண தேகம் ஆன்மாக்களுக்கு முதலுண்டாய் மனோமயாதி கோசத்திரயமான சூட்சும தூலசரீரங்களைத் தன்னுடைய விச்சா மாத்திரத்தினாலே மந்திரேஸ்வர மந்திரங்களை யதிட்டித்துடனே யுண்டாக்குகையின் சத்தியோ சாத மூர்த்தி யென்றும் சொல்லப்படும் இம்மந்திரங்களைந்துஞ் சத்திகள். ஆரணி, சனனி, திரோயித்ரி யென்னு மூன்றும் பரிக்கிரக சத்திகள். சனனிக்குச் சிருட்டியும், ஆரணிக்குச் சங்காரமும், அனுக்கிரகமும், திரோயித்திரிக்குத் திதியுந் திரோபவமும் சத்திசரீர கற்பனையினால் முதல்வனுக்குச் சூக்கும தேகம். இசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி யென்னும் பஞ்சசத்திகள் அனுக்கிரகமுதலிய பஞ்சகிருத்தியங்களையு மடைவிற் பண்ணுநின்ற சத்தி சரீரகற்பனையின் முதல்வனுக்குத் தூலசரீரம்.

மாணவகன் வினா.

சத்தி யனேகமாகில் சத்திமானு மனேக மாகானோ ?

விடை.

ஞானக் கிரியை யிச்சாசத்தி மூன்றனுள் கிரியாசத்தி ஈசானியாதி யைந்தும் ஆரணியாதி மூன்றுமாகச் சத்தி யெட்டாகி, முதல்வனிடத்து அக்கினிச் சூட்டணம் போல சமவேதமாயிருக்கிற சத்தியொன்று தானே காரியபேதத்தா லவனதுகிருபையினாற் பலபெயரைப் பெறும், ஒன்று பலவாகக் காரியப்படல் அரசனதாஞ்ஞா சத்தியொன்றா யிருந்து மந்திரி முதலியோரிடத்துப் பலவாகக் காரியப் படுவது போலும்.

மாணவகன் வினா.

சத்தி ஞானக் கிரியா சொரூபியெனின் தடத்தம் பலசொருபமாமோ ?

விடை.

சத்தியின் சொருபம் உயிர்கட்கனுக்கிரக மாத்திரங் குறித்துப்பொதுவகையானறிந்து மறிவித்து நிற்பதாகிய ஞான மொன்றேயாம். அதுவே பராசத்தியாம் அந்தஞானமுயிர் கட்குமலபாகம் வருவித்தற் பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்புவகையான் வியாபிக் குங்காலொரு கூற்றானே திரோதான சத்தியென்றும், இச்சாஞானக்கிரியையெனமுத்திறப்பட்டும் வியாபரிக்கு மாகலான், இச்சை கிரியையென்கிற விவைகள் ஞானத்தினின்றுந் தோன்றுவனவுளவோ வெனின், ஞானமெவ்வாறுளதோ அவ்வாறே யிச்சை கிரியைகளுடைத் தாகலின் அவ்விரண்டும் ஞானத்தின் வியாபார விசேடங்களே யன்றி வேறன்மையான், காரியத்தாலனேகமாய சனனி முதலிய வியாபாரசத்தியாவு முற்கூறப்பட்ட பராசத்தி ரூபமாகிய ஞானமொன்றானுள வாவன வேயாம். முதல்வனிடத்து அவினாபாவ மாயிருக்கிற சமவேத சத்தி முதற்கண் பராசத்தி யொன்றாய் அது இச்சா ஞானக்கிரியைகளென மூவிதப்பட்டுநிற்கும். இச்சையாவது முதல்வன் சர்வான்மாக்களையு மோட்சத்திலடைவிக்கு மென்றவர்களிடத்து வைத்த கிருபையாகும். ஞானசத்தியாவது ஆன்மாக்கள் செய்த விருவினைப் பலன்களெல்லா வற்றையுமவர்கள் புசித்துத் தொலைக்கும் பொருட்டு விரும்புவது, கிரியா சத்தியாவது முதல்வன்றனது காருண்யமான கிரியாசத்தியினாற் சகசிருட்டி முதலியகாரியங்களெல்லாவற்றையு நடத்திவரல், அதாவது இச்சாசத்தியாற் சர்வான் மாக்களிடத்து மனுக்கிரகத்தினைச் செய்தும், ஞானசத்தியா லான்மாக்கள் செய்த கன்மங்களை யறிந்தும், கிரியாசத்தியினாலான் மாக்கள் செய்த கன்மத்திற் கீடாகத் தேகாதி பிரபஞ்சங்களை யுண்டாக்கியும் வருவன். இம்முச்சத்திகளு முதல்வனுக்குக் கருவியேயாம்.

மாணவகன் வினா.

ஆன்மாவு மிச்சா ஞானக்கிரியாவானாகி முதல்வனுக் கொப்பாகிவிடானோ ?

விடை.

ஆன்மாவினுடைய இச்சா ஞானக் கிரியைகள் முதல்வனுடைய இச்சாஞானக் கிரியைப்போலன்று, எங்ஙனமெனின்? ஆன்மாவுள்ள வன்றேயனாதி யாயுள்ளதாய வாணவ மலமிவனுடைய விச்சாஞானக் கிரியைகளை யக்கினியைச் சாட்டமறைத்தாற் போல மறைத்துக் கொண்டிருக்கும். முதல்வனானவன் ஆன்மாக்கள் செய்த கன்மத்திற் கீடாகத் தன்னுடைய விச்சாஞானக் கிரியைகளைக் கொண்டே யாணவத்தினை யொதுக்கி யிவனுடைய யிச்சாஞானக் கிரியைகளை யெழுப்ப வெல்லாவற்றையு மறிந்து பொருந்தித் தனக்கு முறைமையான போகங்களைப் புசிப்பன் மோட்சத்திலுள்ள பிரயோசனங் கொள்ளு முறைமையு மித்தன்மையே யாம்.

மாணவகன் வினா.

ஆகமங்களில் இலயசிவன் போகசிவன் அதிகார சிவனெனச்சிவப்பன்மை கூறுதலின்,தான் முதலென்று ஒருபொருண்மேல்வைத் தோதுத லெங்ஙனம்?

விடை.

முதல்வன் கேவலம் ஞான ரூபமாயிருக்கையிற் சிவதத்துவம், கிரியையே யானவவுதரம் சத்திதத்துவம், ஞானமுங்கிரியையு மொத்தவவதரஞ் சதாக்கிய தத்துவம், ஞானங் குறைந்து கிரியை யேறின வவதரம் மகேச்சுரதத்துவம்*கிரியை யேறி ஞானங்குறைந்தவ வதரஞ் சுத்தவித்தை. முதல்வனுக்குச் சிவமுஞ் சத்தியு நிட்களமாயுள்ள திருமேனி, மகேச்சுரமும் சுத்தவித்தையுங் கரசரணங்களுடனே கூடியசகளத் திருமேனி, ஞானப் பிரகாசமே திருமேனியாகவுடைய சிவன் இலயியெனவும், போகி யென்வும், அதிகாரி யெனவு முறையே சிவன் சதாசிவன் மகேசுரனாகிக் கிருத்தியங்கட் கேடாப் பெயர் பெற்றுக் கிருத்தியங்களை நடத்துவர். இலயியென்பதிற் சிவதத்துவமுஞ் சத்திதத்துவமு மடங்கும், போகி யென்பதிற் சதாசிவதத்துவ மடங்கும், அதிகாரி யென்பதிற் சுத்தவித்தையு மீச்சுரமு மடங்கும் ஆகவைந்து மூன்றிலடங்க இவற்றைச்சத்தர், உத்யுத்தர், பிரவர்த்த ரெனவும், ஈசர்,சதாசிவர், சாந்த ரெனவுங் கூறுவர்.

மாணவகன் வினா.

அவ்விலய போகவதிகாரங் கட்கு எதுவாய் நின்ற அதிகரணங்களியாவை யவற்றியல் பென்னை?

விடை.

சுத்தவித்தை ஈச்சுரம் சாதாக்கியம் சத்திசிவமாக வைந்திலு முதல்வன் ஞானக் கிரியைக ளதிட்டிக்கையா லிவற்றினுக்குச் சுத்ததத்துவ மெனப் பேராம். இவை முதல்வனுக்குத்திருமேனி இவை காலத்திற் படாதாகலின் இவை நித்தியம், இவற்றுள் முன்பின் தோற்றமில்லை கிருத்திய நோக்கி முறையேற்படும். கூத்தாடி யொருவனே பலவுருவத்தையும் பலவபிநயத்தையும் பிறருக்குக் காட்டித்தான் றன்னுடைய சொரூபத்தின் மாறுபடான். முதல்வன் திருமேனி சத்தியே அச்சத்தி மரமும் வயிரமும் போலப் பிரிக்கப்படாததாக விருக்கும், பொன்மையாதி பஞ்சவன்னங்கள் படிகத்திற் சென்று பிரதிவிம்பஞ்செய்ய அப்படிகம் வன்னங்களைத் தன்னிடத்தில் வலித்து அதுவதுவாய் நிற்கு முறைமைபோன்று, சத்தியினுடைய வேறுபாடுக ளெல்லா நின்மலனாகிய முதல்வனாகவே தோன்றித் தன்னுண்மை மாறாது நிற்பன். சத்தி சிவத்தினிடந் தோன்றும் சிவஞ்சத்தினிடந் தோன்றாது. இப்பிரபஞ்சமெல்லாஞ் சத்தியினது வடிவமுஞ் சிவத்தினது வடிவமுமாயிருக்கும். ஒன்றை விட்டொன்று தனித்து நில்லாது.

மாணவகன் வினா.

பதி வியாபகனாகலின் வியாபகப் பொருட்கு ஒன்றா நிற்றல் கூடாது அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனென்னின் வியாபகனாதல் கூடாது வியாபியல்ல னெனில் பசுபாசங்களவனையின்றி யமைதல் கூடாது ஆகலான் முதல்வன்சமவேதமாய் நிற்குமா றெங்ஙனம்:

விடை.

ஞாயிறொன்றுதானே விடயங்களை விளக்குகையிற் கதிரெனவும் தன்னை விளக்குகையிற் கதிரோனெனவும் தாதான்மியத்தா விருதிறப்பட்டியைந்து நிற்றல்போல போதவாய சைதன்யமொன்றே யங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கு நிலையிற் சத்தியெனவும் புறப்பொருளை நோக்காதறிவு மாத்திரையாய் நிற்கு நிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தா விருதிறப்பட்டியைந்து நிற்கும்.

* ஞானக் கிரியையுள்ள விடத்து இச்சையிருப்பதுண்மையின் இதனை விரித்திலம்.

மாணவகன் வினா.

முதல்வனுக்குக் குணமாவா றெங்ஙனம்?

விடை.

முதல்வனுக்குச் சடசித்துக்களனைத்தையுமொருங்கேயோரியல்பாக வறியுமறிவு இலாதவழி யச்சடசித்துக்களைத் தொழிற்படுத்தல் கூடாமையிற் சருவஞ்ஞத்துவமென்னு முற்றறிவும், அஞ்ஞானமறைப்பினாலொன்றோடொன்றொவ்வாத வறிவிச்சை தொழில்களையுடைய வளவிறந்த வுயிர்கள் பொருட்டுப் பல வேறுவகைப்பட நின்று தொழில் செய்யவேண்டுமாதலாற் பூரண சத்தியெனப்படு மளவிலாற்றலும், சிற்றறிவினையுடைய வுயிர்களைப்பற்றிய வஞ்ஞானப்பிணியையொழித்து ஆனந்தப் பெருஞ்செல்வ வாழ்வை யவைகளுக்கருளுதல் பேறறிவாளனுக்குக் கடப்பாடாதலால் அலுப்த சத்தி யெனப்படும் போருளுடைமையும், எண்ணியதை யிடையூறு புகுதாமல் எண்ணியபடி முடிக்கவேண்டுமாதலால் சுதந்திரமெனப்படுந் தன்வயத்தனாதலும்,இயல்பாகவேயஞ்ஞானத்தினின்று நீங்கி விளங்குமறிவு தனக்கில்லையாயினுயிர்களையுள்ள வஞ்ஞானத்தை நீக்குதல் செல்லாமையால் அனாதிபோதமெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதலும், தன்னிடத்துக் குறையுள் வழியுயிர்கட்கு ஆனந்தபூர்த்தி செய்தல் கூடாமையின் பூர்த்தியெனப்படும் வரம்பிலின்பமுமின்றியமையாத குணங்களாம்.

மாணவகன் வினா.

முதல்வனுக் குருவமாதி பத்திலக்கண மாகமத்திற் கூறுவதின் விவரமென்னை?

விடை.

முதல்வனுக்கு உருவமானந்தம், சொரூபமிச்சாஞானக்கிரியைகள் கூடியவை, சுபாவ மசைவற்று நிற்குமுறைமை,விசேடந் தோற்றுதலு மீறுமற்றிருக்கை, வியாத்தி யெவ்விடமுநிறைந்து நிற்கை, வியாபகங் கமரிற்கல்லிற் றோன்றல், குணங்கருணை, நிறம் யாதொருவர் யாதொன்றாகக்குறித்தாரந்தந்த நிறமாயிருக்கை, தரிசனஞ் சுகாதீதத் தப்புறத்தது, சுத்திபோத முனையாம லழுந்துவது.

நிரூபணம்.

அனந்தேச்சுர சீகண்ட பரமேச்சுர காலருத்திர விண்டு பிரமாதி மூர்த்திகளைத்தனது சமவாய சத்திமூலமா யதிட்டித்துக் கொண்டிருத்தலின் முதல்வ னரூபியுமல்லன், சித்தாகிய வீச்சுர சமவாய சத்தியானது தத்துவமும் அசித்தாகிய விந்து மூர்த்தியு மாகிக்கூடின விடத்திலே பிரபாவ ரூபமாயிருத்தலின் ரூபியுமல்லன், பிரமவிண்டு ருத்திரமகேச்சுர சதாசிவாதி யர்களிலே வேறற அபிவியக்தியாக நின்று அவர்கள் இயற்றுஞ் சிருட்டிதிதிசங்கார திரோபவ அனுக்கிரகங்களை நடத்தலின் கிரியாவானு மல்லன்; தவமாகிய வண்மாதியட்டாங்க யோக சாதனைகள் முனிவர்கள் பொருட்டுச் செய்து காட்டிய சீகண்டபரமேச்சுரனை வேறற நிற்றலின் சாத்துவிசகுணமுடைய வனுமல்லன், சங்காரத்தைப் பண்ணுங்காலருத்திரனில் வேறற நிற்றலின் தாமசகுணத்தை யுடையவனுமல்லன், ஆனால் தனது சந்நிதி மாத்திரத்தால் ஆன்மாக்களுடைய போக மோட்சார்த்தமான சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களைப் பொருந்துந் தொழில்குண மிச்சை வெறுப்பு விகார மொன்று மில்லாத சுத்தசை தன்னிய சொரூபமேபாவமாகவுடையவன் இங்ஙன முள்ள பர சிவனே-பதி.

அஷ்டாவதானம்

பூவை. கலியாணசுந்தர முதலியார்.

பதியிலக்கண முற்றிற்று.

MADRAS:—Printed by P. C. KALLIANA SUNDARA NADAR, at the C. N. PRESS, and Published by J. M. NAGARATHNAM.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுரவேநம:

# உண்மை விளக்கம்

எனும்

# சித்தாந்த தீபிகை.

1897ஞு மகாராணியாரின் வைர ஜூபிலி தினத்தில்

ஆரம்பிக்கப்பட்டது.

௳

சிவமயம்.

ஸ்ரீ நீலகண்டசிவாசாரியசுவாமிகள்

அருளிய

## வியாசசூத்திர சைவபாஷ்யம்.

ஸ்ரீமத் அப்பயதீக்ஷித யோகிகள் செய்தருளிய சிவார்க்கமணிதீபிகா சுலோகம் வருமாறு:—

மஹாபாஶுபதஜ்ஞாநஸம்ப்ரதாயப்ரவர்த்தகாந்।
ஶம்ஶாவதாராந்ஶ்வேதாத்யாந் யோகாசார்யாநுபாஸ்மஹே॥

மகாபாசுபத ஞானஸம்பிரதாயப் பிரவர்த்தகர்களும் சிவபெருமானுடைய அம்சாவதாரர்களுமாயுள்ள (சுவேதாசாரியர் முதலிய) யோகாசாரியர்களை உடாசிக்கின்றேம்.

சிவார்க்கமணிதீபிகாநுசார சூசனம் வருமாறு:—வாயு சங்கிதை பூருவபாகத்து இருபத்தெட்டாம் அத்தியாயத்திலே,

ஶைவோ ஹி பரமோ தர்ம: ஶ்ரேஷ்டாநுஷ்டாநஸம்ஶ்ரித:। யத்ராபரோக்ஷம் லக்ஷ்யேத ஸாக்ஷாந்மோக்ஷப்ரத: ஶிவ:। ஸ ச பஞ்சவிதோ ஜ்ஞேய: ஸங்க்ஷேபேண மஹர்ஷிபி:। க்ரியாதபோஜபத்யாநஜ்ஞாநாத்மபிரநுத்தரை:। [illegible]। பரோக்ஷமபரோக்ஷஞ்ச ஜ்ஞாநம் யத்ர விமோக்ஷதம்। பராபர[illegible] ஹி ஶ்ருதிசோதித:। யத்ர ஶப்தாபிதேயேர்த்தே ப்ரமாணம் ஶ்ருதிரேவ ந:। பரோ யோகமயோ தர்மோ யஶ்ச ஶ்ருதிஶிரோகத:॥

சைவமே பரமமாகிய தருமம் என்றும், அதுவே முக்கியமாக அநுஷ்டிக்கற்பாலதாம் என்றும், அச்சிவதருமத்திலேயே சாக்ஷாத்தாக வீடளிக்கும் சிவபிரானர் அபரோக்ஷமாக அறியப்படுகின்றார் என்றும், அந்தத்தருமம் (பின்வருமாறு) கிரமமாகப் பிரிவினுல் (பருவங்களால்) ஐவகைப்படும் என்றும், அவை கன்மயாகம், தபயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என்பனவாம் என்றும், இந்தக் கன்மயாகமுதலியவை ஒன்றுக்கொன்று ஏற்றமுடையனவாம் என்றும், பரோக்ஷஞானம் அபரோக்ஷஞானம் என்னும் இரண்டும் மோக்ஷத்தைக் கொடுப்பனவாம் என்றும், பரமதருமம் அபரதருமமாகிய இரண்டும் வேதங்களிலே சொல்லப்பட்டன என்றும், தருமம் என்னும் பதத்துக்குப் பொருளாயவனைத்துக்கும் வேதமே பிரமாணம் என்றும், யோகத்தை முடிவாகக்கொண்ட பரமதருமம் உபநிடதங்களிலே அமைந்தது என்றும் சொல்லப்பட்டிருப்பதால், கன்மயாகம், தபயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என்னும் இவ்வைந்தனுள்ளே நான்காவதாகிய தியானயாகம் எனப்படும் யோகமே அதர்வசிரசு அதர்வசிகை முதலிய சிவாத்துவித பாசுபதோபநிடதங்களிலே சொல்லப்பட்டதாம் என்றும் கூறி, பின்னரும் அந்த வாயுசங்கிதை அந்த இருபத்தெட்டாம் அத்தியாயத்திலே,

[illegible] ஶ்ரேஷ்டோ [illegible] ஸ்ஹாய ஶா:। தேவ: பாஶுபதா ஜ்ஞேயா: ஸம்ஹிதாநாம் ப்ரவர்த்தகா:। [illegible]

ஹ்ரஶ꞉ । ததோத்ராஸ்த்வாமபோயத்ய ஸ்வயம்ப்ரோக்தாவ தாவிஷ்ய꞉ । தேஷாம் பாஶுபதோ யோக꞉ ஶிவம் ப்ரத்யக்ஷயேத் த்ருவம் । தஸ்மாதேவ ஹி ஸர்வேஷாம் அனுஷ்டானம் யோக꞉ பாஶுபதோ மத꞉ ॥

மிக்கபுகழ்படைத்த ருரு, ததீசி, அகஸ்தியர், உபமன்னியு என்னும் நால்வரும் பாசுபதர்களாமென்றும், (இவர்கள் வைதிக காமிகாதியாகம) சம்மிதாப் பிரவர்த்தகர்களாமென்றும், அவர்கள் நால்வரின் சீடசந்ததிகள் நூற்றுவரும் ஆயிரவருமாய்ப் பல்கினர் என்றும், (அந்தவைதிக காமிகாதி ஆகமங்களிலே பேசப்பட்ட) பரமமாகிய தருமம் சரியைமுதலிய நான்கு பாதங்களாம் என்றும், இந்நான்களுள்ளே பாசுபதயோகமே சிவத்தை உறுதியாகப் பிரத்தியக்ஷமாக்கிவிடும் என்றும், ஆதலால் பாசுபதயோகமே முக்கியமாக அநுட்டிக்கற்பாலதாம் என்றும் உரைத்து, ஈண்டுக்கூறிய சரியை முதலிய நான்கும் இவையென்றுணர வாயுசங்கிதை உத்தரபாகத்துப் பதினோராம் அத்தியாயத்திலே,

> ஜ்ஞானம் க்ரியா ச சர்யா ச யோகஶ்சேதி ஸுரேஶ்வரி,
> சதுஷ்பாத꞉ ஸமாக்யாதோ ஶிவதர்ம꞉ ஸநாதந꞉॥

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன நான்கு பாதங்களாக எக்காலமும் சொல்லப்படுகின்றது சிவதருமமாம் என்றும் சொல்லப்பட்டிருத்தலால், அதர்வசிரசு அதர்வசிகையாதி பாசுபத யோகோபநிடதங்களினும், காமிகாதி வைதிக சிவாகமங்களினும் பேசப்படும் பாசுபதயோகம் (யோகபாதம்) ஒரே முடிவையேகொண்டு முடியுமாமென்றும், இதுவே சிவத்தைப் பிரத்தியக்ஷமாக்குமாம் என்றும் உணரற்பாலதாம். கன்மயாக முதலிய ஐந்தும் இவை இதுவாமென்றுணர வாயுசங்கிதை மேற்கூறிய அத்தியாயத்திலே,

> இஜ்யாகர்மவிஜ்ஞேயம் பாஹ்யம் யாகாதி நோச்யதே।
> இதமேவ தேஹஸம்ஶோஷ தப꞉ க்ருச்ச்ராதி நோதிதம் ।
> ஜப꞉ பஞ்சாக்ஷராப்யாஸ꞉ ப்ரணவாப்யாஸ ஏவ ச ।
> ருத்ராத்யாயாதிகாப்யாஸோ ந வேதாத்யயநாதிகம் ।
> த்யானம் ஶிவஸ்ய ரூபாதி நாத்மாதி ஸ்வவிஷய꞉
> ஶைவாகமார்த்தவிஜ்ஞானம் ஜ்ஞானம் நான்யார்த்தவேதனம் । வ
> ஶைவாஶைவத் ஜ்ஞானம் ஜ்ஞானமித்யபிதீயதே ॥

கன்மயாகமாவது சிவார்ச்சனையேயன்றிப் புறத்தே செய்யப்படும் (கன்மகாண்டம் பற்றிய) யாகாதிகளன்றும் என்றும், தபயாகமாவது சிவபிரான்பொருட்டுத் தேகத்தை வாட்டுதல் செய்யும் இவ்விரதங்களாமன்றி மற்றைக் கிருச்சிராதிவிரதங்களன்று மென்றும், செபயாகமாவது பஞ்சாக்ஷரசெபம், பிரணவசெபம், ருத்திராத்தியாயசெபம் என்பனவாமன்றிக் கன்மகாண்டம்பற்றிய வேதாத்தியயன மன்றுமெனவும், தியானயாகமாவது சிவத்தியானமாமன்றி ஆன்மஸாக்ஷாத்கார மன்றுமென்றும் (நிர்க்குணப்பிரமஞான மன்றுமென்றும்), ஞானயாகமாவது சிவாகமத்துப் பேசப்பட்ட ஞானமாமன்றி மற்றை ஞானமன்றுமென்றும், இந்தச் சிவாகமத்திலே சொல்லப்பட்ட பசுபதிபாச திரிபதார்த்த ஞானமே ஈண்டு ஞானமென்று சொல்லப்பட்டதாமென்றும் உணரற்பாற்றும். இந்த வாயுசங்கிதை சொல்லிய கருத்துக்கொண்டே வைதிககாமிகாதி இருபத்தெட்டு ஆகமங்களுள்ளே இருபத்தைந்தாவதாகக் கணிக்கப்படும் சர்வோக்தம் என்னும் ஆகமத்துக்கு உபாகமமாய் நின்ற சிவதருமோத்தரத்து ஐவகையாகவியலிலே,

> செய்துசிறக்கச்சிவபூசைசேர்தீவளர்க்கைமுதல்கரும
> கையவுடலம்விரதத்தைநவிற்றலாதிதவஞ்செபமும்
> பையப்பயிற்றல்பிறர்செவியிற்படாதுபயிற்றன்மந்திரத்தை
> மையலகலமனத்தாலும்வகுக்கையெனமூவகைத்தாமே.

ஒப்பி லமலன்றனை யுணர்த்து முறையை யோத லோதுவித்தல், செப்பும் பொருளைத் திரிவுமறத் தெளிகை பிறரைத் தெளிவிக்கை, தப்பாததனை மனத்தகத்தே தரிக்கையென வுந்தானைந்தாம், வைப்பா யருந்தா மருந்தாகிச் சிறந்தஞான மகவினையே.

> அறைந்தகருமயாகமுதலைந்துமொன்றுக்கொன்றதிகஞ்
> சிறந்தபலமும்போகவிதஞ்சிந்தைசெய்தபயனெல்லா
> மறைந்துதீயவினைமாய்கைவரதனுருவமெனவடிவ
> மிறந்தும்பிறந்துமிளையாதேயிருக்கையென்னுமிவையைந்தும்.

என்னும் செய்யுட்களால், கருமயாகமாவது சிவபூசை செய்தல் சிவாக்கினிவளர்த்தல் முதலிய கன்மங்களாமென்றும், தபயாகமாவது சிவபிரானையுற்றுச் செய்யும் சிவவிரதங்களினாலே தேகத்தை வாட்டுதலாம் என்றும், செபயாகமாவது ஸ்ரீபஞ்சாக்ஷரமுதலிய மந்திரங்களை மானசமுறைமுதலியவுறச் செபித்தலாம் என்றும், தியானயாகமாவது விஷயங்களிலே மனசைப் போகவொட்டாது நிறுத்திச் சிவபிரானை அன்பினாலே இடையறாது தியானித்தலாம் என்றும், ஞானயாகமாவது சிவாகமங்களைக் கேட்டுச் சிந்தித்தலாதியாம் ஞானபூசையாமென்றும், கன்மயாகமுதலிய வைந்தும் பலத்தினால் ஒன்றுக்கொன்று உயர்வுடையனவா மென்றும் மேலேகூறிய வாயுசங்கிதைக்கு மாறுபடாது கூறிய உண்மை தெளியப்படும். வாயுசங்கிதையிலே காமிகாதி ஆகமங்களை அசிரௌதமென்று கூறியதற்கு அவைதிகமெனப் பொருள்படுத்தல் கூடாதாம் என்று “வைதிகசைவ சுத்தாத்துவித சைவசித்தாந்தவிஷயம்” என்னும் புஸ்தகத்திலே அதிப்பிரபல பிரமாணங்களோடு விரித்தெழுதப்பட்டிருக்கின்றமையின் ஆண்டுக்காண்க. முண்டகம் சாந்தோக்கிய முதலிய வைதிகபாசுபத யோகோபநிடத முடிபுகொண்டு வாயுசங்கிதை

> முக்த꞉ ஶிவஸமோ பவேத் ।

முத்தன் சிவசாமியத்தை அடைகின்றான் என்று சொல்லிய நெறியானே, ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் சிவமும் ஆன்மாவும் சாமியமாய் நிற்குநிலையை உணர்த்துமிடத்திலே வேதாந்த சூத்திரத்துச் சைவபாஷ்யத்திலே,

> கதாஸ்ய முக்தஸ்ய ஶிவஸாம்யஸ்ய ஸர்வஜ்ஞத்வ மநாதிபோதத்வம் நித்யத்ருப்தத்வம் ஸ்வதந்த்ரத்வம் ஸர்வஶக்தித்வம் அலுப்தஶக்தித்வம் அநந்தஶக்தித்வம் ச ஶ்ருதி।

சர்வஞ்ஞத்துவம் (முற்றறிவு), அநாதிபோதம் (இயல்பாகவே பாசங்களி னீங்கிநிற்றல்), திருப்தி (வரம்பிலின்பமுடைமை), சுவதந்திரத்துவம் (தன்வயமுடைமை), சர்வசக்திமத்துவம் (சர்வவல்லமை), அலுப்தசக்தி (பேரருளுடைமை), அனந்த சக்திதவம் (முடிவிலாற்றலுடைமை) என்னும் குணங்கள் சிவனுருக்குச் சாதிருச்சியமாக முத்தனுக்கு உரியவாம் என்று கூறியிருக்கின்றார். இந்த ஞானயோகம் பேசப்போகும் அவசரத்திலே சிவஞானசித்தியார் ஒன்பதாஞ் சூத்திரமும் "தீ இரும்பைச் செய்வதுபோல இறைவனுக்குரிய முற்றுணர்வு முதலிய எண்குணங்களும் படிகம் போலச் சார்ந்ததன்வண்ணமாமியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவித இயல்பானே ஆன்மாவின் மாட்டுவிளங்கித் தோன்றுவதே சிவானந்த மேலிடுவதாம்" என்ற கருத்தினுல்,

"சிவனுளத்தே தோன்றித் தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன்றன்னைப், பந்தனையையறுத்துத் தானுக்கித் தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன்பாலே."

என அக்கருத்துப்பற்றிக் கூறியதாமென்க. இந்தச் சிவசாமிய நிலையுற்ற யோகிகள் ஞானயோகிகள் எனப்படுவாரென்றும், இந்த ஞானயோகிகளுக்குத் தானம் (புநராவர்த்தியில்) மீளப்பிறவியிற் செலுத்தாத மகாகைலாச பிரமலோகமெனப்படும் சிவலோகமாம் என்றும் சாந்தோக்யோபநிடத முதலியவற்றின் முடிபுகொண்டு சைவபாஷ்யகாரர் உரைத்தாராக, இதற்கிசைந்தே சர்வஞானோத்தராகமமும் ஞானயோகம்பற்றிப் பேசுமிடத்து,

ஸர்வஜ்ஞதா த்ருப்தி ரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தஶக்தி: । அநந்தஶக்திஶ்ச நிராமயாத்மா விஶுத்ததேஹ: ஸஶிவத்வமேதி ॥

ஆன்மாவானது சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரத்துவம், அலுப்தசக்தி, அனந்தசக்தி, நிராமயாத்மத்வம், விசுத்ததேகம் என்னுங் குணங்களைப் பெறுதலாகிய சிவத்துவத்தை அடைகின்றது என்று கூற, சிவதருமோத்தரம்.

அதற்குமேலுமையாள்புரமற்புத
மதற்குமேற்சிவலோகமென்றுய்கவே
யதற்குறும்வளம்வாக்கினடங்கிடா
வதற்குப்புக்கவர்மீள்பவரல்லரே.

"மகாசிவலோகத்தின் வளம் வாக்குக்கடங்காது, அந்த மகாசிவலோகத்தை ஞானயோகத்தினு லடைந்தவர்கள் மீளப்பிறவியெடார்கள்" என்று கூறுதலால், வைதிகாகமங்களும் முன்னர்க்கூறிய பாசுபதயோக சிவாத்துவிதோபநிடதங்களுக்கும் வேதாந்த சூத்திர முதலியவைகளுக்கும் மாறுபடாது ஒரே முடிபுகாட்டி நின்றவாறு காணப்படுகின்றது. ஆதலால் ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர்,

ஶிவாகமோ த்விவித:, த்ரைவர்ணிகவிஷய: ஸர்வவிஷயஶ்சேதி । வேதஸாரத்வாத் த்ரைவர்ணிகவிஷய: । ஸர்வவிஷயஸ்த்வந்ய: । உபயோரேக ஏவ ஶிவ: கர்த்தா । வஸ்து வேத ஶிவாகமயோர்பேதம் ந பஶ்யாம: । வேதோऽபி ஶிவாகம: ॥

சிவாகமம் மூவருணத்தாற் குரியதும் நால்வருணத்தாற் குரியதுமென இருதிறப்படும் எனவும், அவற்றுள்ளே மூவருணத்தார்க்குரியது வேதமெனவும், நால்வருணத்தார்க்குரியது மற்றைச்சிவாகமுமாம் எனவும், இவ்விரண்டிற்குங் கர்த்தா சிவபெருமானேயாம் எனவும், வேதம் சிவாகமம் என்னும் இரண்டிற்கும் பேதம் கண்டிலேம். வேதந்தான் சிவாகமம் எனவுங் கூறியிருக்கின்றாராதலினுலும், வேதாந்தம் ஆகமாந்தம் என்னும் இரண்டும் பெரியோர்க்கு அபேதமாம் என்ற கருத்தினுல் ஸ்ரீமூலர்

நாதனுரையிவை நாடிலிரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க்கபேதமே.

என்று மொழிந்தாராதலினுலும், அவ்வாறே வைதிகபாசுபத யோகத்தை முடிவாய்க்கொண்டு பேசிய அதர்வசிகைமுதலிய உபநிடதங்களும் ஞானயோகம் பேசியவிடத்து வைதிகசிவாகமங்களும் முடித்துக் காட்டியநிலையும் ஒன்றாய் முடிபுபெற்றமைகாண்க. இதனுல் வைதிகபாசுபத யோகோபநிடத நெறியாலும் வைதிகசிவாகம ஞானயோகநெறியாலும் எய்தும் முத்திநிலை ஒன்றுமென்பது உணரற்பாற்றும்.

அருணந்திசிவாசாரிய சுவாமிகள் ஞான பாதத்திலே உள்ளார்க்கு ஞானயோகக்கிரியை சரியை என்னும் நான்குபாதமும் உரியவாம் என்னும் கருத்தினுல்,

"ஞானயோகக் கிரியாசரியைநாலு நாதன்றன்பணி ஞானி நாலினுக்கு முரியன்"

என்று கூறினமையாலும், வாயுசங்கிதை

வேதஸாரம் ஶிவஜ்ஞாநம் ஸ்வாஶ்ரிதாநாம் விமுக்தயே ।

தன்னை ஆசிரயித்தவர்களுடைய முத்தியின் பொருட்டுள்ளது வேதசாரமாகிய சிவஞான ஆகமமாம் என்றும்,

ஶிவாகமோக்தவிஜ்ஞாநம் ஜ்ஞாநம் நாந்யதுதீரிதம் ।

சிவாகமத்திலே சொல்லப்பட்ட (பதிபசுபாசம் என்னும்) திரிபதார்த்த விஞ்ஞானமே ஞானம் என்றும்,

பஶுபாஶபதிஜ்ஞாநம் ஜ்ஞாநமித்யபிதீயதே ।

பசுபதிபாச ஞானமே ஞானமென்று சொல்லப்படும் என்றும்,

ஶிவாகமோக்தம் யஜ்ஜ்ஞாநம் தத்தஜ்ஜ்ஞாநமுதீர்யதே ।

சிவாகமத்திலே சொல்லப்பட்ட ஞானமே ஞானமென்றும் கூறுமாற்றுல், வைதிகசைவ சுத்தாத்துவித சைவசித்தாந்த ஞானபாத நிலையிலுள்ளார்க்கு வைதிகபாசுபதயோகம் கூறும் ஈச கேந கட பிரசிந முண்டக மாண்டூக்கிய ஐதரேய தைத்திரீய சாந்தோக்கிய பிருகதாரண்ணிய கைவல்லிய காலாக்கினி ருத்திர பிருகச்சாபால சாபால பஸ்மசாபால நிருசிம்மோத்தர தாபநி அதர்வசிரசு அதர்வசிகை முதலிய சிவாத்வைத பாசுபத யோகோபநிடதங்களும் அவற்றின் உபப்பிரும்மணங்களாகிய சிவாகமத்திலே பிரதிபாதிக்கப்பட்ட யோகபாதமும், மற்றைச் சரியை கிரியாபாதங்களும் உரியவாமென்க.

நிஷ்களாதீத சிவநிலையையுடைய வைதிக சைவசித்தாந்த ஞானபாதத்தார் குடிலை எல்லையைக்கடந்து நிற்பவராதலால்

இவர் பேசும் சிருட்டியுண்மையும், நிஷ்கள சிவநிலையையுடைய வைதிகசைவ பாசுபதயோகசிவாத்துவிதிகள் சிவதத்துவத்தினின்று வேறுபடாத குடிலையையே முடிந்த எல்லையாய்க்கொண்டு நிற்பவராதலில் இவர் பேசும் சிருட்டியுண்மையும் முறையே கேவல நிமித்தகாரணமும் நிமித்தோபாதானமுமாய் அந்தந்தநிலைக்குத்தகப் பேசியது தக்கதேயாம். அதனால் விரோதமுமின்றாம். மேலும் சைவத்துக்கு அந்தரங்க உரிமையுடைய பாஷாணவாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சங்கிராந்தவாதசைவம், ஈசுரவவிகாரவாதசைவம், சிவாத்துவிதசைவம் என்னும் அறுவகை அகச்சமயங்களுள்ளே வேதாந்தருத்திர நீலகண்டசிவாசாரியர்து பாசுபதயோகசிவாத்துவித யோகமே தலையாயதாய் நின்றவாறு நன்கு துணியப்படும்.

சிவார்க்கமணி தீபிகை வருமாறு:—வாதிராயண முனிவர் எனப்படும் வியாசபகவான் அருளிய பிரமசூத்திர ரூபமாயுள்ள வேதாந்த மீமாஞ்சா சாஸ்திரத்துக்கு லோகோபகாரமாகப் பாஷ்யஞ்செய்கின்ற ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் இடையறாச் சிவத்தியானத்தினாலே தமக்கு இடையூறு சிறிதும் அணுகப்பெறாராயினும் சிஷ்டாசாரம் பாதுகாத்தற்பொருட்டு வழிபடுகடவுளாகிய சிவபிரானைத் துதிப்பாராயினர்.

சைவபாஷ்யகாரர் அருளிய முதலாவது சுலோகம்வருமாறு:

ஓம் நமோஹம்பதார்த்தாய லோகாநாம் ஸித்திஹேதவே । ஸச்சிதாநந்தரூபாய ஶிவாய பரமாத்மநே ॥

(இ - ள்.) ஓங்காரப் பொருளும், பரமாத்மாவாகிய சிவபிரானும், சச்சிதானந்த ரூபரும், (புண்ணிய) லோகங்களை (ஆன்மாக்கள்) அடைதற்குக் காரணராயுள்ளவரும், அகம் என்னும் பதத்தினாலே சுட்டப்படுகின்ற ஆன்மாவுக்கு அந்தரியாமியுமாயுள்ளார்க்கு நமஸ்காரம்.

சிவார்க்கமணிதீபிகை வருமாறு:—ஸ்ரீ நீலகண்டசிவாசாரியர் தகரோபாசனை செய்யும் இயல்பினையுடைய ராதலினால் அத்தகரவித்தையை விளக்கும் "ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்" என்று மீட்டும் மீட்டும் அன்பு மேலீட்டினால் இச்சைவபாஷ்யத்திலே வியாக்கியானஞ் செய்வாராயினர். சிவவித்தையிலே ஆசாரியர்க்குப் பிரியமுண்மையால், சுரீமாதி அதிகரணத்திலே சாண்டில்லிய வித்தை முதலிய பரவித்தைகள் அனைத்தினும் தகரவித்தையே சிரேஷ்டமுடையதென்று உரைக்கின்றார்.

தமது சாகையிலே சொல்லப்பட்டு தகரவித்தையையுற்று உபாசிக்கற்பாலரும் நமஸ்கரிக்கற்பாலருமாயுள்ள பரம்பொருளாகிய சிவபிரானை "பரமாத்மா" என்னும் விசேஷார்த்த மொழியினால் ஈண்டு விதந்தார். "நாராயணனின் இதயாக்கினி சிகையிலே பரமாத்மா உளர்" என்று தைத்திரீய மகாநாராயணோபநிடதத்திலே சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப் பரமான்மாவைச் சிவபிரானாகாத மற்றொருவராம் என்று கொண்டு சிலர் பிறரை மயங்கவைக்கின்றார்கள். அந்நெறியானே சாதுக்கள் மயங்கவொண்ணாதென்று கொண்டு "பரமாத்மா" எனப்பட்டவர் ஈண்டுச் சிவபிரானேயாம் என்றுணரச் "சிவ" சப்தத்தை விசேஷமாகப் புணர்த்திக் கூறினர். ஸ்ரீ நீலகண்டசிவாசாரியர் தகரவித்தையிலே உபாசிக்கப்படுபவர் பரமான்மாவாகிய சிவபிரான் என்று சாரீராதிகரணத்திலே மிகு சாமர்த்தியத்தோடு பேசுவார். அவ்வாறாயினும் தைத்திரீயோபநிடதத்திலே போற்றப்பட்ட பரமாத்மா என்னும் சப்தத்தை விசேஷித்துப் பேசும் பொருட்டு உபக்கிரமத்திலே (தொடக்கத்திலே)

யாதஸ்ய ப்ரஸாதாநுமஹிமோ ஸ ஈஶ:।

சிவப்பிரசாதத்தினாலே மகிமாதிசயத்தோடு கூடிய ஈசர் என்றும்,

ய: பரஸ்ஸ மஹேஶ்வர: ।

"எவர் மேலானவரோ அவர் மகேசுவரர்" என்றும் உபசங்காரத்திலே

ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் ।

ஊர்த்துவவீரியர் விருபாக்ஷர் என்றுங் கூறப்பட்ட இடத்திலேபோந்த "ஈசர்," "ருத்திரர்," "மகேசுவரர்," "விருபாக்ஷர்" என்னுந் திருநாமங்களுள்ளே ஒன்றை ஈண்டு விதந்து பேசுதல் யுக்தமேயாகவும்,

ஸமேதயதி யந்நித்யம் ஸர்வார்த்தாந் ஸர்வகர்மஸு ।
ஶிவமிச்சந்மநுஷ்யாணாம் தஸ்மாதேஷ ஶிவ: ஸ்ம்ருத: ॥

மனிதர்களுக்கு இன்பங் கொடுக்க விரும்பிப் பொருள்கள் அனைத்துக்கும் ஆகற்பாலனவாகிய உபகரணங்களை எக்காலமும் விருத்திசெய்கின்றவர் சிவபெருமானும் எனப் பொருள்கொண்ட மகாபாரதவசனத்தினால், பரிபக்குவமுள்ள மாணவர்கள் சிவநாம சங்கீர்த்தனஞ்செய்து அதன் மெய்ப்பொருளை அறிதல் வாயிலாக இந்தச் சைவபாஷ்ய பாடாரம்பம் இடையூறின்றி நிகழும் பொருட்டும், சிவப்பிரசாதத்தினாலே எக்காலமும் அச்சைவபாஷ்ய பாடமானது முற்றுப்பெறும் பொருட்டும், சகல புருஷார்த்தம் சித்திக்கும் பொருட்டும், ஈண்டுச் "சிவ" சப்தம் விசேஷித்துரைக்கப்பட்டதெனவுங் கொள்க.

ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத் ।

இதயத்தை நோக்கி மநுஷ்யாதிகாரம் என்னும் சூத்திரத்திலே போந்த "மனுஷ்ய" சப்தங்கொண்டு, உபலக்ஷணையினாலே தேவர்களும் ஈண்டுச் சேர்க்கப்படுவார் என்னும் நெறியானே, முன்னர்க் கூறிய மகாபாரதவசனத்திலே போந்த "மனுஷ்ய" சப்தத்தினாலே தேவர்முதலாயினோரும் தழுவப்படுவார் என்க. பின்னரும்.

ஸுராஸுரஸ்ஸந்தி மத்தோ வை தாநவாஸ்ஸாசராஸ்ததா । ஶி
வோஹம் ஸர்வபூதாநாம் ஶிவகாம்க்ஷேதநம் மே லோகா: ॥

தேவர்களும் இராக்ஷதர்களும் என்னிலே (சிவத்திலே) உற்பத்தியாகின்றார், சர்வசேதனப் பிரபஞ்சங்களுக்கும் சிவத்துவத்தைக் கொடுக்க இச்சித்தலால் சிவனாகின்றேன்" என்னும் வசனத்தினாலும் அவ்வுண்மை துணியற்பாலதாம். "சிவன் இச்சித்தலினால்" என்று கூறினமைக்குப் பிரமாணம் எங்ஙனமெனிற் கூறுதும். இச்சையாம் "காந்தி" எனப் பொருள்படும் "வச" என்னும் தாதுவுக்கு "இ" ப்பிரத்தியஞ் செய்து, வர்ண விபர்யயஞ் செய்தலால் "சிவ" என்னும் நாமம் சித்தித்தது. இவ்வுண்மை "இம்சித்தல்" எனப் பொருள்படும் "ஹிம்ச"

தாதுவிலிருந்து "சிம்ம" சப்தமும், "இச்சித்தல்" எனப் பொருள்படும் "வச" தாதுவிலிருந்து "சிவ" பதமும், "பார்ப்பவன்" எனப் பொருள்படும் "பச்யக" (பஶ்யக) என்னும் பதத்திலிருந்து "கச்யப" (கஶ்யப) பதமும் வர்ணவிபர்யயத்தினலே போந்தன என்று அபியுக்தர் சொல்லுமாற்ருல் உணரப்படும். இதனல் சிவசப்தத்துக்கு இச்சிப்பவர் (விரும்புபவர்) என்று பொருள் எய்திற்று. இந்த இச்சை எவ்விஷயத்தில் நிகழ்ந்ததாமோவெனில், தேவர், அசுரர், மனுஷராயினேர்க்குச் சிவபிரான் சிவத்துவஞ்செய்ய விரும்புகின்ருர் என்று முன்னர்க் கூறிய மகாபாரதவசனத்தினல் வெளிப்படையாயிற்று. இன்னும் "சுபம்" (கல்யாணம்) எனப் பொருள்படுகின்ற "சிவ" சப்தம் சுபத்தைச் செய்கின்ருர் என்னும் பொருளிலே (பசாத்யச் பிரத்தியயஞ் செய்தலினல்) போந்தது. இவ்விரண்டு சித்தியினலும் (வியுத்பத்தியினலும்) பரமேசுவரருக்குச் "சிவ" என்னும் சப்தம் எய்திற்று. சிவ சப்தத்தை ஒரு தரம் உச்சாரணஞ் செய்துவிட்டால் சகல பாபங்களும் நசித்துவிடும். இவ்வுண்மை

யஸ்து சண்டாள: ஶிவ இதி வாசம் வதேத் தேந ஸஹ ஸம்வதேத் தேந ஸஹ ஸம்வஸேத் தேந ஸஹ புஞ்ஜீத ।

சண்டாளனயினும் "சிவ" என்னும் சப்தத்தை உச்சரிப்பானயின், அவனேடு கலந்துபேசுக, அவனேடுகூட உறைக, அவனுடனிருந்து உண்ணுக என்றும் முண்டகோபநிடத சுருதியினல் அறியப்படும்.

யத் த்வ்யக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணாம் ஸக்ருத் ப்ரஸங்காதகமாஶு ஹந்தி।

இரு அக்ஷரங்களால் அமைந்த சிவசப்தத்தை நாவினல் ஒரு தரம் உச்சரித்தலால் அது விரைந்து பாபங்களையெல்லாம் நாசமாக்கும் என்று சிவபுராணமுங் கூறிற்று. இவ்விரண்டு சுருதி புராணப் பிரமாணங்களினல் பதினெட்டு வித்தைகளின் சாரமாயுள்ளது சிவசப்தம் என்று பௌராணிகர் வர்ணனஞ் செய்கின்ருர்.

வித்யாஸு ஶ்ருதிருத்க்ருஷ்டா ருத்ரைகாதஶினீ ஶ்ருதௌ । தத்ர பஞ்சாக்ஷரீ தஸ்யாம் ஶிவ இத்யக்ஷரத்வயமிதி ॥

பதினெட்டுவித்தைகளுள்ளும் சுருதி உத்கிருஷ்டமாயிற்று. அச்சுருதிகளுள்ளும் ஸ்ரீருத்திரம் மேலாயிற்று, அவ்வுருத்திரத்துள்ளும் சிவ என்னும் இரு அக்ஷரமும் மேலாயிற்று. எல்லாப் பாபங்களையும் நஷ்டமாக்கும் "சிவ" நாமத்தை முதற்கண்ணே விதந்து கூறுதலால், கேட்பவர்களாகிய மாணவர்களுடைய கேட்டலாதிகளிலே (சிரவணதிகளிலே) நிகழும் இடையூறும் பாபங்கள் நிவிர்த்தியாய் விடுமோதலினல், அங்ஙனம் சிவசப்தங் கூறினமை மற்ருேர் பிரயோசனமுமாயிற்று. இதனல், தைத்திரீய மகாநாராயணேபநிடதத்திற் சொல்லப்பட்ட தகரவித்தையிலே உபாசிக்கற்பாலராய் நின்றவர் பரமேசுவரராமென்பது சிவன், மகேசுவரர், உருத்திரர், விருபாக்ஷர் என்னும் நாமங்களினலே வெளிப்படையாயிற்று.



உபநிஷதங்களிலே பிரதிபாதிக்கப்பட்ட தகரவித்தியாப் பிரகரணங்களிலே பேசப்பட்ட விசேஷகுணங்களினலே சிவபிரானை விசேடிப்பாராய், "ஓம்" முதலிய நான்கு விசேஷணங்களினலே விதந்தெடுத்துரைக்கின்ருர்.

ஓமிதி ப்ரஹ்ம ।

என்னும் சுருதிப்பிரமாணத்தினலும்,

ஸர்வஸம்ஹரணாத்தரோ விஷ்ணுர்வ்யாபனாதுச்யதே।
பகவான்ஸர்வவிஜ்ஞாநாதவநாதோமிதி ஸ்ம்ருத: ॥

அனைத்தையும் நாசஞ் செய்பவராதலினல் அரன் எனவும், வியாபகரா யிருத்தலினல் விஷ்ணு எனவும், சர்வஞ்ஞராதலின் பகவான் எனவும், காப்பவராதலினல் "ஓம்" எனவும் நாமங்கள் சிவபிரானுக்குப் போந்தன என்னும் கூர்மபுராணப் பிரகரணத்தினலும், "ஓம்" என்பது பரப்பிரம (சிவ) வாசகமேயாம். பிரணவம் "இரக்ஷித்தல்" என்னும் பொருளிலே போந்தமைக்குப் பிரமாணம் வருமாறு:—

அவதேஷ்டிலோபஶ்ச ।

என்னும் உணதி சூத்திரத்தினலே இரக்ஷணர்த்தத்திலுள்ள "அவ" என்னும் தாதுவுக்கு "மந்" பிரத்தியயஞ் செய்து, அந்தப் பிரத்தியயத்து, "அந்" என்னும் "டி" க்கு லோபஞ்செய்தலால் அவ்+ம் என்று நிற்ப,

ஜ்வரத்வரஸ்ரிவ்யவிமவாமுபதாயாஶ்ச ।

என்ற சூத்திரத்தினலே "அவ" என்னும் தாதுவிலுள்ள அகரத்துக்கும் வகரத்துக்கும் தனித்தனி ஊகாரஞ் செய்தலால் (ஊ+ஊ+ம்) என நிற்குங்கால்

அக: ஸவர்ணே தீர்க: ।

என்னும் சூத்திரத்தினலே "ஊம்" என நின்று,

ஸார்வதாதுகார்த்ததாதுகயோ:।

என்னும் சூத்திரத்தினலே குணமாகி "ஓம்" என முடிந்தது. இதனல், "சிவ" என்பது "சிவாய" என நான்காவது வேற்றுமையிலே நிற்க, "ஓம்" என்னும் பதமும் அவ்வாறு நான்காவது வேற்றுமையிலே யிருக்கவேண்டுமோவெனில்,

ஸ்வராதி நிபாதமவ்யயம் ।
அவ்யயாதாப்ஸுப: ।

என்னும் சூத்திரங்கள் இரண்டனுள் ஒன்றினல் லோபமாயிற்று.

ய: புநரேதம் த்ரிமாத்ரேணோமித்யேதேநைவாக்ஷரேண பரம் புருஷமபித்யாயீத।

எவன் மும்மாத்திரையையுடைய பிரணவவாயிலாகப் பிரதம புருஷராகிய சிவபிரானைத் தியானஞ் செய்கின்ருனே எனப் பொருள்கொண்ட அதர்வணவேதிய பிரசிநோபநிடதத்திலே பிரதி பாதிக்கப்பட்ட தகரோபாசனை புத்திப் போந்த அகார உகார மகாரம் என்னும் மும்மாத்திரப் பிரம (சிவ) வாசகமாகிய "ஓம்" என்னும் பதம் ஈண்டு பிரயோகிக்கப்பட்டது.

பசுவை (ஆன்மாவை) நோக்கி (ஸஹம்) "அஹம்" என்னும் பதம் பிரயோகஞ் செய்யப்பட்டமை ஆன்மாவானது அந்த ரான்மாவோடு (சிவத்தோடு) பின்னமற்றதாய் முக்கியலாபத்தை யுணர்த்தும் (ஸஹம்பதார்த்தாய) "அஹம்பதார்த்தாய" என்று கூறப்பட்டதாம். பிருக தாரணியத்திலே சொல்லப்பட்ட தகரவித்தியாப் பிரகரணத்திலே போந்த

ஸஹமேவேதம் ஸர்வோऽஸ்மீதி ஏதந்தேவாஸ்ய வாசோவாகः ।

"நானே எல்லாமாயிருக்கின்றேன் என்றிருக்கின்றனே அவன் சிவலோகத்தான்" என்னும் வாக்கியத்திலே உரைக்கப்பட்ட சிவ (ஆன்ம) வாசகமாகிய "அஹம்" பதத்துக்கும் அந்த ரான்மாவாகிய பரமான்மாவுக்கும் (சிவத்துக்கும்) உள்ள அபரிச்சின்னமாகிய ஐக்கியத்தையும், பரமான்மாவின் குணத்தையும் விளக்கும்பொருட்டு அங்ஙனம் பிரயோகிக்கப்பட்டதுமாய சாந்தோக்கியோப நிடதத்திலே

ஸதேநாஸ்ய உஹா த்தாந ஏநீவிஷ்ய வ்ரஜந்தி வஸ தாஸ்ஸ ஸத்யாந் காமாந்தேஷாம் ஸர்வேஷு லோ கேஷு காமசாரோ பவதி ।

பரமாத்ம (சிவ) ஞானத்தோடு உள்ளவர்களுக்கு எல்லாவுலகங்களினும் சமஸ்தசத்திய ஆசைகளும் முற்றுமாம் என்று சொல்லப்பட்டவாறு, தகரோபாசனை செய்பவர்க்குப் பலன் கொடுத்தற்குச் சிவபரப்பிரமமே காரணராதலினல் அதனை அவ்வாறு விசேஷித் துணர்த்தும்பொருட்டு அங்ஙனம் பிரயோகிக்கப்பட்டதுமாம்.

தமாதி மத்யாந்தவிஹீநமேகம் விபுஞ்சிதாநந்த மரூபமத்புதம் ।

ஆதி மத்தியாந்தமில்லாதவரும், ஏகரும், வியாபகரும், சிதானந்தரும், அற்புதருமாம் என்று கைவல்லியோப நிடதத்திலே சொல்லப்பட்ட "பரமாத்மாவின்" சச்சிதானந்த ரூபத்தை விளக்கும் பொருட்டே "சச்சிதாநந்த ரூபாய" என்று விசேஷித்துச் சொல்லப்பட்டது.

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், அதிசாந்தரும், பூத யோனியுமாகிய சமஸ்த சாக்ஷியுமாயுள்ளாரைத் தியானித்து மகான்கள் பிரகிருதிக்கு மேலே செல்வாராயினர்" எனப் பொருள்கொள்ளும் கைவல்லியோபநிடத மந்திரத்திலே, பரப்பிரமமாகிய சிவனர் "பூதயோனி" விசேஷணத்தோடு போற்றப்பட்டார். இதனல் சமஸ்தகாரியங்களுக்கு உபாதானம் சொல்லப்பட்டதாயிற்று. தயிரின் இயல்படைந்த பால்போல, சிவபிரானும் சகல காரியப்பிரபஞ்சவியல்பை அடைந்தாராக அதனல் அவருக்குள்ள "சச்சிதானந்தம்" என்னும் விசேஷணம் எடுபட்டுப்போமாதலில் ஆதி மத்தி அந்தமுள்ள பிரபஞ்சத்தைக் கடந்தவர் என்பது போதர

ஆத்யந்தவிஹீநம் ।

"ஆதி மத்தியாந்த மிலாதவர்" என்னும் விசேஷணம் புணர்த்தப்பட்டதாமென்க. பின்னும் பிரபஞ்சத்தை "அஸத்" என்பது காட்டி, அந்தச் சடதோஷம் சிவபிரானர்க்கு இல்லையாமென்பது உணர்த்த 'சத்' என்னும் விசேஷணம் கொடுக்கப்பட்டது. படவே, சிவபிரான் எக்காலமும் சச்சிதானந்தருபரேயாய், சத்துத்தன்மையை ஓர்காலும் நீங்காதவர் என்பது பெறப்பட்டது.

ஈண்டு இந்த உத்தரமீமாஞ்சா சாஸ்திரத்திலுள்ள நான்கு அத்தியாயங்களினும் சொல்லப்பட்ட அர்த்தங்களுக்கியையவே பரமான்மாவாகிய சிவனர் "ஓம்" முதலிய நான்கு விசேஷணங்களினலே புணர்த்தப்பட்டார். படவே, ஞானம் அனைத்தினும் மொழியப்படுவதும், பிரமசரியர்களா யிருக்குங்கால் அவரால் விரும்பப்படுவதும், எல்லா வேதங்களாலும் பேசப்படுவதுமாகிய பலத்தை உனக்குச் சுருக்கிச் சொல்கின்றேன் என்னும் பொருளைக்கொண்ட

ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீமி ।

என்ற மந்திரத்தினலே கூறி, பின்னர்

ஓமித்யேதத் ।

அப்பதம் "ஓம்" என்பதாம் என்றும், அது அக்ஷரமாகிய பிரமம் என்றும் கடவல்லி யுபநிடதங் கூறுதலினல், "ஓம்" என்னும் பதத்தினலே விசேஷிக்கப்பட்ட பரப்பிரம சிவத்திலே சர்வவேதங்களும் போய் அமைவுபெறுகின்றனவாமென்க. பிரணவ சம்பந்தமாகிய அகார உகார மகாரம் என்னும் மூன்றும் இருக்கு யசுர் சாமரூபமாயுளதாய், அதர்வண வேதோப நிடதங்களினும் பிரபஞ்சசாரத்தினும் பேசப்பட்டுளது. இன்னும் அகாரமானது இருக்கு வேதத்தின் முதலிலேயுள்ள (அக்நிமீளே) "அக்கிமீளே" என்னும் மந்திரத்தின் முதலிலும், உகாரமானது (ஸமுத்ராதூர்மி) "சமுத்திரோபந்து" என்னும் அந்த (இருக்கு) மத்திய வேதத்து மத்திய மந்திரத்தினும், மகாரமானது (ஸமாநம்வ:) "சமாநம்பரம்" என்னும் அந்த (இருக்கு) அந்திய வேதத்து அந்தத்தினும் போந்தமையால், (இருக்கு) வேதம் முழுமையும் தொகுப்புறப் பிரணவமாயிற்று. வேதத்தினலே பிரதிபாதிக்கப்பட்டது பிரணவமாதலில், நூற்றில் ஐம்பது.

ஸர்வதேவத்யாஸ: ।

என்னும் நியாயங்கொண்டு பிரணவத்தினலே விசேஷிக்கப்பட்ட பரப்பிரமசிவத்துக்கே சர்வவேதாந்தப் பிரதிபாத்தியம் சித்தித்தவாருயிற்று.

தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி ।

என்னும் மந்திரத்திலே "தபசு" என்னும்பதம் "ஞானம்" எனப் பொருள்படும்; "ஆலோசனை" (ஞானம்) எனப் பொருள்படுவது "தப" என்னும் தாது மொழியா மாதலினென்க. இதனல் வேதாந்தத்து ஞானமே பிரதானமென்பது சாற்றப்பட்டது. வேதாந்த விஷயமாயுள்ள பிரணவபதத்தினலே விசேஷிக்கப்பட்ட விசேஷ்யமாகிய சிவத்தையே வேதாந்தம் பிரதிபாதிக்கின்றது. அங்ஙனமாயினும், வேதாந்தத்திலே பிரமத்தைப் பிரதிபாதித்தற்கு வேறு விசேஷணங்கள் புணர்த்தாது

"ஓம்" என்னும் பதத்தினாலே விசேஷித்தது என்னையெனில், சுலோகத்து முதற்பாதத்திலே "ஓம் நமஃ" என்னும் பதமும், நான்காவது பாதத்திலே "சிவாய" என்னும் பதமும் புணர்ந்து, (ஒ நமஃ ஶிவாய) "ஓம்நமஃசிவாய" என்னும் மகாமந்திரதியான ஸ்மரணை மாணவர்களுக்கு எய்தும் பொருட்டே யாமென்க.

வாஹ்ஹண ஶிவஸ்ராத்விதீயகவா ஹ்ர-வமஜெ வெதஶ்ர-தீநாம் விரொய ஶத்விதீயகவா ஹ்ர-வ மஜெ வெதஶ்ர-தீநா ஶித்விரொயம் ।

பரப்பிரமசிவத்துக்கு அத்துவிதீயப்பிரமம் என்று பொருள் பண்ணில் அத்வைதசுருதிக்கு விரோதமாகும்; துவிதமாகச் சொல்லில் அத்துவிதத்துக்கு விரோதமாகும் என்னும் சங்கை நிகழுங்கால், அதனை நிவாரணஞ்செய்யும் பொருட்டே, சமஸ்தப் பிரபஞ்சாகார பரமசத்திவிசிஷ்ட பரமேசுவரருக்கு அத்துவிதீயம் உண்மையானும், ஆன்மாவுக்கும் அந்தர்கதமாயுள்ள பரமேசுவரருக்கும் பேதமின்மையானும், அவ்விரோதமின்மையுணருமாறு இரண்டாம் அத்தியாயத்தின் பொருளாயுள்ள "அஹம்" என்னும் பதத்தினாற் சுட்டப்படும் பசுவாகிய ஆன்மாவுக்கு அந்தரியாமியாயுள்ளார்எனப் பொருள்படும் "அஹம்பதார்த்தாய" என்னும் விசேஷணவாயிலாகச் சிவமாகிய "பரமாத்மா" விசேஷிக்கப்பட்டார். இதற்கு ஸ்ரீகண்டசிவாசாரியர் நான்காம் அத்தியாயத்திலே "அஹம்" என்னும் பதத்தைச் சகலப் பிரபஞ்சாகார பராசத்திவிசிஷ்ட சிவாத்வைத வாசகமென்று சொல்வாராவர்.

எவர் பரமான்மாவாகிய சிவபிரானைப் பார்க்கின்றார்களோ, (எனவே, சாக்ஷாத்காரஞ் செய்கின்றார்களோ)

வொகயஜெ ஷூ தூநஶிதிவொகஃ ஶிவஸாக்ஷாசு காரவஞஃ ।

"அவர்க்கு முத்தியாம் பலலாபத்துக்கு ஏதுவாயுள்ளவர் சிவபிரானே" என்று காட்டுமாறே "வொகா நாம் ஸிஶிஹெதவெ" என்னும் விசேஷணம் அவ்வாறு கொடுக்கப்பட்டதாமென்க. இதனால் சிரவணமனன உபாசனை செய்தபின் சாக்ஷாத்காரஞ் செய்யப்பட்ட பஞ்சகிருத்திய காரணராகிய சிவபிரான்தான் முத்தி கொடுப்பவர். இதனால், சிவபிரானே முத்திக்குக் காரணர் என்பது மூன்றாம் அத்தியாயத்தினாலே சொல்லப்படும்.

"சச்சிதானந்தரூபாய" என்னும் விசேஷணத்திலே போந்த "ஆனந்தரூபம்" என்னும் பதத்தினாலே, நிரதிசயானந்தமாயுள்ள பரப்பிரம சிவானுபவத்தை அவர் முக்தர்களுக்குப் பலமாகக் கொடுப்பவரென்பது போதருதலினால் அவ்வாறு விசேஷிக்கப்பட்டது.

வாஶம்ஸாஶ்ரஶ-வெதி ।

"சிவ பரமசாமியத்தை அடைகின்றான்" எனப் பொருள்படும் முண்டகோப நிடதவாக்கியத்தினாலே பிரமசாமியமே ஆன்மாவுக்கு முக்திபலம் என்று கேட்கப் படுகின்றது. அங்ஙனமாயில் அநுபவிக்கப்படுதலினால் பிரமத்தின் ஆனந்தம் பிரமத்தின் பலமாயின் அப்பரமானந்தம் முக்தனுக்கும் பலமாயுளதாம் என்னும் உண்மை உணர்த்தும் பொருட்டே "ஆனந்தம்" என்பது "சித்" என்று விசேஷிக்கப்பட்டது. ஆனந்தவல்லியிலே நிரதிசயானந்தமாயுள்ள பரப்பிரமசிவனார் ஆத்மாவுக்கு ஆனந்தரூபமாகிய மற்றோர் ரூபத்தைக் கொடுக்கின்றார் என்று கேட்கப்படுதலால், ஓர்கால் ஆனந்தரூபம் ஆத்மாவுக்கு இல்லையாதல் உண்மை பெறப்பட்டு முக்தர்களுக்கும் ஆனந்த போக்கியபலம் அநித்தியமாகுமே என்னும் ஆக்ஷேபத்தை அறுக்குமாறு "சிதானந்தம்" என்பது "சத்தினால் விசேஷிக்கப்பட்டு சச்சிதானந்தம்" என முடிந்தது.

சிவன்தான் உலகத்துக்கு உபாதான காரணராயினும் அதிகாரியாயிருக்கின்றார். இதைப்பற்றிப் பிரகிருதி அதிகரணத்திலே ஆசாரியர் (ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர்) ஸ்தாபனஞ் செய்வார். இவ்வாறு நமஸ்கார ரூபமாகிய சுலோகத்தைச் செய்து இப்பொழுது பரப்பிரம சிவவஸ்துவைக் குறித்துச் சுலோகஞ் செய்வாராயினார்.

சைவபாஷ்யகாரர் அருளிய இரண்டாவது சுலோகம் வருமாறு:

நிஜஶக்தி ஹித்தி நிர்மித நிகிலஜகஜ்ஜால சித்ர நிகுரும்பஃ
ஸஜயதி ஶிவஃபராத்மா நிகிலாகமஸாரஸர்வஸ்வம்॥

(இ - ள்.) தமது பராசத்தியாகிய பித்திகையிலே நிருமிக்கப்பட்ட சமஸ்த (சேதன சேதனப்) பிரபஞ்ச ஜால சித்திர சமூகத்தை யுடையரும், சகல நிகமாகம (வேதாகம) சாரநிதியாயினவருமாகிய அந்தப் பரமாத்மாவாம் சிவனார் உத்கிருஷ்டராகின்றார்.

சிவார்க்கமணிதீபிகை வருமாறு:—இச் சுலோகத்திலே (ஸஃ) அவர் என்னும் பதத்தினாலே சம்சாரியாகிய சீவனுக்கு வேறாய் எக்காலமும் தோஷமில்லாத சகல மங்கல நிதியாகிய பரமாத்மாவாகிய சிவனே உத்தமபுருஷராவார் என்பது குறிக்கப்பட்டது. எனவே, சிவனிடத்திலே அநாதிமல சடப்பற்று இயல்பாகவே இல்லையாமாதலின் அவர் அத்தியந்த பரிசுத்த பரமாத்மாவாகிய சிவன் எனப்பட்டார். அனந்தகல்யாணத்துக்கு ஓர் நிதியாயுள்ளவர். ஈசுவரனாகிய சிவனுமெனச் சிவதத்துவத்தை அறிந்த சத்துக்கள் சொல்லுகின்றார்கள் எனலுமாம். இப்பொழுது சிவனாருக்குக் கல்யாண குணரூபநிதியும் சர்வோத்கிருஷ்டமும் குறிப்பித்தற்பொருட்டே (ஜய்தி) "உத்கிருஷ்டராகின்றார்" என்னும் பதம் கொடுக்கப்பட்டது. எஞ்சிய இரண்டு விசேஷணங்களினாலும் சிவபிரானுக்கு உலகத்துக்குக் காரணஞ் சாற்றப்பட்டது. எங்ஙனமெனில், அவருடைய பராசத்தியாம் சுவரை (பித்தியை) ஆசிரயித்து இடைக்கணுள்ள சமஸ்த சகச்சால (சமூக) மாகிய சித்திரத்தை எழுதுகின்றார். இதனாலே பராசத்திவாயிலாக உலகசிருஷ்டி செய்பவர் என்பதாம். சமஸ்த ஆகமங்களுடையவும் உபநிஷதங்களுடையவும் சாரமே அவருடைய எல்லாநிதியுமாம். ஆகவே, மிருதியும் நிதிபோல ஆதரிக்கற்பாலராய் ஆகம உபநிஷதங்களினாலே பிரமாணிக்கப்பட்டவர் சிவபிரானே யாம் என்பது காட்டப்பட்டது.

இப்போது ஆசீர்வாதச் சுலோகஞ் செய்கின்றார்.

சைவபாஷ்யகாரர் அருளிய மூன்றாவதுசுலோகம் வருமாறு:

ഭവതു സ ഭവതാം സിദ്ധ്യൈ പരമാത്മാ സർവ്വ
മംഗളോപേതഃ । ചിദചിന്മയഃ പ്രപഞ്ചഃ ശേഷാ
ശേഷോഽപി യസ്യ ശേഷഃ ॥

(இ - ள்.) எவருக்குச் சித்தும் அசித்துமாயுள்ள பிரபஞ்ச முழுமையும் அம்சமாயுளதோ, சர்வமங்கல குணங்களினின்று வேறுறாத உமாசமேதரும், உத்கிருஷ்ட இலட்சுமியோ டிசைந்தவருமாகிய அந்தச் சிவனார் (சைவபாஷ்ய சிரவணஞ் செய்பவர்களாகிய) உங்களுக்குச் சித்திபலமாவாராக.

சிவார்க்கமணிதீபிகை வருமாறு:—அவர் புருஷரும், கிருஷ்ணபிங்கலரும்,

പുരുഷം കൃഷ്ണപിംഗളം ।

என்றற்றொடக்கத்த வாக்கியங்களினாலே புகழப்பட்டவரும், சகல மங்கலமாகிய பராசத்தியாம் கவுரியோடும் சமஸ்தகல்யாண குணங்களோடும் கூடியவருமாயுள்ள பரமாத்மாவாகிய சிவனார் உங்களுக்கு (சுரோதாக்களாகிய மாணவர்களுக்கு) அநுக்கிரகஞ் செய்து விரும்பிய சம்பூரண இஷ்டசித்தியின் பொருட்டு மாவாராக. சமஸ்த வேதோத்கிருஷ்டரும், சம்பூரண இஷ்டசித்தியைக் கொடுப்பவரும் சிவபெருமானே. இவ்விஷயத்தைப் பற்றிப் பின்னே போதருமாறு சொல்லுகிறார். பிரபஞ்சம் சித்து அசித்துமயமாயுளது. இங்கே 'மயட்' பிரத்தியயம் ஸ்வரூபப்பொருளிலே போந்தது. எனவே, சமஸ்தப் பிரபஞ்சமும் அவருக்கு அம்சமாம். இவ்விடத்திலே 'அபி' என்னும் பதம் "முழுமையும்" என்னும் பொருளிலே உறுதி செய்யப் போந்தது. அதிகாரா நுசாரமாகச் சிவாராதன ரூப ஞானமும் கர்மமும் (பசு) சேதனப் பிரபஞ்சத்துக்கும் சிவாராதன உபகாரம் (பாச) அசேதனப் பிரபஞ்சத்துக்குமாக, பிரபஞ்ச முழுமையும் (அசேஷம்) சிவபிரானுக்கு அம்சமாயிற்று.

ബ്രഹ്മാദിസ്തംബപര്യന്താൻ പശൂൻ ബദ്ധ്വാ മ
ഹേശ്വരഃ । പാശൈരേതൈഃ പതിർദ്ദേവഃ കാ
ര്യം കാരയതി സ്വകം ॥

"பிரமாதி ஸ்தம்பபரியந்தமாயுள்ள பசுக்களைச் சிவபிரான் பாசத்தினாற் கட்டித் தன் காரியத்தை நடத்துவிக்கின்றார்" என்று சிவ்புராணங் கூறியதும் அக்கருத்துப்பற்றியதாமென்க. இதனாலே சமஸ்த சேதனமும் அசேதனரூபமாயுள்ள கஜதுரக ஆபரணமுதலிய சர்வோத்கிருஷ்ட இலட்சுமி சிவபெருமானுக்கேயன்றி மற்றொருவர்க்கின்றாம்.

இதற்குப்பின்னர் இந்தச் சைவபாஷ்யஞ் செய்தற்கு உபயோகஞ் செய்யப்பட்ட சகல உபநிஷதங்களின் அர்த்தமுரைப்பவராகிய தமது குருவை "நமஃ" என்றற்றொடக்கத்த சுலோகத்தினாலே துதிக்கின்றார்.

சைவபாஷ்யகாரர் அருளிய நான்காவதுசுலோகம் வருமாறு:

നമഃ ശ്വേതാചാര്യായ നാനാഗമവിധായിനേ ।
കൈവല്യകല്പതരവേ കല്യാണഗുരവേ നമഃ ॥

(இ - ள்.) ஒன்றுக்கொன்று மாறுதல்போலப் பொருள்கள் போதிக்கும் ஆகமவேதங்களுக்கு விரோதமுறாத பொருளினாலே விளக்குபவரும், முத்தியாகிய கைவல்லியத்தை விரும்பினவர்களுக்குப் பிரசாதிக்கும் கற்பகத்தருவும், இவ்வுலக இன்பத்தை விரும்பினவர்களுக்குப் பிரசாதிப்பவருடைய குருவாயுள்ளவருமாகிய சுவேதாசாரியருக்கு நமஸ்காரம்.

சிவார்க்கமணதீபிகை வருமாறு:—பலவகையாய் ஒன்றுக்கொன்று விரோதமாயுள்ள அர்த்தத்தை விளக்கும் ஆகம வேதாந்தங்களுக்கு விரோதமில்லாத அர்த்தத்தினாலே உபயோகஞ் செய்தல் வாயிலாகப் பிரசாதம் செய்யு மியல்பினையுடையவர் ஈண்டு "நாநாகமவிதாயி" எனப்பட்டார். சகல வேதாந்தங்களின் தாற்பரியத்தை விரோதமின்றிச் சிவபிரானிடத்திலே திருடீகாரஞ் செய்யுமாறு லோகோபகாரமாகச் சுவேதாசாரியர் அவதாரமாயினார். கற்பகவிருக்ஷமானது யாசகருக்கு அளவில்லாப் பொருள்களைக் கொடுத்தல்போல முமுட்சுக்களுக்கு மோக்ஷரூபமாகிய கைவல்லியங் கொடுக்கின்றா ராதலினாலே "கற்பகதரு" என்று விசேஷிக்கப்பட்டார். படவே, பிரசித்த கற்பகதருவானது போகவஸ்துக்களாகிய அற்பபலத்தைக் கொடுப்பதேயாக, இந்தச் சுவேதாசாரியரானவர் கைவல்லிய ரூபமாகிய பெரும்பலத்தைக் கொடுக்கின்றார் என்பதாம். இதனாலே கற்பகதருவிலும் சுவேதாசாரியராகிய கற்பகதருவே சிரேஷ்டமாகிய கைவல்லிய முத்தியைக் கொடுப்பதன்றிப் போக்கியவஸ்துவிலே விருப்பமுடையவர்களுக்கு அது யாதும் கொடுக்க இயலாதாக, கற்பகதருவிலும் கைவல்லிய பதம் கொடுக்கும் சுவேதாசாரியர் சிரேஷ்டரானமை எவ்வாறென நிகழும் ஆக்ஷேபத்தை அறுக்கும்பொருட்டுக் "கல்யாண" என்னும் விசேஷணம் புணர்த்தல் வாயிலாக, அவர் "கல்யாணகுரு" என்று கூறப்பட்டார். கல்யாணத்தை (இன்பத்தை) விரும்பினவர்களுக்கு இவ்வுலகத்துக்குரிய உத்கிருஷ்டமாகிய பலத்தை அநுக்கிரகிப்பவர்கள் "கல்யாணர்" என்று சொல்லப்படுகின்றார். ஆகவே "கல்யாணகுரு" என்றது அப்படிப்பட்ட "கல்யாணர்களுக்குக் குரு" என்று அர்த்தஞ் சித்திப்பதாகும். ஈண்டுக் "கல்யாணர்" என்றது சுவேதாசாரியருடைய சீடரென்பதாம்.

യം യം ലോകം മനസാ സംവിഭാതി വിശുദ്ധസത്ത്വഃ കാ
മയതേ യാംശ്ച കാമാൻ । തം തം ലോകം ജയതേ താംശ്ച കാ
മാംസ്തസ്മാദാത്മജ്ഞം ഹ്യർച്ചയേദ്ഭൂതികാമഃ ॥

எவன் எவ்வெவ்வுலகத்தை ஞானத்தினாலே நினைந்து எந்தெந்தலோகத்தை விசுத்த சத்துவமுடையனாய் விரும்புகிறானோ அவன் அந்தந்த லோகத்தை ஜயிக்கிறானாதலில், அப்படிப்பட்ட பரமசிவத்தை அறிந்தவனை அருட்செல்வத்தை விரும்பும் ஒவ்வொருவனும் பூசிப்பானாக எனப் பொருள்படும் முண்டகோப நிஷதசுருதியினாலே, பரமேசுவர சாக்ஷாத்காரஞ்செய்யும் சுவேதாசாரியருடைய சிஷ்யர்களை நமஸ்காரஞ் செய்பவர்களுக்கும் அவர்கள் வாயிலாகச் சம்பூர்ணமாகிய பலம் சித்திக்குமேயானால், ஆசாரியரைப்பற்றிப் புகழவேண்டியதென்? இன்றேல், கல்யாணகுரு என்றது சமானாதிகரண சமாசத்தினாலே கல்யாணமுடையவரே குரு எனப் பொருள்படும். படவே,

கைவல்லியத்தைக் கொடுத்தற்குக் காரணமாகிய ஞானபத்தி வைராக்கியமாம் கல்யாணம் எந்தக் குருவிடத்திலே இருக்கின்றதோ அவரே "கல்யாணகுரு" எனப்படுவர் என்பதுமாம். இன்றேல், எந்தக் குருவுக்குப் பக்தி செய்தலால் சிஷ்யர்களுக்கு ஆனந்தாதியின் பிராப்தியும் ஞானோதயமும் பிறக்கின்றனவோ, அந்தக்குரு "கல்யாணகுரு" எனப்படுவார் என்றுமாம். ஆகவே, உலகத்திலே சிவசாஸ்திரப் பிரசாரணஞ் செய்யும் பொருட்டுச் சிவாவதாரரூபராகிய இருபத்தெட்டு ஆசாரியர்களுக்குத் தலைவராயுள்ள சுவேதாசாரியருக்கு நமஸ்காரம் செய்யப்பட்டது. ‹‹நாநாமவியாயி›› என்னும் பதத்துக்குப் பலவகையாகிய பாசுபதாகமங்களைச் செய்பவர் எனப் பொருள் கோடலும் ஒன்று. "சுவர்ணபாகுக்களையுடையவரே நமஸ்காரம்" "அன்னியதிக்குக்களுக்கெல்லாம் தலைவரே நமஸ்காரம்"

‹‹நமோ ஹிரண்யபாஹவே ஸேநாந்யே திஶாஞ்ச பதயே நம:॥››

என்றற் றொடக்கத்த வாக்கியங்களிலே ‹‹நம:›› என்பது போந்தவாறு போலவே, ஈண்டும் ‹‹நம:›› என்னும் பதம் ஆதரார்த்தத்திலே போந்ததாமென்க. இன்றேல் பூர்வார்த்த சுலோகத்தினாலே சிரேஷ்டராகிய சுவேதாசாரியரையும், உத்தரார்த்த சுலோகத்தினாலே தமது ஆச்சிரமகுருவையும் நமஸ்கரித்தாரெனப் பொருள் கோடலுமாம்.

இப்பொழுது ஸ்ரீகண்டசிவாசாரியசுவாமிகள் தாம் செய்த பாஷ்யத்தின் உத்கிருஷ்ட முணர்த்துமாறு இச்சுலோகம் இயற்றுகின்றார்.

சைவபாஷ்யகாரர் அருளிய ஐந்தாவது சுலோகம் வருமாறு:

வ்யாஸஸூத்ரமிதம் நேத்ரம் விதுஷாம் ப்ரஹ்மதர்ஶநே। பூர்வாசார்யை: கலுஷிதம் ஸ்ரீகண்டேந ப்ரஸாத்யதே ॥

(இ - ள்.) சிவத்தை அடைந்த வித்வான்களுக்கு அந்தப் பிரமமாகிய சிவத்தை (மறவாது) தரிசிப்பித்தலிலே இந்த வியாச சூத்திரம் நேத்திரமாகும்; முன்னுள்ள வியாக்கியான கர்த்தாக்களினாலே செய்யப்பட்ட வியாக்கியானங்களினாலே வேதாந்த சூத்திரம் மலினமாக்கப்பட்டுப் போக அது ஸ்ரீகண்டாசாரியராலே நிர்மலமாக முற்றுவிக்கப்பட்டது.

சிவார்க்கமணிதீபிகை வருமாறு:—எந்தச் சூத்திரத்துக்கு வியாக்கியானஞ் செய்ய இச்சை பிறக்கின்றதோ அதனைப் புத்திவாயிலாகச் சமீபித்ததாக்குதலால் "இதம்" என்னும் பதம் கொடுக்கப்பட்டது. அஃதவஸ்து வியாச சூத்திரமாம். வியாச சூத்திரம் என்பது ஈண்டு ஜாதியேகவசனம். ஷடங்கத்தோடு கூடிய உபநிஷதங்களையும், வேதங்களையும் அத்தியயனஞ் செய்தலினாலே பிரமமாகிய சிவத்தை அடைந்த வித்வான்களுக்கு அந்தப் பிரமமாகிய சிவத்தை மறவாது சிரவணமனனாதிகளினாலே தரிசிப்பித்தலில் வேதாந்தசூத்திரம் நேத்திரமாயுளது, கடபடாதி வஸ்துக்களைப் பகுத்தறிதலில் மற்றொன்றை அபேக்ஷியாத நேத்திரம் போலாம் என்க. இப்படிப்பட்ட உத்கிருஷ்டமாகிய, வியாசசூத்திரம் முன்னுள்ள வியாக்கியான கர்த்தாக்களினாலே செய்யப்பட்ட கடினவியாக்கியானங்களினாலே மலினமாய்விட்டது. அஃதாவது, அந்த வேதாந்த சூத்திரத்தின் இயல்பாயும் நிர்மலமாயுமுள்ள குணம் கெடுக்கப்பட்டுளதென்பதாம். அந்த வேதாந்தசூத்திரம் இப்பொழுது ஆசாரியர்களுள்ளே சிரேஷ்டராகிய ஸ்ரீநீலகண்ட சிவாசாரியசுவாமிகளது வியாக்கியானத்தினாலே நிர்மலமாக்கப்பட்டது. அஃதாவது சூத்திரகாரருடைய அபிப்பிராயத்தைக் கோமல வியாக்கியானத்தினாலும் நேராகிய வியாக்கியானத்தினாலும் பிரகடனஞ் செய்கின்றார் என்பதாம். எவ்வாறெனில், நன்றாகப் பார்க்கிறதற்கு இயன்ற நேத்திரமானது முன்னரே பிராணசாரியராகிய வைத்தியரால் இதமில்லாத அஞ்சனப்பிரயோகத்தினாலே மலினமாக்கப்பட்டு (குருடாக்கப்பட்டு)ப்போய், பின்னர்ச் சிரேஷ்டவைத்தியரினாலே இதமாயுள்ள அஞ்சலிப் பிரயோகத்தினாலே அக்கண்ணினது குருடு நீக்கப்பட்டாற் போலாம் (நிர்மலமாக்கப்பட்டாற்போலாம்) என்க. மலினமாக்கப்பட்டது "கலுஷிதம்" என்னும் பதத்தினாலே சாமானியமாக மற்றைப் பாஷ்யங்களின் சூத்திரார்த்த மாறுபாடு உணர்த்தப்பட்டது. பொதுவாகக் "கலுஷிதம்" என்று வாளாசொன்னாரன்றி அந்தச் சூத்திரங்களிலே அவ்விருத்தத்தை (மாறுபாட்டை) எடுத்துக் கண்டித்தாரில்லை என்பது முணரற்பாற்றும் எனவே, மற்றைப் பாஷ்யங்களிலே தத்தம் பாஷ்யங்களுக்கு உத்கிருஷ்டம் காட்டவேண்டிக் கண்டிக்கும் பிறபாஷ்யகாரர்போல, அங்கங்கே சூத்திரங்களின் கீழே மற்றைப் பாஷ்யகாரர்களைத் தாமும் கண்டித்து ஸ்ரீகண்டாசாரியர் உத்கிருஷ்டம் காட்டினாரில்லை என்பதாம். அப்படிச் செய்வது அவருக்கு இஷ்டமில்லையாம் என்னும் உண்மையை நிறுத்தும்பொருட்டே "ஸ்ரீகண்டர்" என்னும் தமது நாமபதத்தை முன்னரே எடுத்துவிதந்தார்; எங்ஙனமெனிற் கூறுதும். காளகூடவிஷத்தைக் கண்டத்திலே எக்காலமுங் கொண்ட சிவபிரானுடையகண்டம் நீலநிறத்தையுடையதா யிருந்தமையால் ஸ்ரீகண்டர் என்னும் நாமம் சிவபெருமானுக் காயிற்று.

குணதோஷௌ புதோ க்ருஹ்ணந் இந்துக்ஷ்வேளாவிவேஶ்வர:। ஶிரஸா ஶ்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி॥

சந்திரனையும் விஷத்தையும் சிவபெருமான் கொண்டது போல, பெரியோர் குணத்தையும் தோஷத்தையும் கிரகிக்கின்றார்கள். அப்படி அங்கீகாரஞ் செய்யினும், சிவபிரான் குணமாகிய சந்திரனைச் சிரசிலும் தோஷமாகிய விஷத்தைக் கண்டத்திலும் கொண்டாற்போல, அப்பெரியோரும் குணங்களைச் சிரசிலும் தோஷத்தைக் கண்டத்திலுந் தாங்கி அடக்கி யிருக்கின்றார்கள். இப்படிப்பட்ட நற்குணம் வாய்ந்த சற்புருஷர்களையொத்து ஸ்ரீகண்டாசாரியரும் மற்றைப் பாஷ்யங்களின் தோஷத்தை விசேஷமாகப் பிரகடனஞ் செய்யாது சாமானியமாகக் காட்டினார் என்பது போதர, ஸ்ரீகண்டர் என்னும் தமது நாமமொழியை எடுத்து விதந்தார் என்றோர்க. அங்ஙனமாயினும் மற்றைப் பாஷ்யகளின் தோஷத்தை எடுத்துக் காட்டாமை ஆசாரியர்க்குச் சுபாவகுணமா யிருந்தவிடத்தும், "கலுஷிதம்" என்னும் சப்தத்தைச் சாமானியமாகத் தானும் அவர்

அவ்வாறு பிரயோகிக்க வேண்டிய தென்னையெனில், இந்தச் சைவபாஷ்ய சிரவணஞ் செய்பவர்களுக்கு மற்றைப் பாஷ்யங் களினும் இந்தப் பாஷ்யம் பிரமாண முடையதென்றும், இப் பாஷ்யத்திலே அன்பு செனிப்பித்தல் வேண்டுமென்னும் கருத் தினாமென்க.

இன்னும் பாஷ்யோத்கிருஷ்டம் காட்டுவதற்காக "ஸ்ரீம தாம்" என்னும் சுலோகம் ஆரம்பஞ் செய்கின்றார்.

சைவ பாஷ்யகாரர் அருளிய ஆறுவது சுலோகம் வருமாறு:

ஸ்ரீமதாம்த்ரயாணாம் ஸ்ரீகண்டஸ்ய

காஸ்யதே । மதுரோ பாஷ்ய ஸந்தோஹ மஹா

ர்த்தோ நாதிவிஸ்தர:॥

(இ-ள்.) இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களின் பொருளைக்கொண்ட வேதாந்த சூத்திரங்களுக்கு இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களையும் கண்டத்திலே கொண் ட ஸ்ரீகண்ட சைவபாஷ்யகாரரால் அருளப்பட்டமையால் மகா ர்த்த முடைய இந்தப் பாஷ்ய புஸ்தகமானது மதுரமாகவும் சுருக்கமாகவும் பிரகாசஞ் செய்யப்பட்டது.

"ஸ்ரீர்வை வேத ஜவ: ஸாமாநி யஜூம்ஷி ஸாஹி

ஸ்ரீரமதாம் ஸதாம்॥"

"ஸ்ரீ எனப்படும் இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்றும் சத் துக்களுக்கு இன்பஞ் செய்வதாக" என்னும் இந்தச் சுருதிப் பிரமாணத்தினாலே, "ஸ்ரீ" என்பது மூன்று வேதத்துக்கும் பெயராயிற்று. எந்த வேதாந்த சூத்திரத்திலே இந்த மூன்று வேதங்களும் அதிகமாக நிகழ்கின்றனவோ, அதற்கு "ஸ்ரீமத்" என்று பெயர் போதரும். இப்படிப்பட்ட மூன்று வேதங்களை யும் கண்டத்திலே கொண்டவருக்கு "ஸ்ரீகண்டர்" என்னும் நாமம் போந்தது. அப்படிப்பட்ட இவர் மனசினாலே அமை த்துச் செய்தருளிய பாஷ்ய முழுமையும் புஸ்தகரூபமாகப் பிரகாசஞ் செய்யப்பட்டது. எனவே, மூன்று வேதத்தையும் அறிந்த ஆசாரியர் மூன்று வேதங்களையுங் கொண்ட வேதாந்த சூத்திரத்துக்குப் பாஷ்யஞ் செய்யத் தொடங்கினர். இது யுக் தமேயாம். இரஸத்துக்கும் இரஸத்தையுடைய வஸ்துவுக்கும் மதுரஸம் என்னும்பெயர் செல்வதாகும். அந்தமதுரஸத்தினாலே வண்டானது இன்பம் அடையுமாறுபோல, பண்டிதர்களும் கா வியமதுரஸத்தினாலே இன்பம் அடைகின்றார்கள். சுந்தரமாகிய அக்ஷரங்கள் எந்தப் பதத்தில் உள்ளனவோ, எந்தப் பதம் எதி லிருக்கின்றதோ, மதுரசப்தமும் அர்த்தமும் எதிலிருக்கின்றன் றனவோ அது காவியரூப ஸந்தர்ப்பமாம். எமது சைவபாஷ்ய கிரந்தமானது

"ரஸோவைஸ:"

எனனும் சுருதியினாலே வர்ணிக்கப்பட்ட "அதிசய ஆனந்த ரூபமாகிய பராசக்தியோடு கூடிய பரப்பிரமத்தைச்" சந்தர்ப் பமாகக் கொண்டது; கொள்ளவே, காவியத்தைப் போலப் பிரமத்துக்கு யாதுகுணம் உண்மையாக இருக்கின்றதோ, அந் தக் குணங்களை வர்ணனஞ் செய்வதே இந்தக் கிரந்த ஸந்தர்ப் பம் என்பதாம். பிரமத்தை நிர்ணயஞ் செய்தற்கு உபயோகமா யுள்ள ஆயிரநியாயங்களினாலே பூரணஞ் செய்யப்பட்டமையால் இந்தப் பாஷ்யம் மஹார்த்தம் எனப்பட்டது. இப்போது அப் படி யிருந்தாலும் பாஷ்யம் அநேக சப்தங்களுடைய விரிவுடை யதாயில்லை. அங்ஙனமாயினும், பிரமலக்ஷணமுதலிய அபிப் பிராய விசேஷங்களைக் காட்டுகிற ஆயிரம் நியாயங்களினாலே அநேகமாய்ப் பிரமத்தை நிர்ணயஞ் செய்தற் கியன்ற நியாயங் களை அங்கங்கே (பாஷ்யத்தில்) விளக்கியிருக்கின்றா ரென்க. இவ்வுண்மை.

"வ்யாக்யாநதோ விசேஷ ப்ரதிபத்தி ந ஹி

ஸந்தேஹாதலக்ஷணம்"

"அநேக பொருள்களை அடக்கிய வாக்கியங்களுக்கு வியாக் கியானங் கொண்டே விசேஷஞானங் கொள்ளற் பாலதாம்" எனப் பொருள் கொண்டு போந்த மகாபாஷ்யத்தொனி அர்த் தத்தினாலே அறியப்படும். மிகலேசாகக் கடினமின்றிப் பாஷ் யத்தைச் சுருக்கிச் சொல்லியிருக்கின் றாராதலில், (நாதிவி ஸ்தர:) "விஸ்தாரமில்லாத" எனப்பொருள்படும் பதம் புணர்த் தப்பட்டது. இவ்வாறு குணவிசேஷங்களோடிசைந்தது இந்தப் பாஷ்யமாமென்க.

இந்தப் பாஷ்யத்தின் விஷயத்தை அங்கீகாரஞ் செய்யாத மானிடர்களாலே இந்தப் பாஷ்யம் ஆதரணீயஞ் செய்தற்கு யோக்கியதை யாகாததாய், இந்தப் பாஷ்யத்திலே எல்லோர்க் குஞ் சிரத்தை பிறக்கமாட்டாதாய், அதனால் பாஷ்யந் தோஷ முடையதோவெனில் குற்றமாகாது, குணமாம் என்றது காட்டு தற்கே பின்வரும் சுலோகம் போதருவதாயிற்று.

சைவபாஷ்யகாரர் அருளிய ஏழாவது சுலோகம் வருமாறு:

ஸர்வவேதாந்த ஸாரஸ்ய ஸௌரஹா ஸாதுரோதி

நாம் । ஆயாமணாம்ஸிவநிஷ்டாநாம் பாஷ்யமேதந்மஹா

நிதி:॥

(இ-ள்.) சர்வவேதாந்த சாரமாகிய சுகந்தத்தின் இனிமையி னாலே ஆனந்தமடைந்த ஆரியராகிய சிவநிஷ்டர்க்கு இந்தப் பாஷ்யம் மகாநிதியாம்.

சிவார்க்கமணிதீபிகை வருமாறு:— சர்வவேதாந்தங்களிலே யுள்ள சுவாரசியம் எனவே, நிரதிசய ஆசுவாதநீய (ரசரூபமா கிய) பரப்பிரமத்திலே தாற்பரியமே ஈண்டுச் சௌரபம் எனப் பட்டது. எவ்வாறெனில், ஓரிடத்திலேயுள்ள புஷ்பசுகந்தம் அநேக இடத்திலே வியாபகமாயிருக்குமாறு போலப் பரப்பிர மத்திலே முற்றுகின்ற வேதாந்த தாற்பரியமாகிய சுகந்தம் குருசிஷ்ய பரம்பராக்கிரமத்தினாலே யாண்டும் வியாபித்துள் ளதாமென்க. எனவே, வேதாந்த சாஸ்திரத்தைப் பாரிஜாத விருக்ஷத்திலேயுள்ள பூங்கொத்துக்குச் சமானமாகச் சொல்லி யது உசிதமேயாம். ஆகவே, பாரிஜாத புஷ்பம் போல வே தாந்த சாஸ்திரமும் தனது பக்தர்களுக்கு மோக்ஷரூப பலத் தைக் கொடுக்கின்றது. அப்படியே அரிவம்சத்திலே பாரிஜாத சங்கிதையிலே பாரிஜாத புஷ்பக்கொத்துக்கு மகிமை சொல் லப்பட் டிருக்கின்றது. பாரிஜாத புஷ்பக்கொத்தானது சகல

சங்கற்பார்த்தங்களைக் கொடுக்குமாறுபோல வேதாந்த விருந்தமும் (தொந்தியும்) தன்னைச் சேவித்தவர்க்கு முந்தியைக் கொடுக்கும் என்பது "பிதிர் லோகத்தை அடைய விரும்புகின்றவனுடைய சங்கற்ப ஞானமாத்திரையினாலே அவன் பிதிரர் அவனை எதிர்கொள்ளுகிறார். (அதனால்) அவன் மகிழ்வாயிருக்கின்றான்", என்பது

"ஸயதி பிதா்லொககாமொ ஹவதி ஸங்கல்பாதெவா ஸ்யபிதரஃ ஸமுத்திஷ்டந்தி"

என்னும் இந்தச்சுருதியினாலே விளங்குகின்றது. அவ்வாறே, வேதாந்த விருந்த சாரசுகந்த சுவாது மகரந்தத்தை மகிழ்கின்றவர்க்கு, எனவே, சுபாவசித்த வேதாந்த சாஸ்திரத்திலே சிரத்தா தாற்பரியம் செய்பவராகிய சிவநிஷ்டர்க்கு, எனவே சிவனை எக்காலமுந் தியானஞ் செய்யும் ஆரியர்க்கு, எனவே பூச்சியர்க்கு, எனவே ஸத்புருஷர்க்கு இந்தப் பாஷ்யம் மகாநிதி என்பதாம். அகஸ்மாத்தாகத் தனமானது தனக்கு வாய்ப்பத் தரித்திரன் மகிழுமாறுபோல, இந்தப் பாஷ்யமும் மிகு விரைவிலே சகல வேதார்த்த நிர்ணயஞ் செய்தலினால் நிரந்தர சிவத்தியானத்துக்கு உபயோகமாகிய மங்கல யதார்த்தஞானத்தையும் மோக்ஷத்தையுங்கொடுத்து இது ஸத்புருஷர்க்கு மகானந்தத்தை விளைப்பதாகும். இதனால், "உத்தமர் எனது கிரந்தத்தை அங்கீகாரஞ் செய்வார்; துஷ்டர் நிந்தை செய்தாலும் எனக்கு யாதும் நஷ்டமில்லை என்பதாம்.

"ஜிஜ்ஞாஸந்தியெ உபநிஷதஃ ஸமீயிஃ ஸுயவஸமீயிஃ
கிஸோ்ா நாஸோ்ாநஉவ வஸாஷா நாஜா ஹமெ்யொஃ"

ஈண்டு உபநிஷதமீமாஞ்சை ஆரம்பிக்கற்பாற்று.

இப்போது இந்த ஆரம்பம் எப்புருஷார்த்தம் பற்றியது? அப்புருஷார்த்தமானது எக்காலமும் விருப்புக்குத்தானமாம் இன்பத்தை அடைதலாம், இன்றேல் வெறுப்புக்குத் தானமாய துன்பத்தை முழுதும் ஒழித்துவிடுகையாம்.

(இந்த உபநிஷத மீமாஞ்சா விசாரத்துக்கு) அதிகாரியார்? இதனை அறியவேண்டும் என்பனவாதியாய அவாவுடையவரே அதிகாரியாம்.

அதன் விஷயமென்னை? சந்தேகம் என்னும் ஊஞ்சல்பற்றி (ஓர் பிரகாரம்) வெளிப்படையாயும், முழுமையும் வெளிப்படையாகாமலும் நிகழும் (பிரம) விசாரமே விஷயமாம்.

எதற்குப் பின்னர் இது ஆரம்பிக்கற்பாலது? எக்காலும் நியமமாய் (இன்றியமையாததாய்) முற்பட்ட (சாஸ்திர) விசாரத்துக்குப் பின்னர் இது ஆரம்பிக்கற்பாலதாம்.

சிரவணஞ் செய்வோருடைய மனசிலே நிகழ்ந்த சங்கையாம் சல்லியத்தை நிர்மூலஞ் செய்யுமாறே சர்வஞ்ஞசிகாமணியாாகிய வியாசபகவானால் அருளிச் செய்யப்பட்டது இந்த வேதாந்த சூத்திரமாமென்க.

முதற்சூத்திரம்.

அதாதொ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா।

பின்னர் ஆதலினால் பிரமஞான விருப்பம்.

இது (இந்தச் சூத்திரம்) ஓர் அதிகரணம். விஷயம், சம்சயம், பூருவபக்ஷம் சித்தாந்த நிர்ணயம், சங்கதி என்பவற்றுக்கிடமாயுள்ளது அதிகரணமாம்.

அத பின்னர்—ஈண்டு (வடமொழிச் சூத்திரத்தின் முதற்கண்ணேயுள்ள) "பின்னர்" எனப்பொருள்படும் (அத) என்னும் மொழி (இன்ன விஷயத்துக்குப் பின் இன்னது ஆரம்பிக்கற்பாலதாம் என்னும் (பின்னர்) "அனந்தர" அர்த்தத்தில் போந்ததாமன்றி, இப்போது "யோகத்தைப்பற்றிப் பேசத் தொடங்குதும்" எனப் பொருள்கொள்ளும் (அதயொகாநுஶாஸநம்) என்னும் யோகசூத்திர முதலியவைகளிலே போந்த (அத) என்பது போல 'அதிகாரப், பொருளுடைத்தன்றும். "அதிகாரம்" என்னும் மொழி ஆரம்பம் (தொடக்கம்) எனப் பொருள்படும். படவே, 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' "பிரமத்தை அறியவேண்டும் என்னும் ஆசையானது) காரிய ரூபமன்மையால் ஆரம்பிக்கப்படுவதின்றாய், விஷய இனிமையால் மாத்திரம் அறியப்படுகின்றது. "ஓங்காரம்" (அத) என்னும் இரு மொழிகளும் முன்னரே பிரமாவினுடைய கண்டத்தைப் பிளந்து வெளிப்பட்டமையால், அவ்விருமொழியும் மங்கல சப்தங்களாம்" எனப் பொருள்கொள்ளும்

(க) "ஓங்காரஶ்சாதஶப்தஶ்ச த்வாவெதௌ ப்ரஹ்மணஃ புரா। கண்டம் பித்வா விநிர்யாதௌ தஸ்மாந்மாங்கலிகாவுபௌ"

என்னும் ஸ்மிருதி சுலோகத்தினால் அறியப்படுதலால், அந்த (அத) என்னும் மொழி "மங்கல"ப் பொருளிலே போந்ததுமன்றும், பிரமஞானத்தையுற்று இம்மங்கலப்பொருள் பொருந்து மாறின்றாதலினென்க.

சிஷ்டாசாரம் பாதுகாக்கும் பொருட்டுச் சாஸ்திராரம்பத்திலே மங்களாசரணம் செய்யவேண்டுமேயெனில், அதுவும் (அத) என்று வாயினால் உச்சரித்தன் மாத்திரையினாலே சித்திக்கின்றது. (ஆதலில் (அத) என்பது மங்கலப்பொருளிலே போந்தது மன்றும்.)

ஓர் விஷயஞ் சொல்லி மற்றோர் விஷயம் சொல்வதாகிய பக்ஷாந்தரப் பொருளிலே இந்த (அத) என்னும் மொழிபோந்ததாமோவெனில், அதுவுமன்றும், எவ்விஷயம் பற்றியேனும் எந்தப் பக்ஷமாயினும் பேசப்பட்டதாய் அதைப்பற்றிய பிரசங்கம் ஒன்றும் முன்னர் நிகழ்ந்திலாமையினாலென்க.

(அத) என்னும் இம் மொழி போசனமேனும் போதலேனும் செய்தல் என்றமைபோல நியமமில்லாமல் (அநியதமாய்) முன்னிகழ்வதொன்றைக் குறித்ததுமன்றும், அது (அம்மொழி) நியமமாய் உள்ளதொன்றைக் குறித்து ஈண்டுப்போந்ததாமாதலினென்க. எந்தக் (கரும) சம்பாதனத்தைத் தேடிக் கோடலால் பிரமவிசாரத்துக்கு அதிகாரி விசேஷம் சாதனமாகின்றதோ, அந்தச் சம்பத்தியே ஈண்டு முன்னுளதாகத் தாகச் சொல்லப்பட்டதாமென அறியக் கிடக்கின்றது.

எங்ஙனமெனில், எட்டாம் வயசு முதலியவற்றிலே செய்யப்படும் உபநயன சம்ஸ்கார வாயிலாக, "சுபதினங்களிலே வேதம் அத்தியயனஞ் செய்யத்தக்கது" என்று தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரகாரம் தினந்தோறும் செயற்பாலதாயும், நியமமாக வழிபடப்படும் ஆசாரியர் வாயிலாக எய்தும் அக்ஷரவடிவமாயும், அர்த்தஞானத்தை யுடையதாயுமுள்ள வேதாத்தியயனத்தையே பிரமவிசாரத்துக்கு முன்னுளதாதலாக உரைப்பது யுக்தமாம்; தருமமும் (கருமமும்) பிரமமும் வேதவாயிலாகவே அறியக் கிடத்தலில், வேதாத்தியயனஞ் செய்யாதவனுக்குப் பிரமவிசாரம் சித்தியாகாமையினுலென்க. கேவலம் வேதாத்தியயனத்துக்குப் பின் பிரமவிசாரம் செய்யலாமோ வெனில், நன்று: சொல்லுதும்.

முன்னர் வேதாத்தியயனஞ் செய்து அதன்பின்னர்த் தருமவிசாரம் செயற்பாலதாகும், அப்படிப்பட்ட வேதாத்தியயனமின்றித் தருமவிசாரஞ் சித்திக்கமாட்டாமையின் என்க. இது பற்றியே ஆசாரியராலே (சைமினிமுனிவராலே) "பின்னர் ஆதலினுல் தருமவிசாரஞ் செய்யவிருப்பம்" எனப் பொருள்படும்

(உ) ‹‹அதாதோ தர்மஜிஜ்ஞாஸா››

என்னும் சூத்திரம் சொல்லப்பட்டது. முதற்கண்ணே உபாத்தியாயரிடத்திலே அத்தியயனஞ்செய்து, பின்னர்த் தருமவிசாரம் எய்தற்பாலதாம் (சைவபாஷ்யகாரராம்) நாம் தருமத்தையும் பிரமத்தையும் முறையே உணர்த்தும் (பூருவமீமாஞ்சா உத்தரமீமாஞ்சா) சாஸ்திரங்களுக்கு மிகுதியும் பேதம் சாற்றுவேமல்லேமாய், ஒரே அபிப்பிராயமே கொள்வேமாகின்றேம். "பின்னர் ஆதலினுல் தருமவிசாரம் செய்ய விருப்பம்" எனப் பொருள்படும்

(ரு) ‹‹அதாதோ தர்மஜிஜ்ஞாஸா››

என்னும் முதற்சூத்திரம் தொடுத்தும், "புநராவர்த்தி இல்லை" (மீளப்பிறவி இல்லை) எனப் பொருள்படும்.

(சா) ‹‹அநாவ்ருத்திஶ்ஶப்தாத்››

என்னும் இறுதிச் சூத்திரம் இறுதியாகவும், முறையே கூறும் தருமமீமாஞ்சையும் பிரமமீமாஞ்சையுமாம் இரண்டும் ஆராதன ஆராத்தியங்களாகிய தருமம் பிரமம் என்னும் இரண்டையும் பிரதிபாதனஞ் செய்யும் ஓரே சாஸ்திரமாம். (பூருவமீமாஞ்சையினுள்ளே) "பின்னர் ஆதலினுல் சேஷலக்ஷணம்" எனப் பொருள்படும்

(ரு) ‹‹அதாதஶ்ஶேஷலக்ஷணம்››

என்னும் சூத்திரம் போந்தாற்போல, இடைக்கண்ணே போந்த விஷயப்பிரிவை உணர்த்துமாறே ‹‹அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா›› என்னும் சூத்திரமும் ஆரம்பித்ததுமாமென்க.

இன்றேல் தருமமானது பிரமஞானத்துக்குக் காணமாம்; ஆகவே, தருமசாஸ்திரத்திலே பேசப்பட்டசுருதி, லிங்கம், வேதசோதனம், அர்த்தவாதம், ஸ்மிருதி முதலாயின பிரமவிசாரத்துக்கு இன்றியமையாமையால், தருமவிசாரம் செய்தபின்னர்ப் பிரமவிசாரமாசற்பாலதாம்; யாதினுலெனில், சாதனம் நிச்சயமில்லாமல் சாத்தியநிச்சய மாகாதாமாதலினென்க. பிரமஞானத்தையுற்றுத் தருமஞ் சாதனமாம் என்பதற்கு, "பிராமணர் வேதாத்தியயனத்தினுலும், யஞ்ஞத்தினுலும், தானத்தினுலும், தபசினுலும், விரதத்தினுலும் அவரை அறிய விரும்புகின்றுர்கள்."

(சு) ‹‹தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா நாஶகேந››

என்று இங்ஙனம் கூறும் சிரேஷ்டமாகிய சுருதியேபிரமாணமானமையினு லென்க.

கருமமானது பிரமஞானத்துக்குச் சாதனமாயின், தருமமே விசாரிக்கற் பாலதும் அநுஷ்டிக்கற்பாலதுமாம். இந்தப் பிரமத்தைப் பற்றிய வேதாந்த வாக்கியங்களை விசாரஞ் செய்தலாம் சிரமத்தினுற் போதரும் பயன் என்னை? என்று ஆசங்கிப்பது தக்கதன்றும். பலத்தை விரும்பாத அதிகாரிக்கு அந்தக் கருமானது பிரமஞானத்துக்குக் காரணமாய்ப் பாபமாகிய மலத்தை நீக்கும் சம்ஸ்காரவாயிலாகச் சித்தசுத்தியைப் பிறப்பித்தற்குக் காரணமாயிருத்தலினு லென்க. எங்ஙனமெனில், "எந்தப் புருஷனுக்கு * நாற்பது சம்ஸ்காரம்" என்று தொடங்கி, அவன் பிரம (சிவ) சாலோக்கிய சாயுச்சியம் அடைகின்றுன்" என்பதிறுதியாக, கர்ப்பாதானுதி கருமம் அனைத்துக்கும் பாப மலங்களை ஒழிக்கும் சம்ஸ்காரகாரணம் உளதாக அபியுக்தஸ்மிருதியானது விளக்குதலினுலென்க.

(ஆக்ஷேபம்) யஞ்ஞத்தின் பொருட்டுச் சாலியின்மீது சலங்கொண்டு புரோக்ஷித்தலாம் சம்ஸ்காரம் போல சர்வகன்மங்களும் மற்றென்றற்குச் சம்ஸ்காரமாய் எய்துமாயின், "சம்ஸ்காரமடைந்த புருஷரெல்லாம் புண்ணியலோகத்த ராகின்றுர். எனப்பலத்தையுற்றுச் சுருதியிலே சொல்லப்பட்ட ஆச்சிரம சம்ஸ்காரங்களுக்குச் சுவாதந்திரியம் இல்லையாய் விடுமாலோவெனில்,

(சமாதானம்) அவ்வாறின்றும். சுவர்க்கமுதலிய புண்ணியலோக ரூபமாகிய பலத்தை அவாவிச் செய்யப்படும் கருமங்கள் சுவாதந்திரியங்களாயினும், பலத்தை அவாவாது அக்கன்மங்களை அநுஷ்டித்தபுருஷனுக்கு அக்கன்மங்கள் சித்தசுத்தி முதலியவற்றைப் பிறப்பித்தற்குக் காரணமா யிருத்தலினுலு மென்க. அவ்வாறே, அந்தப் புருஷனுக்கு எது ஞானபலமாயுள்ளதோ அது கருமபலமாம்; எங்ஙனமெனில், விரீகிப்புரோக்ஷண

* நாற்பது சம்ஸ்காரங்களாவன:— கர்ப்பாதானம், பும்சவனம், சீமந்தம், ஜாதகருமம், நாமகரணம், அன்னப் பிராசனம், சௌளகருமம், உபநயனுதி நாலு வேதங்களின் அத்தியயனம், சமாவர்த்தனம், விவாகம், பஞ்சமகாயஞ்ஞம் (தேவயஞ்ஞம், பிதியர்ஞ்ஞம், மநுஷ்ய யஞ்ஞம், பூதயஞ்ஞம், பிரமயஞ்ஞம்) ஏழு பாகயஞ்ஞம் (அஷ்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சௌத்திரி, ஆசுவாயுஜம்), ஏழு ஹவிர்யஞ்ஞம் (அக்கினியாதானம், அக்கினிகோத்திரம், தர்சபூர்ணமாசம், அவக்கிரகாயணம், சாதுர்மாஸ்யம், அநிரூடபசுபந்தம், சௌத்திராமணி,) ஏழு சோமயஞ்ஞம் (அக்கினிஷ்டோமம், அத்தியக்கினிஷ்டோமம், உக்தியம், சோடசி, வாஜபேயம், அதிராத்திரம், உப்தம்) என்பனவாம்.

மானது (ஜென்மேற் புரோக்ஷணமானது) அதிருஷ்டபலத்தைப் பிறப்பிக்கத் தர்சபூரணமாசயஞ்ஞத்துக்கு அங்கமாய், சுவர்க்கமடைதற்கு முடிவாய் நிலையுறல் போல, கன்மங்களும் ஞான பலத்துக்குப் பிரேரசமாய் முத்தியை அடைதற்கு ஒருங்கு நிலையுற்றன.

(ஆக்ஷேபம்) ஆவசியகம் செயற்பாலதாக விதிக்கப்பட்ட சோதிஷ்டோமாதிகள் மற்றோர் முக்கியப் பேற்றைக் கொடுக்க மாட்டாமையின், அவை சம்ஸ்காரங்களாக எய்தமாட்டாவோ வெனில்:—

(சமாதானம்) அன்றும்; யாதினாலெனில், சுவதந்திர விதி கொண்டு காரணமாக விதிக்கப்பட்ட சௌத்திராமணி யஞ்ஞமும், பிருகஸ்பதிசவமும், பிறவும் முறையே அக்கினிசயனம் வாசபேயமுதலிய யஞ்ஞங்களுக்கு அங்கமாயிருத்தல் போல, மற்றோர் கன்மத்தைக் குறித்துச் சுவதந்திரமாய் நின்ற கன்மம் ஒன்றே மற்றொன்றற்கு அங்கமாயும் ஈரியல்பு பூண்டிருத்தலினாலென்க. ஆதலால் ஞானோற்பத்திவரையும் கன்மங்கள் அநுஷ்டிக்கற்பாலனவாமென்க.

(ஆக்ஷேபம்) "அறிதற்கு விரும்புகின்றார்" என்று (முன்னர் கூறும் இலக்கமர்திரத்தினால்) கேட்கப்படுதலால், ஞானத்தின் மேல் இச்சை பிறக்கும் வரையும் கன்மங்கள் அநுஷ்டிக்கற்பாலனவோவெனில்,

(சமாதானம்) இவ்வாக்ஷேபம் சாரமற்றதாம், வாளா இச்சையானது புருஷார்த்த மாகாமையினாலென்க. ஆதலால் பிரமஞானத்துக்குச் சாதனமாகிய கன்மவிசாரஞ் செய்தபின்னரே, பிரமஞானத்தைப் பிறப்பிக்கும் (வேதாந்தசூத்திர) சாஸ்திராரம்பம் செய்தல் மிகவும் உசிதமாகும்.

(ஆக்ஷேபம்) கருமப்பிரம விசாரம் என்பவற்றுக்குக் கர்த்தா ஒருவனே யாமாதலில் கிரமநியமஞ் சொல்வது எவ்வாறு யுத்தமாகும்? அந்தக் கர்த்திரைக்கியமாவதுயாது? அது ஈண்டு ஆதானமாகிய அங்கத்துக்கும், தர்சபூர்ண மாசமாகிய அங்கிக்கும் கர்த்தா ஒருவனேயாதல் போல்வதா? இன்றேல் (கன்மப்பிரம விசாரத்தின்) கிரமநியமம் ஒரே அங்கியாகிய தர்சபூர்ணமாசமும் அநேகாங்கமாகிய பஞ்சப் பிரயாசமும் போல்வதா? இன்றேல், தர்சபூரணமாச யஞ்ஞத்திலே போதரும் சலபாத்திரமாகிய சமசக்குப் பதிலாக,

"[illegible]" என்னும் சுருதிப்பிரகாரம் பசுப்பலத்தின் பொருட்டு, விதிக்கப்பட்ட கோதோகன பாத்திரமானது (சுவர்க்காதிகாமனுரூப) அதிகாராந்தரத்தினாலே உபஜீவகமாதல் போல்வதா? இன்றேல், தர்சபூர்ண மாசத்திலே போதரும், ஆறு பாகமும் ஒருங்குசேர்ந்து பலம் ஒன்றேயாய் முடிதல் போல்வதா? அவ்வாறு தருமவிசார சாஸ்திரம் பிரமவிசார சாஸ்திரம் என்னும் இரண்டுக்கும் சம்பந்தமுளதாகச் சுருதியாதிப் பிரமாணம் இல்லையாய், கருமப்பிரம விசாரங்களுக்குக் கிரமநியமஞ் சொல்வது பொருந்தாதென ஆக்ஷேபிப்பின்,

(சமாதானம்) சுருதியாதிப் பிரமாணம் இல்லையாயின் அவ்வாறு கிரமநியமஞ் சொல்லுதல் யுக்தமாகாதுதான். "எந்தப் புருஷன் ஞானம் (வித்தை), கன்மம் (அவித்தை) என்னும் இரண்டையும் அறிகின்றானோ, அவனே பிரமத்தை அறிகின்றான்" என்பது பொருள்பட,

(எ) "[illegible]"

என்றும், இந்தக் காரணத்தினாலே "புண்ணியஞ் செய்பவன் பிரமத்தை அறிகின்றான்" என்பது பொருள்பட,

(அ) "[illegible]"

என்றும், "சத்தியத்தினாலும், தபசினாலும், நல்ல ஞானத்தினாலும், பிரமசரியத்தினாலும் இந்தச் சிவனாகிய பரமான்மா அறியப்படுகின்றார்" என்பதுகொண்டு

(கூ) "[illegible]"

என்றும் பிறவுமாக ஞானத்தையும் கன்மத்தையுஞ் சேர்த்து விதிப்பனவாகிய சுருதிகள் பொருத்தமாயுண்மையின், கருமத்துக்கும் ஞானத்துக்கும் மோக்ஷம் என்னும் பயன் ஒன்றே உண்மையாதல்பற்றி, அந்தக் கருமப்பிரம விசாரங்களுக்குக் கிரமநியமம் யுக்தமேயாம்.

இங்ஙனமாக, அத்தியயனவிதி அக்ஷரத்தைப் படித்தல் மாத்திரத்தில் முற்றுவதாகுமாயினும், அது தர்மப்பிரமவிசாரத்துக்குப் பிரவிருத்தியிலதாய் ஒழியாது; யாதினாலெனில், ஷடங்கத்தோடு வேதாத்தியயனஞ் செய்தலினால் நன்றாகப் பதார்த்தஞானம் எய்துவதாகுமாதலினென்க. சாங்காத்தியயனஞ் செய்த பிற்பாடு, பிரமத்தின் ஸ்தூலோபாசனையாயுள்ள சோதிஷ்டோமாதிகளை விதிக்கும் வேதாந்த வசனங்களுக்கும், சூக்குமோபாசனையாகிய தகாவித்தையை விதிக்கும் வேதாந்த வாக்கியங்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதாபாசவுண்மை

நோக்கி, புருஷார்த்தித்தை விரும்பும் புருஷன் கருமப்பிரம விசாரத்திலே சுவயமாகப் பிரவர்த்திக்கின்றான். ஆதலினாலே கருமப்பிரம்விசாரம் நிஷ்பிரயோசனமன்றாம்.

(ஆக்ஷேபம்) "சிர்வணஞ் செய்யற்பாலது" என்னும் வாக்கியத்தினாலே, வேதர்ந்த சிரவணம சாக்ஷாத் (நேரே) விதிக்கப் பட்டிருக்கின்றதாலோவெனில்—,

(சமாதானம்) இன்றாம், விதிதரூபமாகிய தருமத்தை விளக்கும் சம்பத்தி (சாமக்கிரி) இல்லாமையினாலாமென்க. அவ்வாறாயின், வேதாந்த சிரவணமானது (மற்றோர் வாயிலாக முன் அறியப்படாததாய் விதிக்கும்) அபூர்வவிதியின் பாலதன்று, எல்லோர்க்கும் அவ்வேதாந்த சிரவணம் இன்றியமையாது அமைந்துள்ளமையினாலென்க. வேதாந்தத்திலே சொல்லப்பட்ட பொருளை அறிதற்குப் போந்த வேதாந்தசிரவணம், வைத்தியசாஸ்திர சிரவணம்போல்வதாம். முன்னையது போலப் பின்னையதும் சாஸ்திரவிசாரமாயிருத்தலினாலென்க. இனி வேதாந்தசிரவணம் செய்யவேண்டுமென்பது (சாலியின் உமியைப் போக்குதற்குப்போந்த பலவகை உபாயங்களுள்ளே முசலத்தினால் அவ்வுமியைப் போக்குதல் வேண்டுமென விதிக்கும்) நியமவிதிபாலதுமன்றாம், யாதினாலெனில், வேதாந்த விசாரமொழிந்து ஒரே பேற்றைக் கொடுக்கத்தக்கதாய மற்றோர் உபாயம் பிரத்தியக்ஷத்தில் இல்லாமையினாலாமென்க. இனி அவ்வேதாந்த சிரவணஞ் செய்யத்தக்க தென்பதைப் பரிசங்கியா விதியாகக் கொள்வோமெனில், அதுவுமன்றாம் ; (அப்பரிசங்கியா விதியினால்) வேதாந்த சிரவணம் மாத்திரம் எய்துவதாமன்றி வேதாத்தியயனம் பெறப்படமாட்டாதாமாதலினென்க. அவ்வாறாகும்போது, வேதாத்தியயனஞ் செய்யாதவர்களுக்கு வேதாந்தவிசாரம் எய்தமாட்டாதாய், அதனால் புருஷார்த்தம் எய்தமாட்டாது வேதாந்த சிரவணமானதீ கருமகாண்ட சிரவணம் செய்யவொண்ணாது என்னும் பரிசங்கியாவிதியின் பாலதாயின், கருமவிசாரஞ் செய்யாது கன்மாநுஷ்டானம் எய்தாது ; கன்மாநுஷ்டானம் இல்லாது சித்தசுத்தி எய்தாது ; அதனால் ஞானம் உற்பத்தியாகாது. ஆதலினால் (கன்மவிசாரம் செய்தபின்னர்ப் பிரமவிசாரம் செய்யவேண்டுமென) முன்னுரைத்தமையே சால்பாமென்க.

வேதாந்தசூத்திரத்துக்குப் பிரேரகமாயுள்ள சோதனாலக்ஷணமாகிய யாகரூபமாயும், அந்தப்பிரமத்தை ஆராதித்தலால் எய்தும் விசேஷபிரயோசன ரூபமாயும், அந்தந்த அர்த்தவாதத்தினாலே பிரகடனஞ் செய்யப்பட்ட உத்கிருஷ்டவிலாசமாயும், சுருதிகளினாலே நிறைந்த சகல அங்கங்களோடு இசைந்ததாயும், தனக்கு (தருமத்துக்கு) பிரமாணாநுகூலமாகிய ஸ்மிருதி, இதிகாசபுராணத்தின் பாலதாம். அபியுக்தருக்குப் பிரமாணத்தினாலே இசைந்த உபப்பிரும்மணமாயும், விதி நிஷேதம் (injunctions and prohibitions), விகற்பம், சமுச்சயம், (alternatives and conjunctions), உத்சர்க்கம், அபவாதம், (general and special rules), வாதம், அப்பியுச்சயம், (weakening exceptions and strengthening illustrations) முதலியவைகளோடிசைந்ததாயும், சமஸ்த புருஷார்த்த சாகரமாயும், பிரமஞானத்துக்குச் சாதனமாயுள்ள சிரேஷ்டமாகிய தரும (பூருவமீமாஞ்சா) விசாரஞ் செய்த (அத) பின்னரே (அநந்தரம்),—சித்து அசித்துப் பிரபஞ்சாகாரமாகிய பராசத்தி விசிஷ்ட அத்துவிதிய வைபவரும், சகல வேதசாரரசிய தத்துவாலயரும், பவர், சிவன், சர்வர், பசுபதி, பரமேசுவரர், மகாதேவர், உருத்திரர், சம்புமுதலிய பரியாயவாசக சப்தங்களின்சாரத்தினாற் பிரகாசிக்கின்ற உத்கிருஷ்ட மகிமாவிலாசத்தை யுடையவரும், தமது சேஷ அம்ச) ரூபமாகிய சமஸ்த சேதனத்தினாலே (ஆன்மாவினாலே) நன்றாகச் செய்யப்படும் உபாசனையினால் தமக்கு அநுகூலமாக உதித்த தமது அருட் பிரசாதத்தினாலே சமர்ப்பிக்கப்பட்ட புருஷார்த்தத்தினாலே சார்த்தகருமாகிய பரப்பிரமத்தைப் பிரதிபாதனஞ் செய்யும் உபநிஷத் சாஸ்திரவிசாரஞ் செய்யத்தக்கதாமென்பதாம் என்பது ("அத") சப்தத்துக்குப் பின்னர் (அநந்தரம்) என அர்த்த நிர்ணயஞ் செய்யப்பட்டது.

"அதஃ" ஆதலினால்—எந்த ஏதுவினால் தருமவிசாரஞ்செய்யப்பட்டதோ அந்த ஏதுவினால் பிரமவிசாரஞ் செய்யவேண்டியது என்னும் ஏதுப்பொருளிலே போந்தது ஆதலினால் எனப் பொருள்படும் " அதஃ " (அதஃ) என்னும் மொழியாமென்க. இதனால், வேதாத்தியயனஞ் செய்த புருஷனாலே பூர்வமீமாஞ்சை விசாரஞ் செய்யத்தக்கதா மாதலின், (அக்) கர்மாநுஷ்டானஞ் செய்தல் வாயிலாகப் பிறந்த சித்தசுத்தியினால் வாய்ந்தவனும், அச்சித்தசுத்தி எய்திய காலத்திலே உதித்த விவேகாதி குணத்தோடிசைந்த பரமபக்தி வாய்ந்தவனுமாகிய புருஷனால் நிரதிசய கல்யாணகரமாகிய பிரமமும் விசாரஞ் செய்யவேண்டியதா மென்பது.

(௧௦) "ப்ரஹ்மஜிஜ்ஞாஸா"

பிரமத்தைத அறிதற்குள்ள இச்சையே "ப்ரம்மஜிஞ்ஞாஸா" என்பது, இது ஈண்டுகர்மணி ஆறும் வேற்றுமையில் நின்றது.

(கக) "வரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாந் நாஸ்த்யக்ருத: க்ருதேந தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்"

"கரும பலபூதங்களாகிய புத்திரதாராதிகளின் விடுதற்பாலனவாயும், விடுதற்பாலன வல்லவாயு முள்ளவற்றை நிச்சயஞ் செய்து (எனவே அவற்றையெல்லாம் இழிவென்று நிச்சயித்து என்றபடி), விரக்தியுடைய பிராமணனுக்கு பிரேமத்துக்கு (அன்புக்கு) இருப்பிடமாகிய சிவபிரான் மீது ஞானம் உதயமாகும்; அப்படிச் சற்கருமஞ் செய்தலினல் அகிருதன் (துஷ்டகருமஞ் செய்பவன்) ஆகான்; அந்தப் பிரமத்தைப் அறியும்பொருட்டே அவன் சமித்துக்களைக் கையிலெடுத்துக்கொண்டு பிரமநிஷ்டனும், வேதம் அறிந்தவனுமாகிய குருவை அடைகின்முன்" என்றற் ஞெடக்கத்தனவே பிரமாணமாம்.

பிரமவிசாரஞ் செய்வது யுக்தமா அன்று என்னும் சந்தேகம் கிளர்கின்றது, பிரமவிசாரஞ் செய்யத்தக்கதன்று, அதிலே (பிரமத்திலே) சந்தேக மின்மையால்; சந்தேக முளதாயது எவ்வாறு.?

(கஉ) "அயமாத்மா ப்ரஹ்ம"

"இந்த ஆத்மா பிரமம்" என்னும் சுருதியானது, (அஹம்) "அகம்" என்னும் ஞானத்தினலே பிரத்தியக்ஷ சித்தமாக, "ஆன்மாவே பிரமம்" என்று உபதேசிக்கின்றது. ஆதலினல் சந்தேக களங்கப் பிரசங்கம் எற்றுக்கு? இன்னும் (சிவபிரானகிய) பரமான்மாவுடைய விசாரபலமே அப்பிரமஞான விஷயமாம்; (ஞேயமாகிய) ஞானவிஷயமாகிய (பாகத்தின்) வேதாந்தவிசாரம் வாயிலாகப் பிறந்தப் பிரமவிசார ஞானமானது, பிரமத்தை வேறுபிரிவு படுத்துகின்றதா இல்லையா? பிரமத்தை வேறு படுத்துங்கால், அந்தப் பிரமத்துக்குச் சகண்டத்துவப் பிரசங்கம் வருமே (அகண்டமாகா தென்றபடி), பிரமத்தை வேறு பிரிக்காதொழியின், பிரமம் பிரகாசிக்கமாட்டாது "இது இவ்வியல்பினது" என்று (படத்தினின்று) வேறுபிரிக்கப்பட்ட கடாதிகளுக்கே ஞானமுளதாதல் (போல), (பிரமத்தை வேறு பிரிக்கா தொழியில்) பிரம விஷய ஞானம் எய்தமாட்டாது; அதனற் பிரயோசனமும் சிறிதும் காண்கிலேம்; அதனல் முத்திப் பிரயோசனமும் சம்சாரமுடிவும் எய்தாவா மாதலின் என்று இங்ஙனம் ஆக்ஷேபிப்பின், சொல்லுதும்.

வேதாந்த சாஸ்திரம் எப்பிரகாரத்தினலும் நன்று ஆரம்பிக்கத்தக்கதாம், பிரமத்தின் மீது சந்தேகமுண்மையின், வேதாந்தசாஸ்திர விஷயத்திலும் அச்சந்தேகம் எய்துதலினலும், அப்பிரமத்தை நிர்ணயஞ் செய்தல் வேதாந்த சாஸ்திரத்தின் பயனுதலினலு மாமெனக். யாதினலெனில்

(கங) "அயமாத்மா ப்ரஹ்ம"

"இந்த ஆத்மா பிரமம்" என்றற் ஞெடக்கத்த சுருதிகள் அகங்காரத்தினலே கட்டுண்ட இந்தச் சம்சாரியாகிய "ஆத்துமாவைப்" பிரமம் என்று சொல்லுகின்றதென்னும், இதனற்ருன் சந்தேகம். நீக்கப்பட்ட சமஸ்த சம்சார ரூபகளங்கத்தையுடைய பிரமத்துக்கு நிரதிசய ஞானனந்தமுதலிய குணங்களோடிசைந்த பராசத்தியின் மகிமாதிசயத்தை யுடையதே பிரமத்துவமாம் (பிரமத்தின் தருமலக்ஷணமாம்); அநாதியாயுள்ள அஞ்ஞான வாசனையினலே பந்திக்கப்பட்டு வெளிப்பட்ட நாநாவித கருமபல போகத்துக்கு அநுகூலமாகிய அநேக சரீரங்களிலே பிரவேசித்தலும், அவற்றினின்று நீங்குதலுமாகிய வியாபாரத்தினலே வசப்பட்டு, அதனல் எல்லையில்லாத துக்கத்தைச் சகிக்கும் இயல்பினையுடையதே (ஜீவப்பிரம லக்ஷணமாம்). அதனல், எவ்வாறு ஒன்றுக்கொன்று விலக்ஷணமாயுள்ள பரமாத்துமா சீவாத்துமா என்னும் இரண்டுக்கும்

(கச) "அயமாத்மா ப்ரஹ்ம"

"இந்த ஆத்துமா பிரமம்" என்ற சுருதி எவ்வாறு சொல்வதாகும்? இதனல் சீவப்பிரமம் பரப்பிரமம் என்னும் இவ்விரண்டின்மீதும் யாதினல் சந்தேகம் பிறக்காது? இன்னும் பின்வருமாறு சந்தேகம் நிகழுகின்றது.

(கரு) "அந்நம் ப்ரஹ்ம । மநோ ப்ரஹ்ம । விஜ்ஞாநம் ப்ரஹ்ம । ஆதித்யோ ப்ரஹ்ம । நாராயணோ ப்ரஹ்ம॥"

"அன்னம் பிரமம்", "மனம் பிரமம்" "விஞ்ஞானம் பிரமம்", "ஆதித்தியன் பிரமம்", "நாராயணன் பிரமம்" என்றற் ஞெடக்கத்த (சுருதி) வாக்கியங்கள் ஒவ்வொன்றையும் "பிரமம்" என்று சொல்கின்றன. அவ்வாருயின் "எது பிரமம்" ஆகும்? இதனல் அதிகமாகச் சந்தேகித்தற் கிடனய் நின்ற பிரமம் விசாரஞ் செய்தற்கு அருகமாயிற்று. கேட்டல், சிந்தித்

தலாதிகளினாலே நிச்சயிக்கப்பட்டவரும், பக்தியினாலும் ஞானத்தினாலும் பிரத்தியக்ஷமாக்கப்படுபவரும், பரமகாருண்ணிகரும், சர்வாநுக்கிரகமுடையருமாகிய சிவபிரானாராகிய பரப்பிரமத்தின் அருளாதிக்கியத்தினாலே, வேதாந்த சூத்திரத்துக்கு அதிகாரராயுள்ளார்க்கு நீக்கப்பட்ட (துவம் சிக்கப்பட்ட) பாசபடலத்தை யுடையதும், பிரத்தியக்ஷமாக்கப்பட்ட நிரதிசயானந்த ஸ்வரூபமாகிய அந்தப் பரப்பிரமத்தின் சாமியகுணசாரமாயுமுள்ள "கைவல்லியலட்சுமி" எய்துவதே வேதாந்தசாஸ்திரத்தின் பிரயோசனமாமென்க. இதனால் சவிஷயமும் (பிரம விஷயமும்) சப்பிரயோசனமுமாம் (கைவல்லியலட்சுமியுமாம்) இரண்டுமே வேதாந்தசாஸ்திர சிரவணத்தின் பாலனவாம்.

ஞானவிஷயமாய்ப் பரிச்சேதரூபமாயிருக்கும் (பாகரூபமாயிருக்கும்) முன்னர்க் கூறிய ஞானமானது பிரமம் அகண்ட விஷயமாயிருத்தலால் எய்தமாட்டாதாமென்பது அஞ்ஞானத்தின் விளக்கமேயாம். யாதினாலெனின், பிரமத்துக்கு "இப்படிப்பட்டது" என்னும் பரிச்சேதரூபஞானவிஷயம் எய்தமாட்டாதாயினும், சிலலக்ஷணவாயிலாகப் பிறவற்றிலிருந்து வேறுபடுத்துதலினாலே பரிச்சேத ஞானம் பிறக்குமாதலாலென்க. லக்ஷணத்திலே எவ்விடத்தும் இலக்கிய விஷயமும், மற்றொன்றினின்று வேறுபிரித்தலுமாம் ஞானமுமே பரிச்சேதமாம். உத்தேசிக்கப்பட்ட பிரமத்தினுடைய லக்ஷணத்தை வேதாந்த வாக்கியங்கொண்டு நிரூபித்துப் பரீக்ஷிக்குமிடத்து அந்தப் பிரமலக்ஷணங்களினின்று நீங்கிய யாவும் சஜாதிய விஜாதியமாயுள்ள (அப்பிரமத்தினின்று) வேறாய், பதார்த்தங்களிலிருந்து வேறு பிரிக்கப்பட்டுள்ளதே பிரமம் எனப்படும். (இதனால் வேதாந்தசாஸ்திர வாயிலாகப் பிரமத்துக்கு லக்ஷணஞ் சொல்லுமிடத்து, மற்றைய சேதனாசேதன பதார்த்தங்களிலிருந்து வேறு பிரித்துச் சொல்லப்படுவதே பிரமம் எனப்படும் என்பதாம்.) ஆதலினால் இந்தப்பிரமவிஷயமாயுள்ள சாஸ்திராரம்பம் யுக்தமேயாம். புத்திமான்கள் சந்தேகமில்லாத விஷயத்திலும், பிரயோசனமில்லாத விஷயத்திலும், விசாரஞ்செய்தலாம் படியிலேறார்கள் என்பதும் வேதாந்த சாஸ்திர விசாரத்தின் பிரமாணயுக்தி வாயிலாக லக்ஷண (ஆபாச), அலக்ஷண (பிரதிபாச) வசனத்தினாலே பிரமமானது சந்தேகத்துக்கு இருப்பிடமாய்ப் போந்தமையின், பிரமமானது சாஸ்திரவிஷயமாய்ப் புத்திமான்களால் விசாரஞ் செய்யத்தக்கதாயிற்று.

(கசு) ‹‹ப்ரஹ்மவிதாப்நோதி பரம்››

"பிரமோபாசகன் இருதயத்தின்கண்ணே நிரதிசய பரமானந்தத்தை அடைகின்றான்" (எனத்தைத்திரீய சுருதியினால் நிரதிசயானந்தரூபமே பிரயோசனமாகச் சொல்லப்பட்டது.)

(கஎ) ‹‹ஜ்ஞாத்வா ஶிவம் ஶாந்திமத்யந்தமேதி››

"சிவத்தை அறிந்து அத்தியந்த துக்க நிவிர்த்தியை அடைகின்றான்". (என்று சுவேதா சுவதரச்சுருதியினால் துக்கநிவாரணமாம். இரண்டாவது பிரயோசனம் உணர்த்தப்பட்டது.)

(கஅ) ‹‹ஈஶம் தம் ஜ்ஞாத்வாம்ருதா பவந்தி››

"சிவபிரானை அறிந்து மீளப்பிறவிகொடாத நித்தியமாய பிரமானந்தானுபவ ரூபமடைகின்றார்கள்." (என்னும் சுவேதா சுவதரச் சுருதியினால் மூன்றாவது பிரயோசனம் சொல்லப்பட்டது.)

(ககூ) ‹‹தமக்ரது: பஶ்யதி வீதஶோகோ தாது: ப்ரஸாதான் மஹிமானமீஶம்››

"அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்துமாயிருக்கும்" என்ற சுருதிப்படி, ஆன்மாவின் இதயக்குகையின்கண்ணே உபாசனையின் பொருட்டுள்ளாரும், "பிராகிருத மகிமையோடு கூடினவராயுமுள்ள ஈசனாரைச் (சேதன அசேதனப் பிரபஞ்சாதாரமாயுமுள்ள அச்சிவப்பிரசாத வாயிலாகச் சோகம் நீங்கினவனாய்க் காண்கின்றான்" என்றும்,

(உ0) ‹‹ஸ்வதேஹமரணிம் க்ருத்வா ப்ரணவஞ்சோத்தராரணிம் |
த்யாநநிர்மதநாப்யாஸாத் பாஶம் தஹதி பண்டித: ||››

"பண்டிதன் இதயகுகையின்கண்ணே ஆத்துமாவை அரணியாய்வைத்தும் பிரணவத்தை உத்தராரணியாக வைத்தும் தியானப்பியாசமாம் கடைதலால் மலமாயாகருமம் என்னும் பாசத்தைத் தகிக்கின்றான்" என்றும்,

(உக) ‹‹ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாஶை:››

"சிவபிரானை அறிந்து சர்வபாசங்களினின்று விடுபடுகின்றான் என்றும்போந்த இப்படிப்பட்ட சுருதி அபிப்பிராயத்தினால் அந்தப்பிரம ஞானோபாசனையினாலே, அதிகாரியாகிய புருஷனுக்குப் பாசத்தை நீக்குதலாகிய ரூபமே (லக்ஷணமே) முக்தியுமாம் பிரயோசனமுமாம் எனப் பிரதமாதிகரணம் பிரதிபாதிக்கப்பட்டது.

ஈண்டு விரும்பப்பட்ட பிரமத்தை நிச்சயஞ் செய்யும் இலக்ஷணம் என்னை? என்று விசாரிக்குங்கால், அப்பிரமத்தின் இலக்ஷணத்தை விளக்குவதாகிய இரண்டாவது அதிகரணஞ்சொல்லப்போந்தாராயினர் சூத்திரகாரராகிய பகவான் வேதவியாசர்.

இரண்டாம் அதிகரணம்.

இரண்டாஞ் சூத்திரம்.

"ஜந்மாத்யஸ்ய யத:।"

(சூத்திரார்த்தம்) எங்கிருந்து இதின் பிறப்புமுதலியன.

இலக்ஷியம் அறியப்பட்டவிடத்து, அதன் இலக்ஷணம் (வேண்டப்படாது) வியர்த்தமாய் முடிதலினாலும், அவ்விலக்ஷியம் அறியப்படாதொழியின் அதனை விரும்புவதுளதாகாமையானும், இங்கே பிரமத்துக்கு இலக்ஷணம் எங்ஙனம் உரைப்பதாகும் என ஆக்ஷேபிக்கற்பாலதன்றும், வேதாத்தியயன வாயிலாக நிச்சயிக்கப்படாது அறியப்பட்ட பிரமத்துக்கு இலக்ஷணமுரைத்தல் யுக்தமாதலினாலென்க. இந்த (இரண்டாஞ்) சூத்திரம்.

"ஜந்மாதி, அஸ்ய, யத: ।"

என்று பதச்சேதம் பண்ணப்படுவதாகும்.

(அஸ்ய) சேதனம் (பசு), அசேதனம் (பாசம்) என்னும் இரண்டின் தொகுதியாய்ச் சமரசமாயுள்ள பிரபஞ்சவிலாசமாம் இதின்—சிருஷ்டி, திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரககிருத்தியமாம் (ஜந்மாதி) செனனாதி—எங்கிருந்து (யத:) உளதாமோ, அதுவே பிரமமாம். "எங்கிருந்து இவ்வுலகமெல்லாம் பிறக்கின்றனவோ, எதினின்று பிறந்தவை நிலையுறுகின்றனவோ, ஒழியுங்கால் அவை எங்கே பிரவேசிக்கின்றனவோ, அதனை அறிய விரும்பு, அது பிரமமாம்" என்று கொண்டு, (தைத்திரீயம். III. 1.)

"யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம।"

என்றும், "சம்சாரத்தின் பந்தத்துக்கும் ஸ்திதிக்கும் மோக்ஷத்துக்கும் காரணராய், பிரதானத்துக்கும் (பாசத்துக்கும்), க்ஷேத்திரஞ்ஞனுக்கும் (சீவப்பிரமத்துக்கும்) பதியாயுள்ளார் (சர்வஞ்ஞதாதி) குணங்களையுடைய ஈசரேயாம்" என்று கொண்டு (சுவேதாசுவதரம். VI. 16.)

"ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேச: ஸம்ஸாரமோக்ஷஸ்திதிபந்தஹேது:।"

என்றும், "சத்தியம், ஞானம், அனந்தம் பிரமம்" என்று கொண்டு (தைத்திரீயம். II. 1.)

"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।"

என்றும, "சௌமிய, சத்துத்தானே முதற் கண்ணிருந்தது," "ஏகமாம் அத்துவிதீயம்" என்றும் கொண்டு (சாந்தோக்கியம். VI. II. 1.)

"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்।
ஏகமேவாத்விதீயம்."

என்றும், "மெய்யினரும், சத்தியரும், பரப்பிரமமும், புருஷரும், கிருஷ்ணபிங்களரும், ஊர்த்துவவீரியமுடையவரும், விருபாக்ஷரும், விசுவரூபருமாயுள்ளார்க்கு நமஸ்காரம்" என்பது கொண்டு (மகாநாராயணோப நிடதம் 23.)

"ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்।
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாய வை நமோ நம:॥"

என்றும், பிறவுமாகப் போந்த (சுருதி) வாக்கியமே விஷயமாம்.

இங்கே பிரபஞ்சத்தின் பிறப்பு முதலாயின (செனனாதி) பிரமத்துக்கு இலக்ஷணமாக எய்துமோ எய்தாதோ என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரபஞ்சத்தின் பிறப்புமுதலாயின பிரமத்தின் இலக்ஷணமாக எய்தாது சம்பந்தமின்மையால், இன்னும் "ஆனந்தம் பிரமம் என்று அறிகின்றான்" என்று கொண்டு (தைத்திரீயம். III. 6.)

"ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்।"

என்று கூறியவிடத்திலே,

"ஆநந்தாத்த்யேவ கல்விமாநி பூதாநி ஜாயந்தே।"

"ஆனந்தத்திலிருந்தே இப்பூதங்களெல்லாம் உற்பத்தியாயின" என்பது காணப்படுதலால், ஆனந்தத்துக்கே பிரபஞ்சோற்பத்தி இலக்ஷணம் எய்துகின்றது. மற்றோரிடத்திலே, சௌமிய, சத்தே முதற்கண்ணிருந்தது" என்ற கருத்தினால்.

"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்।"

என்று கூறப்பட்ட விடத்திலே, சத்துக்குப் படைப்பாதிகாரணம் எய்துவதாகின்றது. "சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என்பது கொண்டு,

"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।"

என்று கூறியவிடத்திலே, முடிவிறந்த ஞானமே பிரமத்தினின்று பிரிவுறுததாய் உலகத்துக்குக் காரணமாக ஓரிடத்திலே உணர்த்தப்படுகின்றது. மற்றோரிடத்திலே (சுவேதாசுவதரம் IV. 18) "எப்போது இருள (மகாசங்காரகாலமானது) உளதாயிற்றோ, அப்போது பகலுமில்லையாய் இரவுமில்லையாய், சத்துமில்லையாய் அசத்துமில்லையாய் (எனவே, சத்தாகிய பசுவும் அசத்தாகிய பாசமும் நாமரூப ஸ்துலரூபமொழிந்து நின்றன என்றவாறும்), சிவன் ஒருவர்மாத்திரம் உளராயினர்" என்பதுகொண்டு,

"யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரிர் ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல:।"

என்று சொல்லப்பட்ட விடத்திலே, சிவன் என்னும் மொழியினால் உணர்த்தப்படும் வஸ்துவே காரணமாய் அனைத்துக்கும் முன்னுளதாம் பிரமமாக அறியப்படுகின்றது. ஈண்டு ஆனந்த முதலியன பிரமம் என்னுமிடத்து, இவையெல்லாம் தனித்தனி பிரமமாதலாம் விகற்பத்தின் பாலதாமோ? இன்றேல் இவை

யெல்லாம் ஒன்றுதலாம் சமுச்சயத்தின் பாலதோ? விகற்ப மாயின் சுருதிஹாநியாதிதோஷப் பிரசங்கமும், பிரமம் இது வோ அதுவோ என்று நிச்சயிக்க இயலாததாம் அவ்வியவஸ் தையும் நேரும். ஆனந்தமுதலாயின வெவ்வேறுகத் தனித்தனி பிரமமாய் முடியின், பிரமம் அநேகமாதலாகிய அநேகேசுவரப் பிரசங்கம் எய்தும். ஆனந்தமுதலியவெல்லாம் ஒருங்கியைந்து பிரமமாய் முடியுமோவெனில், குணங்களானமையால் இவை சமஸ்தலோகங்களையும் நிர்மாணஞ் செய்தற்கியன்ற உபாயஞா னம் போன்ற குணங்களையுடைய பிரமமாகாவென்க. மேலும் "மாயையைக் காரணம் (பிரகிருதி) என்று உணர்க" என்னும் கருத்தினால்,

"மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்"

என்னும் (சுவேதாசுவதரம். IV. 10) சுருதியானது அசேதன மாகிய மாயையைப் பிரபஞ்சோற்பத்திகாரணமாகச் சொல்லு கின்றமையால் அதுவே பொருத்தமாம், ஞானரூபமுடைய பிர மத்தையே பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமாகச் சொல்லுங் கால், அந்தப் பிரமம் விகாரமுறுவதேயாய், "நிஷ்களரும் செ யலிலாதவரும் சாந்தருமாம்" எனப் பொருள்பட (சுவேதா சுவதரம் VI. 19.)

"நிஷ்களம் நிஷ்க்ரியம் சாந்தம்"

என்றற்றொடக்கத்த சுருதிகளுக்குப் பங்கம் நேருமாதலில், எப் பிரகாரத்தினாலேனும் பிரமத்துக்குப் பிரபஞ்சோற்பத்திலக்ஷ ணம் சாற்றுதல் அமைவுடைத்தன்றும் எனப் பூருவபக்ஷம் செய்யப்படுமாயின், சொல்லுதும்.

பிரபஞ்சத்துக்குத் தோற்றமுதலியன வுண்மையால் பிரமத் திக்கு அது சம்பந்தமுறுதலில்லை யாமாயினும், அப்பிரபஞ் சோற்பத்தி முதலியன பிரமத்துக்கு இலக்ஷணமாகத் தடஸ்த முறையானே சொல்லப்படும். சர்வஞ்ஞத்துவாதி குணங்களை யுடையதும், அஷ்டாரமங்களுக்கு அதிகரணமாயுமுள்ளது (பிர ணவமாகிய குடிலையினின்று வேறுறாத) சிவதத்துவமாம்; அது வே ஜகத்காரணமாகிய பிரமம்* என்று சொல்லப்படும்.

சர்வஞ்ஞத்துவம் (முற்றறிவு), நித்தியதிருப்தத்துவம் (வர ம்பிலின்பமுடைமை) அநாதி போதம் (இயல்பாகவே பாசங் களி னீங்குதல்), சிவதந்திரத்துவம் (தன்வயமுடைமை), அலு ப்த சக்தித்வம் பேரருளுடைமை), அனந்த சத்திதுவம் (முடி விலாற்றலுடைமை) என்னும் இவைகளே சர்வஞ்ஞாதி குண ங்களாம். (இந்தக்குணங்கள் ஆறும் ஸ்காந்தபுராணத்துச் ச னற்குமாரசங்கிதையிலே பிரபாகரனுக்கு வைதிகபாசுபதயோக தீக்ஷை உபதேசிக்கப்பட்ட பதினான்காம் அத்தியாயத்தினும், மகாபாரதத்தினும், கூர்மபுராண உத்தரபாகத்து எட்டாம் அத் தியாயத்தினும் பிறவிடங்களினும்)

"ஸர்வஜ்ஞதா த்ருப்திரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தசக்தி: । அநந்தசக்திஸ்ச விபோர்விதிஜ்ஞா: ஷடாஹுரங்காநி மஹேஸ்வரஸ்ய ॥"

என்று சொல்லப்பட்டது.

(க) சர்வஞ்ஞதை எக்காலும் கண்கூடாய் அறிதற்கு வேண் டப்படும் புறக்கரணங்கள் வேண்டாது சமஸ்தவஸ்துக்களும் களங்கமில்லாத அநுபவவிஷயமாய் உளதாதலே சர்வஞ்ஞத்து வமாம்; "எவர் சர்வஞ்ஞராய், எவற்றையும் அறிபவராய், எவ ருக்குத் தபசு ஞானமயமாயுளதோ" என்பது பொருள்பட (முண்டகோபநிடதம். I. 1. 9.)

"யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:"

என்று கூறினமையால், மேலே போந்த சர்வஞ்ஞதை என்னும் குணம் சித்தமாகின்றது. இதனால் சமஸ்தசேதனத்தின் (பசுக் களின்) கன்மபலபோகத்துக்கு உபயோகமாகிய அவ்வச்சரீரங் களை யாக்கும் உபாயமாயவைகளைப் பற்றிய விசேஷ ஞானமு டைய பிரமம் காரணமாகின்றது.

(உ) நித்தியதிருப்தத்துவம்—விபத்துக்களெனப்படும் களங் கமெலாமொழிந்த நிரதிசயானந்த பரிபூரணத்துவமே ஈண்டு நித்தியதிருப்தத்துவமாம். இதுபற்றியே ஆனந்தமுடையது பிரமம் என்பது பொருள்பட (தைத்திரீயம். III. 6.) சுருதி யானது "ஆனந்தம் பிரமம்"

"ஆநந்தோ ப்ரஹ்ம"

என்று கூறிற்று. "அன்னியமாய் அந்தரமாயுள்ள ஆன்மா ஆ னந்தமயமாம்" எனத் (தைத்திரீய II. 5.) சுருதி

---

* (சைவபாஷ்யகாரர் சத்திதத்துவமுதல் பிருதிவியந்தமா கிய (முப்பத்தைந்து) தத்துவம் சிவதத்துவத்திலே நின்று பிறந்ததாக முதலாம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்து முதலாம் சூத்திரபாஷ்யத்திலே உரைப்பாராயினர். "சிருஷ் டிகாலத்திலே குடிலையானது குண்டலியாகாரமா யிருந்தது; அதன் மத்தியிலே ஞானமாய் உதித்தது நாதமாம்; இதுவே நிராமயமாகிய பரதத்துவமாய், சுத்தஸ்படிக சங்காசமாயுள்ள சிவதத்துவமென்று சொல்லப்படும்" என்னும் கருத்தினால் வைதிக ஞானசித்தி என்னும் ஆகமம்.

"ஸ்ருஷ்டிகாலே து குடிலா குண்டல்யாகாரரூபிணீ ।
தந்மத்யே ஜ்ஞாநரூபேண நாதரூபேண வர்த்ததே ।
தத் தத்வம் பரமம் ப்ரோக்தம் நிராமயம்
ஸுத்தஸ்படிகஸங்காஸம் ஸிவதத்வமிதீரிதம் ॥"

என்று உரைக்கின்றமையானும், "அளவிலாததும், உரைக்கவிய லாததும், உபமானில்லாததும், அநாமயமானதும், சூக்கும மாய தும், சர்வவியாபகமாயதும், எக்காலமும் நிலையுறுவதும், அழி யாததும், எல்லாவற்றுக்கும் மேலாய் நாயகத்தன்மை பூண்டு நிற்பதும் சிவதத்துவமாம், சாந்தியாதீதராய்ப் பரசிவனருள ராக, இது ஓங்காரஸ்வரூபமாய் விளங்குவதாம்" என்பது பொ ருள்பட வைதிகசுவாயம்புவாகமம்.

"அப்ரமேயமநிர்தேஸ்யமநௌபம்யமநாமயம் ।
ஸூக்ஷ்மம் ஸர்வகதம் நித்யம் த்ருவமவ்யயமீஸ்வரம் ।
ஸிவதத்வமிதம் ப்ரோக்தம் ஸாந்த்யதீதாவதிஷ்டிதம் ।
ஓங்காரார்த்ததயா ஹ்யேதி ஸாந்த்யதீத: பரஸ்ஸிவ: ॥"

என்று சொல்கின்றமையானும், சிவதத்துவம் குடிலையினின்று வேறுபடாத தொன்றும் என்பது பெறப்படுகின்றது.)

"ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:"

என்று தோற்றுவாய் செய்து, "இது ஆனந்தத்தின் அளவாகும் (மீமாஞ்சையதும்)" என (அத்தைத்திரீயம் II. 8.) சுருதி.

"ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி"

என்று ஆரம்பித்து, (பல்வகை ஆனந்தங்களை அடிதொடுத்து ஒன்றின் மேலொன்றாக) மீட்டும் மீட்டும் பெருக்கிப் பெருக்கி உரைத்து முடிவிலேபோய் நிரதிசயமாம் தலைக்கிரீடமாக, பிரமத்தின் ஆனந்தத்தையுற்று, "பிரமத்தினது ஆனந்தம் இது ஒன்றும்" என

"ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:"

என்று உரைத்தல் வாயிலாக, (முன்னர்க் கூறிய) ஆனந்தம் பரப்பிரமத்தின் குணமாக ஈண்டு உரைக்கப்பட்டதாயிற்று. ஆனந்தத்தின் மிகுதிபற்றியன்றோ அவானந்தம் பிரமமாகவே உபசரிக்கப்படும் என்பது போதர "ஆனந்தம் பிரமம்" என

"ஆநந்தோ ப்ரஹ்ம"

என்று உரைக்கப்பட்டது. அப்படிப்பட்ட ஆனந்தபோகரசத்தையுடையது பிரமமாதலினுல் நித்திய திருப்தத்துவமுடையதாகச் சொல்லப்பட்டது. பிரமத்துக்குப் புறக்கரணத்துட்படாத மனசினுலே (ஞானசத்தியினுலே) மகானந்தாநுபவமாம். அதனுலே பிரகாசமாகிய ஆகாசத்தைச் சரீரமாக வுடையது பிரமமாம்" என்றும்; "சத்தியாத்தும பிராணாராமம்" என்றும்; "மன ஆனந்தம்" என்றும்; "சாந்திசமிருத்தம் அமிருதம்" என்றும் பொருள்பட

"(*a*) ஆகாசசரீரம் ப்ரஹ்ம,
(*b*) ஸத்யாத்ம ப்ராணாராமம்,
(*c*) மந ஆநந்தம்,
(*d*) சாந்திஸம்ருத்த மம்ருதம்,"

என்று (தைத்திரீயம் I. 6) உரைத்தது.

(*a*) ஆகாசசரீரம் பிரமம்.

ஈண்டு நாற்புறத்தும் பிரகாசித்தலால் ஆகாசமானது பிரகாசமாய்ச் சிதம்பரம் எனப்படும். இது பூதாகாச மன்றும், (சடமாய) விசேஷ மின்மையினுலென்க. சமஸ்தலோக, அண்டகண்டமாகிய குமிழிக் கூட்டத்தையுடைய இரத்தினுகரமாகிய பரப்பிரகிருதி ரூபையாம் பரமசத்தியே (பராசத்தியே) சிதம்பரம் எனப்படும். இந்தப் (பிரகாசமாகிய) சிதம்பரரூபம் பிரம மாதலினுலே, "ஆகாசசரீரம் (பிரமம்)" என்று சுருதி சொல்லியது. சிதாகாயம் (சிதம்பரம்) பரமகாரணமாதல் "இந்தப் பூதங்களெல்லாம் ஆகாயத்திலே நின்று உற்பத்தியாயின, ஆகாயத்திலே ஒடுங்குகின்றன" என்றும், "நாமரூபங்களாய அனைத்தையும் தோற்றுவிப்பது ஆகாயமாம்" * என்றும், (சாந்தோக்கியம் I. 1.)

* (ஆகாசம் பராசத்திக்குப் பெயராதல், "சிவபிரானுடைய பரமதேவியாகிய சத்தியார் ஆகாயம் எனப் பெயர்படைப்பார்" என்பது கொண்டு, கூர்மபுராணம்

"ஸர்வாணி ஹவா இமாநி பூதாந்யாகாசாதேவ ஸமுத்பத்யந்தே ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி,"

என்றும், (சாந்தோக்கியம் VIII. XIV. 1.)

"ஆகாசோ ஹவை நாம நாமரூபயோர் நிர்வஹிதா,"

என்றும் உரைத்தமையினுலே அது சித்தமாகும்.

"யஸ்யாஸா பரமா தேவீ சக்திராகாச ஸம்ஜ்ஞிதா,"

என்று கூறினமையால் உணரப்படும். சிவதத்துவத்தினின்று வேறுருத குடிலையானது பரப்பிரகிருதி எனவும், மகாமாயை எனவும் படும். பிரகிருதியானது ஸ்தூலம், சூக்குமம், பரம் என முத்திறப்படும்; ஸ்தூலப் பிரகிருதியானது புருஷனுக்குச் சாத்துவிக ராசச தாமசம் என்னும் முக்குணத்தோடியன்ற புத்திமுதலிய (புத்தி, அகங்காரம், மனம், சித்தம், சோத்திராதி ஞானேந்திரியம் ஐந்து, வாக்காதி கன்மேந்திரியம் ஐந்து, சப்தாதி தன்மாத்திரை ஐந்து, ஆகாசாதி பூதங்கள் ஐந்து என்னும் இருபத்திநான்கு) போக்கிய கருவிகளைப் பிறப்பிப்பதாம் என்றும், சூக்குமப்பிரகிருதியானது கலைமுதலிய (கலை, காலம், நியதி, வித்தை, ராகம், புருஷன் என்னும்) தத்துவங்களின் பிரிவிலாச் சொருபமுடையதென்றும், பரப்பிரகிருதியானது (சத்திதத்துவம், சாதாக்கிய தத்துவம், ஈசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம் என்னும் தத்துவங்களைத் தோற்றுவிக்கின்ற சிவதத்துவத்தினின்று வேறுருத) மகாமாயையாம் என்று கொண்டு, வைதிகசிவாகமப் பிரகரணமாகிய இரத்தினத்திரயம்

"ப்ரக்ருதிர் த்ரிகுணா ஸ்தூலா ஸூக்ஷ்மா கலாதிகா,
மாயா பரா ச மஹதி யாதத் ரூபா ஷட்த்ரிம்சதாத்மிகா,
ஸா ஸூக்ஷ்மா பரம் ஜாதிர் வாக்ச மாயா ச வ்யக்திர் வக்ஷ்யமாணா,
ஸா ஸூக்ஷ்மா பராபரா சக்தி நாம விஹார்யா மஹா பவதீநீ,"

என்று கூறிற்று. இந்த ஸ்தூலப் பிரகிருதி, சூக்குமப் பிரகிருதி பரப்பிரகிருதி என்னும் மூன்றும் முறையே மகாமாயை, மாயை, பிரகிருதி எனப்படும் என்று கொண்டே, சைவபுராணம்.

"மஹாமாயா ச மாயா ச ப்ரக்ருதிஸ் த்ரிதைவ ச,"

என்று கூறிற்று. ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் இந்த மூன்று பிரகிருதிகளையும் சுத்தப் பிரபஞ்சம், மிசிரப்பிரபஞ்சம், மலினப் பிரபஞ்சம் என்னும் மூன்றுக்கும் காரணமாமென உரைத்தார். சிவதத்துவங்கள் ஐந்தும்

"சிவசக்தி ஸதாக்யேச வித்யா க்யா தேவ ஸ,"

என்று பிருகச்சாபாலோபநிடதத்திலே கூறப்பட்டது. "நியதி, காலம், ராகம், கலை, வித்தை என்னும் ஐந்தும் மாயையிலே நின்று உதித்தன என்றும், இதுபற்றியே மாயையைப் பிரகிருதி என்று உணர்க என்றத் தொடக்கத்ததாக

"மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்,"

என்று (சுவேதாசுவதர) சுருதி கூறிற்று என்றும், இந்த மாயையிலே தோற்றிய கலாதி தத்துவங்கள் சந்தேகமின்றிச் சுருதியுக்தமாம் என்றும், இது பற்றியே (சுவேதாசுவதர) சுருதி

“காலஸ்ஸஹாவோ நியதிঃ।”

என்றற் றெடக்கத்ததாகக் கூறியதாம் என்றும், இந்த ஐந்து தத்துவமும் புருஷனுக்குப் பஞ்சகஞ்சுகம் எனப்படும் என்றும், இந்த ஐந்து த்த்துவங்களை அறியாதவன் வித்துவானு யிருந்தாலும் மூடபுத்தி யுடையனும்” என்றும் சிவபுராண கைலாயசங்கிதை

“நியதிঃகாலராகஸ்ச வித்யாச ததநந்தரம்।
கலாச்சபஞ்சகமிதம் மாயோத்பந்நம் நிருபம।
மாயாதத்த்வஸ்ய சக்திஸ்ச வித்யா நாமாஸ்ய சாக்திரீரிதா।
தஜாநேந்த்யாதிகலாதி ஸ்ருஷ்ட்யாதி நஸம்ஸயঃ।
காலஸ்ஸ்ஹாவோ நியதி ரிதிதத்த்வ ப்ரஸித்ரவீச।
ஏதத்பஞ்சகமேவாஸ்ய பஞ்சகஞ்சுக ம்ருச்யதே।
அஜாநந்பஞ்சகலாதி வித்வாநபி விமூட்யீঃ॥”

என்று உரைத்த வாய்மையினலே உணரப்படும். இந்த நியதி முதலிய தத்துவ பஞ்சகங்களோடு புருஷன், மாயை (யோநி) என்னும் இரண்டையும் சேர்க்குங்கால் வித்தியா தத்துவங்கள் ஏழும் பெறப்படுகின்றன. இந்த வித்தியாதத்துவங்கள் சுருதியுக்தமாமெனக் கைலாச சங்கிதையினுற் குசிப்பிக்கப்பட்டமை சுவேதாசுவதரோபநிடதத்து முதலாம் அத்தியாயத்து இரண்டாம் மந்திரமாகிய

“காலஸ்ஸ்ஹாவோ நியதிர்யத்ருச்சா பூதாநியோநிঃ புருஷ இதிசிந்த்யம்।”

என்பதேயாம். ஆன்மதத்துவம் இருபத்திநன்கும் பிரசிநோபநிடதத்து நான்காவது பாகத்து எட்டாம் மந்திரத்தினுல் அறிவுறுத்தப் படுகின்றது. இந்தப் பிரசிநோப நிடதத்து ஆன்மதத்துவம் இருபத்திநன்கும், சுவேதாசுவதரோபநிடதத்துக் கலாதிமுதலிய வித்தியாதத்திவம் ஏழும், பிருகச்சாபாலோபநிடதத்துச் சிவதத்துவ முதலிய ஐந்தும் சுருதியுக்தங்களாய் வைதிக சிவாகமப் பிரதிபாதிதமாய்ப் போந்தன. இஃது இவ்வாருகவும், மாயாவாதவரா கோபநிடதத்துப் பேசப்பட்ட “ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், (புறக் கருவிகளுட்பட்ட) வாயுக்கள் பத்தும், மனமுதலிய அந்தக்கரணம் நான்குமாகச் சேர்ந்த ஸ்தூலப்பிரகிருதி எனப்படும் (மூலப்பிரகிருதிப் பாற்பட்ட) இருபத்து நான்கு தத்துவங்களையேனும், முப்பத்தா றென்னும் தொகையினலே வேதத்திலும் சிவாகமத்திலும் பிரதிபாதிக்கப்பட்ட மேலே போந்த முப்பத்தாறு தத்துவங்களைச் சமத்துவஞ் செய்யவேண்டும் என்னும் கபட மேலீட்டினுலே சூதசங் கிதையிற் புகுத்தப்பட்ட “ஆகாசாதி ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், (புறக்கருவிப்பாற்பட்ட) தசவாயுக்களும், மனமுதலிய நான்கும், பசுவாகிய சீவனும், அவித்தையுமாக (மூலப்பிரகிருதிப் பாற்பட்ட) இம்முப்பத்தாறு தத்துவங்களை யேனும் முடிவாகக்கொண்ட இம்முப்பத்தாறனுள்ளே மூலப்பிரகிருதிக்கு மேலுள்ள சுருதியுக்த வித்தியாதத்துவங்கள் ஏழும், இவற்றிற்கு மேலுள்ள சுருதியுக்த சிவதத்துவங்கள் ஐந்தும் எவ்வாறு அடக்கப்படுவனவாம்? அஃதின்றி, பிருதிவீ தத்துவமுதல் சத்திதத்துவம் இறுதியாகப் போந்த முப்பத்தைந்து தத்துவங்கள் தோற்றுதற்குக் காரணமாய்க்குடிலைப் பிரணவத்தினின்று வேறுருத பரநாதம் எனப்படும் சிவதத்துவத்தின் பாலராய்ச் சாந்தோக்கியம் கைவல்லியம், பிருகதாரணியம், மாண்டூக்கியம், கடவல்லி, மகாநாராயண முதலியவைகளிலே புகழப்பட்ட அருளாம்பிகா சமேத பஞ்சகிருத்தியாதி காரராம் மகாசதாசிவராகிய ஈசர் பரப்பிரகிருதியிற் சூழ்ந்த சூக்குமப் பிரகிருதியினின்று உதித்த கலாதத்துவத்திற் றேற்றிய மூலப்பிர கிருதியின் விகிர்த சத்துவகுண சுத்தமாயாப் பிரதிவிம்பராகிய ஈசராமென எவ்வாறு திரிவு படுத்தப்படுவர்? சிதம்பரம் அருட்பராசத்தியாம் என்று கொண்டன்றே, சைவபாஷ்ய காரருக்கும் கூர்மபுராணத்துக்கும் இசைந்து, உமாபதி சிவாசாரியரும் “அருளாகுஞ் சிதம்பரமாம் பரமாந்திருச் சிற்றம்பலம்” என்று உரைத்தருளினர். கன்மயாகம், தபயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என்னும் ஐந்தனுள்ளே, இறுதிக்கண்ணின்ற ஞானயாகத்தையும், சரியாபாதம் கிரியாபாதம் யோகபாதம் ஞானபாதம் என்னும் நான்கனுள்ளே, இறுதிக்கண்ணின்ற ஞானபாதத்தையும் ஒழித்து, எஞ்சிநிற்பனவற்றுள்ளே தலையாய் நின்ற தியானயாகம் எனப்படும் (வைதிக பாசுபதி யோகபாதம் வரையுமே வேதசிரசுகள் பேசுவனவாமென்று முன்னர்க் காட்டப்பட்டமையானும், சிரவண மனன நிதித்தியாசன சமாதி என்னும் நால்வகைப்படும் ஞானயாகமும், ஞானத்திற் சரியை, ஞானத்திற்கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தின் ஞானம் என்னும் நால்வகைப் பாதமுடைய ஞானபாதமும் ஒரே முடிபினவாய், சர்வஞ் ஞானேத்தரம்

“ஸிவஸ்ருஷ்டிஸ்ஸ்மஃ ப்ரோக்தோ மாயிகாரவிவர்ஜிதঃ।”

என்று கூறியவாறு குடிலை எல்லை கடந்த பஞ்சகிருத்தியாதிகாரம் நீங்கிய சிவத்தை அறிவுமாத்திரையினுல் வழிபடுதற்குச் சாதனமாய் முற்றுவனவாக, ஞான யோகம் எனப்படும் யோகபாதம்

“ஓங்காரம் ஸர்வேஸ்வரம் ஆஹுமாநே।”

என்று சிவதத்துவ நாதசக்கரமாகிய குடிலையிலே முற்றிநிற்பதால், இந்தப் பரப்பிரகிருதியாகிய மகாமாயை எனப்படும் குடிலையானது சர்வஞ் ஞானேத்தரம்

“பதிஸ்ருஷ்டிம்வியோஜ்ஜய ஸ்வாயிகாரவஸேஷிதঃ।”

என்று கூறியவாறு, சிருஷ்டி, ஸ்திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியாதி காரத்தோடியைந்து அருட் பராசத்தியை நீங்காத சிவபதியார்க்குத் தானமாய் முற்றுதலால், இவ்விடத்தே முதற்காரணம், நிமித்த காரணம், துணைக்காரணம் என்னும் மூன்றும் ஒன்ருகப் பேசப்படும் என்று கொண்டன்றே, வைதிக பாசுபதயோகத்தை முடிவாகக் கொண்டு பேசும் சிவாத்துவிதிகளை யுற்று உமாபதிசிவாசாரியர் “மண்டணிக்குலாலன் றண்ட சக்கராதி காரணமூன்றுமோர் பேரணைந்தது” என்று கூறினராக, சிவஞானசுவாமிகள் “மாயை முதல்வனில் வேறு பொருளன்றென் றுரைப்பர் சிவாத்துவித சைவர்” என்றுரைத்தாராக, ஏகான்மவாதியாரும் இதற்கிசைந்

(b) சத்தியாத்ம பிராணாராமம்.

“ சத்தியாத்துமா ” என்றது சத்தாருபமாம் ; “பிராணாராமம்” என்றதிலே போந்த “பிராணன்” என்னும் மொழி சமஸ்த (சேதனுசேதனப் பிரபஞ்சத்துக்கு) ஆதாரமாயுள்ள சிதம்பரசத்தியின் மேலாம். ஆகவே, எந்தப் பிரமத்துக்குச் சொருபமாயிருந்துள்ள எந்தப் பிராணனும் சிதம்பர சத்தியிடத்திலே இன்பமுளதாதல் உளதாமோ, அது “பிராணாராமம்” எனப்படும்.

(c) மன ஆனந்தம்.

“மன”த்தின் கண்ணே (சிதம்பரசத்தியின் கண்ணே) ஆனந்தம் எந்தப் பிரமத்துக்குப் புறக்கரணம் வேண்டாதுளதாமோ, அது “மன ஆனந்தம்” எனப்படும். ஈண்டும் “ஆனந்தம்” என்றது காரணமாகிய சிதம்பரத்தின் பாலதேயாம். இதுபற்றியன்றே, (தைத்திரீயம். II. VII. 1.) “இந்த ஆகாசம் ஆனந்த மாகாதுபோகின், யார் உயிர்ப்பார், யார் பிழைப்பார்” என்ற கருத்தினுல்

“யதேஷ ஆகாஶ ஆநந்தோ நஸ்யாத் கோஹ்யேவாந்யாத் கः ப்ராண்யாத்,”

என்று கூறியதாமென்க.*

(d) சாந்திசம்ருத்தமம்ருதம்.

“சாந்திசமிருத்தமமிருதம்” என்றது சிவத்துவத்தை அடைதல் என்பது பொருளாம் ; “அமிருதம்” என்றது (இயல்பாகவே பாசங்களினீங்கி நிற்றலாகிய) அநாதிமுத்தமே. ஈண்டு சச்சிதானந்தமாம் பரமாகாச சொருபமுடைய பிரமமானது சொருபானந்தத்தைப் புற அந்தக்கரணம் வேண்டாது மனசினுலே (சிதம்பரசத்தியினுலே) அநுபவிக்கின்றது என்பது மன ஆனந்தம் என்றதினுலே சித்தமாகின்றது ; இதுவன்றி, இந்த “மன ஆனந்தம்” (சிதம்பரபரமசத்தியானது) சிவப்பிரமபாவனை அடைந்த முத்தான்மாக்கள் மற்றோர் புறக்கரணம் வேண்டாது நிரதிசயசொருபானந்த அநுபவத்தை அடைதற்குச் சா

---

தே “நிச்சயமாய் ஈசன் நிமித்தமும் உபாதானமும் என்பது வேதசம்மதம்” என்று உரைத்தமையால், ஞான பாதத்தையும் யோகபாதத்தையு முடைய துவிஜர்கள் வைதிகபாசுபத யோக முறைக்கும் வைதிகபாசுபத சிதம்பரோபநிடதப் பொருளையும். இவற்றை ஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த வேதாந்த சூத்திரப் பொருளையும், ஓர்காலும் அங்கீகரியாதுடராமென்க).

* (ஐதரேயோபநிடதத்து ஐந்தாம் கண்டத்து இரண்டாம் மந்திரத்திலே “இருதயம், மனசு, சஞ்ஞானம், ஆஞ்ஞானம், விஞ்ஞானம், பிரஞ்ஞானம், மேதா, திருஷ்டி, திருதி, மதி, மநீஷா, ஜூதி, ஸ்மிருதி, சங்கற்பம், கிரது, அசு, காமம்” என்னும் நாமங்களெல்லாம் பிரஞ்ஞானத்தின் பெயர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்தப் “பிரஞ்ஞானம்” என்னும் பெயர் “சைதன்னியத்தின்” பரியாயநாமம் என்றும், இந்தச் ‘சைதன்னியமானது’ சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவமாம் என்றும், சிவபுராணகைலாசசங்கிதை பத்தாம் அத்தியாயத்து நூற்றிருபத்து நான்காம், நூற்றிருபத்தைந்தாம், நூற்றிருபத்தாறும் சுலோகங்களால் அறியப்படுதலாலும், “பராசத்தியாரைச் சத்தியார் எனவும், அச்சத்தியுடையாராகிய சிவபிரானுரைச் சத்திமான் எனவும், வேத்தியர் சிவனுர் எனவும், சிவையாம் பராசத்தியார் வித்தை எனவும், பிரஞ்ஞை எனவும், சுருதி எனவும், ஸ்மிருதி எனவும், திருதி எனவும், ஸ்திதி எனவும், நிஷ்டை எனவும், ஞானேச்சாக்கிரியாசத்தி எனவும், ஆஞ்ஞை எனவும், சொல்லப்படுவார் என்று கொண்டு,

“ஶாக்தி ஶக்திமாதஸ்த்வாத் வ்யோமயா நஷ்டாத்விநீ।
ஶக்திராநந்யதேஜேவ ஶிவஶீதாஶோபேஷண:।
வேத்யஶிவஶிவாவித்யா ப்ரஜ்ஞாசைவஶ்ருதிஸ்ம்ருதி:।



த்ருதிரேஷா ஸ்திதிர்நிஷ்டா ஜ்ஞாநேச்சாகர்மஶக்தய:।
ஆஜ்ஞாசைவ..............................॥” 

என்று சிவபுராணவாயு சங்கிதை உத்தரபாகத்து எட்டாம் அத்தியாயத்திலே படிக்கப்படுதலாலும், இந்த நாமங்களுள்ளே ஐத்ரேயோபநிடதத்திலே காணப்படுவனவாக முன்னர்ச் சொல்லப்பட்ட “திருதி” “ஸ்மிருதி” என்பன காணப்படுதலால், அந்த ஐதரேயத்துள்ள மனமுதலிய பெயர்களெல்லாம் சிவையாம் பராசத்தியின் பெயராக அறியப்படுமோ மாதலாலும், இந்தப் பராசத்தி சிதம்பரமாம் என்று கூர்மபுராணம் கூறுதலாலும், சைவபாஷ்யகாரர் மனசைச் சிதம்பர பராசத்திக்குப் பெயராகக் கொண்டமை முழுமையும் வாஸ்தவமேயாக, சங்கராசாரியர் சூதசங்கிதையைச் சார்ந்த பிரமகீதை மூன்றும் அத்தியாயத்துப் பத்தொன்பதாம் சுலோகமுதல் இருபத்திஞன்காம் சுலோகம் இறுதியாக, — முன்னர் ஐதரேயத்து ஐந்தாம் கண்டத்து இரண்டாம் மந்திரத்திலே போந்ததிருதி மனமுதலிய பெயர்களைத் தமது மாயாவாதபாஷ்யத்திலே சடமாகிய அந்தக்கரண விருத்திகளுக்குப் பெயராக எழுதினமைக்கு மாறுபடாதிருப்ப, “சிவன் உருத்திரன்முதலிய பெயர்கள் பிரமத்துக்கு உபாதிபூதப் பெயர்களாமாறு. அப்பிரமகீதை மூன்றும் அத்தியாயத்து இருபத்தெட்டாம் சுலோகம் நிறுத்தப்பட்டாற்போல,—மனமுதலிய பெயர்களையும் உபாதிபூதசடமாகிய அந்தக்கரண விருத்திப்பட்டனவாய்ச் சங்கரனுக்குப் பெயராமாறு நுழைத்துவிட்டமை முழுமையும் வேதவியாசர் கருத்துக்குமாருய், அவ்வேதவியாசரருளிய புராணேபப்பிரும்மணத்துக்கு மாறுபடாது எழுதிய சைவபாஷ்யகாரர் கருத்துக்கு மாருய் முடிந்ததாமென்க. ஆதலால், சைவபாஷ்யகாரர் மனம் என்றதை வேதபரிடாஷாப்பிரகாரம் பராசத்தியாகிய சிதம்பரத்தற்குப் பெயராக எழுதினமை முழுமையும் உசிதமேயாய், சங்கராசாரியர் மனசை வேதபரிபாஷை அறியாது அந்தக்கரண விருத்தியின் பெயராய்க்கொண்டு சிதம்பரசத்தியைக் கெடுத்து எழுதினமை அசாரமேயாம் என்க. சிவதருமோத்தரம் என்னும் ஆகமம் சிவபிரான் பராசத்தி யாரோடிசைந் தநுபவிப்பார் என்பது கொண்டு “சிவன்பரமசத்திதனை யனுபவிப்பனுர்க்தே” என்று கூறியவாய்மை சைவபாஷ்யகாரர் கருத்துக்கு இசைந்து நின்றமையினுலே தெள்ளிதிற் புலப்பட்டவாரும்).

தனமுமாகின்றது என்பதும் பெறப்படுகின்றது. ஆதலினல், பாயகரணமின்றிச் சுத்தஞான போதசத்தி ரூபமாம் மனசினலே (சிதம்பரசத்தியினலே) முடிவிறந்த சொரூபானந்தமெய்துவது அநுபவசித்தமாதலினல், பிரமம் நித்தியதிருப்தம் எனப்படும் வரம்பிலின்பமுடைமையாதல் பெறப்பட்டது. ஆகவே பிரமத்துக்கு எக்காலத்தேனும் பாகிய சம்சாரதுக்கலேசமேனும் இல்லையாம் என்பது பொருளாம். *

(ங) அநாதிபோதம்—இயல்பாகவே எக்காலத்துமுள்ள நிரதிசயஞானமே அநாதிபோதமாம். சுவரூபானந்தாநுபவ சாதனமாய அந்தக்கரணஞானம் அநாதிசித்தமேயாம்; ஆதலில், அநாதிபோதமுடையது பிரமம், சம்சாரத்தினின்று (பாசத்தினின்று) நீங்கும் ஞானம் அநாதியே யுண்மையினலென்க. எக்காலத்தும் சம்சாரதோஷத்தை நீக்கிநிற்றலால் "சாந்திசமிருத்தம்ம்ருதம்" என்று சுருதி கூறிற்று.

(ச) சுவதந்திரத்துவம்—பிறரிடத்திலே வறுமைகாரணமாகச் சேவகத்தன்மை பூண்டொழுகுவதின்றி, தனக்கு வேறுயுள்ள வஸ்துக்கள் அனைத்தையும் தன்னிடத்திலே வசிகரித்து நிற்றலே சுவதந்திரத்துவமாம். "ஞானனும் அஞ்ஞானனுமாம் இருவரும், பிறவாதவரும், (ஒருவன்) ஈசனும் (பதியும்), (மற்றவன்) அநீசனுமாம் (பசுவுமாம்) என்பது கொண்டு (சுவேதாசுவதரம். I. 9.)

"ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ"

என்றும், "போக்தா (பசு), போக்கியம் (பாசம்), பிரேரிதாரர் (பதி) என்பவற்றை அறிந்து" என்பது கொண்டு (சுவேதாசுவதரம். I. 12:)

"போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா"

என்றும், வித்தை (பசு), அவித்தை (பாசம்) என்னும் இரண்டையும் ஆளுபவர் இவற்றுக்கு வேறாகியவராம் (பதியாம்)" என்பது கொண்டு (சுவேதாசுவதரம். V. 1.)

"வித்யாவித்யே ஈஶதே யஸ்து ஸோऽந்ய:"

என்றும் போந்த சுருதிகளிலே கண்டபிரகாரம், ஜடம் (அசேதனமாகிய பாசம்), அசடம் (சேதனமாகிய பசு) என்னும் இரண்டையும் பிரமமானது செலுத்துவதுதன்மையால் பிரமத்துக்கு முற்றுத் தொழில் எனப்படும் சர்வகர்த்திருத்தவமுடைமையாதல் எய்துகின்றது.

(ரு) அலுப்தசக்தி—(கெடுக்கப்படாத) சுவாபாவிகமாகிய சத்தியை உடைமையாதல் அலுப்தசக்தியாம்; இதுபற்றியே அவருடைய பராசத்தியானது ஞானசத்தி, பலசித்தி, கிரியாசத்தி எனப் பலவாறுகச் சொல்லப்படும் என்பது கொண்டு, (சுவேதாசுவதர VI. 8) சுருதி முதலாயின.

"பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச"

என்று கூறுவனவுமாம். சேதனசேதனப் பிரபஞ்சரூபசத்தி விசிஷ்டத்துவம் பிரமத்துக்கு ஸ்வாபாவிகமாம், இவ்வாறு விசிஷ்டசத்தி குணங்களோடு பிரமம் இருப்பதாமன்றி எக்காலமேனும் நிர்விசேஷமாயிருத்தல் (நிர்க்குணமாயிருத்தல்) இல்லையாம். *

முடிவிறந்த விசேஷ சத்தியுடைமையே அனந்தசத்தித்துவம். இந்த முடிவிறந்த சத்திகளையுடைமையினலன்றே பிரமமானது அனைத்தையும் உலகத்தை ஆக்கவும் அழிக்கவும் இயைந்தாகின்றது. இதுபற்றியே (சுவேதா சுவதரம் III. 2.)

"ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்துர்ய இமாம்ல்லோகாநீஶத ஈஶநீபி:"

"இரண்டாவதிலதாய், உருத்திரர் ஒருவர் மாத்திரம் உளராய், இந்த லோகம் அனைத்தையும் பரமசத்திகளினல் ஆளுவாராயினர்" என்றும், அதர்வசிரசு "அனைத்தையும் பிறப்பிக்கும் நாயகமாகிய பரமசத்திகளினலே சமஸ்த லோகங்களையும் ஆளுகின்றார்" என்பது பொருள்பட

"ய: ஸர்வாம்ல்லோகாநீஶத ஈஶநீபி: ஜநநீபி: பரமஶக்திபி:"

என்றும் கூறியவாமென்க. அனந்தசத்தியுடைமையால் பிரமமானது பிரபஞ்சத்துக்குக் காரணமாயிற்று.

* (சிதம்பர பராசத்தியார் பரப்பிரமசிவனர் இன்பம் துய்த்தற்கும், முத்தான்மாக்கள் இன்பம் துய்த்தற்கும் சாதனமாய் நின்றார் என்று சைவபாஷ்யகாரர் கூறிய பொருள்.

பாரியைப்பரர்கண்பார்வைப்படாப்பதிவிரதைதன்னை
யாரியமுணர்ந்தகாந்தனவடனைத்திளைப்பனர்ந்தே
பாரியைப்பரர்கண்பார்வைப்படாப்பராசத்திதன்னை
யாரியனுதிமுத்தனவடனைத்திளைப்பனர்ந்தே.

"முத்தான்மாவானவன் மும்மலங்களும் நீங்கிச் சாயுச்சியத்தைப் பெற்றபோது பதிவிரதையாம் பராசத்தியைப் பொருந்தி இன்பம் அநுபவிப்பன் எனவும், அநாதிமுத்தராகிய சிவபிரானும் தம்மைப் பிரியாதுற்ற பராசத்தி பேரின்பத்தைப் பொருந்தி அநுபவிப்பன் எனவும்" சுப்பிரமணிய சுவாமியானவர் அகஸ்தியமகாமுனிவர்க்கு அறிவுறுத்திய வைதிகசிவ தருமோத்தராகமத்தினும் சைவபாஷ்யகாரர் உரைத்தது வாய்மையாமாறு தெளியப்படுகின்றது.)

* (சைவபாஷ்யகாரர் மாயாவாதோபகிடதமாகாத வைதிக பாசுபதோபநிடதத்திலிருந்து பலசுருதிகள் வாயிலாக மேலே உதகரித்துப் போந்தவாறு, பிரமத்துக்கு (சிவனர்க்கு) சர்வஞ்ஞுதாதி குணங்கள் உளதாமுண்மை நிருபணஞ் செய்து, குணங்களொன்றுமில்லையாக்கப்படும் நிஷ்நிலைக்கண்ணவாம் மாயாவாதோபநிடதப் பிரகாரம் பேசப்படும் நிர்விசேஷ (நிர்க்குண)ப் பிரமம் ஓர்புறம் ஒதுக்கிக் கண்டித்தமையை எவரும் நோக்குவாராக.)

அஷ்டநாமாதிகரணம்—பவர், சர்வர், ஈசானர், பசுபதி, உருத்திரர், உக்கிரர், பீமர், மகாதேவர் என்னும் அஷ்டநாமங் களுக்கும் அதிகரணமாயுள்ள (சிவதத்துவ) வாச்சியம் பரப் பிரமமாம். இந்தப் பிரமம் சமஸ்த சப்தங்களா லுரைக்கப்படு மேனும், அதன் பெருமை முக்கியமாகப் பவர்முதலிய நாமங் களினாலே புலப்படுவதாகும். இந்த எட்டு நாமங்கள் ஒழிந்த மற்றைய நாமங்களினாலே அப்பிரமம் சுட்டப்படா திருத்தலு மன்று மென்க.

க. பவர் — எக்காலத்தும் எவ்விடத்தும் உண்மையினால் "பவர்" என்னும் நாமம் பிரமத்துக்குப் போந்தது, இந்தப் "பவ" என்னும் மொழி (இருத்தலாம்) சத்தை எனப் பொருள் படும் "பூ" தாதுவிலே யிருந்து பிறந்தமையினா லென்க. இது பற்றியே "சௌமிய, சத்தாம் இது முதற்கண்ணிருந்தது, ஏக மாம் அத்துவிதீயம்" என்றும் "சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என்றும், "சத்தியாத்தும பிராணாராமம்" என்றும், "மன ஆனந்தம்" என்றும், "ஸன்மன" (சத்தாகிய மனம்) என் றும் பிறவுமாகச் சுருதிகள் எழுந்தனவாமென்க. "சத்துகடம்" "சத்துபடம்" என்பன போல, சமஸ்த வஸ்துக்களிலும் ஊடு ருவிநிற்றலால் சத்தாகிய பிரமமே அனைத்துக்கும் உபாதான மாதல் (காரணமாதல்) சித்திக்கின்றது, மண்ணோடு கூடிய கட மானது மண்ணினாலே ஆக்கப்பட்டதாய், (எனவே,) மண்ணை யே உபாதானமாகக் கொண்டாற் போலாம். ஆதலினால், சத் தாகிய பிரமம் என்பது பவர் என்னும் சப்தத்தின் வாச்சிய மாம்.

உ. சர்வர்—இம்சித்தல் எனப் பொருள்படும் "ஶ்ரு" என் னும் தாதுவினின்று பிறத்தலால், அது அனைத்தையும் சங்காரஞ் செய்யும் கர்த்தா பிரமம் என்று பிரதிபாதிக்கின்றது. இதுபற் றியே, "மகாசங்காரஞ் செய்பவராய், அனைத்தையும் கவளீகர ணஞ் செய்பவராயுள்ளார்க்கு நமஸ்காரம்" என்பது பொருள் பட (அதர்வசிரசு)

"தஸ்மை மஹாக்ராஸாய வை நமோ நம:"

என்றும், "இந்தப் (பிரமத்துக்கு) பிரமாவும் விஷ்ணுவுமாம் இரு வரும் உணவாயினர்" என்பது கொண்டு (கடவல்லியும் II. 25.)

"யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந:"

என்றும் பிறவுமாகப் போந்த சுருதிகளினாலே, "சர்வ" சப்த வாயிலாகப் பிரமத்துக்குச் சங்காரத்துவம் உளதாதல் கேட் கப்படுகின்றது *

ங. ஈசானர்—உபாதியில்லாத பரமைசுவரிய விசிஷ்டகுண முடைமையால் "ஈசானர்" என்னும் நாமம் பிரமத்துக்காயிற்று, "எவர் இந்த லோகங்களையெல்லாம் ஆஞ்ஞாசத்திகளினாலே (ஈசசத்திகளினாலே) ஆளுகின்றாரோ" என்பது பொருள்பட (சுவேதாசுவதர) சுருதி

"ய ஈஶத ஈஶநீபி: பரமஶக்திபி:"

என்று உரைக்கின்றமையினாலென்க.

ச. பசுபதி — ஈசுவரராயுள்ளார் எவற்றையும் ஆளவேண்டி யதுண்மையால், பசுபதி என்னும் நாமம் பிரமத்துக்காயிற்று. இதுபற்றியே "நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களுக்கும் ஈசராயுள்ளார் பசுபதி எனப்படுவார்" (கிருஷ்ணயசுர்வேதம் III. 1. 4.)

"யேஷாமீஶே பஶுபதி: பஶூநாம் சதுஷ்பதாம் உத த்விபதாம்"

எனக் கூறியதுமாமென்க. பாசசம்பந்தத்தினாலே பசு என்னும் வியவகார முண்மையால், பசு என்னுமிடத்துப் பசு பாசம் என் னும் இரண்டும் கொள்ளக் கிடந்தன. பசுவாகிய சித்துக்கும், பாசமாகிய அசித்துக்கும் நாயகம் பிரமமாம் என அறியற் பாற்றும்.

ரு. உருத்திரர் — சம்சாரரோகத்தைத் திராவகஞ் செய்த லால் (உருகச்செய்தலால்) உருத்திரர் என்னும் நாமம் பிரமத் துக்குப் பெயராகப் போந்தது. "பரமான்மாவைச் (சிவத்தை) அறிந்தவன் சோகத்தைத் தாண்டுகின்றான்" என்பது கொண் டன்றே (சாந்தோக்கியம் VII. 1. 3.)

"தரதி ஶோகமாத்மவித்"

என்று கூறியதுமாமென்க.

சு. உக்கிரர் — (சூரியசந்திராதியராம்) ஒளிகளால் அடக்கப் பட மாட்டாமையால் உக்கிரர் என்னும் நாமம் பிரமத்தின் மே லாயிற்று. இதுபற்றியன்றே, "அவ்விடத்தே சந்திரனுமின் றும் சூரியனுமின்றும்" என்றுகொண்டு (சுவேதாசுவதரம் VI. 1)

"ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்"

என்று கூறியது மாமென்க.

எ. பீமர்—சமஸ்த சேதனங்களையெல்லாம் (பசுக்களையெல் லாம்) நியாமகஞ் செய்தலாலும், அவற்றுக்கு அச்சமுண்டாக்கு தலாலும் பீமர் என்னும் நாமம் பிரமத்துக்குப் பெயராய்ப் போந்தது. இதுபற்றியே "இவருக்குப் பயந்தே வாயு வீசுகின் றது" என்ற கருத்தினால் (தைத்திரீயம் II. 8.)

"பீஷாऽஸ்மாத் வாத: பவதே"

என்று கூறிற்று.)

---

* (மேலே போந்த கடவல்லி சுருதியிலே காணப்படும் பிர மம் க்ஷத்திரம் என்னும் இரு பதங்களினாலே பிராமணரும் க்ஷத்திரியரும் சுட்டப்படாது, பிரமாவும் விஷ்ணுவுமாம இரு வருமே உணர்த்தப்பட்டாரென்க; பிரமம் என்றமையினாலே பிரமாவானவர் கொள்ளப்பட, இடத்தினாலே "க்ஷத்திரம்" என்றது விஷ்ணுவையே உணர்த்திற்று. இதுவன்றி, புராண மும் விஷ்ணுவை க்ஷத்திரியர் என்று கொண்டு

"ஸீஷாஷூாஙாதஃ ஙவமெதஃ"

என்று கூறியதாமென்க.

அ. மகாதேவர்—மகத்துவ முண்மையானும் பிரகாச முண்மையாலும் மகாதேவர் என்னும் நாமம் சிவனுர்க்குப் போந்தது. இது கொண்டே அதர்வசிரசானது "சிவபிரானே மகாதேவர் என்றது எற்றுக்கு?" என்னும் வினவுக்கு உத்தரமாக, "அனைத்தையும் ஒழித்துவிட்டு மகத்தாகிய பரமாத்தும ஞானயோக ஐசுவரியத்தின் பொருட்டுப் பூசிக்கப்படுகின்றுர் என்பதுபற்றி மகாதேவர் என்னும் நாமம் போந்தது" என்ற கருத்தினுல், (அதர்வசிரசு)

"ஸுயகூலொஜுஷுமெதஹாஜெவஃ ஸவபாநுஹாவாநு வஙிதஜஜ்ராது ஜாநயொமெஹெயெ ஹைதிஹீயெதஃ"

என்று கூறிற்று. சமஸ்த சம்சாரதோஷமெல்லாம் அறுத்து, சமஸ்த மங்கலசார (குணநாமங்களுக்கு) உறைவிடமாக அறியப்படும் (பிரணவப்பாற்படும்) சிவதத்துவமானது சமஸ்த (சேதனுசேதன)ப் பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமாமியல்பு வாய்ந்தது. அப்படிப்பட்ட மகிமை வாய்ந்த சிவதத்துவத்திலே (நிமித்தமும் உபாதானமுமாம்) உபயகாரணமும் முற்றுவதாகின்றது. அந்தச் சிவதத்துவம் அப்படிப்பட்ட மகத்துவமுடைமையால் பிரமம் என்று சொல்லப்படுகின்றது. இந்தப்பிரமமே அனந்தாதி குணங்களுக்கு ஆசிரயமாய்ச் "சிவன்"என்று உரைக்கப்படுவதாகின்றது. *

* (பிரணவம் எனப்படும் பரப்பிரகிருதியின் இயல்பையுடையது சிவதத்துவம் என்று கொண்டன்றோ, சிவபுராணம்

"வாஃ ஹஜதிஹாவஷு தசு ஷகூாஹிவதகூதஃ"

என்று கூறிற்று. யசுர்வேத ஆர்ணியகம்.

"வஊாஜ ஜா ஙவிவதஜெதவஜயஷ"

என்று கூறினமைக்கிசைய, பிரமசக்கரமாகிய நிவிர்த்திகலையிலும், நாராயணசக்கரமாகிய பிரதிஷ்டாகலையிலும், வித்தியாகலையாகிய உருத்திரசக்கரத்திலும், சாந்திகலையாகிய மகேசுவர சக்கரத்திலும் தனித்தனியே வாய்ந்த நான்கு பிரணவப் பிரகிருதிகளும் முக்கியமன்றும் (கவுணமாம்), என்பதுகொண்டு

"ஜெஹிதவிவதஷெதசு வகஜாணாஙவஜணவொஹவெசு ஐஹெமாஜிக ஜாஜெவ மௌணஷாவஜ தஜாஸவாவகஃ"

ஆதலினுல் அனந்தாதிகளைத் தனித்தனியே பிரமமென விசுற்பமுறக்கூறல் நிஷ்பிரயோசனமாமென்க. "மாயையைப் பிரகிருதி என்று அறிக" என்ற சுருதியிலே, மாயையானது காரணமாதலும், அம்மாயை ஈசுவரனுடையைந்தமை உணர்க்கவேண்டி எஞ்சிய சுருதியானது, "மாயையுடையாரைமகேசுவரர்"என்று உரைத்தமையாலும் உணரப்படும். சூக்ஷ்மசிதசித் விசிஷ்ட பிரமம் காரணமும், ஸ்தூலசிதசித்விசிஷ்ட பிரமம் காரியமுமாகின்றது. ஆதலினுல் உலகோற்பத்தி லக்ஷணம் பிரமம் என்பது சித்தாந்த மாயிற்று.

இரண்டாஞ்சூத்திரம் முற்றிற்று.

---

என்று கூறினமையினுலே சாந்தியாதீத கலையாகிய சதாசிவசக்கரம் எனப்படும் பிரமசக்கர பரப்பிரகிருதிச் சிவதத்துவத்தின் பாற்பட்ட பிரணவமே முக்கியமாம் என்பது பெறப்பட்டு, இந்தப்பிரணவத்தின் பொருள் சிவனுர் என்பது கொண்டு,

"ஜணவாஜூஷ ஙிவஷாகூாஸ ஜாயாநெநவஜகிதஃ"

என்றும்,

"ஙிவொவாஜணவொஹெஷ ஜணவொவாஙிவஃ ஷுதஃ வாஜவாவகயொஹெஷொ நாதஜஹஙிஷஜெயதஃ"

"சிவனே பிரணவம்; பிரணவமேசிவன் ; வாச்சியவாசக சம்பந்தத்தினுல் பிரணவத்துக்கும் சிவனுக்கும் பேதமின்றும் என்றும் சிவபுராணம் கூறிற்று. பராசத்தியார் சிவனுக்குச் சமவாய சம்பந்தத்தினுல் உளர் என்பது கொண்டு அச்சிவபுராணம்

"ஙவரெதஷவாமஙகி ஙிவஷஜவிஙவாயிநீ"

என்று கூறிற்று. வைதிகபாசுபத யோகத்தையே முடிவாகக் கொண்டு நின்று பேசும் பரமமாகிய சிதம்பரோபநிடதங்களுக்கிசையப் பொருள்போதிக்கும் வேதாந்த சூத்திரமானது சிதம்பராசத்தியினின்று வேறுருத சிவபிரானையே இதயமாகவுடையதாகின்றது. பிரணவம் சிவதத்துவமேயாதலின் இவ்விடத்தே முன்னர்க் கூறிய உபயகாரணமும் சித்தமாகின்றது. சைவ பாஷ்யகாரர் சிவதத்துவத்தைப் பிரமம் என்றும், அந்தப் பிரமத்தைச் சிவன் என்றும் பொருள் பொருத்திக் கூறினர். பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரகம் என்ன நிருகதாரணியோபநிடதத்துக் காக்கி ஆகாசம் எனப்படும் சிதம்பரத்திலே போய் முற்றுவதாமன்றி, சங்கராசாரியர் கருத்துறக் கூடஸ்தப் பிரமத்திலே போய் முற்றுவதன்றும்,